सत्यमेव जयते

# இந்திய அரசமைப்பு

(2021, ஜனவரி 31 வரை திருத்தம் செய்யப்பட்டது)

# THE CONSTITUTION OF INDIA

(As amended upto 31st January, 2021)

தமிழாக்கம்:

மாநிலச் சட்ட ஆட்சிமொழி ஆணையம்

சென்னை – 600 028

2021

सत्यमेव जयते

# THE CONSTITUTION OF INDIA

*[As amended upto 31st January 2021)*

இந்திய அரசு

சட்டம் மற்றும் நீதி அமைச்சகம்

सत्यमेव जयते

# இந்திய அரசமைப்பு

**(2021, ஜனவரி 31 வரை திருத்தம் செய்யப்பட்டது)**

# THE CONSTITUTION OF INDIA

**(As amended upto 31st January, 2021)**

தமிழாக்கம்:

**மாநிலச் சட்ட ஆட்சிமொழி ஆணையம்**

டாக்டர். அம்பேத்கர் சட்டப்பல்கலைக்கழக வளாகம்,

"பூம்பொழில்"

பசுமைவழிச் சாலை,

சென்னை – 600 028

தமிழ்நாடு அரசு எழுதுபொருள் அச்சுத்துறை ஆணையரால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது

2021

306-22—1

# மாநிலச் சட்ட ஆட்சிமொழி ஆணையம்

## தலைவர்

நீதியரசர் பொன். கலையரசன்,
மாண்புமிகு முன்னாள் நீதிபதி,
சென்னை உயர் நீதிமன்றம்.

## முழு நேர உறுப்பினர்கள்

திரு. சு.ச. பூவலிங்கம், பி.எஸ்.சி., பி.எல்.,
முன்னாள் சட்டத்துறைச் செயலாளர்,
தமிழ்நாடு அரசு.

திரு. அ. சங்கரன், பி.எஸ்.சி., பி.எல்.,
வழக்குரைஞர்.

திரு. ச. பாஸ்கரன், பி.எஸ்.சி., பி.எல்.,
முன்னாள் மாவட்ட நீதிபதி.

## பகுதி நேர உறுப்பினர்கள்

முனைவர் மு. முத்துவேலு, எம்.ஏ., பி.எல்., பி.எச்.டி.,
முன்னாள் பதிவாளர்,
செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்.

திரு. ந. வேலு, எம்.ஏ., எம்.எல்.,
முன்னாள் மாவட்ட நீதிபதி.

திரு. சீ. சொக்கலிங்கம், பி.ஏ., பி.எல்.,
முன்னாள் சட்டத்துறை இணைச் செயலாளர்,
தமிழ்நாடு அரசு.

## உறுப்பினர் செயலாளர்

திருமதி பா. ஜூலியா சாந்தி, எம்.ஏ., எம்.எல்., எம்.பி.ஏ.,
துணைச் செயலாளர், சட்டத்துறை,
தமிழ்நாடு அரசு.

## தமிழ்நாடு அரசு

**சட்டத்துறைச் செயலாளர் :**

திரு. ச. கோபி ரவிகுமார், எம்.ஏ., எம்.எல்.,

## மைய அரசு

**கூடுதல் சட்ட ஆலோசகர் :**

திருமதி நிர்மலா கிருஷ்ணமூர்த்தி,
பி.எல்., எம்.எல்.எம்.,

सत्यमेव जयते

# PREFACE

This is the Fourth English-Tamil (diglot) Edition of the Constitution of India. The present diglot edition of the Constitution of India has been prepared by the State Official Language (Legislative) Commission, Law Department, Government of Tamil Nadu and the same has been scrutinized and vetted by the Official Languages Wing (Regional Unit), Legislative Department, Ministry of Law and Justice, New Delhi.

In this Edition, the text of the Constitution has been brought upto-date by incorporating therein all the amendments up to and including the Constitution (One Hundred and Fourth Amendment) Act, 2019.

**Dr. G. Narayana Raju,**
**Secretary to the Government of India**

**New Delhi,**
**19-02-2021**

நீதியரசர் பொன் கலையரசன்
**தலைவர்**
மாநிலச் சட்ட ஆட்சிமொழி
ஆணையம்.

டாக்டர் அம்பேத்கர் சட்டப் பல்கலைக்கழக வளாகம்,
"பூம்பொழில்"
டாக்டர் டி.ஜி.எஸ். தினகரன் சாலை,
பசுமைவழிச் சாலை,
சென்னை-600 028.
அலுவலகம் : 044 - 2952 0797

# முன்னுரை

தமிழ்நாடு சட்ட ஆட்சிமொழி ஆணையம் நெடிய வரலாறு கொண்டது. 1957இல் சென்னை உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியாக இருந்த நீதியரசர் மா.அனந்த நாராயணன் அவர்கள் தலைமையில் சட்ட ஆட்சிமொழி அகராதிக் குழு அமைக்கப்பட்டது. அதுவே பின்னர் சட்ட ஆட்சிமொழி ஆணையமாகித் தம் பணிகளைத் தொடர்ந்து வந்தது.

நீதியரசர் மா.அனந்த நாராயணன் அவர்கள் தலைமையில் அமைந்த சட்ட ஆட்சிமொழி ஆணையம் 1968இல் இந்திய மொழிகளிலே முதன் முதலாகத் தமிழில் சட்டச் சொற்களஞ்சியத்தை வெளியிட்டுத் தமிழ்நாட்டிற்கும் தமிழ் மொழிக்கும் பெருமை சேர்த்தது.

1976இல் சென்னை உயர்நீதிமன்ற நீதியரசர் சு.மகராசன் அவர்கள் தலைமையில் அமைந்த ஆணையம் சட்டத் தமிழுக்குப் பெரும் பணி ஆற்றியது. தமிழ்நாட்டுச் சார்நிலை நீதிமன்றங்களில் தமிழ் ஆட்சி மொழியாகி மக்கள் மொழியில் நீதிமன்ற நிருவாகம் நடைபெறுவதற்குத் தேவைப்படும் அடிப்படைச் சட்டங்களைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியது இந்த ஆணையம். இந்த ஆணையம் வெளியிட்ட சட்ட நூல்களும், சட்டச் சொல் அகராதியும் இன்றும் நீதிபதிகளின் தீர்ப்புகளில் இடம் பெறும் கலைச் சொற்களுக்கு களம் அமைத்துக் கொடுத்து வருகின்றன.

தமிழ்நாடு சட்டமன்றச் செயலாளராக இருந்த சட்டத்தமிழ் அறிஞர் திரு.மா.சண்முக சுப்பிரமணியன் அவர்கள் தலைமையில் அமைந்த ஆணையம் இந்திய அரசமைப்பை முதன் முதலில் ஆங்கிலம்–தமிழ் என இருமொழிப் பதிப்பாக வெளியிட்ட பெருமைக்கு உரியதாகும்.

இவ்வகையில் சட்ட ஆட்சிமொழி ஆணையங்கள் ஒவ்வொன்றும் சட்டச் சொற்களஞ்சியம், இந்திய அரசமைப்பு, மைய அரசுச் சட்டங்களின் மொழிபெயர்ப்புகள் என தமிழ்நாட்டு நீதிமன்றங்கள் நீதி வழுவா நெறிமுறையைச் செவ்வனே நிறைவேற்றுவதற்கு வாய்ப்பான பணிகளைத் தொடர்ந்து செய்து வந்தன என்பதை நான் இங்கு மிகுந்த நன்றிப் பெருக்குடன் பதிவு செய்ய விரும்புகிறேன்.

2018 ஆம் ஆண்டு டிசம்பரில் தமிழக அரசால் மாநில ஆட்சிமொழி ஆணையம் எனது தலைமையில் அமைக்கப்பட்டது. தற்போது இயங்கும் இந்த ஆணையம் கீழ்க்கண்ட பணிகளை முன்னுரிமையாக எடுத்துக் கொண்டு செயல்படுகிறது. அவை,

1. இந்திய அரசமைப்பின் தமிழாக்கம்.
2. மைய அரசுச் சட்டங்களின் தமிழாக்கம்.
3. சட்டச் சொற்களஞ்சியத் தொகுப்பு.

என்பவை ஆகும்.

மேலும், சட்ட ஆட்சிமொழி ஆணையம், மைய அரசுச் சட்டங்களைத் தமிழில் மொழி பெயர்த்து இந்தியக் குடியரசுத் தலைவரின் இசைவினைப் பெற்று வெளியிடும் பணிகளை மேற்கொள்ளத் தொடங்கியது. சட்டங்களை மொழிபெயர்த்து மைய அரசின் பணிக் குழுவிற்கு அனுப்புதல்; குடியரசுத் தலைவரின் இசைவினைப் பெறுவதற்குச் சட்டங்களின் படிகளை அனுப்பி வைத்தல் என அலுவல் முறையில் படிப்படியான பணிகளில் ஈடுபட்டு வருகின்றது.

அவ்வகையில், இந்திய அரசமைப்பின் திருத்திய பதிப்பை வெளியிடும் நோக்கில் அதற்கான பணிகளில் ஈடுபட்டது. இதன் பயனாக அரசமைப்பின் 2021 சனவரி 31 வரையிலான திருத்திய பதிப்பாக இருமொழிப் பதிப்பு இப்போது வெளிவருகிறது.

இந்திய அரசமைப்பின் தமிழாக்கம் இதுவரை மூன்று பதிப்புகளைக் கண்டுள்ளது. இந்திய அரசமைப்பின் தமிழ் மொழிபெயர்ப்பு முதலில் 1988இலும், இரண்டாவது பதிப்பு இருமொழிப் பதிப்பாக 1992இலும், மூன்றாவது பதிப்பும் இருமொழிப் பதிப்பாக 2009இலும் வெளிவந்தன.

பொதுவகைச் சட்டங்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடும் போது அமையும் சட்டத் தமிழ் மொழி நடை பற்றி இருவேறு கருத்துக்கள் இருந்து வருகின்றன. ஒரு சிலர்,

“ஆங்கிலத்தில் எழுதவும், படிக்கவும் தெரிந்தவர்கள், எல்லோராலும் ஆங்கிலத்தில் இருக்கும் சட்ட நூல்களைப் படித்து எளிதில் பொருளைப் புரிந்து கொள்ள இயலாது. அதைப் போலவே, தமிழில் வெளிவரும் சட்ட நூல்களையும் சட்டத்தில் பயிற்சியுடையவர்கள் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் தனியொரு தமிழ் நடையில் இருக்க வேண்டும்” என்று கருதுகின்றனர்.

மற்றொரு பிரிவினர், “தமிழில் சட்டங்களை மொழிபெயர்த்து வழங்குவதன் நோக்கமே தமிழில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் அனைவருக்கும் புரிய வேண்டும் என்பதாகும். எனவே அதற்குரிய வகையில் சட்டத்தமிழ் மொழிநடை எளிமையாக இருக்க வேண்டும்; தெளிவாகவும், எளிதில் புரியும் முறையிலும் இருக்க வேண்டும்” என்று கருதுகின்றனர். இதற்காகப் பிறமொழிச் சொற்களையும் பேச்சு வழக்குச் சொற்களையும் கூடப் பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை என்று வாதிடுகின்றனர்.

ஆனால் இந்த ஆணையம் இவ்விரு கருத்துக்களின் சிறந்த நோக்கங்களை எடுத்துக் கொண்டு செயல்படத் தொடங்கியது. “மொழிநடையும் எளிய தமிழில் இருக்க வேண்டும், இணையான தமிழ்ச் சொற்கள் இருக்கும் போது வேற்றுமொழிச் சொற்களின் பயன்பாட்டைத் தவிர்க்க வேண்டும்; எளிமையும், தெளிவும் கொண்ட எல்லோரும் புரிந்து கொள்வதற்கு இசைவான நடையினையும் பின்பற்ற வேண்டும்” என்கிற கருத்துக்களை ஏற்றுக் கொண்டு பின்பற்றி வருகிறது.

எனவே, வெளிவரும் இந்திய அரசமைப்பின் திருத்திய பதிப்பு எளிமையும், தெளிவும் கொண்ட தமிழ்நடையில் அமைந்துள்ளது என்பதை இங்கே சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

ஆணைய்ப் பணிகள் செம்மையாக நடைபெற வேண்டிய உதவிகள் அனைத்தையும் உடனுக்குடன் வழங்குவதற்கு ஆவன செய்த அன்புள்ளம் கொண்ட மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களுக்கும், மாண்புமிகு தமிழ்நாடு சட்ட அமைச்சர் அவர்களுக்கும், என் சார்பாகவும் ஆணைய உறுப்பினர்கள் அனைவரது சார்பிலும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்திய அரசமைப்பின் திருத்திய பதிப்புச் செம்மையான முறையில் வெளிவருவதற்கு உழைப்பினை நல்கிய ஆணைய உறுப்பினர்களுக்கும், அனைத்துப் பணியாளர்களுக்கும் என் அன்பு நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தலைவர்

# THE CONSTITUTION OF INDIA

## CONTENTS

## PREAMBLE

# இந்திய அரசமைப்பு

## பொருளடக்கம்

## முகப்புரை

## RIGHT TO EQUALITY



## RIGHT TO FREEDOM



## RIGHT AGAINST EXPLOITATION



## RIGHT TO FREEDOM OF RELIGION



## CULTURAL AND EDUCATIONAL RIGHTS



## SAVING OF CERTAIN LAWS

அரசமைப்புத் தீர்வழிகளுக்கான உரிமை



## பகுதி IV

### அரசுக் கொள்கையினை நெறிப்படுத்தும் கோட்பாடுகள்

**PART IV – A**

**FUNDAMENTAL DUTIES**



**PART V**

**THE UNION**

**CHAPTER I – THE EXECUTIVE**

**THE PRESIDENT AND VICE-PRESIDENT**

## பகுதி IV – (அ)

### அடிப்படைக் கடமைகள்



## பகுதி V

### ஒன்றியம்

### அத்தியாயம் I – ஆட்சித்துறை

### குடியரசுத்தலைவரும் துணைத்தலைவரும்

## OFFICERS OF PARLIAMENT



## CONDUCT OF BUSINESS



## DISQUALIFICATIONS OF MEMBERS



## POWERS, PRIVILEGES AND IMMUNITIES OF PARLIAMENT AND ITS MEMBERS

## நாடாளுமன்றப் பதவியாளர்கள்



## அலுவல் நடத்துமுறை



## உறுப்பினர்களின் தகுதிக்கேடுகள்



## நாடாளுமன்றத்திற்கும் அதன் உறுப்பினர்களுக்கும் உள்ள அதிகாரங்கள், மதிப்புரிமைகள் மற்றும் காப்புரிமைகள்

### LEGISLATIVE PROCEDURE



### PROCEDURE IN FINANCIAL MATTERS



### PROCEDURE GENERALLY



## CHAPTER III
## LEGISLATIVE POWERS OF THE PRESIDENT



## CHAPTER IV
## THE UNION JUDICIARY

## CHAPTER V

## COMPTROLLER AND AUDITOR-GENERAL OF INDIA



## PART VI

## THE STATES

## CHAPTER I – GENERAL



## CHAPTER II – THE EXECUTIVE

### THE GOVERNOR



### COUNCIL OF MINISTERS



### THE ADVOCATE-GENERAL FOR THE STATE



### CONDUCT OF GOVERNMENT BUSINESS

## அத்தியாயம் V

## இந்தியக் கணக்காய்வர் – தலைமைத் தணிக்கையர்



## பகுதி VI

## மாநிலங்கள்

## அத்தியாயம் I – பொதுவியல்



## அத்தியாயம் II – ஆட்சித்துறை

### ஆளுநர்



### அமைச்சரவை



### மாநிலத்தின் தலைமை வழக்குரைஞர்



### அரசின்அலுவல் நடத்துமுறை

## CHAPTER III – THE STATE LEGISLATURE

### GENERAL



### OFFICERS OF THE STATE LEGISLATURE

## அத்தியாயம் III – மாநிலச் சட்டமன்றம்

### பொதுவியல்



### மாநில சட்டமன்றப் பதவியாளர்கள்

CONDUCT OF BUSINESS



DISQUALIFICATIONS OF MEMBERS



POWERS, PRIVILEGES AND IMMUNITIES OF STATE LEGISLATURES AND THEIR MEMBERS



LEGISLATIVE PROCEDURE



PROCEDURE IN FINANCIAL MATTERS



PROCEDURE GENERALLY

## CHAPTER IV
## LEGISLATIVE POWER OF THE GOVERNOR



## CHAPTER V
## THE HIGH COURTS IN THE STATES

## அத்தியாயம் IV
## ஆளுநருக்குள்ள சட்டமியற்றும் அதிகாரம்



## அத்தியாயம் V
## மாநிலங்களிலுள்ள உயர் நீதிமன்றங்கள்

## CHAPTER VI
## SUBORDINATE COURTS



## PART VII
## THE STATES IN PART B OF THE FIRST SCHEDULE



## PART VIII
## THE UNION TERRITORIES



## PART IX
## THE PANCHAYATS

## அத்தியாயம் VI
## கீழமை நீதிமன்றங்கள்



## பகுதி VII
## முதலாம் இணைப்புப்பட்டியலின் (ஆ) பகுதியிலுள்ள மாநிலங்கள்



## பகுதி VIII
## ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள்



## பகுதி IX
## ஊராட்சிகள்

## PART IX – A

## THE MUNICIPALITIES

## பகுதி IX –(அ)
## நகராட்சிகள்

## PART IXB

## THE Co-operative societies



## PART X

## THE SCHEDULED AND TRIBAL AREAS



## PART XI

## RELATIONS BETWEEN THE UNION AND THE STATES

## CHAPTER I — LEGISLATIVE RELATIONS.

## DISTRIBUTION OF LEGISLATIVE POWERS

## பகுதி IX(ஆ)

## கூட்டுறவுச் சங்கங்கள்



## பகுதி X

## பட்டியல் வரையிடங்களும் பழங்குடியினர் வரையிடங்களும்



## பகுதி XI

## ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் உள்ள தொடர்புநிலைகள்

### அத்தியாயம் I

### சட்டமியற்றுத் தொடர்புநிலைகள்

## CHAPTER II

## ADMINISTRATIVE RELATIONS

### GENERAL



### DISPUTES RELATING TO WATERS



### CO-ORDINATION BETWEEN STATES

## அத்தியாயம் II

## நிருவாகத் தொடர்புநிலைகள்

### பொதுவியல்



### நீர் தொடர்பான பூசல்கள்



### மாநிலங்கள் இயைந்து இயங்குதல்

## PART XII

## FINANCE, PROPERTY, CONTRACTS AND SUITS

## CHAPTER I - FINANCE

## GENERAL



## DISTRIBUTION OF REVENUES BETWEEN THE UNION AND THE STATES

## பகுதி XII

## நிதி, சொத்து, ஒப்பந்தங்கள் மற்றும் உரிமைவழக்குகள்

## அத்தியாயம் I - நிதி

### பொதுவியல்



### ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே வருவாய்களைப் பகிர்ந்தளித்தல்

## MISCELLANEOUS FINANCIAL PROVISIONS



## CHAPTER II
## BORROWING



## CHAPTER III
## PROPERTY, CONTRACTS, RIGHTS, LIABILITIES, OBLIGATIONS AND SUITS.

### நிதி பற்றிய பல்வகை வகையங்கள்



### அத்தியாயம் II
### கடன்பெறுதல்



### அத்தியாயம் III
### சொத்து, ஒப்பந்தங்கள், உரிமைகள், பொறுப்படைவுகள், கடமைப்பாடுகள் மற்றும் உரிமைவழக்குகள்

## CHAPTER IV
## RIGHT TO PROPERTY



## PART XIII
## TRADE, COMMERCE AND INTERCOURSE WITHIN THE TERRITORY OF INDIA



## PART XIV
## SERVICES UNDER THE UNION AND THE STATES
## CHAPTER I
## SERVICES

## CHAPTER II

## PUBLIC SERVICE COMMISSION



## PART XIV - A

## TRIBUNALS



## PART XV

## ELECTIONS

## அத்தியாயம் II

## அரசுப் பணியாளர் தேர்வாணையங்கள்



## பகுதி XIV –(அ)

## தீர்ப்பாயங்கள்



## பகுதி XV

## தேர்தல்கள்

## PART XVI

## SPECIAL PROVISIONS RELATING TO CERTAIN CLASSES



## PART XVII

## OFFICIAL LANGUAGE

### CHAPTER I

### LANGUAGE OF THE UNION

## பகுதி XVI

## குறித்தசில வகுப்பினர் தொடர்பான தனியுறு வகையங்கள்



## பகுதி XVII

## ஆட்சி மொழி

### அத்தியாயம் I

### ஒன்றியத்தின் மொழி

## CHAPTER II

## REGIONAL LANGUAGES



## CHAPTER III

## LANGUAGE OF THE SUPREME COURT, HIGH COURTS, ETC.



## CHAPTER IV

## SPECIAL DIRECTIVES



## PART XVIII

## EMERGENCY PROVISIONS

## அத்தியாயம் II

### மண்டல மொழிகள்



## அத்தியாயம் III

### உச்ச நீதிமன்றம், உயர் நீதிமன்றங்கள் முதலியவற்றின் மொழி



## அத்தியாயம் IV

### தனியுறு நெறியுரைகள்



## பகுதி XVIII

### நெருக்கடிநிலை பற்றிய வகையங்கள்

## PART XIX
## MISCELLANEOUS



## PART XX
## AMENDMENT OF THE CONSTITUTION



## PART XXI
## TEMPORARY, TRANSITIONAL AND SPECIAL PROVISIONS

## பகுதி XIX

### பல்வகை



## பகுதி XX

### அரசமைப்பின் திருத்தம்



## பகுதி XXI

### தற்காலிகமான, மாறும் இடைக்காலத்திற்கான மற்றும் தனியுறு வகையங்கள்

## PART XXII

## SHORT TITLE, COMMENCEMENT, AUTHORITATIVE TEXT IN HINDI AND REPEALS

## பகுதி XXII

## குறுந்தலைப்பு, தொடக்கம், அதிகாரஉறுதிபெற்ற இந்திமொழி வாசகம் மற்றும் நீக்கறவுகள்

## SCHEDULES

## இணைப்புப்பட்டியல்கள்

# THE CONSTITUTION OF INDIA

## PREAMBLE

WE, THE PEOPLE OF INDIA, *having solemnly resolved to constitute India into a* [1][SOVEREIGN SOCIALIST SECULAR DEMOCRATIC REPUBLIC] *and to secure to all its citizens:*

JUSTICE, *social, economic and political;*

LIBERTY *of thought, expression, belief, faith and worship;*

EQUALITY *of status and of opportunity;*

*and to promote among them all*

FRATERNITY *assuring the dignity of the individual and the* [2][*unity and integrity of the Nation*];

IN OUR CONSTITUENT ASSEMBLY *this twenty-sixth day of November,* 1949, *do* HEREBY ADOPT, ENACT AND GIVE TO OURSELVES THIS CONSTITUTION.

---

1. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s.2 for "SOVEREIGN DEMOCRATIC REPUBLIC" (w.e.f. 3-1-1977).
2. Subs. by *ibid*, for "unity of the Nation" (w.e.f. 3-1-1977).

# இந்திய அரசமைப்பு

## முகப்புரை

இந்திய மக்களாகிய நாம், இந்திய நாட்டினை [1][இறையாண்மையும் சமநலச்சமுதாயமும் சமயச்சார்பின்மையும் மக்களாட்சிமுறையும் அமைந்ததொரு குடியரசாக நிறுவவும்],

அதன் குடிமக்கள் அனைவரும்

சமுதாய, பொருளியல், அரசியல் நீதி,

எண்ணம், அதன் வெளியீடு, கோட்பாடு,

சமயநம்பிக்கை, வழிபாடு இவற்றில் தன்னுரிமை,

சமுதாயப்படிநிலை, வாய்ப்புநலம் இவற்றில் சமன்மை

ஆகியவற்றை எய்திடச் செய்யவும்,

அவர்கள் அனைவரிடையேயும்

தனி மனிதனின் மாண்பு, [2][நாட்டுமக்களின் ஒற்றுமை, ஒருமைப்பாடு] இவற்றை உறுதிப்படுத்தும்

உடன்பிறப்புரிமையினை வளர்க்கவும்

உள்ளார்ந்த உறுதியுடையராய்,

நம்முடைய அரசமைப்புப் பேரவையில், 1949 நவம்பர் இருபத்தாறாம் நாளாகிய இன்று, ஈங்கிதனால், இந்த அரசமைப்பினை ஏற்று, இயற்றி, நமக்கு நாமே வழங்கிக்கொள்கிறோம்.

---

1. "இறையாண்மையும் மக்களாட்சி முறையும் அமைந்ததொரு குடியரசாக" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 2 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. "நாட்டுமக்களின் ஒற்றுமை" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

# PART I

## THE UNION AND ITS TERRITORY

**1. Name and territory of the Union :**

(1) India, that is Bharat, shall be a Union of States.

[1][(2) The States and the territories thereof shall be as specified in the First Schedule.]

(3) The territory of India shall comprise —

(a) the territories of the States;

[2][(b) the Union territories specified in the First Schedule; and]

(c) such other territories as may be acquired.

**2. Admission or establishment of new States :**

Parliament may by law admit into the Union, or establish, new States on such terms and conditions as it thinks fit.

[3]**2A.** [*Sikkim to be associated with the Union.*] *Omitted by the Constitution (Thirty-sixth Amendment) Act, 1975, s. 5 (w.e.f. 26-4-1975).*

**3. Formation of new States and alteration of areas, boundaries or names of existing States:**

Parliament may by law -

(a) form a new State by separation of territory from any State or by uniting two or more States or parts of States or by uniting any territory to a part of any State;

(b) increase the area of any State;

(c) diminish the area of any State;

(d) alter the boundaries of any State;

(e) alter the name of any State:

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 2, for cl. (2) (w.e.f. 1-11-1956).
2. Subs. by *ibid*., for sub-clause (b).
3. Ins. by the Constitution (Thirty-fifth Amendment) Act, 1974, s. 2 (w.e.f. 1-3-1975).

# பகுதி I

## ஒன்றியமும் அதன் ஆட்சிநிலவரையும்

**1. ஒன்றியத்தின் பெயரும் ஆட்சிநிலவரையும் :**

(1) இந்தியா எனும் பாரதம், மாநிலங்களைக் கொண்டதோர் ஒன்றியமாக இருக்கும்.

[1][(2) மாநிலங்களும் அவற்றின் ஆட்சிநிலவரைகளும் முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ளவாறு இருக்கும்.]

(3) இந்தியாவின் ஆட்சிநிலவரை –

(அ) மாநிலங்களின் ஆட்சிநிலவரைகளையும்,

[2][(ஆ) முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளையும்],

(இ) அடையப்பெறும் பிற ஆட்சிநிலவரைகளையும்

உள்ளடக்குவது ஆகும்.

**2. புதிய மாநிலங்களை ஏற்றுக்கொள்ளுதல் அல்லது நிறுவுதல் :**

நாடாளுமன்றம், தான் தக்கதெனக் கருதுகிற வரையுரைகள் மற்றும் வரைக்கட்டுகளுக்கு இணங்க, சட்டத்தினால், புதிய மாநிலங்களை ஒன்றியத்துள் ஏற்றுக்கொள்ளலாம் அல்லது நிறுவலாம்.

[3]2(அ). *[ஒன்றியத்துடன் சிக்கிம் இணைக்கப்படுதல்] அரசமைப்புச் (முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 5 ஆம் பிரிவினால் (26–4–1975 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**3. புதிய மாநிலங்களை உருவாக்குதல் மற்றும் நிலவுறும் மாநிலங்களின் பரப்பிடங்களை, எல்லைகளை அல்லது பெயர்களை மாற்றம் செய்தல் :**

நாடாளுமன்றம், சட்டத்தினால் –

(அ) எந்தவொரு மாநிலத்திலிருந்தும் ஆட்சிநிலவரையைப் பிரித்தோ இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களை அல்லது மாநிலங்களின் பகுதிகளை ஒன்றிணைத்தோ மாநிலம் ஒன்றின் பகுதியுடன் ஆட்சிநிலவரை எதனையும் ஒன்றிணைத்தோ புதிய மாநிலம் ஒன்றை உருவாக்கலாம்;

(ஆ) எந்தவொரு மாநிலத்தின் பரப்பிடத்தையும் விரிவாக்கலாம்;

(இ) எந்தவொரு மாநிலத்தின் பரப்பிடத்தையும் குறைக்கலாம்;

(ஈ) எந்தவொரு மாநிலத்தின் எல்லைகளையும் மாற்றலாம்;

(உ) எந்தவொரு மாநிலத்தின் பெயரையும் மாற்றலாம்:

---

1. (2) ஆம் கூறுக்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 2 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) , மாற்றாக அமைக்கப்பட்டது.
2. *மேற்படிச் சட்டத்தினால்* (ஆ) உட்கூறுக்கு மாற்றாக அமைக்கப்பட்டது.
3. அரசமைப்புச் (முப்பத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1974 இன் 2 ஆம் பிரிவினால் (1–3–1975 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

[1][Provided that no Bill for the purpose shall be introduced in either House of Parliament except on the recommendation of the President and unless, where the proposal contained in the Bill affects the area, boundaries or name of any of the States[2], the Bill has been referred by the President to the Legislature of that State for expressing its views thereon within such period as may be specified in the reference or within such further period as the President may allow and the period so specified or allowed has expired.]

[3][**Explanation I.** - In this article, in clauses (a) to (e),"State" includes a Union territory, but in the proviso, "State" does not include a Union Territory.

**Explanation II.** - The power conferred on Parliament by clause (a) includes the power to form a new State or Union territory by uniting a part of any State or Union territory to any other State or Union territory.]

**4. Laws made under articles 2 and 3 to provide for the amendment of the First and the Fourth Schedules and supplemental, incidental and consequential matters :**

(1) Any law referred to in article 2 or article 3 shall contain such provisions for the amendment of the First Schedule and the Fourth Schedule as may be necessary to give effect to the provisions of the law and may also contain such supplemental, incidental and consequential provisions (including provisions as to representation in Parliament and in the Legislature or Legislatures of the State or States affected by such law) as Parliament may deem necessary.

(2) No such law as aforesaid shall be deemed to be an amendment of this Constitution for the purposes of article 368.

## PART II

## CITIZENSHIP

**5. Citizenship at the commencement of the Constitution :**

At the commencement of this Constitution, every person who has his domicile in the territory of India and —

(a) who was born in the territory of India; or

(b) either of whose parents was born in the territory of India; or

---

1. Subs. by the Constitution (Fifth Amendment) Act, 1955, s. 2, for the proviso (w.e.f. 24-12-1955).
2. The words and letter "specified in Part A or Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).
3. Ins. by the Constitution (Eighteenth Amendment) Act, 1966, s. 2 (w.e.f. 27-8-1966).

[1][வரம்புரையாக: இதன்பொருட்டான சட்டமுன்வடிவு எதனையும், குடியரசுத்தலைவரின் பரிந்துரை மீதலல்லாமலும், மேலும், அச்சட்டமுன்வடிவில் அடங்கிய செயற்குறிப்பு மாநிலங்களில்[2] ஒன்றின் பரப்பிடத்தையோ எல்லைகளையோ பெயரையோ பாதிக்குமிடத்து, அச்சட்டமுன்வடிவு, குடியரசுத் தலைவரால் அந்த மாநிலச் சட்டமன்றத்திற்கு, அச்சட்டமுன்வடிவு மீதான அதன் கருத்தினை, அவர் குறித்துரைக்கும் காலஅளவிற்குள்ளாகவோ அவர் அனுமதிக்கும் கூடுதலான காலஅளவிற்குள்ளாகவோ தெரிவிப்பதற்கெனக் குறித்தனுப்பப்பட்டிருந்து, அவ்வாறு அதில் குறித்துரைக்கப்பட்ட அல்லது கூடுதலாக அனுமதிக்கப்பட்ட காலஅளவு கழிவுற்றிருந்தால் அன்றியும், நாடாளுமன்ற ஈரவைகள் எதிலும் அறிமுகப்படுத்துதல் ஆகாது.]

[3][விளக்கம் I.– இந்த உறுப்பின் (அ) முதல் (உ) வரையுள்ள கூறுகளில், “மாநிலம்” என்பது, ஒன்றியத்து ஆட்சிநிலவரையையும் உள்ளடக்கும்; ஆனால், வரம்புரையில் “மாநிலம்” என்பது, ஒன்றியத்து ஆட்சிநிலவரையை உள்ளடக்குவதில்லை.

விளக்கம் II.– (அ) கூறின்வழி, நாடாளுமன்றத்திற்கு வழங்கப்பட்ட அதிகாரமானது, மாநிலம் அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒன்றின் பகுதியை வேறொரு மாநிலத்துடனோ ஒன்றியத்து ஆட்சிநிலவரையுடனோ ஒன்றிணைத்து ஒரு புதிய மாநிலத்தை அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரையை உருவாக்குவதற்கான அதிகாரத்தையும் உள்ளடக்கும்.]

**4. 2, 3 ஆகிய உறுப்புகளின்படி இயற்றப்படும் சட்டங்கள், முதலாம், நான்காம் இணைப்புப்பட்டியல்களைத் திருத்துவதற்காகவும் துணைவறு, சார்வறு, விளைவறு பொருட்பாடுகளுக்காகவும் வகைசெய்தல் :**

(1) 2 ஆம் உறுப்பிலோ 3 ஆம் உறுப்பிலோ சுட்டப்பட்டுள்ள சட்டம் எதுவும், அந்தச் சட்டத்தின் வகையங்களைச் செல்திறப்படுத்துவதற்குத் தேவையானவாறு முதலாம் இணைப்புப்பட்டியலையும் நான்காம் இணைப்புப்பட்டியலையும் திருத்துவதற்கான வகையங்களைக் கொண்டிருத்தல் வேண்டும்; அது (நாடாளுமன்றத்திலும் அத்தகைய சட்டத்தினால் பாதிக்கப்படும் மாநிலத்தின் சட்டமன்றத்திலும் அல்லது மாநிலங்களின் சட்டமன்றங்களிலும் சார்பாற்றம் குறித்த வகையங்கள் உள்ளடங்கலாக) நாடாளுமன்றம் தேவையெனக் கருதும் துணைவறு, சார்வறு, விளைவறு வகையங்களைக் கொண்டதாகவும் இருக்கலாம்.

(2) மேற்சொன்ன சட்டம் எதுவும், 368 ஆம் உறுப்பைப் பொறுத்தவரை, இந்த அரசமைப்பின் திருத்தமாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

## பகுதி II

## குடிமை

**5. அரசமைப்பின் தொடக்கநிலையில் குடிமை :**

இந்த அரசமைப்பின் தொடக்கநிலையில், இந்திய ஆட்சிநிலவரையில் தம் நிலைவாழ்விடத்தைக் கொண்டிருப்பதுடன்—

(அ) தாம் இந்திய ஆட்சிநிலவரையில் பிறந்தவராகவும், அல்லது

(ஆ) இந்திய ஆட்சிநிலவரையில் பிறந்தவரை, தம் பெற்றோரில் ஒருவராகக் கொண்டவராகவும், அல்லது

---

1. வரம்புரைக்கு, அரசமைப்புச் (ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1955 இன் 2 ஆம் பிரிவினால் (24–12–1955 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. “முதலாம் இணைப்புப் பட்டியலின் பகுதி (அ) அல்லது பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட” என்ற சொற்கள் மற்றும் எழுத்து, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.
3. அரசமைப்புச் (பதினெட்டாம் திருத்தம்) சட்டம், 1966 இன் 2 ஆம் பிரிவினால் (27–8–1966 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(c) who has been ordinarily resident in the territory of India for not less than five years immediately preceding such commencement,

shall be a citizen of India.

**6. Rights of citizenship of certain persons who have migrated to India from Pakistan :**

Notwithstanding anything in article 5, a person who has migrated to the territory of India from the territory now included in Pakistan shall be deemed to be citizen of India at the commencement of this Constitution if —

(a) he or either of his parents or any of his grand-parents was born in India as defined in the Government of India Act,1935 (as originally enacted); and

(b) (i) in the case where such a person has so migrated before the nineteenth day of July, 1948, he has been ordinarily resident in the territory of India since the date of his migration, or

(ii) in the case where such person has so migrated on or after the nineteenth day of July, 1948, he has been registered as a citizen of India by an officer appointed in that behalf by the Government of the Dominion of India on an application made by him therefor to such officer before the commencement of this Constitution in the form and manner prescribed by that Government:

Provided that no person shall be so registered unless he has been resident in the territory of India for at least six months immediately preceding the date of his application.

**7. Rights of citizenship of certain migrants to Pakistan :**

Notwithstanding anything in articles 5 and 6, a person who has after the first day of March, 1947, migrated from the territory of India to the territory now included in Pakistan shall not be deemed to be a citizen of India:

Provided that nothing in this article shall apply to a person who, after having so migrated to the territory now included in Pakistan, has returned to the territory of India under a permit for resettlement or permanent return issued by or under the authority of any law and every such person shall for the purposes of clause (b) of article 6 be deemed to have migrated to the territory of India after the nineteenth day of July, 1948.

(இ) அந்தத் தொடக்கநிலைக்கு உடன்முன்பு ஐந்து ஆண்டுகளுக்குக் குறையாமல் இந்திய ஆட்சிநிலவரையில் தாம் வழக்கமாகக் குடியிருந்து வருபவராகவும் உள்ள ஒவ்வொருவரும்

இந்தியக் குடிமகன் ஆவார்.

**6. பாகிஸ்தானிலிருந்து இந்தியாவுக்குக் குடிபெயர்ந்துள்ள குறித்தசிலரின் குடிமை உரிமைகள் :**

5 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், பாகிஸ்தானில் இப்போது உள்ளடங்கியுள்ள ஆட்சிநிலவரையிலிருந்து இந்திய ஆட்சிநிலவரைக்குக் குடிபெயர்ந்துள்ள ஒருவர்—

(அ) தாமோ தம் பெற்றோரில் ஒருவரோ தம் பாட்டன் பாட்டியரில் ஒருவரோ (முதன்முதலில் இயற்றப்பட்டபடி) இந்திய அரசுச் சட்டம், 1935 இல் வரையறுக்கப்பட்ட இந்தியாவில் பிறந்தவர் என்பதுடன்,

(ஆ) (i) அத்தகையவர், 1948 ஜூலை பத்தொன்பதாம் நாளுக்கு முன்பு அவ்வாறு குடிபெயர்ந்துள்ள நேர்வில், அவர் தாம் குடிபெயர்ந்த தேதியிலிருந்து இந்திய ஆட்சிநிலவரையில் வழக்கமாகக் குடியிருந்து வருபவராகவும் இருப்பின், அல்லது

(ii) அத்தகையவர், 1948 ஜூலை பத்தொன்பதாம் நாளன்றோ அதற்குப் பின்போ அவ்வாறு குடிபெயர்ந்துள்ள நேர்வில், இந்தியக் குடிமகனாகத் தம்மைப் பதிவுசெய்து கொள்வதற்கென, இந்தியத் தன்னாட்சிய அரசினால் அதன்பொருட்டு அமர்த்தப்பெற்ற ஓர் அலுவலரிடம், அவ்வரசினால் வகுத்துரைக்கப்பட்ட வடிவத்திலும் முறையிலும், இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்பு தம்மால் செய்து கொள்ளப்பட்ட ஒரு விண்ணப்பத்தின் மீது அத்தகைய அலுவலரால் அவ்வாறு பதிவு செய்யப் பெற்றுள்ளவராகவும் இருப்பின்,

அவர், இந்த அரசமைப்பின் தொடக்கநிலையில் இந்தியக் குடிமகன் எனக் கொள்ளப்பெறுவார்:

**வரம்புரையாக :** ஒருவர், தாம் விண்ணப்பித்த தேதிக்கு உடன்முன்பு குறைந்தது ஆறு மாதங்களேனும் இந்திய ஆட்சிநிலவரையில் குடியிருந்தவராக இருந்தாலன்றி, அவரை அவ்வாறு பதிவு செய்தல் ஆகாது.

**7. பாகிஸ்தானுக்குக் குடிபெயர்ந்துள்ள குறித்தசிலரின் குடிமை உரிமைகள் :**

5, 6 ஆகிய உறுப்புகளில் எது எவ்வாறிருப்பினும், இந்திய ஆட்சிநிலவரையிலிருந்து, பாகிஸ்தானில் இப்போது உள்ளடங்கியுள்ள ஆட்சிநிலவரைக்கு, 1947 மார்ச் முதலாம் நாளுக்குப் பின்பு குடிபெயர்ந்துள்ள ஒருவரை இந்தியக் குடிமகன் எனக் கொள்ளுதல் ஆகாது:

**வரம்புரையாக:** பாகிஸ்தானில் இப்போது உள்ளடங்கியுள்ள ஆட்சிநிலவரைக்கு அவ்வாறு குடிபெயர்ந்த பின்பு, சட்டம் ஒன்றின் அதிகாரத்தாலோ அதன் வழியாலோ மறுகுடியமர்வுக்காக அல்லது நிலையாகத் திரும்புவதற்காக வழங்கப்பட்ட ஓர் இசைவுச்சீட்டின்படி இந்திய ஆட்சிநிலவரைக்குத் திரும்பி வந்திருக்கின்ற எவருக்கும், இந்த உறுப்பிலுள்ள எதுவும் பொருந்துதல் ஆகாது; அத்தகைய ஒவ்வொருவரும், 6 ஆம் உறுப்பின் (ஆ) கூறினைப் பொறுத்தவரை, 1948 ஜூலை பத்தொன்பதாம் நாளுக்குப் பின்பு இந்திய ஆட்சிநிலவரைக்குக் குடிபெயர்ந்திருப்பதாகக் கொள்ளப்பெறுவார்.

**8. Rights of citizenship of certain persons of Indian origin residing outside India :**

Notwithstanding anything in article 5, any person who or either of whose parents or any of whose grand-parents was born in India as defined in the Government of India Act, 1935 (as originally enacted), and who is ordinarily residing in any country outside India as so defined shall be deemed to be a citizen of India if he has been registered as a citizen of India by the diplomatic or consular representative of India in the country where he is for the time being residing on an application made by him therefor to such diplomatic or consular representative, whether before or after the commencement of this Constitution, in the form and manner prescribed by the Government of the Dominion of India or the Government of India.

**9. Persons voluntarily acquiring citizenship of a foreign State not to be citizens :**

No person shall be a citizen of India by virtue of article 5, or be deemed to be a citizen of India by virtue of article 6 or article 8, if he has voluntarily acquired the citizenship of any foreign State.

**10. Continuance of the rights of citizenship :**

Every person who is or is deemed to be a citizen of India under any of the foregoing provisions of this Part shall, subject to the provisions of any law that may be made by Parliament, continue to be such citizen.

**11. Parliament to regulate the right of citizenship by law :**

Nothing in the foregoing provisions of this Part shall derogate from the power of Parliament to make any provision with respect to the acquisition and termination of citizenship and all other matters relating to citizenship.

## PART III

## FUNDAMENTAL RIGHTS

## GENERAL

**12. Definition :**

In this Part, unless the context otherwise requires, "the State" includes the Government and Parliament of India and the Government and the Legislature of each of the States and all local or other authorities within the territory of India or under the control of the Government of India.

**13. Laws inconsistent with or in derogation of the fundamental rights :**

(1) All laws in force in the territory of India immediately before the commencement of this Constitution, in so far as they are inconsistent with the provisions of this Part, shall, to the extent of such inconsistency, be void.

**8. இந்தியாவுக்கு வெளியே குடியிருந்து வரும் குறித்தசில இந்திய மரபினரின் குடிமை உரிமைகள் :**

5 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், தாமோ தம் பெற்றோரில் ஒருவரோ தம் பாட்டன் பாட்டியரில் ஒருவரோ (முதன்முதலில் இயற்றப்பட்டபடி), இந்திய அரசுச் சட்டம், 1935 இல் வரையறுக்கப்பட்ட இந்தியாவில் பிறந்திருந்து, அவ்வாறு வரையறுக்கப்பட்ட இந்தியாவுக்கு வெளியேயுள்ள நாடு எதிலும் வழக்கமாகக் குடியிருந்துவருகின்ற எவரும், இந்தியக் குடிமகன் எனப் பதிவுசெய்வதற்காகத் தாம் அப்போதைக்குக் குடியிருந்துவரும் நாட்டிலுள்ள இந்தியா அரசுத் தூதுவரிடம் அல்லது குடி நலத்தூதுவரிடம், இந்தியத் தன்னாட்சிய அரசினாலோ இந்திய அரசினாலோ வகுத்துரைக்கப்பட்ட வடிவத்திலும் முறையிலும், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்போ பின்போ தம்மால் செய்து கொள்ளப்பட்ட ஒரு விண்ணப்பத்தின் மீது, அத்தகைய அரசுத் தூதுவரால் அல்லது குடி நலத்தூதுவரால் பதிவுசெய்யப்பெற்றவராக இருப்பின், அவர் இந்தியக் குடிமகன் எனக் கொள்ளப்பெறுவார்.

**9. ஓர் அயல்நாட்டு அரசின் குடிமையினைத் தம்விருப்பாகப் பெற்றுள்ளவர்கள் குடிமக்கள் ஆவதில்லை :**

எவரும், ஓர் அயல்நாட்டு அரசின் குடிமையினைத் தம்விருப்பாகப் பெற்றிருப்பாராயின், அவர் 5 ஆம் உறுப்பின் பயன்திறன் வழி இந்தியக் குடிமகன் ஆவதில்லை; 6 ஆம் உறுப்பின் அல்லது 8 ஆம் உறுப்பின் பயன்திறன் வழியும் அவர் இந்தியக் குடிமகன் எனக் கொள்ளப்பெறுவதில்லை.

**10. குடிமை உரிமைகள் தொடர்ந்திருத்தல் :**

இந்தப் பகுதியின் மேலேகண்ட வகையங்கள் எதன்படியும் இந்தியக் குடிமகனாக இருக்கின்ற அல்லது இருப்பதாகக் கொள்ளப்பெறுகின்ற ஒவ்வொருவரும், நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தின் வகையங்களுக்கு உட்பட்டு, தொடர்ந்து அத்தகைய குடிமகனாக இருந்துவருவார்.

**11. நாடாளுமன்றம் சட்டத்தினால் குடிமை உரிமையை ஒழுங்குறுத்துதல் :**

இந்தப் பகுதியின் மேலேகண்ட வகையங்கள் எதுவும், குடிமை பெறுதல், குடிமை அறுதல் பொறுத்தும் குடிமை தொடர்பான பிற அனைத்துப் பொருட்பாடுகள் பொறுத்தும் வகையம் எதுவும் செய்வதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தைத் திறக்குறைவு செய்வதில்லை.

## பகுதி III

## அடிப்படை உரிமைகள்

### பொதுவியல்

**12. பொருள்வரையறை :**

இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி, "அரசு" என்பது, இந்திய அரசையும் நாடாளுமன்றத்தையும், மாநிலங்கள் ஒவ்வொன்றின் அரசையும் சட்டமன்றத்தையும், இந்திய ஆட்சிநிலவரைக்குள்ளோ இந்திய அரசின் கட்டாள்கையிலோ இருக்கும் உள்ளாட்சி அல்லது பிறவகை அதிகாரஅமைப்புகள் அனைத்தையும் உள்ளடக்கும்.

**13. அடிப்படை உரிமைகளுக்கு முரணான அல்லது அவற்றைத் திறக்குறைவு செய்யும் சட்டங்கள் :**

(1) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு இந்திய ஆட்சிநிலவரையில் செல்லாற்றலிலுள்ள சட்டங்கள் அனைத்தும், இந்தப் பகுதியின் வகையங்களுக்கு முரணாக இருக்கும் அளவிற்கு இல்லாநிலையது ஆகும்.

(2) The State shall not make any law which takes away or abridges the rights conferred by this Part and any law made in contravention of this clause shall, to the extent of the contravention, be void.

(3) In this article, unless the context otherwise requires,—

(a) "law" includes any Ordinance, order, bye-law, rule, regulation, notification, custom or usage having in the territory of India the force of law;

(b) "law in force" includes laws passed or made by a Legislature or other competent authority in the territory of India before the commencement of this Constitution and not previously repealed, notwithstanding that any such law or any part thereof may not be then in operation either at all or in particular areas.

[1][(4) Nothing in this article shall apply to any amendment of this Constitution made under article 368.]

## RIGHT TO EQUALITY

**14. Equality before law :**

The State shall not deny to any person equality before the law or the equal protection of the laws within the territory of India.

**15. Prohibition of discrimination on grounds of religion, race, caste, sex or place of birth :**

(1) The State shall not discriminate against any citizen on grounds only of religion, race, caste, sex, place of birth or any of them.

(2) No citizen shall, on grounds only of religion, race, caste, sex, place of birth or any of them, be subject to any disability, liability, restriction or condition with regard to —

(a) access to shops, public restaurants, hotels and places of public entertainment; or

(b) the use of wells, tanks, bathing ghats, roads and places of public resort maintained wholly or partly out of State funds or dedicated to the use of general public.

1. Ins. by the Constitution (Twenty-fourth Amendment) Act, 1971, s. 2 (w.e.f. 5-11-1971).

(2) இந்தப் பகுதியில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளைப் பறிக்கும் அல்லது ஒடுக்கும் சட்டம் எதனையும் அரசு இயற்றுதல் ஆகாது; மேலும், இந்தக் கூறினை மீறும் வகையில் இயற்றப்படும் சட்டம் எதுவும், அவ்வாறு மீறும் அளவிற்கு இல்லாநிலையது ஆகும்.

(3) இந்த உறுப்பில், தறுவாயின் தேவை வேறானலன்றி,–

(அ) "சட்டம்" என்பது, இந்திய ஆட்சிநிலவரையில் சட்டச் செல்லாற்றல் கொண்ட அவசரச் சட்டம், ஆணை, துணை விதி, விதி, ஒழுங்குறுத்தும் விதி, அறிவிக்கை, வழக்கம் அல்லது வழக்காறு இவற்றை உள்ளடக்கும்;

(ஆ) "செல்லாற்றலிலுள்ள சட்டம்" என்பது, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு, இந்திய ஆட்சிநிலவரையில் இருந்த ஒரு சட்டமன்றத்தினாலோ தகுதிறமுள்ள பிறவகை அதிகாரஅமைப்பினாலோ நிறைவேற்றப்பட்டு அல்லது இயற்றப்பட்டு, முன்னரே நீக்கறவு செய்யப்படாத சட்டங்களை, அத்தகைய சட்டம் எதுவும் அல்லது அதன் பகுதி எதுவும் அப்போது முற்றிலுமாகவோ குறிப்பிட்ட பரப்பிடங்களிலோ செயற்பாட்டில் இல்லாதிருப்பினும், உள்ளடக்கும்.

[1][(4) இந்த உறுப்பிலுள்ள எதுவும், இந்த அரசமைப்பின் 368 ஆம் உறுப்பின்படி செய்யப்படும் திருத்தம் எதற்கும் பொருந்துவதில்லை.]

### சமன்மைக்கான உரிமை

**14. சட்டத்தின் முன் சமன்மை :**

அரசு, இந்திய ஆட்சிநிலவரைக்குள் சட்டத்தின் முன் சமன்மையையும் சட்டங்கள் அளிக்கும் பாதுகாப்பில் சமன்மையையும் எவர் ஒருவருக்கும் மறுத்தல் ஆகாது.

**15. சமயம், இனம், சாதி, பாலினம் அல்லது பிறப்பிடம் காரணமாக வேற்றுமை காட்டுதலுக்குத் தடை :**

(1) அரசு, குடிமகன் எவர் இடத்தும் சமயம், இனம், சாதி, பாலினம், பிறப்பிடம் இவற்றை மட்டுமே அல்லது இவற்றுள் ஏதொன்றையும் மட்டுமே காரணமாகக் கொண்டு வேற்றுமை காட்டுதல் ஆகாது.

(2) குடிமகன் எவரையும் —

(அ) கடைகள், பொது உணவகங்கள், உணவுவிடுதிகள், பொதுக் கேளிக்கையிடங்கள் ஆகியவற்றிற்குச் சென்று வருவதையோ;

(ஆ) அரசு நிதியங்களை முழுவதுமாகவோ பகுதியாகவோ கொண்டு பராமரிக்கப்படும் அல்லது பொதுமக்களின் பயன்பாட்டுக்கு உரித்தாக்கப்படும் கிணறுகள், குளங்கள், நீராடுதுறைகள், சாலைகள், பொதுமக்கள் கூடிச்சேருமிடங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதையோ

பொறுத்து, சமயம், இனம், சாதி, பாலினம், பிறப்பிடம் இவற்றை மட்டுமே அல்லது இவற்றுள் ஏதொன்றையும் மட்டுமே காரணமாகக் கொண்டு, தகவுக்கேடு, கடப்பாடு, வரைத்தடை அல்லது வரைக்கட்டு எதற்கும் உட்படுத்துதல் ஆகாது.

---

1. அரசமைப்புச் (இருபத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1971 இன் 2 ஆம் பிரிவினால் (5–11–1971 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(3) Nothing in this article shall prevent the State from making any special provision for women and children.

[1][(4) Nothing in this article or in clause (2) of article 29 shall prevent the State from making any special provision for the advancement of any socially and educationally backward classes of citizens or for the Scheduled Castes and the Scheduled Tribes.]

[2][(5) Nothing in this article or in sub-clause (g) of clause (1) of article 19 shall prevent the State from making any special provision, by law, for the advancement of any socially and educationally backward classes of citizens or for the Scheduled Castes or the Scheduled Tribes in so far as such special provisions relate to their admission to educational institutions including private educational institutions, whether aided or unaided by the State, other than the minority educational institutions referred to in clause (1) of article 30.]

[3][(6) Nothing in this article or sub-clause (g) of clause (1) of article 19 or clause (2) of article 29 shall prevent the State from making,-

(a) any special provision for the advancement of any economically weaker sections of citizens other than the classes mentioned in clauses (4) and (5); and

(b) any special provision for the advancement of any economically weaker sections of citizens other than the classes mentioned in clauses (4) and (5) in so far as such special provisions relate to their admission to educational institutions including private educational institutions, whether aided or unaided by the State,other than the minority educational institutions referred to inclause (1) of article 30, which in the case of reservation would be in addition to the existing reservations and subject to a maximum of ten percent of the total seats in each category.

**Explanation.** - For the purposes of this article and article 16, "economically weaker sections" shall be such as may be notified by the State from time to time on the basis of family income and other indicators of economic disadvantage.]

**16. Equality of opportunity in matters of public employment :**

(1) There shall be equality of opportunity for all citizens in matters relating to employment or appointment to any office under the State.

---

1. Ins. by the Constitution (First Amendment) Act, 1951, s. 2 (w.e.f. 18-6-1951).

2. Ins. by the Constitution (Ninety-third Amendment) Act, 2005, s. 2 (w.e.f. 20-1-2006).

3. Ins. by the Constitution (One Hundred and Third Amendment) Act, 2019, s. 2 (w.e.f. 14-1-2019).

(3) இந்த உறுப்பிலுள்ள எதுவும், பெண்களுக்காகவும் சிறார்க்காகவும் தனி ஏற்பாடு எதனையும் அரசு செய்வதற்குத் தடையூறு ஆவதில்லை.

[1][(4) இந்த உறுப்பிலோ 29 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறிலோ உள்ள எதுவும், குடிமக்களில் சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் மேம்பாட்டிற்காகவோ பட்டியலில்கண்ட சாதியினர், பட்டியலில்கண்ட பழங்குடியினர் ஆகியோருக்காகவோ தனி ஏற்பாடு எதனையும் அரசு செய்வதற்குத் தடையூறு ஆவதில்லை.]

[2][(5) இந்த உறுப்பிலோ அல்லது 19 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின் (எ) உட்கூறிலோ உள்ள எதுவும், குடிமக்களில் சமுதாய நிலையிலும் கல்வி நிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் எவரின் மேம்பாட்டிற்காகவோ அல்லது பட்டியலில்கண்ட சாதியினர் அல்லது பட்டியலில்கண்ட பழங்குடியினருக்காகவோ, 30 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட சிறுபான்மையினர் கல்வி நிலையங்கள் அல்லாத பிற அரசு உதவிபெறும் அல்லது உதவிபெறாத தனியார் கல்வி நிறுவனங்கள் உள்ளடங்கலான கல்வி நிறுவனங்களில், அவர்களைச் சேர்த்துக்கொள்வதற்கு, தனி ஏற்பாடு எதுவும் எந்த அளவுக்குத் தொடர்புடையதாயிருக்கிறதோ அந்த அளவுக்கு, அத்தகைய தனி ஏற்பாடு எதனையும், அரசு சட்டத்தின் வாயிலாகச் செய்வதற்குத் தடையூறு ஆவதில்லை.]

[3][(6) இந்த உறுப்பிலோ அல்லது 19 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின் (எ) உட்கூறிலோ அல்லது 29 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறிலோ உள்ள எதுவும்—

(அ) (4) மற்றும் (5) ஆம் கூறுகளில் குறிப்பிடப்பட்ட வகுப்பினர் அல்லாத பிற குடிமக்களில் பொருளியல் நிலையில் நலிந்த பிரிவினரின் மேம்பாட்டிற்காகத் தனி ஏற்பாடு எதனையும் அரசு செய்வதற்குத் தடையூறு ஆவதில்லை; மற்றும்

(ஆ) (4) மற்றும் (5) ஆம் கூறுகளில் குறிப்பிடப்பட்ட வகுப்பினர் அல்லாத பிற குடிமக்களில் பொருளியல்நிலையில் நலிந்த பிரிவினரின் மேம்பாட்டிற்காக 30 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில் சுட்டிக்காட்டப்பட்ட சிறுபான்மையினர் கல்வி நிலையங்கள் அல்லாத பிற அரசு உதவிபெறும் அல்லது உதவிபெறாத தனியார் கல்வி நிறுவனங்கள் உள்ளடங்கலான கல்வி நிலையங்களில், அவர்களைச் சேர்த்துக்கொள்வதற்கு, தனி ஏற்பாடுகள் எவையும் எந்த அளவுக்குத் தொடர்புடையதாயிருக்கிறதோ அந்த அளவுக்கு, அவை ஒதுக்கீடு செய்யப்படும் நேர்வில் இருந்துவரும் ஒதுக்கீடுகளுக்குக் கூடுதலான மற்றும் ஒவ்வொரு வகையிலும் மொத்த இடங்களில் பத்து விழுக்காடு என்ற மேல்வரை ஒன்றுக்கு உட்பட்டு, அத்தகைய தனி ஏற்பாடு எதனையும், அரசு செய்வதற்குத் தடையூறு ஆவதில்லை.

**விளக்கம்.** — இந்த உறுப்பின் மற்றும் 16 ஆம் உறுப்பின் நோக்கங்களுக்கு, "பொருளியல்நிலையில் நலிந்த பிரிவினர்" என்பவர், குடும்ப வருமானம் மற்றும் பிற பொருளியல் நிலையில் பாதகமான அறிகுறிகள் ஆகியவற்றின் அடிப்படையில் அவ்வப்போது அரசால் அறிவிக்கை செய்யப்படலாகிறவாறு இருப்பர்.]

**16. பொது வேலையமர்த்தங்கள் தொடர்பாகச் சமன்மையான வாய்ப்புநலம் :**

(1) குடிமக்கள் அனைவருக்கும், அரசின் கீழுள்ள வேலையமர்த்தம் அல்லது பதவியமர்த்தம் தொடர்பாகச் சமன்மையான வாய்ப்புநலம் இருத்தல் வேண்டும்.

---

1. அரசமைப்புச் (ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 2 ஆம் பிரிவினால் (18-6-1951 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (தொண்ணூற்று மூன்றாம் திருத்தம்) சட்டம், 2005 இன் 2 ஆம் பிரிவினால் (20-1-2006 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. அரசமைப்புச் (நூற்று மூன்றாம் திருத்தம்) சட்டம், 2019 இன் 2 ஆம் பிரிவினால் (14-1-2019 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(2) No citizen shall, on grounds only of religion, race, caste, sex, descent, place of birth, residence or any of them, be ineligible for, or discriminated against in respect of, any employment or office under the State.

(3) Nothing in this article shall prevent Parliament from making any law prescribing, in regard to a class or classes of employment or appointment to an office [1][under the Government of, or any local or other authority within, a State or Union territory, any requirement as to residence within that State or Union territory] prior to such employment or appointment.

(4) Nothing in this article shall prevent the State from making any provision for the reservation of appointments or posts in favour of any backward class of citizens which, in the opinion of the State, is not adequately represented in the services under the State.

[2][(4A) Nothing in this article shall prevent the State from making any provision for reservation [3][in matters of promotion with consequential seniority to any class] or classes of posts in the services under the State in favour of the Scheduled Castes and the Scheduled Tribes which, in the opinion of the States, are not adequately represented in the services under the State.]

[4][(4B) Nothing in this article shall prevent the State from considering any unfilled vacancies of a year which are reserved for being filled up in that year in accordance with any provision for reservation made under clause (4) or clause (4A) as a separate class of vacancies to be filled up in any succeeding year or years and such class of vacancies shall not be considered together with the vacancies of the year in which they are being filled up for determining the ceiling of fifty percent reservation on total number of vacancies of that year.]

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch., for "under any State specified in the First Schedule or any local or other authority within its territory, any requirement as to residence within that state." (w.e.f. 1-11- 1956).
2. Ins. by the Constitution (Seventy-seventh Amendment) Act, 1995, s. 2 (w.e.f. 17-6-1995).
3. Subs. by the Constitution (Eighty-fifth Amendment) Act, 2001, s.2 for certain words (retrospectively w.e.f. 17-6-1995).
4. Ins. by the Constitution (Eighty-first Amendment) Act, 2000, s. 2 (w.e.f. 9-6-2000).

(2) குடிமகன் எவரையும், சமயம், இனம், சாதி, பாலினம், குடிவழி, பிறப்பிடம், உறைவிடம் இவற்றை மட்டுமே அல்லது இவற்றுள் ஏதொன்றையும் மட்டுமே காரணமாகக்கொண்டு, அரசின் கீழுள்ள வேலையமர்த்தம் அல்லது பதவி எதனையும் பொறுத்துத் தகுமை அற்றவராகவோ வேற்றுமை காட்டுதலுக்கு உற்றவராகவோ ஆக்குதல் ஆகாது.

(3) இந்த உறுப்பிலுள்ள எதுவும், [1][ஒரு மாநில அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரை அரசின் அல்லது அதிலுள்ள உள்ளாட்சி அல்லது பிறவகை அதிகாரஅமைப்பு எதன்கீழும்,][1] ஒரு வகையினை அல்லது வகைகளைச் சார்ந்த வேலையமர்த்தம் அல்லது பதவியமர்த்தம் பொறுத்து, அத்தகைய வேலையமர்த்தத்திற்கு அல்லது பதவியமர்த்தத்திற்கு முன்னரே [1][அந்த மாநிலத்திற்குள்ளோ ஒன்றியத்து ஆட்சிநிலவரைக்குள்ளோ உறைவிடம் இருக்கவேண்டிய தேவைப்பாட்டினை][1] வகுத்துரைக்கும் சட்டம் எதனையும் நாடாளுமன்றம் இயற்றுவதற்குத் தடையூறு ஆவதில்லை .

(4) இந்த உறுப்பிலுள்ள எதுவும், அரசின் கீழுள்ள பணியங்களில் போதிய அளவிற்கு இடம்பெறவில்லை என அரசு கருதும் பிற்படுத்தப்பட்ட வகுப்பு எதனையும் சேர்ந்த குடிமக்களின் நலச்சார்பாகப் பதவியமர்த்தங்களை அல்லது பணியடைகளை ஒதுக்கீடு செய்வதற்கான ஏற்பாடு எதனையும் அரசு செய்வதற்குத் தடையூறு ஆவதில்லை.

[2][(4அ) இந்த உறுப்பிலுள்ள எதுவும், அரசின் கீழுள்ள பணியங்களில் போதிய அளவிற்கு இடம்பெறவில்லை என அரசு கருதும், பட்டியலில்கண்ட சாதியினரின் மற்றும் பட்டியலில்கண்ட பழங்குடியினரின் நலச்சார்பாக உள்ள அரசின் கீழுள்ள பணியடைகளின் வகை எதற்கும் அல்லது வகைகள் எவற்றிற்கும், [3][விளைவுறுப் பணி முதுநிலையின் அடிப்படையில் பணிஉயர்வு குறித்த பொருட்பாடுகளில்] ஒதுக்கீடு செய்வதற்கான ஏற்பாடு எதனையும் அரசு செய்வதற்குத் தடையூறு ஆவதில்லை.]

[4][(4ஆ) இந்த உறுப்பிலுள்ள எதுவும், (4) ஆம் கூறின் அல்லது (4அ) கூறின்படி செய்யப்பட்ட ஒதுக்கீட்டிற்கான ஏற்பாடு எதற்கும் இணங்க, அந்த ஆண்டில் நிரப்பப்படுவதற்காக ஒதுக்கீடு செய்யப்பட்ட அந்த ஆண்டிற்கான நிரப்பப்படாத காலியிடங்கள் எவற்றையும் பின்வரும் ஆண்டு எதிலும் அல்லது ஆண்டுகள் எவற்றிலும் நிரப்புவதற்கான தனிப்பட்ட வகையைச் சார்ந்த காலியிடங்களாக அரசு கருதுவதற்குத் தடையூறு ஆவதில்லை; மற்றும் அத்தகைய காலியிடங்கள், அந்த ஆண்டிலுள்ள காலியிடங்களின் மொத்த எண்ணிக்கையில், ஐம்பது விழுக்காடு ஒதுக்கீடு என்ற உச்சவரம்பை நிருணயிப்பதற்காக அவை நிரப்பப்படவேண்டிய ஆண்டிலுள்ள காலியிடங்களுடன் சேர்ந்த காலியிடங்களாகக் கருதப்படுதல் ஆகாது.]

---

1. "முதலாம் இணைப்புப்பட்டியலின் குறித்துரைக்கப்பட்ட மாநிலம் எதன் கீழும் அல்லது அதன் ஆட்சிநிலவரைக்குள் உள்ள உள்ளாட்சி அல்லது பிற வகை அதிகாரஅமைப்பு எதனின், அந்த மாநிலத்திற்குள் உறைவிடம் இருக்க வேண்டிய தேவைப்பாடு எதனின்" என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. அரசமைப்புச் (எழுபத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 1995 இன் 2 ஆம் பிரிவினால் (17–6–1995 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

3. குறித்தசில சொற்களுக்கு, அரசமைப்புச் (எண்பத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 2001 இன் 2 ஆம் பிரிவினால் (17–6–1995 முதல் முன்மேவு செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டன.

4. அரசமைப்புச் (எண்பத்து ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2000 இன் 2 ஆம் பிரிவினால் (9–6–2000 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(5) Nothing in this article shall affect the operation of any law which provides that the incumbent of an office in connection with the affairs of any religious or denominational institution or any member of the governing body thereof shall be a person professing a particular religion or belonging to a particular denomination.

[1][(6) Nothing in this article shall prevent the State from making any provision for the reservation of appointments or posts in favour of any economically weaker sections of citizens other than the classes mentioned in clause (4), in addition to the existing reservation and subject to a maximum of ten percent of the posts in each category.]

**17. Abolition of Untouchability:**

"Untouchability" is abolished and its practice in any form is forbidden. The enforcement of any disability arising out of "Untouchability" shall be an offence punishable in accordance with law.

**18. Abolition of titles :**

(1) No title, not being a military or academic distinction, shall be conferred by the State.

(2) No citizen of India shall accept any title from any foreign State.1

(3) No person who is not a citizen of India shall, while he holds any office of profit or trust under the State, accept without the consent of the President any title from any foreign State.

(4) No person holding any office of profit or trust under the State shall, without the consent of the President, accept any present, emolument, or office of any kind from or under any foreign State.

## RIGHT TO FREEDOM

**19. Protection of certain rights regarding freedom of speech, etc :**

(1) All citizens shall have the right—

(a) to freedom of speech and expression;

(b) to assemble peaceably and without arms;

(c) to form associations or unions [2][or Co-operative Societies];

(d) to move freely throughout the territory of India;

---

1.Ins. by the Constitution (One Hundred and Third Amendment) Act, 2019, s. 3 (w.e.f. 14-1-2019).

2.Ins. by the Constitution (Ninety-seventh Amendment) Act, 2011, s. 2 (w.e.f. 12-1-2012).

(5) இந்த உறுப்பிலுள்ள எதுவும், சமயம் அல்லது சமயக்கிளை சார்ந்த அமைப்பு ஒன்றின் அலுவற்பாடுகள் தொடர்பாக ஒரு பதவி வகிப்பவரோ அல்லது ஆட்சிக்குழும உறுப்பினர் எவருமோ, ஒரு குறிப்பிட்ட சமயத்தை ஓம்புகிறவராகவோ ஒரு குறிப்பிட்ட சமயக்கிளையைச் சேர்ந்தவராகவோ இருத்தல் வேண்டும் என வகைசெய்கிற சட்டம் எதுவும் செயற்படுவதைப் பாதிப்பதில்லை.

[1][(6) இந்த உறுப்பிலுள்ள எதுவும், (4) ஆம் கூறில் குறிப்பிடப்பட்ட வகுப்பினர் அல்லாத பிற குடிமக்களில் பொருளியல் நிலையில் நலிந்த பிரிவினரின் நலச்சார்பாக, இருந்துவரும் ஒதுக்கீட்டிற்குக் கூடுதலாக மற்றும் ஒவ்வொரு வகையிலும் பத்து விழுக்காடு பணியடைகள் என்ற மேல்வரை ஒன்றுக்கு உட்பட்டு, பதவியமர்த்தங்களை அல்லது பணியடைகளை ஒதுக்கீடு செய்வதற்கான ஏற்பாடு எதனையும் அரசு செய்வதற்குத் தடையூறு ஆவதில்லை.]

**17. தீண்டாமை ஒழிப்பு :**

“தீண்டாமை” ஒழிக்கப்படுகிறது; எவ்வகையிலும் தீண்டாமையைக் கடைபிடிப்பது கடிந்து தடை செய்யப்படுகிறது. “தீண்டாமை” காரணமாக எழும் தகவுக்கேடு எதனையும் செயலுறுத்துவது சட்டப்படி தண்டனையுறு குற்றச்செயல் ஆகும்.

**18. விருதுப்பட்டங்கள் ஒழிப்பு :**

(1) படைத்துறையின் அல்லது கல்விசார் சிறப்புச் சீர்மை அல்லாத பிற விருதுப்பட்டம் எதனையும் அரசு வழங்குதல் ஆகாது.

(2) இந்தியக் குடிமகன் எவரும், அயல்நாட்டு அரசு எதனிடமிருந்தும் விருதுப்பட்டம் எதனையும் ஏற்றுக்கொள்ளுதல் ஆகாது.

(3) இந்தியக் குடிமகன் அல்லாத எவரும், அரசின்கீழ் ஊதியத்திற்குரிய அல்லது நம்பிக்கைக்குரிய பதவி ஒன்றை வகிக்குங்கால், குடியரசுத்தலைவரின் இசைவின்றி, அயல்நாட்டு அரசு எதனிடமிருந்தும் விருதுப்பட்டம் எதனையும் ஏற்றுக்கொள்ளுதல் ஆகாது.

(4) அரசின் கீழ் ஊதியத்திற்குரிய அல்லது நம்பிக்கைக்குரிய பதவி ஒன்றை வகிக்கின்ற எவரும், குடியரசுத்தலைவரின் இசைவின்றி, அயல்நாட்டு அரசு எதனிடமிருந்தும் பரிசு, பதவியூதியம் எதனையும் அல்லது அவ்வரசு எதன்கீழும் எவ்வகைப் பதவியையும் ஏற்றுக்கொள்ளுதல் ஆகாது.

## சுதந்திரத்திற்கான உரிமை

**19. பேச்சுச் சுதந்திரம் முதலியவை பற்றிய குறித்தசில உரிமைகளுக்குப் பாதுகாப்பு :**

(1) குடிமக்கள் அனைவரும் –

(அ) பேச்சு, சிந்தனை வெளிப்படுத்துகை ஆகியவற்றிற்கான சுதந்திரத்திற்கும்;

(ஆ) அமைதியாக, ஆயுதங்களின்றிக் கூடுவதற்கும்;

(இ) சங்கங்கள் அல்லது கூட்டமைவுகள் [2][அல்லது கூட்டுறவுச் சங்கங்கள்] அமைப்பதற்கும்;

(ஈ) இந்திய ஆட்சிநிலவரை எங்கணும் தடையின்றிச் சென்று வருவதற்கும்;

---

1. அரசமைப்புச் (நூற்று மூன்றாம் திருத்தம்) சட்டம், 2019 இன் 3 ஆம் பிரிவினால் (14-1-2019 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. அரசமைப்புச் (தொண்ணூற்று ஏழாம் திருத்தம்) சட்டம், 2011 இன் 2 ஆம் பிரிவினால் (12-1-2012 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(e) to reside and settle in any part of the territory of India; [1][and]

[2] * * *

(g) to practice any profession, or to carry on any occupation, trade or business.

[3][(2) Nothing in sub-clause *(a)* of clause *(1)* shall affect the operation of any existing law, or prevent the State from making any law, in so far as such law imposes reasonable restrictions on the exercise of the right conferred by the said sub-clause in the interests of [4][the sovereignty and integrity of India,] the security of the State, friendly relations with foreign States, public order, decency or morality, or in relation to contempt of court, defamation or incitement to an offence.]

(3) Nothing in sub-clause (b) of the said clause shall affect the operation of any existing law in so far as it imposes, or prevent the State from making any law imposing, in the interests of [4][the sovereignty and integrity of India or] public order, reasonable restrictions on the exercise of the right conferred by the said sub-clause.

(4) Nothing in sub-clause (c) of the said clause shall affect the operation of any existing law in so far as it imposes, or prevent the State from making any law imposing, in the interests of the sovereignty and integrity of India or public order or morality, reasonable restrictions on the exercise of the right conferred by the said sub-clause.2

(5) Nothing in [5][sub-clauses (d) and (e)] of the said clause shall affect the operation of any existing law in so far as it imposes, or prevent the State from making any law imposing, reasonable restrictions on the exercise of any of the rights conferred by the said sub-clauses either in the interests of the general public or for the protection of the interests of any Scheduled Tribe.

---

1. Ins. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 2 (w.e.f. 20-6-1979).

2. Sub-clause (f) omitted by *ibid*.

3. Subs. by the Constitution (First Amendment) Act, 1951, s. 3, for cl. (2) (with retrospective effect).

4. Ins. by the Constitution (Sixteenth Amendment) Act, 1963, s. 2 (w.e.f. 5-10-1963).

5. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 2 for "sub-clauses (d), (e) and (f)" (w.e.f. 20-6-1979).

(உ) இந்திய ஆட்சிநிலவரையின் எப்பகுதியிலும் குடியிருப்பதற்கும் நிலையாகக் குடியமர்வதற்கும், [1][மற்றும்]

[2] * * *

(எ) விழைதொழில் எதனையும் புரிந்து வருவதற்கும் அல்லது வாழ்தொழில், வணிகத்தொழில் அல்லது ஆகுதொழில் எதனையும் நடத்தி வருவதற்கும்

உரிமை உடையோர் ஆவர்.

[3][(2). (1) ஆம் கூறின் (அ) உட்கூறிலுள்ள எதுவும், அந்த உட்கூறினால் வழங்கப்படும் உரிமையினைத் துய்த்தல் பொறுத்து, [4][இந்திய நாட்டின் இறையாண்மை மற்றும் ஒருமைப்பாடு,] அரசின் பாதுகாப்பு, அயல்நாட்டு அரசுகளுடன் நட்புறவு, பொது ஒழுங்கமைதி, நயப்பண்பு, ஒழுக்கநெறி இவற்றின் நலங்கருதியோ, நீதிமன்ற அவமதிப்பு, அவதூறு அல்லது ஒரு குற்றச்செயலுக்கான தூண்டுதல் தொடர்பாகவோ தகுமான வரைத்தடைகளை விதிக்கின்ற அளவிற்கு, நிலவுறும் சட்டம் ஒன்றின் செயற்பாட்டினைப் பாதிப்பதுமில்லை; அத்தகைய சட்டம் எதனையும் அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.]

(3) மேற்சொன்ன கூறின் (ஆ) உட்கூறிலுள்ள எதுவும், அந்த உட்கூறினால் வழங்கப்படும் உரிமையினைத் துய்த்தல் பொறுத்து, [4][இந்திய நாட்டின் இறையாண்மை மற்றும் ஒருமைப்பாடு அல்லது] பொது ஒழுங்கமைதி இவற்றின் நலங்கருதி, தகுமான வரைத்தடைகளை விதிக்கின்ற அளவிற்கு, நிலவுறும் சட்டம் ஒன்றின் செயற்பாட்டினைப் பாதிப்பதுமில்லை; அவ்வாறு விதிக்கின்ற சட்டம் எதனையும் அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.

(4) மேற்சொன்ன கூறின் (இ) உட்கூறிலுள்ள எதுவும், அந்த உட்கூறினால் வழங்கப்படும் உரிமையினைத் துய்த்தல் பொறுத்து, இந்திய நாட்டின் இறையாண்மை மற்றும் ஒருமைப்பாடு, பொது ஒழுங்கமைதி இவற்றின் நலங்கருதி, தகுமான வரைத்தடைகளை விதிக்கின்ற அளவிற்கு, நிலவுறும் சட்டம் ஒன்றின் செயற்பாட்டினைப் பாதிப்பதுமில்லை; அவ்வாறு விதிக்கின்ற சட்டம் எதனையும் அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.

(5) மேற்சொன்ன கூறின் [5][(ஈ), (உ) ஆகிய உட்கூறுகளிலுள்ள] எதுவும், அந்த உட்கூறுகளினால் வழங்கப்படும் உரிமைகளில் எதனையும் துய்த்தல் பொறுத்து, பொதுமக்களின் நலங்கருதியோ பட்டியலில்கண்ட பழங்குடியினரின் நலங்களைப் பாதுகாப்பதற்காகவோ தகுமான வரைத்தடைகளை விதிக்கின்ற அளவிற்கு, நிலவுறும் சட்டம் ஒன்றின் செயற்பாட்டினைப் பாதிப்பதுமில்லை; அவ்வாறு விதிக்கின்ற சட்டம் எதனையும் அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.

---

1. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 2 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. *மேற்படிச் சட்டத்தினால்* (ஊ) உட்கூறு விட்டுவிடப்பட்டது.
3. (2) ஆம் கூறுக்கு, அரசமைப்புச் (முதலாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 3 ஆம் பிரிவினால் (முன்மேவு செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
4. அரசமைப்புச் (பதினாறாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 2 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
5. "(ஈ), (உ) மற்றும் (ஊ) உட்கூறுகள்" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 2 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

(6) Nothing in sub-clause (g) of the said clause shall affect the operation of any existing law in so far as it imposes, or prevent the State from making any law imposing, in the interests of the general public, reasonable restrictions on the exercise of the right conferred by the said sub-clause, and, in particular, [1][nothing in the said sub-clause shall affect the operation of any existing law in so far as it relates to, or prevent the State from making any law relating to,—

(i) the professional or technical qualifications necessary for practising any profession or carrying on any occupation, trade or business,or

(ii) the carrying on by the State, or by a corporation owned or controlled by the State, of any trade, business, industry or service, whether to the exclusion, complete or partial, of citizens, or otherwise.]

**20. Protection in respect of conviction for offences :**

(1) No person shall be convicted of any offence except for violation of a law in force at the time of the commission of the act charged as an offence, nor be subjected to a penalty greater than that which might have been inflicted under the law in force at the time of the commission of the offence.

(2) No person shall be prosecuted and punished for the same offence more than once.

(3) No person accused of any offence shall be compelled to be a witness against himself.

**21. Protection of life and personal liberty :**

No person shall be deprived of his life or personal liberty except according to procedure established by law.

[2]**[21A. Right to education :**

The State shall provide free and compulsory education to all children of the age of six to fourteen years in such manner as the State may, by law, determine.]

---

1.Subs. by the Constitution (First Amendment) Act, 1951, s. 3, for certain words (w.e.f. 18-6-1951).

2.Ins. by the Constitution (Eighty-sixth Amendment) Act, 2002, s. 2 (w.e.f. 1-4-2010).

(6) மேற்சொன்ன கூறின் (எ) உட்கூறிலுள்ள எதுவும், அந்த உட்கூறினால் வழங்கப்படும் உரிமையினைத் துய்த்தல் பொறுத்து, பொது மக்களின் நலங்கருதி தகுமான வரைத்தடைகளை விதிக்கின்ற அளவிற்கு, நிலவுறும் சட்டம் ஒன்றின் செயற்பாட்டினைப் பாதிப்பதுமில்லை; அத்தகைய சட்டம் எதனையும் அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை; மேலும், குறிப்பாக, [1][மேற்சொன்ன உட்கூறிலுள்ள எதுவும்—

(i) விழைதொழில் எதனையும் புரிந்து வருவதற்கு அல்லது வாழ்தொழில், வணிகத்தொழில் அல்லது ஆகுதொழில் எதனையும் நடத்தி வருவதற்குத் தேவையான விழைதொழில் சார்ந்த அல்லது தொழில்நுட்பம் சார்ந்த தகுதிப்பாடுகள், அல்லது

(ii) வணிகத்தொழில், ஆகுதொழில், விசைத்தொழில் அல்லது பணியம் எதுவும், குடிமக்களை முழுவதுமாகவோ பகுதியாகவோ விலக்கியாயினும் அல்லது பிறவாறாயினும், அரசினாலோ அரசுக்குச் சொந்தமான அல்லது அதன் கட்டாள்கையிலுள்ள ஒரு கூட்டு குழுமத்தாலே நடத்தப்பட்டு வருதல்.

இவை தொடர்புடைய அளவிற்கு, நிலவுறும் சட்டம் ஒன்றின் செயற்பாட்டினைப் பாதிப்பதுமில்லை; அது பொறுத்த சட்டம் எதனையும் அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.]

**20. குற்றச் செயல்களுக்கான குற்றத்தீர்ப்புப் பொறுத்த பாதுகாப்பு :**

(1) ஒருவர் மீது குற்றமெனச் சார்த்தப்பட்ட செயல் எதுவும், அது இழைக்கப்பட்ட காலத்தில் செல்லாற்றலிலிருந்த சட்டம் ஒன்றை மீறியதாகயிருந்தாலன்றி, அவரைக் குற்றத்தீர்ப்புக்கு உள்ளாக்குதல் ஆகாது; அத்துடன், அக்குற்றச்செயல் இழைக்கப்பட்ட காலத்தில் செல்லாற்றலிலிருந்த சட்டத்தின்படி விதித்திருக்கக் கூடிய தண்டனையை விட அதிகமான தண்டனைக்கு அவரை உட்படுத்தலும் ஆகாது.

(2) ஒருவர், ஒரே குற்றச்செயலுக்காக ஒரு முறைக்கு மேல் வழக்குத் தொடரப்படுதலும் தண்டிக்கப்படுதலும் ஆகாது.

(3) குற்றஞ்சாட்டப்பட்ட ஒருவரைத் தமக்கெதிர் சான்றளிப்பவராக இருக்குமாறு கட்டாயப்படுத்துதல் ஆகாது.

**21. உயிருக்கும் உடல்சார் உரிமைக்கும் பாதுகாப்பு :**

ஒருவரது உயிரோ உடல்சார் உரிமையோ, சட்டம் விதித்தமைத்துள்ள நெறிமுறைப்படி அன்றி, பறிக்கப்படுதல் ஆகாது.

**[2][21 (அ). கல்வி கற்பதற்கான உரிமை :**

ஆறு முதல் பதினான்கு வயதுள்ள சிறார்கள் அனைவருக்கும் அரசு, சட்டத்தினால் தீர்மானிக்கும் முறையில் இலவசக் கட்டாயக் கல்வி அளிக்க அரசு ஏற்பாடு செய்தல் வேண்டும்.]

---

1. குறித்தசில வார்த்தைகளுக்கு, அரசமைப்புச் (ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 3 ஆம் பிரிவினால் (18–6–1951 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

2. அரசமைப்புச் (எண்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 2002 இன் 2 ஆம் பிரிவினால் (1–4–2010 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**22. Protection against arrest and detention in certain cases :**

(1) No Person who is arrested shall be detained in custody without being informed, as soon as may be, of the grounds for such arrest nor shall he be denied the right to consult, and to be defended by, a legal practitioner of his choice.

(2) Every person who is arrested and detained in custody shall be produced before the nearest magistrate within a period of twenty-four hours of such arrest excluding the time necessary for the journey from, the place of arrest to the court of the magistrate and no such person shall be detained in custody beyond the said period without the authority of a magistrate.[3]

(3) Nothing in clauses (1) and (2) shall apply—

(a) to any person who for the time being is a n enemy alien; or

(b) to any person who is arrested or detained under any law providing for preventive detention.

*(4) No law providing for preventive detention shall authorise the detention of a person for a longer period than three months unless -

(a) an Advisory Board consisting of persons who are, or have been, or are qualified to be appointed as, Judges of a High Court has reported before the expiration of the said period of three months that there is in its opinion sufficient cause for such detention :

Provided that nothing in this sub-clause shall authorise the detention of any person beyond the maximum period prescribed by any law made by Parliament under sub- clause (b) of clause (7); or

(b) Such person is detained in accordance with the provisions of any law made by Parliament under sub-clauses (a) and (b) of clause (7).

(5) When any person is detained in pursuance of an order made under any law providing for preventive detention, the authority making the order shall, as soon as may be, communicate to such person the grounds on which the order has been made and shall afford him the earliest opportunity of making a representation against the order.

---

* On the commencement of s. 3 of the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, clause *(4)* of art. 22 shall stand amended as directed in s. 3 of that Act. (date yet to be notified).

**22.** குறித்த சில நேர்வுகளில் கைது செய்தல், காவலில் தடுத்துவைத்தல் இவற்றிலிருந்து பாதுகாப்பு :

(1) கைது செய்யப்பட்டுள்ள எவரும், அவ்வாறு கைது செய்யப்பட்டதற்கான காரணங்கள் கூடியவிரைவில் அவருக்குத் தெரிவிக்கப் பெறாமல் காவலில் தடுத்துவைக்கப்படுதல் ஆகாது; மேலும், அவருக்கு, தாம் விரும்பிய வழக்குரைஞரைக் கலந்தாய்வு செய்வதற்கும் அவர் வழியாக எதிர்வாதம் செய்வதற்குமான உரிமை மறுக்கப்படுதலும் ஆகாது.

(2) கைது செய்யப்பட்டுக் காவலில் தடுத்துவைக்கப்பட்ட ஒவ்வொருவரும், அவர் கைது செய்யப்பட்ட இடத்திலிருந்து மிகவும் அருகிலுள்ள குற்றவியல் நடுவர் நீதிமன்றத்தைச் சென்றடைவதற்குத் தேவையான காலம் நீங்கலாக, அவ்வாறு கைது செய்யப்பட்டதிலிருந்து இருபத்து நான்கு மணி நேரக் காலஅளவிற்குள் அக்குற்றவியல் நடுவரிடம் முன்னிலைப்படுத்தப்படுதல் வேண்டும், மேலும், அவர், ஒரு குற்றவியல் நடுவரின் ஆணையின்றி மேற்சொன்ன காலஅளவினைக் கடந்து காவலில் தடுத்துவைக்கப்படுதலும் ஆகாது.

(3). (1), (2) ஆகிய கூறுகளிலுள்ள எதுவும் –

(அ) அப்போதைக்குப் பகைநாட்டு அயலவராக இருக்கும் எவருக்கும்; அல்லது

(ஆ) தடுப்புக் காவலுக்கு வகைசெய்யும் சட்டம் எதன்படியும் கைது செய்யப்பட்ட அல்லது காவலில் தடுத்துவைக்கப்பட்ட எவருக்கும்

பொருந்துவதில்லை.

*(4) தடுப்புக் காவலுக்கு வகைசெய்யும் சட்டம் எதுவும், மூன்று மாதங்களுக்கு மேற்பட்ட காலஅளவிற்கு ஒருவரைக் காவலில் தடுத்துவைப்பதற்கு அதிகாரம் அளித்தல் ஆகாது; அவ்வாறு செய்வதாயின் –

(அ) உயர் நீதிமன்ற நீதிபதிகளாக இருப்பவர்களையோ இருந்தவர்களையோ அவ்வாறு அமர்த்தப் பெறுவதற்குத் தகுதியுடையவர்களையோ கொண்ட ஓர் அறிவுரைக் குழுமம், மேற்சொன்ன மூன்று மாதக் காலஅளவு கழிவுறுவதன் முன்பு, அவ்வாறு காவலில் தடுத்துவைப்பதற்குப் போதிய காரணம் இருக்கிறது என்று தான் கருதுவதாக அறிக்கை அளித்திருக்க வேண்டும் :

வரம்புரையாக : இந்த உட்கூறிலுள்ள எதுவும், (7) ஆம் கூறின் (ஆ) உட்கூறின்படி நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் எதிலும் வகுத்துரைக்கப்படும் மேல்வரைக் காலஅளவு கடந்த பின்னரும் ஒருவரைக் காவலில் தடுத்துவைத்திருக்க அதிகாரம் அளித்தல் ஆகாது; அல்லது

(ஆ) (7) ஆம் கூறின் (அ), (ஆ) ஆகிய உட்கூறுகளின்படி நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு இணங்க அத்தகையவர் காவலில் தடுத்துவைக்கப்பட்டிருக்க வேண்டும்.

(5) தடுப்புக் காவலுக்கு வகைசெய்யும் சட்டத்தின்படி பிறப்பிக்கப்பட்ட ஆணையைப் பின்பற்றி ஒருவர் காவலில் தடுத்துவைக்கப்பட்டிருக்கும் போது, அந்த ஆணையைப் பிறப்பித்த அதிகார அமைப்பு, அந்த ஆணை பிறப்பிக்கப்பட்டதற்கான காரணங்களைக் கூடிய விரைவில் அவருக்குத் தெரிவித்தல் வேண்டும்; மேலும், அந்த ஆணையின்மீது உரையீடு செய்வதற்கு முந்துறு வாய்ப்பினை அவருக்கு அளித்தல் வேண்டும்.

---

* அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 3 ஆம் பிரிவின் தொடக்கநிலையில், அந்தச் சட்டத்தின் 3 ஆம் பிரிவில் பணிக்கப்பட்டவாறு 22 ஆம் உறுப்பின் (4) ஆம் கூறு திருத்தம் பெற்றது ஆகும். (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்).

(6) Nothing in clause (5) shall require the authority making any such order as is referred to in that clause to disclose facts which such authority considers to be against the public interest to disclose.

(7) Parliament may by law prescribe —

*[(a) the circumstances under which, and the class or classes of cases in which, a person may be detained for a period longer than three months under any law providing for preventive detention without obtaining the opinion of an Advisory Board in accordance with the provisions of sub-clause (a ) of clause (4);]

**(b) the maximum period for which any person may in any class or classes of cases be detained under any law providing for preventive detention; and

***(c) the procedure to be followed by an Advisory Board in an inquiry under ****[sub- clause (a ) of clause (4).]

## RIGHT AGAINST EXPLOITATION

**23. Prohibition of traffic in human beings and forced labour :**

(1) Traffic in human beings and begar and other similar forms of forced labour are prohibited and any contravention of this provision shall be an offence punishable in accordance with law.

(2) Nothing in this article shall prevent the State from imposing compulsory service for public purposes, and in imposing such service the State shall not make any discrimination on grounds only of religion, race, caste or class or any of them.

**24. Prohibition of employment of children in factories, etc :**

No Child below the age of fourteen years shall be employed to work in any factory or mine or engaged in any other hazardous employment.

---

* Sub-clause *(a)* shall stand omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 3. (date yet to be notified).

** Sub-clause *(b)* shall stand re-lettered as sub-clause *(a)* by *ibid.* (date yet to be notified).

*** Sub-clause *(c)* shall stand re-lettered as sub-clause *(b)* by *ibid.* (date yet to be notified).

**** The words, letters, figures and brackets shall stand substituted as "clause *(4)*" by *ibid.* (date yet to be notified).

(6). (5) ஆம் கூறிலுள்ள எதுவும், அந்தக் கூறில் சுட்டப்படும் ஆணை ஒன்றைப் பிறப்பிக்கும் அதிகாரஅமைப்பினை, பொதுநலனுக்கு எதிரானவை என அது கருதும் பொருண்மைகளை வெளிப்படுத்துமாறு வேண்டுறுத்துவதில்லை.

(7) நாடாளுமன்றம், சட்டத்தினால் –

*[(அ) தடுப்புக் காவலுக்கு வகைசெய்யும் சட்டம் ஒன்றின்படி, (4) ஆம் கூறின் (அ) உட்கூறின் வகையங்களுக்கு இணங்க அறிவுரைக் குழுமத்தின் கருத்துரையைப் பெறாமலேயே மூன்று மாதங்களுக்கு மேற்பட்ட காலஅளவிற்கு ஒருவர் காவலில் தடுத்துவைக்கப்படலாகும் சூழ்நிலைகள் எவை என்பதையும் மற்றும் அதற்கான நேர்வுகளின் வகை அல்லது வகைகள் எவை என்பதையும்; ]

**(ஆ) தடுப்புக் காவலுக்கு வகைசெய்யும் சட்டம் ஒன்றின்படி எவ்வகையான அல்லது வகைகளான நேர்வுகளிலும் ஒருவர் காவலில் தடுத்துவைக்கப்படலாகும் மேல்வரைக் கால அளவு என்ன என்பதையும்; மற்றும்

***(இ) ****[(4) ஆம் கூறின் (அ) உட்கூறின்படியான] ஒரு விசாரணையில் அறிவுரைக் குழுமம் பின்பற்ற வேண்டிய நெறிமுறை என்ன என்பதையும் ].

வகுத்துரைக்கலாம்.

### சுரண்டலைத் தடுப்பதற்கான உரிமை

**23. மனிதரை வணிகப் பொருளாக்குதல், வலுக்கட்டாயமாக வேலை சுமத்துதல் ஆகியவற்றிற்குத் தடை :**

(1) மனிதரை வணிகப் பொருளாக்குதலும், *“பேகார்”* வழக்கமும், அது போன்ற வலுக்கட்டாயமாக வேலை சுமத்தும் பிற வழக்கங்களும் தடைசெய்யப்படுகின்றன; மேலும், இந்த வகையத்தின் மீறுகை எதுவும், சட்டப்படி தண்டனையுறு குற்றச்செயல் ஆகும்.

(2) இந்த உறுப்பிலுள்ள எதுவும், பொது நோக்கங்களுக்காக அரசு கட்டாயப் பணியைச் சுமத்துவதற்குத் தடையூறு ஆவதில்லை. மேலும், அரசு அத்தகைய பணியைச் சுமத்துகையில் சமயம், இனம், சாதி, வகுப்பு இவற்றை மட்டுமே அல்லது இவற்றில் ஏதொன்றையும் மட்டுமே காரணமாகக்கொண்டு எவ்வாறான வேற்றுமையும் காட்டுதல் ஆகாது.

**24. தொழிற்சாலைகள் முதலியவற்றில் சிறார்களை வேலையமர்த்தம் செய்தலுக்குத் தடை :**

பதினான்கு வயதுக்குக் குறைந்த சிறார் எவரையும், தொழிற்சாலை அல்லது சுரங்கம் எதிலும் வேலையில் அமர்த்துதல் ஆகாது; மேலும் பிற இடர்மிகு வேலையமர்த்தம் எதிலும் ஈடுபடுத்துதலும் ஆகாது.

---

* அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 3 ஆம் பிரிவினால் (அ) உட்கூறு விட்டுவிடப்பட்டது. (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்).

** *மேற்படிச் சட்டத்தினால்* (ஆ) உட்கூறு (அ) உட்கூறாக மறு எழுத்திடப் பெற்றது ஆகும். (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்).

*** *மேற்படிச் சட்டத்தினால்* (இ) உட்கூறு (ஆ) உட்கூறாக மறு எழுத்திடப் பெற்றது ஆகும். (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்).

**** *மேற்படிச் சட்டத்தினால்* சொற்கள், எழுத்துக்கள், எண்கள் மற்றும் அடைப்புக்குறிகள், “(4) ஆம் கூறு” என மாற்றி அமைக்கப்பட்டன. (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்).

## RIGHT TO FREEDOM OF RELIGION

**25. Freedom of conscience and free profession, practice and propagation of religion :**

(1) Subject to public order, morality and health and to the other provisions of this Part, all persons are equally entitled to freedom of conscience and the right freely to profess, practice and propagate religion.

(2) Nothing in this article shall affect the operation of any existing law or prevent the State from making any law—

(a) regulating or restricting any economic, financial, political or other secular activity which may be associated with religious practice;

(b) providing for social welfare and reform or the throwing open of Hindu religious institutions of a public character to all classes and sections of Hindus.

**Explanation I.**—The wearing and carrying of *kirpans* shall be deemed to be included in the profession of the Sikh religion.

**Explanation II.**— In sub-clause *(b)* of clause (2), the reference to Hindus shall be construed as including a reference to persons professing the Sikh, Jaina or Buddhist religion, and the reference to Hindu religious institutions shall be construed accordingly.

**26. Freedom to manage religious affairs:**

Subject to public order, morality and health, every religious denomination or any section thereof shall have the right —

(a) to establish and maintain institutions for religious and charitable purposes;

(*b*) to manage its own affairs in matters of religion;

(*c*) to own and acquire movable and immovable property; and

(d) to administer such property in accordance with law.

**27. Freedom as to payment of taxes for promotion of any particular religion:**

No person shall be compelled to pay and any taxes, the proceeds of which are specifically appropriated in payment of expenses for the promotion or maintenance of any particular religion or religious denomination.

### சமயச் சுதந்திரத்திற்கான உரிமை

**25.** மனச்சான்று வழி ஒழுகுவதற்கான சுதந்திரமும், சுதந்திரமாகச் சமயநெறி ஓம்புதலும் ஒழுகுதலும் ஓதிப்பரப்புதலும் :

(1) பொது ஒழுங்கமைதி, ஒழுக்கநெறி, நல்வாழ்வு ஆகியவற்றிற்கும் இந்தப் பகுதியின் பிற வகையங்களுக்கும் உட்பட்டு, அனைவரும், மனச்சான்றுவழி ஒழுகுவதற்கான சுதந்திரத்திற்கும் சுதந்திரமாகச் சமயநெறி ஓம்புதல், ஒழுகுதல், ஓதிப்பரப்புதல் ஆகியவற்றிற்கான உரிமைக்கும் சரிசமமாக உரிமைகொண்டவர் ஆவர்.

(2) இந்த உறுப்பிலுள்ள எதுவும் –

(அ) சமயநெறி ஒழுகலாற்றுடன் இணைந்திருக்கும் பொருளியல், நிதியியல், அரசியல் நடவடிக்கை அல்லது சமயச் சார்பற்ற பிற நடவடிக்கை எதனையும் ஒழுங்குறுத்துவதான அல்லது கட்டுப்படுத்துவதான,

(ஆ) சமுதாய நலப்பாடு மற்றும் சீர்த்திருத்தத்திற்கு அல்லது பொதுமத்தன்மை வாய்ந்த இந்து சமய நிறுவனங்களை இந்துக்களின் அனைத்து வகுப்பினருக்கும் பிரிவினருக்கும் திறந்துவிடுதலுக்கு வகைசெய்வதான

நிலவுறும் சட்டம் ஒன்றின் செயற்பாட்டைப் பாதிப்பதுமில்லை; அத்தகைய சட்டத்தை அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.

**விளக்கம் I.** – *கிர்பான்கள்* தரிப்பதும் தாங்கிச் செல்வதும் சீக்கிய சமயத்தை ஓம்புவதில் உள்ளடங்கியனவாகக் கொள்ளப்படும்.

**விளக்கம் II.** – (2) ஆம் கூறின் (ஆ) உட்கூறில் இந்துக்கள் என்ற சுட்டுகை, சீக்கிய, சமண அல்லது பௌத்த சமயத்தை ஓம்புகிறவர்களைச் சுட்டுவதையும் உள்ளடக்குவதாகப் பொருள்கொள்ளப்படும்; மேலும், இந்து சமய நிறுவனங்கள் என்ற சுட்டுகையும் அவ்வாறாகவே பொருள்கொள்ளப்படும்.

**26.** **சமயம் சார்ந்த அலுவற்பாடுகளை மேலாண்மை செய்வதற்கான சுதந்திரம் :**

பொது ஒழுங்கமைதி, ஒழுக்கநெறி, நல்வாழ்வு ஆகியவற்றிற்கு உட்பட்டு, ஒவ்வொரு சமயக் கிளையும் அல்லது அதன் பிரிவு எதுவும் –

(அ) சமய நோக்கங்களுக்காகவும் அற நோக்கங்களுக்காகவும் நிறுவனங்களை நிறுவுவதற்கும் பராமரித்துவருவதற்கும்,

(ஆ) சமயம் சார்ந்தவற்றில் தனக்குரிய அலுவற்பாடுகளை மேலாண்மை செய்வதற்கும்,

(இ) அசையும் சொத்தினையும் அசையா சொத்தினையும் சொந்தமாக வைத்திருப்பதற்கும் ஈட்டுவதற்கும்,

(ஈ) அத்தகைய சொத்தினைச் சட்டத்திற்கிணங்கிய வகையில் நிருவகிக்கவும்,

உரிமை உடையது ஆகும்.

**27.** **குறிப்பிட்ட சமயம் எதனையும் வளர்ப்பதற்கான வரிகள் செலுத்துவது குறித்த சுதந்திரம் :**

குறிப்பிட்ட சமயம் அல்லது சமயக் கிளை ஒன்றை வளர்ப்பதற்கோ பேணி வருவதற்கோ ஆகும் செலவுகளைச் செய்வதற்கெனக் குறித்தொதுக்கப்பட்டுள்ள தொகைகளை ஈட்டுவதற்கான வரிகள் எவற்றையும் செலுத்துமாறு எவரையும் கட்டாயப்படுத்துதல் ஆகாது.

**28. Freedom as to attendance at religious instruction or religious worship in certain educational institutions:**

(1) No religious instruction shall be provided in any educational institution wholly maintained out of State funds.

(2) Nothing in clause (1) shall apply to an educational institution which is administered by the State but has been established under any endowment or trust which requires that religious instruction shall be imparted in such institution.

(3) No person attending any educational institution recognised by the State or receiving aid out of State funds shall be required to take part in any religious instruction that may be imparted in such institution or to attend any religious worship that may be conducted in such institution or in any premises attached thereto unless such person or, if such person is a minor, his guardian has given his consent thereto.

## CULTURAL AND EDUCATIONAL RIGHTS

**29. Protection of interests of minorities:**

(1) Any section of the citizens residing in the territory of India or any part thereof having a distinct language, script or culture of its own shall have the right to conserve the same.

(2) No citizen shall be denied admission into any educational institution maintained by the State or receiving aid out of State funds on grounds only of religion, race, caste, language or any of them.

**30. Right of minorities to establish and administer educational institutions:**

(1) All minorities, whether based on religion or language, shall have the right to establish and administer educational institutions of their choice.

[1][(1A) In making any law providing for the compulsory acquisition of any property of an educational institution established and administered by a minority, referred to in clause (1), the State shall ensure that the amount fixed by or determined under such law for the acquisition of such property is such as would not restrict or abrogate the right guaranteed under that clause.]

(2) The State shall not, in granting aid to educational institutions, discriminate against any educational institutions on the ground that it is under the management of a minority, whether based on religion or language.

---

1. Ins. by the Constitution (Forty- Fourth Amendment) Act, 1978,s.4 (w.e.f.19-6-1979).

**28. குறித்தசில கல்வி நிறுவனங்களில் சமயப் போதனை பயிலவருவது அல்லது சமய வழிபாட்டுக்கு வருகைதருவது குறித்த சுதந்திரம் :**

(1) முழுவதுமாகவே அரசு நிதியங்களைக் கொண்டு பராமரித்துவரப்படும் கல்வி நிறுவனம் எதிலும் சமயப் போதனை எதனையும் செய்தல் ஆகாது.

(2). (1) ஆம் கூறிலுள்ள எதுவும், கல்வி நிறுவனம் ஒன்று அரசினால் நிருவகிக்கப்பட்டு வருவதாயினும்கூட, அதில் சமயப் போதனை செய்யப்பட வேண்டும் என்று வேண்டுறுத்துகின்ற நிலைக்கட்டளை அல்லது பொறுப்புக்கட்டளை ஒன்றின்படி அது நிறுவப்பட்டதாயிருப்பின், அத்தகைய நிறுவனத்திற்குப் பொருந்துதல் ஆகாது.

(3) அரசினால் ஏற்பளிக்கப்பட்டிருக்கிற அல்லது அரசு நிதியங்களிலிருந்து உதவி பெறுகிற கல்வி நிறுவனம் ஒன்றில் பயிலவரும் எவரும், அத்தகைய நிறுவனத்தில் புகட்டப்படும் சமயப் போதனை எதிலும் கலந்து கொள்ள வேண்டுமென்றும், அத்தகைய நிறுவனத்தில் அல்லது அதனுடன் இணைந்த வளாகம் ஒன்றில் நடத்தப்படும் சமய வழிபாடு எதற்கும் வருகைதர வேண்டுமென்றும், அவரோ, அவர் இளவராக இருப்பின், அவருடைய காப்பாளரோ அதற்கு இசைவு அளித்திருந்தாலன்றி, அவரை வேண்டுறுத்துதல் ஆகாது.

## பண்பாடு, கல்வி பற்றிய உரிமைகள்

**29. சிறுபான்மையினர் நலன்களுக்குப் பாதுகாப்பு :**

(1) இந்திய ஆட்சிநிலவரையில் அல்லது அதன் பகுதி எதிலும் குடியிருந்துவரும் குடிமக்களில் எப்பிரிவினரும், தமக்கெனத் தனிவேறான மொழி, எழுத்துவடிவம் அல்லது பண்பாடு உடையவராயிருப்பின், அவற்றைப் பேணிக்காக்கும் உரிமை உடையவர் ஆவார்.

(2) குடிமகன் எவரையும், சமயம், இனம், சாதி, மொழி இவற்றை மட்டுமே அல்லது இவற்றுள் ஏதொன்றையும் மட்டுமே காரணமாகக்கொண்டு, அரசினால் பராமரித்துவரப்படும் அல்லது அரசு நிதியங்களிலிருந்து உதவி பெறும் கல்வி நிறுவனம் எதிலும் சேர்ப்பதற்கு மறுத்தல் ஆகாது.

**30. கல்வி நிறுவனங்களை நிறுவவும் நிருவாகம் செய்யவும் சிறுபான்மையினருக்குள்ள உரிமை :**

(1) சமயம் அல்லது மொழி எதன் அடிப்படையிலும் சிறுபான்மையினராக உள்ள அனைவரும் தங்கள் விருப்பப்படி கல்வி நிறுவனங்களை நிறுவவும் நிருவாகம் செய்யவும் உரிமை உடையவர்

[1][(1 அ). (1) ஆம் கூறில் சுட்டப்பட்டுள்ள சிறுபான்மையினரால் நிறுவப்பட்டு நிருவாகம் செய்யப்பெற்றுவரும் ஒரு கல்வி நிறுவனத்தின் சொத்து எதனையும் கட்டாயமாகக் கையகப்படுத்துவதற்கு வகைசெய்கிற சட்டம் ஒன்றை இயற்றுகையில், அச்சொத்தினைக் கையகப்படுத்துவதற்காக அச்சட்டத்தினால் நிருணயிக்கப்படும் அல்லது அதன்கீழ் தீர்மானிக்கப்படும் தொகையானது, அந்தக் கூறின்படி உத்தரவாதமளிக்கப்பட்ட உரிமையினை அருக்கம் செய்வதாகவோ நீக்கறவு செய்வதாகவோ இல்லாதவாறு அரசு உறுதியுறப் பார்த்துக்கொள்ள வேண்டும்.]

(2) கல்வி நிறுவனங்களுக்கு உதவி வழங்குகையில், கல்வி நிறுவனம் ஒன்று, சமயம் அல்லது மொழி எதன் அடிப்படையிலும் சிறுபான்மையினராக உள்ளவர்களின் மேலாண்மையில் இருக்கிறதென்னும் காரணத்தைக்கொண்டு அதற்கு எதிராக அரசு வேற்றுமைகாட்டுதல் ஆகாது.

---

1. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 4 ஆம் பிரிவினால் (19–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

[1][* * * ]

**31.** [*Compulsory acquisition of property.*]— *Omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 6 (w.e.f. 20-6-1979).*

## [2][SAVING OF CERTAIN LAWS]

### [3][31A. Saving of laws providing for acquisition of estates, etc:

[4][(1) Notwithstanding anything contained in article 13, no law providing for—

(a) the acquisition by the State of any estate or of any rights therein or the extinguishment or modification of any such rights, or

(b) the taking over of the management of any property by the State for a limited period either in the public interest or in order to secure the proper management of the property, or

(c) the amalgamation of two or more corporations either in the public interest or in order to secure the proper management of any of the corporations,or

(d) the extinguishment or modification of any rights of managing agents, secretaries and treasurers, managing directors, directors or managers of corporations, or of any voting rights of share - holders thereof, or

(e) the extinguishment or modification of any rights accruing by virtue of any agreement, lease or licence for the purpose of searching for, or winning, any mineral or mineral oil, or the premature termination or cancellation of any such agreement, lease or licence,

shall be deemed to be void on the ground that it is inconsistent with, or takes away or abridges any of the rights conferred by [5][article 14 or article 19]:

---

1. The sub-heading "Right to Property" omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 5 (w.e.f.20-6-1979).
2. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 3 (w.e.f. 3-1-1977).
3. Ins. by the Constitution (First Amendment) Act, 1951, s. 4 (with retrospective effect).
4. Subs. by the Constitution (Fourth Amendment) Act, 1955, s. 3, for cl. (1) (with retrospective effect).
5. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 7 for "article 14, article 19 or article 31" (w.e.f. 20-6-1979).

[1][* * * ]

**31.** [*சொத்தினை கட்டாயமாகக் கையகப்படுத்துதல்.*] — *அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 6 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**[2][குறித்தசில சட்டங்களுக்குக் காப்புரை]**

**[3][31(அ). உரிமை நிலச்சொத்துக்கள் முதலியவற்றைக் கையகப்படுத்துவதற்கு வகைசெய்யும் சட்டங்களுக்குக் காப்புரை :**

[4][(1). 13 ஆம் உறுப்பில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும்—

(அ) உரிமைநிலச்சொத்து எதனையும் அல்லது அதிலுள்ள உரிமைகள் எவற்றையும் அரசு கையகப்படுத்துவதற்கு அல்லது அத்தகைய உரிமைகள் எவற்றையும் ஒழித்துவிடுவதற்கு அல்லது மாற்றமைவு செய்வதற்கு, அல்லது

(ஆ) பொது நலங்கருதியோ சொத்திற்கு முறையான நிருவாகம் அமையச் செய்யவோ வரம்புக்குட்பட்ட ஒரு காலஅளவிற்கு, சொத்து ஒன்றின் நிருவாகத்தை அரசு மேற்கொள்ளுவதற்கு, அல்லது

(இ) இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட கூட்டுருமங்களை பொது நலங்கருதியோ அக்கூட்டுருமங்களில் ஏதொன்றின் முறையான மேலாண்மை அமையச் செய்யவோ ஒருங்கிணைப்பதற்கு, அல்லது

(ஈ) கூட்டுருமங்களின் மேலாண்மை முகவர்கள், செயலாளர்கள் மற்றும் பொருளாளர்கள், மேலாண்மை இயக்குநர்கள், இயக்குநர்கள் அல்லது மேலாளர்களின் உரிமைகள் எவற்றையும் அல்லது அவற்றில் பங்குடையவர்களின் வாக்குரிமைகள் எவற்றையும் ஒழித்துவிடுவதற்கு அல்லது மாற்றமைவு செய்வதற்கு, அல்லது

(உ) கனிமம் அல்லது கனிம எண்ணெய் எதனையும் தேடுவதற்கான அல்லது தோண்டியெடுப்பதற்கான உடன்பாட்டின், குத்தகையின் அல்லது உரிமத்தின் காரணமாகச் சேர்ந்தடையும் உரிமைகள் எவற்றையும் ஒழித்துவிடுவதற்கு அல்லது மாற்றமைவு செய்வதற்கு அல்லது அத்தகைய . உடன்பாடு, குத்தகை அல்லது உரிமம் எதனையும் முதிர்வுக்காலத்திற்கு முன்னரே முடிவுறுத்துவதற்கு அல்லது அறவுசெய்வதற்கு,

வகைசெய்யும் சட்டம் எதுவும், [5][14 ஆம் உறுப்பினால் அல்லது 19 ஆம் உறுப்பினால்] வழங்கப்படும் உரிமைகளில் எதனுடனும் முரண்படுகிறது அல்லது அத்தகைய உரிமைகளில் எதனையும் பறிக்கிறது அல்லது ஒடுக்குகிறது என்னும் காரணத்தால் இல்லாநிலையதாகக் கொள்ளப்படுதல் ஆகாது:

---

1. "சொத்துபொறுத்த உரிமை" என்ற உள்தலைப்பு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 5 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.
2. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 3 ஆம் பிரிவினால் (3–1–1977முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. அரசமைப்புச் (ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 4 ஆம் பிரிவினால் (முன்மேவு செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. அரசமைப்புச் (நான்காம் திருத்தம்) சட்டம், 1955 இன் 3 ஆம் பிரிவினால், (1) ஆம் கூறுக்கு (முன்மேவு செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
5. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம் ) சட்டம், 1978 இன் 7ஆம் பிரிவினால் "14 ஆம் உறுப்பு, 19 ஆம் உறுப்பு அல்லது 31 ஆம் உறுப்புக்கு" (20–06–1979 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

Provided that where such law is a law made by the Legislature of a State, the provisions of this article shall not apply thereto unless such law, having been reserved for the consideration of the President, has received his assent:]

[1][Provided further that where any law makes any provisions for the acquisition by the State of any estate and where any land comprised therein is held by a person under his personal cultivation, it shall not be lawful for the State to acquire any portion of such land as is within the ceiling limit applicable to him under any law for the time being in force or any building or structure standing thereon or appurtenant thereto, unless the law relating to the acquisition of such land, building or structure, provides for payment of compensation at a rate which shall not be less than the market value thereof.]

(2) In this article,—

[2][(a) the expression "estate" shall, in relation to any local area, have the same meaning as that expression or its local equivalent has in the existing law relating to land tenures in force in that area and shall also include—

(i) *any jagir, inam or muafi or* other similar grant and in the States of [3][Tamil Nadu] and Kerala, any *janmam* right;

(ii) any land held under ryotwari settlement;

(iii) any land held or let for purposes of agriculture or for purposes ancillary thereto, including waste land, forest land, land for pasture or sites of buildings and other structures occupied by cultivators of land, agricultural labourers and village artisans;]

(b) the expression "rights", in relation to an estate, shall include any rights vesting in a proprietor, sub-proprietor, under-proprietor, tenure-holder, [4][*raiyat, under-raiyat* or other intermediary and any rights or privileges in respect of land revenue.]

---

1. Ins. by the Constitution (Seventeenth Amendment) Act, 1964, s. 2 (w.e.f. 20-6-1964).
2. Subs. by *ibid.*, for sub-clause *(a)* (with retrospective effect).
3. Subs. by the Madras State (Alteration of Name) Act, 1968 (53 of 1968), s. 4, for "Madras" (w.e.f. 14-1-1969).
4. Ins. by the Constitution (Fourth Amendment) Act, 1955, s. 3 (with retrospective effect).

வரம்புரையாக : அத்தகைய சட்டம் ஒரு மாநிலச் சட்டமன்றத்தினால் இயற்றப்பட்ட ஒரு சட்டமாக இருக்குமிடத்து, அது குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கிவைக்கப்பட்டிருந்து, அவருடைய ஏற்பிசைவையும் பெற்றிருந்தாலன்றி, இந்த உறுப்பின் வகையங்கள் அச்சட்டத்திற்குப் பொருந்துவதில்லை :]

[1][மேலும் வரம்புரையாக: சட்டம் எதுவும் உரிமைநிலச்சொத்து ஒன்றை அரசு கையகப்படுத்துவதற்கு வகைசெய்யுமிடத்து, அந்தச்சொத்தில் அடங்கியுள்ள நிலம் எதுவும் ஒருவரின் நேரடிச் சாகுபடியில் இருக்குமாயின், அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டம் ஒன்றின்படி அவருக்குப் பொருந்தும் உச்சவரம்புக்குள் வருகிற நிலத்தின் பகுதி எதனையும் அல்லது அதன் மேலமைந்திருக்கும் அல்லது அதனைச் சேர்ந்திருக்கும் கட்டடம் அல்லது கட்டுமானம் எதனையும் அரசு கையகப்படுத்துகையில், அத்தகைய நிலத்தை, கட்டடத்தை அல்லது கட்டுமானத்தைக் கையகப்படுத்துவதன் தொடர்பான அச்சட்டம் அதன் நிலவர மதிப்புக்குக் குறைவுபடாததொரு விழுக்காட்டில் சரியீடு கொடுப்பதற்கு வகை செய்தாலன்றி, அவ்வாறு கையகப்படுத்தல் சட்டமுறையானது ஆகாது.]

(2) இந்த உறுப்பில் –

[2][(அ) வட்டாரப் பகுதி எதன் தொடர்பாகவும் "உரிமைநிலச்சொத்து" என்னும் சொற்றொடர், அந்தப் பகுதியில் செல்லாற்றலிலுள்ள நிலப்பிடிமானமுறை பற்றிய நிலவுறும் சட்டத்தில் அந்தச் சொற்றொடர் அல்லது வட்டார வழக்கில் அதற்கு நிகராகவுள்ள சொற்றொடர் கொண்டுள்ள அதே பொருளை உடையது ஆகும்; மேலும், அத்தொடர் –

(i) *ஜாகீர், இனாம் அல்லது முவாஃபி* அல்லது அது போன்ற பிற மானியம் எதனையும், [3][தமிழ்நாடு] மற்றும் கேரள மாநிலங்களிலுள்ள *ஜன்மம்* உரிமை எதனையும்,

(ii) இரயத்துவாரி முறை ஏற்பாட்டிற்கு உட்பட்டுள்ள நிலம் எதனையும்,

(iii) தரிசு நிலம், காட்டு நிலம், மேய்ச்சல் நிலம் அல்லது நிலம் பயிரிடுபவர்கள், வேளாண் தொழிலாளர்கள், ஊர்க் கைவினைஞர்கள் ஆகியோருடைய கையுடைமையிலுள்ள கட்டட மற்றும் பிற கட்டுமான மனையிடங்கள் உள்ளடங்கலாக, வேளாண்மை பொருட்டோ அதன் துணை நோக்கங்களுக்காகவோ வைத்துவரப்பட்டுள்ள அல்லது குத்தகைக்கு விடப்பட்டுள்ள நிலம் எதனையும்]

உள்ளடக்கும்.

(ஆ) உரிமை நிலச்சொத்து ஒன்றின் தொடர்பாக "உரிமைகள்" என்னும் சொல், ஓர் உரிமையாளர், சார் உரிமையாளர், கீழ் உரிமையாளர், நிலப்பிடிமானக்காரர், [4][*குடியானவர், கீழ்க் குடியானவர்* அல்லது பிற இடையுரிமையாளர் இவர்களிடம் உற்றமையும் உரிமைகள் எவற்றையும் மற்றும் நிலவருவாய் பொறுத்த உரிமைகள் அல்லது தனிச்சலுகைகள்] எவற்றையும் உள்ளடக்குவதாகும்.

---

1. அரசமைப்புச் (பதினேழாம் திருத்தம்) சட்டம், 1964 இன் 2 ஆம் பிரிவினால் (20–6–1964 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. *மேற்படிச் சட்டத்தினால்,* (அ) உட்கூறுக்கு (முன்மேவு செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "மெட்ராஸ்" என்பதற்கு, மெட்ராஸ் மாநிலம் (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 1968 (53/1968) இன் 4 ஆம் பிரிவினால் (14–1–1969 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
4. அரசமைப்புச் (நான்காம் திருத்தம்) சட்டம், 1955 இன் 3 ஆம் பிரிவினால் (முன்மேவு செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

### [1][31B. Validation of certain Acts and Regulations :

Without prejudice to the generality of the provisions contained in article 31A, none of the Acts and Regulations specified in the Ninth Schedule nor any of the provisions thereof shall be deemed to be void, or ever to have become void, on the ground that such Act, Regulation or provision is inconsistent with, or takes away or abridges any of the rights conferred by, any provisions of this part, and notwithstanding any judgement, decree or order of any court or tribunal to the contrary, each of the said Acts and Regulations shall, subject to the power of any competent Legislature to repeal or amend it, continue in force.]

### [2][31C. Saving of laws giving effect to certain directive principles :

Notwithstanding anything contained in article 13, no law giving effect to the policy of the State towards securing [3][all or any of the principles laid down in Part IV] shall be deemed to be void on the ground that it is inconsistent with, or takes away or abridges any of the rights conferred by [4][article 14 or article 19]; [5][*and no law containing a declaration that it is for giving effect to such policy shall be called in question in any court on the ground that it does not give effect to such policy*]:

Provided that where such law is made by the Legislature of a State, the provisions of this article shall not apply thereto unless such law, having been reserved for the consideration of the President, has received his assent.

[6]**31D**. [*Saving of laws in respect of anti-national activities.*].– *Omitted by the Constitution (Forty-third Amendment) Act, 1977, s. 2 (w.e.f. 13-4-1978).*

---

1. Ins. by the Constitution (First Amendment) Act, 1951, s. 5 (w.e.f. 18-6-1951).
2. Ins. by the Constitution (Twenty-fifth Amendment) Act, 1971, s. 3. (w.e.f. 20-4-1972).
3. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 4, for "the principles specified in clause *(b)* or clause *(c)* of article 39" (w.e.f. 3-1-1977). Section 4 has been declared invalid by the Supreme Court in *Minerva Mills Ltd. and others Vs.Union of India and others* (1980) s. 2, AIR 1980 SC 1789.
4. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 8 for "article 14, article 19 or article 31" (w.e.f.20-6-1979).
5. In *Kesavananda Bharati Vs. the State of Kerala* (1973). AIR 1973 SC 1461, the Supreme Court had held the provisions in italics to be invalid.
6. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 5 (w.e.f. 3-1-1977).

[1][31 (ஆ). குறித்தசில சட்டங்களையும் ஒழுங்குறுத்தும்விதிகளையும் செல்லுந்தன்மை உடையனவாக்குதல் :

31 அ உறுப்பில் அடங்கியுள்ள வகையங்களின் பொதுப்பாங்கிற்குக் குந்தகமின்றி, ஒன்பதாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள சட்டங்கள், ஒழுங்குறுத்தும்விதிகள் இவற்றில் எதுவும் அல்லது இவற்றின் வகையங்களில் எதுவும், அத்தகைய சட்டம், ஒழுங்குறுத்தும்விதி அல்லது வகையம், இந்தப் பகுதியின் வகையங்கள் எவற்றிற்கும் முரணாக இருக்கிறது என்றோ அந்த வகையங்கள் வழங்கும் உரிமைகளில் எதனையும் பறிக்கிறது அல்லது ஒடுக்குகிறது என்றோ காரணங்காட்டி, அது இல்லாநிலையதாகிவிடுவதாக அல்லது எப்போதேனும் இல்லாநிலையதாகிவிட்டதாகக் கொள்ளப்படுதல் ஆகாது; மேலும், நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் ஒன்றின் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது ஆணை எதுவும் இதற்கு மாறாக இருந்தபோதிலும், மேற்சொன்ன சட்டங்கள், ஒழுங்குறுத்தும்விதிகள் ஒவ்வொன்றும், அதனை நீக்கறவு செய்வதற்கு அல்லது அதில் திருத்தம் செய்வதற்குத் தகுதிறமுள்ள சட்டமன்றம் ஒன்றின் அதிகாரத்திற்கு உட்பட்டு, தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்.]

[2][31 (இ). குறித்தசில நெறிப்படுத்தும் கோட்பாடுகளைச் செல்திறப்படுத்தும் சட்டங்களுக்குக் காப்புரை:

13 ஆம் உறுப்பில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், [3][IVஆம் பகுதியில் விதிக்கப்பட்டுள்ள கோட்பாடுகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும்] எய்துறச்செய்யும் அரசின் கொள்கையைச் செல்திறப்படுத்துகிற சட்டம் எதுவும், அது [4][14 ஆம் உறுப்பினால் அல்லது 19 ஆம் உறுப்பினால்] வழங்கப்பட்டுள்ள உரிமைகளில் எதற்கும் முரணாக இருக்கிறது அல்லது அந்த உரிமையைப் பறிக்கிறது அல்லது ஒடுக்குகிறது என்னும் காரணங்காட்டி இல்லாநிலையதாகிவிடுவதாகக் கொள்ளப்படுதல் ஆகாது; [5][*மேலும், அத்தகைய கொள்கையினைச் செல்திறப்படுத்துவதற்காகவே அச்சட்டம் உள்ளது என்னும் ஒரு விளம்புகையைக் கொண்ட சட்டம் எதுவும், அது அத்தகைய கொள்கையைச் செல்திறப்படுத்தவில்லை என்னும் காரணங்காட்டி நீதிமன்றம் எதிலும் எதிர்த்து வாதிடப்படுதல் ஆகாது* ]:

வரம்புரையாக : அத்தகைய சட்டம் ஒரு மாநிலச் சட்டமன்றத்தினால் இயற்றப்படுமிடத்து, அது குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கிவைக்கப்பட்டிருந்து, அவருடைய ஏற்பிசைவையும் பெற்றிருந்தாலன்றி, இந்த உறுப்பின் வகையங்கள் அச்சட்டத்திற்குப் பொருந்துவதில்லை.

[6]31 (ஈ). *[தேசியத்திற்கு எதிரான நடவடிக்கைகளுக்கு பொறுத்த சட்டங்களுக்கு காப்புரை.].- அரசமைப்புச் (நாற்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1977 இன் 2 ஆம் பிரிவினால் (13–4–1978 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

---

1. அரசமைப்புச் (ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 5 ஆம் பிரிவினால் (18–6–1951 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (இருபத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1971 இன் 3 ஆம் பிரிவினால் (20–4–1972 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. "39 ஆம் உறுப்பின் (ஆ) கூறு அல்லது (இ) கூறில் குறித்துரைக்கப்பட்டுள்ள கோட்பாடுகள்" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 4 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. *மினர்வா ஆலை மற்றும் பிறர் எதிர் இந்திய ஒன்றியம் மற்றும் பிறர்* (1980) 2 ஆம் பிரிவு ஏ.ஐ.ஆர் 1980 உ.நீ 1789 இல் 4 ஆம் பிரிவு செல்லாநிலையது என உச்ச நீதிமன்றத்தால் விளம்புகை செய்யப்பட்டுள்ளது.
4. "14 ஆம் உறுப்பு, 19 ஆம் உறுப்பு அல்லது 31 ஆம் உறுப்பு" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 8 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
5. *கேசவானந்த பாரதி எதிர் கேரள மாநிலம்* (1973). ஏ.ஐ.ஆர் 1973 உ.நீ 1461 இல் சாய்வெழுத்துக்களில் உள்ள வகையங்களை உச்சநீதிமன்றம் செல்லாநிலையது என விளம்புகை செய்துவிட்டது.
6. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 5 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

## RIGHT TO CONSTITUTIONAL REMEDIES

**32. Remedies for enforcement of rights conferred by this Part:**

(1) The right to move the Supreme Court by appropriate proceedings for the enforcement of the rights conferred by this Part is guaranteed.

(2) The Supreme Court shall have power to issue directions or orders or writs, including writs in the nature of *habeas corpus, mandamus, prohibition, quo warranto and certiorari,* whichever may be appropriate, for the enforcement of any of the rights conferred by this Part.

(3) Without prejudice to the powers conferred on the Supreme Court by clauses(1) and (2), Parliament may by law empower any other court to exercise within the local limits of its jurisdiction all or any of the powers exercisable by the Supreme Court under clause (2).

(4) The right guaranteed by this article shall not be suspended except as otherwise provided for by this Constitution.

[1][**32A.** *Constitutional validity of State laws not to be considered in proceedings under article 32.*]*– Omitted by the Constitution (Forty-third Amendment) Act, 1977, s. 3 (w.e.f. 13-4-1978).*

[2][**33. Power of Parliament to modify the rights conferred by this Part in their application to Forces, etc:**

Parliament may, by law, determine to what extent any of the rights conferred by this Part shall, in their application to,—

(a) the members of the Armed Forces; or

(b) the members of the Forces charged with the maintenance of public order; or

(c) persons employed in any bureau or other organisation established by the State for purposes of intelligence or counter intelligence; or

(d) persons employed in, or in connection with, the telecommunication systems set up for the purposes of any Force, bureau or organisation referred to in clauses (a) to (c),

---

1. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 6 (w.e.f. 1-2-1977).
2. Subs. by the Constitution (Fiftieth Amendment) Act, 1984, s. 2 (w.e.f 11-9-1984).

### அரசமைப்புத் தீர்வழிகளுக்கான உரிமை

**32. இந்தப் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளைச் செயலுறுத்துவதற்கான தீர்வழிகள் :**

(1) இந்தப் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளைச் செயலுறுத்துவதற்காக, உரிய நடவடிக்கைகள் மூலம் உச்ச நீதிமன்றத்தை அணுகிக்கோரும் உரிமைக்கு உத்தரவாதமளிக்கப்படுகிறது.

(2) இந்தப் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளில் எதனையும் செயலுறுத்துவதற்காக, *பணிப்புரைகள் அல்லது ஆணைகள் அல்லது ஆட்கொணர்விப்பு, செயலுறுத்து, தடையுறுத்து, தகுதிவினவு, நெறிமுறைக்கேட்பு* ஆகியவற்றின் தன்மை கொண்ட நீதிப்பேராணைகளில் பொருத்தமான நீதிப்பேராணைகள் இவற்றைப் பிறப்பிப்பதற்கு உச்ச நீதிமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

(3). (1), (2) ஆகிய கூறுகள் உச்ச நீதிமன்றத்திற்கு வழங்கும் அதிகாரங்களுக்குக் குந்தகமின்றி, (2) ஆம் கூறின்படி உச்ச நீதிமன்றம் செலுத்துவதாகும் அதிகாரங்கள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும், பிற நீதிமன்றம் எதுவும் அதற்குரிய அதிகாரவரம்பு எல்லைகளுக்குள் செலுத்திவருவதற்கு நாடாளுமன்றம் சட்டத்தினால் அதிகாரம் அளிக்கலாம்.

(4) இந்த உறுப்பினால் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள உரிமை, இந்த அரசமைப்பினால் பிறவாறு வகைசெய்யப்பட்டுள்ளபடி அல்லாமல், இடைநிறுத்தி வைக்கப்படுதல் ஆகாது.

[1][32 (அ). *32 ஆம் உறுப்பின் நடவடிக்கைகளில் ஓர்வு செய்யப்பட்டிராத மாநிலச் சட்டங்களின் அரசமைப்பின் செல்லுந்தன்மை, அரசமைப்புச் (நாற்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1977 இன் 3 ஆம் பிரிவினால் (13–4–1978 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**[2][33. இந்தப் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளைப் படையினர்முதலியோருக்குப் பொருந்தச் செய்கையில் அவற்றை மாற்றமைவு செய்ய நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம்:**

இந்தப் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளில் எதனையும்,–

(அ) ஆயுதப் படையினருக்கு, அல்லது

(ஆ) பொது ஒழுங்கமைதியைப் பேணும் பொறுப்புடைய படையினருக்கு, அல்லது

(இ) வேவுச்செய்தியைத் திரட்டுவதற்காக அல்லது திரட்டுவதைத் தடுப்பதற்காக அரசினால் நிறுவப்பட்ட துறையகம் அல்லது பிற அமைப்பு ஒன்றில் வேலையமர்த்தம் செய்யப்பட்டுள்ளவர்களுக்கு, அல்லது

(ஈ). (அ) முதல் (இ) வரையிலான கூறுகளில் சுட்டப்பட்டுள்ள ஆயுதப்படை, துறையகம் அல்லது அமைப்பு ஒன்றிற்காக ஏற்படுத்தப்பட்ட தொலைச்செய்தித் தொடர்பு நிறுவனத்தில் வேலையமர்த்தம் செய்யப்பட்டுள்ளவர்களுக்கு அல்லது அதனுடன் தொடர்புடையவர்களுக்கு

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 6 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (ஐம்பதாவது திருத்தம்) சட்டம், 1984 இன் 2 ஆம் பிரிவினால் (11–9–1984 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

be restricted or abrogated so as to ensure the proper discharge of their duties and the maintenance of discipline among them.]

**34. Restriction on rights conferred by this Part while martial law is in force in any area:**

Notwithstanding anything in the foregoing provisions of this Part, Parliament may by law indemnify any person in the service of the Union or of a State or any other person in respect of any Act done by him in connection with the maintenance or restoration of order in any area within the territory of India where martial law was in force or validate any sentence passed, punishment inflicted, forfeiture ordered or other act done under martial law in such area.

**35. Legislation to give effect to the provisions of this Part:**

Notwithstanding anything in this Constitution,—

(a) Parliament shall have, and the Legislature of a State shall not have,power to make laws—

(i) with respect to any of the matters which under clause (3) of article 16, clause (3) of article 32, article 33 and article 34 may be provided for by law made by Parliament; and

(ii) for prescribing punishment for those acts which are declared to be offences under this Part;

and Parliament shall, as soon as may be after the commencement of this Constitution, make laws for prescribing punishment for the acts referred to in sub-clause (ii);

(b) any law in force immediately before the commencement of this Constitution in the territory of India with respect to any of the matters referred to in sub-clause (i) of clause (a) or providing for punishment for any act referred to in sub-clause (ii) of that clause shall, subject to the terms thereof and to any adaptations and modifications that may be made therein under article 372, continue in force until altered or repealed or amended by Parliament.

**Explanation.-** In this article, the expression "law in force" has the same meaning as in article 372.

பொருந்தச் செய்வதில், அவர்களுடைய கடமைகள் முறையாக ஆற்றப்படுவதையும், அவர்களிடையே ஒழுங்குக்கட்டுப்பாடு பேணிவரப்படுவதையும் உறுதிப்படுத்தும் வகையில் எந்த அளவுக்கு அருக்கம் செய்யவேண்டும் அல்லது நீக்கறவு செய்யவேண்டும் என்பதை நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கலாம்.

**34. வரையிடம் ஒன்றில் படைத்துறையாட்சி செல்லாற்றலில் இருக்குங்கால், இந்தப் பகுதி வழங்கும் உரிமைகள் மீதான வரைத்தடை :**

இந்தப் பகுதியின் மேலேகண்ட வகையங்களில் எது எவ்வாறிருப்பினும், நாடாளுமன்றம் சட்டத்தினால், ஒன்றியத்தின் அல்லது ஒரு மாநிலத்தின் பணியிலுள்ள எவருக்கும் அல்லது பிறர் எவருக்கும், இந்திய ஆட்சிநிலவரைக்குள் படைத்துறையாட்சி செல்லாற்றலில் இருந்துவந்த வரையிடம் எதிலும் ஒழுங்கமைதியைப் பேணுதல் அல்லது அதை மீண்டும் நிலைநாட்டுதல் தொடர்பாக அவரால் செய்யப்பட்ட எந்தச் செயலையும் பொறுத்துக் காப்பளிக்கலாம் அல்லது அத்தகைய வரையிடத்தில் படைத்துறையாட்சியின் கீழ் அளிக்கப்பட்ட தீர்ப்புத்தண்டனை, விதிக்கப்பட்ட தண்டம், ஆணையிடப்பட்ட பறிமுதல் அல்லது செய்யப்பட்ட பிற செயல் எதனையும் செல்லுந்தன்மை உடையதாக்கலாம்.

**35. இந்தப் பகுதியின் வகையங்களுக்குச் செல்திறம் அளிப்பதற்காகச் சட்டமியற்றுதல் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்,—

(அ). (i) 16 ஆம் உறுப்பின் (3) ஆம் கூறு, 32 ஆம் உறுப்பின் (3) ஆம் கூறு, 33 ஆம் உறுப்பு, 34 ஆம் உறுப்பு ஆகியவற்றின்படி நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தினால் வகை செய்யப்படும் பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும்,

(ii) இந்தப் பகுதியின்படி குற்றச்செயல்கள் என விளம்பப்பட்டிருக்கிற செயல்களுக்குத் தண்டனையை வகுத்துரைப்பதற்காகவும்,

சட்டங்களை இயற்றுவதற்கான அதிகாரம் நாடாளுமன்றத்திற்கே உள்ளது, மாநில சட்டமன்றத்திற்கு இல்லை;

மேலும், நாடாளுமன்றம், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்குப் பின்பு, கூடியவிரைவில், (ii) ஆம் உட்கூறில் சுட்டப்பட்டுள்ள செயல்களுக்குத் தண்டனையை வகுத்துரைப்பதற்காகச் சட்டங்களை இயற்றுதல் வேண்டும்;

(ஆ) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, இந்திய ஆட்சிநிலவரையில் செல்லாற்றலிலுள்ள, (அ) கூறின் (i) ஆம் உட்கூறில் சுட்டப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்ததான அல்லது அதேகூறின் (ii) ஆம் உட்கூறில் சுட்டப்பட்டுள்ள செயல் எதற்கும் தண்டனை விதிப்பதற்கு வகைசெய்வதான சட்டம் எதுவும், நாடாளுமன்றத்தினால் மாற்றமோ நீக்கறவோ திருத்தமோ செய்யப்படும் வரையில், அதைப் பொறுத்து 372 ஆம் உறுப்பின்படி கூறப்படும் வரையுரைகளுக்கும் அதில் செய்யப்படும் தழுவமைவுகள், மாற்றமைவுகள் எவற்றுக்கும் உட்பட்டு, தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வரும்.

**விளக்கம்.—** இந்த உறுப்பில், "செல்லாற்றலிலுள்ள சட்டம்" என்னும் சொற்றொடர், 372 ஆம் உறுப்பில் கூறப்பட்டுள்ள அதே பொருளை உடையதாகும்.

## PART IV

## DIRECTIVE PRINCIPLES OF STATE POLICY

**36. Definition :**

In this part, unless the context otherwise requires, "the State" has the same meaning as in Part III.

**37. Application of the principles contained in this part :**

The provisions contained in this Part shall not be enforceable by any court, but the principles therein laid down are nevertheless fundamental in the governance of the country and it shall be the duty of the State to apply these principles in making laws.

**38. State to secure a social order for the promotion of welfare of the people :**

[1][(1)] The State shall strive to promote the welfare of the people by securing and protecting as effectively as it may a social order in which justice, social, economic and political, shall inform all the institutions of the national life.

[2][(2) The State shall, in particular, strive to minimise the inequalities in income, and endeavour to eliminate inequalities in status, facilities and opportunities, not only amongst individuals but also amongst groups of people residing in different areas or engaged in different vocations.]

**39. Certain principles of policy to be followed by the State :**

The State shall, in particular, direct its policy towards securing—

(a) that the citizens, men and women equally, have the right to an adequate means of livelihood;

(b) that the ownership and control of the material resources of the community are so distributed as best to subserve the common good;

(c) that the operation of the economic system does not result in the concentration of wealth and means of production to the common detriment;

(d) that there is equal pay for equal work for both men and women;

---

1. Art. 38 renumbered as cl. (1) thereof by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s.9 (w.e.f. 20-6-1979).
2. Ins. by *ibid*.

# பகுதி IV

## அரசுக் கொள்கையினை நெறிப்படுத்தும் கோட்பாடுகள்

**36. பொருள்வரையறை :**

இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி, "அரசு" என்பது, III ஆம் பகுதியில் கூறப்பட்டுள்ள அதே பொருளை உடையதாகும்.

**37. இந்தப் பகுதியில் அடங்கியுள்ள கோட்பாடுகளைப் பயன்படுத்துதல் :**

இந்தப் பகுதியில் அடங்கியுள்ள வகையங்கள் நீதிமன்றம் எதனாலும் செயலுறுத்தப்படுவன அல்ல; ஆயினும், இதில் விதிக்கப்பட்டுள்ள கோட்பாடுகள் நாட்டின் ஆட்சிநெறிக்கு அடிப்படையாக அமையும்; மேலும், சட்டங்கள் இயற்றுகையில் இந்தக் கோட்பாடுகளைப் பயன்படுத்துவது அரசின் கடமை ஆகும்.

**38. மக்கள் நலப்பாட்டை வளர்க்கும் வகையில், சமுதாய முறையமைவினை எய்திடுமாறு அரசு செய்தல் வேண்டும் :**

[1][(1) அரசு, தேசிய வாழ்வின் அமைவனங்கள் அனைத்திலும் சமுதாய, பொருளியல், அரசியல் நீதி நிறைந்து நிலவுவதான ஒரு சமுதாய முறையமைவினைப் பயனுற எய்திப் பாதுகாத்து, மக்களின் நலப்பாட்டை வளர்த்திட அரிதின் முயலுதல் வேண்டும்.

[2][(2) அரசு, தனிமனிதர்களுக்கு இடையே மட்டுமன்றி வெவ்வேறு பகுதிகளில் வாழ்கின்ற அல்லது வெவ்வேறு வாழ்க்கைத் தொழில்களில் ஈடுபட்டிருக்கின்ற மக்கள் பிரிவினருக்கிடையே, குறிப்பாக, வருமானத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகளை இயன்ற அளவு குறைப்பதற்கு அரிதின் முயல்வதோடு, அவர்களிடையே சமுதாயப்படிநிலை, வளவசதிகள், வாய்ப்பு நலன்கள் ஆகியவற்றிலுள்ள ஏற்றத்தாழ்வுகளை அகற்றுவதற்கும் முனைந்து முயலுதல் வேண்டும்.]

**39. அரசு பின்பற்ற வேண்டிய குறித்தசில கொள்கைக் கோட்பாடுகள் :**

குறிப்பாக, பின்வருவனவற்றை எய்திடுமாறு அரசு தன் கொள்கையை நெறிப்படுத்துதல் வேண்டும்—

(அ) குடிமக்கள், ஆண்களும் பெண்களும் சரிநிகராக, வாழ்க்கைக்குப் போதுமான வழிவகைக்கு உரிமை உடையவராதல்;

(ஆ) பொதுமக்கள் நலன்களுக்கு நனிசிறக்க உதவும் வகையில், சமுதாயத்தின் பொருள்வளங்கள் மீதான சொத்துரிமையினையும் கட்டாள்கையினையும் பகிர்ந்தளித்தல்;

(இ) பொருளியல் முறைமையின் செயற்பாட்டினால், செல்வவளமும் உற்பத்திச் சாதனங்களும், பொது நலனுக்கு ஊறுவிளைவிக்கும் வகையில் ஒரு சிலரிடம் குவிந்துவிடாது இருத்தல்;

(ஈ) ஆண், பெண் இருபாலரும் ஒத்த வேலைக்கு ஒத்த சம்பளம் பெறுதல்;

---

1. 38 ஆம் உறுப்பானது அதன் (1) ஆம் கூறாக, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 9 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மறுஎண்ணிடப்பட்டது.

2. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.

(e) that the health and strength of workers, men and women, and the tender age of children are not abused and that citizens are not forced by economic necessity to enter avocations unsuited to their age or strength;

[1][(f) that children are given opportunities and facilities to develop in a healthy manner and in conditions of freedom and dignity and that childhood and youth are protected against exploitation and against moral and material abandonment.]

**[2][39A. Equal justice and free legal aid :**

The State shall secure that the operation of the legal system promotes justice, on a basis of equal opportunity, and shall, in particular, provide free legal aid, by suitable legislation or schemes or in any other way, to ensure that opportunities for securing justice are not denied to any citizen by reason of economic or other disabilities.]

**40. Organisation of village panchayats :**

The State shall take steps to organise village panchayats and endow them with such powers and authority as may be necessary to enable them to function as units of self - government.

**41. Right to work, to education and to public assistance in certain cases :**

The State shall, within the limits of its economic capacity and development, make effective provision for securing the right to work, to education and to public assistance in cases of unemployment, old age, sickness and disablement, and in other cases of undeserved want.

**42. Provision for just and humane conditions of work and maternity relief :**

The State shall make provision for securing just and humane conditions of work and for maternity relief.

**43. Living wage, etc., for workers :**

The State shall endeavour to secure, by suitable legislation or economic organisation or in any other way, to all workers, agricultural, industrial or otherwise, work, a living wage, conditions of work ensuring a decent standard of life and full enjoyment of leisure and social and cultural opportunities and, in particular, the State shall endeavour to promote cottage industries on an individual or co-operative basis in rural areas.

---

1.Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 7, for cl. *(f)* (w.e.f. 3-1-1977).

2. Ins. by s. 8 *ibid*.

(உ) ஆண், பெண் உழைப்பாளர்களின் உடல்நலம், உடல்வலிவு, சிறார்களின் இளம்பருவம் இவற்றை நெறிதவறிப் பயன்படுத்தாமை; மேலும், பொருளியல் தேவையுறுத்தம் காரணமாகக் குடிமக்கள் தங்கள் வயதுக்கோ உடல் வலிவுக்கோ பொருந்தாத பிழைப்புகளில் ஈடுபடுமாறு இறுக்கப்படாமை;

[1][(ஊ) நலஞ்சார் முறையிலும் சுதந்திரமும் கண்ணியமும் நிலவும் சூழ்நிலைகளிலும் வளர்ச்சியுறுவதற்கான வாய்ப்புநலன்களும் வளவசதிகளும் சிறார்கள் பெறுமாறு செய்தல்; மேலும், பிறர் நலனுக்காகக் குழந்தைப் பருவத்தினரும் இளமைப் பருவத்தினரும் கருவிகளாக்கப்படுவதினின்றும், ஒழுக்கம் மற்றும் உயிர்வாழ் வசதி அற்றுப்போகுமாறு கைவிடப்படுவதினின்றும் பாதுகாத்தல்.]

**[2][39 (அ). சமநீதியும் இலவசச் சட்ட உதவியும் :**

சமவாய்ப்பின் அடிப்படையில் நீதி ஓங்குமாறு சட்டமுறையமைவு செயற்படுவதை அரசு உறுதிசெய்தல் வேண்டும்; மேலும், குறிப்பாக, குடிமகன் எவரும் நீதியைப் பெறுவதில் பொருளியல் அல்லது பிற ஏலாமைகள் காரணமாக அவருக்கு வாய்ப்பு நலன்கள் மறுக்கப்படாமலிருப்பதை உறுதிசெய்யும் வகையில் அரசு, தகுந்த சட்டமியற்றல் அல்லது செயல்திட்டங்கள் வழியாகவோ பிற வழியாகவோ இலவசச் சட்ட உதவி அளித்தல் வேண்டும்.]

**40. ஊராட்சி மன்றங்களை அமைத்தல் :**

அரசு, ஊராட்சி மன்றங்களை அமைப்பதற்கும், தன்னாட்சி அமைப்புக் கூறுகளாக அவை இயங்குவதற்குத் தேவைப்படும் அதிகாரங்களையும் அதிகாரஅடைவையும் அவற்றுக்கு வழங்குவதற்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் வேண்டும்.

**41. வேலை, கல்வி, குறித்தசில நேர்வுகளில் பொதுநல உதவி ஆகியவற்றைப் பெறுவதற்கான உரிமை:**

அரசு, தன் பொருளியல் திறனுக்கும் வளர்ச்சிக்கும் அடங்கியவாறு, வேலைபெறுதல், கல்வி பெறுதல், மேலும், வேலையின்மை , முதுமை, பிணி, உடல்ஊனம் ஆகிய நேர்வுகளிலும், பிற தகாத வறுமைநேர்வுகளிலும் பொதுநல உதவி பெறுதல் இவற்றுக்கான உரிமையினை எய்திடுவதற்குப் பயனுறு ஏற்பாட்டினை மேற்கொள்ள வேண்டும்.

**42. இசைவானதும் இதமானதுமான வேலைச் சூழல்களுக்கும், பேறுகால உதவிக்கும் ஏற்பாடு செய்தல் :**

அரசு, இசைவானதும் இதமானதுமான வேலைச் சூழல்களை எய்திடவும் பேறுகால உதவி கிடைக்கவும் ஏற்பாடு செய்தல் வேண்டும்.

**43. தொழிலாளர்களுக்கு வாழ்வுக்கேற்ற கூலி முதலியவை :**

வேளாண்மை, விசைத்தொழில் அல்லது பிறவகைத் தொழிலாளர் அனைவரையும், வேலை, வாழ்வுக்கேற்ற கூலி, சீர்மையான வாழ்க்கைத்தரத்தையும் ஓய்வுநேரத்தை நிறைவுற நுகர்தலையும் உறுதியாக அளிக்கும் வேலைச்சூழல்கள், சமுதாய, பண்பாட்டு வாய்ப்பு நலன்கள் ஆகியவற்றை எய்திடச் செய்வதற்கு, தகுந்த சட்டமியற்றல் அல்லது பொருளியல் அமைப்பு வழியாகவோ, பிற வழியாகவோ அரசு முனைந்து முயலுதல் வேண்டும், குறிப்பாக, அரசு, ஊரகப் பகுதிகளில் தனிமனித அல்லது கூட்டுறவு அடிப்படையில் குடிசைத்தொழில்களை வளர்ப்பதற்கு முனைந்து முயலுதல் வேண்டும்.

---

1. (ஊ) கூறுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 7 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. *மேற்படிச் சட்டத்தின்* 8 ஆம் பிரிவினால் புகுத்தப்பட்டது.

[1][43A. **Participation of workers in management of industries :**

The State shall take steps, by suitable legislation or in any other way, to secure the participation of workers in the management of undertakings, establishments or other organisations engaged in any industry.]

[2][43B. **Promotion of co-operative societies :**

The State shall endeavour to promote voluntary formation, autonomous functioning, democratic control and professional management of co-operative societies.]

**44. Uniform civil code for the citizens :**

The State shall endeavour to secure for the citizens a uniform civil code throughout the territory of India.

[3][45. **Provision for early childhood care and education to children below the age of six years :**

The State shall endeavour to provide early childhood care and education for all children until they complete the age of six years.]

**46. Promotion of educational and economic interests of Scheduled Castes, Scheduled Tribes and other weaker sections :**

The State shall promote with special care the educational and economic interests of the weaker sections of the people, and in particular, of the Scheduled Castes and the Scheduled Tribes, and shall protect them from social injustice and all forms of exploitation.

**47. Duty of the State to raise the level of nutrition and the standard of living and to improve public health :**

The State shall regard the raising of the level of nutrition and the standard of living of its people and the improvement of public health as among its primary duties and, in particular, the State shall endeavour to bring about prohibition of the consumption except for medicinal purposes of intoxicating drinks and of drugs which are injurious to health.

**48. Organisation of agriculture and animal husbandry :**

The State shall endeavour to organise agriculture and animal husbandry on modern and scientific lines and shall, in particular, take steps for preserving and improving the breeds, and prohibiting the slaughter, of cows and calves and other milch and draught cattle.

---

1. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 9 (w.e.f. 3-1-1977).
2. Ins. by the Constitution (Ninety-seventh Amendment) Act, 2011, s. 3 (w.e.f. 15-2-2012).
3. Subs. by the Constitution (Eighty-sixth Amendment) Act, 2002, s. 3 for art. 45 (w.e.f. 1-4-2010).

[1][43 (அ). விசைத்தொழில்களின் மேலாண்மையில் தொழிலாளர்கள் பங்கேற்றல் :

விசைத்தொழில் எதிலும் ஈடுபட்டுள்ள ஏற்பமைவுகள், நிறுவனங்கள் அல்லது பிற அமைப்புகளின் மேலாண்மையில் தொழிலாளர்கள் பங்கேற்பதை எய்திடச் செய்வதற்கு தகுந்த சட்டமியற்றல் வழியாகவோ பிற வழியாகவோ அரசு நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் வேண்டும்.]

[2][43 (ஆ). கூட்டுறவுச் சங்கங்களை வளர்த்தல் :

கூட்டுறவுச் சங்கங்களின் தன்விருப்பான உருவாக்கம், தன்னாட்சி இயக்கம், மக்களாட்சி முறை கட்டாள்கை மற்றும் விழைதொழில் மேலாண்மை ஆகியவற்றை வளர்ப்பதற்கு அரசு முனைந்து முயலுதல் வேண்டும்.]

44. குடிமக்களுக்கு ஒரே சீரான உரிமையியல் சட்டத்தொகுப்பு :

குடிமக்கள் அனைவரும், இந்திய ஆட்சிநிலவரை எங்கணும், ஒரே சீரான உரிமையியல் சட்டத் தொகுப்பினை எய்திடச் செய்வதற்கு அரசு முனைந்து முயலுதல் வேண்டும்.

[3][45. ஆறு வயதிற்குட்பட்ட சிறார்களுக்கு குழந்தைப்பருவ ஆரம்பநிலையில் கவனிப்பும் கல்வியும் அளிக்க ஏற்பாடு செய்தல் :

சிறார்கள் அனைவருக்கும், அவர்களுக்கு ஆறு வயது முடியும் வரை, குழந்தைப்பருவ ஆரம்ப நிலையில் கவனிப்பும், கல்வியும் அளிக்க ஏற்பாடு செய்வதற்கு அரசு முனைந்து முயலுதல் வேண்டும்.]

46. பட்டியலில்கண்ட சாதியினர், பட்டியலில்கண்ட பழங்குடியினர், பிற நலிந்த பிரிவினர் ஆகியோரின் கல்வி, பொருளியல் நலன்களை வளர்த்தல் :

மக்களில் நலிந்த பிரிவினர், குறிப்பாக, பட்டியலில்கண்ட சாதியினர், பட்டியலில்கண்ட பழங்குடியினர் ஆகியோரின் கல்வி, பொருளியல் நலன்களை அரசு தனிப் பொறுப்புணர்வுடன் வளர்த்தல் வேண்டும், மேலும், சமுதாய அநீதியிலிருந்தும் அனைத்து வகைப்பட்ட சுரண்டல்களிலிருந்தும் அவர்களைப் பாதுகாத்தலும் வேண்டும்.

47. உணவுச்சத்தின் தரநிலை, வாழ்க்கைத்தரம் ஆகியவற்றை உயர்த்தவும் மக்களின் உடல்நலத்தை மேம்படுத்தவும் அரசிற்குள்ள கடமை :

மக்களின் உணவுச்சத்தின் தரநிலை, வாழ்க்கைத்தரம் ஆகியவற்றை உயர்த்துவதும், மக்களின் உடல்நலத்தை மேம்படுத்துவதும் தன்னுடைய தலையாய கடமைகளுள் அமைவன என்பதை அரசு கருத்திற்கொள்ளுதல் வேண்டும்; மேலும், குறிப்பாக, போதைதரும் குடிவகைகளையும் உடல்நலனுக்கு ஊறுவிளைவிக்கும் மருந்துப் பொருள்களையும் மருந்தாக அன்றி, உட்கொள்வதைத் தடை செய்வதற்கு அரசு முனைந்து முயலுதல் வேண்டும்.

48. வேளாண்மை, கால்நடை பேணுகை ஆகியவற்றின் அமைப்பு :

வேளாண்மை, கால்நடை பேணுகை ஆகியவற்றைத் தற்கால அறிவியல் முறைகளில் அமைப்பதற்கு அரசு முனைந்து முயலுதல் வேண்டும்; மேலும், குறிப்பாக, பசுக்கள், கன்றுகள், பிற கறவை மற்றும் இழுவைக் கால்நடை இனங்களைப் பேணிக்காப்பதற்கும் மேம்படுத்துவதற்கும் அவற்றை வன்கொலை செய்வதைத் தடைசெய்வதற்கும் நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ளுதல் வேண்டும்.

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 9 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (தொண்ணூற்று ஏழாம் திருத்தம்) சட்டம், 2011 இன் 3 ஆம் பிரிவினால் (15–2–2012 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. 45 ஆம் உறுப்புக்கு, அரசமைப்புச் (எண்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 2002 இன் 3 ஆம் பிரிவினால் (1–4–2010 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

**[1][48.A Protection and improvement of environment and safeguarding of forests and wild life :**

The State shall endeavour to protect and improve the environment and to safeguard the forests and wild life of the country.]

**49. Protection of monuments and places and objects of national importance:**

It shall be the obligation of the State to protect every monument or place or object of artistic or historic interest, [2][declared by or under law made by Parliament] to be of national importance, from spoliation, disfigurement, destruction, removal, disposal or export, as the case may be.

**50. Separation of judiciary from executive:**

The State shall take steps to separate the judiciary from the executive in the public services of the State.

**51. Promotion of international peace and security:**

The State shall endeavour to —

(a) promote international peace and security;

(b) maintain just and honourable relations between nations;

(c) foster respect for international law and treaty obligations in the dealings of organised people with one another; and

(d) encourage settlement of international disputes by arbitration.

## [3][PART IV-A
## FUNDAMENTAL DUTIES

**51A. Fundamental duties:**

It shall be the duty of every citizen of India—

(a) to abide by the Constitution and respect its ideals and institutions, the National Flag and the National Anthem;

(b) to cherish and follow the noble ideals which inspired our national struggle for freedom;

---

1.Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 10 (w.e.f. 3-1-1977).

2.Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 27, for "declared by parliament by law" (w.e.f. 1-11-1956).

3. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 11 (w.e.f. 3-1-1977).

[1][48(அ). சுற்றுச்சூழலைப் பாதுகாத்து மேம்படுத்துதல் மற்றும் காடுகள், காடுவாழ் உயிரினங்கள் ஆகியவற்றின் நலங்காத்தல் :

அரசு, சுற்றுச்சூழலைப் பாதுகாத்து மேம்படுத்துவதற்கும், நாட்டின் காடுகள், காடுவாழ் உயிரினங்களின் நலக்காப்பிற்கும் முனைந்து முயலுதல் வேண்டும்.]

**49. தேசிய முக்கியத்துவம் வாய்ந்த நினைவுச்சின்னங்கள், இடங்கள், பொருள்கள் ஆகியவற்றைப் பாதுகாத்தல் :**

தேசிய முக்கியத்துவம் வாய்ந்ததென [2][நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தாலோ அதன் வழியாலோ] விளம்பப்படும் கலை அல்லது வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த நினைவுச் சின்னம், இடம் அல்லது பொருள் எதனையும் கவர்ந்து செல்லல், உருக்குலைத்தல், அழித்தல், அகற்றுதல், அயலடைவு செய்தல், அல்லது ஏற்றுமதி செய்தல், நேர்வுக்கேற்ப இவற்றிலிருந்து பாதுகாப்பது அரசின் கடமைப்பாடாக இருத்தல் வேண்டும்.

**50. ஆட்சித்துறையினின்றும் நீதித்துறையைப் பிரித்தல் :**

அரசின் பொதுப் பணியங்களில் ஆட்சித்துறையினின்றும் நீதித் துறையினைத் தனியாகப் பிரிப்பதற்கு அரசு நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் வேண்டும்.

**51. பன்னாடுகளிடையே அமைதியையும் காப்புணர்வையும் வளர்த்தல் :**

அரசு —

(அ) பன்னாடுகளிடையே அமைதியையும் காப்புணர்வையும் வளர்ப்பதற்கும்;

(ஆ) நாடுகளிடையே நேர்மையும் நன்மதிப்புணர்வும் தோய்ந்த உறவுகளைப் பேணுவதற்கும்;

(இ) ஒழுங்கமைவுள்ள மக்களினங்கள் தமக்குள் எழும் தொடர்புகளில் பன்னாட்டுச் சட்டத்தையும் உடன்படிக்கைக் கடமைப்பாடுகளையும் மதித்து நடப்பதைப் பேணி வளர்ப்பதற்கும்; மற்றும்

(ஈ) பன்னாடுகளிடையே எழும் பூசல்களுக்குப் பொதுவரின் தீர்ப்புவழி தீர்வு காண்பதை ஊக்குவிப்பதற்கும்

முனைந்து முயலுதல் வேண்டும்.

## [3][பகுதி IV – (அ)
## அடிப்படைக் கடமைகள்

**51 (அ). அடிப்படைக் கடமைகள் :**

பின்வருவன இந்தியக் குடிமக்கள் ஒவ்வொருவரின் கடமைகள் ஆகும் —

(அ) அரசமைப்பு ஆவணத்திற்கு இணங்கி இயங்குதல்; மேலும், அதன் குறிக்கோள்கள், உறுப்பமைவுகள், நாட்டுக்கொடி, நாட்டுப்பண் இவற்றை மதித்து நடத்தல்;

(ஆ) நமது நாட்டு விடுதலைப் போராட்டத்திற்கு உணர்வூட்டிய உயர் குறிக்கோள்களைப் பேணிப் பின்பற்றுதல்;

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 10 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. "நாடாளுமன்றத்தால் சட்டத்தினால் விளம்பப்பட்ட" என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 27 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 11 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(c) to uphold and protect the sovereignty, unity and integrity of India;

(d) to defend the country and render national service when called upon to do so;

(e) to promote harmony and the spirit of common brotherhood amongst all the people of India transcending religious, linguistic and regional or sectional diversities; to renounce practices derogatory to the dignity of women;

(f) to value and preserve the rich heritage of our composite culture;

(g) to protect and improve the natural environment including forests, lakes,rivers and wild life, and to have compassion for living creatures;

(h) to develop the scientific temper, humanism and the spirit of inquiry and reform;

(i) to safeguard public property and to abjure violence;

(j) to strive towards excellence in all spheres of individual and collective activity so that the nation constantly rises to higher levels of endeavour and achievement.]

[1][(k) who is a parent or guardian to provide opportunities for education to his child or, as the case may be, ward between the age of six and fourteen years.]

# PART V

## THE UNION

## CHAPTER I-THE EXECUTIVE

### The President and Vice-President

**52. The President of India:**

There shall be a President of India.

**53. Executive power of the Union :**

(1) The executive power of the Union shall be vested in the President and shall be exercised by him either directly or through officers subordinate to him in accordance with this Constitution.

(2) Without prejudice to the generality of the foregoing provision, the supreme command of the Defence Forces of the Union shall be vested in the President and the exercise thereof shall be regulated by law.

---

1. Ins. by the Constitution (Eighty-sixth Amendment) Act, 2002, s. 4 (w.e.f. 1-4-2010).

(இ) இந்திய நாட்டின் இறையாண்மை, ஒற்றுமை, ஒருமைப்பாடு ஆகியவற்றை ஓங்கச்செய்து ஓம்பிக்காத்தல்;

(ஈ) வேண்டுங்கால், நாட்டினைக் காத்தல்; மற்றும் நாட்டுப்பணி ஆற்றுதல்;

(உ) சமயம், மொழி மற்றும் வட்டார அல்லது வகுப்பு வேறுபாடுகளைக் கடந்து, இந்திய மக்கள் அனைவரிடையேயும் நல்லிணக்கத்தையும் பொது உடன்பிறப்புணர்வையும் வளர்த்தல்; பெண்கள்தம் மாண்பிற்கு இழுக்காகும் பழக்கங்களை விட்டொழித்தல்;

(ஊ) நமது கலப்புருவான பண்பாட்டின் வளமார்ந்த மரபுச் செல்வத்தை மதித்துப் பாதுகாத்தல்;

(எ) காடுகள், ஏரிகள், ஆறுகள், வனவிலங்குகள் இவை உள்ளிட்ட இயற்கைச் சூழலை அழியாது காத்து வளர்த்தல்; உயிரினங்கள்பால் இரக்கங்காட்டுதல்;

(ஏ) அறிவியலார்ந்த உளப்பாங்கு, மனிதநேயம், ஆய்ந்து தெளிந்து சீர்திருத்தும் ஆர்வம் ஆகியவற்றை வளர்த்தல்;

(ஐ) பொதுச் சொத்தினைக் நலங்காத்தல்; மேலும், வன்முறையினை முற்றாக கைவிடுதல்;

(ஒ) சலியாத முயற்சியிலும் சாதனையிலும் உயர்மிகு நிலைகளை நாடு இடையறாது மேன்மேலும் எய்தும் வகையில், தனிமனித மற்றும் கூட்டுச் சேர்ந்து அனைத்து துறைகளிலும் உயர்திறம் நோக்கி ஓயாது முயலுதல்.]

[1][(ஓ) பெற்றோராக அல்லது காப்பாளராக இருக்கிற நிலையில், ஆறு முதல் பதினான்கு வயது வரையுள்ள தனது சிறாருக்கு அல்லது நேர்விற்கேற்ப காப்பிலுள்ளவருக்குக் கல்விக்கான வாய்ப்புகளுக்கு ஏற்பாடு செய்தல்.]

## பகுதி V

## ஒன்றியம்

### அத்தியாயம் I –ஆட்சித்துறை

### குடியரசுத்தலைவரும் துணைத்தலைவரும்

**52. இந்தியக் குடியரசுத்தலைவர்:**

இந்தியக் குடியரசுத்தலைவர் என்று ஒருவர் இருப்பார்.

**53. ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரம் :**

(1) ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரம் குடியரசுத்தலைவரிடம் உற்றமைந்திருக்கும்; மேலும், அதை அவர் நேரடியாகவோ தமக்குக் கீழமைந்துள்ள பதவியாளர்கள் வழியாகவோ இந்த அரசமைப்புக்கு இணங்கச் செலுத்திவருவார்.

(2) மேலேகண்ட வகையத்தின் பொதுப்பாங்கிற்குக் குந்தகமின்றி, ஒன்றியத்துப் பாதுகாப்புப் படைகளின் மீதான உயர்தனி ஆணையதிகாரம் குடியரசுத்தலைவரிடம் உற்றமைந்திருக்கும்; மேலும், அதைச் செலுத்துவது சட்டத்தினால் ஒழுங்குறுத்தப்படும்.

---

1. அரசமைப்புச் (எண்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 2002 இன் 4 ஆம் பிரிவினால் (1–4–2010 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(3) Nothing in this article shall—

(a) be deemed to transfer to the President any functions conferred by any existing law on the Government of any State or other authority; or

(b) prevent Parliament from conferring by law functions on authorities other than the President.[1]

**54. Election of President :**

The President shall be elected by the members, of an electoral college consisting of -

(a) the elected members of both Houses of Parliament; and

(b) the elected members of the Legislative Assemblies of the States.

[1][**Explanation**—In this article and in article 55, "State" includes the National Capital Territory of Delhi and the Union Territory of *Pondicherry.]

**55. Manner of election of President :**

(1) As far as practicable, there shall be uniformity in the scale of representation of the different States at the election of the President.

(2) For the purpose of securing such uniformity among the States *inter se* as well as parity between the States as a whole and the Union, the number of votes which each elected member of Parliament and of the Legislative Assembly of each State is entitled to cast at such election shall be determined in the following manner:—

(a) every elected member of the Legislative Assembly of a State shall have as many votes as there are multiples of one thousand in the quotient obtained by dividing the population of the State by the total number of the elected members of the Assembly;

(b) if, after taking the said multiples of one thousand, the remainder is not less than five hundred, then the vote of each member referred to in sub - clause (a) shall be further increased by one;

(c) each elected member of either House of Parliament shall have such number of votes as may be obtained by dividing the total number of votes assigned to the members of the Legislative Assemblies of the States under sub-clauses (a) and (b) by the total number of the elected members of both Houses of Parliament, fractions exceeding one-half being counted as one and other fractions being disregarded.

---

1.Ins. by the Constitution (Seventieth Amendment) Act, 1992, s. 2 (w.e.f. 1-6-1995).

* Now Puducherry vide the Pondicherry (Alteration of Name) Act, 2006 (44 of 2006), s. 3 (w.e.f. 1-10-2006).

(3) இந்த உறுப்பிலுள்ள எதுவும் –

(அ) நிலவுறும் சட்டம் ஒன்றினால் மாநிலம் ஒன்றின் அரசிற்கோ பிறவகை அதிகாரஅமைப்பிற்கோ வழங்கப்பட்ட பதவிப் பணிகள் எவற்றையும் குடியரசுத்தலைவருக்கு மாற்றுவதாகக் கொள்ளப்படுதல் ஆகாது; அல்லது

(ஆ) நாடாளுமன்றம் சட்டத்தினால், குடியரசுத்தலைவர் அல்லாத பிறவகை அதிகார அமைப்புகளுக்குப் பதவிப்பணிகளை வழங்குவதற்குத் தடையூறு ஆவதில்லை .

**54. குடியரசுத்தலைவரைத் தேர்ந்தெடுத்தல் :**

குடியரசுத்தலைவர் –

(அ) நாடாளுமன்ற ஈரவைகளிலுமுள்ள தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களையும்,

(ஆ) மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளிலுள்ள தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களையும்

கொண்ட வாக்காளர் குழாத்தின் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப் பெறுவார்.

[1][விளக்கம் – இந்த உறுப்பிலும் 55 ஆம் உறுப்பிலும் ''மாநிலம்'' என்பது, தில்லி தேசியத்தலைநகர் ஆட்சிநிலவரையையும் *பாண்டிச்சேரி ஒன்றியத்து ஆட்சிநிலவரையையும் உள்ளடக்கும்.]

**55. குடியரசுத்தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறை :**

(1) குடியரசுத்தலைவர் தேர்தலில் பல்வேறு மாநிலங்களுக்குள்ள சார்பாற்றத்தின் விகிதப்பாடு இயலுமளவு ஒருபடித்தாக இருத்தல் வேண்டும்.

(2) மாநிலங்களுக்கு இடையே அத்தகைய *ஒருபடித்தான* நிலை, அத்துடன் மாநிலங்கள் அனைத்திற்கும் ஒன்றியத்திற்கும் இடையே சரிசமநிலை என்ற இவற்றை எய்திடும் பொருட்டு, நாடாளுமன்றத்திற்கும் மாநிலம் ஒவ்வொன்றின் சட்டமன்றப் பேரவைக்கும் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர் ஒவ்வொருவரும், அத்தேர்தலில் எத்தனை வாக்குகள் அளிப்பதற்கு உரிமை கொண்டவர் என்பதைப் பின்வரும் முறையில் தீர்மானித்தல் வேண்டும் : —

(அ) ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர் ஒவ்வொருவருக்கும், அந்த மாநிலத்தின் மக்கள் தொகையை அச்சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையால் வகுத்திட வரும் ஈவுஎண்ணில் எத்தனை ஆயிரங்கள் உள்ளனவோ அத்தனை வாக்குகள் உண்டு;

(ஆ) மேற்சொன்ன அத்தனை ஆயிரங்கள் போக, எஞ்சிய எண்ணிக்கை ஐந்நூற்றுக்குக் குறையாமல் இருக்குமாயின், அப்போது (அ) உட்கூறில் சுட்டப்பட்டுள்ள உறுப்பினர் ஒவ்வொருவருக்குமுள்ள வாக்கு எண்ணிக்கையுடன் மேலும் ஓரெண்ணைச் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்;

(இ) நாடாளுமன்ற ஈரவைகள் ஒவ்வொன்றுக்கும் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர் ஒவ்வொருவருக்கும், (அ), (ஆ) ஆகிய உட்கூறுகளின்படி மாநிலச் சட்டமன்றப் பேரவைகளின் உறுப்பினர்களுக்குக் குறித்தளிக்கப்பட்ட வாக்குகளின் மொத்த எண்ணிக்கையை, நாடாளுமன்ற அவைகள் இரண்டிற்கும் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையால் வகுத்து, அதில் அரைக்கு மேற்பட்ட பின்னங்களை ஒன்று எனக் கொண்டும், பிற பின்னங்களைத் தள்ளியும் கணக்கிட்டால் எத்தனை வாக்குகள் வருமோ அத்தனை வாக்குகள் உண்டு.

---

1. அரசமைப்புச் (எழுபதாம் திருத்தம்) சட்டம், 1992 இன் 2 ஆம் பிரிவினால் (1–6–1995 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

* தற்போது புதுச்சேரி, பாண்டிச்சேரி (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (44/2006) 3 ஆம் பிரிவைக் (1–10–2006 முதல் செல்திறம் பெறுமாறு) காண்க.

(3) The election of the President shall be held in accordance with the system of proportional representation by means of the single transferable vote and the voting at such election shall be by secret ballot.

[1][**Explanation.-** In this article, the expression "population" means the population ascertained at the last preceding census of which the relevant figures have been published:

Provided that the reference in this Explanation to the last preceding census of which the relevant figures have been published shall, until the relevant figures for the first census taken after the year [2][2026] have been published, be construed as a reference to the 1971 census.]

### 56. Term of office of President :

(1) The President shall hold office for a term of five years from the date on which he enters upon his office:

Provided that —

(a) the President may, by writing under his hand addressed to the Vice-President, resign his office;

(b) the President may, for violation of the Constitution, be removed from office by impeachment in the manner provided in article 61;

(c) the President shall, notwithstanding the expiration of his term, continue to hold office until his successor enters upon his office.

(2) Any resignation addressed to the Vice-President under clause (a) of the proviso to clause (1) shall forthwith be communicated by him to the Speaker of the House of the People.

### 57. Eligibility for re-election :

A person who holds, or who has held, office as President shall, subject to the other provisions of this Constitution be eligible for re-election, to that office.

### 58. Qualifications for election as President :

(1) No person shall be eligible for election as President unless he —

(a) is a citizen of India,

(b) has completed the age of thirty-five years, and

(c) is qualified for election as a member of the House of the People.

---

1. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 12, for the Explanation (w.e.f. 3-1-1977).
2. Subs. by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 2, for "2000" (w.e.f. 21-2-2002).

(3) குடியரசுத்தலைவரின் தேர்தல், ஒற்றை மாற்று வாக்கு வழியிலான வீதச்சார்பாற்ற முறைக்கிணங்க நடத்தப்படுதல் வேண்டும்; மேலும், அத்தகைய தேர்தலில் வாக்களித்தல், மறைவான வாக்களிப்பு என்ற முறையில் இருத்தல் வேண்டும்.

[1][**விளக்கம்.**– இந்த உறுப்பில் ''மக்கள்தொகை'' என்னும் சொல், கடைசிமுறை மக்கள் கணக்கெடுப்பின்படி தொடர்புடையவிவரங்களைக் கண்டறிந்து வெளியிடப்பட்டுள்ள மக்கள்தொகை என்று பொருள்படும்:

வரம்புரையாக: இந்த விளக்கத்தில், தொடர்புடைய விவரங்கள் வெளியிடப்பட்டுள்ள கடைசிமுறை மக்கள்கணக்கெடுப்பு என்பது, [2][2026] ஆம் ஆண்டிற்குப் பின்னர் முதலாவதாக எடுக்கப்படும் மக்கள் கணக்கெடுப்பின்படியாகும் தொடர்புடைய விவரங்கள் வெளியிடப்படும் வரையில், 1971 ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பைச் சுட்டுவதாகவே பொருள்கொள்ளப்படுதல் வேண்டும். ]

**56. குடியரசுத்தலைவரின் பதவிக்காலம் :**

(1) குடியரசுத்தலைவர், தாம் பதவி ஏற்கும் தேதியிலிருந்து ஐந்தாண்டுக் காலத்திற்குப் பதவி வகிப்பார்:

வரம்புரையாக :

(அ) குடியரசுத்தலைவர், தம் கையொப்பமிட்டு குடியரசுத் துணைத்தலைவருக்கு எழுத்துவழித் தெரிவித்துத் தம் பதவியைவிட்டு விலகிக் கொள்ளலாம்;

(ஆ) இந்த அரசமைப்பை மீறிய நடத்தைக்காக, 61 ஆம் உறுப்பில் வகைசெய்யப்பட்டுள்ள முறைப்படி குடியரசுத்தலைவர், அவையில் பழிசாட்டப்பட்டுப் பதவியிலிருந்து அகற்றப்படலாம்;

(இ) குடியரசுத்தலைவர், தம் பதவிக்காலம் கழிவுற்றாலுங்கூட, அவருக்கு அடுத்துவருபவர் பதவி ஏற்கும்வரையில் தொடர்ந்து பதவி வகித்துவருவார்.

(2). (1) ஆம் கூறின் வரம்புரையின் (அ) கூறின்படி, தமக்குத் தெரிவிக்கப்பட்ட பதவிவிலகலைக் குறித்து, குடியரசுத் துணைத்தலைவர், மக்களவைத் தலைவருக்கு உடனடியாகச் செய்தியனுப்புதல் வேண்டும்.

**57. மீண்டும் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுமை :**

குடியரசுத்தலைவராகப் பதவி வகிக்கும் அல்லது வகித்திருந்த ஒருவர், இந்த அரசமைப்பின் பிற வகையங்களுக்கு உட்பட்டு, மீண்டும் அந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்குத் தகுமையுடையவர் ஆவார்.

**58. குடியரசுத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுதிப்பாடுகள் :**

(1) ஒருவர் –

(அ) இந்தியக் குடிமகனாகவும்,

(ஆ) முப்பத்தைந்து வயது முடிந்தவராகவும்,

(இ) மக்களவையின் ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெறுவதற்கான தகுதிப்பாடுடையவராகவும்

இருந்தாலன்றி, அவர் குடியரசுத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெறுவதற்கான தகுமையுடையவர் ஆகார்.

---

1. விளக்கத்திற்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 12 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
2. ''2000'' என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 2 ஆம் பிரிவினால் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(2) A person shall not be eligible for election as President if he holds any office of profit under the Government of India or the Government of any State or under any local or other authority subject to the control of any of the said Governments.

**Explanation.** - For the purposes of this article, a person shall not be deemed to hold any office of profit by reason only that he is the President or Vice-President of the Union or the Governor[1][***] of any State or is a Minister either for the Union or for any State.

**59. Conditions of President's Office:**

(1) The President shall not be a member of either House of Parliament or of a House of the Legislature of any State, and if a member of either House of Parliament or of a House of the Legislature of any State be elected President, he shall be deemed to have vacated his seat in that House on the date on which he entres upon his office as President.

(2) The President shall not hold any other office of profit.

(3) The President shall be entitled without payment of rent to the use of his official residences and shall be also entitled to such emoluments, allowances and privileges as may be determined by Parliament by law and, until provision in that behalf is so made, such emoluments, allowances and privileges as are specified in the Second Schedule.

(4) The emoluments and allowances of the President shall not be diminished during his term of office.

**60. Oath or affirmation by the President :**

Every President and every person acting as President or discharging the functions of the President shall, before entering upon his office, make and subscribe in the presence of the Chief Justice of India or, in his absence, the senior-most Judge of the Supreme Court available, an oath or affirmation in the following form, that is to say -

"I, A. B., do $\frac{\text{swear in the name of God}}{\text{solemnly affirm}}$ that I will faithfully execute the office of President (or discharge the functions of the President) of India and will to the best of my ability preserve, protect and defend the Constitution and the law and that I will devote myself to the service and well-being of the people of India."

---

1. The words "or Rajpramukh or Uparajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch.(w.e.f. 1-11-1956).

(2) ஒருவர், இந்திய அரசின் அல்லது மாநில அரசு ஒன்றின் கீழோ அவற்றில் ஒன்றின் கட்டாள்கைக்கு உட்பட்டிருக்கிற உள்ளாட்சி அல்லது பிறவகை அதிகாரஅமைப்பின் கீழோ ஊதியப்பதவி எதனையும் வகிப்பாராயின், அவர் குடியரசுத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுமையுடையவர் ஆகார்.

**விளக்கம்.–** இந்த உறுப்பினைப் பொறுத்தவரை, ஒருவர் ஒன்றியத்தின் குடியரசுத் தலைவராகவோ துணைத்தலைவராகவோ மாநிலம் ஒன்றின் ஆளுநராகவோ[1][***] ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் அமைச்சராகவோ இருக்கிறார் என்னும் காரணத்தினால் மட்டுமே, அவர் ஊதியப்பதவி ஒன்றை வகிப்பவராகக் கொள்ளப்பெறுதல் ஆகாது.

**59. குடியரசுத் தலைவரின் பதவிக்கான வரைமுறைகள் :**

(1) குடியரசுத்தலைவர் நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலுமோ மாநிலம் ஒன்றின் சட்டமன்ற அவை ஒன்றிலோ உறுப்பினராக இருத்தல் ஆகாது; மேலும், நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் அல்லது மாநிலச் சட்டமன்ற அவை ஒன்றின் உறுப்பினராகவுள்ள ஒருவர் குடியரசுத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெறுவாராயின், அவர் குடியரசுத்தலைவராகப் பதவி ஏற்கும் தேதியன்று அந்த அவையிலுள்ள தம் பதவியிடத்தை விட்டகன்றவராகக் கொள்ளப்பெறுவார்.

(2) குடியரசுத்தலைவர் பிற ஊதியப்பதவி எதனையும் வகித்தல் ஆகாது.

(3) குடியரசுத்தலைவர், தம் பதவிக்குரிய உறைவிடங்களில் வாடகை ஏதுமின்றி உறைவதற்கு உரிமை கொண்டவர் ஆவார்; நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கும் பதவியூதியங்கள், படித்தொகைகள், மதிப்புரிமைகள் ஆகியவற்றிற்கும் அவர் உரிமை கொண்டவர் ஆவார்; அவ்வாறு அதன் பொருட்டு வகைசெய்யப்படும் வரையிலும், இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள பதவியூதியங்கள், படித்தொகைகள், மதிப்புரிமைகள் ஆகியவற்றிற்கு அவர் உரிமை கொண்டவர் ஆவார்.

(4) குடியரசுத்தலைவருக்குள்ள பதவியூதியங்களையும் படித்தொகைகளையும், அவருடைய பதவிக்காலத்தின்போது குறைக்கப்படுதல் ஆகாது.

**60. குடியரசுத்தலைவருக்குள்ள ஆணைமொழி அல்லது உறுதிமொழி :**

குடியரசுத்தலைவர் ஒவ்வொருவரும், குடியரசுத்தலைவராகச் செயல்படும் அல்லது குடியரசுத்தலைவருக்குள்ள பதவிப்பணிகளை ஆற்றிவரும் ஒவ்வொருவரும், தாம் பதவி ஏற்பதற்கு முன்பு, இந்தியத் தலைமை நீதிபதியின் முன்னிலையில் அல்லது அவர் இல்லாதபோது, அங்கிருக்கும் உச்ச நீதிமன்ற நீதிபதிகளில் மிக்க முதுநிலையரான ஒருவரின் முன்னிலையில், ஓர் ஆணை மொழியை அல்லது உறுதிமொழியைப் பின்வரும் சொன்முறையில் உள்ளபடி ஏற்றுக் கையொப்பமிடுதல் வேண்டும்; அதாவது –

"அ, ஆ., ஆகிய நான், உண்மையான பற்றுடன் இந்தியக் குடியரசுத் தலைவரின் பதவிப்பொறுப்பை நிறைவேற்றி வருவதோடு (அல்லது இந்தியக் குடியரசுத்தலைவருக்குள்ள பதவிப்பணிகளை ஆற்றிவருவதோடு) அரசமைப்பு முறையினையும் சட்ட நெறியினையும் என் முழுத்திறன்கொண்டு புரந்தும் பேணியும் புறங்காத்தும் நிற்பேன் என்றும், இந்திய மக்களின் நற்பணிக்கும் நல்வாழ்வுக்கும் முற்றுமாக என்னை நான் ஆட்படுத்திக்கொள்வேன் என்றும்
<u>கடவுளை முன்னிறுத்தி ஆணை மொழிகின்றேன்"</u>
உள்ளார்ந்து உறுதி மொழிகின்றேன்."

---

1. "அல்லது இராஜப்பிரமுகராகவோ அல்லது உபஇராஜப்பிரமுகராகவோ" என்னும் சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

**61. Procedure for impeachment of the President :**

(1) When a President is to be impeached for violation of the Constitution, the charge shall be preferred by either House of Parliament.

(2) No such charge shall be preferred unless -

(a) the proposal to prefer such charge is contained in a resolution which has been moved after atleast fourteen days' notice in writing signed by not less than one-fourth of the total number of members of the House has been given of their intention to move the resolution, and

(b) such resolution has been passed by a majority of not less than two-thirds of the total membership of the House.

(3) When a charge has been so preferred by either House of Parliament, the other House shall investigate the charge or cause the charge to be investigated and the President shall have the right to appear and to be represented at such investigation.

(4) If as a result of the investigation a resolution is passed by a majority of not less than two-thirds of the total membership of the House by which the charge was investigated or caused to be investigated, declaring that the charge preferred against the President has been sustained, such resolution shall have the effect of removing the President from his office as from the date on which the resolution is so passed.

**62. Time of holding election to fill vacancy in the office of President and the term of office of person elected to fill casual vacancy :**

(1) An election to fill a vacancy caused by the expiration of the term of office of President shall be completed before the expiration of the term.

(2) An election to fill a vacancy in the office of President occurring by reason of his death, resignation or removal, or otherwise shall be held as soon as possible after, and in no case later than six months from, the date of occurrence of the vacancy; and the person elected to fill the vacancy shall, subject to the provisions of article 56, be entitled to hold office for the full term of five years from the date on which he enters upon his office.

**63. The Vice-President of India:**

There shall be a Vice-President of India.

**61. குடியரசுத்தலைவர் மீது அவையில் பழிசாட்டுவதற்கான நெறிமுறை :**

(1) இந்த அரசமைப்பை மீறிய நடத்தைக்காக குடியரசுத்தலைவர் மீது அவையில் பழிசாட்டப்படுவதாயின், அதற்கான குற்றச்சார்த்து, நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் ஒன்றினால் கொணரப்படுதல் வேண்டும்.

(2) அத்தகைய குற்றச்சார்த்து கொணரப்படவேண்டுமெனில் –

(அ) அக்குற்றச்சார்த்தினைக் கொணரவிருக்கும் செயற்குறிப்பு, ஒரு தீர்மானத்தின் வடிவில் இருத்தல் வேண்டும்; அந்த அவையின் மொத்த உறுப்பினர்களில் நான்கில் ஒரு பங்கிற்குக் குறையாதோர் அத்தீர்மானத்தை முன்மொழியவிருப்பதாகவுள்ள தங்கள் கருத்தினைத் தெரிவித்து, கையொப்பமிட்டு எழுத்துவழிப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்பு கொடுத்ததற்குப் பின்னர், அத்தீர்மானம் முன்மொழியப்பட்டிருத்தல் வேண்டும், அத்துடன்,

(ஆ) அத்தீர்மானம் அந்த அவையின் மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கிற்குக் குறையாத பெரும்பான்மையினரால் நிறைவேற்றப்பட்டிருத்தலும் வேண்டும்.

(3) நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றினால் ஒரு குற்றச்சார்த்து அவ்வாறு கொணரப்பட்டிருக்குமாயின், மறு அவை அந்தக் குற்றச்சார்த்தினை ஆய்வு செய்தலோ செய்வித்தலோ வேண்டும்; மேலும், அத்தகைய ஆய்வின்போது, குடியரசுத்தலைவர் தாமே நேரில் வருவதற்கும் சார்பாற்றுநரை வைத்துக்கொள்வதற்கும் உரிமையுடையவர் ஆவார்.

(4) அந்த ஆய்வின் விளைவாக, குடியரசுத்தலைவர்மீது கொணரப்பட்ட அக்குற்றச்சார்த்து மெய்ப்பிக்கப்பட்டுள்ளது என விளம்பும் தீர்மானம் ஒன்றை, அக்குற்றச்சார்த்தினை ஆய்வு செய்த அல்லது செய்வித்த அவையின் மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கிற்குக் குறையாத பெரும்பான்மையினர் நிறைவேற்றினால், அத்தீர்மானம் அவ்வாறு நிறைவேற்றப்படும் தேதியிலிருந்து குடியரசுத்தலைவரை அவர்தம் பதவியிலிருந்து அகற்றிய செல்திறம் உடையது ஆகும்.

**62. குடியரசுத்தலைவரின் பதவி காலியிடமாகும் போது அதை நிரப்புவதற்காகத் தேர்தல் நடத்த வேண்டிய காலமும் இடைநேர்வான காலியிடத்தை நிரப்புவதற்காகத் தேர்ந்தெடுக்கப் பெறுபவரின் பதவிக்காலமும் :**

(1) குடியரசுத்தலைவரின் பதவிக்காலம் கழிவுறுவதால் ஏற்படும் காலியிடத்தை நிரப்புவதற்கான தேர்தலை, அந்தக் காலம் கழிவுறுவதற்கு முன்பே நடத்தி முடித்தல் வேண்டும்.

(2) குடியரசுத்தலைவரின் இறப்பு, பதவிவிலகல் அல்லது பதவியகற்றுகை காரணத்தினாலோ பிறவாறாகவோ அவருடைய பதவி காலியிடமாகுமானால், அதை நிரப்புவதற்கான தேர்தல், அது காலியான தேதிக்குப் பின்பு, இயன்ற அளவு விரைவிலும், எந்நேர்விலும் அந்தத் தேதியிலிருந்து ஆறு மாதங்களுக்குப் பிற்படாமலும் நடத்தப்படுதல் வேண்டும்; மேலும், அந்தக் காலியிடத்தை நிரப்புவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பெறுபவர், 56 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அவர் பதவி ஏற்கும் தேதியிலிருந்து முழுப் பதவிக்காலமாகிய ஐந்தாண்டுகள் பதவி வகிப்பதற்கு உரிமைகொண்டவர் ஆவார்.

**63. இந்தியக் குடியரசுத் துணைத்தலைவர்:**

இந்தியக் குடியரசுத் துணைத்தலைவர் என்று ஒருவர் இருப்பார்.

**64. The Vice-President to be *ex-officio* Chairman of the Council of States :**

The Vice-President shall be *ex-officio* Chairman of the Council of States and shall not hold any other office of profit:

Provided that during any period when the Vice-President acts as President or discharges the functions of the President under article 65, he shall not perform the duties of the office of Chairman of the Council of States and shall not be entitled to any salary or allowance payable to the Chairman of the Council of States under article 97.

**65. The Vice-President to act as President or to discharge his functions during casual vacancies in the office, or during the absence, of President :**

(1) In the event of the occurrence of any vacancy in the office of the President by reason of his death, resignation or removal, or otherwise, the Vice-President shall act as President until the date on which a new President elected in accordance with the provisions of this Chapter to fill such vacancy enters upon his office.

(2) When the President is unable to discharge his functions owing to absence, illness or any other cause, the Vice-President shall discharge his functions until the date on which the President resumes his duties.

(3) The Vice-President shall, during, and in respect of, the period while he is so acting as, or discharging the functions of, President, have all the powers and immunities of the President and be entitled to such emoluments, allowances and privileges as may be determined by Parliament by law and, until provision in that behalf is so made, such emoluments, allowances and privileges as are specified in the Second Schedule.

**66. Election of Vice-President :**

(1) The Vice-President shall be elected by the [1][members of an electoral college consisting of the members of both Houses of Parliament] in accordance with the system of proportional representation by means of the single transferable vote and the voting at such election shall be by secret ballot.

(2) The Vice-President shall not be a member of either House of Parliament or of a House of the Legislature of any State, and if a member of either House of Parliament or of a House of the Legislature of any State be elected Vice-President, he shall be deemed to have vacated his seat in that House on the date on which he enters upon his office as Vice-President.

---

1.Subs. by the Constitution (Eleventh Amendment) Act, 1961, s. 2, for "members of both Houses of Parliament assembled at a joint meeting"(w.e.f. 19-12-1961).

**64. குடியரசுத் துணைத்தலைவர் மாநிலங்களவைக்குப் *பதவிவழித்* தலைவராக இருப்பார்:**

குடியரசுத் துணைத்தலைவர் மாநிலங்களவைக்குப் *பதவிவழித்* தலைவராக இருப்பார்; அவர் பிற ஊதியப்பதவி எதனையும் வகித்தல் ஆகாது:

வரம்புரையாக: குடியரசுத் துணைத்தலைவர் 65 ஆம் உறுப்பின்படி குடியரசுத்தலைவராகச் செயல்படும்போதும், குடியரசுத்தலைவரின் பதவிப் பணிகளை ஆற்றிவரும்போதும் மாநிலங்களவையின் தலைவர் பதவிக்குள்ள கடமைகளைப் புரிதல் ஆகாது; மேலும், 97 ஆம் உறுப்பின்படி மாநிலங்களவையின் தலைவருக்கு வழங்கத்தக்க வரையூதியம் அல்லது படித்தொகை எதற்கும் அவர் உரிமை கொண்டவர் ஆகார்.

**65. குடியரசுத்தலைவரின் பதவி இடைநேர்வாகக் காலியிடமாகும்போது அல்லது அவர் இல்லாதபோது குடியரசுத் துணைத்தலைவர், குடியரசுத்தலைவராகச் செயல்படுவார் அல்லது அவருடைய பதவிப் பணிகளை ஆற்றி வருவார் :**

(1) குடியரசுத்தலைவரின் இறப்பு, பதவிவிலகல் அல்லது பதவியகற்றுகை காரணத்தினாலோ பிறவாறாகவோ அவருடைய பதவி காலியிடமாகுமானால், இந்த அத்தியாயத்தின் வகையங்களுக்கு இணங்க, அத்தகைய காலியிடத்தை நிரப்புவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பெறும் ஒரு புதிய குடியரசுத்தலைவர் தம் பதவியை ஏற்கும் தேதி வரையிலும், குடியரசுத் துணைத்தலைவர், குடியரசுத்தலைவராகச் செயல்படுவார்.

(2) குடியரசுத்தலைவர், தம் இருத்தலின்மை, நோய் அல்லது பிற காரணம் எதனாலும் தம் பதவிப்பணிகளை ஆற்ற இயலாதபோது, அவர் தம் கடமைகளை மீண்டும் மேற்கொள்ளும் தேதி வரையிலும், அவருடைய பதவிப்பணிகளைக் குடியரசுத் துணைத்தலைவர் ஆற்றி வருவார்.

(3) அவ்வாறு குடியரசுத்தலைவராகச் செயல்படும்போதும், குடியரசுத்தலைவருடைய பதவிப்பணிகளை ஆற்றிவரும்போதும், அக் காலஅளவைப் பொறுத்தும், குடியரசுத்தலைவருக்குள்ள அனைத்து அதிகாரங்களையும் காப்புரிமைகளையும் குடியரசுத் துணைத்தலைவர் உடையவர் ஆவார்; மேலும், நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கும் பதவியூதியங்கள், படித்தொகைகள், மதிப்புரிமைகள் ஆகியவற்றிற்கு உரிமைகொண்டவர் ஆவார்; அவ்வாறு அதன்பொருட்டு வகைசெய்யப்படும் வரையிலும், இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள பதவியூதியங்கள், படித்தொகைகள், மதிப்புரிமைகள் ஆகியவற்றிற்கு அவர் உரிமை கொண்டவர் ஆவார்.

**66. குடியரசுத் துணைத்தலைவரைத் தேர்ந்தெடுத்தல் :**

(1) குடியரசுத் துணைத்தலைவர், [1][நாடாளுமன்ற ஈரவைகளிலுமுள்ள உறுப்பினர்களைக் கொண்ட வாக்காளர் குழாத்தின் உறுப்பினர்களால்] ஒற்றை மாற்று வாக்கு வழியிலான வீதச்சார்பாற்ற முறைக்கிணங்க தேர்ந்தெடுக்கப் பெறுவார்; மேலும், அத்தகைய தேர்தலில் வாக்களித்தல், மறைவான வாக்களிப்பு என்ற முறையில் இருத்தல் வேண்டும்.

(2) குடியரசுத் துணைத்தலைவர் நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலுமோ மாநிலம் ஒன்றின் சட்டமன்ற அவை ஒன்றிலோ உறுப்பினராக இருத்தல் ஆகாது; மேலும், நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் அல்லது மாநிலச் சட்டமன்ற அவை ஒன்றின் உறுப்பினராகவுள்ள ஒருவர் குடியரசுத் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெறுவாராயின், அவர் குடியரசுத் துணைத்தலைவராகப் பதவி ஏற்கும் தேதியன்று அந்த அவையிலுள்ள தம் பதவியிடத்தை விட்டகன்றவராகக் கொள்ளப்பெறுவார்.

---

1. "கூட்டுக் கூட்டம் ஒன்றில் கூடிய நாடாளுமன்ற ஈரவைகளிலுமுள்ள உறுப்பினர்களால்'' என்பதற்கு, அரசமைப்புச் (பதினோராம் திருத்தம்) சட்டம், 1961 இன் 2 ஆம் பிரிவினால் (19–12–1961 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(3) No person shall be eligible for election as Vice-President unless he—

(a) is a citizen of India;

(b) has completed the age of thirty-five years; and

(c) is qualified for election as a member of the Council of States.

(4) A person shall not be eligible for election as Vice-President if he holds any office of profit under the Government of India or the Government of any State or under any local or other authority subject to the control of any of the said Governments.

**Explanation.** - For the purposes of this article, a person shall not be deemed to hold any office of profit by reason only that he is the President or Vice-President of the Union or the Governor[1][***] of any State or is a Minister either for the Union or for any State.

**67. Term of office of Vice-President :**

The Vice-President shall hold office for a term of five years from the date on which he enters upon his office:

Provided that-

(a) a Vice-President may, by writing under his hand addressed to the President, resign his office;

(b) a Vice-President may be removed from his office by a resolution of the Council of States passed by a majority of all the then members of the Council and agreed to by the House of the People; but no resolution for the purpose of this clause shall be moved unless atleast fourteen days' notice has been given of the intention to move the resolution;

(c) a Vice-President shall, notwithstanding the expiration of his term, continue to hold office until his successor enters upon his office.

---

1. The words "or Rajpramukh or Uparajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

(3) ஒருவர் –

(அ) இந்தியக் குடிமகனாகவும்,

(ஆ) முப்பத்தைந்து வயது முடிந்தவராகவும்,

(இ) மாநிலங்களவையின் ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுதிப்பாடுடையவராகவும்

இருந்தாலன்றி, அவர் குடியரசுத் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுமையுடையவர் ஆகார்.

(4) ஒருவர், இந்திய அரசின் அல்லது மாநில அரசு ஒன்றின் கீழோ அவற்றில் ஒன்றின் கட்டாள்கைக்கு உட்பட்டிருக்கிற உள்ளாட்சி அல்லது பிறவகை அதிகாரஅமைப்பின் கீழோ ஊதியப்பதவி எதனையும் வகிப்பாராயின், அவர் குடியரசுத் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுமையுடையவர் ஆகார்.

**விளக்கம்.**— இந்த உறுப்பினைப் பொறுத்தவரை, ஒருவர் ஒன்றியத்தின் குடியரசுத்தலைவராகவோ துணைத்தலைவராகவோ மாநிலம் ஒன்றின் ஆளுநராகவோ[1][***] ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் அமைச்சராகவோ இருக்கிறார் என்னும் காரணத்தினால் மட்டுமே அவர் ஊதியப்பதவி ஒன்றை வகிப்பவராகக் கொள்ளப்பெறுதல் ஆகாது.

**67. குடியரசுத் துணைத்தலைவரின் பதவிக்காலம் :**

குடியரசுத் துணைத்தலைவர், தாம் பதவி ஏற்கும் தேதியிலிருந்து ஐந்தாண்டு காலத்திற்குப் பதவி வகிப்பார்:

**வரம்புரையாக:**

(அ) குடியரசுத் துணைத்தலைவர், தம் கையொப்பமிட்டு குடியரசுத் தலைவருக்கு எழுத்துவழித் தெரிவித்துத் தம் பதவியைவிட்டு விலகிக்கொள்ளலாம்;

(ஆ) குடியரசுத் துணைத்தலைவர், மாநிலங்களவையின் அப்போதைய அனைத்து உறுப்பினர்களில் பெரும்பான்மையினரால் நிறைவேற்றப்பட்டு, மக்களவையாலும் ஏற்றுக்கொள்ளப்படும் தீர்மானம் ஒன்றினால் அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம்; ஆனால் இந்தக் கூறினைப் பொறுத்தவரை அத்தகைய தீர்மானம் எதுவும், அதை முன்மொழியவிருக்கும் கருத்தினைத் தெரிவித்துப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்பு கொடுத்திருந்தாலன்றி, முன்மொழியப்படுதல் ஆகாது;

(இ) குடியரசுத் துணைத்தலைவர், தம் பதவிக்காலம் கழிவுற்றாலுங்கூட, அவருக்கு அடுத்துவருபவர் பதவி ஏற்கும் வரையிலும் தொடர்ந்து பதவி வகித்துவருவார்.

---

1. ''அல்லது இராஜப்பிரமுகராகவோ அல்லது உபராஜப்பிரமுகராகவோ'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

**68. Time of holding election to fill vacancy in the office of Vice-President and the term of office of person elected to fill casual vacancy :**

(1) An election to fill a vacancy caused by the expiration of the term of office of Vice - President shall be completed before the expiration of the term.

(2) An election to fill a vacancy in the office of Vice-President occurring by reason of his death, resignation or removal, or otherwise shall be held as soon as possible after the occurrence of the vacancy, and the person elected to fill the vacancy shall, subject to the provisions of article 67, be entitled to hold office for the full term of five years from the date on which he enters upon his office.

**69. Oath or affirmation by the Vice-President :**

Every Vice-President shall, before entering upon his office, make and subscribe before the President, or some person appointed in that behalf by him, an oath or affirmation in the following form, that is to say—

"I, A. B., do swear in the name of the God / Solemnly affirm that I will bear true faith, and allegiance to the Constitution of India as by law established and that I will faithfully discharge the duty upon which I am about to enter".

**70. Discharge of President's functions in other contingencies :**

Parliament may make such provision as it thinks fit for the discharge of the functions of the President in any contingency not provided for in this Chapter.

**71. [1][Matters relating to, or connected with, the election of a President or Vice president :**

(1) All doubts and disputes arising out of or in connection with the election of a President or Vice-President shall be inquired into and decided by the Supreme Court whose decision shall be final.

(2) If the election of a person as President or Vice-President is declared *void* by the Supreme Court, acts done by him in the exercise and performance of the powers and duties of the office of President or Vice-President, as the case may be, on or before the date of the decision of the Supreme Court shall not be invalidated by reason of that declaration.

---

1. Art.71 has been successively subs. by the Constitution (Thirty-ninth Amendment) Act, 1975, s. 2 (w.e.f.10-8-1975) and the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 10 to read as above (w.e.f. 20-6-1979).

**68. குடியரசுத் துணைத்தலைவரின் பதவி காலியிடமாகும்போது அதை நிரப்புவதற்காகத் தேர்தல் நடத்த வேண்டிய காலமும் இடைநேர்வான காலியிடத்தை நிரப்புவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பெறுபவரின் பதவிக்காலமும் :**

(1) குடியரசுத் துணைத்தலைவரின் பதவிக்காலம் கழிவுறுவதால் ஏற்படும் காலியிடத்தை நிரப்புவதற்கான தேர்தலை, அந்தக் காலம் கழிவுறுவதற்கு முன்பே நடத்தி முடித்தல் வேண்டும்.

(2) குடியரசுத் துணைத்தலைவரின் இறப்பு, பதவிவிலகல் அல்லது பதவியகற்றுகை காரணத்தினாலோ பிறவாறாகவோ அவருடைய பதவி காலியிடமாகுமானால், அதை நிரப்புவதற்கான தேர்தல், அது காலியான பின்பு இயன்ற அளவு விரைவில் நடத்தப்படுதல் வேண்டும்; மேலும், அந்தக் காலியிடத்தை நிரப்புவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பெறுபவர், 67 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அவர் பதவி ஏற்கும் தேதியிலிருந்து முழுப் பதவிக்காலமாகிய ஐந்தாண்டுகள் பதவி வகிப்பதற்கு உரிமை கொண்டவர் ஆவார்.

**69. குடியரசுத் துணைத்தலைவருக்குள்ள ஆணைமொழி அல்லது உறுதிமொழி :**

குடியரசுத் துணைத்தலைவர் ஒவ்வொருவரும், தாம் பதவி ஏற்பதற்கு முன்பு, குடியரசுத்தலைவரின் அல்லது அவரால் அதன்பொருட்டு அமர்த்தப்பெறும் ஒருவரின் முன்னிலையில் ஓர் ஆணைமொழியை அல்லது உறுதிமொழியைப் பின்வரும் சொன்முறையில் உள்ளபடி ஏற்றுக் கையொப்பமிடுதல் வேண்டும்; அதாவது —

"அ, ஆ., ஆகிய நான், சட்டமுறையில் அமைவுறு இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும், நான் ஏற்கவுள்ள கடமையினை அகத்தூய்மையோடு ஆற்றுவேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகின்றேன்"
உள்ளார்ந்து உறுதிமொழிகின்றேன்."

**70. பிற நினையாநிகழ்வுகளில் குடியரசுத் தலைவரின் பதவிப்பணிகளை ஆற்றி வருதல் :**

இந்த அத்தியாயத்தில் வகை செய்யப்பட்டிராத நினையாநிகழ்வு எதிலும் குடியரசுத்தலைவரின் பதவிப்பணிகளை ஆற்றிவருவதற்கு நாடாளுமன்றம் தான் தக்கதெனக் கருதுகிற ஏற்பாட்டினைச் செய்யலாம்.

**71. [1][குடியரசுத்தலைவரை அல்லது குடியரசுத் துணைத்தலைவரைத் தேர்ந்தெடுத்தல் பற்றிய அல்லது அதன் தொடர்பான பொருட்பாடுகள் :**

(1) குடியரசுத்தலைவரை அல்லது குடியரசுத் துணைத்தலைவரைத் தேர்ந்தெடுத்தல் பற்றியோ அதன் தொடர்பாகவோ எழும் அனைத்து ஐயப்பாடுகளையும் வழக்குகளையும், உச்ச நீதிமன்றம் விசாரித்து முடிவு செய்யும்; அதன் முடிபே அறுதியானது ஆகும்.

(2) குடியரசுத்தலைவராகவோ குடியரசுத் துணைத்தலைவராகவோ ஒருவரைத் தேர்ந்தெடுத்தது *இல்லாநிலையது* ஆகும் என உச்ச நீதிமன்றம் விளம்புமாயின், உச்ச நீதிமன்றம் அவ்வாறு முடிபு கூறிய தேதியன்றோ அதற்கு முன்போ, குடியரசுத்தலைவரின் அல்லது குடியரசுத் துணைத்தலைவரின் பதவிக்குள்ள அதிகாரங்களைச் செலுத்தும் வகையிலும் கடமைகளைப் புரியும் வகையிலும் அவர் செய்த செயல்கள், அந்த விளம்புகையினால் செல்லாதவை ஆவதில்லை.

1. 71 ஆம் உறுப்பு, மேலே உள்ளவாறு வாசிக்க, அரசமைப்புச் (முப்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 2 ஆம் பிரிவினால் (10–8–1975 முதல் செல்திறம் பெறுமாறு) மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 10 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) அடுத்தடுத்து மாற்றாக அமைக்கப்பட்டது.

(3) Subject to the provisions of this Constitution, Parliament may, by law, regulate any matter relating to, or connected with, the election of a President or Vice-President.

(4) The election of a person as President or Vice-President shall not be called in question on the ground of the existence of any vacancy for whatever reason among the members of the Electoral College electing him.]

**72. Power of President to grant pardons, etc., and to suspend, remit or commute sentences in certain cases :**

(1) The President shall have the power to grant pardons, reprieves, respites or remissions of punishments or to suspend, remit or commute the sentence of any person convicted of any offence —

(a) in all cases where the punishment or sentence is by a Court Martial;

(b) in all cases where the punishment or sentence is for an offence against any law relating to a matter to which the executive power of the Union extends;

(c) in all cases where the sentence is a sentence of death.

(2) Nothing in sub-clause *(a)* of clause (1) shall affect the power conferred by law on any officer of the Armed Forces of the Union to suspend, remit or commute a sentence passed by a Court Martial.

(3) Nothing in sub-clause (c) of clause (1) shall affect the power to suspend, remit or commute a sentence of death exercisable by the Governor[1][***] of a State under any law for the time being in force.

**73. Extent of executive power of the Union :**

(1) Subject to the provisions of this Constitution, the executive power of the Union shall extend —

(a) to the matters with respect to which Parliament has power to make laws; and

(b) to the exercise of such rights, authority and jurisdiction as are exercisable by the Government of India by virtue of any treaty or agreement:

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f.1-11-1956).

(3) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, குடியரசுத்தலைவரையோ குடியரசுத் துணைத்தலைவரையோ தேர்ந்தெடுத்தல் பற்றிய அல்லது அதன் தொடர்பான பொருட்பாடு எதனையும், நாடாளுமன்றம் சட்டத்தினால் ஒழுங்குறுத்தலாம்.

(4) குடியரசுத்தலைவராகவோ குடியரசுத் துணைத்தலைவராகவோ ஒருவர் தேர்ந்தெடுக்கப்பெற்றதை, அவரைத் தேர்ந்தெடுத்த வாக்காளர் குழாத்து உறுப்பினர்களிடையே ஏதோ ஒரு காரணத்தால் காலியிடம் எதுவும் இருந்தது என்பதை ஆதாரமாகக் கொண்டு எதிர்த்து வாதிடுதல் ஆகாது.]

**72. குறித்தசில நேர்வுகளில் குற்றமன்னிப்புகள் முதலியவை அளிப்பதற்கும் மற்றும் தீர்ப்புத்தண்டனைகளைத் தற்காலிகமாக நிறுத்திவைப்பதற்கு, இறுத்தல் செய்வதற்கு அல்லது மாற்றிக்குறைப்பதற்கும் குடியரசுத்தலைவருக்குள்ள அதிகாரம் :**

(1) (அ) படைத்துறையாட்சி நீதிமன்றத்தால் தண்டனை அல்லது தீர்ப்புத்தண்டனை விதிக்கப்படுகிற அனைத்து நேர்வுகளிலும்;

(ஆ) ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரம் அளாவும் ஒரு பொருட்பாடு பற்றிய சட்டத்திற்கு எதிரான ஒரு குற்றச்செயலுக்காகத் தண்டனை அல்லது தீர்ப்புத்தண்டனை விதிக்கப்படுகிற அனைத்து நேர்வுகளிலும்;

(இ) தீர்ப்புத்தண்டனை, மரணதண்டனையாகவுள்ள அனைத்து நேர்வுகளிலும்

ஒரு குற்றச்செயலுக்காகக் குற்றத்தீர்ப்பளிக்கப்பட்ட ஒருவரின் தண்டனை பொறுத்து குற்றமன்னிப்புகள் அளிக்கவும், தண்டனையை நிறுத்திவைக்கவும் அதை நிறைவேற்றுவதைத் தள்ளிவைக்கவும் அல்லது எஞ்சிய தண்டனையை இறுத்தல் செய்யவும் அல்லது தீர்ப்புத்தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்க, இறுத்தல் செய்ய அல்லது மாற்றிக்குறைக்கவும் குடியரசுத்தலைவர் அதிகாரம் உடையவர் ஆவார்.

(2). (1) ஆம் கூறின் (அ) உட்கூறிலுள்ள எதுவும், படைத்துறையாட்சி நீதிமன்றத்தால் விதிக்கப்பட்ட ஒரு தீர்ப்புத்தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்திவைப்பதற்கோ இறுத்தல் செய்வதற்கோ மாற்றிக் குறைப்பதற்கோ ஒன்றியத்தின் ஆயுதப்படைகளின் அலுவலர் எவருக்கும் சட்டத்தினால் வழங்கப்பட்ட அதிகாரத்தைப் பாதிப்பதில்லை.

(3). (1) ஆம் கூறின் (இ) உட்கூறிலுள்ள எதுவும், அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டம் எதன்படியும் ஒரு மரணதண்டனையைத் தற்காலிகமாக நிறுத்திவைக்க, இறுத்தல் செய்ய அல்லது மாற்றிக்குறைக்க மாநில ஆளுநர்[1][***] ஒருவர் செலுத்தத்தக்க அதிகாரத்தைப் பாதிப்பதில்லை.

**73. ஒன்றியத்து ஆட்சி அதிகாரத்தின் அளாவுகை :**

(1) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு —

(அ) சட்டங்களை இயற்றுவதற்கு நாடாளுமன்றம் அதிகாரம் கொண்டுள்ள பொருட்பாடுகளையும்,

(ஆ) உடன்படிக்கை அல்லது உடன்பாடு ஒன்றின் காரணமாக இந்திய அரசு செலுத்துவதாகும் உரிமைகள், பெற்ற அதிகாரம், உற்ற அதிகாரம் ஆகியவற்றைச் செலுத்துவதையும்

ஒன்றியத்து ஆட்சி அதிகாரம் அளாவி நிற்கும்:

---

1. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

Provided that the executive power referred to in sub-clause (a) shall not, save as expressly provided in this Constitution or in any law made by Parliament, extend in any State[1][***] to matters with respect to which the Legislature of the State has also power to make laws.

(2) Until otherwise provided by Parliament, a State and any officer or authority of a State may, notwithstanding anything in this article, continue to exercise in matters with respect to which Parliament has power to make laws for that State such executive power of functions as the State or officer or authority thereof could exercise immediately before the commencement of this Constitution.

## COUNCIL OF MINISTERS

### 74. Council of Ministers to aid and advise President :

[2][(1) There shall be a Council of Ministers with the Prime Minister at the head to aid and advise the President who shall, in the exercise of his functions, act in accordance with such advice:]

[3][Provided that the President may require the Council of Ministers to reconsider such advice, either generally or otherwise, and the President shall act in accordance with the advice tendered after such reconsideration.]

(2) The question whether any, and if so what, advice was tendered by Ministers to the President shall not be inquired into in any court.

### 75. Other provisions as to Ministers :

(1) The Prime Minister shall be appointed by the President and the other Ministers shall be appointed by the President on the advice of the Prime Minister.

[4][(1A) The total number of Ministers, including the Prime Minister, in the Council of Ministers shall not exceed fifteen percent of the total number of members of the House of the People.

---

1. The words and letters "specified in Part A or Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 13 (w.e.f. 3-1-1977).

3. Ins. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 11 (w.e.f. 20-6-1979).

4. Ins. by the Constitution (Ninety-first Amendment) Act, 2003, s. 2 (w.e.f. 1-1-2004).

வரம்புரையாக : (அ) உட்கூறில் சுட்டப்பட்ட ஆட்சி அதிகாரமானது, இந்த அரசமைப்பிலோ நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் ஒன்றிலோ தெரிநிலையாக வகைசெய்யப்படிருந்தால் அன்றி, சட்டங்கள் இயற்றுவதற்கு ஒரு மாநிலச் சட்டமன்றமும் அதிகாரம் கொண்டுள்ள பொருட்பாடுகளைப் பொறுத்து,[1][***] அந்த மாநிலத்தில் அளாவி நிற்றல் ஆகாது.

(2) இந்த உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், நாடாளுமன்றத்தால் பிறவாறு வகை செய்யப்படும் வரையில் ஒரு மாநிலமும் அந்த மாநிலத்தின் அலுவலர் எவரும் அல்லது அதிகாரஅமைப்பு எதுவும் அந்த மாநிலத்திற்காகச் சட்டங்கள் இயற்ற நாடாளுமன்றம் அதிகாரம் கொண்டுள்ள பொருட்பாடுகளைப் பொறுத்து இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு செலுத்தக்கூடியதாக இருந்த ஆட்சி அதிகாரத்தையோ பதவிப்பணிகளையோ அந்த மாநிலம் அல்லது அதன் அலுவலர் அல்லது அதிகாரஅமைப்பு தொடர்ந்து செலுத்தி வரலாம்.

## அமைச்சரவை

**74. குடியரசுத்தலைவருக்கு அமைச்சரவை உறுதுணையாக இருத்தலும் தேர்வுரை வழங்குதலும் :**

[2][(1) குடியரசுத்தலைவருக்கு உறுதுணையாக இருப்பதற்கும் தேர்வுரை வழங்குவதற்கும் தலைமை அமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சரவை ஒன்று இருத்தல் வேண்டும்; குடியரசுத்தலைவர் தம் பதவிப்பணிகளை ஆற்றுகையில் அத்தகைய தேர்வுரைக்கு இணங்கச் செயல்படுதல் வேண்டும் :]

[3][வரம்புரையாக : குடியரசுத்தலைவர் அத்தகைய தேர்வுரையைப் பொதுவாக அல்லது பிறவாறு மறுபடியும் ஓர்வு செய்யுமாறு அமைச்சரவையை வேண்டுறுத்தலாம்; அத்தகைய மறு ஓர்வுக்குப் பின்பு வழங்கப்படும் தேர்வுரைக்கு இணங்கக் குடியரசுத்தலைவர் செயல்படுதல் வேண்டும்.]

(2) குடியரசுத்தலைவருக்கு அமைச்சர்கள் தேர்வுரை எதுவும் வழங்கினார்களா, அவ்வாறாயின் அது யாது என்பது பற்றி நீதிமன்றம் எதிலும் விசாரிக்கப்படுதல் ஆகாது.

**75. அமைச்சர்களைப் பற்றிய பிற வகையங்கள் :**

(1) தலைமை அமைச்சர், குடியரசுத்தலைவரால் பதவியில் அமர்த்தப்பெறுவார்; பிற அமைச்சர்கள், தலைமை அமைச்சரின் தேர்வுரையின்படி குடியரசுத்தலைவரால் பதவியில் அமர்த்தப்பெறுவர்.

[4][(1 (அ)) அமைச்சரவையில் தலைமை அமைச்சர் உள்ளடங்கலான அமைச்சர்களின் மொத்த எண்ணிக்கை, மக்களவை உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் பதினைந்து விழுக்காட்டிற்கு மேற்படுதல் ஆகாது.

---

1. ''முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) அல்லது பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட'' என்ற சொற்கள் மற்றும் எழுத்துக்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.
2. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 13 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
3. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 11 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. அரசமைப்புச் (தொண்ணூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 2 ஆம் பிரிவினால் (1–1–2004 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(1B) A member of either House of Parliament belonging to any political party who is disqualified for being a member of that House under paragraph 2 of the Tenth Schedule shall also be disqualified to be appointed as a Minister under clause (1) for duration of the period commencing from the date of his disqualification till the date on which the term of his office as such member would expire or where he contests any election to either House of Parliament before the expiry of such period, till the date on which he is declared elected, whichever is earlier.]

(2) The Ministers shall hold office during the pleasure of the President.

(3) The Council of Ministers shall be collectively responsible to the House of the People.

(4) Before a Minister enters upon his office, the President shall administer to him the oaths of office and of secrecy according to the forms set out for the purpose in the Third Schedule.

(5) A Minister who for any period of six consecutive months is not a member of either House of Parliament shall at the expiration of that period cease to be a Minister.

(6) The salaries and allowances of Ministers shall be such as Parliament may from time to time by law determine and, until Parliament so determines, shall be as specified in the Second Schedule.

## THE ATTORNEY-GENERAL FOR INDIA

### 76. Attorney-General for India :

(1) The President shall appoint a person who is qualified to be appointed a Judge of the Supreme Court to be Attorney-General for India.

(2) It shall be the duty of the Attorney-General to give advice to the Government of India upon such legal matters, and to perform such other duties of a legal character, as may from time to time be referred or assigned to him by the President, and to discharge the functions conferred on him by or under this Constitution or any other law for the time being in force.

(3) In the performance of his duties the Attorney-General shall have right of audience in all courts in the territory of India.

(4) The Attorney-General shall hold office during the pleasure of the President, and shall receive such remuneration as the President may determine.

## CONDUCT OF GOVERNMENT BUSINESS

### 77. Conduct of business of the Government of India :

(1) All executive action of the Government of India shall be expressed to be taken in the name of the President.

(1 ஆ) பத்தாம் இணைப்புப்பட்டியலின் 2 ஆம் பத்தியின்படி நாடாளுமன்ற அவையின் ஓர் உறுப்பினராக இருப்பதற்குத் தகுதிக்கேடுற்றவராக இருக்கிற அரசியல் கட்சி எதனையும் சார்ந்த அந்த அவை ஏதொன்றின் உறுப்பினர் ஒருவர் அவர் அவ்வாறு தகுதிக்கேடுற்ற தேதியிலிருந்து தொடங்கி, அத்தகைய உறுப்பினராக அவரது பதவிக் காலஅளவு கழிவுறுகிற தேதி வரையுள்ள காலஅளவு வரையில் அல்லது அந்தக் காலஅளவு கழிவுறுவதற்கு முன்பு நாடாளுமன்ற அவைகளில் ஏதாவது ஒன்றின் தேர்தல் எதிலும் அவர் போட்டியிடுகிறவிடத்து, அவர் தேர்ந்தெடுக்கப்பட்டதாக விளம்பப்படுகிற தேதி வரையில், இவற்றில் எது முந்தியதோ அதுவரையில், (1) ஆம் கூறின்படி அமைச்சராக அமர்த்தப்படுவதற்கும் தகுதிக்கேடுற்றவர் ஆவார்.]

(2) அமைச்சர்கள், குடியரசுத்தலைவர் விழையுமளவும் பதவி வகிப்பர்.

(3) அமைச்சரவை, மக்களவைக்குக் கூட்டுப் பொறுப்புடையதாக இருக்கும்.

(4) அமைச்சர் ஒருவர் தம் பதவியை ஏற்றுக்கொள்வதற்கு முன்பு, குடியரசுத்தலைவர், அவரைப் பதவியும் மறைகாப்பும் பற்றிய ஆணைமொழிகளை மூன்றாம் இணைப்புப்பட்டியலில் அதற்கென உள்ள சொன்முறைகளுக்கு இணங்க ஏற்கச்செய்தல் வேண்டும்.

(5) அமைச்சர் ஒருவர், நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலும் தொடர்ச்சியான ஏதேனுமோர் ஆறுமாதக் காலஅளவிற்கு உறுப்பினராக இல்லாவிடில், அந்தக் காலஅளவு கழிவுற்றதும் தம் அமைச்சர் பதவியை இழந்தவர் ஆவார்.

(6) அமைச்சர்களின் வரையூதியங்களும் படித்தொகைகளும் நாடாளுமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் தீர்மானிக்கிறவாறு இருக்கும், நாடாளுமன்றம் அவ்வாறு தீர்மானிக்கிற வரையில், அவை இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ளவாறு இருந்து வரும்.

## இந்தியாவின் தலைமை வழக்கறிஞர்

**76. இந்தியாவின் தலைமை வழக்கறிஞர் :**

(1) குடியரசுத்தலைவர், உச்ச நீதிமன்றத்தின் நீதிபதியாக அமர்த்தப் பெறுவதற்குத் தகுதிப்பாடுடைய ஒருவரை இந்தியாவின் தலைமை வழக்கறிஞராக அமர்த்துவார்.

(2) குடியரசுத்தலைவரால், அவ்வப்போது குறித்தனுப்பப்படும் சட்டப்பொருட்பாடுகளைப் பொறுத்து இந்திய அரசிற்கு ஆய்வுரை அளிப்பதும், அவரால் தமக்குக் குறித்தளிக்கப்படும் சட்டப்பாங்குடைய பிற கடமைகளைப் புரிவதும், இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ அல்லது நிகழுறுகாலத்தில் செல்லாற்றலிலுள்ள பிற சட்டத்தாலோ அதன் வழியாலோ தமக்கு வழங்கப்படும் பதவிப்பணிகளை ஆற்றுவதும் தலைமை வழக்கறிஞரின் கடமை ஆகும்.

(3) தலைமை வழக்கறிஞர், தம் கடமைகளைப் புரிகையில், இந்திய ஆட்சிநிலவரையிலுள்ள அனைத்து நீதிமன்றங்களிலும் வாதிடும் உரிமை உடையவர் ஆவார்.

(4) தலைமை வழக்கறிஞர், குடியரசுத்தலைவர் விழையுமளவும் பதவி வகிப்பார்; குடியரசுத்தலைவர் தீர்மானிக்கும் பணியூதியத்தைப் பெறுவார்.

## அரசின் அலுவல் நடத்துமுறை

**77. இந்திய அரசின் அலுவல் நடத்துமுறை :**

(1) இந்திய அரசின் ஆட்சித்துறை நடவடிக்கைகள் அனைத்தும், குடியரசுத்தலைவரின் பதவிப்பெயரால் எடுக்கப்படுவதாக இயம்பப்பெறுதல் வேண்டும்.

(2) Orders and other instruments made and executed in the name of the President shall be authenticated in such manner as may be specified in rules to be made by the President, and the validity of an order or instrument which is so authenticated shall not be called in question on the ground that it is not an order or instrument made or executed by the President.

(3) The President shall make rules for the more convenient transaction of the business of the Government of India, and for the allocation among Ministers of the said business.

[1][* * *]

**78. Duties of Prime Minister as respects the furnishing of information to the President, etc :**

It shall be the duty of the Prime Minister—

(a) to communicate to the President all decisions of the Council of Ministers relating to the administration of the affairs of the Union and proposals for legislation;

(b) to furnish such information relating to the administration of the affairs of the Union and proposals for legislation as the President may call for; and

(c) if the President so requires, to submit for the consideration of the Council of Ministers any matter on which a decision has been taken by a Minister but which has not been considered by the Council.

## CHAPTER II – PARLIAMENT

## GENERAL

**79. Constitution of Parliament :**

There shall be a Parliament for the Union which shall consist of the President and two Houses to be known respectively as the Council of States and the House of the People.

**80. Composition of the Council of States :**

(1) [2][[3]***The Council of States] shall consist of –

1. Cl. *(4)* was ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 14 (w.e.f. 3-1-1977) and omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 12 (w.e.f. 20-6-1979).
2. Subs. by the Constitution (Thirty-fifth Amendment) Act, 1974, s. 3, for "The Council of States" (w.e.f. 1-3-1975).
3. The words "Subject to the provisions of paragraph 4 of the Tenth Schedule," omitted by the Constitution (Thirty-sixth Amendment) Act, 1974, s. 5 (w.e.f. 26-4-1975).

(2) குடியரசுத்தலைவரின் பதவிப்பெயரால் பிறப்பிக்கப்படும் ஆணைகளும் ஆக்கப்படும் முறையாவணங்களும், குடியரசுத்தலைவர் வகுக்கும் விதிகளில் குறித்துரைக்கப்படும் முறையில் உறுதிச்சான்றிடப்படுதல் வேண்டும்; அவ்வாறு உறுதிச்சான்றிடப்பட்ட ஆணை அல்லது முறையாவணம் குடியரசுத் தலைவரால் பிறப்பிக்கப்பட்ட ஆணை அல்லது ஆக்கப்பட்ட முறையாவணம் அன்று என்னும் காரணங்காட்டி, அதன் செல்லுந்தன்மையை எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

(3) குடியரசுத்தலைவர், இந்திய அரசின் அலுவல்கள் மேலும் இசைவுற நடைபெறுவதற்காகவும், அந்த அலுவல்களை அமைச்சர்களிடையே பகிர்ந்து ஒதுக்குவதற்காகவும் விதிகளை வகுப்பார்.

[1][* * *]

**78. குடியரசுத்தலைவருக்குத் தகவல் தருவது முதலியவை பொறுத்துத் தலைமை அமைச்சருக்குள்ள கடமைகள் :**

பின்வருவன தலைமை அமைச்சரின் கடமைகள் ஆகும் –

(அ) ஒன்றியத்து அலுவல் நடவடிக்கைகளை நிருவகித்தல் தொடர்பாக அமைச்சரவையின் முடிபுகள் மற்றும் சட்டமியற்றுவதற்கான செயற்குறிப்புகள் அனைத்தையும் குடியரசுத்தலைவருக்குத் தெரிவித்தல்;

(ஆ) ஒன்றியத்து அலுவல் நடவடிக்கைகளை நிருவகித்தல் மற்றும் சட்டமியற்றுவதற்கான செயற்குறிப்புகள் தொடர்பாகக் குடியரசுத் தலைவர் கேட்டனுப்பும் தகவலைத் தருதல்; மற்றும்

(இ) ஓர் அமைச்சரால் முடிபு எடுக்கப்பட்டு, ஆனால் அமைச்சரவையால் ஓர்வு செய்யப்பட்டிராத பொருட்பாடு எதனையும், ஓர்வுக்காக அமைச்சரவையின் முன்வைக்குமாறு குடியரசுத்தலைவர் வேண்டுறுத்துவாராயின், அவ்வாறு செய்தல்.

## அத்தியாயம் II – நாடாளுமன்றம்

### பொதுவியல்

**79. நாடாளுமன்றத்தின் அமைப்பு :**

ஒன்றியத்திற்கென நாடாளுமன்றம் ஒன்று இருக்கும்; அது, குடியரசுத்தலைவரையும் மாநிலங்களவை, மக்களவை எனப்படும் இரண்டு அவைகளையும் கொண்டதாக இருக்கும்.

**80. மாநிலங்களவையின் கட்டமைப்பு :**

(1) [2][[3]***மாநிலங்களவை]–

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 14 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) (4) ஆம் கூறு புகுத்தப்பட்டது; மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 12 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.
2. "மாநிலங்களவை" என்பதற்கு, அரசமைப்புச் (முப்பத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1974 இன் 3 ஆம் பிரிவினால் (1–3–1975 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "பத்தாம் இணைப்புப்பட்டியலின் 4 ஆம் பத்தியின் வகையங்களுக்கு உட்பட்டு" என்ற சொற்கள், அரசமைப்புச் (முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1974 இன் 5 ஆம் பிரிவினால் ( 26–4–1975 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

(a) twelve members to be nominated by the President in accordance with the provisions of clause (3);and

(b) not more than two hundred and thirty-eight representatives of the States [1][and of the Union territories.]

(2) The allocation of seats in the Council of States to be filled by representatives of the States [1][and of the Union territories] shall be in accordance with the provisions in that behalf contained in the Fourth Schedule.

(3) The members to be nominated by the President under sub-clause (a) of clause (1) shall consist of persons having special knowledge or practical experience in respect of such matters as the following,namely:—

Literature, science, art and social service.

(4) The representatives of each State[2]*** in the Council of States shall be elected by the elected members of the Legislative Assembly of the State in accordance with the system of proportional representation by means of the single transferable vote.

(5) The representatives of the [3][Union territories] in the Council of States shall be chosen in such manner as Parliament may by law prescribe.

**[4][81. Composition of the House of the People :**

(1) [5][Subject to the provision of article 331[6]***], the House of the People shall consist of —

(a) not more than [7][five hundred and thirty members] chosen by direct election from territorial constituencies in the States,and

(b) not more than [8][twenty members] to represent the Union territories, chosen in such manner as Parliament may by law provide.

---

1. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 3 (w.e.f. 1-11-1956).
2. The words and letters "specified in Part A and Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 3 (w.e.f. 1-11-1956).
3. Subs. by *ibid.*, for "States specified in Part C of the First Schedule".
4. Subs. by *ibid.*, s. 4, for arts. 81 and 82.
5. Subs. by the Constitution (Thirty-fifth Amendment) Act, 1974, s. 4, for "Subject to the provisions of article 331" (w.e.f. 1-3-1975).
6. The words and figure "and paragraph 4 of the Tenth Schedule," omitted by the Constitution (Thirty-sixth Amendment) Act, 1975, s. 5 (w.e.f. 26-4-1975).
7. Subs. by the Goa, Daman and Diu Reorganisation Act, 1987 (18 of 1987), s. 63, for "five hundred and twenty-five members",(w.e.f. 30-5-1987).
8. Subs. by the Constitution (Thirty-first Amendment) Act, 1973, s. 2, for "twenty-five members" (w.e.f. 17-10-1973).

(அ) (3) ஆம் கூறின் வகையங்களுக்கு இணங்க, குடியரசுத்தலைவரால் நியமனம் செய்யப்பெறும் உறுப்பினர்கள் பன்னிருவரையும்,

(ஆ) மாநிலங்கள், [1][மற்றும் ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள்] இவற்றின் சார்பாற்றுநர்களாக இருநூற்று முப்பத்தெட்டுக்கு மேற்படாதவர்களையும்

கொண்டதாக இருக்கும்.

(2) மாநிலங்கள், [1][மற்றும் ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள்] இவற்றின் சார்பாற்றுநர்களால் மாநிலங்களவையில் நிரப்பப்பட வேண்டிய பதவியிடங்களைப் பகிர்ந்து ஒதுக்குதல், நான்காம் இணைப்புப்பட்டியலில் இதற்கென வகை செய்யப்பட்டுள்ளவாறு இருக்கும்.

(3). (1) ஆம் கூறின் (அ) உட்கூறின்படி குடியரசுத்தலைவரால் நியமனம்செய்யப்பெறும் உறுப்பினர்கள், பின்வருவன போன்ற பொருட்பாடுகளைப் பொறுத்துச் சிறந்த தனியறிவோ செயலுறுபட்டறிவோ உடையவர்களாக இருத்தல் வேண்டும், அவையாவன:–

இலக்கியம், அறிவியல், கலை மற்றும் சமுதாயப் பணி.

(4) மாநிலங்களவையிலுள்ள[2]*** ஒவ்வொரு மாநிலத்தின் சார்பாற்றுநர்களும், அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையின் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களால் ஒற்றைமாற்று வாக்குவழியிலான வீதச்சார்பாற்ற முறைக்கிணங்கத் தேர்ந்தெடுக்கப்பெறுவர்.

(5) மாநிலங்களவையிலுள்ள [3][ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளின்] சார்பாற்றுநர்கள், நாடாளுமன்றம் சட்டத்தினால் வகுத்துரைக்கும் முறையில் தெரிந்தெடுக்கப்பெறுவர்.

[4][**81. மக்களவையின் கட்டமைப்பு :**

(1). [5][331 ஆம் உறுப்பின்[6]*** வகையங்களுக்கு உட்பட்டு], மக்களவை –

(அ) மாநிலங்களிலுள்ள நிலவரைத்தேர்தல் தொகுதிகளிலிருந்து நேரடித் தேர்தல் வாயிலாகத் தெரிந்தெடுக்கப்பெறும் [7][ஐந்நூற்று முப்பதுக்கு] மேற்படாத [7][உறுப்பினர்களையும், ] மற்றும்

(ஆ) ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளின் சார்பாற்றத்திற்காக நாடாளுமன்றம், சட்டத்தின் வழி, வகைசெய்யும் முறையில் தெரிந்தெடுக்கப்பெறும் [8][இருபதுக்கு] மேற்படாத [8][உறுப்பினர்களையும்]

கொண்டதாக இருக்கும்.

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 3 ஆம் பிரிவினால் ( 1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) மற்றும் பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள் மற்றும் எழுத்துக்கள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 3 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.
3. "முதலாவது இணைப்புப்பட்டியலின் பகுதி (இ) இல் குறித்துரைக்கப்பட்ட மாநிலங்களின்" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.
4. 81 மற்றும் 82 ஆம் உறுப்புகளுக்கு, *மேற்படிச் சட்டத்தின்* 4 ஆம் பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டன.
5. "331 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு" என்பதற்கு, அரசமைப்புச் (முப்பத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1974 இன் 4 ஆம் பிரிவினால் (1–3–1975 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
6. " மற்றும் பத்தாவது இணைப்புப்பட்டியலின் 4 ஆம் பத்தி'' என்ற சொற்கள் மற்றும் எண், அரசமைப்புச் (முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 5 ஆம் பிரிவினால் (26–4–1975 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.
7. "ஐநூற்றி இருபத்து ஐந்து உறுப்பினர்கள்" என்பதற்கு, கோவா, தமண் மற்றும் டையூ மறுசீரமைப்புச் சட்டம், 1987 (18/1987) இன் 63 ஆம் பிரிவினால் (30–5–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
8. "இருபத்து ஐந்து உறுப்பினர்கள்" என்பதற்கு, அரசமைப்புச் (முப்பத்து ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1973 இன் 2 ஆம் பிரிவினால் (17–10–1973 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(2) For the purposes of sub-clause (a) of clause (1),—

(a) there shall be allotted to each State a number of seats in the House of the People in such manner that the ratio between that number and the population of the State is, so far as practicable, the same for all States; and

(b) each State shall be divided into territorial constituencies in such manner that the ratio between the population of each constituency and the number of seats allotted to it is,so far as practicable,the same through out the State:

[1][Provided that the provisions of sub-clause (a) of this clause shall not be applicable for the purpose of allotment of seats in the House of the People to any State so long as the population of that State does not exceed six millions.]

(3) In this article, the expression "population" means the population as ascertained at the last preceding census of which the relevant figures have been published:

[2][Provided that the reference in this clause to the last preceding census of which the relevant figures have been published shall, until the relevant figures for the first census taken after the year [3][2026] have been published.

[4][be construed,—

(i) for the purposes of sub-clause (a) of clause (2) and the proviso to that clause, as a reference to the 1971 census;and

(ii) for the purposes of sub-clause (b) of clause (2) as a reference to the [5][2001] census.]]

**82. Readjustment after each census :**

Upon the completion of each census, the allocation of seats in the House of the People to the States and the division of each State into territorial constituencies shall be readjusted by such authority and in such manner as Parliament may by law determine:

Provided that such readjustment shall not affect representation in the House of the People until the dissolution of the then existing House:

---

1. Ins. by the Constitution (Thirty-first Amendment) Act, 1973.
2. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 15 (w.e.f. 3-1-1977).
3. Subs. by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 3, for "2000" (w.e.f 21-2-2002).
4. Subs. by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 3, for certain words (w.e.f. 21-2-2002).
5. Subs. by the Constitution (Eighty-seventh Amendment) Act, 2003, s. 2, for "1991" (w.e.f 22-6-2003).

(2). (1) ஆம் கூறின் (அ) உட்கூறினைப் பொறுத்தவரை—

(அ) ஒவ்வொரு மாநிலத்திற்கும் மக்களவையில் பகிர்ந்து ஒதுக்கப்படும் பதவியிடங்களின் எண்ணிக்கைக்கும் அந்தந்த மாநிலத்தின் மக்கள்தொகைக்கும் உள்ள விகிதம், இயலுமளவு, மாநிலங்கள் அனைத்திற்கும் ஒருபடித்தாய் இருக்கும் வண்ணம், மாநிலம் ஒவ்வொன்றுக்கும் மக்களவையில் பதவியிடங்கள் பகிர்ந்து ஒதுக்கப்படுதல் வேண்டும்; மற்றும்

(ஆ) மாநிலத்தின் தேர்தல்தொகுதி ஒவ்வொன்றின் மக்கள்தொகைக்கும், அதற்குப் பகிர்ந்து ஒதுக்கப்படும் பதவியிடங்களின் எண்ணிக்கைக்கும் உள்ள விகிதம், இயலுமளவு, மாநிலம் எங்கணும் ஒருபடித்தாய் இருக்கும் வண்ணம், மாநிலம் ஒவ்வொன்றும் நிலவரைத்தேர்தல் தொகுதிகளாகப் பிரிக்கப்படுதல் வேண்டும் :

[1][வரம்புரையாக : மக்களவையில் எந்த மாநிலத்திற்கும், பதவியிடங்களைப் பகிர்ந்து ஒதுக்குதல் பொருட்டு அந்த மாநிலத்தின் மக்கள் தொகை அறுபது இலட்சத்துக்கு மேற்படாதிருக்கும் வரையில், இந்தக் கூறின் (அ) உட்கூறின் வகையங்கள் பொருந்துதல் ஆகாது.]

(3) இந்த உறுப்பில், "மக்கள்தொகை" என்னும் சொல், கடைசிமுறை மக்கள் கணக்கெடுப்பின்படி, தொடர்புடைய விவரங்களைக் கண்டறிந்து வெளியிடப்பட்டுள்ள மக்கள்தொகை என்று பொருள்படும் :

[2][வரம்புரையாக : இந்தக் கூறில், தொடர்புடைய விவரங்கள் வெளியிடப்பட்டுள்ள கடைசிமுறை மக்கள் கணக்கெடுப்பு என்பது [3][2026] ஆம் ஆண்டிற்குப் பின்னர் முதலாவதாக எடுக்கப்படும் மக்கள் கணக்கெடுப்பின் படியாகும் தொடர்புடைய விவரங்கள், வெளியிடப்படும் வரையில்,—

[4][(i) (2) ஆம் கூறின் (அ) உட்கூறின் நோக்கங்களுக்காகவும், அந்தக் கூறின் வரம்புரையின் நோக்கத்திற்காகவும், 1971 ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பைச் சுட்டுவதாகப் பொருள் கொள்ளப்படும்; மற்றும்

(ii) (2) ஆம் கூறின் (ஆ) உட்கூறின் நோக்கங்களுக்காக [5][2001] ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பைச் சுட்டுவதாகப் பொருள் கொள்ளப்படும்.]]

**82. ஒவ்வொரு முறையும் மக்கள் கணக்கெடுப்பிற்குப் பின்பு மறுநேரமைவு செய்தல் :**

ஒவ்வொரு முறையும் மக்கள் கணக்கெடுப்பு முடிவடைவதன் மேல், மக்களவையில், மாநிலங்களுக்குப் பதவியிடங்களைப் பகிர்ந்து ஒதுக்குதலும், மாநிலம் ஒவ்வொன்றையும் நிலவரைத் தேர்தல் தொகுதிகளாகப் பிரித்தலும் நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கும் அதிகார அமைப்பாலும் முறையிலும் மறுநேரமைவு செய்யப்படுதல் வேண்டும் :

வரம்புரையாக : அத்தகைய மறுநேரமைவு, அப்போது நிலவுறும் மக்களவை கலைக்கப்படும் வரையில், மக்களவையிலுள்ள சார்பாற்றத்தைப் பாதிக்காது :

---

1. அரசமைப்புச் (முப்பத்து ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1973 ஆல் புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 15 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. "2000" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 3 ஆம் பிரிவினால் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
4. குறித்தசில சொற்களுக்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 3 ஆம் பிரிவினால் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டன.
5. "1991" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 2 ஆம் பிரிவினால் (22–6–2003 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

Provided further that such readjustment shall take effect from such date as the President may, by order, specify and until such readjustment takes effect, any election to the House may be held on the basis of the territorial constituencies existing before such readjustment:

Provided also that until the relevant figures for the first census taken after the year [1][2026] have been published, it shall not be necessary to —

[2][ readjust —

(i) the allocation of seats in the House of the People to the States as readjusted on the basis of the 1971 census; and

(ii) the division of each State into territorial constituencies as may be readjusted on the basis of the [3][2001] census,

under this article.]

**83. Duration of Houses of Parliament :**

(1) The Council of States shall not be subject to dissolution, but as nearly as possible one-third of the members thereof shall retire as soon as may be on the expiration of every second year in accordance with the provisions made in that behalf by Parliament by law.

(2) The House of the People, unless sooner dissolved, shall continue for [4][five years] from the date appointed or its first meeting and no longer and the expiration of the said period of [4][five years] shall operate as dissolution of the House:

Provided that the said period may, while a Proclamation of Emergency is in operation, be extended by Parliament by law for a period not exceeding one year at a time and not extending in any case beyond a period of six months after the Proclamation has ceased to operate.

**84. Qualification for membership of Parliament :**

A person shall not be qualified to be chosen to fill a seat in Parliament unless he —

[5][(a) is a citizen of India, and makes and subscribes before some person authorised in that behalf by the Election Commission an oath or affirmation according to the form set out for the purpose in the Third Schedule;]

---

1. Subs. by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 4, for "2000" (w.e.f. 21-2-2002).
2. Subs. by *ibid.*,for certain words.
3. Subs. by the Constitution (Eighty-seventh Amendment) Act, 2003, s. 3, for "1991" (w.e.f. 22-6-2003).
4. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 13, for "six years" (w.e.f. 20-6-1979). The words"six years". were subs. for the original words "five years" by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 17 (w.e.f. 3-1-1977).
5. Subs. by the Constitution (Sixteenth Amendment) Act, 1963, s. 3 (w.e.f. 5-10-1963).

மேலும் வரம்புரையாக : அத்தகைய மறுநேரமைவு, குடியரசுத்தலைவர் ஆணையின்வழி, குறித்துரைக்கும் தேதியிலிருந்து செல்திறம் பெறும், அத்தகைய மறுநேரமைவு செல்திறம் பெறும் வரையில், அந்த அவைக்கான தேர்தல் எதுவும், அத்தகைய மறுநேரமைவுக்கு முன்பு நிலவிய நிலவரைத் தேர்தல் தொகுதிகளின் அடிப்படையில் நடத்தப்படலாம்.

**இன்னும் வரம்புரையாக :** [1][2026] ஆம் ஆண்டிற்குப் பின்னர் முதலாவதாக எடுக்கப்படும் மக்கள் கணக்கெடுப்பின்படி மக்கள் தொகை விவரங்கள் வெளியிடப்படும் வரையில் –

[2][(i) 1971 ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பின்படி மறுநேரமைவு செய்யப்பட்டவாறு, மாநிலங்களுக்கு மக்களவையில் பதவியிடங்கள் பகிர்ந்து ஒதுக்குவதையும்,

(ii) [3][2001] ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பின்படி மறுநேரமைவு செய்யப்படலாகிறவாறு, மாநிலம் ஒவ்வொன்றையும் நிலவரைத்தேர்தல் தொகுதிகளாகப் பிரிப்பதையும்

இந்த உறுப்பின்படி மறுநேரமைவு] செய்யவேண்டிய தேவையில்லை.

**83. நாடாளுமன்ற அவைகளின் காலவரை :**

**(1)** மாநிலங்களவை கலைப்புக்கு உள்ளாவதில்லை; ஆனால், நாடாளுமன்றம் சட்டத்தினால் இதன்பொருட்டு வகுக்கும் வகையங்களுக்கு இணங்க ஒவ்வோர் இரண்டாம் ஆண்டும் கழிவுறுவதன் மேல், கூடியவிரைவில், அந்த அவையின் உறுப்பினர்களில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பகுதியினர் விலகிவிடுதல் வேண்டும்.

**(2)** மக்களவை, அது முன்னதாகவே கலைக்கப்பட்டாலன்றி, அதன் முதல் கூட்டத்திற்காகக் குறிக்கப்பட்ட தேதியிலிருந்து [4][ஐந்தாண்டுகள்] தொடர்ந்து இருக்கும்; அதற்குமேல் நீடித்தல் ஆகாது. மேற்சொன்ன [4][ஐந்தாண்டுக்] காலஅளவு கழிவுறுங்கால், அந்த அவை கலைக்கப்பட்டதாக ஆகிவிடும் :

**வரம்புரையாக:** நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டில் இருக்குங்கால், மேற்சொன்ன காலஅளவை, ஒரு தடவையில் ஓர் ஆண்டுக்கு மேற்படாமலும், எந்நேர்விலும், அந்தச் சாற்றாணை செயற்பாடு அற்றுப்போன பின்பு ஆறுமாதக் காலஅளவிற்கு மேற்படாமலும், நாடாளுமன்றம் சட்டத்தினால் நீட்டிக்கலாம்.

**84. நாடாளுமன்ற உறுப்பினர் பதவிக்கான தகுதிப்பாடு :**

ஒருவர்—

[5][(அ) இந்தியக் குடிமகனாக இருக்கிறார் என்பதுடன், தேர்தல் ஆணையத்தால் அதன்பொருட்டு அதிகாரமளிக்கப்பெற்றுள்ள ஒருவர் முன்னிலையில், மூன்றாம் இணைப்புப்பட்டியலில் உள்ள சொன்முறைக்கிணங்க ஓர் ஆணைமொழியை அல்லது உறுதிமொழியை ஏற்றுக் கையொப்பமிட்டவராகவும்,]

---

1. "2000" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 4 ஆம் பிரிவினால் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. குறித்தசில சொற்களுக்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டன.

3. "1991" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 3 ஆம் பிரிவினால் (22–6–2003 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

4. "ஆறு ஆண்டுகள்" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 13 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. "ஐந்து ஆண்டுகள்" என்று முதன்முதலில் இருந்த சொற்களுக்கு "ஆறு ஆண்டுகள்" என்ற சொற்கள், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 17 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டன.

5. அரசமைப்புச் (பதினாறாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 3 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

(b) is,in the case of a seat in the Council of States,not less than thirty years of age and, in the case of a seat in the House of the People, not less than twenty-five years of age; and

(c) possesses such other qualifications as may be prescribed in that behalf by or under any law made by Parliament.[1]

**[1][85. Sessions of Parliament, prorogation and dissolution :**

(1) The President shall from time to time summon each House of Parliament to meet at such time and place as he thinks fit, but six months shall not intervene between its last sitting in one session and the date appointed for its first sitting in the next session.

(2) The President may from time to time —

(a) prorogue the Houses or either House;

(b) dissolve the House of the People.]

**86. Right of President to address and send messages to Houses :**

(1) The President may address either House of Parliament or both Houses assembled together, and for that purpose require the attendance of members.

(2) The President may send messages to either House of Parliament, whether with respect to a Bill then pending in Parliament or otherwise, and a House to which any message is so sent shall with all convenient despatch consider any matter required by the message to be taken into consideration.

**87. Special address by the President :**

(1) At the commencement of [2][the first session after each general election to the House of the People and at the commencement of the first session of each year] the President shall address both Houses of Parliament assembled together and inform Parliament of the causes of its summons.

(2) Provision shall be made by the rules regulating the procedure of either House for the allotment of time for discussion of the matters referred to in such address[3]***.

---

1. Subs. by the Constitution (First Amendment) Act, 1951, s. 6 (w.e.f 18-6-1951).
2. Subs. by *ibid.*, s. 7, for "every session".
3. The words "and for the precedence of such discussion over other business of the House" omitted by *ibid.*

(ஆ) மாநிலங்களவையிலுள்ள பதவியிடமாக இருப்பின் முப்பது வயதிற்குக் குறையாதவராகவும், மக்களவையிலுள்ள பதவியிடமாக இருப்பின் இருபத்தைந்து வயதிற்குக் குறையாதவராகவும்,

(இ) நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தாலோ அதன் வழியாலோ அதன்பொருட்டு வகுத்துரைக்கப்படும் பிற தகுதிப்பாடுகளை உடையவராகவும்

இருந்தாலன்றி, அவர் நாடாளுமன்றப் பதவியிடம் ஒன்றில் அமர்வதற்கெனத் தெரிந்தெடுக்கப் பெறுவதற்குத் தகுதிப்பாடு உடையவர் ஆகார்.

[1][**85. நாடாளுமன்றக் கூட்டத் தொடர்கள், அக்கூட்டத் தொடர்களை இறுதி செய்தல் மற்றும் கலைத்தல் :**

(1) குடியரசுத்தலைவர், தாம் தக்கதெனக் கருதும் காலத்திலும் இடத்திலும் கூடுமாறு அவ்வப்போது நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றுக்கும் அழைப்பு விடுப்பார்; ஆனால், ஒரு கூட்டத் தொடரின் கடைசி அமர்வுக்கும், அடுத்த கூட்டத்தொடரின் முதல் அமர்வுக்கெனக் குறிப்பிடப்படும் தேதிக்கும் இடையேயுள்ள காலஅளவு ஆறு மாதங்களுக்குக் குறைவாகவே இருத்தல் வேண்டும்.

(2) குடியரசுத்தலைவர், அவ்வப்போது –

(அ) ஈரவைகளின் அல்லது ஈரவைகளில் ஒன்றின் கூட்டத் தொடரினை இறுதிசெய்யலாம்;

(ஆ) மக்களவையைக் கலைத்துவிடலாம்.]

**86. நாடாளுமன்ற அவைகளில் உரையாற்றவும் அவற்றிற்குச் செய்தியுரை அனுப்பவும் குடியரசுத்தலைவருக்குள்ள உரிமை :**

(1) குடியரசுத்தலைவர் நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றில் அல்லது ஈரவைகளின் ஒருங்கமர் கூட்டத்தில் உரையாற்றலாம்; மேலும், அதற்காக உறுப்பினர்களின் வருகையை வேண்டுறுத்தலாம்.

(2) குடியரசுத்தலைவர், நாடாளுமன்றத்தில் அப்போது ஓர்விலுள்ள ஒரு சட்டமுன்வடிவைப் பொறுத்தோ பிற எதனையும் பொறுத்தோ நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் எதற்கும் செய்தியுரை அனுப்பலாம்; அவ்வாறான செய்தியுரையினைப் பெற்றுள்ள அவை, அச்செய்தியுரையில் ஓர்வுக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென வேண்டுறுத்தப்பட்ட பொருட்பாட்டை ஒல்லும் விரைவுடன் ஓர்வுசெய்தல் வேண்டும்.

**87. குடியரசுத்தலைவரின் சிறப்புரை :**

(1) [2][மக்களவைக்கான பொதுத்தேர்தல் ஒவ்வொன்றுக்கும் பின்பு நடைபெறும் முதல் கூட்டத்தொடரின்] தொடக்கத்திலும், [2][ஒவ்வோர் ஆண்டின் முதல் கூட்டத் தொடரின் தொடக்கத்திலும்,] நாடாளுமன்ற ஈரவைகளின் ஒருங்கமர் கூட்டத்தில் குடியரசுத்தலைவர் உரையாற்றி, அதனைக் கூட்டியதற்கான காரணங்களையும் நாடாளுமன்றத்திற்குத் தெரிவிப்பார்.

(2) அவ்வுரையில் சுட்டப்பட்ட பொருட்பாடுகளைப் பற்றி விவாதம் செய்வதற்கு[3]*** நேரம் ஒதுக்குவதற்காக, ஈரவைகளின் நெறிமுறையை ஒழுங்குறுத்தும் விதிகளின்வழி வகைசெய்யப்படுதல் வேண்டும்.

---

1. அரசமைப்புச் (ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 6 ஆம் பிரிவினால் (18–6–1951 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
2. "ஒவ்வொரு கூட்டத்தொடரின்" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தின்* 7 ஆம் பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "மற்றும் அத்தகைய விவாதம் அவையின் பிற அலுவல்கள் மீது முந்துரிமை கொள்வதற்கு" என்ற சொற்கள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

**88. Rights of Ministers and Attorney-General as respects Houses :**

Every Minister and the Attorney-General of India shall have the right to speak in,and otherwise to take part in the proceedings of,either House, any joint sitting of the Houses, and any committee of Parliament of which he may be named a member, but shall not by virtue of this article be entitled to vote.

## OFFICERS OF PARLIAMENT

**89. The Chairman and Deputy Chairman of the Council of States :**

(1) The Vice-President of India shall be *ex-Officio* Chairman of the Council of States.

(2) The Council of States shall, as soon as may be, choose a member of the Council to be Deputy Chairman thereof and, so often as the office of Deputy Chairman becomes vacant, the Council shall choose another member to be Deputy Chairman thereof.

**90. Vacation and resignation of, and removal from, the office of Deputy Chairman :**

A member holding office as Deputy Chairman of the Council of States —

(a) shall vacate his office if he ceases to be a member of the Council;

(b) may at any time, by writing under his hand addressed to the Chairman, resign his office;and

(c) may be removed from his office by a resolution of the Council passed by a majority of all the then members of the Council:

Provided that no resolution for the purpose of clause (c) shall be moved unless at least fourteen days' notice has been given of the intention to move the resolution.

**91. Power of the Deputy Chairman or other person to perform the duties of the office of, or to act as, Chairman :**

(1) While the Office of Chairman is vacant, or during any period when the Vice-President is acting as, or discharging the functions of President, the duties of the office shall be performed by the Deputy Chairman, or, if the office of Deputy Chairman is also vacant, by such member of the Council of States as the President may appoint for the purpose.

(2) During the absence of the Chairman from any sitting of the Council of States the Deputy Chairman, or, if he is also absent, such person as may be determined by the rules of procedure of the Council, or, if no such person is present, such other person as may be determined by the Council, shall act as Chairman.

**88.** நாடாளுமன்ற அவைகள் தொடர்பாக அமைச்சர்களுக்கும் தலைமை வழக்கறிஞருக்கும் உள்ள உரிமைகள் :

அமைச்சர் ஒவ்வொருவரும், இந்தியத் தலைமை வழக்கறிஞரும், ஈரவைகளில் எதிலும் அல்லது அவைகளின் கூட்டு அமர்வு எதிலும் அல்லது தாம் உறுப்பினராகக் குறிக்கப்பெறும் நாடாளுமன்றக் குழு எதிலும் உரையாற்றவும் பிறவகையில் அதன் நடவடிக்கைகளில் பங்குகொள்ளவும் உரிமை உடையவர் ஆவார்; ஆனால், இந்த உறுப்பின் பயன்திறனை வைத்து அவர் வாக்களிக்கும் உரிமை கொண்டவர் ஆகார்.

நாடாளுமன்றப் பதவியாளர்கள்

**89.** மாநிலங்களவைத் தலைவரும், துணைத் தலைவரும் :

(1) இந்தியக் குடியரசுத் துணைத்தலைவர் தம் பதவிவழியில் மாநிலங்களவைத் தலைவராக இருப்பார்.

(2) மாநிலங்களவை, அந்த அவையின் உறுப்பினர் ஒருவரை அதன் துணைத்தலைவராகக் கூடிய விரைவில் தெரிந்தெடுத்தல் வேண்டும்; மேலும், துணைத்தலைவர் பதவி காலியாகுந்தோறும் மற்றோர் உறுப்பினரை அதன் துணைத்தலைவராக அந்த அவை தெரிந்தெடுத்தல் வேண்டும்.

**90.** மாநிலங்களவைத் துணைத் தலைவர் பதவியை விட்டகலுதலும் பதவி விலகுதலும் பதவியிலிருந்து அகற்றப்படுதலும் :

மாநிலங்களவைத் துணைத் தலைவராகப் பதவி வகிக்கும் ஓர் உறுப்பினர் –

(அ) மாநிலங்களவையின் உறுப்பினராக இருப்பது அற்றுப்போய்விடின் அவர் தம் பதவியை விட்டகலுதல் வேண்டும்;

(ஆ) மாநிலங்களவைத் தலைவருக்கு எச்சமயத்திலும் தம் கையொப்பமிட்டு எழுத்து வழித் தெரிவித்து, தம் பதவியை விட்டு விலகிக்கொள்ளலாம்; மற்றும்

(இ) மாநிலங்களவையின் அப்போதைய அனைத்து உறுப்பினர்களில் பெரும்பான்மையினர் அந்த அவையில் நிறைவேற்றும் தீர்மானம் ஒன்றினால் அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம் :

**வரம்புரையாக :** (இ) கூறினைப் பொறுத்த தீர்மானம் எதுவும் அத்தீர்மானத்தை முன் மொழியவிருக்கும் கருத்தினைத் தெரிவித்துப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்புக் கொடுத்திருந்தாலன்றி, முன்மொழியப்படுதல் ஆகாது.

**91.** மாநிலங்களவைத் தலைவரின் பதவிக்குள்ள கடமைகளைப் புரிந்து வரவோ தலைவராகச் செயல்படவோ துணைத் தலைவருக்கு அல்லது பிற உறுப்பினருக்குள்ள அதிகாரம் :

(1) மாநிலங்களவைத் தலைவரின் பதவி காலியாக இருக்குங்கால் அல்லது குடியரசுத் துணைத்தலைவர் குடியரசுத்தலைவராகச் செயல்படும் காலத்தில் அல்லது குடியரசுத்தலைவரின் பதவிப்பணிகளை ஆற்றிவரும் காலத்தில், மாநிலங்களவைத் தலைவரின் பதவிக்குள்ள கடமைகளை, அவைத் துணைத் தலைவரும், அவைத் துணைத்தலைவர் பதவியும் காலியாக இருப்பின், குடியரசுத்தலைவர் அதன்பொருட்டு அமர்த்தும் மாநிலங்களவையின் உறுப்பினர் எவரும் புரிந்துவருதல் வேண்டும்.

(2) மாநிலங்களவையின் அமர்வு எதிலும் அவைத்தலைவர் இல்லாதபோது துணைத்தலைவரும், அவரும் இல்லாதிருப்பின், அவையின் நெறிமுறை விதிகளின்படி தீர்மானிக்கப்பெறும் உறுப்பினர் எவரும், அத்தகையவரும் இல்லாதிருப்பின், அவையினால் தீர்மானிக்கப்பெறும் பிற உறுப்பினர் எவரும் அவைத் தலைவராகச் செயல்படுதல் வேண்டும்.

**92. The Chairman or the Deputy Chairman not to preside while a resolution for his removal from office is under consideration :**

(1) At any sitting of the Council of States, while any resolution for the removal of the Vice-President from his office is under consideration, the Chairman, or while any resolution for the removal of the Deputy Chairman from his office is under consideration, the Deputy Chairman, shall not, though he is present, preside, and the provisions of clause (2) of article 91 shall apply in relation to every such sitting as they apply in relation to a sitting from which the Chairman, or, as the case may be, the Deputy Chairman is absent.

(2) The Chairman shall have the right to speak in, and otherwise to take part in the proceedings of, the Council of States while any resolution for the removal of the Vice-President from his office is under consideration in the Council, but, notwithstanding anything in article 100 shall not be entitled to vote at all on such resolution or on any other matter during such proceedings.

**93. The Speaker and Deputy Speaker of the House of the People :**

The House of the People shall, as soon as may be, choose two members of the House to be respectively Speaker and Deputy Speaker thereof and, so often as the office of Speaker or Deputy Speaker becomes vacant, the House shall choose another member to be Speaker or Deputy Speaker,as the case may be.

**94. Vacation and resignation of, and removal from, the offices of Speaker and Deputy Speaker :**

A member holding office as Speaker or Deputy Speaker of the House of the People —

(a) shall vacate his office if he ceases to be a member of the House of the People;

(b) may at any time, by writing under his hand addressed, if such member is the Speaker, to the Deputy Speaker, and if such member is the Deputy Speaker, to the Speaker, resign his office; and

(c) may be removed from his office by a resolution of the House of the People passed by a majority of all the the members of the House :

Provided that no resolution for the purpose of clause (c) shall be moved unless at least fourteen days' notice has been given of the intention to move the resolution:

Provided further that, whenever the House of the People is dissolved, the Speaker shall not vacate his office until immediately before the first meeting of the House of the People after the dissolution.

**92. மாநிலங்களவைத் தலைவரை அல்லது துணைத் தலைவரைப் பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின் மீது ஓர்வு நிகழும்போது அவர் தலைமை வகித்தல் ஆகாது :**

(1) மாநிலங்களவையின் அமர்வு எதிலும், குடியரசுத் துணைத்தலைவரை, அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின் மீது ஓர்வு நிகழும்போது அவைத்தலைவரும் அல்லது துணைத்தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின் மீது ஓர்வு நிகழும்போது துணைத்தலைவரும், அவர் அந்த அவையில் இருந்தபோதிலும், தலைமை வகித்தல் ஆகாது; மேலும், அத்தகைய ஒவ்வோர் அமர்வுக்கும், 91 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறின் வகையங்கள், அவைத்தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, துணைத்தலைவர் இல்லாதிருக்கிற ஓர் அமர்வுக்குப் பொருந்துவனபோன்றே பொருந்துவன ஆகும்.

(2) மாநிலங்களவையில் குடியரசுத் துணைத்தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின் மீது ஓர்வு நிகழும்போது, அவைத்தலைவர் அந்த அவையில் உரையாற்றுவதற்கும், பிற வகையில் அதன் நடவடிக்கைகளில் பங்குகொள்வதற்கும் உரிமை உடையவர் ஆவார்; மேலும், 100 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், அவர் அத்தகைய தீர்மானத்தின் மீதும் அது தொடர்பான நடவடிக்கைகளில் எழும் பிற எந்தப் பொருட்பாட்டின் மீதும் எவ்வகையிலும் வாக்களிப்பதற்கு உரிமை கொண்டவர் ஆகார்.

**93. மக்களவைத்தலைவரும் துணைத் தலைவரும் :**

மக்களவை, அந்த அவையின் உறுப்பினர்கள் இருவரை முறையே அதன் தலைவராகவும் துணைத்தலைவராகவும், கூடியவிரைவில், தெரிந்தெடுத்தல் வேண்டும்; மேலும், அவைத்தலைவர் அல்லது துணைத்தலைவர் பதவி காலியாகுந்தோறும், மற்றோர் உறுப்பினரை, அதன் தலைவராக அல்லது, நேர்வுக்கேற்ப, துணைத்தலைவராக அந்த அவை தெரிந்தெடுத்தல் வேண்டும்.

**94. மக்களவைத் தலைவர், துணைத் தலைவர் ஆகியோர் பதவியை விட்டகலுதலும் பதவி விலகுதலும் பதவியிலிருந்து அகற்றப்படுதலும் :**

மக்களவைத் தலைவராகவோ துணைத்தலைவராகவோ பதவி வகிக்கும் ஓர் உறுப்பினர் —

(அ) மக்களவையின் உறுப்பினராக இருப்பது அற்றுப்போய்விடின், அவர் தம் பதவியை விட்டகலுதல் வேண்டும்;

(ஆ) அந்த உறுப்பினர் அவைத்தலைவராக இருப்பின், துணைத் தலைவருக்கும், அந்த உறுப்பினர் துணைத்தலைவராக இருப்பின், அவைத் தலைவருக்கும், எச்சமயத்திலும், தம் கையொப்பமிட்டு எழுத்துவழித் தெரிவித்து, தம் பதவியைவிட்டு விலகிக் கொள்ளலாம்; மற்றும்

(இ) மக்களவையின் அப்போதைய அனைத்து உறுப்பினர்களில் பெரும்பான்மையினர்அந்த அவையில் நிறைவேற்றும் தீர்மானம் ஒன்றினால் அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம் :

**வரம்புரையாக :** (இ) கூறினைப் பொறுத்த தீர்மானம் எதுவும், அத்தீர்மானத்தை முன்மொழியவிருக்கும் கருத்தினைத் தெரிவித்துப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்புக் கொடுத்திருந்தாலன்றி, முன்மொழியப்படுதல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக :** மக்களவை கலைக்கப்படுந்தோறும், அவ்வாறு கலைக்கப்பட்டதன் பின்பு, அடுத்து மக்களவையின் முதல் கூட்டம் தொடங்குவதற்கு உடன்முன்பு வரையில், அவைத்தலைவர் தம் பதவியை விட்டகல வேண்டியதில்லை.

**95. Power of the Deputy Speaker or other person to perform the duties of the office of, or to act as, Speaker :**

(1) While the office of Speaker is vacant, the duties of the office shall be performed by the Deputy Speaker or, if the office of the Deputy Speaker is also vacant, by such member of the House of the People as the President may appoint for the purpose.

(2) During the absence of the Speaker from any sitting of the House of the People the Deputy Speaker or, if he is also absent, such person as may be determined by the rules of procedure of the House, or, if no such person is present, such other person as may be determined by the House,shall act as Speaker.

**96. The Speaker or the Deputy Speaker not to preside while resolution for his removal from office is under consideration :**

(1) At any sitting of the House of the People, while any resolution for the removal of the Speaker from his office is under consideration, the Speaker,or while any resolution for the removal of the Deputy Speaker from his office is under consideration, the Deputy Speaker, shall not, though he is present, preside, and the provisions of clause (2) of article 95 shall apply in relation to every such sitting as they apply in relation to a sitting from which the Speaker, or, as the case may be, the Deputy Speaker, is absent.

(2) The Speaker shall have the right to speak in, and otherwise to take part in the proceedings of, the House of the People while any resolution for his removal from office is under consideration in the House and shall, notwithstanding anything in article 100, be entitled to vote only in the first instance on such resolution or on any other matter during such proceedings but not in the case of an equality of votes.

**97. Salaries and allowances of the Chairman and Deputy Chairman and the Speaker and Deputy Speaker :**

There shall be paid to the Chairman and the Deputy Chairman of the Council of States, and to the Speaker and the Deputy Speaker of the House of the People, such salaries and allowances as may be respectively fixed by Parliament by law and, until provisions in that behalf is so made, such salaries and allowances as are specified in the Second Schedule.

**98. Secretariat of Parliament :**

(1) Each House of Parliament shall have a separate secretarial staff:

Provided that nothing in this clause shall be construed as preventing the creation of posts common to both Houses of Parliament.

**95. மக்களவைத் தலைவரின் பதவிக்குள்ள கடமைகளைப் புரிந்துவரவோ தலைவராகச் செயல்படவோ துணைத் தலைவருக்கு அல்லது பிற உறுப்பினருக்குள்ள அதிகாரம் :**

(1) மக்களவைத் தலைவரின் பதவி காலியாக இருக்குங்கால், அப்பதவிக்குள்ள கடமைகளை, அவைத் துணைத்தலைவரும், அவைத் துணைத்தலைவர் பதவியும் காலியாக இருப்பின், குடியரசுத்தலைவர் அதன்பொருட்டு அமர்த்தும் மக்களவையின் உறுப்பினர் எவரும் புரிந்து வருதல் வேண்டும்.

(2) மக்களவையின் அமர்வு எதிலும், அவைத்தலைவர் இல்லாதபோது துணைத்தலைவரும், அவரும் இல்லாதிருப்பின், அவையின் நெறிமுறை விதிகளின்படி தீர்மானிக்கப்பெறும் உறுப்பினர் எவரும், அத்தகையவரும் இல்லாதிருப்பின், அந்த அவையினால் தீர்மானிக்கப்பெறும் பிற உறுப்பினர் எவரும் அவையின் தலைவராகச் செயல்படுதல் வேண்டும்.

**96. மக்களவைத் தலைவரை அல்லது துணைத் தலைவரை பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின் மீது ஓர்வு நிகழும்போது அவர் தலைமை வகித்தல் ஆகாது :**

(1) மக்களவையில் அமர்வு எதிலும், அவைத் தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின்மீது ஓர்வு நிகழும்போது, அவைத்தலைவரும் அல்லது துணைத்தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின்மீது ஓர்வு நிகழும்போது துணைத்தலைவரும், அவர் அந்த அவையில் இருந்தபோதிலும், தலைமை வகித்தல் ஆகாது; மேலும், அத்தகைய ஒவ்வோர் அமர்வுக்கும், 95 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறின் வகையங்கள், அவைத்தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, துணைத்தலைவர் இல்லாதிருக்கிற ஓர் அமர்வுக்குப் பொருந்துவனபோன்றே பொருந்துவன ஆகும்.

(2) மக்களவையில், அவைத் தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான ஒரு தீர்மானத்தின்மீது ஓர்வு நிகழும்போது, அவைத் தலைவர் அந்த அவையில் உரையாற்றுவதற்கும், பிறவகையில் அதன் நடவடிக்கைகளில் பங்கு கொள்வதற்கும் உரிமை உடையவர் ஆவார்; மேலும், 100 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், அவர் அத்தகைய தீர்மானத்தின் மீதும், அது தொடர்பான நடவடிக்கைகளில் எழும் பிற எந்தப் பொருட்பாட்டின்மீதும் முதற்கண் மட்டுமே வாக்களிப்பதற்கு உரிமைகொண்டவர் ஆவாரேயன்றி, வாக்குகள் சமன்மையாக அமையும் நேர்வில், வாக்களிப்பதற்கு உரிமைகொண்டவர் ஆகார்.

**97. மாநிலங்களவைத் தலைவர், துணைத்தலைவர், மக்களவைத் தலைவர், துணைத்தலைவர் ஆகியோரின் வரையூதியங்களும், படித்தொகைகளும் :**

மாநிலங்களவைத் தலைவர், துணைத்தலைவர், மக்களவைத் தலைவர், துணைத்தலைவர் ஆகியோருக்கு முறையே நாடாளுமன்றம் சட்டத்தினால் நிருணயிக்கும் வரையூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்படும்; அவ்வாறு அதன்பொருட்டு வகைசெய்யப்படும் வரையில், இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்பட்டு வரும்.

**98. நாடாளுமன்றத்தின் செயலகம் :**

(1) நாடாளுமன்றத்தின் அவை ஒவ்வொன்றும் தனித்தனியே செயலகப் பணியாளர் தொகுதி ஒன்றைக் கொண்டிருக்கும்:

**வரம்புரையாக :** இந்தக் கூறிலுள்ள எதுவும், நாடாளுமன்றத்தின் ஈரவைகளுக்கும் பொதுவான பதவிகள் உருவாக்கப்படுவதைத் தடையூறு செய்வதாகப் பொருள்கொள்ளப்படுதல் ஆகாது.

(2) Parliament may by law regulate the recruitment and the conditions of service of persons appointed, to the secretarial staff of either House of Parliament.

(3) Until provisions is made by Parliament under clause (2), the President may, after consultation with the Speaker of the House of the People or the Chairman of the Council of States, as the case may be, make rules regulating the recruitment, and the conditions of service of persons appointed, to the secretarial staff of the House of the People or the Council of States, and any rules so made shall have effect subject to the provisions of any law made under the said clause.

## CONDUCT OF BUSINESS

### 99. Oath or affirmation by members :

Every member of either House of Parliament shall, before taking his seat, make and subscribe before the President, or some person appointed in that behalf by him, an oath or affirmation according to the form set out for the purpose in the Third Schedule.

### 100. Voting in Houses, power of Houses to act notwithstanding vacancies and quorum :

(1) Save as otherwise provided in this Constitution, all questions at any sitting of either House or joint sitting of the Houses shall be determined by a majority of votes of the members present and voting, other than the Speaker or person acting as Chairman or Speaker.

The Chairman or Speaker, or person acting as such, shall not vote in the first instance, but shall have and exercise a casting vote in the case of an equality of votes.

(2) Either House of Parliament shall have power to act notwithstanding any vacancy in the membership thereof, and any proceedings in Parliament shall be valid notwithstanding that it is discovered subsequently that some person who was not entitled so to do sat or voted or otherwise took part in the proceedings.

[1][(3) Until Parliament by law otherwise provides, the quorum to constitute a meeting of either House of Parliament shall be one-tenth of the total number of members of the House.

(4) If at any time during a meeting of a House there is no quorum, it shall be the duty of the Chairman or Speaker, or person acting as such, either to adjourn the House or to suspend the meeting until there is a quorum.]

---

1. Cls. (3) and (4) were omitted by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 18 (date yet to be notified).

(2) நாடாளுமன்ற ஈரவைகளில் எதனின் செயலகப் பணியாளர் தொகுதிக்கும் ஆளெடுப்பதையும், அதற்கு அமர்த்தப்பெறுபவர்களின் பணி வரைக்கட்டுகளையும் நாடாளுமன்றம் சட்டத்தினால் ஒழுங்குறுத்தலாம்.

(3). (2)ஆம் கூறின்படி நாடாளுமன்றம் வகைசெய்கிற வரையில், குடியரசுத்தலைவர், மக்களவைத் தலைவருடன் அல்லது, நேர்வுக்கேற்ப, மாநிலங்களவைத் தலைவருடன் கலந்தாய்வு செய்த பின்பு, மக்களவையின் அல்லது மாநிலங்களவையின் செயலகப் பணியாளர் தொகுதிக்கு ஆளெடுப்பதையும் அதற்கு அமர்த்தப்பெறுபவர்களின் பணிவரைக்கட்டுகளையும் ஒழுங்குறுத்தும் விதிகளை வகுக்கலாம்; மற்றும் அவ்வாறு வகுக்கப்படும் விதிகள், மேற்சொன்ன கூறின்படி இயற்றப்படும் சட்டத்தின் வகையங்களுக்கு உட்பட்டுச் செல்திறம் உடையன ஆகும்.

### அலுவல் நடத்துமுறை

**99. உறுப்பினர்களுக்குள்ள ஆணைமொழி அல்லது உறுதிமொழி :**

நாடாளுமன்ற ஈரவைகளின் உறுப்பினர் ஒவ்வொருவரும், தம் பதவியினை ஏற்று அமரும் முன்பு, குடியரசுத்தலைவரின் அல்லது அதன்பொருட்டு அவரால் அமர்த்தப்பெற்ற ஒருவரின் முன்னிலையில் மூன்றாம் இணைப்புப்பட்டியலில் அதற்கென உள்ள சொன்முறையில் ஓர் ஆணைமொழியை அல்லது உறுதிமொழியை ஏற்றுக் கையொப்பமிடுதல் வேண்டும்.

**100. நாடாளுமன்ற அவைகளில் வாக்களித்தல், காலியிடங்கள் இருந்தபோதிலும் செயல்படுவதற்கு அவைகளுக்குள்ள அதிகாரம் மற்றும் குறைவெண் :**

(1) இந்த அரசமைப்பில் பிறவாறு வகைசெய்யப்பட்டிருப்பது நீங்கலாக, ஈரவைகளில் ஒன்றின் அமர்விலோ அவைகளின் கூட்டமர்விலோ எழும் வினாக்கள் அனைத்தும், மக்களவைத் தலைவரையும், மாநிலங்களவைத் தலைவராகவோ மக்களவைத் தலைவராகவோ செயல்படுகின்றவரையும் தவிர்த்து, வந்திருந்து வாக்களிக்கும் ஏனைய உறுப்பினர்களின் பெரும்பான்மை வாக்குகளால் தீர்மானிக்கப்படுதல் வேண்டும்.

மாநிலங்களவைத் தலைவரோ மக்களவைத் தலைவரோ அல்லது அத்தகையவராகச் செயல்படுகின்றவரோ முதற்கண் வாக்களித்தல் ஆகாது; ஆனால், வாக்குகள் சமன்மையாக அமையும் நேர்வில், அவருக்கு அறுதிசெய் வாக்கு ஒன்று உண்டு; அதனை அவர் அளித்தலும் வேண்டும்.

(2) நாடாளுமன்ற ஈரவைகள் ஒவ்வொன்றிலும் உறுப்பினர் பதவியில் காலியிடம் எதுவும் இருந்தபோதிலும், அந்த அவை செயல்படுவதற்கு அதிகாரம் உடையது ஆகும்; மேலும், நாடாளுமன்ற நடவடிக்கைகளின்போது அவையில் அமர்ந்திருக்கவோ வாக்களிக்கவோ பிறவாறாகப் பங்குகொள்ளவோ உரிமை கொண்டிராத எவரும் அவ்வாறு செய்தார் எனத் தெரியவந்தபோதிலும் அந்நடவடிக்கைகள் செல்லுந்தன்மையுடையன ஆகும்.

[1][(3) நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகைசெய்கிறவரையில், நாடாளுமன்ற ஈரவைகளில் எதனின் கூட்டமும் அமைவுறுவதற்கான குறைவெண், அந்த அவையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்காக இருத்தல் வேண்டும்.

(4) ஓர் அவையின் கூட்டம் நடைபெறும்போது எச்சமயத்திலேனும் குறைவெண் இல்லாதிருப்பின், அந்த அவையை ஒத்திவைப்பதோ குறைவெண் அமைகிற வரையில் அந்தக் கூட்டத்தைத் தற்காலிகமாக நிறுத்திவைப்பதோ மாநிலங்களவைத் தலைவரின் அல்லது மக்களவைத் தலைவரின் அல்லது அத்தகையவராகச் செயல்படுகின்றவரின் கடமை ஆகும்.]

---

1. (3) மற்றும் (4) ஆம் கூறுகள், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 18 ஆம் பிரிவினால் (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்) விட்டுவிடப்பட்டன.

## DISQUALIFICATIONS OF MEMBERS

**101. Vacation of seats :**

(1) No person shall be a member of both Houses of Parliament and provision shall be made by Parliament by law for the vacation by a person who is chosen a member of both Houses of his seat in one House or the other.

(2) No person shall be a member both of Parliament and of a House of the Legislature of a State[1]***, and if a person is chosen a member both of Parliament and of a House of the Legislature of [2][a State], then, at the expiration of such period as may be specified in rules made by the President, that person's seat in Parliament shall become vacant, unless he has previously resigned his seat in the Legislature of the State.

(3) If a member of either House of Parliament—

(a) becomes subject to any of the disqualifications mentioned in [3][clause (1) or clause (2) of article 102],or

[4][(b) resigns his seat by writing under his hand addressed to the Chairman or the Speaker, as the case may be, and his resignation is accepted by the Chairman or the Speaker, as the case maybe,]

his seat shall there upon become vacant:

[5][Provided that in the case of any resignation referred to in sub-clause (b), if from information received or otherwise and after making such inquiry as he thinks fit, the Chairman or the Speaker, as the case may be, is satisfied that such resignation is not voluntary or genuine, he shall not accept such resignation.]

(4) If for a period of sixty days a member of either House of Parliament is without permission of the House absent from all meetings thereof, the House may declare his seat vacant:

Provided that in computing the said period of sixty days no account shall be taken of any period during which the House is prorogued or is adjourned for more than four consecutive days.

---

1.The words and letters "specified in Part A or Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act,1956, s.29 and Sch.(w.e.f.1-11-1956).

2. Subs.by *ibid.*, for" such a State".

3. Subs. by the Constitution (Fifty-second Amendment) Act, 1985, s. 2, for "clause *(1)* of article 102" (w.e.f. 1-3-1985).

4. Subs. by the Constitution (Thirty-third Amendment) Act, 1974, s. 2 (w.e.f. 19-5-1974).

5. Ins. by *ibid.*

## உறுப்பினர்களின் தகுதிக்கேடுகள்

**101. பதவியிடங்களை விட்டகலுதல் :**

(1) எவர் ஒருவரும் நாடாளுமன்ற ஈரவைகளிலும் உறுப்பினராக இருத்தல் ஆகாது; ஒருவர் ஈரவைகளுக்கும் உறுப்பினராகத் தெரிந்தெடுக்கப் பெற்றிருப்பாராயின், அவர், அவ்விரு அவைகளில் ஏதாவது ஒன்றில் தம் பதவியிடத்தை விட்டகலுவதற்கு நாடாளுமன்றம் சட்டத்தினால் வகைசெய்தல் வேண்டும்.

(2) எவர் ஒருவரும், நாடாளுமன்றம்,[1]*** ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் ஓர் அவை ஆகிய இரண்டிலும் உறுப்பினராக இருத்தல் ஆகாது; நாடாளுமன்றம், [2][ஒரு மாநிலச்] சட்டமன்றத்தின் ஓர் அவை ஆகிய இரண்டிற்கும் ஒருவர் தெரிந்தெடுக்கப் பெற்றிருப்பாராயின், அப்போது, குடியரசுத்தலைவரால் வகுக்கப்படும் விதிகளில் குறித்துரைக்கப்படும் காலஅளவு கழிவுறுவதற்கு முன்னரே, அவர் மாநிலச் சட்டமன்றத்திலுள்ள தம் பதவியிடத்தை விட்டு விலகியிருந்தாலன்றி, நாடாளுமன்றத்திலுள்ள அவருடைய பதவியிடம் அக் காலஅளவு கழிவுற்றதும் காலியாகிவிடும்.

(3) நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் உறுப்பினர் ஒருவர் –

(அ) [3][102 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில் அல்லது (2) ஆம் கூறில்] குறிப்பிடப்பட்ட தகுதிக்கேடுகளில் எதற்கேனும் உள்ளாகி விடுவாராயின், அல்லது

[4][(ஆ) மாநிலங்களவைத் தலைவருக்கோ, நேர்வுக்கேற்ப, மக்களவைத் தலைவருக்கோ தம் கையொப்பமிட்டு எழுத்துவழிப் பதவி விலகுவதாகத் தெரிவித்து அவ்வாறு அவர் பதவி விலகுதல் மாநிலங்களவைத் தலைவராலோ, நேர்வுக்கேற்ப, மக்களவைத் தலைவராலோ ஏற்றுக்கொள்ளப்படுமாயின்,]

அதன்மேல் அவருடைய பதவியிடம் காலியானதாகிவிடும்:

[5][**வரம்புரையாக :** (ஆ) உட்கூறில் சுட்டப்பட்ட பதவிவிலகலைப் பொறுத்தவரை, மாநிலங்களவைத் தலைவரோ, நேர்வுக்கேற்ப, மக்களவைத் தலைவரோ தாம் பெற்ற தகவலிலிருந்தும் பிறவற்றைக் கொண்டும் தாம் தக்கதெனக் கருதும் விசாரணைக்குப் பின்பு, அந்தப் பதவிவிலகல் அவரால் தம்விருப்பாகச் செய்யப்பட்டதன்று அல்லது உண்மையானதன்று எனத் தெளிவுறக் காண்பாராயின், அந்தப் பதவிவிலகலை அவர் ஏற்றுக்கொள்ளுதல் ஆகாது.]

(4) நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் உறுப்பினர் அந்த அவையின் அனுமதியின்றி அதன் அனைத்துக் கூட்டங்களுக்கும் அறுபது நாள் காலஅளவிற்கு வாராதிருப்பாராயின், அவருடைய பதவியிடம் காலியாகிவிட்டதென அந்த அவை விளம்பலாம்:

**வரம்புரையாக :** அந்த அறுபது நாள் காலஅளவைக் கணக்கிடுகையில், அந்த அவையின் கூட்டத்தொடர் இறுதிசெய்யப்பட்டிருந்த காலஅளவு அல்லது தொடர்ச்சியாக நான்கு நாட்களுக்குமேல் அந்த அவை ஒத்திவைக்கப்பட்டிருந்த காலஅளவு எதனையும் கணக்கில் எடுத்துக் கொள்ளுதல் ஆகாது.

---

1. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) அல்லது பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள் மற்றும் எழுத்துக்கள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.
2. "அத்தகைய ஒரு மாநிலம்" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "102 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில்" என்பதற்கு, அரசமைப்புச் (ஐம்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1985 இன் 2 ஆம் பிரிவினால் (1–3–1985 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
4. அரசமைப்புச் (முப்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1974 இன் 2 ஆம் பிரிவினால் (19–5–1974 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
5. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.

**102. Disqualifications for membership :**

(1) A person shall be disqualified for being chosen as, and for being, a member of either House of Parliament —

[1][(a) if he holds any office of profit under the Government of India or the Government of any State, other than an office declared by Parliament by law not to disqualify its holder;]

(b) if he is of unsound mind and stands so declared by a competent court;

(c) if he is an undischarged insolvent;

(d) if he is not a citizen of India, or has voluntarily acquired the citizenship of a foreign State, or is under any acknowledgement of allegiance or adherence to a foreign State;

(e) if he is so disqualified by or under any law made by Parliament.

[2][**Explanation.**— For the purposes of this clause a person shall not be deemed to hold an office of profit under the Government of India or the Government of any State by reason only that he is a Minister either for the Union or for such State.]

[3][(2) A person shall be disqualified for being a member of either House of Parliament if he is so disqualified under the Tenth Schedule.]

[4][**103. Decision on questions as to disqualifications of members :**

(1) If any question arises as to whether a member of either House of Parliament has become subject to any of the disqualifications mentioned in clause (1) of article102, the question shall be referred for the decision of the President and his decision shall be final.

---

1. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s.19 to read as "*(a)* if he holds any such office of profit under the Government of India or the Government of any State as is declared by Parliament by law to disqualify its holder" (date yet to be notified).
2. Subs. by the Constitution (Fifty-Second Amendment) Act, 1985, s. 3, for "(2) For the purposes of this article" (w.e.f. 1-3-1985).
3. Ins.by *ibid.*
4. Art. 103 has been successively subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 20 (w.e.f. 3-1-1977) and the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 14 to read as above (w.e.f. 20-6-1979).

**102. உறுப்பினர் பதவித் தகுதிக்கேடுகள் :**

(1) ஒருவர் —

[1][(அ) எந்த ஊதியப் பதவியை வகிப்பவர் உறுப்பினராயிருப்பதற்குத் தகுதிக்கேடு உறுவதில்லை என்று நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புகிறதோ அந்தப்பதவி அல்லாத பிற ஊதியப் பதவி எதனையும் இந்திய அரசின் கீழோ மாநிலம் ஒன்றின் அரசின் கீழோ வகிப்பாராயின்;]

(ஆ) பித்துப்பிடித்தவராக இருந்து, அத்தகையவரெனத் தகுதிறமுள்ள நீதிமன்றம் ஒன்றினால் விளம்பப் பெற்றிருப்பாராயின்;

(இ) விடுவிப்புப் பெறாத நொடிப்புநிலையராக இருப்பாராயின்;

(ஈ) இந்தியக் குடிமகனாக இல்லாதிருப்பாராயின் அல்லது ஓர் அயல்நாட்டின் குடிமையினைத் தம்விருப்பாகப் பெற்றிருப்பாராயின் அல்லது எவ்வகையிலேனும் ஓர் அயல்நாட்டிடம் பற்றுறவோ சார்புறவோ தமக்கு உள்ளதென ஒப்பியவராய் இருப்பாராயின்;

(உ) நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தாலோ அதன் வழியாலோ உறுப்பினராக இருப்பதற்குத் தகுதிக்கேடுற்றவராக இருப்பாராயின்

அவர், நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலும் உறுப்பினராகத் தெரிந்தெடுக்கப் பெறுவதற்கும், உறுப்பினராக இருந்து வருவதற்கும் தகுதிக்கேடுற்றவர் ஆவார்.

[2][**விளக்கம்.** – இந்தக் கூறினைப் பொறுத்தவரை, ஒருவர் ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் அமைச்சராயிருக்கும் காரணத்தினால் மட்டுமே அவர் இந்திய அரசின் கீழோ அத்தகைய மாநில அரசின் கீழோ ஊதியப் பதவி ஒன்றை வகிப்பவராகக் கொள்ளப்பெறுதல் ஆகாது.]

[3][(2) ஒருவர் பத்தாம் இணைப்புப்பட்டியலின்படி தகுதிக்கேடுற்றவராயிருப்பின், அவர், நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலும் உறுப்பினராக இருந்துவருவதற்குத் தகுதிக்கேடுற்றவர் ஆவார்.]

[4][**103. உறுப்பினர்களின் தகுதிக்கேடுகள் பற்றிய வினாக்களின் மீது முடிபு :**

(1) நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் உறுப்பினர் ஒருவர், 102 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்டுள்ள தகுதிக்கேடுகளில் எதற்கேனும் உள்ளாகிவிட்டாரா என்பது பற்றிய வினா எதுவும் எழுமாயின், அவ்வினா குடியரசுத்தலைவரின் முடிபுக்குக் குறித்தனுப்பப்படுதல் வேண்டும்; அவருடைய முடிபே அறுதியானது ஆகும்.

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 19 ஆம் பிரிவினால் “ (அ) எந்த ஊதியப் பதவியை வகிப்பவர் உறுப்பினராயிருப்பதற்குத் தகுதிக்கேடு உற்றவர் என்று நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புகிறதோ அத்தகைய ஊதியப் பதவி எதனையும் இந்திய அரசின் கீழோ மாநிலம் ஒன்றின் அரசின் கீழோ வகிப்பாராயின்”(தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்) என்று வாசிக்க, மாற்றாக அமைக்கப்பட்டது.
2. “(2) இந்த உறுப்பின் நோக்கங்களுக்காக” என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1985 இன் 3 ஆம் பிரிவினால் (1–3–1985 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.
4. 103 ஆம் உறுப்பு, மேலே உள்ளவாறு வாசிக்குமாறு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 20 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 14 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) அடுத்தடுத்து மாற்றாக அமைக்கப்பட்டது.

(2) Before giving any decision on any such question, the President shall obtain the opinion of the Election Commission and shall act according to such opinion.]

**104. Penalty for sitting and voting before making oath or affirmation under article 99 or when not qualified or when disqualified :**

If a person sits or votes as a member of either House of Parliament before he has complied with the requirements of article 99, or when he knows that he is not qualified or that he is disqualified for membership thereof, or that he is prohibited from so doing by the provisions of any law made by Parliament, he shall be liable in respect of each day on which he so sits or votes to a penalty of five hundred rupees to be recovered as a debt due to the Union.

## POWERS, PRIVILEGES AND IMMUNITIES OF PARLIAMENT AND ITS MEMBERS

**105. Powers, Privileges, etc., of the Houses of Parliament and of the members and committees thereof :**

(1) Subject to the provisions of this Constitution and to the rules and standing orders regulating the procedure of Parliament, there shall be freedom of speech in Parliament.

(2) No Member of Parliament shall be liable to any proceedings in any court in respect of anything said or any vote given by him in Parliament or any committee thereof, and no person shall be so liable in respect of the publication, by or under the authority of either House of Parliament of any report, paper, votes or proceedings.

[1][(3) In other respects, the powers, privileges and immunities of each House of Parliament, and of the members and the committees of each House, shall be such as may from time to time be defined by Parliament by law, and, until so defined, [2][shall be those of that House and of its members and committees immediately before the coming into force of section 15 of the Constitution (Forty-fourth Amendment) Act, 1978.]]

(4) The provisions of clauses (1), (2) and (3) shall apply in relation to persons who by virtue of this Constitution have the right to speak in, and otherwise to take part in the proceedings of, a House of Parliament or any committee thereof as they apply in relation to members of Parliament.

---

1. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 21 to read as below:– "(3) In other respects, the powers, privileges and immunities of each House of Parliament, and of the members and the committees of each House, shall be those of that House, and of its members and committees, at the commencement of sec. 21 of the Constitution (Forty-second) Amendment Act, 1976, and as may be evolved by such House of Parliament from time to time."(date yet to be notified).
2. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 15 for certain words (w.e.f. 20-6-1979).

(2) அத்தகைய வினா எதன்மீதும் முடிபு ஒன்றை வழங்குவதற்கு முன்பு, குடியரசுத்தலைவர், தேர்தல் ஆணையத்தின் கருத்துரையைப் பெற்று, அந்தக் கருத்துரையின்படியே செயல்படுவார்.]

**104. 99 ஆம் உறுப்பின்படி ஆணைமொழி அல்லது உறுதிமொழி ஏற்பதற்கு முன்போ, தகுதியற்றவராக அல்லது தகுதிக்கேடுற்றவராக இருக்கும் போதோ அவையில் அமர்ந்தாலும் வாக்களித்தாலும் அதற்குள்ள தண்டம் :**

ஒருவர், 99 ஆம் உறுப்பின் வேண்டுறுத்தங்களுக்கேற்ப நடப்பதற்கு முன்பு அல்லது நாடாளுமன்ற அவை ஒன்றின் உறுப்பினர் பதவிக்குத் தாம் தகுதியற்றவராகவோ தகுதிக்கேடுற்றவராகவோ நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் ஒன்றின் வகையங்களால் தாம் தடைசெய்யப்பட்டிருப்பதாகவோ இருப்பதை அறிந்திருந்தும், அவர் நாடாளுமன்ற அவை ஒன்றின் உறுப்பினராக அமர்வாராயின் அல்லது வாக்களிப்பாராயின், அவர் அவ்வாறு அமரும் அல்லது வாக்களிக்கும் நாள் ஒவ்வொன்றையும் பொறுத்து, ஐந்நூறு ரூபாய் தண்டத்திற்கு உள்ளாவார்; அது ஒன்றியத்திற்குரிய கடன் என வசூல் செய்யப்படும்.

## நாடாளுமன்றத்திற்கும் அதன் உறுப்பினர்களுக்கும் உள்ள அதிகாரங்கள், மதிப்புரிமைகள் மற்றும் காப்புரிமைகள்

**105. நாடாளுமன்ற அவைகளுக்கும் அவற்றின் உறுப்பினர்களுக்கும் குழுக்களுக்கும் உள்ள அதிகாரங்கள், மதிப்புரிமைகள் முதலியவை:**

(1) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கும், நாடாளுமன்ற நெறிமுறையினை ஒழுங்குறுத்துகின்ற விதிகள், நிலையாணைகள் ஆகியவற்றிற்கும் உட்பட்டு, நாடாளுமன்றத்தில் பேச்சுச் சுதந்திரம் இருத்தல் வேண்டும்.

(2) நாடாளுமன்ற உறுப்பினர் எவரும், நாடாளுமன்றத்தில் அல்லது அதன் குழு எதிலும் அவர் கூறிய எதனைப் பொறுத்தும் அல்லது அளித்த வாக்கு எதனைப் பொறுத்தும் நீதிமன்ற நடவடிக்கை எதற்கும் உள்ளாக மாட்டார்; அவ்வாறே எவரும் நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றால் அல்லது அதன் அதிகாரத்தின் கீழ் அறிக்கை, வரையேடு, வாக்களிப்புகள் அல்லது நடவடிக்கைகள் பற்றிச் செய்யப்படும் வெளியீடு பொறுத்தும் அத்தகைய நடவடிக்கைக்கு உள்ளாகமாட்டார்.

[1][(3) பிற வகைகளில், நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் அவையின் உறுப்பினர்களுக்கும் குழுக்களுக்கும் உள்ள அதிகாரங்கள், மதிப்புரிமைகள், காப்புரிமைகள் ஆகியவை, நாடாளுமன்றம் சட்டத்தினால் அவ்வப்போது வரையறை செய்கின்றவாறு இருக்கும்; அத்துடன், அவ்வாறு வரையறை செய்யப்படும் வரையில், [2][அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம் ,1978 இன் 15 ஆம் பிரிவு செல்லாற்றல் பெறுவதற்கு உடன்முன்பு, அந்த அவைக்கும் அதன் உறுப்பினர்களுக்கும் குழுக்களுக்கும் இருந்தவாறே இருக்கும்.]]

(4). (1), (2), (3) ஆகிய கூறுகளின் வகையங்கள், நாடாளுமன்ற உறுப்பினர்களுக்குப் பொருந்துவன போன்றே, நாடாளுமன்ற அவை ஒன்றில் அல்லது அதன் குழு ஒன்றில் பேசுவதற்கு மற்றும் பிறவாறு அதன் நடவடிக்கைகளில் இந்த அரசமைப்பின்படி பங்குகொள்வதற்கு உரிமையுடையவர்களுக்கும் பொருந்துவன ஆகும்.

---

1. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1976 இன் 21 ஆம் பிரிவினால் கீழே உள்ளவாறு வாசிக்குமாறு மாற்றாக அமைக்கப்பட்டது."(3) பிற வகைகளில், நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் அவையின் உறுப்பினர்களுக்கும் குழுக்களுக்கும் உள்ள அதிகாரங்கள், மதிப்புரிமைகள், காப்புரிமைகள் ஆகியவை அந்த அவை மற்றும் அதன் உறுப்பினர்கள் மற்றும் குழுக்களுக்கு அவ்வப்போது அத்தகைய நாடாளுமன்ற அவையினால் உண்டாக்கப்படுகிறவாறும், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 21 ஆம் பிரிவின் தொடக்கநிலையில் இருந்தவாறும் இருத்தல் வேண்டும்". (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்).
2. குறித்தசில சொற்களுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 15 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டன .

**106. Salaries and allowances of members :**

Members of either House of Parliament shall be entitled to receive such salaries and allowances as may from time to time be determined by Parliament by law and, until provision in that respect is so made, allowances at such rates and upon such conditions as were immediately before the commencement of this Constitution applicable in the case of members of the Constituent Assembly of the Dominion of India.

## LEGISLATIVE PROCEDURE

**107. Provisions as to introduction and passing of Bills :**

(1) Subject to the provisions of articles 109 and 117 with respect to Money Bills and other financial Bills, a Bill may originate in either House of Parliament.

(2) Subject to the provisions of articles 108 and 109, a Bill shall not be deemed to have been passed by the Houses of Parliament unless it has been agreed to by both Houses, either without amendment or with such amendments only as are agreed to by both Houses.

(3) A Bill pending in Parliament shall not lapse by reason of the prorogation of the Houses.

(4) A Bill pending in the Council of States which has not been passed by the House of the People shall not lapse on dissolution of the House of the People.

(5) A Bill which is pending in the House of the People, or which having been passed by the House of the People is pending in the Council of States shall, subject to the provisions of article 108, lapse on a dissolution of the House of the People.

**108. Joint sitting of both Houses in certain cases :**

(1) If after a Bill has been passed by one House and transmitted to the other House —

(a) the Bill is rejected by the other House; or

(b) the Houses have finally disagreed as to the amendments to be made in the Bill; or

(c) more than six months elapse from the date of the reception of the Bill by the other House without the Bill being passed by it,

the President may, unless the Bill has elapsed by reason of a dissolution of the House of the People, notify to the Houses by message if they are sitting or by public notification if they are not sitting, his intention to summon them to meet in a joint sitting for the purpose of deliberating and voting on the Bill:

**106. உறுப்பினர்களின் வரையூதியங்களும் படித்தொகைகளும் :**

நாடாளுமன்ற ஈரவைகளின் உறுப்பினர்களும், நாடாளுமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் தீர்மானிக்கும் வரையூதியங்களையும் படித்தொகைகளையும் பெறுவதற்கு உரிமை கொண்டவர்கள் ஆவர்; அதன்பொருட்டு அவ்வாறு வகைசெய்யப்படும் வரையில், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, இந்தியத் தன்னாட்சிய அரசமைப்புப் பேரவை உறுப்பினர்களுக்குப் பொருந்துவனவாக இருந்த அதே வீதங்களிலும் அதே வரைக்கட்டுகளின்படியும் படித்தொகைகள் பெறுவதற்கு அவர்கள் உரிமை கொண்டவர்கள் ஆவர்.

## சட்டமியற்றுவதற்கான நெறிமுறை

**107. சட்டமுன்வடிவுகளை அறிமுகம் செய்தலும் நிறைவேற்றுதலும் பற்றிய வகையங்கள் :**

(1) பணச் சட்டமுன்வடிவுகள், பிற நிதிச் சட்டமுன்வடிவுகள் இவற்றைப் பொறுத்த, 109, 117 ஆகிய உறுப்புகளின் வகையங்களுக்கு உட்பட்டு, சட்டமுன்வடிவு எதுவும், நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலும் முதலில் கொண்டு வரப்படலாம்.

(2) 108, 109 ஆகிய உறுப்புகளின் வகையங்களுக்கு உட்பட்டு, திருத்தம் ஏதும் இல்லாமல் அல்லது நாடாளுமன்ற ஈரவைகளும் ஏற்றுக்கொண்ட திருத்தங்களை மட்டும் கொண்டு, ஒரு சட்டமுன்வடிவை ஈரவைகளும் ஏற்றுக் கொண்டிருந்தாலன்றி, அது ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

(3) நாடாளுமன்றத்தின் ஓர்விலுள்ள ஒரு சட்டமுன்வடிவு, அதன் அவைகளின் கூட்டத்தொடர் இறுதிசெய்யப்படுவதன் காரணத்தால் அற்றுப்போவதில்லை.

(4) மக்களவையால் நிறைவேற்றப்படாதநிலையில் மாநிலங்களவையின் ஓர்விலுள்ள ஒரு சட்டமுன்வடிவு, மக்களவை கலைக்கப்படுமாயினும் அற்றுப்போவதில்லை.

(5) மக்களவையின் ஓர்விலுள்ள அல்லது மக்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்து, மாநிலங்களவையின் ஓர்விலுள்ள ஒரு சட்டமுன்வடிவு, மக்களவை கலைக்கப்படுவதன்மேல், 108 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அற்றுப்போகும்.

**108. குறித்தசில நேர்வுகளில் ஈரவைகளின் கூட்டமர்வு :**

(1) ஒரு சட்டமுன்வடிவு ஓர் அவையால் நிறைவேற்றப்பட்டிருந்து, மறுஅவைக்கு அனுப்பப்பட்ட பின்பு—

(அ) அச்சட்டமுன்வடிவு, அந்த மறுஅவையால் மறுக்கப்படுமாயின்; அல்லது

(ஆ) அச்சட்டமுன்வடிவிற்கான திருத்தங்கள் குறித்த அந்த அவைகள் இறுதியாக வேறுபடுமாயின்; அல்லது

(இ) அந்த மறுஅவை அச்சட்டமுன்வடிவைப் பெற்ற தேதியிலிருந்து, அச்சட்டமுன்வடிவு நிறைவேற்றப்படாமலேயே ஆறு மாதங்களுக்குமேல் கழிந்திருக்குமாயின்

மக்களவை கலைக்கப்பட்டதன் காரணமாக அச்சட்டமுன்வடிவு அற்றுப்போனாலன்றி, குடியரசுத்தலைவர், அச்சட்டமுன்வடிவைப் பற்றிக் கலந்தாராய்ந்து வாக்களிக்கும் பொருட்டு அந்த அவைகளை ஒரு கூட்டமர்வாகக் கூடுமாறு தாம் அழைக்கக் கருதியுள்ளதை, அந்த அவைகள் அமர்விலிருப்பின், செய்தியுரை வாயிலாகவோ அமர்வில் இல்லாதிருப்பின் பொது அறிவிக்கை வாயிலாகவோ அந்த அவைகளுக்கு அறிவிக்கலாம் :

Provided that nothing in this clause shall apply to a Money Bill.

(2) In reckoning any such period of six months as is referred to in clause(1), no account shall be taken of any period during which the House referred to in sub-clause (c) of that clause is prorogued or adjourned for more than four consecutive days.

(3) Where the President has under clause (1) notified his intention of summoning the Houses to meet in a joint sitting, neither House shall proceed further with the Bill, but the President may at any time after the date of his notification summon the Houses to meet in a joint sitting for the purpose specified in the notification and, if he does so, the Houses shall meet accordingly.

(4) If at the joint sitting of the two Houses the Bill, with such amendments, if any, as are agreed to in joint sitting, is passed by a majority of the total number of members of both Houses present and voting, it shall be deemed for the purposes of this Constitution to have been passed by both Houses:

Provided that at a joint sitting—

(a) if the Bill, having been passed by one House, has not been passed by the other House with amendments and returned to the House in which it originated, no amendment shall be proposed to the Bill other than such amendments (if any) as are made necessary by the delay in the passage of the Bill;

(b) if the Bill has been so passed and returned, only such amendments as aforesaid shall be proposed to the Bill and such other amendments as are relevant to the matters with respect to which the Houses have not agreed,

and the decision of the person presiding as to the amendments which are admissible under this clause shall be final.

(5) A joint sitting may be held under this article and a Bill passed thereat, notwithstanding that dissolution of the House of the People has intervened since the President notified his intention to summon the Houses to meet therein.

**109. Special procedure in respect of Money Bills :**

(1) A Money Bill shall not be introduced in the Council of States.

வரம்புரையாக: இந்தக் கூறிலுள்ள எதுவும், பணச் சட்ட முன்வடிவுக்குப் பொருந்துவதில்லை.

(2). (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட ஆறு மாதக் காலஅளவைக் கணக்கிடுகையில், அந்தக் கூறின் (இ) உட்கூறில் சுட்டப்பட்ட அந்த அவையின் கூட்டத்தொடர் இறுதிசெய்யப்பட்ட காலஅளவையும் தொடர்ச்சியாக நான்கு நாட்களுக்கு மேல் ஒத்திவைக்கப்பட்டிருந்த காலஅளவையும் கணக்கில் எடுத்துக் கொள்ளுதல் ஆகாது.

(3) குடியரசுத்தலைவர், ஈரவைகளையும் கூட்டமர்வாகக் கூடுமாறு தாம் அழைக்கக் கருதியுள்ளதை (1) ஆம் கூறின்படி அறிவித்திருக்குமிடத்து, ஈரவைகளில் எதுவும், அச்சட்டமுன்வடிவின் மீதான நடவடிக்கையை மேற்கொண்டு தொடர்தல் ஆகாது; மேலும், குடியரசுத்தலைவர், தம் அறிவிக்கைத் தேதிக்குப் பின்பு, எச்சமயத்திலும் அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்பட்ட காரணத்திற்காகக் கூட்டமர்வாகக் கூடுமாறு அந்த அவைகளுக்கு அழைப்பு விடுக்கலாம்; அவர் அவ்வாறு செய்வாராயின், அந்த அவைகள் அதற்கிணங்க கூடுதல் வேண்டும்.

(4) ஈரவைகளின் கூட்டமர்வில் ஏற்றுக்கொள்ளப்பட்ட திருத்தங்கள், எவையேனுமிருப்பின், அவற்றுடன் சேர்த்து அச்சட்டமுன்வடிவு, ஈரவைகளின் மொத்த உறுப்பினர்களில் வந்திருந்து வாக்களிப்பவர்களின் எண்ணிக்கையில் பெரும்பான்மையினரால் அக்கூட்டமர்வில் நிறைவேற்றப்படுமாயின், அது, இந்த அரசமைப்பைப் பொறுத்தவரை, ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்:

வரம்புரையாக : கூட்டமர்வு ஒன்றில் –

(அ) அச்சட்டமுன்வடிவு ஓர் அவையினால் நிறைவேற்றப்பட்டிருந்து, மறு அவையினால் திருத்தங்களுடன் நிறைவேற்றப்படாமலும் அது முதலில் கொண்டுவரப்பட்ட அவைக்குத் திருப்பியனுப்பப்படாமலும் இருக்குமாயின், அச்சட்டமுன்வடிவை நிறைவேற்றுவதில் ஏற்பட்ட காலத்தாழ்வு காரணமாகத் தேவைப்படும் திருத்தங்கள் (எவையேனுமிருப்பின் அவை) அல்லாத பிற திருத்தம் எதுவும், அச்சட்டமுன்வடிவுக்குக் கொணரப்படுதல் ஆகாது;

(ஆ) அச்சட்டமுன்வடிவு அவ்வாறு நிறைவேற்றப்பட்டுத் திருப்பியனுப்பப்பட்டிருக்குமாயின், மேற்சொன்ன அத்திருத்தங்களும் ஈரவைகளும் ஏற்றுக்கொள்ளாத பொருட்பாடுகள் பொறுத்த பிற திருத்தங்களும் மட்டுமே அச்சட்டமுன்வடிவுக்குக் கொணரப்படுதல் வேண்டும்,

மேலும், இந்தக் கூறின்படி அனுமதிக்கத்தக்க திருத்தங்கள் எவை என்பதைப் பொறுத்து, தலைமைவகிப்பவரின் முடிபே அறுதியானது ஆகும்.

(5) கூட்டமர்வாகக் கூடுமாறு தாம் அழைக்கக் கருதியுள்ளதைக் குறித்துக் குடியரசுத்தலைவர் அறிவிக்கை விடுத்த பின்னர், மக்களவையைக் கலைக்க நேர்ந்தாலும்; இந்த உறுப்பின்படி கூட்டமர்வாகக் கூடி அதில் அச்சட்டமுன்வடிவை நிறைவேற்றலாம்.

**109. பணச் சட்டமுன்வடிவுகள் பொறுத்த தனியுறு நெறிமுறை :**

(1) பணச் சட்டமுன்வடிவு எதனையும் மாநிலங்களவையில் அறிமுகப்படுத்துதல் ஆகாது.

(2) After a Money Bill has been passed by the House of the People it shall be transmitted to the Council of States for its recommendations and the Council of States shall within a period of fourteen days from the date of its receipt of the Bill return the Bill to the House of the People with its recommendations and the House of the People may thereupon either accept or reject all or any of the recommendations of the Council of States.

(3) If the House of the People accepts any of the recommendations of the Council of States, the Money Bill shall be deemed to have been passed by both Houses with the amendments recommended by the Council of States and accepted by the House of the People.

(4) If the House of the People does not accept any of the recommendations of the Council of States, the Money Bill shall be deemed to have been passed by both Houses in the form in which it was passed by the House of the People without any of the amendments recommended by the Council of States.

(5) If a Money Bill passed by the House of the People and transmitted to the Council of States for its recommendations is not returned to the House of the People within the said period of fourteen days, it shall be deemed to have been passed by both Houses at the expiration of the said period in the form in which it was passed by the House of the People.

**110. Definition of "Money Bills" :**

(1) For the purposes of this Chapter, a Bill shall be deemed to be a Money Bill if it contains only provisions dealing with all or any of the following matters, namely:—

(a) the imposition, abolition, remission, alteration or regulation of any tax;

(b) the regulation of the borrowing of money or the giving of any guarantee by the Government of India, or the amendment of the law with respect to any financial obligations undertaken or to be undertaken by the Government of India;

(c) the custody of the Consolidated Fund or the Contingency Fund of India, the payment of moneys into or the withdrawal of moneys from any such Fund;

(d) the appropriation of moneys out of the Consolidated Fund of India;

(e) the declaring of any expenditure to be expenditure charged on the Consolidated Fund of India or the increasing of the amount of any such expenditure;

(2) பணச் சட்டமுன்வடிவு எதுவும், மக்களவையினால் நிறைவேற்றப்பட்ட பின்பு மாநிலங்களவைக்கு அதன் பரிந்துரைகளுக்காக அனுப்பப்படுதல் வேண்டும்; மாநிலங்களவை, அச்சட்டமுன்வடிவைப் பெற்ற தேதியிலிருந்து, பதினான்கு நாள் காலஅளவிற்குள் அச்சட்டமுன்வடிவை மக்களவைக்குத் தன் பரிந்துரைகளுடன் திருப்பியனுப்புதல் வேண்டும்; அதன்மேல், மக்களவை, மாநிலங்களவையினால் செய்யப்பட்ட பரிந்துரைகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் ஏற்றுக்கொள்ளலாம் அல்லது ஏற்கமறுக்கலாம்.

(3) மாநிலங்களவையின் பரிந்துரைகளில் எதனையும் மக்களவை ஏற்றுக்கொள்ளுமாயின், மாநிலங்களவையினால் பரிந்துரை செய்யப்பட்டு மக்களவையினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட திருத்தங்களுடன் அந்தப் பணச் சட்டமுன்வடிவு ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

(4) மாநிலங்களவையின் பரிந்துரைகளில் எதனையும் மக்களவை ஏற்றுக் கொள்ளாவிடின், அந்தப் பணச் சட்டமுன்வடிவு, மாநிலங்களவை பரிந்துரை செய்த திருத்தங்களில் எதுவுமின்றி, மக்களவையால் நிறைவேற்றப்பட்ட வடிவத்திலேயே ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

(5) மக்களவையால் நிறைவேற்றப்பட்டு, மாநிலங்களவைக்கு அதன் பரிந்துரைகளுக்காக அனுப்பப்பட்ட ஒரு பணச் சட்டமுன்வடிவு, மேற்சொன்ன பதினான்கு நாள் காலஅளவிற்குள் மக்களவைக்குத் திருப்பி அனுப்பப்படாவிடின், அந்தக் காலஅளவு கழிவுற்றதும், அச்சட்டமுன்வடிவு, மக்களவையால் நிறைவேற்றப்பட்ட வடிவத்திலேயே ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

**110. "பணச் சட்டமுன்வடிவுகள்" என்பதன் பொருள்வரையறை :**

(1) இந்த அத்தியாயத்தைப் பொறுத்தவரை, ஒரு சட்டமுன்வடிவு, பின்வரும் பொருட்பாடுகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் பற்றிய வகையங்களை மட்டுமே கொண்டிருப்பதாயின், அது ஒரு பணச் சட்டமுன்வடிவு எனக் கொள்ளப்படும், அவையாவன:—

(அ) வரி எதனையும் விதித்தல், நீக்குதல், குறைத்தல், மாற்றுதல் அல்லது ஒழுங்குறுத்துதல்;

(ஆ) இந்திய அரசால் பணம் கடன் வாங்கப்படுவதை அல்லது பொறுப்புறுதி எதுவும் அளிக்கப்படுவதை ஒழுங்குறுத்துதல் அல்லது இந்திய அரசு பொறுப்பேற்றுள்ள அல்லது பொறுப்பேற்கவுள்ள நிதிபற்றிய கடமைப்பாடுகள் எவற்றையும் பொறுத்த சட்டத்தைத் திருத்தம் செய்தல்;

(இ) இந்தியத் திரள்நிதியத்தை அல்லது நினையாநிகழ்வு நிதியத்தைக் கையடைவுகொள்ளல், அத்தகைய நிதியம் எதிலும் பணம் செலுத்துதல் அல்லது அதிலிருந்து பணம் எடுத்தல்;

(ஈ) இந்தியத் திரள்நிதியத்தினின்றும் பணம் ஒதுக்கீடு செய்தல்;

(உ) செலவினம் எதனையும் இந்தியத் திரள்நிதியத்தின்மீது சார்த்தப்பட்ட செலவினம் என விளம்புதல் அல்லது அத்தகைய செலவினத் தொகை எதனையும் கூடுதலாக்குதல்;

(3) கணக்காய்வர்—தலைமைத் தணிக்கையரின் வரையூதியமும் பிற பணிவரைக்கட்டுகளும் நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கிறவாறு இருக்கும்; அவ்வாறு தீர்மானிக்கப்படுகிற வரையில் அவை இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ளவாறு இருந்துவரும் :

வரம்புரையாக : கணக்காய்வர்—தலைமைத் தணிக்கையரின் வரையூதியமோ வாராமை விடுப்பு, ஓய்வூதியம் அல்லது ஓய்வுபெறும் வயது பொறுத்த அவரது உரிமைகளோ அவர் அமர்த்தப்பெற்றதன் பின்பு அவருக்குப் பாதகமான வகையில் மாற்றப்படுதல் ஆகாது.

(4) கணக்காய்வர்—தலைமைத் தணிக்கையர், தாம் பதவி வகிப்பது அற்றுப்போனபின்பு, இந்திய அரசின் கீழோ மாநிலம் ஒன்றின் அரசின் கீழோ மேற்கொண்டும் பதவி வகிக்கத் தகுமையுடையவர் ஆகார்.

(5) இந்த அரசமைப்பு, நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டம் ஆகியவற்றின் வகையங்களுக்கு உட்பட்டு, இந்தியத் தணிக்கைக் கணக்குத் துறையில் பணிபுரிபவர்களின் பணிவரைக்கட்டுகளும் கணக்காய்வர்— தலைமைத் தணிக்கையரின் நிருவாக அதிகாரங்களும் அவரைக் கலந்தாய்வு செய்த பின்பு குடியரசுத்தலைவரால் வகுக்கப்படும் விதிகளின்வழி வகுத்துரைக்கப்படுகிறவாறு இருக்கும்.

(6) கணக்காய்வர்—தலைமைத் தணிக்கையரின் அலுவலகத்தில் பணி புரிபவர்களுக்கோ அவர்கள் பொறுத்தோ வழங்கத்தக்க வரையூதியங்கள், படித்தொகைகள், ஓய்வூதியங்கள் அனைத்தும் உள்ளடங்கலான அந்த அலுவலகத்து நிருவாகச் செலவுகள் இந்தியத் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்படும்.

**149. கணக்காய்வர்— தலைமைத் தணிக்கையரின் கடமைகளும் அதிகாரங்களும் :**

ஒன்றியம், மாநிலங்கள், பிற அதிகாரஅமைப்பு அல்லது குழுமம் ஆகியவற்றின் கணக்குகள் தொடர்பாக, நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தாலோ அதன் வழியாலோ வகுத்துரைக்கப்படும் கடமைகளைக் கணக்காய்வர்—தலைமைத் தணிக்கையர் புரிவார், அதிகாரங்களைச் செலுத்துவார்; அதன் பொருட்டு, அவ்வாறு வகைசெய்யப்படும் வரையில், இந்தியத் தன்னாட்சியம், மாகாணங்கள் ஆகியவற்றின் கணக்குகள் தொடர்பாக, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, இந்தியத் தலைமைத் தணிக்கையருக்கு முறையே ஒன்றியம், மாநிலங்கள் ஆகியவற்றின் கணக்குகள் தொடர்பாக வழங்கப்பட்டதான அல்லது அவரால் செலுத்தத்தகுமான கடமைகளைப் புரிந்தும், அதிகாரங்களைச் செலுத்தியும் வருவார்.

**[1][150. ஒன்றியம், மாநிலங்கள் ஆகியவற்றின் கணக்குகளின் அமைவுமுறை :**

ஒன்றியம், மாநிலங்கள் ஆகியவற்றின் கணக்குகள் இந்தியக் கணக்காய்வர்—தலைமைத் தணிக்கையரின் [2][தேர்வுரை மீது], குடியரசுத்தலைவர் வகுத்துரைக்கும் அமைவுமுறையில் வைத்துவரப்படுதல் வேண்டும். ]

**151. தணிக்கை அறிக்கைகள் :**

(1) ஒன்றியத்தின் கணக்குகளைப் பொறுத்த இந்தியக் கணக்காய்வர்—தலைமைத் தணிக்கையரின் அறிக்கைகள், குடியரசுத்தலைவருக்குப் பணிந்தனுப்பப்படுதல் வேண்டும்; அவற்றை அவர் நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றின் முன்பும் வைக்கும்படி செய்வார்.

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 27 ஆம் பிரிவினால் (1–4–1977) முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது .

2."கலந்தாய்வு செய்த பின்பு" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 22 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(2) The reports of the Comptroller and Auditor-General of India relating to the accounts of a State shall be submitted to the Governor[1]*** of the State, who shall cause them to be laid before the Legislature of the State.

# PART VI

# THE STATES [2]***

## CHAPTER I - GENERAL

### 152. Definition :

In this part, unless the context otherwise requires, the expression "State" [3][does not include the State of Jammu and Kashmir].

## CHAPTER II

## THE EXECUTIVE

## THE GOVERNOR

### 153. Governors of States :

There shall be a Governor for each State:

[4][Provided that nothing in this article shall prevent the appointment of the same person as Governor for two or more States.]

### 154. Executive power of State :

(1) The executive power of the State shall be vested in the Governor and shall be exercised by him either directly or through officers subordinate to him in accordance with this Constitution.

(2) Nothing in this article shall —

(a) be deemed to transfer to the Governor any functions conferred by any existing law on any other authority; or

(b) prevent Parliament or the Legislature of the State from conferring by law functions on any authority subordinate to the Governor.

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).
2. The words "IN PART A OF THE FIRST SCHEDULE" omitted by *ibid.*
3. Subs by *ibid.*, for "means a State specified in Part A of the first Schedule".
4. Added by s. 6, *ibid.*

(2) ஒரு மாநிலத்தின் கணக்குகளைப் பொறுத்த, இந்தியக் கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையரின் அறிக்கைகள், அந்த மாநிலத்தின் ஆளுநருக்குப்[1]*** பணிந்தனுப்பப்படுதல் வேண்டும்; அவற்றை அவர் அந்த மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்கும்படி செய்வார்.

# பகுதி VI

## [2]***மாநிலங்கள்

## அத்தியாயம் I – பொதுவியல்

**152. பொருள்வரையறை :**

இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி, “மாநிலம்” என்னும் சொல், [3][ஜம்மு–காஷ்மீர் மாநிலத்தை உள்ளடக்குவதில்லை].

## அத்தியாயம் II

## ஆட்சித்துறை

### ஆளுநர்

**153. மாநிலங்களின் ஆளுநர்கள் :**

ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஆளுநர் என்று ஒருவர் இருப்பார்:

[4][வரம்புரையாக : ஒருவரையே இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கு ஆளுநராக அமர்த்துவதற்கு இந்த உறுப்பில் உள்ள எதுவும் தடையூறு ஆவதில்லை.]

**154. மாநிலத்தின் ஆட்சி அதிகாரம் :**

(1) மாநிலத்தின் ஆட்சி அதிகாரம் ஆளுநரிடம் உற்றமைந்திருக்கும்; மேலும், அதை அவர் நேரடியாகவோ தமக்கு கீழமைந்துள்ள பதவியாளர்கள் வழியாகவோ இந்த அரசமைப்புக்கு இணங்கச் செலுத்தி வருவார்.

(2) இந்த உறுப்பிலுள்ள எதுவும் —

(அ) நிலவுறும் சட்டம் ஒன்றினால் பிறவகை அதிகாரஅமைப்பு எதற்கும் வழங்கப்பட்ட பதவிப்பணிகள் எவற்றையும் ஆளுநருக்கு மாற்றுவதாகக் கொள்ளப்படுதல் ஆகாது; அல்லது

(ஆ) நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் ஆளுநரின் கீழமைந்துள்ள அதிகாரஅமைப்பு எதற்கும் பதவிப்பணிகளை வழங்குவதற்குத் தடையூறு ஆவதில்லை .

---

1. “அல்லது இராஜபிரமுகருக்கு” என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. *மேற்படிச் சட்டத்தினால்* “முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) இல் உள்ள” என்ற சொற்கள், விட்டுவிடப்பட்டன.

3. *மேற்படிச் சட்டத்தினால்* “முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட ஒரு மாநிலம் என்று பொருள்படும்” என்பதற்கு, மாற்றாக அமைக்கப்பட்டது.

4. *மேற்படிச் சட்டத்தின்* 6 ஆம் பிரிவினால் சேர்க்கப்பட்டது.

**155. Appointment of Governor :**

The Governor of a State shall be appointed by the President by warrant under his hand and seal.

**156. Term of office of Governor :**

(1) The Governor shall hold office during the pleasure of the President.

(2) The Governor may, by writing under his hand addressed to the President, resign his office.

(3) Subject to the foregoing provisions of this article, a Governor shall hold office for a term of five years from the date on which he enters upon his office:

Provided that a Governor shall, notwithstanding the expiration of his term, continue to hold office until his successor enters upon his office.

**157. Qualifications for appointment as Governor :**

No person shall be eligible for appointment as Governor unless he is a citizen of India and has completed the age of thirty-five years.

**158. Conditions of Governor's office :**

(1) The Governor shall not be a member of either House of Parliament or of a House of the Legislature of any State specified in the First Schedule, and if a member of either House of Parliament or of a House of the Legislature of any such State be appointed Governor, he shall be deemed to have vacated his seat in that House on the date on which he enters upon his office as Governor.

(2) The Governor shall not hold any other office of profit.

(3) The Governor shall be entitled without payment of rent to the use of his official residences and shall be also entitled to such emoluments, allowances and privileges as may be determined by Parliament by law and, until provision in that behalf is so made, such emoluments, allowances and privileges as are specified in the Second Schedule.

[1][(3A) Where the same person is appointed as Governor of two or more States, the emoluments and allowances payable to the Governor shall be allocated among the States in such proportion as the President may by order determine.]

(4) The emoluments and allowances of the Governor shall not be diminished during his term of office.

1. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 7 (w.e.f. 1-11-1956).

**155. ஆளுநரை அமர்த்துதல்:**

ஒரு மாநிலத்தின் ஆளுநர், குடியரசுத்தலைவரால் அவருடைய கையொப்பமும் முத்திரையும் கொண்ட அதிகார ஆணையின்வழி அமர்த்தப்பெறுவார்.

**156. ஆளுநரின் பதவிக்காலம் :**

(1) ஆளுநர், குடியரசுத்தலைவர் விழையுமளவும் பதவி வகிப்பர்.

(2) ஆளுநர், தம் கையொப்பமிட்டுக் குடியரசுத்தலைவருக்கு எழுத்து வழித் தெரிவித்துத் தம் பதவியை விட்டுவிலகிக்கொள்ளலாம்.

(3) இந்த உறுப்பின் மேலேகண்ட வகையங்களுக்கு உட்பட்டு, ஆளுநர் ஒருவர், தாம் பதவி ஏற்கும் தேதியிலிருந்து ஐந்தாண்டுக் காலத்திற்குப் பதவி வகிப்பார்:

**வரம்புரையாக :** ஆளுநர் ஒருவர் தம் பதவிக்காலம் கழிவுற்றாலுங்கூட, அவருக்கு அடுத்து வருபவர் பதவி ஏற்கும் வரையிலும் தொடர்ந்து பதவி வகித்து வருவார்.

**157. ஆளுநராக அமர்த்தப் பெறுவதற்கான தகுதிப்பாடுகள் :**

ஒருவர், இந்தியக் குடிமகனாகவும், முப்பத்தைந்து வயது முடிந்தவராகவும் இருந்தாலன்றி, அவர் ஆளுநராக அமர்த்தப்பெறுவதற்கான தகுமையுடையவர் ஆகார்.

**158. ஆளுநரின் பதவிக்கான வரைக்கட்டுகள் :**

(1) ஆளுநர், நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலுமோ முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள மாநிலம் ஒன்றின் சட்டமன்ற அவை ஒன்றிலோ உறுப்பினராக இருத்தல் ஆகாது; மேலும், நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் அல்லது ஒரு மாநிலச் சட்டமன்ற அவை ஒன்றின் உறுப்பினராகவுள்ள ஒருவர் ஆளுநராக அமர்த்தப்பெறுவாராயின், அவர் ஆளுநராகப் பதவி ஏற்கும் தேதியன்று அந்த அவையிலுள்ள தம் பதவியிடத்தை விட்டகன்றவராகக் கொள்ளப்பெறுவார்.

(2) ஆளுநர், பிற ஊதியப்பதவி எதனையும் வகித்தல் ஆகாது.

(3) ஆளுநர், தம் பதவிக்குரிய உறைவிடங்களில் வாடகை ஏதுமின்றி உறைவதற்கு உரிமை கொண்டவர் ஆவார்; நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கும் பதவியூதியங்கள், படித்தொகைகள், மதிப்புரிமைகள் ஆகியவற்றிற்கும் அவர் உரிமை கொண்டவர் ஆவார்; அவ்வாறு அதன்பொருட்டு வகை செய்யப்படும் வரையிலும், இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள பதவியூதியங்கள், படித்தொகைகள், மதிப்புரிமைகள் ஆகியவற்றிற்கு அவர் உரிமை கொண்டவர் ஆவார்.

[1][(3ஆ) ஒருவரே இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களின் ஆளுநராக அமர்த்தப்பெறுமிடத்து, ஆளுநருக்கு வழங்கத்தகுமான பதவியூதியங்களையும் படித்தொகைகளையும், குடியரசுத்தலைவரால் ஆணையின்வழித் தீர்மானிக்கப்படும் வீதத்திற்கேற்ப, அந்தந்த மாநிலங்கள் பகிர்ந்தளித்தல் வேண்டும்.]

(4) ஆளுநருக்குள்ள பதவியூதியங்களையும் படித்தொகைகளையும் அவருடைய பதவிக்காலத்தின் போது குறைக்கப்படுதல் ஆகாது.

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 7 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**159. Oath or affirmation by the Governor :**

Every Governor and every person discharging the functions of the Governor shall, before entering upon his office, make and subscribe in the presence of the Chief Justice of the High Court exercising jurisdiction in relation to the State, or, in his absence, the senior most Judge of that Court available, an oath or affirmation in the following form, that is to say -

"I, A. B., do swear in the name of God / Solemnly affirm that I will faithfully execute the office of Governor (or discharge the functions of the Governor) of.............. (name of the State) and will to the best of my ability preserve, protect and defend the Constitution and the law and that I will devote myself to the service and well-being of the people of .............. (name of the State)."

**160. Discharge of the functions of the Governor in certain contingencies :**

The President may make such provision as he thinks fit for the discharge of the functions of the Governor of a State in any contingency not provided for in this Chapter.

**161. Power of Governor to grant pardons, etc., and to suspend, remit or commute sentences in certain cases :**

The Governor of a State shall have the power to grant pardons, reprieves, respites or remissions of punishment or to suspend, remit or commute the sentence of any person convicted of any offence against any law relating to a matter to which the executive power of the State extends.

**162. Extent of executive power of State :**

Subject to the provisions of this Constitution, the executive power of a State shall extend to the matters with respect to which the Legislature of the State has power to make laws:

Provided that in any matter with respect to which the Legislature of a State and Parliament have power to make laws, the executive power of the State shall be subject to, and limited by, the executive power expressly conferred by this Constitution or by any law made by Parliament upon the Union or authorities thereof.

**159. ஆளுநருக்குள்ள ஆணைமொழி அல்லது உறுதிமொழி :**

ஆளுநர் ஒவ்வொருவரும், ஆளுநரின் பதவிப்பணிகளை ஆற்றிவரும் ஒவ்வொருவரும், தாம் பதவி ஏற்பதற்கு முன்பு, அந்த மாநிலம் தொடர்பாக அதிகாரம் செலுத்தும் உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியின் முன்னிலையில் அல்லது அவர் இல்லாதபோது, ஆங்கிருக்கும் உயர் நீதிமன்ற நீதிபதிகளில் மிக்க முதுநிலையராக உள்ள ஒருவரின் முன்னிலையில், ஓர் ஆணைமொழியை அல்லது உறுதிமொழியைப் பின்வரும் சொன்முறையில் உள்ளபடி ஏற்றுக் கையொப்பமிடுதல் வேண்டும்: அதாவது –

"அ . ஆ ., ஆகிய நான் உண்மையான பற்றுடன்.......................................... (மாநிலத்தின் பெயர்) ஆளுநர் பதவிப் பொறுப்பை நிறைவேற்றி வருவதோடு (அல்லது ஆளுநருக்குள்ள பதவிப்பணிகளை ஆற்றிவருவதோடு) அரசமைப்பு முறையினையும் சட்டநெறியினையும் என் முழுத்திறன் கொண்டு புரந்தும் பேணியும் புறங்காத்தும் நிற்பேன் என்றும் ........................................ (மாநிலத்தின் பெயர்) மக்கள் நற்பணிக்கும் நல்வாழ்வுக்கும் முற்றுமாக என்னை நான் ஆட்படுத்திக் கொள்வேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகின்றேன்"
உள்ளார்ந்து உறுதிமொழிகின்றேன்."

**160. குறித்தசில நினையாநிகழ்வுகளில் ஆளுநரின் பதவிப் பணிகளை ஆற்றிவருதல் :**

இந்த அத்தியாயத்தில் வகைசெய்யப்பட்டிராத நினையாநிகழ்வு எதிலும், மாநில ஆளுநரின் பதவிப்பணிகளை ஆற்றிவருவதற்கு, குடியரசுத்தலைவர் தாம் தக்கதெனக் கருதும் ஏற்பாட்டினைச் செய்யலாம்.

**161. குறித்தசில நேர்வுகளில் குற்றமன்னிப்புகள் முதலியவை அளிப்பதற்கும் மற்றும் தீர்ப்புத்தண்டனைகளைத் தற்காலிகமாக நிறுத்திவைப்பதற்கு, இறுத்தல் செய்வதற்கு அல்லது மாற்றிக்குறைப்பதற்கும் ஆளுநருக்குள்ள அதிகாரம் :**

ஒரு மாநில ஆளுநர், மாநிலத்தின் ஆட்சி அதிகாரம் அளாவும் பொருட்பாடு குறித்த சட்டத்திற்கு எதிரான ஒரு குற்றச்செயலுக்காகக் குற்றத்தீர்ப்பளிக்கப்பெற்ற ஒருவரின் தண்டனையைப் பொறுத்துக் குற்றமன்னிப்புகள் அளிக்கவும் தண்டனையை நிறுத்திவைக்கவும் அதை நிறைவேற்றுவதைத் தள்ளிவைக்கவும் அல்லது எஞ்சிய தண்டனையை இறுத்தல்செய்யவும் அல்லது தீர்ப்புத்தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்திவைக்க, இறுத்தல்செய்ய அல்லது மாற்றிக்குறைக்கவும் அதிகாரம் உடையவர் ஆவார்.

**162. மாநில ஆட்சி அதிகாரத்தின் அளாவுகை :**

இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, சட்டங்களை இயற்றுவதற்கு ஒரு மாநிலச் சட்டமன்றம் அதிகாரம் கொண்டுள்ள பொருட்பாடுகளை மாநில ஆட்சி அதிகாரம் அளாவி நிற்கும்:

**வரம்புரையாக:** ஒரு மாநிலச் சட்டமன்றமும் நாடாளுமன்றமும் சட்டங்களை இயற்ற அதிகாரம் கொண்டுள்ள பொருட்பாடு எதனையும் பற்றிய மாநிலத்தின் ஆட்சி அதிகாரம், இந்த அரசமைப்பினாலோ நாடாளுமன்றம் இயற்றிய சட்டம் ஒன்றினாலோ ஒன்றியத்துக்கு அல்லது அதன் அதிகாரஅமைப்புகளுக்கெனக் குறித்து வழங்கப்பட்ட ஆட்சி அதிகாரத்துக்கு உட்பட்டதாகவும் அதன் வரம்பிற்குள் அடங்கியதாகவும் இருக்கும்.

## அமைச்சரவை

**163. ஆளுநருக்கு அமைச்சரவை உறுதுணையாக இருத்தலும் தேர்வுரை வழங்குதலும் :**

(1) ஆளுநர், இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ தம் உளத்தேர்வின்படி செயலாற்ற வேண்டிய பதவிப்பணிகளை அல்லது அவற்றுள் எதனையும் தவிர, பிற பதவிப்பணிகளை ஆற்றுகையில், அவருக்கு உறுதுணையாக இருப்பதற்கும் தேர்வுரை வழங்குவதற்கும் முதலமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சரவை ஒன்று இருத்தல் வேண்டும்.

(2) ஒரு பொருட்பாடு இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ ஆளுநர் தம் உளத்தேர்வின்படி செயலாற்றவேண்டிய ஒரு பொருட்பாடா இல்லையா என்பதைப் பொறுத்து வினா எதுவும் எழுமாயின், ஆளுநர் தம் உளத்தேர்வின்படி செய்யும் முடிபே அறுதியானது ஆகும்; ஆளுநர், தம் உளத்தேர்வின்படி செயற்பட்டிருக்க வேண்டும் அல்லது கூடாது என்பதைக் காரணமாக காட்டி, அவர் செய்த எதனின் செல்லுந்தன்மையையும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

(3) ஆளுநருக்கு அமைச்சர்கள் தேர்வுரை எதுவும் வழங்கினார்களா, அவ்வாறாயின் அது யாது என்பது பற்றி நீதிமன்றம் எதிலும் விசாரிக்கப்படுதல் ஆகாது.

**164. அமைச்சர்களைப் பற்றிய பிற வகையங்கள் :**

(1) முதலமைச்சர், ஆளுநரால் பதவியில் அமர்த்தப் பெறுவார்; பிற அமைச்சர்கள், முதலமைச்சரின் தேர்வுரையின்படி ஆளுநரால் பதவியில் அமர்த்தப்பெறுவர்; அமைச்சர்கள், ஆளுநர் விழையுமளவும் பதவி வகிப்பர்:

**வரம்புரையாக** : [1][சட்டிஸ்கர், ஜார்கண்ட்], மத்தியபிரதேசம், [2][ஒடிசா] ஆகிய மாநிலங்களில் பழங்குடியினர் நல்வாழ்வைத் தம் பொறுப்பில் கொண்டுள்ள அமைச்சர் ஒருவர் இருத்தல் வேண்டும்; அத்துடன், பட்டியலில்கண்ட சாதியினர், பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் ஆகியோரின் நல்வாழ்வை அல்லது வேறு பணி எதனையுங்கூட அவர் தம் பொறுப்பில் கொண்டிருக்கலாம்.

[3][(1 ⓐ) ஒரு மாநில அமைச்சரவையில், முதலமைச்சர் உள்ளடங்கலாக, அமைச்சர்களின் மொத்த எண்ணிக்கையானது, அந்த மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் பதினைந்து விழுக்காட்டிற்கு மேற்படுதல் ஆகாது:

**வரம்புரையாக** : ஒரு மாநிலத்தில் முதலமைச்சர் உள்ளடங்கலாக, அமைச்சர்களின் எண்ணிக்கையானது, பன்னிரண்டிற்குக் குறைவாக இருத்தல் ஆகாது:

---

1. "பீகார்" என்பதற்கு, அரசமைப்புச் (தொன்னூற்று நான்காம் திருத்தம்) சட்டம், 2006 இன் 2 ஆம் பிரிவினால் (12–6–2006 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2 "ஒரிசா" என்பதற்கு, ஒரிசா (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2011 (15 / 2011) இன் 4 ஆம் பிரிவினால் (1–11–2011 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. அரசமைப்புச் (தொண்ணூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 3 ஆம் பிரிவினால் (1–1–2004 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

## COUNCIL OF MINISTERS

### 163. Council of Ministers to aid and advise Governor :

(1) There shall be a Council of Ministers with the Chief Minister as the head to aid and advise the Governor in the exercise of his functions, except in so far as he is by or under this Constitution required to exercise his functions or any of them in his discretion.

(2) If any question arises whether any matter is or is not a matter as respects which the Governor is by or under this Constitution required to act in his discretion, the decision of the Governor in his discretion shall be final, and the validity of anything done by the Governor shall not be called in question on the ground that he ought or ought not to have acted in his discretion.

(3) The question whether any, and if so what, advice was tendered by Ministers to the Governor shall not be inquired into in any court.

### 164. Other provisions as to Ministers :

(1) The Chief Minister shall be appointed by the Governor and the other Ministers shall be appointed by the Governor on the advice of the Chief Minister, and the Ministers shall hold office during the pleasure of the Governor:

Provided that in the States of [1][Chattisgarh, Jharkhand], Madhya Pradesh and [2][Odisha], there shall be a Minister in charge of tribal welfare who may in addition be in charge of the welfare of the Scheduled Castes and Backward Classes or any other work.

[3][(1A) The total number of Ministers, including the Chief Minister, in the Council of Ministers in a State shall not exceed fifteen percent of the total number of members of the Legislative Assembly of that State:

Provided that the number of Ministers, including the Chief Minister, in a State shall not be less than twelve:

---

1. Subs. by the Constitution (Ninety-fourth Amendment) Act, 2006, s. 2, for "Bihar" (w.e.f. 12-6-2006).
2. Subs. by Orissa (Alteration of Name) Act, 2011 (15 of 2011), s. 4, for "Orissa" (w.e.f. 1-11-2011).
3. Ins. by the Constitution (Ninety-first Amendment) Act, 2003, s. 3 (w.e.f. 1-1-2004).

மேலும் வரம்புரையாக : அரசமைப்புச் (தொண்ணூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2003 இன் தொடக்கத்தில் மாநிலம் எதிலுமுள்ள அமைச்சரவையில், முதலமைச்சர் உள்ளடங்கலாக, அமைச்சர்களின் மொத்த எண்ணிக்கையானது, மேற்சொன்ன பதினைந்து விழுக்காட்டிற்கு அல்லது, நேர்வுக்கேற்ப, முதல் வரம்புரையில் குறித்துரைக்கப்பட்ட எண்ணிக்கைக்கு மேற்படுகிறவிடத்து, அந்த மாநிலத்தில் அமைச்சர்களின் மொத்த எண்ணிகையானது, குடியரசுத்தலைவர், பொது அறிவிக்கை வாயிலாகக் குறித்திடும் தேதியிலிருந்து ஆறு மாதங்களுக்குள், இந்தக் கூறின் வகையங்களுக்கிணங்கியதாகச் செய்யப்படுதல் வேண்டும்.

(1 ஆ ) ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது பத்தாம் இணைப்புப்பட்டியலின் (2) ஆம் பத்தியின்படி சட்டமன்றப் பேரவையின் உறுப்பினராக இருப்பதற்குத் தகுதிக்கேடுற்று, அரசியல் கட்சி எதனையும் சார்ந்திருந்து சட்டமன்ற மேலவையைக் கொண்டிருக்கிற மாநில சட்டமன்றத்தின் ஏதாவது ஓர் அவையின் உறுப்பினர் ஒருவர், அவர் தகுதிக்கேடுற்ற தேதியிலிருந்து தொடங்கி, அத்தகைய உறுப்பினராக அவரது பதவிக் காலஅளவு முடிவடையும் தேதி, அல்லது அந்தக் காலஅளவு கழிவுறுவதற்கு முன்பு, அவர் ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது நேர்வுக்கேற்ப, சட்டமன்ற மேலவையைக் கொண்டிருக்கிற ஒரு மாநிலச் சட்டமன்ற ஈரவைகளில் ஒன்றின் தேர்தல் எதிலும் போட்டியிடுகிறவிடத்து, அவர் தேர்ந்தெடுக்கப்பட்டதாக விளம்பப்பட்ட தேதி, இவற்றில் எது முந்தையதோ அதுவரையுள்ள காலஅளவின்போது (1) ஆம் கூறின்படி ஓர் அமைச்சராக அமர்த்தப்படுவதற்குத் தகுதிக்கேடுற்றவராதலும் வேண்டும்].

(2) அமைச்சரவை, மாநிலச் சட்டமன்றப் பேரவைக்குக் கூட்டுப் பொறுப்புடையதாக இருக்கும்.

(3) அமைச்சர் ஒருவர் தம் பதவியை ஏற்றுக்கொள்வதற்கு முன்பு, ஆளுநர் அவரைப் பதவியும் மறைகாப்பும் பற்றிய ஆணைமொழிகளை, மூன்றாம் இணைப்புப்பட்டியலில் அதற்கென உள்ள சொன்முறைகளுக்கு இணங்க ஏற்கச் செய்தல் வேண்டும்.

(4) அமைச்சர் ஒருவர் மாநிலச் சட்டமன்றத்தில் தொடர்ச்சியாக ஏதேனும் ஓர் ஆறு மாதக் காலஅளவிற்கு ஓர் உறுப்பினராக இல்லாவிடில், அந்தக் காலஅளவு கழிவுற்றதும் தம் அமைச்சர் பதவியை இழந்தவர் ஆவார்.

(5) அமைச்சர்களின் வரையூதியங்களும் படித்தொகைகளும், மாநிலச் சட்டமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் தீர்மானிக்கிறவாறு இருக்கும்; மாநிலச் சட்டமன்றம் அவ்வாறு தீர்மானிக்கிற வரையில், அவை இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ளவாறு இருந்துவரும்.

## மாநிலத்தின் தலைமை வழக்குரைஞர்

### 165. மாநிலத்தின் தலைமை வழக்குரைஞர்:

(1) ஒவ்வொரு மாநிலத்தின் ஆளுநரும், உயர் நீதிமன்றம் ஒன்றின் நீதிபதியாக அமர்த்தப்பெறுவதற்குத் தகுதிப்பாடுடைய ஒருவரை அந்த மாநிலத்தின் தலைமை வழக்குரைஞராக அமர்த்துவார்.

Provided further that where the total number of Ministers, including the Chief Minister, in the Council of Ministers in any State at the commencement of the Constitution (Ninety first Amendment) Act, 2003 exceeds the said fifteen percent or the number specified in the first proviso, as the case may be, then, the total number of Ministers in that State shall be brought in conformity with the provisions of this clause within six months from such date as the President may by public notification appoint.

(1B) A member of the Legislative Assembly of a State or either House of the Legislature of a State having Legislative Council belonging to any political party who is disqualified for being a member of that House under paragraph 2 of the Tenth Schedule shall also be disqualified to be appointed as a Minister under clause (1) for duration of the period commencing from the date of his disqualification till the date on which the term of his office as such member would expire or where he contests any election to the Legislative Assembly of a State or either House of the Legislature of a State having Legislative Council, as the case may be, before the expiry of such period, till the date on which he is declared elected, whichever is earlier].

(2) The Council of Ministers shall be collectively responsible to the Legislative Assembly of the State.

(3) Before a Minister enters upon his office, the Governor shall administer to him the oaths of office and of secrecy according to the forms set out for the purpose in the Third Schedule.

(4) A Minister who for any period of six consecutive months is not a member of the Legislature of the State shall at the expiration of that period cease to be a Minister.

(5) The salaries and allowances of Ministers shall be such as the Legislature of the State may from time to time by law determine and, until the Legislature of the State so determines, shall be as specified in the Second Schedule.

## THE ADVOCATE-GENERAL FOR THE STATE

### 165. Advocate-General for the State :

(1) The Governor of each State shall appoint a person who is qualified to be appointed a Judge of a High Court to be Advocate-General for the State.

(2) ஆளுநரால் அவ்வப்போது குறித்தனுப்பப்படும் சட்டப்பொருட்பாடுகளைப் பொறுத்து மாநில அரசிற்கு ஆய்வுரை அளிப்பதும் அவரால் தமக்குக் குறித்தளிக்கப்படும் சட்டப்பாங்குடைய பிற கடமைகளைப் புரிவதும் இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ அல்லது நிகழுறு காலத்தில் செல்லாற்றலிலுள்ள பிற சட்டத்தாலோ அதன் வழியாலோ தமக்கு வழங்கப்படும் பதவிப்பணிகளை ஆற்றுவதும் மாநிலத் தலைமை வழக்குரைஞரின் கடமை ஆகும்.

(3) தலைமை வழக்குரைஞர், ஆளுநர் விழையுமளவும் பதவி வகிப்பார்; ஆளுநர் தீர்மானிக்கும் பணியூதியத்தைப் பெறுவார்.

## அரசின் அலுவல் நடத்துமுறை

**166. மாநில அரசின் அலுவல் நடத்துமுறை :**

(1) மாநில அரசின் ஆட்சித்துறை நடவடிக்கைகள் அனைத்தும், ஆளுநரின் பதவிப்பெயரால் எடுக்கப்படுவதாக இயம்பப்பெறுதல் வேண்டும்.

(2) ஆளுநரின் பதவிப்பெயரால் பிறப்பிக்கப்படும் ஆணைகளும் ஆக்கப்படும் முறையாவணங்களும், ஆளுநர் வகுக்கும் விதிகளில் குறித்துரைக்கப்படும் முறையில் உறுதிச்சான்றிடப்படுதல் வேண்டும்; அவ்வாறு உறுதிச்சான்றிடப்பட்ட ஆணை அல்லது முறையாவணம் ஆளுநரால் பிறப்பிக்கப்பட்ட ஆணை அல்லது ஆக்கப்பட்ட முறையாவணம் அன்று என்னும் காரணம் காட்டி, அதன் செல்லுந்தன்மையை எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

(3) ஆளுநர், மாநில அரசின் அலுவல்கள் மேலும் இசைவுற நடைபெறுவதற்காகவும் இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ ஆளுநர் தம் உளத்தேர்வின்படி செயலாற்ற வேண்டிய அலுவலாக இல்லாத பிற அலுவல்களை அமைச்சர்களிடையே பகிர்ந்து ஒதுக்குவதற்காகவும் விதிகளை வகுப்பார்.

[1][* * *]

**167. ஆளுநருக்குத் தகவல் தருவது முதலியவை பொறுத்து முதலமைச்சருக்குள்ள கடமைகள் :**

பின்வருவன ஒவ்வொரு மாநில முதலமைச்சரின் கடமை ஆகும் –

(அ) மாநிலத்து அலுவல் நடவடிக்கைகளை நிருவகித்தல் தொடர்பாக அமைச்சரவையின் முடிபுகள் மற்றும் சட்டமியற்றுவதற்கான செயற்குறிப்புகள் அனைத்தையும் மாநில ஆளுநருக்குத் தெரிவித்தல்;

(ஆ) மாநிலத்து அலுவல் நடவடிக்கைகளை நிருவகித்தல் மற்றும் சட்டமியற்றுவதற்கான செயற்குறிப்புகள் தொடர்பாக ஆளுநர் கேட்டனுப்பும் தகவலைத் தருதல்; மற்றும்

(இ) ஓர் அமைச்சரால் முடிபு எடுக்கப்பட்டு, ஆனால் அமைச்சரவையால் ஓர்வு செய்யப்பட்டிராத பொருட்பாடு எதனையும் ஓர்வுக்காக அமைச்சரவையின் முன்வைக்குமாறு ஆளுநர் வேண்டுறுத்துவாராயின், அவ்வாறு செய்தல்.

---

1. (4) ஆம் கூறு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 28 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), புகுத்தப்பட்டது; மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 23 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

(2) It shall be the duty of the Advocate-General to give advice to the Government of the State upon such legal matters, and to perform such other duties of a legal character, as may from time to time be referred or assigned to him by the Governor, and to discharge the functions conferred on him by or under this Constitution or any other law for the time being in force.

(3) The Advocate-General shall hold office during the pleasure of the Governor, and shall receive such remuneration as the Governor may determine.

## CONDUCT OF GOVERNMENT BUSINESS

### 166. Conduct of business of the Government of a State :

(1) All executive action of the Government of a State shall be expressed to be taken in the name of the Governor.

(2) Orders and other instruments made and executed in the name of the Governor shall be authenticated in such manner as may be specified in rules to be made by the Governor, and the validity of an order or instrument which is so authenticated shall not be called in question on the ground that it is not an order or instrument made or executed by the Governor.

(3) The Governor shall make rules for the more convenient transaction of the business of the Government of the State, and for the allocation among Ministers of the said business in so far as it is not business with respect to which the Governor is by or under this Constitution required to act in his discretion.

[1][* * *]

### 167. Duties of Chief Minister as respects the furnishing of information to Governor, etc :

It shall be the duty of the Chief Minister of each State -

(a) to communicate to the Governor of the State all decisions of the Council of Ministers relating to the administration of the affairs of the State and proposals for legislation;

(b) to furnish such information relating to the administration of the affairs of the State and proposals for legislation as the Governor may call for; and

(c) if the Governor so requires, to submit for the consideration of the Council of Ministers any matter on which a decision has been taken by a Minister but which has not been considered by the Council.

---

1. Cl. (4) was ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 28 (w.e.f. 3-1-1977) and omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 23 (w.e.f. 20-6-1979).

## அத்தியாயம் III

## மாநிலச் சட்டமன்றம்

### பொதுவியல்

**168. மாநிலச் சட்டமன்றங்களின் அமைப்பு :**

(1) ஒவ்வொரு மாநிலத்திற்குமென சட்டமன்றம் ஒன்று இருக்கும்; அது ஆளுநரையும்

(அ) [1]*** [2][ஆந்திரப் பிரதேசம்], பீகார்,[3]*** [4][மத்தியப்பிரதேசம்] [5]*** [6][மகாராஷ்டிரம்], [7][கர்நாடகம்],[8]*** [9][[10]தமிழ்நாடு, தெலுங்கானா] [11][மற்றும் உத்தரப் பிரதேசம்] ஆகிய மாநிலங்களில் இரண்டு அவைகளையும்,

(ஆ) பிற மாநிலங்களில் ஓர் அவையினையும்

கொண்டதாக இருக்கும்.

(2) ஒரு மாநிலச் சட்டமன்றத்தில் இரண்டு அவைகள் இருக்குமிடத்து, ஒன்று சட்டமன்ற மேலவை என்றும், மற்றொன்று சட்டமன்றப் பேரவை என்றும் வழங்கப்பெறும்; ஓரவை மட்டுமே இருக்குமிடத்து, அது சட்டமன்றப் பேரவை என்று வழங்கப்பெறும்.

**169. மாநிலங்களில் சட்டமன்ற மேலவைகளை ஒழித்தல் அல்லது உருவாக்குதல் :**

(1). 168 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில், அந்தச் சட்டமன்ற மேலவையை ஒழிப்பதற்கோ அத்தகைய சட்டமன்ற மேலவை இல்லாத ஒரு மாநிலத்தில் மேலவையை உருவாக்குவதற்கோ அந்த மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் பெரும்பான்மையும், மேலும், பேரவை உறுப்பினர்களில் வந்திருந்து வாக்களிப்பவர்களின் எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பங்கிற்குக் குறையாத பெரும்பான்மையும் கொண்ட உறுப்பினர்களால் தீர்மானம் ஒன்று அந்தப் பேரவையில் நிறைவேற்றப்படுமாயின், அவ்வாறு ஒழிப்பதற்கு அல்லது உருவாக்குவதற்கு நாடாளுமன்றம் சட்டத்தினால் வகைசெய்யலாம்.

---

1 "ஆந்திரப் பிரதேசம்" என்ற சொற்கள், ஆந்திரப் பிரதேசச் சட்டமன்ற மேலவைச் (ஒழித்தல்) சட்டம், 1985 (34/1985) இன் 4 ஆம் பிரிவினால் (1–6–1985 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

2. ஆந்திரப் பிரதேசச் சட்டமன்ற மேலவைச் சட்டம், 2005 (1 / 2006) இன் 3 ஆம் பிரிவினால் (30–3–2007 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

3. "பம்பாய்" என்ற சொல், பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 20 ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

4. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 8 ஆம் பிரிவினால் (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்) புகுத்தப்பட்டது.

5. "தமிழ்நாடு" என்ற சொல், தமிழ்நாடு சட்டமன்ற மேலவைச் (ஒழித்தல்) சட்டம், 1986 (40/1986) இன் 4 ஆம் பிரிவினால் (1–11–1986 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

6. பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 20 ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

7. "மைசூர்" என்பதற்கு, மைசூர் மாநிலம் (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 1973 (31/1973) இன் 4 ஆம் பிரிவினால் (1–11–1973 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டு, அது அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 8 (1 )ஆம் பிரிவினால் புகுத்தப்பட்டது.

8. "பஞ்சாப்" என்ற சொல், பஞ்சாப் சட்டமன்ற மேலவைச் (ஒழித்தல்) சட்டம், 1969 (46/1969) இன் 4 ஆம் பிரிவினால் (7–1–1970 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

9. தமிழ்நாடு சட்டமன்ற மேலவைச் சட்டம், 2010 (16/2010) இன் 3 ஆம் பிரிவினால் (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்) புகுத்தப்பட்டது.

10. "தமிழ்நாடு" என்பதற்கு, ஆந்திரப் பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2014 (6/2014) இன் 96 ஆம் பிரிவினால் (1–6–2014 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

11. "உத்தரப் பிரதேசம் மற்றும் மேற்கு வங்காளம்" என்பதற்கு, மேற்கு வங்காள மேலவைச் (ஒழித்தல்) சட்டம், 1969 (20/1969) இன் 4 ஆம் பிரிவினால் (1–8–1969 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

# CHAPTER III

## THE STATE LEGISLATURE

## GENERAL

### 168. Constitution of Legislatures in States :

(1) For every State there shall be a Legislature which shall consist of the Governor, and

(a) in the States of [1]*** [2][Andhra Pradesh], Bihar,[3]*** [4][Madhya Pradesh], [5]*** [6][Maharashtra], [7][Karnataka],[8]*** [9][[10]Tamil Nadu, Telangana] [11][and Uttar Pradesh], two Houses;

(b) in other States, one House.

(2) Where there are two Houses of the Legislature of a State, one shall be known as the Legislative Council and the other as the Legislative Assembly, and where there is only one House, it shall be known as the Legislative Assembly.

### 169. Abolition or creation of Legislative Councils in States -

(1) Notwithstanding anything in article 168, Parliament may by law provide for the abolition of the Legislative Council of a State having such a Council or for the creation of such a Council in a State having no such Council, if the Legislative Assembly of the State passes a resolution to that effect by a majority of the total membership of the Assembly and by a majority of not less than two-thirds of the members of the Assembly present and voting.

---

1. The words "Andhra Pradesh," omitted by the Andhra Pradesh Legislative Council (Abolition) Act, 1985 (34 of 1985), s.4 (w.e.f.1-6-1985).
2. Ins. by the Andhra Pradesh Legislative Council Act, 2005 (1of 2006), s. 3 (w.e.f. 30-3-2007).
3. The word "Bombay" omitted by the Bombay Reorganisation Act, 1960, s. 20 (11 of 1960) (w.e.f. 1-5-1960).
4. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 8 (date yet to be notified).
5. The words "Tamil Nadu", omitted by the Tamil Nadu Legislative Council (Abolition) Act, 1986 (40 of 1986), s. 4 (w.e.f.1-11-1986).
6. Ins. by the Bombay Reorganisation Act, 1960, (11 of 1960), s. 20 (w.e.f. 1-5-1960).
7. Subs. by the Mysore State (Alteration of Name) Act, 1973 (31 of 1973), s. 4, for "Mysore" (w.e.f. 1-11-1973), which was ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 8 (1).
8. The word, "Punjab," omitted by the Punjab Legislative Council (Abolition) Act, 1969 (46 of 1969), s. 4 (w.e.f. 7-1-1970).
9. Ins. by Tamil Nadu Legislative Council Act, 2010 (16 of 2010), s. 3 (date yet to be notified).
10. Subs. by Andhra Pradesh Reorganisation Act, 2014 (6 of 2014), s. 96, for "Tamil Nadu" (w.e.f. 1-6-2014).
11. Subs. by the West Bengal Council (Abolition) Act, 1969 (20 of 1969), s. 4, for "Uttar Pradesh and West Bengal" (w.e.f.1-8-1969).

(2). (1) ஆம் உறுப்பில் சுட்டப்பட்ட சட்டம் எதுவும், அச்சட்டத்தின் வகையங்களைச் செல்திறப்படுத்துவதற்குத் தேவையானவாறு, இந்த அரசமைப்பினைத் திருத்துவதற்கான வகையங்களைக் கொண்டிருத்தல் வேண்டும்; மேலும் நாடாளுமன்றம் தேவையெனக் கொள்ளும் துணைவறு, சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டதாகவும் இருக்கலாம்.

(3) மேற்சொன்ன சட்டம் எதுவும், 368 ஆம் உறுப்பைப் பொறுத்தவரை, இந்த அரசமைப்பின் திருத்தமெனக் கொள்ளப்படுதல் ஆகாது.

[1][170. சட்டமன்றப் பேரவைகளின் கட்டமைப்பு :

(1) 333 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, மாநிலம் ஒவ்வொன்றின் சட்டமன்றப் பேரவையும், அந்த மாநிலத்தின் நிலவரைத் தேர்தல் தொகுதிகளிலிருந்து நேரடித் தேர்தல் வாயிலாகத் தெரிந்தெடுக்கப்பெறும் ஐந்நூற்றுக்கு மேற்படாத, ஆனால் அறுபதுக்குக் குறையாத உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்கும்.

(2). (1) ஆம் கூறினைப் பொறுத்தவரை, மாநிலத்தின் தேர்தல் தொகுதி ஒவ்வொன்றின் மக்கள்தொகைக்கும் அதற்குப் பகிர்ந்தொதுக்கப்படும் பதவியிடங்களின் எண்ணிக்கைக்கும் உள்ள விகிதம், இயலுமளவு, மாநிலம் எங்கணும் ஒருபடித்தாய் இருக்கும் வண்ணம், மாநிலம் ஒவ்வொன்றும் நிலவரைத் தேர்தல் தொகுதிகளாகப் பிரிக்கப்படுதல் வேண்டும்.

[2][விளக்கம். - இந்தக் கூறில், ''மக்கள்தொகை'' என்னும் சொல், கடைசிமுறை மக்கள் கணக்கெடுப்பின்படி தொடர்புடைய விவரங்களைக் கண்டறிந்து வெளியிடப்பட்டுள்ள மக்கள் தொகை என்று பொருள்படும்:

வரம்புரையாக : இந்த விளக்கத்தில் தொடர்புடைய விவரங்கள் வெளியிடப்பட்டுள்ள கடைசிமுறை மக்கள் கணக்கெடுப்பு என்பது, [3][2026] ஆம் ஆண்டிற்குப் பின்னர் முதலாவதாக எடுக்கப்படும் மக்கள் கணக்கெடுப்பின்படியாகும் தொடர்புடைய விவரங்கள் வெளியிடப்படும் வரையில் [4][2001] ஆம் மக்கள் கணக்கெடுப்பைச் சுட்டுவதாகவே பொருள் கொள்ளப்படுதல் வேண்டும்.]

(3) ஒவ்வொரு முறையும் மக்கள் கணக்கெடுப்பு முடிவடைவதன்மேல் மாநிலம் ஒவ்வொன்றின் சட்டமன்றப் பேரவையிலுமுள்ள பதவியிடங்களின் மொத்த எண்ணிக்கையும் மாநிலம் ஒவ்வொன்றையும் நிலவரைத் தேர்தல் தொகுதிகளாகப் பிரித்தலும், நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கும் அதிகாரஅமைப்பாலும் முறையிலும் மறுநேரமைவு செய்யப்படுதல் வேண்டும்:

வரம்புரையாக : அத்தகைய மறுநேரமைவு, அப்போது நிலவுறும் சட்டமன்றப் பேரவை கலைக்கப்படும் வரையில், அந்தப் பேரவையிலுள்ள சார்பாற்றத்தைப் பாதிக்காது:]

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 9 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

2. விளக்கத்திற்கு மாற்றாக அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 29 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) அமைக்கப்பட்டது.

3. ''2000'' என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 5 ஆம் பிரிவினால் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

4. ''1991'' என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 4 ஆம் பிரிவினால் (22–6–2003 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. முதன்முதலில் இருந்த எண்கள் ''1971'' என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 5 ஆம் பிரிவினால் ''1991'' என்ற எண்கள் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

(2) Any law referred to in clause (1) shall contain such provisions for the amendment of this Constitution as may be necessary to give effect to the provisions of the law and may also contain such supplemental, incidental and consequential provisions as Parliament may deem necessary.

(3) No such law as aforesaid shall be deemed to be an amendment of this Constitution for the purposes of article 368.

[1][**170. Composition of the Legislative Assemblies :**

(1) Subject to the provisions of article 333, the Legislative Assembly of each State shall consist of not more than five hundred, and not less than sixty, members chosen by direct election from territorial constituencies in the State.

(2) For the purposes of clause (1), each State shall be divided into territorial constituencies in such manner that the ratio between the population of each constituency and the number of seats allotted to it shall, so far as practicable, be the same throughout the State.

[2][**Explanation** - In this clause, the expression "population" means the population as ascertained at the last preceding census of which the relevant figures have been published:

Provided that the reference in this Explanation to the last preceding census of which the relevant figures have been published shall, until the relevant figures for the first census taken after the year [3][2026] have been published, be construed as a reference to the [4][2001] census.]

(3) Upon the completion of each census, the total number of seats in the Legislative Assembly of each State and the division of each State into territorial constituencies shall be readjusted by such authority and in such manner as Parliament may by law determine:

Provided that such readjustment shall not affect representation in the Legislative Assembly until the dissolution of the then existing Assembly:]

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 9 (w.e.f. 1-11-1956).
2. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 29, for the Explanation (w.e.f. 3-1-1977).
3. Subs. by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 5, for "2000" (w.e.f. 21-2-2002).
4. Subs. by the Constitution (Eighty-seventh Amendment) Act, 2003, s. 4, for "1991" (w.e.f. 22-6-2003). The figures "1991" were subs. for the original figures "1971" by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 5 (w.e.f. 21-2-2002).

[1][மேலும் வரம்புரையாக : அத்தகைய மறுநேரமைவு, குடியரசுத்தலைவர் ஆணையின்வழி, குறித்துரைக்கும் தேதியிலிருந்து செல்திறம் பெறும்; அத்தகைய மறுநேரமைவு செல்திறம் பெறும்வரையில், அந்தச் சட்டமன்றப் பேரவைக்கான தேர்தல் எதுவும், அத்தகைய மறுநேரமைவுக்கு முன்பு நிலவிய நிலவரைத் தேர்தல் தொகுதிகளின் அடிப்படையில் நடத்தப்பெறலாம்:

**இன்னும் வரம்புரையாக :** [2][2026] ஆம் ஆண்டிற்குப் பின்னர் முதலாவதாக எடுக்கப்படும் மக்கள் கணக்கெடுப்பின்படியாகும் தொடர்புடைய விவரங்கள் வெளியிடப்படும் வரையில் –

[3][(i) 1971 ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பின் அடிப்படையில் மறுநேரமைவு செய்யப்பட்டவாறு, மாநிலம் ஒவ்வொன்றின் சட்டமன்றப் பேரவையிலுள்ள பதவியிடங்களின் மொத்த எண்ணிக்கையையும்;

(ii) [4][2001] ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பின் அடிப்படையில் மறுநேரமைவு செய்யப்பட்டவாறு, அந்த மாநிலத்தை நிலவரைத் தேர்தல் தொகுதிகளாகப் பிரிப்பதையும்,

இந்தக் கூறின்படி மறுநேரமைவு] செய்யவேண்டிய தேவையில்லை.]

**171. சட்டமன்ற மேலவைகளின் கட்டமைப்பு :**

**(1)** சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில் அம்மேலவையிலுள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை, அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையிலுள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் [5][மூன்றில் ஒரு] பகுதிக்கு மேற்படுதல் ஆகாது:

**வரம்புரையாக :** ஒரு மாநிலச் சட்டமன்ற மேலவையிலுள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை, எந்நேர்விலும், நாற்பதுக்குக் குறைவாக இருத்தல் ஆகாது.

**(2)** நாடாளுமன்றம், சட்டத்தினால் பிறவாறு வகைசெய்கிற வரையில், ஒரு மாநிலச் சட்டமன்ற மேலவையின் கட்டமைப்பு **(3)** ஆம் கூறில் வகை செய்யப்பட்டுள்ளவாறு இருக்கும்.

**(3)** ஒரு மாநிலச் சட்டமன்ற மேலவையிலுள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில்–

(அ) கூடுமான வரையில் மூன்றில் ஒரு பகுதியினர், நகராட்சிகள், மாவட்டக் கழகங்கள், நாடாளுமன்றம் சட்டத்தினால் குறித்துரைக்கும் அந்த மாநிலத்திலுள்ள பிற உள்ளாட்சி அதிகாரஅமைப்புகள் ஆகியவற்றின் உறுப்பினர்களைக் கொண்ட வாக்காளர் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்பெறுதல் வேண்டும்;

(ஆ) கூடுமானவரையில், பன்னிரண்டில் ஒரு பகுதியினர், இந்திய ஆட்சிநிலவரையிலுள்ள பல்கலைக்கழகம் ஒன்றில் குறைந்தது மூன்று ஆண்டுகளுக்கு முன்னதாகப் பட்டம் பெற்றவர்களாகவும் அல்லது அத்தகைய பல்கலைக்கழகம் ஒன்றில் பட்டம் பெற்ற ஒருவரின் தகுதிப்பாடுகளுக்கு நிகரானவை என நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தாலோ அதன் வழியாலோ வகுத்துரைக்கப்படும் தகுதிப்பாடுகளைக் குறைந்தது மூன்று ஆண்டுகளேனும் உடையவர்களாகவும் அந்த மாநிலத்தில் வாழ்கின்றவர்களைக் கொண்ட வாக்காளர் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்பெறுதல் வேண்டும்;

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 29 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. "2000" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 5 ஆம் பிரிவினால் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. குறித்தசில சொற்களுக்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 5 ஆம் பிரிவினால் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.
4. "1991" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 4 ஆம் பிரிவினால் (22–6–2003 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. முதன்முதலில் இருந்த எண்கள் "1971" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 5 ஆம் பிரிவினால் "1991" என்ற எண்கள் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
5. "நான்கில் ஒரு" என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 10 ஆம் பிரிவினால் (1-11-1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

[1][Provided further that such readjustment shall take effect from such dates as the President may, by order, specify and until such readjustment takes effect, any election to the Legislative Assembly may be held on the basis of the territorial constituencies existing before such readjustment:

Provided also that until the relevant figures for the first census taken after the year [2][2026] have been published, it shall not be necessary to [3][readjust -

(i) the total number of seats in the Legislative Assembly of each State as readjusted on the basis of the 1971 census; and

(ii) the division of such State into territorial constituencies as may be readjusted on the basis of the [4][2001] census,

under this clause.]]

**171. Composition of the Legislative Councils :**

(1) The total number of members in the Legislative Council of a State having such a Council shall not exceed [5][one-third] of the total number of members in the Legislative Assembly of that State:

Provided that the total number of members in the Legislative Council of a State shall in no case be less than forty.

(2) Until Parliament by law otherwise provides, the composition of the Legislative Council of a State shall be as provided in clause (3).

(3) Of the total number of members of the Legislative Council of a State -

(a) as nearly as may be, one-third shall be elected by electorates consisting of members of municipalities, district boards and such other local authorities in the State as Parliament may by law specify;

(b) as nearly as may be, one-twelfth shall be elected by electorates consisting of persons residing in the State who have been for at least three years graduates of any university in the territory of India or have been for at least three years in possession of qualifications prescribed by or under any law made by Parliament as equivalent to that of a graduate of any such university;

---

1. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 29 (w.e.f. 3-1-1977).
2. Subs. by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 5, for "2000" (w.e.f. 21-2-2002).
3. Subs by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 5, for certain words (w.e.f 21-2-2002).
4. Subs. by the Constitution (Eighty-seventh Amendment) Act, 2003, s. 4, for "1991" (w.e.f. 22-6-2003). The figures "1991"were subs. for the original figures "1971" by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 5 (w.e.f. 21-2-2002).
5. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s.10, for "one-fourth" (w.e.f. 1-11-1956).

(இ) கூடுமானவரையில், பன்னிரண்டில் ஒரு பகுதியினர், நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தாலோ அதன் வழியாலோ வகுத்துரைக்கப்படும் உயர்நிலைப் பள்ளித் தரத்திற்குக் குறையாத அளவில் அமைந்த மாநிலத்திலுள்ள கல்வி நிறுவனங்களில் குறைந்தது மூன்று ஆண்டுகளேனும் ஆசிரியராக இருந்தவர்களைக் கொண்ட வாக்காளர் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்பெறுதல் வேண்டும்;

(ஈ) கூடுமானவரையில், மூன்றில் ஒரு பகுதியினர், மாநிலச் சட்டமன்றப் பேரவை உறுப்பினர்களால் அந்தப் பேரவையின் உறுப்பினர்களாக இல்லாதவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெறுதல் வேண்டும்;

(உ) எஞ்சியோர், (5) ஆம் கூறின் வகையங்களுக்கு இணங்க ஆளுநரால் நியமனம் செய்யப்பெறுதல் வேண்டும்.

(4). (3) ஆம் கூறின் (அ), (ஆ), (இ) ஆகிய உட்கூறுகளின்படி தேர்ந்தெடுக்கப்பெற வேண்டிய உறுப்பினர்கள், நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தாலோ அதன் வழியாலோ வகுத்துரைக்கப்படும் நிலவரைத் தேர்தல் தொகுதிகளிலிருந்து தெரிந்தெடுக்கப்பெறுதல் வேண்டும்; மேலும், மேற்சொன்ன உட்கூறுகளின்படியும், மேற்சொன்ன கூறின் (ஈ) உட்கூறின்படியும் நடைபெறும் தேர்தல்கள், ஒற்றைமாற்றுவாக்கு வழியிலான வீதச் சார்பாற்றமுறைக்கிணங்க நடத்தப்பெறுதல் வேண்டும்.

(5). (3) ஆம் கூறின் (உ) உட்கூறின்படி ஆளுநரால் நியமனம் செய்யப்பெறும் உறுப்பினர்கள் பின்வருவன போன்ற பொருட்பாடுகளைப் பொறுத்துச் சிறந்த தனியறிவோ, செயலுறு பட்டறிவோ உடையவர்களாக இருத்தல் வேண்டும், அவையாவன: –

இலக்கியம், அறிவியல், கலை, கூட்டுறவு இயக்கம் மற்றும் சமுதாயப்பணி.

**172. மாநிலச் சட்டமன்றங்களின் காலவரை :**

(1) ஒவ்வொரு மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையும், அது முன்னதாகவே கலைக்கப்பட்டாலன்றி, அதன் முதல் கூட்டத்திற்காகக் குறிக்கப்பட்ட தேதியிலிருந்து [1][ஐந்தாண்டுகள்] தொடர்ந்து இருக்கும்; அதற்குமேல் நீடித்தலாகாது; மேற்சொன்ன [1][ஐந்தாண்டுக்] காலஅளவு கழிவுறுங்கால் அந்த அவை கலைக்கப்பட்டதாக ஆகிவிடும்:

**வரம்புரையாக :** நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டில் இருக்குங்கால், மேற்சொன்ன காலஅளவை, ஒரு தடவையில் ஓர் ஆண்டுக்கு மேற்படாமலும், எந்நேர்விலும், அந்தச் சாற்றாணை செயற்பாடு அற்றுப்போன பின்பு ஆறு மாதக் காலஅளவிற்கு மேற்படாமலும் நாடாளுமன்றம் சட்டத்தினால் நீட்டிக்கலாம்.

(2) ஒரு மாநிலத்தின் சட்டமன்ற மேலவை கலைப்புக்கு உள்ளாவதில்லை; ஆனால், நாடாளுமன்றம் சட்டத்தினால் இதன்பொருட்டு வகுக்கும் வகையங்களுக்கு இணங்க, ஒவ்வோர் இரண்டாம் ஆண்டும் கழிவுறுவதன்மேல், கூடியவிரைவில், அந்த அவையின் உறுப்பினர்களில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பகுதியினர் விலகிவிடுதல் வேண்டும்.

---

1."ஆறு ஆண்டுகள்'' என்ற சொற்களுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 24 ஆம் பிரிவினால் (6–9–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன. முதன்முதலில் இருந்த சொற்கள் "ஐந்தாண்டுகள்'' என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 30 ஆம் பிரிவினால் "ஆறு ஆண்டுகள்''(3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

(c) as nearly as may be, one-twelfth shall be elected by electorates consisting of persons who have been for at least three years engaged in teaching in such educational institutions within the State, not lower in standard than that of a secondary school, as may be prescribed by or under any law made by Parliament;

(d) as nearly as may be, one-third shall be elected by the members of the Legislative Assembly of the State from amongst persons who are not members of the Assembly;

(e) the remainder shall be nominated by the Governor in accordance with the provisions of clause (5).

(4) The members to be elected under sub-clauses (a), (b) and (c) of clause (3) shall be chosen in such territorial constituencies as may be prescribed by or under any law made by Parliament, and the elections under the said sub-clauses and under sub-clause (d) of the said clause shall be held in accordance with the system of proportional representation by means of the single transferable vote.

(5) The members to be nominated by the Governor under sub-clause (e) of clause (3) shall consist of persons having special knowledge or practical experience in respect of such matters as the following, namely: -

Literature, science, art, co-operative movement and social service.

**172. Duration of State Legislatures :**

(1) Every Legislative Assembly of every State, unless sooner dissolved, shall continue for [1][five years] from the date appointed for the first meeting and no longer and the expiration of the said period of [1][five years] shall operate as a dissolution of the Assembly:

Provided that the said period may, while a Proclamation of Emergency is in operation, be extended by Parliament by law for a period not exceeding one year at a time and not extending in any case beyond a period of six months after the Proclamation has ceased to operate.

(2) The Legislative Council of a State shall not be subject to dissolution, but as nearly as possible one-third of the members thereof shall retire as soon as may be on the expiration of every second year in accordance with the provisions made in that behalf by Parliament by law.

---

1. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 24 for the words "six years" (w.e.f. 6-9-1979). The words "six years" were subs. for the original words "five years" by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 30 (w.e.f. 3-1-1977)

**173. மாநிலச் சட்டமன்ற உறுப்பினர் பதவிக்கான தகுதிப்பாடு :**

ஒருவர்—

[1][(அ) இந்தியக் குடிமகனாக இருக்கிறார் என்பதுடன், தேர்தல் ஆணையத்தால் அதன்பொருட்டு அதிகாரமளிக்கப்பெற்றுள்ள ஒருவர் முன்னிலையில், மூன்றாம் இணைப்புப்பட்டியலில் உள்ள சொன்முறைகளுக்கிணங்க ஓர் ஆணைமொழியை அல்லது உறுதிமொழியை ஏற்றுக் கையொப்பமிட்டவராகவும்,]

(ஆ) சட்டமன்றப் பேரவையிலுள்ள பதவியிடமாக இருப்பின், இருபத்தைந்து வயதுக்குக் குறையாதவராகவும், சட்டமன்ற மேலவையிலுள்ள பதவியிடமாக இருப்பின், முப்பது வயதுக்குக் குறையாதவராகவும்,

(இ) நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தாலோ அதன் வழியாலோ அதன்பொருட்டு வகுத்துரைக்கப்படும் பிற தகுதிப்பாடுகளை உடையவராகவும்

இருந்தாலன்றி, அவர் ஒரு மாநிலச் சட்டமன்றப் பதவியிடம் ஒன்றில் அமர்வதற்கெனத் தெரிந்தெடுக்கப்பெறுவதற்குத் தகுதிப்பாடு உடையவர் ஆகார்.

**[2][174. மாநிலச் சட்டமன்றக் கூட்டத்தொடர்கள், அக்கூட்டத் தொடர்களை இறுதி செய்தல் மற்றும் கலைத்தல் :**

(1) ஆளுநர் தாம் தக்கதெனக் கருதும் காலத்திலும் இடத்திலும் கூடுமாறு அவ்வப்போது மாநிலச் சட்டமன்ற அவைக்கு அல்லது அவை ஒவ்வொன்றுக்கும் அழைப்பு விடுப்பார்; ஆனால், ஒரு கூட்டத்தொடரின் கடைசி அமர்வுக்கும், அடுத்த கூட்டத்தொடரின் முதல் அமர்வுக்கெனக் குறிப்பிடப்படும் தேதிக்கும் இடையேயுள்ள காலஅளவு ஆறு மாதங்களுக்குக் குறைவாகவே இருத்தல் வேண்டும்.

(2) ஆளுநர், அவ்வப்போது –

(அ) அவையின் அல்லது ஈரவைகளில் ஒன்றின் கூட்டத் தொடரினை இறுதிசெய்யலாம்;

(ஆ) சட்டமன்றப் பேரவையைக் கலைத்துவிடலாம்.]

**175. சட்டமன்ற அவையில் அல்லது அவைகளில் உரையாற்றவும் அவற்றிற்குச் செய்தியுரை அனுப்பவும் ஆளுநருக்குள்ள உரிமை :**

(1) ஆளுநர், சட்டமன்றப் பேரவையில் அல்லது சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில், அந்த மாநிலச் சட்டமன்ற ஈரவைகளில் ஒன்றில் அல்லது ஈரவைகளின் ஒருங்கமர் கூட்டத்தில் உரையாற்றலாம்; மேலும், அதற்காக உறுப்பினர்களின் வருகையை வேண்டுறுத்தலாம்.

(2) ஆளுநர், சட்டமன்றத்தில் அப்போது ஓர்விலுள்ள ஒரு சட்டமுன்வடிவைப் பொறுத்தோ பிற எதனையும் பொறுத்தோ மாநிலச் சட்டமன்றத்தின் அவைக்கு அல்லது அவைகளுக்குச் செய்தியுரை அனுப்பலாம்; அவ்வாறான செய்தியுரையினைப் பெற்றுள்ள அவை, அச்செய்தியுரையில் ஓர்வுக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென வேண்டுறுத்தப்பட்ட பொருட்பாட்டை, ஒல்லும் விரைவுடன், ஓர்வு செய்தல் வேண்டும்.

1. அரசமைப்புச் (பதினாறாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 4 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

2. அரசமைப்புச் (ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 8 ஆம் பிரிவினால் (18–6–1951 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

**173. Qualification for membership of the State Legislature:**

A person shall not be qualified to be chosen to fill a seat in the Legislature of a State unless he—

[1][(a) is a citizen of India, and makes and subscribes before some person authorised in that behalf by the Election Commission an oath or affirmation according to the form set out for the purpose in the Third Schedule;]

(b) is, in the case of a seat in the Legislative Assembly, not less than twenty-five years of age and, in the case of a seat in the Legislative Council, not less than thirty years of age; and

(c) possesses such other qualification as may be prescribed in that behalf by or under any law made by Parliament.

[2][**174. Sessions of the State Legislature, prorogation and dissolution :**

(1) The Governor shall from time to time summon the House or each House of the Legislature of the State to meet at such time and place as he thinks fit, but six months shall not intervene between its last sitting in one session and the date appointed for its first sitting in the next session.

(2) The Governor may from time to time—

(a) prorogue the Houses or either House;

(b) dissolve the Legislative Assembly.]

**175. Right of Governor to address and send messages to the House or Houses :**

(1) The Governor may address the Legislative Assembly or, in the case of a State having a Legislative Council, either House of the Legislature of the State, or both Houses assembled together, and may for that purpose require the attendance of members.

(2) The Governor may send messages to the House or Houses of the Legislature of the State, whether with respect to a Bill then pending in the Legistlature or otherwise, and a House to which any message is so sent shall with all convenient despatch consider any matter required by the message to be taken into consideration.

---

1. Subs. by the Constitution (Sixteenth Amendment) Act, 1963, s. 4 (w.e.f. 5-10-1963).
2. Subs. by the Constitution (First Amendment) Act, 1951, s. 8 (w.e.f. 18-6-1951).

**176. ஆளுநரின் சிறப்புரை :**

(1) [1][சட்டமன்றப் பேரவைக்கான பொதுத் தேர்தல் ஒவ்வொன்றுக்கும் பின்பு நடைபெறும் முதல் கூட்டத்தொடரின்] தொடக்கத்திலும், [1][ஒவ்வோர் ஆண்டின் முதல் கூட்டத்தொடரின் தொடக்கத்திலும்,] சட்டமன்றப் பேரவையில் அல்லது சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில், ஈரவைகளின் ஒருங்கமர் கூட்டத்தில் ஆளுநர் உரையாற்றி அதனைக் கூட்டியதற்கான காரணங்களையும் சட்டமன்றத்திற்குத் தெரிவிப்பார்.

(2) அவ்வுரையில் சுட்டப்பட்ட பொருட்பாடுகளைப் பற்றி விவாதம் செய்வதற்கு[2]*** நேரம் ஒதுக்குவதற்காக, அவையின் அல்லது ஈரவைகளில் ஒவ்வொன்றின் நெறிமுறையை ஒழுங்குறுத்தும் விதிகளின்வழி வகை செய்தல் வேண்டும்.

**177. சட்டமன்ற அவைகள் தொடர்பாக, அமைச்சர்களுக்கும் தலைமை வழக்குரைஞருக்கும் உள்ள உரிமைகள் :**

மாநிலத்து அமைச்சர் ஒவ்வொருவரும், அந்த மாநிலத் தலைமை வழக்குரைஞரும், அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையில் அல்லது சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில், ஈரவைகளிலும் உரையாற்றவும் பிற வகையில் அதன் நடவடிக்கைகளில் பங்குகொள்ளவும் தாம் உறுப்பினராகப் பெயர் குறிக்கப்பெறும் சட்டமன்றக் குழு எதிலும் உரையாற்றவும் பிறவகையில் அதன் நடவடிக்கைகளில் பங்குகொள்ளவும் உரிமை உடையவர் ஆவார்; ஆனால், இந்த உறுப்பின் பயன்திறனை வைத்து அவர் வாக்களிக்கும் உரிமை கொண்டவர் ஆகார்.

### மாநிலச் சட்டமன்றப் பதவியாளர்கள்

**178. சட்டமன்றப் பேரவைத்தலைவரும் துணைத் தலைவரும் :**

மாநிலச் சட்டமன்றப் பேரவை ஒவ்வொன்றும், அந்த அவையின் உறுப்பினர்கள் இருவரை முறையே அதன் தலைவராகவும் துணைத்தலைவராகவும், கூடிய விரைவில் தெரிந்தெடுத்தல் வேண்டும்; மேலும், பேரவைத் தலைவர் அல்லது துணைத்தலைவர் பதவி காலியாகுந்தோறும் மற்றோர் உறுப்பினரைப் பேரவைத்தலைவராக அல்லது, நேர்வுக்கேற்ப, துணைத் தலைவராக அந்த அவை தெரிந்தெடுத்தல் வேண்டும்.

**179. பேரவைத் தலைவர், துணைத் தலைவர் ஆகியோர் பதவியை விட்டகலுதலும் பதவிவிலகுதலும் பதவியிலிருந்து அகற்றப்படுதலும் :**

பேரவைத் தலைவராகவோ துணைத் தலைவராகவோ பதவி வகிக்கும் ஓர் உறுப்பினர் –

(அ) பேரவையின் உறுப்பினராக இருப்பது அற்றுப்போய்விடின், அவர் தம் பதவியைவிட்டகலுதல் வேண்டும்;

(ஆ) அந்த உறுப்பினர் பேரவைத்தலைவராக இருப்பின், துணைத் தலைவருக்கும், அந்த உறுப்பினர் துணைத்தலைவராக இருப்பின், பேரவைத் தலைவருக்கும், எச்சமயத்திலும், தம் கையொப்பமிட்டு எழுத்துவழித் தெரிவித்து, தம் பதவியை விட்டுவிலகிக் கொள்ளலாம்; மற்றும்

(இ) பேரவையின் அப்போதைய அனைத்து உறுப்பினர்களில் பெரும்பான்மையினர் அந்த அவையில் நிறைவேற்றும் தீர்மானம் ஒன்றினால் அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம்:

---

1. "ஒவ்வொரு கூட்டத்தொடரின்" என்பதற்கு, அரசமைப்புச் (ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1951 ஆல் மாற்றாக அமைக்கப்பட்டது.
2. "மற்றும் அத்தகைய விவாதம் அவையின் பிற அலுவல்கள் மீது முந்துரிமை கொள்வதற்கு" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 9 ஆம் பிரிவினால் (18-6-1951 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

**176. Special address by the Governor :**

(1) At the commencement of [1][the first session after each general election to the Legislative Assembly and at the commencement of the first session of each year], the Governor shall address the Legislative Assembly or, in the case of a State having a Legislative Council, both Houses assembled together and inform the Legislature of the causes of its summons.

(2) Provision shall be made by the rules regulating the procedure of the House or either House for the allotment of time for discussion of the matters referred to in such address.[2]***

**177. Rights of Ministers and Advocate-General as respects the Houses :**

Every Minister and the Advocate-General for a State shall have the right to speak in, and otherwise to take part in the proceedings of the Legislative Assembly of the State or, in the case of a State having a legislative Council, both Houses, and to speak in, and otherwise to take part in the proceedings of, any committee of the Legislature of which he may be named a member but shall not, by virtue of this article, be entitled to vote.

## OFFICERS OF THE STATE LEGISLATURE

**178. The Speaker and Deputy Speaker of the Legislative Assembly :**

Every Legislative Assembly of a State shall, as soon as may be, choose two members of the Assembly to be respectively Speaker and Deputy Speaker thereof and, so often as the office of Speaker or Deputy Speaker becomes vacant the Assembly shall choose another member to be Speaker or Deputy Speaker, as the case may be.

**179. Vacation and resignation of, and removal from, the offices of Speaker and Deputy Speaker :**

A member holding office as Speaker or Deputy Speaker of an Assembly —

(a) shall vacate his office if he ceases to be a member of the Assembly;

(b) may at any time by writing under his hand addressed, if such member is the Speaker, to the Deputy Speaker, and if such member is the Deputy Speaker, to the Speaker, resign his office; and

(c) may be removed from his office by a resolution of the Assembly passed by a majority of all the then members of the Assembly:

---

1. Subs. by the Constitution (First Amendment) Act, 1951, "for every session".
2. The words "and for the precedence of such discussion over other business of the House" omitted by the Constitution (First Amendment) Act, 1951, s. 9 (w.e.f. 18-6-1951).

**வரம்புரையாக :** (இ) கூறினைப் பொறுத்த தீர்மானம் எதுவும், அத்தீர்மானத்தை முன்மொழியவிருக்கும் கருத்தினைத் தெரிவித்துப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்புக் கொடுத்திருந்தாலன்றி, முன்மொழியப்படுதல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக :** பேரவை கலைக்கப்படுந்தோறும், அவ்வாறு கலைக்கப்பட்டதன் பின்பு, அடுத்த பேரவையின் முதல் கூட்டம் தொடங்குவதற்கு உடன்முன்பு வரையில், பேரவைத்தலைவர் தம் பதவியை விட்டகல வேண்டியதில்லை.

**180. பேரவைத்தலைவரின் பதவிக்குள்ள கடமைகளைப் புரிந்துவரவோ தலைவராகச் செயல்படவோ துணைத்தலைவருக்கு அல்லது பிற உறுப்பினருக்கு உள்ள அதிகாரம் :**

(1) பேரவைத்தலைவரின் பதவி காலியாக இருக்குங்கால், அப்பதவிக்குள்ள கடமைகளைப் பேரவைத் துணைத்தலைவரும், துணைத்தலைவர் பதவியும் காலியாக இருப்பின், ஆளுநர் அதன்பொருட்டு அமர்த்தும் பேரவையின் உறுப்பினர் எவரும் புரிந்துவருதல் வேண்டும்.

(2) பேரவையின் அமர்வு எதிலும், பேரவைத்தலைவர் அவையில் இல்லாதபோது துணைத்தலைவரும், அவரும் இல்லாதிருப்பின், பேரவையின் நெறிமுறை விதிகளின்படி தீர்மானிக்கப்பெறும் உறுப்பினர் எவரும், அத்தகையவரும் இல்லாதிருப்பின், அந்தப் பேரவையினால் தீர்மானிக்கப்பெறும் பிற உறுப்பினர் எவரும் பேரவைத் தலைவராகச் செயல்படுதல் வேண்டும்.

**181. பேரவைத்தலைவரை அல்லது துணைத்தலைவரைப் பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின் மீது ஓர்வு நிகழும் போது அவர் தலைமை வகித்தல் ஆகாது :**

(1) சட்டமன்றப் பேரவையின் அமர்வு எதிலும், பேரவைத்தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின்மீது ஓர்வு நிகழும்போது பேரவைத்தலைவரும் அல்லது துணைத்தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின்மீது ஓர்வு நிகழும்போது துணைத்தலைவரும், அவர் அந்த அவையில் இருந்தபோதிலும், தலைமை வகித்தல் ஆகாது; மேலும், அத்தகைய ஒவ்வோர் அமர்வுக்கும், 180 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறின் வகையங்கள், பேரவைத்தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, துணைத்தலைவர் இல்லாதிருக்கிற ஓர் அமர்வுக்குப் பொருந்துவன போன்றே பொருந்துவன ஆகும்.

(2) சட்டமன்றப். பேரவையில், பேரவைத்தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின்மீது ஓர்வு நிகழும்போது, பேரவைத்தலைவர் அந்த அவையில் உரையாற்றுவதற்கும் பிற வகையில் அதன் நடவடிக்கைகளில் பங்குகொள்வதற்கும் உரிமை உடையவர் ஆவார்; மேலும், 189 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், அவர் அத்தகைய தீர்மானத்தின்மீதும், அது தொடர்பான நடவடிக்கைகளில் எழும் பிற எந்தப் பொருட்பாட்டின்மீதும் முதற்கண் மட்டுமே வாக்களிப்பதற்கு உரிமை கொண்டவர் ஆவாரேயன்றி, வாக்குகள் சமன்மையாக அமையும் நேர்வில், வாக்களிப்பதற்கு உரிமைகொண்டவர் ஆகார்.

**182. சட்டமன்ற மேலவைத்தலைவரும் துணைத்தலைவரும் :**

சட்டமன்ற மேலவை உள்ள மாநிலம் ஒவ்வொன்றின் மேலவையும், அந்த அவையின் உறுப்பினர்கள் இருவரை முறையே அதன் தலைவராகவும் துணைத்தலைவராகவும், கூடிய விரைவில், தெரிந்தெடுத்தல் வேண்டும்; மேலும், மேலவைத்தலைவர் அல்லது துணைத்தலைவர் பதவி காலியாகுந்தோறும், மற்றோர் உறுப்பினரை, அதன் தலைவராக அல்லது, நேர்வுக்கேற்ப, துணைத் தலைவராக அந்த மேலவை தெரிந்தெடுத்தல் வேண்டும்.

**183. சட்டமன்ற மேலவைத்தலைவர், துணைத்தலைவர் ஆகியோர் பதவியை விட்டகலுதலும் பதவி விலகுதலும் பதவியிலிருந்து அகற்றப்படுதலும் :**

ஒரு சட்டமன்ற மேலவைத் தலைவராகவோ துணைத்தலைவராகவோ பதவி வகிக்கும் ஓர் உறுப்பினர் –

Provided that no resolution for the purpose of clause (c) shall be moved unless at least fourteen days' notice has been given of the intention to move the resolution:

Provided further that, whenever the Assembly is dissolved, the Speaker shall not vacate his office until immediately before the first meeting of the Assembly after the dissolution.

**180. Power of the Deputy Speaker or other person to perform the duties of the office of, or to act as, Speaker :**

(1) While the office of Speaker is vacant, the duties of the office shall be performed by the Deputy Speaker or, if the office of Deputy Speaker is also vacant, by such member of the Assembly as the Governor may appoint for the purpose.

(2) During the absence of the speaker from any sitting of the Assembly the Deputy Speaker or, if he is also absent, such person as may be determined by the rules of procedure of the Assembly, or, if no such person is present, such other person as may be determined by the Assembly, shall act as Speaker.

**181. The Speaker or the Deputy Speaker not to preside while a resolution for his removal from office is under consideration :**

(1) At any sitting of the Legislative Assembly, while any resolution for the removal of the Speaker from his office is under consideration, the Speaker, or while any resolution for the removal of the Deputy Speaker from his office is under consideration, the Deputy Speaker, shall not, though he is present, preside, and the provisions of clause (2) of article 180 shall apply in relation to every such sitting as they apply in relation to a sitting from which the Speaker or, as the case may be, the Deputy Speaker, is absent.

(2) The Speaker shall have the right to speak in, and otherwise to take part in the proceedings of, the Legislative Assembly while any resolution for his removal from office is under consideration in the Assembly and shall, notwithstanding anything in article 189, be entitled to vote only in the first instance on such resolution or on any other matter during such proceedings but not in the case of an equality of votes.

**182. The Chairman and Deputy Chairman of the Legislative Council :**

The Legislative Council of every State having such Council shall, as soon as may be, choose two members of the Council to be respectively Chairman and Deputy Chairman thereof and, so often as the office of Chairman or Deputy chairman becomes vacant, the Council shall choose another member to be Chairman or Deputy Chairman, as the case may be.

**183. Vacation and resignation of, and removal from, the offices of Chairman and Deputy Chairman :**

A member holding office as Chairman or Deputy Chairman of a Legislative Council —

(அ) மேலவையின் உறுப்பினராக இருப்பது அற்றுப்போய்விடின், அவர் தம் பதவியை விட்டகலுதல் வேண்டும்;

(ஆ) அத்தகைய உறுப்பினர் மேலவைத்தலைவராக இருப்பின், துணைத் தலைவருக்கும் அத்தகைய உறுப்பினர் துணைத்தலைவராக இருப்பின், மேலவைத் தலைவருக்கும், எச்சமயத்திலும், தம் கையொப்பமிட்டு எழுத்துவழித் தெரிவித்து, தம் பதவியை விட்டு விலகிக்கொள்ளலாம்; மற்றும்

(இ) மேலவையின் அப்போதைய அனைத்து உறுப்பினர்களில் பெரும்பான்மையினர் அந்த அவையில் நிறைவேற்றும் தீர்மானம் ஒன்றினால் அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம் :

வரம்புரையாக : (இ) கூறினைப் பொறுத்த தீர்மானம் எதுவும், அத்தீர்மானத்தை முன்மொழியவிருக்கும் கருத்தினைத் தெரிவித்துப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்புக் கொடுத்திருந்தாலன்றி, முன்மொழியப்படுதல் ஆகாது.

**184. மேலவைத்தலைவரின் பதவிக்குள்ள கடமைகளைப் புரிந்துவரவோ தலைவராகச் செயல்படவோ துணைத்தலைவருக்கு அல்லது பிற உறுப்பினருக்கு உள்ள அதிகாரம் :**

(1) மேலவைத்தலைவரின் பதவி காலியாக இருக்குங்கால், அப்பதவிக்குள்ள கடமைகளை மேலவைத் துணைத்தலைவரும், துணைத்தலைவர் பதவியும் காலியாக இருப்பின், ஆளுநர் அதன்பொருட்டு அமர்த்தும் மேலவையின் உறுப்பினர் எவரும் புரிந்துவருதல் வேண்டும்.

(2) மேலவையின் அமர்வு எதிலும் மேலவைத்தலைவர் அவையில் இல்லாதபோது துணைத்தலைவரும், அவரும் இல்லாதிருப்பின், மேலவையின் நெறிமுறை விதிகளின்படி தீர்மானிக்கப்பெறும் உறுப்பினர் எவரும், அத்தகையவரும் இல்லாதிருப்பின், மேலவையினால் தீர்மானிக்கப்பெறும் பிற உறுப்பினர் எவரும், மேலவைத்தலைவராகச் செயல்படுதல் வேண்டும்.

**185. மேலவைத்தலைவரை அல்லது துணைத்தலைவரைப் பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின் மீது ஓர்வு நிகழும்போது அவர் தலைமை வகித்தல் ஆகாது :**

(1) சட்டமன்ற மேலவையின் அமர்வு எதிலும், மேலவைத்தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின்மீது ஓர்வு நிகழும்போது மேலவைத்தலைவரும் அல்லது துணைத்தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின்மீது ஓர்வு நிகழும்போது துணைத்தலைவரும், அவர் அந்த அவையில் இருந்தபோதிலும், தலைமை வகித்தல் ஆகாது; மேலும், அத்தகைய ஒவ்வோர் அமர்வுக்கும், 184 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறின் வகையங்கள், மேலவைத்தலைவர் அல்லது நேர்வுக்கேற்ப, துணைத்தலைவர் இல்லாதிருக்கிற ஓர் அமர்வுக்குப் பொருந்துவன போன்றே, பொருந்துவன ஆகும்.

(2) சட்டமன்ற மேலவையில் மேலவைத் தலைவரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுவதற்கான தீர்மானத்தின்மீது ஓர்வு நிகழும்போது மேலவைத்தலைவர் அந்த அவையில் உரையாற்றுவதற்கும், பிறவகையில் அதன் நடவடிக்கைகளில் பங்குகொள்வதற்கும் உரிமை உடையவர் ஆவார்; மேலும், 189ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், அவர் அத்தகைய தீர்மானத்தின்மீதும், அது தொடர்பான நடவடிக்கைகளில் எழும் பிற எந்தப் பொருட்பாட்டின்மீதும் முதற்கண் மட்டுமே வாக்களிப்பதற்கு உரிமை கொண்டவர் ஆவாரேயன்றி, வாக்குகள் சமன்மையாக அமையும் நேர்வில், வாக்களிப்பதற்கு உரிமை கொண்டவர் ஆகார்.

(a) shall vacate his office if he ceases to be a member of the Council;

(b) may at any time by writing under his hand addressed, if such member is the Chairman, to the Deputy Chairman, and if such member is the Deputy Chairman, to the Chairman, resign his office; and

(c) may be removed from his office by a resolution of the Council passed by a majority of all the then members of the Council:

Provided that no resolution for the purpose of clause (c) shall be moved unless at least fourteen days' notice has been given of the intention to move the resolution.

**184. Power of the Deputy Chairman or other person to perform the duties of the office of, or to act as, Chairman:**

(1) While the office of Chairman is vacant, the duties of the office shall be performed by the Deputy Chairman or, if the office of Deputy Chairman is also vacant, by such member of the Council as the Governor may appoint for the purpose.

(2) During the absence of the Chairman from any sitting of the Council the Deputy Chairman or, if he is also absent, such person as may be determined by the rules of procedure of the Council, or, if no such person is present, such other person as may be determined by the Council, shall act as Chairman.

**185. The Chairman or the Deputy Chairman not to preside while a resolution for his removal from office is under consideration :**

(1) At any sitting of the Legislative Council, while any resolution for the removal of the Chairman from his office is under consideration, the Chairman, or while any resolution for the removal of the Deputy Chairman from his office is under consideration, the Deputy Chiarman, shall not, though he is present, preside, and the provisions of clause (2) of article 184 shall apply in relation to every such sitting as they apply in relation to a sitting from which the Chairman or, as the case may be, the Deputy Chairman is absent.

(2) The Chairman shall have the right to speak in, and otherwise to take part in the proceedings of, the Legislative Council while any resolution for his removal from office is under consideration in the Council and shall, notwithstanding anything in article 189, be entitled to vote only in the first instance on such resolution or on any other matter during such proceedings but not in the case of an equality of votes.

**186. பேரவைத் தலைவர், துணைத்தலைவர், மேலவைத் தலைவர், துணைத் தலைவர் ஆகியோரின் வரையூதியங்களும் படித்தொகைகளும் :**

சட்டமன்றப் பேரவைத் தலைவர், துணைத்தலைவர், சட்டமன்ற மேலவைத் தலைவர், துணைத்தலைவர் ஆகியோருக்கு முறையே மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் நிருணயிக்கும் வரையூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்படும்; அவ்வாறு அதன்பொருட்டு வகைசெய்யப்படும் வரையில், இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்பட்டு வரும்.

**187. மாநிலச் சட்டமன்றத்தின் செயலகம் :**

(1) ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் அவை அல்லது அவை ஒவ்வொன்றும் தனித்தனியே செயலகப் பணியாளர் தொகுதி ஒன்றைக் கொண்டிருக்கும்:

**வரம்புரையாக:** இந்தக் கூறிலுள்ள எதுவும், சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலச் சட்டமன்றத்தைப் பொறுத்தவரை, அத்தகைய சட்டமன்றத்தின் ஈரவைகளுக்கும் பொதுவான பதவிகள் உருவாக்கப்படுவதைத் தடையூறு செய்வதாகப் பொருள்கொள்ளப்படுதல் ஆகாது.

(2) மாநிலச் சட்டமன்றத்தின் அவையின் அல்லது அவைகளின் செயலகப் பணியாளர் தொகுதிக்கு ஆளெடுப்பதையும் அதற்கு அமர்த்தப்பெறுபவர்களின் பணிவரைக்கட்டுகளையும் அந்த மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் ஒழுங்குறுத்தலாம்.

(3). (2) ஆம் கூறின்படி மாநிலச் சட்டமன்றம் வகைசெய்கிற வரையில், ஆளுநர், சட்டமன்றப் பேரவைத்தலைவருடன் அல்லது, நேர்வுக்கேற்ப, சட்டமன்ற மேலவைத்தலைவருடன் கலந்தாய்வு செய்தபின்பு, சட்டமன்றப் பேரவையின் அல்லது சட்டமன்ற மேலவையின் செயலகப் பணியாளர் தொகுதிக்கு ஆளெடுப்பதையும் அதற்கு அமர்த்தப்பெறுபவர்களின் பணிவரைக்கட்டுகளையும் ஒழுங்குறுத்தும்விதிகளை வகுக்கலாம்; மற்றும், அவ்வாறு வகுக்கப்படும் விதிகள் மேற்சொன்ன கூறின்படி இயற்றப்படும் சட்டத்தின் வகையங்களுக்கு உட்பட்டு செல்திறம் உடையன ஆகும்.

## அலுவல் நடத்துமுறை

**188. உறுப்பினர்களுக்குள்ள ஆணைமொழி அல்லது உறுதிமொழி :**

ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது சட்டமன்ற மேலவையின் உறுப்பினர் ஒவ்வொருவரும், தம் பதவியினை ஏற்று அமரும் முன்பு, ஆளுநரின் அல்லது அதன்பொருட்டு அவரால் அமர்த்தப்பெறும் ஒருவரின் முன்னிலையில், மூன்றாம் இணைப்புப்பட்டியலில் அதற்கென உள்ள சொன்முறையில் ஓர் ஆணைமொழியை அல்லது உறுதிமொழியை ஏற்றுக் கையொப்பமிடுதல் வேண்டும்.

**189. சட்டமன்ற அவைகளில் வாக்களித்தல், காலியிடங்கள் இருந்தபோதிலும் செயல்படுவதற்கு அவைகளுக்குள்ள அதிகாரம் மற்றும் குறைவெண் :**

(1) இந்த அரசமைப்பில் பிறவாறு வகைசெய்யப்பட்டிருப்பது நீங்கலாக, ஒரு மாநிலச் சட்டமன்ற அவை ஒன்றின் அமர்வில் எழும் வினாக்கள் அனைத்தும், பேரவைத்தலைவர் அல்லது மேலவைத்தலைவர் அல்லது அத்தகையவராகச் செயல்படுகின்றவரைத் தவிர்த்து, வந்திருந்து வாக்களிக்கும் ஏனைய உறுப்பினர்களின் பெரும்பான்மை வாக்குகளால் தீர்மானிக்கப்படுதல் வேண்டும்.

பேரவைத்தலைவரோ மேலவைத்தலைவரோ அல்லது அத்தகையவராகச் செயல்படுகின்றவரோ முதற்கண் வாக்களித்தல் ஆகாது; ஆனால், வாக்குகள் சமன்மையாக அமையும் நேர்வில், அவருக்கு அறுதிசெய் வாக்கு ஒன்று உண்டு; அதனை அவர் அளித்தலும் வேண்டும்.

**186. Salaries and allowances of the Speaker and Deputy Speaker and the Chairman and Deputy Chairman :**

There shall be paid to the Speaker and the Deputy Speaker of the Legislative Assembly, and to the Chairman and the Deputy Chairman of the Legislative Council, such salaries and allowances as may be respectively fixed by the Legislature of the State by law and, until provision in that behalf is so made, such salaries and allowances as are specified in the Second Schedule.

**187. Secretariat of State Legislture :**

(1) The House or each House of the Legislature of a State shall have a separate secretariat staff:

Provided that nothing in this clause shall, in the case of the Legislature of a State having a Legislative Council be construed as preventing the creation of posts common to both Houses of such Legislature.

(2) The Legislature of a State may by law regulate the recuirtment, and the conditions of service of persons appointed, to the secretarial staff of the House or Houses of the Legislature of the State.

(3) Until provision is made by the Legislature of the State under clause (2), the Governor may, after consultation with the Speaker of the Legislative Assembly or the Chairman of the Legislative Council, as the case may be, make rules regulating the Recruitment, and the conditions of service of persons appointed, to the secretarial staff of the Assembly or the Council, and any rules so made shall have effect subject to the provisions of any law made under the said clause.

## CONDUCT OF BUSINESS

**188. Oath or affirmation by members :**

Every member of the Legislative Assembly or the Legislative Council of a State shall, before taking his seat, make and subscribe before the Governor, or some person appointed in that behalf by him, an oath or affirmation according to the form set out for the purpose in the Third Schedule.

**189. Voting in Houses, power of Houses to act notwithstanding vacancies and quorum :**

(1) Save as otherwise provided in this Constitution, all questions at any sitting of a House of the Legislature of a State shall be determined by a majority of votes of the members' present and voting, other than the Speaker or Chairman or person acting as such.

The Speaker or Chairman, or person acting as such, shall not vote in the first instance, but shall have and exercise a casting vote in the case of an equality of votes.

(2) ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் ஓர் அவையின் உறுப்பினர் பதவியில் காலியிடம் எதுவும் இருந்தபோதிலும், அந்த அவை செயல்படுவதற்கு அதிகாரம் உடையது ஆகும்; மேலும், சட்டமன்ற நடவடிக்கைகளின்போது அவையில் அமர்ந்திருக்கவோ வாக்களிக்கவோ பிறவாறாகப் பங்குகொள்ளவோ உரிமை கொண்டிராத எவரும் அவ்வாறு செய்தார் எனப் பின்பு தெரிய வந்தபோதிலும், அந்நடவடிக்கைகள் செல்லுந்தன்மையுடையன ஆகும்.

(3) ஒரு மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகைசெய்கிற வரையில், அந்த மாநிலச் சட்டமன்ற அவையின் கூட்டம் அமைவுறுவதற்கான குறைவெண், பத்து அல்லது அந்த அவையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கு, இவற்றுள் எது மிகுதியோ அந்த எண்ணாக இருத்தல் வேண்டும்.

(4) ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது சட்டமன்ற மேலவையின் கூட்டம் நடைபெறும்போது எச்சமயத்திலேனும், குறைவெண் இல்லாதிருப்பின், அந்த அவையை ஒத்திவைப்பதோ, குறைவெண் அமைவுறுகிற வரையில் அந்தக் கூட்டத்தைத் தற்காலிகமாக நிறுத்திவைப்பதோ பேரவைத்தலைவரின் அல்லது மேலவைத்தலைவரின் அல்லது அத்தகையவராகச் செயல்படுகின்றவரின் கடமை ஆகும்.

## உறுப்பினர்களின் தகுதிக்கேடுகள்

**190. பதவியிடங்களை விட்டகலுதல் :**

(1) எவர் ஒருவரும், ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் ஈரவைகளிலும் உறுப்பினராக இருத்தல் ஆகாது; ஒருவர் ஈரவைகளுக்கும் உறுப்பினராகத் தெரிந்தெடுக்கப் பெற்றிருப்பாராயின், அவர் அவ்விரு அவைகளில் ஏதாவது ஒன்றில் தம் பதவியிடத்தை விட்டகலுவதற்கு மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் வகைசெய்தல் வேண்டும்.

(2) எவர் ஒருவரும், முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களின் சட்டமன்றங்களில் உறுப்பினராக இருத்தல் ஆகாது; இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களின் சட்டமன்றங்களுக்கு ஒருவர் தெரிந்தெடுக்கப்பெற்றிருப்பாராயின், அப்போது, குடியரசுத்தலைவரால் வகுக்கப்படும் விதிகளில் குறித்துரைக்கப்படும் காலஅளவு கழிவுறுவதற்கு முன்னரே, அவர் அந்த மாநிலங்களில் ஒன்று தவிர, பிற மாநிலச் சட்டமன்றங்கள் அனைத்திலுமுள்ள தம் பதவியிடங்களை விட்டு விலகியிருந்தாலன்றி, அத்தகைய மாநிலங்கள் அனைத்தின் சட்டமன்றங்களிலுள்ள அவருடைய பதவியிடங்கள் அக்காலஅளவு கழிவுற்றதும் காலியாகிவிடும்.

(3) ஒரு மாநிலச் சட்டமன்ற அவை ஒன்றின் உறுப்பினர் ஒருவர் –

(அ) [1][191 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில் அல்லது (2) ஆம் கூறில்] குறிப்பிடப்பட்ட தகுதிக்கேடுகளில் எதற்கேனும் உள்ளாகிவிடுவாராயின்]; அல்லது

---

1. "191 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில்" என்பதற்கு, அரசமைப்புச் (ஐம்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1985 இன் 4 ஆம் பிரிவினால் (1-3-1985 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(2) A House of the Legislature of a State shall have power to act notwithstanding any vacancy in the membership thereof, and any proceedings in the Legislature of a State shall be valid notwithstanding that it is discovered subsequently that some person who was not entitled so to do sat or voted or otherwise took part in the proceedings.

(3) Until the Legislature of the State by law otherwise provides, the quorum to constitute a meeting of a House of the Legislature of a State shall be ten members or one-tenth of the total number of members of the House, whichever is greater.

(4) If at any time during a meeting of the Legislative Assembly or the Legislative Council of a State there is no quorum, it shall be the duty of the Speaker or Chairman, or person acting as such, either to adjourn the House or to suspend the meeting until there is a quorum.

## DISQUALIFICATIONS OF MEMBERS

### 190. Vacation of seats :

(1) No person shall be a member of both Houses of the Legislature of a State and provision shall be made by the Legislature of the State by law for the vacation by a person who is chosen a member of both Houses of his seat in one House or the other.

(2) No person shall be a member of the Legislatures of two or more States specified in the First Schedule and if a person is chosen a member of the Legislatures of two or more such States, then, at the expiration of such period as may be specified in rules made by the President, that person's seat in the Legisltures of all such States shall become vacant, unless he has previously resigned his seat in the Legislatures of all but one of the States.

(3) If a member of a House of the Legislature of a State—

(a) becomes subject to any of the disqualifications mentioned in [1][clause (1) or clause (2) of article 191]; or

---

1. Subs. by the Constitution (Fifty-Second Amendment) Act, 1985, s. 4, for "clause (1) of article 191 " (w.e.f. 1-3-1985).

[1][(ஆ) பேரவைத்தலைவருக்கோ, நேர்வுக்கேற்ப, மேலவைத்தலைவருக்கோ தம்கையொப்பமிட்டு எழுத்துவழி, பதவிவிலகுவதாகத் தெரிவித்து, அவ்வாறு அவர்பதவிவிலகுதல் பேரவைத்தலைவராலோ, நேர்வுக்கேற்ப, மேலவைத்தலைவராலோ ஏற்றுக் கொள்ளப்படுமாயின்

அதன்மேல் அவருடைய பதவியிடம் காலியாகிவிடும்:]

[2][வரம்புரையாக: (ஆ) உட்கூறில் சுட்டப்பட்ட பதவிவிலகலைப் பொறுத்தவரை, பேரவைத்தலைவரோ, நேர்வுக்கேற்ப, மேலவைத் தலைவரோ தாம் பெற்ற தகவலிலிருந்தும் பிறவற்றைக்கொண்டும் தாம் தக்கதெனக் கருதும் விசாரணைக்குப் பின்பு அந்தப் பதவிவிலகல் அவரால் தம் விருப்பாகச் செய்யப்பட்டதன்று அல்லது உண்மையானதன்று எனத் தெளிவுறக் காண்பாராயின், அந்தப் பதவிவிலகலை அவர் ஏற்றுக்கொள்ளுதல் ஆகாது.]

(4) ஒரு மாநிலச் சட்டமன்ற அவை ஒன்றின் உறுப்பினர் எவரும், அந்த அவையின் அனுமதியின்றி, அதன் அனைத்துக் கூட்டங்களுக்கும் அறுபது நாள் காலஅளவிற்கு வாராதிருப்பாராயின், அவருடைய பதவியிடம் காலியாகிவிட்டதென அந்த அவை விளம்பலாம்:

**வரம்புரையாக :** அந்த அறுபது நாள் காலஅளவைக் கணக்கிடுகையில், அந்த அவையின் கூட்டத்தொடர் இறுதி செய்யப்பட்டிருந்த காலஅளவு அல்லது தொடர்ச்சியாக நான்கு நாட்களுக்குமேல் அந்த அவை ஒத்திவைக்கப்பட்டிருந்த காலஅளவு எதனையும் கணக்கில் எடுத்துக்கொள்ளுதல் ஆகாது.

**191. உறுப்பினர் பதவித் தகுதிக்கேடுகள் :**

(1) ஒருவர்—

[3][(அ) எந்த ஊதியப் பதவியை வகிப்பவர் உறுப்பினராயிருப்பதற்குத் தகுதிக்கேடு உறுவதில்லை என்று மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் விளம்புகிறதோ அந்தப் பதவி அல்லாத பிற ஊதியப்பதவி எதனையும் இந்திய அரசின் கீழோ முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள மாநிலம் ஒன்றின் அரசின் கீழோ வகிப்பாராயின்;]

(ஆ) பித்துப்பிடித்தவராக இருந்து, அத்தகையவரெனத் தகுதிறமுள்ள நீதிமன்றம் ஒன்றினால் விளம்பப்பட்டிருப்பாராயின்;

(இ) விடுவிப்புப் பெறாத நொடிப்புநிலையராக இருப்பாராயின்;

(ஈ) இந்தியக் குடிமகனாக இல்லாதிருப்பாராயின், அல்லது ஓர் அயல் நாட்டின் குடிமையினைத் தம் விருப்பாகப் பெற்றிருப்பாராயின் அல்லது எவ்வகையிலேனும் ஓர் அயல்நாட்டிடம் பற்றுறவோ சார்புறவோ தமக்கு உள்ளதென ஒப்பியவராக இருப்பாராயின்;

---

1. (ஆ) உட்கூறுக்கு, அரசமைப்புச் (முப்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1974 இன் 3 ஆம் பிரிவினால் (19–5–1974 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. (ஆ) உட்கூறுக்கு, அரசமைப்புச் (முப்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1974 இன் 3 ஆம் பிரிவினால் (19–5–1974 முதல் செல்திறம் பெறுமாறு) , புகுத்தப்பட்டது.

3. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 32 ஆம் பிரிவினால், "(அ) எந்த ஊதியப் பதவியை வகிப்பவர், உறுப்பினராயிருப்பதற்குத் தகுதிக்கேடு உற்றவர் என்று நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புகிறதோ, அத்தகைய ஊதியப்பதவி எதனையும் இந்திய அரசின் கீழோ அல்லது முதலாவது இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்ட மாநில அரசு ஒன்றின் கீழோ வகிப்பாராயின்" (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்) என்று வாசிக்க, மாற்றாக அமைக்கப்பட்டது.

[1][(b) resigns his seat by writing under his hand addressed to the Speaker or the Chairman, as the case may be, and his resignation is accepted by the Speaker or the Chairman, as the case may be,

his seat shall thereupon become vacant:]

[2][Provided that in the case of any resignation referred to in sub-clause (b), if from information received or otherwise and after making such inquiry as he thinks fit, the Speaker or the Chairman, as the case may be, is satisfied that such resignation is not voluntary or genuine, he shall not accept such resignation.]

(4) If for a period of sixty days a member of a House of the Legislature of a State is without permission of the House absent from all meetings thereof, the House may declare his seat vacant:

Provided that in computing the said period of sixty days no account shall be taken of any period during which the House is prorogued or is adjourned for more than four consecutive days.

**191. Disqualifications for membership :**

(1) A person shall be disqualified for being chosen as, and for being, a member of the Legislative Assembly or Legislative Council of a State—

[3][(a) If he holds any office of profit under the Government of India or the Government of any State specified in the First Schedule, other than an office declared by the Legislature of the State by law not to disqualify its holder;]

(b) If he is of unsound mind and stands so declared by a competent court;

(c) If he is an undischarged insolvent;

(d) If he is not a citizen of India, or has voluntarily acquired the citizenship of a foreign State, or is under any acknowledgement of allegiance or adherence to a foreign State;

---

1. Subs. by the Constitution (Thirty-third Amendment) Act, 1974, s. 3, for sub-clause (*b*) (w.e.f. 19-5-1974).
2. Ins. by the Constitution (Thirty-third Amendment) Act, 1974, s. 3, for sub-clause (*b*) (w.e.f. 19-5-1974).
3. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 32 to read as "(a) if he holds any such office of profit under the Government of India or the Government of any State specified in the First Schedule as is declared by Parliament by law to disqualify its holder" (date yet to be notified).

(உ) நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தாலோ அதன் வழியாலோ உறுப்பினராக இருப்பதற்குத் தகுதிக்கேடுற்றவராக இருப்பாராயின்

அவர் ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது சட்டமன்ற மேலவையின் உறுப்பினராகத் தெரிந்தெடுக்கப்பெறுவதற்கும் உறுப்பினராக இருந்துவருவதற்கும் தகுதிக்கேடுற்றவர் ஆவார்.

[1][விளக்கம். - இந்தக் கூறினைப் பொறுத்தவரை], ஒருவர் ஒன்றியத்தின் அல்லது முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள மாநிலம் ஒன்றின் அமைச்சராயிருக்கும் காரணத்தினால் மட்டுமே, அவர் இந்திய அரசின் கீழோ அத்தகைய மாநில அரசின்கீழோ ஊதியப்பதவி ஒன்றை வகிப்பவராகக் கொள்ளப்பெறுதல் ஆகாது.

[2][(2) ஒருவர் பத்தாம் இணைப்புப்பட்டியலின்படி தகுதிக்கேடுற்றவராயிருப்பின், அவர், ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது சட்டமன்ற மேலவையின் உறுப்பினராக இருந்து வருவதற்குத் தகுதிக்கேடுற்றவர் ஆவார்.]

**[3][192. உறுப்பினர்களின் தகுதிக்கேடுகள் பற்றிய வினாக்களின் மீது முடிபு :**

(1) ஒரு மாநிலச் சட்டமன்ற அவை ஒன்றின் உறுப்பினர் ஒருவர், 191 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்டுள்ள தகுதிக்கேடுகளில் எதற்கேனும் உள்ளாகிவிட்டாரா என்பது பற்றிய வினா எதுவும் எழுமாயின், அவ்வினா ஆளுநரின் முடிபுக்குக் குறித்தனுப்பப்படுதல் வேண்டும்; அவருடைய முடிபே அறுதியானது ஆகும்.

(2) அத்தகைய வினா எதன்மீதும் முடிபு ஒன்றை வழங்குவதற்கு முன்பு, ஆளுநர், தேர்தல் ஆணையத்தின் கருத்துரையைப்பெற்று, அந்தக் கருத்துரையின்படியே செயல்படுவார்.]

**193. 188ஆம் உறுப்பின்படி ஆணைமொழி அல்லது உறுதிமொழி ஏற்பதற்கு முன்போ தகுதியற்றவராக அல்லது தகுதிக்கேடுற்றவராக இருக்கும்போதோ அவையில் அமர்ந்தாலும் வாக்களித்தாலும் அதற்குள்ள தண்டம் :**

ஒருவர், 188ஆம் உறுப்பின் வேண்டுறுத்தங்களுக்கேற்ப நடப்பதற்கு முன்பு அல்லது ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது சட்டமன்ற மேலவையின் உறுப்பினர் பதவிக்குத் தாம் தகுதியற்றவராகவோ தகுதிக்கேடுற்றவராகவோ நாடாளுமன்றத்தால் அல்லது மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் ஒன்றின் வகையங்களால் தாம் தடைசெய்யப்பட்டிருப்பதாகவோ இருப்பதை அறிந்திருந்தும், அவர் அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையில் அல்லது சட்டமன்ற மேலவையில் உறுப்பினராக அமர்வாராயின் அல்லது வாக்களிப்பாராயின், அவர் அவ்வாறு அமரும் அல்லது வாக்களிக்கும் நாள் ஒவ்வொன்றையும் பொறுத்து, ஐந்நூறு ரூபாய் தண்டத்திற்கு உள்ளாவார்; அது மாநிலத்திற்குரிய கடன் என வசூல் செய்யப்படும்.

## மாநிலச் சட்டமன்றங்களுக்கும் அவற்றின் உறுப்பினர்களுக்கும் உள்ள அதிகாரங்கள், மதிப்புரிமைகள் மற்றும் காப்புரிமைகள்

**194. சட்டமன்ற அவைகளுக்கும் அவற்றின் உறுப்பினர்களுக்கும் குழுக்களுக்கும் உள்ள அதிகாரங்கள், மதிப்புரிமைகள் முதலியவை:**

(1) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கும் சட்டமன்ற நெறிமுறையினை ஒழுங்குறுத்துகின்ற விதிகள், நிலையாணைகள் ஆகியவற்றிற்கும் உட்பட்டு, ஒவ்வொரு மாநிலச் சட்டமன்றத்திலும் பேச்சுச் சுதந்திரம் இருத்தல் வேண்டும்.

---

1. "(2) இந்த உறுப்பினைப் பொறுத்தவரை" என்பதற்கு, அரசமைப்புச் (ஐம்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1985 இன் 5 ஆம் பிரிவினால் (1-3-1985 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. *மேற்படிச் சட்டத்தினால்,* புகுத்தப்பட்டது.

3. 192 ஆம் உறுப்பு, மேலே உள்ளவாறு வாசிக்க, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 33 ஆம் பிரிவினால் (3-1-1977 முதல் செல்திறம் பெறுமாறு) மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 25 ஆம் பிரிவினால் (20-6-1979 முதல் செல்திறம் பெறுமாறு), அடுத்தடுத்து மாற்றாக அமைக்கப்பட்டது.

(e) if he is so disqualified by or under any law made by Parliament.

[1][Explanation. — For the purposes of this clause], a person shall not be deemed to hold an office of profit under the Government of India or the Government of any State specified in the First Schedule by reason only that he is a Minister either for the Union or for such State.

[2][(2) A person shall be disqualified for being a member of the Legislative Assembly or Legislative Council of a State if he is so disqualifed under the Tenth Schedule.]

**[3][192. Decision on questions as to disqualifications of members :**

(1) If any question arises as to whether a member of a House of the Legislature of a State has become subject to any of the disqualifications mentioned in clause (1) of article 191, the question shall be referred for the decision of the Governor and his decision shall be final.

(2) Before giving any decision on any such question, the Governor shall obtain the opinion of the Election Commission and shall act according to such opinion.]

**193. Penalty for sitting and voting before making oath or affirmation under article 188 or when not qualified or when disqualified :**

If a person sits or votes as a member of the Legislative Assembly or the Legislative Council of a State before he has complied with the requirements of article 188, or when he knows that he is not qualified or that he is disqualified for membership thereof, or that he is prohibited from so doing by the provisions of any law made by Parliament or the Legislature of the State, he shall be liable in respect of each day on which he so sits or votes to a penalty of five hundred rupees to be recovered as a debt due to the State.

## POWERS, PRIVILEGES AND IMMUNITIES OF STATE LEGISLATURES AND THEIR MEMBERS

**194. Powers, Privileges, etc., of the Houses of Legislatures and of the members and committees thereof :**

(1) Subject to the provisions of this Constitution and to the rules and standing orders regulating the procedure of the Legislature, there shall be freedom of speech in the Legislature of every State.

---

1. Subs. by the Constitution (Fifty-Second Amendment) Act, 1985, s. 5, for "(2) For the purposes of this article" (w.e.f. 1-3-1985).
2. Ins. by *ibid.*
3. Art. 192 has been successively subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 33 (w.e.f. 3-1-1977) and the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 25 to read as above (w.e.f. 20-6-1979).

(2) ஒரு மாநிலச் சட்டமன்ற உறுப்பினர் எவரும், சட்டமன்றத்தில் அல்லது அதன் குழு எதிலும் அவர் கூறிய எதனைப் பொறுத்தும் அல்லது அளித்த வாக்கு எதனைப் பொறுத்தும் நீதிமன்ற நடவடிக்கை எதற்கும் உள்ளாகமாட்டார்; அவ்வாறே, எவரும் அத்தகைய சட்டமன்ற அவை ஒன்றால் அல்லது அதன் அதிகாரத்தின்கீழ் அறிக்கை, வரையேடு, வாக்களிப்புகள் அல்லது நடவடிக்கைகள் பற்றிச் செய்யப்படும் வெளியீடு பொறுத்தும் அத்தகைய நடவடிக்கைக்கு உள்ளாகமாட்டார்.

(3) பிறவகைகளில், ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் ஓர் அவைக்கும், அத்தகைய சட்டமன்றத்தின் ஓர் அவையின் உறுப்பினர்களுக்கும் குழுக்களுக்கும் உள்ள அதிகாரங்கள், மதிப்புரிமைகள், காப்புரிமைகள் ஆகியவை, சட்டமன்றம் சட்டத்தினால் அவ்வப்போது வரையறை செய்கின்றவாறு இருக்கும்; அத்துடன், அவ்வாறு வரையறை செய்யப்படும் வரையில், [1][அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 26 ஆம் பிரிவு செல்லாற்றல் பெறுவதற்கு உடன்முன்பு அந்த அவைக்கும் அதன் உறுப்பினர்களுக்கும் குழுக்களுக்கும் இருந்தவாறே இருக்கும்.]

(4). (1), (2), (3) ஆகிய கூறுகளின் வகையங்கள் மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களுக்குப் பொருந்துவனபோன்றே, அச்சட்டமன்றத்தின் அவை ஒன்றில் அல்லது அதன் குழு ஒன்றில் பேசுவதற்கு மற்றும் பிறவாறு அதன் நடவடிக்கைகளில் பங்குகொள்வதற்கு இந்த அரசமைப்பின்படி உரிமை உடையவர்களுக்கும் பொருந்துவன ஆகும்.

**195. உறுப்பினர்களின் வரையூதியங்களும் படித்தொகைகளும் :**

ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவை, சட்டமன்ற மேலவை ஆகியவற்றின் உறுப்பினர்கள், அந்த மாநிலச் சட்டமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் தீர்மானிக்கும் வரையூதியங்களையும் படித்தொகைகளையும் பெறுவதற்கு உரிமை கொண்டவர்கள் ஆவர்; அதன்பொருட்டு அவ்வாறு வகைசெய்யப்படும் வரையில், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, நேரிணையான மாகாணத்தின் சட்டமன்றப் பேரவை உறுப்பினர்களுக்குப் பொருந்துவனவாக இருந்த அதே வீதங்களிலும் அதே வரைக்கட்டுகளின்படியும், வரையூதியங்களும் படித்தொகைகளும் பெறுவதற்கு அவர்கள் உரிமைகொண்டவர்கள் ஆவர்.

## சட்டமியற்றுவதற்கான நெறிமுறை

**196. சட்டமுன்வடிவுகளை அறிமுகம் செய்தலும் நிறைவேற்றுதலும் பற்றிய வகையங்கள் :**

(1) பணச் சட்டமுன்வடிவுகள், பிற நிதிச் சட்டமுன்வடிவுகள் இவற்றைப் பொறுத்த 198, 207 ஆகிய உறுப்புகளின் வகையங்களுக்கு உட்பட்டு, சட்டமுன்வடிவு எதுவும், சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தின் சட்டமன்ற ஈரவைகளில் எதிலும் முதலில் கொண்டுவரப்படலாம்.

(2). 197, 198 ஆகிய உறுப்புகளின் வகையங்களுக்கு உட்பட்டு, சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தின் சட்டமன்ற ஈரவைகளிலும் திருத்தம் ஏதும் இல்லாமல் அல்லது அந்த ஈரவைகளும் ஏற்றுக்கொண்ட திருத்தங்களை மட்டும் கொண்டு, ஒரு சட்டமுன்வடிவை ஈரவைகளும் ஏற்றுக் கொண்டிருந்தாலன்றி, அது அந்த ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

(3) ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் ஓர்விலுள்ள ஒரு சட்டமுன்வடிவு, அச்சட்டமன்ற அவையின் அல்லது அவைகளின் கூட்டத்தொடர் இறுதிசெய்யப்படுவதன் காரணத்தால் அற்றுப்போவதில்லை.

(4) சட்டமன்றப் பேரவையால் நிறைவேற்றப்படாத நிலையில், சட்டமன்ற மேலவையின் ஓர்விலுள்ள ஒரு சட்டமுன்வடிவு, பேரவை கலைக்கப்படுமாயினும் அற்றுப்போவதில்லை.

---

1. குறித்தசில சொற்களுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம் ) சட்டம், 1978 இன் 26 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

(2) No member of the Legislature of a State shall be liable to any proceedings in any court in respect of anything said or any vote given by him in the Legislature or any committee thereof, and no person shall be so liable in respect of the publication by or under the authority of a House of such a Legislature of any report, paper, votes or proceedings.

(3) In other respects, the powers, privileges and immunities of a House of the Legislature of a State, and of the members and the committees of a House of such Legislature, shall be such as may from time to time be defined by the Legislature by law, and, until so defined, [1][shall be those of that House and of its members and committees immediately before the coming into force of section 26 of the Constitution (Forty-fourth Amendment) Act, 1978.]

(4) The provisions of clauses (1), (2) and (3) shall apply in relation to persons who by virtue of this Constitution have the right to speak in, and otherwise to take part in the proceedings of, a House of the Legislature of a State or any committee thereof as they apply in relation to members of that Legislature.

**195. Salaries and allowances of members :**

Members of the Legislative Assembly and the Legislative Council of a State shall be entitled to receive such salaries and allowances as may from time to time be determined, by the Legislature of the State by law and, until provision in that respect is so made, salaries and allowances at such rates and upon such conditions as were immediately before the commencement of this Constitution applicable in the case of members of the Legislative Assembly of the corresponding province.

## LEGISLATIVE PROCEDURE

**196. Provisions as to introduction and passing of Bills :**

(1) Subject to the provisions of articles 198 and 207 with respect to Money Bills and other financial Bills, a Bill, may originate in either House of the Legislature of a State which has a Legislative Council.

(2) Subject to the provisions of articles 197 and 198, a Bill shall not be deemed to have been passed by the Houses of the Legislature of a State having a Legislative Council unless it has been agreed to by both Houses, either without amendment or with such amendments only as are agreed to by both Houses.

(3) A Bill pending in the Legislature of a State shall not lapse by reason of the prorogation of the House or Houses thereof.

(4) A Bill pending in the Legislative Council of a State which has not been passed by the Legislative Assembly shall not lapse on dissolution of the Assembly.

---

1. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 26, for certain words (w.e.f. 20-6-1979).

(5) ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையில் ஓர்விலுள்ள அல்லது சட்டமன்றப் பேரவையால் நிறைவேற்றப்பட்டிருந்து சட்டமன்ற மேலவையின் ஓர்விலுள்ள ஒரு சட்டமுன்வடிவு, அப்பேரவை கலைக்கப்படுவதன்மேல் அற்றுப்போகும்.

**197. பணச் சட்டமுன்வடிவுகள் அல்லாத பிற சட்டமுன்வடிவுகள் குறித்துச் சட்டமன்ற மேலவையின் அதிகாரங்கள் மீது வரையறை :**

(1) ஒரு சட்டமுன்வடிவு, சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையால் நிறைவேற்றப்பட்டிருந்து அச்சட்டமன்ற மேலவைக்கு அனுப்பப்பட்ட பின்பு –

(அ) அச்சட்டமுன்வடிவு அந்த மேலவையால் மறுக்கப்படுமாயின்; அல்லது

(ஆ) அந்த மேலவையின்முன் அச்சட்டமுன்வடிவு வைக்கப்பெற்ற தேதியிலிருந்து, அச்சட்ட முன்வடிவு நிறைவேற்றப்படாமலேயே மூன்று மாதங்களுக்கு மேல் கழிந்திருக்குமாயின்; அல்லது

(இ) சட்டமன்றப் பேரவையால் ஏற்றுக்கொள்ளப்படாத திருத்தங்களுடன் அச்சட்டமுன்வடிவு அந்த மேலவையால் நிறைவேற்றப்படுமாயின்;

அந்தச் சட்டமன்றப் பேரவை, அதன் நெறிமுறையை ஒழுங்குறுத்தும் விதிகளுக்கு உட்பட்டு, அதே கூட்டத்தொடரில் அல்லது பிந்திய கூட்டத்தொடர் எதிலும், சட்டமன்ற மேலவை செய்துள்ள, குறிப்புரை செய்துள்ள அல்லது ஏற்றுக்கொண்டுள்ள திருத்தங்கள், எவையேனுமிருப்பின், அத்திருத்தங்களுடனோ அத்திருத்தங்களின்றியோ அச்சட்டமுன்வடிவை மீண்டும் நிறைவேற்றி, அவ்வாறு நிறைவேற்றப்பட்ட சட்டமுன்வடிவை சட்டமன்ற மேலவைக்கு அனுப்பலாம்.

(2) அவ்வாறு ஒரு சட்டமுன்வடிவு, சட்டமன்றப் பேரவையால் இரண்டாம் முறையாக நிறைவேற்றப்பட்டு, சட்டமன்ற மேலவைக்கு அனுப்பப்பட்ட பின்பு –

(அ) அச்சட்டமுன்வடிவு அந்த மேலவையால் மறுக்கப்படுமாயின்; அல்லது

(ஆ) அந்த மேலவையின்முன் அச்சட்டமுன்வடிவு வைக்கப்பெற்ற தேதியிலிருந்து, அச்சட்ட முன்வடிவு நிறைவேற்றப்படாமலேயே ஒரு மாதத்திற்கு மேல் கழிந்திருக்குமாயின்; அல்லது

(இ) சட்டமன்றப் பேரவையால் ஏற்றுக்கொள்ளப்படாத திருத்தங்களுடன் அச்சட்டமுன்வடிவு அந்த மேலவையால் நிறைவேற்றப்படுமாயின்;

அச்சட்டமுன்வடிவு, சட்டமன்ற மேலவை செய்துள்ள அல்லது குறிப்புரை செய்துள்ள திருத்தங்களில் சட்டமன்றப் பேரவை ஏற்றுக்கொள்ளும் திருத்தங்கள், எவையேனுமிருப்பின், அவற்றுடன், இரண்டாம் முறையாகச் சட்டமன்றப் பேரவையால் நிறைவேற்றப்பட்ட வடிவத்தில் மாநிலச் சட்டமன்ற அவைகளால் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

(3) இந்த உறுப்பிலுள்ள எதுவும் பணச் சட்டமுன்வடிவுக்குப் பொருந்துவதில்லை.

**198. பணச் சட்டமுன்வடிவுகள் பொறுத்த தனியுறு நெறிமுறை :**

(1) பணச் சட்டமுன்வடிவு எதனையும் சட்டமன்ற மேலவையில் அறிமுகப்படுத்துதல் ஆகாது.

(5) A Bill which is pending in the Legislative Assembly of a State, or which having been passed by the Legislative Assembly is pending in the Legislative Council, shall lapse on a dissolution of the Assembly.

**197. Restriction on powers of Legislative Council as to Bills other than Money Bills:**

(1) If after a Bill has been passed by the Legislative Assembly of a State having a Legislative Council and transmitted to the Legislative Council. —

(a) the Bill is rejected by the Council ; or

(b) more than three months elapse from the date on which the Bill is laid before the Council without the Bill being passed by it ; or

(c) the Bill is passed by the Council with amendments to which the Legislative Assembly does not agree;

the Legislative Assembly may, subject to the rules regulating its procedure, pass the Bill again in the same or in any subsequent session with or without such amendments, if any, as have been made, suggested or agreed to by the Legislative Council and then transmit the Bill as so passed to the Legislative Council.

(2) If after a Bill has been so passed for the second time by the Legislative Assembly and transmitted to the Legislative Council—

(a) the Bill is rejected by the Council ; or

(b) more than one month elapse from the date on which the Bill is laid before the Council without the Bill being passed by it ; or

(c) the Bill is passed by the Council with amendments to which the Legislative Assembly does not agree;

the Bill shall be deemed to have been passed by the Houses of the Legislature of the State in the form in which it was passed by the Legislative Assembly for the second time with such amendments, if any, as have been made or suggested by the Legislative Council and agreed to by the Legislative Assembly.

(3) Nothing in this article shall apply to a Money Bill.

**198. Special procedure in respect of Money Bills :**

(1) A Money Bill shall not be introduced in a Legislative Council.

(2) பணச் சட்டமுன்வடிவு எதுவும் சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையினால் நிறைவேற்றப்பட்ட பின்பு, சட்டமன்ற மேலவைக்கு அதன் பரிந்துரைகளுக்காக அனுப்பப்படுதல் வேண்டும்; சட்டமன்ற மேலவை, அந்தச் சட்டமுன்வடிவைப் பெற்ற தேதியிலிருந்து பதினான்கு நாள் காலஅளவிற்குள் அந்தச் சட்டமுன்வடிவைச் சட்டமன்றப் பேரவைக்குத் தன் பரிந்துரைகளுடன் திருப்பியனுப்புதல் வேண்டும்; அதன்மேல், சட்டமன்றப் பேரவை, சட்டமன்ற மேலவையினால் செய்யப்பட்ட பரிந்துரைகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் ஏற்றுக்கொள்ளலாம் அல்லது ஏற்கமறுக்கலாம்.

(3) சட்டமன்ற மேலவையின் பரிந்துரைகளில் எதனையும் சட்டமன்றப் பேரவை ஏற்றுக்கொள்ளுமாயின், சட்டமன்ற மேலவையினால் பரிந்துரை செய்யப்பட்டுச் சட்டமன்றப் பேரவையினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட திருத்தங்களுடன் அந்தப் பணச் சட்டமுன்வடிவு ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

(4) சட்டமன்ற மேலவையின் பரிந்துரைகளில் எதனையும் சட்டமன்றப் பேரவை ஏற்றுக்கொள்ளாவிடின், அந்தப் பணச் சட்டமுன்வடிவு சட்டமன்ற மேலவை பரிந்துரை செய்த திருத்தங்களில் எதுவுமின்றி, சட்டமன்றப் பேரவையினால் நிறைவேற்றப்பட்ட வடிவத்திலேயே ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

(5) சட்டமன்றப் பேரவையினால் நிறைவேற்றப்பட்டு, சட்டமன்ற மேலவைக்கு அதன் பரிந்துரைகளுக்காக அனுப்பப்பட்ட ஒரு பணச்சட்டமுன்வடிவு, மேற்சொன்ன பதினான்கு நாள் காலஅளவிற்குள் சட்டமன்றப் பேரவைக்குத் திருப்பியனுப்பப்படாவிடின், அந்தக் காலஅளவு கழிவுற்றதும் அச்சட்டமுன்வடிவு சட்டமன்றப் பேரவையினால் நிறைவேற்றப்பட்ட வடிவத்திலேயே ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

**199. "பணச் சட்டமுன்வடிவுகள்" என்பதன் பொருள்வரையறை :**

(1) இந்த அத்தியாயத்தைப் பொறுத்தவரை, ஒரு சட்டமுன்வடிவு பின்வரும் பொருட்பாடுகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் பற்றிய வகையங்களை மட்டுமே கொண்டிருப்பதாயின், அது ஒரு பணச் சட்டமுன்வடிவு எனக் கொள்ளப்படும், அவையாவன : –

(அ) வரி எதனையும் விதித்தல், நீக்குதல், குறைத்தல், மாற்றுதல் அல்லது ஒழுங்குறுத்துதல்;

(ஆ) மாநில அரசால் பணம் கடன் வாங்கப்படுவதை அல்லது பொறுப்புறுதி எதுவும் அளிக்கப்படுவதை ஒழுங்குறுத்துதல் அல்லது மாநில அரசு பொறுப்பேற்றுள்ள அல்லது பொறுப்பேற்கவுள்ள நிதி பற்றிய கடமைப்பாடுகள் எவற்றையும் பொறுத்த சட்டத்தை திருத்தம் செய்தல்;

(இ) மாநிலத் திரள்நிதியத்தை அல்லது நினையாநிகழ்வு நிதியத்தைக் கையடைவு கொள்ளல், அத்தகைய நிதியம் எதிலும் பணம் செலுத்துதல் அல்லது அதிலிருந்து பணம் எடுத்தல்;

(ஈ) மாநிலத் திரள்நிதியத்தினின்றும் பணம் ஒதுக்கீடு செய்தல்;

(உ) செலவினம் எதனையும் மாநிலத் திரள்நிதியத்தின்மீது சார்த்தப்பட்ட செலவினம் என விளம்புதல் அல்லது அத்தகைய செலவினத்தொகை எதனையும் கூடுதலாக்குதல்;

(2) After a Money Bill has been passed by the Legislative Assembly of a State having a Legislative Council, it shall be transmitted to the Legislative Council for its recommendations, and the Legislative Council shall within a period of fourteen days from the date of its receipt of the Bill return the Bill to the Legislative Assembly with its recommendations, and the Legislative Assembly may thereupon either accept or reject all or any of the recommendations of the Legislative Council.

(3) If the Legislative Assembly accepts any of the recommendations of the Legislative Council, the Money Bill shall be deemed to have been passed by both Houses with the amendments recommended by the Legislative Council and accepted by the Legislative Assembly.

(4) If the Legislative Assembly does not accept any of the recommendations of the Legislative Council, the Money Bill shall be deemed to have been passed by both Houses in the form in which it was passed by the Legislative Assembly without any of the amendments recommended by the Legislative Council.

(5) If a Money Bill passed by the Legislative Assembly and transmitted to the Legislative Council for its recommendations is not returned to the Legislative Assembly within the said period of fourteen days, it shall be deemed to have been passed by both Houses at the expiration of the said period in the form in which it was passed by the Legislative Assembly.

**199. Definition of "Money Bills" :**

(1) For the purposes of this Chapter, a Bill shall be deemed to be a Money Bill if it contains only provisions dealing with all or any of the following matters, namely:—

(a) the imposition, abolition, remission, alteration or regulation of any tax;

(b) the regulation of the borrowing of money or the giving of any guarantee by the State, or the amendment of the law with respect to any financial obligations undertaken or to be undertaken by the State;

(c) the custody of the Consolidated Fund or the Contingency Fund of the State, the payment of moneys into or the withdrawal of moneys from any such Fund;

(d) the appropriation of moneys out of the Consolidated Fund of the State;

(e) the declaring of any expenditure to be expenditure charged on the Consolidated Fund of the State, or the increasing of the amount of any such expenditure;

(ஊ) மாநிலத் திரள்நிதியத்தின் அல்லது மாநில அரசுப் பொதுக்கணக்கின் பொருட்டுப் பணம் பெறுதல் அல்லது அத்தகைய பணத்தைக் கையடவு கொள்ளல் அல்லது வழங்குதல்; அல்லது

(எ). (அ) முதல் (ஊ) வரையுள்ள உட்கூறுகளில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதனையும் சார்ந்த பொருட்பாடு.

(2) ஒரு சட்டமுன்வடிவு, அபராதங்களை அல்லது பிற தண்டங்களை விதிப்பதற்கு அல்லது உரிமங்களுக்கான கட்டணங்களையோ செய்யப்பட்ட பணிகளுக்கான கட்டணங்களையோ கோருவதற்கும் செலுத்துவதற்கும் அது வகைசெய்கிறது என்ற காரணத்தால் மட்டுமோ, உள்ளாட்சி அதிகாரஅமைப்பு அல்லது குழுமம் ஒன்று உள்ளாட்சி நோக்கங்களுக்காக வரி எதனையும் விதிப்பதற்கு, நீக்குவதற்கு, குறைப்பதற்கு, மாற்றுவதற்கு அல்லது ஒழுங்குறுத்துவதற்கு அது வகைசெய்கிறது என்ற காரணத்தாலோ அதை ஒரு பணச்சட்டமுன்வடிவு எனக் கொள்ளுதல் ஆகாது.

(3) சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலச் சட்டமன்றத்தில் அறிமுகப்படுத்தப்படும் ஒரு சட்டமுன்வடிவு, பணச் சட்டமுன்வடிவா இல்லையா என்னும் வினா ஒன்று எழுமாயின், அதன்மேல் சட்டமன்றப் பேரவைத் தலைவர் அளிக்கும் முடிபே அறுதியானது ஆகும்.

(4) ஒவ்வொரு பணச் சட்டமுன்வடிவும் 198 ஆம் உறுப்பின்படி சட்டமன்ற மேலவைக்கு அனுப்பப்படும்போதும், 200 ஆம் உறுப்பின்படி ஏற்பிசைவுக்காக ஆளுநரிடம் முன்னிடப்படும்போதும், அது ஒரு பணச் சட்டமுன்வடிவு எனச் சட்டமன்றப் பேரவைத்தலைவர் கையொப்பமிட்ட உறுதியுரை ஒன்று மேற்குறிப்பாக அதன்மீது எழுதப்படுதல் வேண்டும்.

**200. சட்ட முன்வடிவுகளுக்கு ஏற்பிசைவு :**

ஒரு சட்டமுன்வடிவு, ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையினால் நிறைவேற்றப்பட்டதன்மேல் அல்லது சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில் அந்த மாநிலச் சட்டமன்ற ஈரவைகளினாலும் நிறைவேற்றப்பட்டதன்மேல், அது ஆளுநரிடம் முன்னிடப்படுதல் வேண்டும்; ஆளுநர், தாம் அச்சட்டமுன்வடிவுக்கு ஏற்பிசைவு அளிப்பதாகவோ அதற்கு ஏற்பிசைவு அளிப்பதை நிறுத்திவைப்பதாகவோ அச்சட்டமுன்வடிவைக் குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கிவைப்பதாகவோ விளம்புவார்:

**வரம்புரையாக :** ஆளுநர், தம்மிடம் ஏற்பிசைவுக்காக ஒரு சட்டமுன்வடிவு முன்னிடப்பட்ட பின்பு, இயன்றளவு விரைவில், அது ஒரு பணச்சட்டமுன்வடிவாக இல்லாதிருப்பின்,அச்சட்டமுன்வடிவையோ அதில் குறித்துரைக்கப்பட்ட வகையங்கள் எவற்றையுமோ அந்த அவை அல்லது அவைகள் மறுஆய்வு செய்யுமாறும், குறிப்பாக, தாம் பரிந்துரைக்கும் திருத்தங்கள் எவற்றையும் அறிமுகப்படுத்துவது விரும்பத்தகுந்ததா என்பதைப்பற்றிக் கருதுமாறும் கேட்டுக்கொள்கின்ற செய்தியுரையுடன் அச்சட்டமுன்வடிவை அந்த அவைக்கு அல்லது அவைகளுக்குத் திருப்பியனுப்பலாம்; அவ்வாறு ஒரு சட்ட முன்வடிவு திருப்பியனுப்பப்பட்டிருக்கும்போது, அந்த அவை அல்லது அவைகள் அதன்படியே அச்சட்டமுன்வடிவை மறுஆய்வு செய்தல் வேண்டும்; மேலும், அந்த அவையினால் அல்லது அவைகளினால் அச்சட்டமுன்வடிவு திருத்தத்துடனோ திருத்தமின்றியோ மீண்டும் நிறைவேற்றப்பட்டு ஆளுநரிடம் ஏற்பிசைவுக்காக முன்னிடப்படுமாயின், ஆளுநர் அதற்கு ஏற்பிசைவு அளிப்பதை நிறுத்திவைத்தல் ஆகாது:

(f) the receipt of money on account of the Consolidated Fund of the State or the public account of the State or the custody or issue of such money; or

(g) any matter incidental to any of the matters specified in sub-clauses (a) to (f).

(2) A Bill shall not be deemed to be a Money Bill by reason only that it provides for the imposition of fines or other pecuniary penalties, or for the demand or payment of fees for licences or fees for services rendered, or by reason that it provides for the imposition, abolition, remission, alteration or regulation of any tax by any local authority or body for local purposes.

(3) If any question arises whether a Bill introduced in the Legislature of a State which has a Legislative Council is a Money Bill or not, the decision of the Speaker of the Legislative Assembly of such State thereon shall be final.

(4) There shall be endorsed on every Money Bill when it is transmitted to the Legislative Council under article 198, and when it is presented to the Governor for assent under article 200, the certificate of the Speaker of the Legislative Assembly signed by him that it is a Money Bill.

**200. Assent to Bills :**

When a Bill has been passed by the Legislative Assembly of a State or, in the case of a State having a Legislative Council, has been passed by both Houses of the Legislature of the State, it shall be presented to the Governor and the Governor shall declare either that he assents to the Bill or that he withholds assent therefrom or that he reserves the Bill for the consideration of the President:

Provided that the Governor may, as soon as possible, after the presentation to him of the Bill for assent, return the Bill if it is not a Money Bill together with a message requesting that the House or Houses will reconsider the Bill or any specified provisions thereof and, in particular, will consider the desirability of introducing any such amendments as he may recommend in his message and, when a Bill is so returned, the House or Houses shall reconsider the Bill accordingly, and if the Bill is passed again by the House or Houses with or without amendment and presented to the Governor for assent, the Governor shall not withhold assent therefrom:

மேலும் வரம்புரையாக : சட்டமுன்வடிவு எதுவும் சட்டமாகிவிட்டால், உயர் நீதிமன்றத்திற்கு அமைந்திருக்க வேண்டும் என்று இந்த அரசமைப்பில் வரைந்தமைக்கப்பட்ட தகுநிலைக்குக் கேடுவிளைவிக்கும் வகையில் அந்த நீதிமன்றத்தின் அதிகாரங்களை அது திறக்குறைவு செய்யும் என ஆளுநர் கருதுவாராயின், அச்சட்டமுன்வடிவு எதற்கும் ஆளுநர் ஏற்பிசைவு அளித்தல் ஆகாது; அதனைக் குடியரசுத் தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கிவைத்தல் வேண்டும்.

**201. ஓர்வுக்கென ஒதுக்கிவைக்கப்படும் சட்டமுன்வடிவுகள் :**

ஒரு சட்டமுன்வடிவு குடியரசுத்தலைவரின் ஓர்வுக்கென ஆளுநர் ஒருவரால் ஒதுக்கிவைக்கப்படும்போது, குடியரசுத்தலைவர், தாம் அச்சட்டமுன்வடிவுக்கு ஏற்பிசைவு அளிப்பதாகவோ அதற்கு ஏற்பிசைவு அளிக்க நிறுத்திவைப்பதாகவோ விளம்புதல் வேண்டும்:

வரம்புரையாக : அச்சட்டமுன்வடிவு ஒரு பணச் சட்டமுன்வடிவாக இல்லாதிருப்பின், குடியரசுத்தலைவர், 200 ஆம் உறுப்பின் முதல் வரம்புரையில் குறிப்பிடப்பட்டுள்ள செய்தியுரையுடன் அச்சட்டமுன்வடிவை மாநிலச் சட்டமன்றத்தின் அவைக்கு அல்லது, நேர்வுக்கேற்ப, அவைகளுக்குத் திருப்பியனுப்பும்படி ஆளுநருக்குப் பணிப்புரை பிறப்பிக்கலாம்; அவ்வாறு ஒரு சட்டமுன்வடிவு திருப்பியனுப்பப்பட்டிருக்கும்போது, அந்த அவை அல்லது அவைகள், அத்தகைய செய்தியுரையைப் பெற்ற தேதியிலிருந்து ஆறுமாதக் காலஅளவிற்குள், அதற்கிணங்க அச்சட்டமுன்வடிவை மறுஆய்வு செய்தல் வேண்டும்; மேலும், அந்த அவையினால் அல்லது அவைகளினால் அச்சட்டமுன்வடிவு திருத்தத்துடனோ திருத்தமின்றியோ மீண்டும் நிறைவேற்றப்பட்டு, குடியரசுத்தலைவரின் ஓர்வுக்கென மறுபடியும் முன்னிடப்படுதல் வேண்டும்.

## நிதி பற்றிய பொருட்பாடுகளுக்குள்ள நெறிமுறை

**202. ஆண்டு நிதிநிலை அறிக்கை :**

(1) ஆளுநர், ஒவ்வொரு நிதியாண்டைப் பொறுத்தும், அந்த ஆண்டிற்கான மாநில வரவு செலவினங்கள் மதிப்பீட்டு விவர அறிக்கை ஒன்றை மாநிலச் சட்டமன்ற அவையின் அல்லது அவைகளின் முன்பு வைக்குமாறு செய்தல் வேண்டும்; அது இந்தப் பகுதியில் "ஆண்டு நிதிநிலை அறிக்கை" எனக் குறிப்பிடப்படும்.

(2) ஆண்டு நிதிநிலை அறிக்கையில் அடங்கியுள்ள செலவின மதிப்பீடுகளில்—

(அ) இந்த அரசமைப்பில் மாநிலத் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்பட்ட செலவினம் என விவரிக்கப்பட்டுள்ள செலவினத்திற்குத் தேவைப்படும் பணத்தொகைகளைத் தனியாகவும்,

(ஆ) மாநிலத் திரள்நிதியத்திலிருந்து செலவுசெய்யக் கருதியுள்ள பிற செலவினத்திற்குத் தேவைப்படும் பணத்தொகைகளைத் தனியாகவும்

காட்டுதல் வேண்டும்; அத்துடன், வருவாய்க் கணக்குவகைச் செலவினத்தைப் பிறவகைச் செலவினத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுதலும் வேண்டும்.

(3) பின்வரும் செலவினங்கள் மாநிலத் திரள்நிதியத்தின்மீது சார்த்தப்பட்ட செலவினங்களாக இருத்தல் வேண்டும் –

(அ) ஆளுநரின் பதவியூதியங்கள், படித்தொகைகள் மற்றும் அவருடைய பதவி தொடர்பான பிற செலவினங்கள்;

Provided further that the Governor shall not assent to, but shall reserve for the consideration of the President, any Bill which in the opinion of the Governor would, if it became law, so derogate from the powers of the High Court as to endanger the position which that Court is by this Constitution designed to fill.

**201. Bills reserved for consideration:**

When a Bill is reserved by a Governor for the consideration of the President, the President shall declare either that he assents to the Bill or that he withholds assent therefrom:

Provided that, where the Bill is not a money Bill, the President may direct the Governor to return the Bill to the House or, as the case may be, the Houses of the Legislature of the State together with such a message as is mentioned in the first proviso to article 200 and, when a Bill is so returned, the House or Houses shall reconsider it accordingly within a period of six months from the date of receipt of such message and, if it is again passed by the House or Houses with or without amendment, it shall be presented again to the President for his consideration.

## PROCEDURE IN FINANCIAL MATTERS

**202. Annual financial statement :**

(1) The Governor shall in respect of every financial year cause to be laid before the House or Houses of the Legislature of the State a statement of the estimated receipts and expenditure of the State for that year, in this Part referred to as the "annual financial statement".

(2) The estimates of expenditure embodied in the annual financial statement shall show separately—

(a) the sums required to meet expenditure described by this Constitution as expenditure charged upon the Consolidated Fund of the State; and

(b) the sums required to meet other expenditure proposed to be made from the Consolidated Fund of the State;

and shall distinguish expenditure on revenue account from other expenditure.

(3) The following expenditure shall be expenditure charged on the Consolidated Fund of each State —

(a) the emoluments and allowances of the Governor and other expenditure relating to his office;

(ஆ) சட்டமன்றப் பேரவைத் தலைவர், துணைத் தலைவர் மற்றும் சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தைப் பொறுத்தவரை, சட்டமன்ற மேலவைத்தலைவர், துணைத் தலைவர் ஆகியோரின் வரையூதியங்களும் படித்தொகைகளும்;

(இ) வட்டி, கடனடைப்பு நிதியச் செலவீடுகள், மீட்புச் செலவீடுகள் உள்ளடங்கலாக மாநிலத்தின்மீது பொறுப்படைவுள்ள உறுகடன் செலவீடுகள் மற்றும் பெறுகடன் எழுப்புதல், உறுகடன் அடைத்தல், மீட்டல் ஆகியவை தொடர்பான செலவினங்கள்;

(ஈ) உயர் நீதிமன்றம் எதனின் நீதிபதிகளின் வரையூதியங்கள், படித்தொகைகள் பொறுத்த செலவினங்கள்;

(உ) நீதிமன்றம் அல்லது பொதுவர் தீர்ப்பாயம் ஒன்றின் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது தீர்வம் எதன்படியும் செலுத்தித் தீர்ப்பதற்குத் தேவைப்படும் பணத்தொகைகள்;

(ஊ) இவ்வாறு சார்த்தப்பட வேண்டுமென இந்த அரசமைப்போ சட்டத்தினால் மாநிலச் சட்டமன்றமோ விளம்புகிற பிற செலவினங்கள்.

**203. மதிப்பீடுகள் பற்றிய சட்டமன்ற நெறிமுறை :**

(1) மாநிலத் திரள்நிதியத்தின்மீது சார்த்தப்பட்ட செலவினங்கள் தொடர்பான மதிப்பீடுகளைச் சட்டமன்றப் பேரவையின் வாக்களிப்பிற்கு வைத்திடுதல் ஆகாது; ஆனால், சட்டமன்றத்தில் அந்த மதிப்பீடுகளில் எதனையும் பற்றி விவாதிப்பதை இந்தக் கூறிலுள்ள எதுவும் தடையூறு செய்வதாகப் பொருள்கொள்ளப்படுதல் ஆகாது.

(2) மேற்சொன்னவற்றில் பிற செலவினங்கள் தொடர்பான மதிப்பீடுகளை மானியக் கோரிக்கைகளாகச் சட்டமன்றத்தில் முன்வைத்தல் வேண்டும்; மற்றும், கோரிக்கை எதற்கும் ஏற்பிசைவு அளிக்கவோ ஏற்பிசைவளிக்க மறுக்கவோ அக்கோரிக்கையில் குறித்துரைக்கப்பட்டுள்ள தொகையைக் குறைத்து ஏற்பிசைவு அளிக்கவோ சட்டமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

(3) மானியம் எதுவும், ஆளுநரின் பரிந்துரையின் மீதல்லாமல், கோரப்படுதல் ஆகாது.

**204. நிதி ஒதுக்களிப்புச் சட்டமுன்வடிவுகள் :**

(1) பேரவை, 203 ஆம் உறுப்பின்படி மானியங்களை வழங்கிய பின்பு, கூடிய விரைவில்—

(அ) பேரவையால் அவ்வாறு வழங்கப்பட்ட மானியங்களுக்கும்,

(ஆ) அவையில் அல்லது அவைகளில் முன்னரே வைக்கப்பட்ட விவரஅறிக்கையில் கண்ட தொகைக்கு எவ்வகையிலும் மேற்படாமல் மாநிலத் திரள்நிதியத்தின்மீது சார்த்தப்பட்ட செலவினங்களுக்கும்

தேவைப்படும் பணம் அனைத்தையும் மாநிலத் திரள்நிதியத்தினின்றும் ஒதுக்களிப்பதற்கு வகைசெய்யும் சட்டமுன்வடிவு ஒன்று அறிமுகப்படுத்தப்படுதல் வேண்டும்.

(b) the salaries and allowances of the Speaker and the Deputy Speaker of the Legislative Assembly and, in the case of State having a Legislative Council, also of the Chairman and the Deputy Chairman of the Legislative Council;

(c) debt charges for which the State is liable including interest, sinking fund charges and redemption charges, and other expenditure relating to the raising of loans and the service and redemption of debt;

(d) expenditure in respect of the salaries and allowances of Judges of any High Court;

(e) any sums required to satisfy any judgment, decree or award of any court or arbitral tribunal;

(f) any other expenditure declared by this Constitution, or by the Legislature of the State by law, to be so charged.

**203. Procedure in Legislature with respect to estimates :**

(1) So much of the estimates as relates to expenditure charged upon the Consolidated Fund of a State shall not be submitted to the vote of the Legislative Assembly, but nothing in this clause shall be construed as preventing the discussion in the Legislature of any of those estimates.

(2) So much of the said estimates as relates to other expenditure shall be submitted in the form of demands for grants to the Legislative Assembly , and the Legislative Assembly shall have power to assent, or to refuse to assent, to any demand, or to assent to any demand subject to a reduction of the amount specified therein.

(3) No demand for a grant shall be made except on the recommendation of the Governor.

**204. Appropriation Bills :**

(1) As soon as may be after the grants under article 203 have been made by the Assembly, there shall be introduced a Bill to provide for the appropriation out of the Consolidated Fund of the State of all moneys required to meet—

(a) The grants so made by the Assembly; and

(b) The expenditure charged on the Consolidated Fund of the State but not exceeding in any case the amount shown in the statement previously laid before the House or Houses.

(2) அத்தகைய சட்டமுன்வடிவு எதற்கும், மேற்கண்டவாறு வழங்கப்பட்ட மானியம் ஒன்றின் தொகையில் மாறுதலையோ அத்தொகை எதற்கெனக் கோரப்பட்டதோ அதில் மாற்றத்தையோ மாநிலத் திரள்நிதியத்தின்மீது சார்த்தப்பட்ட செலவினத்தொகையில் மாறுதலையோ விளைவிப்பதான திருத்தம் எதுவும் மாநிலச் சட்டமன்ற அவையில் அல்லது ஈரவைகளில் எதிலும் முன்மொழியப்படுதல் ஆகாது; அத்தகைய திருத்தம் எதுவும் இந்தக் கூறின்படி ஏற்றுக்கொள்ளத்தகாததா என்பது பற்றி அவையில் தலைமை வகிப்பவரின் முடிபே அறுதியானது ஆகும்.

(3). 205, 206 ஆகிய உறுப்புகளின் வகையங்களுக்கு உட்பட்டு, இந்த உறுப்பின் வகையங்களுக்கு இணங்க நிறைவேற்றப்பட்ட சட்டத்தினால் செய்யப்பட்ட நிதி ஒதுக்களிப்பின் படியல்லாமல், மாநிலத் திரள்நிதியத்திலிருந்து பணம் எதுவும் எடுக்கப்படுதல் ஆகாது.

**205. துணை, கூடுதல் அல்லது மிகை மானியங்கள் :**

(1) ஆளுநர் –

(அ) நடப்பு நிதியாண்டில் ஒரு குறிப்பிட்ட பணிக்கெனச் செலவிடுவதற்கு 204 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு இணங்க இயற்றப்பட்ட சட்டம் ஒன்றினால் அதிகாரஅளிப்புப் பெற்ற பணத்தொகை, அந்த ஆண்டிற்குரிய பணிக்குப் போதுமானதன்று எனக் காணப்படுமாயின் அல்லது நடப்பு நிதியாண்டிற்கான நிதிநிலை அறிக்கையில் கருதப்படாத புதியதொரு பணியினைப் பொறுத்து குறைநிறைவு செய்வதான அல்லது கூடுதலான செலவினத் தேவை ஒன்று அந்த ஆண்டில் எழுமாயின், அல்லது

(ஆ) ஒரு நிதியாண்டில் பணி ஒன்றிற்கு வழங்கப்பட்ட தொகைக்கு மிகையாகப் பணம் எதுவும் அந்த ஆண்டின்போது அந்தப் பணிக்குச் செலவிடப்பட்டிருக்குமாயின்,

அச்செலவினங்களின் மதிப்பீட்டுத் தொகையைக் காட்டும் பிறிதொரு விவர அறிக்கையை மாநிலச் சட்டமன்ற அவையின் அல்லது அவைகளின் முன்பு வைக்கும்படிச் செய்யவோ அல்லது, நேர்வுக்கேற்ப, அத்தகைய மிகைத் தொகைக்கான ஒரு கோரிக்கையை அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையில் முன்னிடும்படிச் செய்யவோ வேண்டும்.

(2) ஆண்டு நிதிநிலை அறிக்கை, அதில் குறிப்பிடப்பட்டுள்ள செலவினங்கள், ஒரு மானியத்திற்கான கோரிக்கை மற்றும் அந்தச் செலவினங்கள் அல்லது மானியத்திற்காக மாநிலத் திரள்நிதியத்தினின்றும் பண ஒதுக்களிப்பிற்கு அதிகாரம் வழங்கி இயற்றப்பட வேண்டிய சட்டம் இவற்றைப் பொறுத்து 202, 203, 204 ஆகிய உறுப்புகளின் வகையங்கள் எவ்வாறு செல்திறம் கொண்டனவோ, அவ்வாறே, இதில் கூறப்பட்டுள்ள அறிக்கை, செலவினங்கள், கோரிக்கை மற்றும் அச்செலவினங்கள் அல்லது அக்கோரிக்கை பற்றிய மானியத்திற்காக மாநிலத் திரள்நிதியத்தினின்றும் பண ஒதுக்களிப்பிற்கு அதிகாரம் வழங்கி இயற்றப்பட வேண்டிய சட்டம் இவற்றைப் பொறுத்தும் செல்திறம் கொண்டன ஆகும்.

**206. முன்னளிப்பு மானியம், முன்பற்றுத்தொகை மானியம், தனிச்சிறப்பு மானியம் இவற்றின் மீதான வாக்களிப்பு :**

(1) இந்த அத்தியாயத்தின் மேலேகண்ட வகையங்களில் எது எவ்வாறிருப்பினும், ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவை —

(2) No amendment shall be proposed to any such Bill in the House or either House of the Legislature of the State which will have the effect of varying the amount or altering the destination of any grant so made or of varying the amount of any expenditure charged on the Consolidated Fund of the State, and the decision of the person presiding as to whether an amendment is inadmissible under this clause shall be final.

(3) Subject to the provisions of articles 205 and 206, no money shall be withdrawn from the Consolidated Fund of the State except under appropriation made by law passed in accordance with the provisions of this article.

**205. Supplementary, additional or excess grants :**

(1) The Governor shall —

(a) If the amount authorised by any law made in accordance with the provisions of article 204 to be expended for a particular service for the current financial year is found to be insufficient for the purpose of that year or when a need has arisen during the current financial year for supplementary or additional expenditure upon some new service not contemplated in the annual financial statement for that year, or

(b) If any money has been spent on any service during a financial year in excess of the amount granted for that service and for that year,

cause to be laid before the House or the Houses of the Legislature of the State another statement showing the estimated amount of that expenditure or cause to be presented to the Legislative Assembly of the State a demand for such excess, as the case may be.

(2) The provisions of articles 202, 203 and 204 shall have effect in relation to any such statement and expenditure or demand and also to any law to be made authorising the appropriation of moneys out of the Consolidated Fund of the State to meet such expenditure or the grant in respect of such demand as they have effect in relation to the annual financial statement and the expenditure mentioned therein or to a demand for grant and the law to be made for the authorisation of appropriation of moneys out of the Consolidated Fund of the State to meet such expenditure or grant.

**206. Votes on account, votes of credit and exceptional grants :**

(1) Notwithstanding anything in the foregoing provisions of this Chapter, the Legislative Assembly of a State shall have power —

(அ) மானியத்தின் மீது வாக்களிப்பதற்கு 203 ஆம் உறுப்பில் வகுத்துரைக்கப்பட்டுள்ள நெறிமுறை முடிவடையாமலும், மதிப்பீட்டுச் செலவினங்களுக்காக 204 ஆம் உறுப்பின் வகையங்களின்படி சட்டம் நிறைவேற்றப்படாமலும் உள்ள நிலையில், நிதியாண்டின் ஒரு பகுதிக்குரிய அச்செலவினத்திற்கான மானியத்தை முன்னதாக அளிப்பதற்கும்;

(ஆ) பணியின் அளப்பருந்தன்மை அல்லது திட்டவட்டமற்ற தன்மை காரணமாக ஒரு கோரிக்கையைப்பற்றி ஆண்டு நிதிநிலை அறிக்கையில் வழக்கமாகக் கொடுக்கப்படும் விவரங்களுடன் கூற இயலாதபோது, எதிர்பார்க்க முடியாத அக்கோரிக்கைக்காக மாநிலத்தின் வருவாய் ஆதாரங்களின் மீது மானியம் அளிப்பதற்கும்;

(இ) ஒரு நிதியாண்டின் நடப்புப் பணியின் ஒரு பகுதியாக அமையாத தனிச்சிறப்பு மானியம் ஒன்றை அளிப்பதற்கும்,

அதிகாரம் உடையது ஆகும்; மேலும், மேற்சொன்ன மானியங்கள் பொருட்டு மாநிலத் திரள்நிதியத்திலிருந்து பணம் எடுப்பதற்கும் சட்டத்தினால் அதிகாரமளிக்க மாநிலச் சட்டமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

(2) ஆண்டு நிதிநிலை அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள செலவினத்திற்கான மானியத்தை அளித்தல், அச்செலவினத்திற்காக மாநிலத் திரள்நிதியத்திலிருந்து பண ஒதுக்களிப்பதற்கு அதிகாரம் வழங்கி இயற்றப்படவேண்டிய சட்டம் இவற்றைப் பொறுத்து 203, 204 ஆகிய உறுப்புகளின் வகையங்கள் எவ்வாறு செல்திறம் கொண்டனவோ, அவ்வாறே, (1) ஆம் கூறின்படி மானியம் அளித்தல், அக்கூறின்படி இயற்றப்படவேண்டிய சட்டம் இவற்றைப் பொறுத்தும் செல்திறம் கொண்டன ஆகும்.

**207. நிதிச் சட்டமுன்வடிவுகள் பற்றிய தனியுறு வகையங்கள் :**

(1). 199 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின் (அ) முதல் (ஊ) வரையுள்ள உட்கூறுகளில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதற்கும் வகைசெய்யும் சட்டமுன்வடிவு அல்லது திருத்தம் எதனையும், ஆளுநரின் பரிந்துரையின் மீதல்லாமல், அறிமுகப்படுத்துதலோ கொண்டுவருதலோ ஆகாது; அவ்வாறு வகைசெய்யும் சட்டமுன்வடிவு எதனையும் ஒரு சட்டமன்ற மேலவையில் அறிமுகப்படுத்துதலும் ஆகாது:

**வரம்புரையாக :** வரி எதனையும் குறைப்பதற்காக அல்லது நீக்குவதற்காக வகைசெய்யும் ஒரு திருத்தத்தைக் கொண்டுவருவதற்கு இந்தக் கூறின்படியான பரிந்துரை எதுவும் வேண்டுவதில்லை.

(2) சட்டமுன்வடிவு அல்லது திருத்தம் எதுவும், அபராதங்களை அல்லது பிற பணத் தண்டங்களை விதிப்பதற்கு அல்லது உரிமங்களுக்கான கட்டணங்களையோ செய்யப்பட்ட பணிகளுக்கான கட்டணங்களையோ கோருவதற்கு அல்லது செலுத்துவதற்கு அது வகைசெய்கிறது என்ற காரணத்தால் மட்டுமோ உள்ளாட்சி அதிகாரஅமைப்பு அல்லது குழுமம் ஒன்று உள்ளாட்சி நோக்கங்களுக்காக வரி எதனையும் விதிப்பதற்கு, நீக்குவதற்கு, குறைப்பதற்கு, மாற்றுவதற்கு அல்லது ஒழுங்குறுத்துவதற்கு அது வகை செய்கிறது என்ற காரணத்தாலோ மேலே கூறப்பட்ட பொருட்பாடுகளில் எதற்கும் வகைசெய்வதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

(3) ஒரு சட்டமுன்வடிவு, சட்டமாக இயற்றப்பட்டுச் செயற்பாட்டுக்குக் கொண்டுவரப்பட்டால் ஒரு மாநிலத் திரள்நிதியத்திலிருந்து செலவு செய்யவேண்டிய நிலையை அது ஏற்படுத்துமாயின், அதனை ஓர்வு செய்யுமாறு மாநிலச் சட்டமன்றத்தின் அவை எதற்கும் ஆளுநர் பரிந்துரை செய்திருந்தாலன்றி அந்த அவை அதனை நிறைவேற்றுதல் ஆகாது.

(a) to make any grant in advance in respect of the estimated expenditure for a part of any finacial year pending the completion of the procedure prescribed in article 203 for the voting of such grant and the passing of the law in accordance with the provisions of article 204 in relation to that expenditure;

(b) to make a grant for meeting an unexpected demand upon the resources of the State when on account of the magnitude or the indefinite character of the service the demand connot be stated with the details ordinarily given in an annual financial statement;

(c) to make an exceptional grant which forms no part of the current service of any financial year,

and the Legislature of the State shall have power to authorise by law the withdrawal of moneys from the Consolidated Fund of the State for the purposes for which the said grants are made.

(2) The provisions of articles 203 and 204 shall have effect in relation to the making of any grant under clause (1) and to any law to be made under that clause as they have effect in relation to the making of a grant with regard to any expenditure mentioned in the annual financial statement and the law to be made for the authorisation of appropriation of moneys out of the Consolidated Fund of the State to meet such expenditure.

**207. Special provisions as to financial Bills :**

(1) A Bill or amendment making provisions for any of the matters specified in sub- clauses (a) to (f) of clause (1) of article 199 shall not be introduced or moved except on the recommendation of the Governor, and a Bill making such provision shall not be introduced in a Legislature Council:

Provided that no recommendation shall be required under this clause for the moving of an amendment making provision for the reduction or abolition of any tax.

(2) A Bill or amendment shall not be deemed to make provision for any of the matters aforesaid by reason only that it provides for the imposition of fines or other pecuniary penalties, or for the demand or payment of fees for licences or fees for services rendered, or by reason that it provides for the imposition, abolition, remission, alteration or regulation of any tax by any local authority or body for local purposes.

(3) A Bill which, if enacted and brought into operation, would involve expenditure from the Consolidated Fund of a State shall not be passed by a House of the Legislature of the State unless the Governor has recommended to that House the consideration of the Bill.

## பொதுவியலான நெறிமுறை

**208. நெறிமுறை விதிகள் :**

(1) மாநிலச் சட்டமன்றத்தின் அவை எதுவும், இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அதற்குரிய நெறிமுறையையும்[1]*** அலுவல் நடத்துமுறையையும் ஒழுங்குறுத்துவதற்கான விதிகளை வகுத்துக்கொள்ளலாம்.

(2). (1) ஆம் கூறின்படி விதிகளை வகுத்துக்கொள்ளும் வரையில், ஒரு மாநிலத்திற்கு நேரிணையான மாகாணத்தின் சட்டமன்றத்தைப் பொறுத்து, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு செல்லாற்றலிலிருந்த நெறிமுறை விதிகளும் நிலையாணைகளும், ஒரு மாநிலச் சட்டமன்றத்தைப் பொறுத்துச் சட்டமன்றப் பேரவைத் தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, சட்டமன்ற மேலவைத் தலைவர் அவற்றில் செய்யும் மாற்றமைவுகளுக்கும் தழுவமைவுகளுக்கும் உட்பட்டு, செல்திறம் உடையன ஆகும்.

(3) சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில், ஆளுநர், சட்டமன்றப் பேரவைத் தலைவருடனும் சட்டமன்ற மேலவைத் தலைவருடனும் கலந்தாய்வு செய்த பின்பு, ஈரவைகளுக்குமிடையேயான செய்தித்தொடர்புகள் பற்றிய நெறிமுறை விதிகளை வகுக்கலாம்.

**209. மாநிலச் சட்டமன்றத்தில் நிதி அலுவல் பற்றிய நெறிமுறையைச் சட்டத்தினால் ஒழுங்குறுத்துதல் :**

ஒரு மாநிலச் சட்டமன்றம், நிதி அலுவல்களை உரிய காலத்தில் முடிக்கும் பொருட்டு, நிதி பற்றிய பொருட்பாடு எதன் தொடர்பாகவும் அல்லது மாநிலத் திரள்நிதியத்தினின்றும் பண ஒதுக்களிப்பிற்கான சட்டமுன்வடிவு எதன் தொடர்பாகவும், மாநிலச் சட்டமன்ற அவையின் அல்லது அவைகளின் நெறிமுறையையும் அலுவல் நடத்துமுறையையும் சட்டத்தினால் ஒழுங்குறுத்தலாம்; அவ்வாறு இயற்றப்பட்ட சட்டத்தின் வகையம் எதற்கும், 208 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின்படி மாநிலச் சட்டமன்ற அவையினால் அல்லது ஈரவைகளில் ஒன்றினால் வகுக்கப்பட்ட விதி எதுவும் அல்லது அந்த உறுப்பின் (2) ஆம் கூறின்படி மாநிலச் சட்டமன்றம் தொடர்பாகச் செல்திறம் உடைய விதி அல்லது நிலையாணை எதுவும் முரணாக இருப்பின், அவ்வாறு முரணாக இருக்கும் அளவிற்கு, அந்த வகையமே மேலோங்கி நிற்கும்.

**210. சட்டமன்றத்தில் பயன்படுத்தப்பட வேண்டிய மொழி :**

(1) XVII ஆம் பகுதியில் எது எவ்வாறிருப்பினும், 348 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒரு மாநிலச் சட்டமன்ற அலுவல்கள், அந்த மாநிலத்தின் ஆட்சி மொழிகளிலோ அல்லது இந்தியிலோ ஆங்கிலத்திலோ நடத்தப்படுதல் வேண்டும்:

வரம்புரையாக : மேற்சொன்ன மொழிகள் எதிலும் தம் கருத்தை தக்கவாறு எடுத்தியம்ப இயலாத உறுப்பினர் எவரையும், அவருடைய தாய்மொழியிலேயே அவையில் உரையாற்றுவதற்கு, சட்டமன்றப் பேரவைத் தலைவர் அல்லது சட்டமன்ற மேலவைத் தலைவர் அல்லது அத்தகையவராகச் செயல்படுகின்றவர் அனுமதிக்கலாம்.

(2) மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகை செய்தாலன்றி, இந்த அரசமைப்பின் தொடக்க நிலையிலிருந்து பதினைந்து ஆண்டுக் காலஅளவு கழிவுறுவதன் பின்பு, இந்த உறுப்பிலிருந்து "அல்லது ஆங்கிலத்தில்" என்னும் சொற்கள் நீக்கப்பட்டிருந்தால் எப்படியோ, அப்படியே இந்த உறுப்பு செல்திறம் உடையது ஆகும்:

---

1. "(அவையின் கூட்டம் அமைவுறுவதற்கான குறைவெண் உள்ளடங்கலான)" சொற்கள் மற்றும் அடைப்புக்குறிகள், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 35 ஆம் பிரிவினால் (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்), புகுத்தப்பட்டன.

## PROCEDURE GENERALLY

### 208. Rules of procedure :

(1) A House of the Legislature of a State may make rules for regulating, subject to the provisions of this Constitution, its procedure[1]*** and the conduct of its business.

(2) Until rules are made under clause (l), the rules of procedure and standing orders in force immediately before the commencement of this Constitution with respect to the Legislature for the corresponding province shall have effect in relation to the Legislature of the State subject to such modifications and adaptations as may be made therein by the Speaker of the Legislative Assembly, or the Chairman of the Legislative Council, as the case may be.

(3) In a State having a Legislative Council the Governor, after consultation with the Speaker of the Legislative Assembly and the Chairman of the Legislative Council, may make rules as to the procedure with respect to communications between the two Houses.

### 209. Regulation by law of procedure in the Legislature of the State in relation to financial business :

The Legislature of a State may, for the purpose of the timely completion of financial business, regulate by law the procedure of, and the conduct of business in, the House or Houses of the Legislature of the State in relation to any financial matter or to any Bill for the appropriation of moneys out of the Consolidated Fund of the State, and, if and so far as any provision of any law so made is inconsistent with any rule made by the House or either House of the Legislature of the State under clause (1) of article 208 or with any rule or standing order having effect in relation to the Legislature of the State under clause (2) of that article, such provision shall prevail.

### 210. Language to be used in the Legislature:

(1) Notwithstanding anything in Part XVII, but subject to the provisions of article 348, business in the Legislature of a State shall be transacted in the official language or languages of the State or in Hindi or in English:

Provided that the Speaker of the Legislative Assembly or Chairman of the Legislative Council, or person acting as such, as the case may be, may permit any member who cannot adequately express himself in any of the languages aforesaid to address the House in his mother-tongue.

(2) Unless the Legislature of the State by law otherwise provides, this article shall, after expiration of a period of fifteen years from the commencement of this Constitution, have effect as if the words "or in English" were omitted therefrom:

---

1. The brackets and words "(including the quorum to constitute a meeting of the House)" ins. by the Constitution (Forty - second Amendment) Act, 1976, s. 35 (date yet to be notified).

[1][வரம்புரையாக : [2][இமாச்சலப் பிரதேசம், மணிப்பூர், மேகாலயா, திரிபுரா ஆகிய மாநிலங்களின் சட்டமன்றங்களைப்] பொறுத்து, இந்தக் கூறில், "பதினைந்து ஆண்டு" என்னும் சொற்களுக்கு மாற்றாக, "இருபத்தைந்து ஆண்டு" என்னும் சொற்கள் அமைக்கப்பட்டிருந்தால் எப்படியோ, அப்படியே இந்தக் கூறு செல்திறம் உடையது ஆகும்:]

[3][மேலும் வரம்புரையாக: [4][[5][அருணாச்சலப் பிரதேசம், கோவா, மிசோரம்] ஆகிய மாநிலங்களின் சட்டமன்றங்களைப்] பொறுத்து, இந்தக் கூறில், "பதினைந்து ஆண்டு" என்னும் சொற்களுக்கு மாற்றாக "நாற்பது ஆண்டு" என்னும் சொற்கள் அமைக்கப்பட்டிருந்தால் எப்படியோ, அப்படியே இந்தக் கூறு செல்திறம் உடையது ஆகும்.]

**211. சட்டமன்றத்தில் விவாதத்தின் மீது வரையறை :**

உச்ச நீதிமன்றத்தின் அல்லது ஓர் உயர் நீதிமன்றத்தின் நீதிபதி ஒருவர், தம் கடமைகளை ஆற்றுகையில் அவர் நடந்துகொண்ட விதம் குறித்து விவாதம் எதுவும் மாநிலச் சட்டமன்றத்தில் நடைபெறுதல் ஆகாது.

**212. சட்டமன்ற நடவடிக்கைகள் குறித்து நீதிமன்றங்கள் விசாரித்தல் ஆகாது :**

(1) நெறிமுறையைப் பின்பற்றுவதில் முறைகேடு இருப்பதாகக் காரணம் காட்டி, மாநிலச் சட்டமன்றம் ஒன்றின் நடவடிக்கைகள் எவற்றின் செல்லுந்தன்மையையும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

(2) ஒரு மாநிலச் சட்டமன்றப் பதவியாளர் அல்லது உறுப்பினர் ஒருவர், அச்சட்டமன்ற நெறிமுறையையோ அலுவல் நடத்துமுறையையோ ஒழுங்குறுத்துவதற்காக அல்லது ஒழுங்கமைதியை நிலைநாட்டுவதற்காக, இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ அவருக்கு உற்றமைந்துள்ள அதிகாரங்களைச் செலுத்துவது பொறுத்து, நீதிமன்றம் எதனின் அதிகாரவரம்பிற்கும் உட்பட்டவர் ஆகார்.

## அத்தியாயம் IV

## ஆளுநருக்குள்ள சட்டமியற்றும் அதிகாரம்

**213. சட்டமன்றத்தின் கூட்டத்தொடர் இறுதி செய்யப்பட்டுள்ள காலத்தின்போது அவசரச்சட்டங்களை சாற்றம் செய்வதற்கு ஆளுநருக்குள்ள அதிகாரம் :**

(1) ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் கூட்டத்தொடர் தொடர்நிலையிலுள்ள காலம் தவிர அல்லது ஒரு மாநிலத்தில் மேலவை உள்ளவிடத்து சட்டமன்ற ஈரவைகளின் கூட்டத்தொடர்களும் தொடர்நிலையிலுள்ள காலம் தவிர வேறு எச்சமயத்திலேனும் ஆளுநர், தாம் அவசரமாக நடவடிக்கை எடுக்க வேண்டியதை அவசியமாக்கும் சூழ்நிலைகள் உள்ளன என்று தெளிவுறக்காண்பாராயின், அச்சூழ்நிலைகளுக்கேற்பத் தேவையென்று தாம் கருதும் அவசரச்சட்டங்களைச் சாற்றம் செய்யலாம்:

---

1. இமாச்சலப் பிரதேச மாநிலச் சட்டம், 1970 (53/1970) இன் 46 ஆம் பிரிவினால் (25–1–1971 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. "இமாச்சலப் பிரதேச மாநிலச் சட்டமன்றம்" என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 ஆம் பிரிவினால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 39 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு ) புகுத்தப்பட்டது.
4. "மிசோரம் மாநிலச் சட்டமன்றம்" என்பதற்கு, அருணாச்சலப் பிரதேச மாநிலச் சட்டம், 1986 (69/1986) இன் 42 ஆம் பிரிவினால் (30–5–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
5. "அருணாச்சலப் பிரதேசம் மற்றும் மிசோரம்" என்பதற்கு, கோவா, தமண் மற்றும் டையூ மறுஅமைப்புச் சட்டம், 1987 (18/1987) இன் 63 ஆம் பிரிவினால் (30–5–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

[1][Provided that in relation to [2][the Legislature of the States of Himachal Pradesh, Manipur, Meghalaya and Tripura] this clause shall have effect as if for the words "fiteen years" occurring therein, the words "twenty-five years" were substituted:]

[3][Provided further that in relation to the [4][Legislature of the States of [5][Arunachal Pradesh, Goa and Mizoram]] this clause shall have effect as if for the words "fifteen years" occurring therein, the words "forty years" were substituted.]

**211. Restriction on discussion in the Legislature :**

No discussion shall take place in the Legislature of a State with respect to the conduct of any Judge of the Supreme Court or of a High Court in the discharge of his duties.

**212. Courts not to inquire into proceedings of the Legislature :**

(1) The validity of any proceedings in the Legislature of a State shall not be called in question on the ground of any alleged irregularity of procedure.

(2) No officer or member of the Legislature of a State in whom powers are vested by or under this Constitution for regulating procedure or the conduct of business, or for maintaining order, in the Legislature shall be subject to the jurisdiction of any court in respect of the exercise by him of those powers.

## CHAPTER IV

## LEGISLATIVE POWER OF THE GOVERNOR

**213. Power of Governor to promulgate Ordinances during recess of Legislature:**

(1) If at any time, except when the Legislative Assembly of a State is in session, or where there is a Legislative Council in a State, except when both Houses of the Legislature are in session, the Governor is satisfied that circumstances exist which render it necessary for him to take immediate action, he may promulgate such Ordinances as the circumstances appear to him to require:

---

1. Ins. by the State of Himachal Pradesh Act, 1970 (53 of 1970), s. 46 (w.e.f. 25-1-1971).
2. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971) s. 71, for " Legislature of the State of Himachal Pradesh"(w.e.f.21-1-1972).
3. Ins. by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 39 (w.e.f. 20-2-1987).
4. Subs. by the State of Arunachal Pradesh Act, 1986 (69 of 1986), s. 42, for "Legislature of the State of Mizoram" (w.e.f.30-5-1987).
5. Subs. by the Goa, Daman and Diu Reorganisation Act, 1987 (18 of 1987), s. 63, for "Arunachal Pradesh and Mizoram" (w.e.f. 30-5-1987).

வரம்புரையாக : அத்தகைய அவசரச்சட்டம் எதனையும் —

(அ) ஒரு சட்டமுன்வடிவு அதே வகையங்களைக் கொண்டிருந்தால் அதனைச் சட்டமன்றத்தில் அறிமுகப்படுத்துவதற்குக் குடியரசுத்தலைவரின் முன் ஒப்பளிப்பு இந்த அரசமைப்பின்படி வேண்டுவதாக இருந்திருக்கும் எனில்; அல்லது

(ஆ) ஒரு சட்டமுன்வடிவு அதே வகையங்களைக் கொண்டிருந்தால் அதனைக் குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கிவைப்பது அவசியம் என அவர் கருதியிருப்பார் எனில்; அல்லது

(இ) மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட்டம் ஒன்று அதே வகையங்களைக் கொண்டிருந்தால் குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கிவைத்து அது குடியரசுத் தலைவரின் ஏற்பிசைவையும் பெற்றிருந்தாலன்றி, இந்த அரசமைப்பின்படி செல்லுந்தன்மையற்றதாகிவிடும் எனில்

குடியரசுத்தலைவரின் நெறிவுறுத்தங்கள் இன்றி, ஆளுநர் சாற்றம்செய்தல் ஆகாது.

(2) இந்த உறுப்பின்படி சாற்றம் செய்யப்பட்ட ஓர் அவசரச்சட்டம், மாநிலச் சட்டமன்றம் இயற்றி ஆளுநரால் ஏற்பிசைவளிக்கப்பட்ட சட்டம் ஒன்றிற்குள்ள அதே செல்லாற்றலும் செல்திறமும் உடையது ஆகும்; ஆனால், அத்தகைய அவசரச்சட்டம் ஒவ்வொன்றும் –

(அ) மாநிலச் சட்டமன்றப் பேரவையின் முன்பு அல்லது சட்டமன்ற மேலவை உள்ள மாநிலத்தில், ஈரவைகளின் முன்பும் வைக்கப்படுதல் வேண்டும்; மற்றும், சட்டமன்றம் மீண்டும் கூடியதிலிருந்து ஆறு வாரங்கள் கழிவுற்றவுடன் அல்லது அக்காலஅளவு கழிவுறுவதற்கு முன்பே அதற்கு ஒப்பேற்பு அளிக்க மறுக்கும் ஒரு தீர்மானத்தைச் சட்டமன்றப் பேரவை நிறைவேற்றி, அதனைச் சட்டமன்ற மேலவை, ஏதேனுமிருப்பின், அதுவும் ஏற்றுக்கொண்டிருக்குமாயின், அத்தீர்மானம், அவ்வாறு நிறைவேற்றப்பட்டதன் மேல் அல்லது அத்தீர்மானத்தை மேலவை ஏற்றுக்கொண்டதன்மேல், செயற்பாடு அற்றுப்போகும்; மேலும்,

(ஆ) ஆளுநரால், எச்சமயத்திலும், விலக்கிக்கொள்ளப்படலாம்.

**விளக்கம்.** — சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் அவைகள் வெவ்வேறு தேதிகளில் மீண்டும் கூடுமாறு அழைப்பு விடுக்கப்பட்டிருக்குமிடத்து, இந்தக் கூறினைப் பொறுத்தவரை, அந்த ஆறு வாரக் காலஅளவு அத்தேதிகளில் பிந்திய தேதியிலிருந்து கணக்கிடப்படுதல் வேண்டும்.

(3) மாநிலச் சட்டமன்றம் இயற்றி ஆளுநரால் ஏற்பிசைவளிக்கப்பட்ட சட்டம் ஒன்றில் இடம்பெற்றிருந்தாலும் எத்தகைய வகையம் செல்லுந்தன்மையற்றுப்போகுமோ அத்தகைய வகையம் எதனையும், இந்த உறுப்பின் படியான ஓர் அவசரச்சட்டம் கொண்டிருப்பின், அந்த அளவிற்கு அது *இல்லாநிலையது* ஆகும் :

Provided that the Governor shall not, without instructions from the President, promulgate any such Ordinance if —

(a) a Bill containing the same provisions would under this Constitution have required the previous sanction of the President for the introduction thereof into the Legislature ; or

(b) he would have deemed it necessary to reserve a Bill containing the same provisions for the consideration of the President ; or

(c) an Act of the Legislature of the State containing the same provisions would under this Constitution have been invalid unless, having been reserved for the consideration of the President, it had received the assent of the President.

(2) An Ordinance promulgated under this article shall have the same force and effect as an Act of Legislature of the State assented to by the Governor, but every such Ordinance —

(a) shall be laid before the Legislative Assembly of the State, or where there is a Legislative Council in the State, before both the Houses, and shall cease to operate at expiration of six weeks from the reassembly of the Legislature, or if before the expiration of that period a resolution disapproving it is passed by the Legislative Assembly and agreed to by the Legislative Council, if any, upon the passing of the resolution or, as the case may be, on the resolution being agreed to by the Council; and

(b) may be withdrawn at any time by the Governor.

**Explanation.** — Where the Houses of the Legislature of a State having a Legislative Council are summoned to reassemble on different dates, the period of six weeks shall be reckoned from the later of those dates for the purposes of this clause.

(3) If and so far as an Ordinance under this article makes any provision which would not be valid if enacted in an Act of the Legislature of the State assented to by the Governor, it shall be *void*:

வரம்புரையாக : ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள ஒரு பொருட்பாடு குறித்த நாடாளுமன்றச் சட்டத்திற்கோ நிலவுறும் சட்டம் ஒன்றிற்கோ முரண்படும் மாநிலச் சட்டமன்றச் சட்டத்தின் செல்திறம் பற்றிய இந்த அரசமைப்பின் வகையங்களைப் பொறுத்தவரை, குடியரசுத்தலைவரின் நெறிவுறுத்தங்களை ஒட்டி இந்த உறுப்பின்படி சாற்றம் செய்யப்பட்ட அவசரச் சட்டம் எதுவும், குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டு அவரால் ஏற்பிசைவளிக்கப்பட்ட மாநிலச் சட்டமன்றத்தின் ஒரு சட்டமாகக் கொள்ளப்படுதல் வேண்டும்.

[1](4) * * *

## அத்தியாயம் V

## மாநிலங்களிலுள்ள உயர் நீதிமன்றங்கள்

**214. மாநிலங்களுக்கான உயர் நீதிமன்றங்கள் :**

[2]***மாநிலம் ஒவ்வொன்றுக்கும் ஓர் உயர் நீதிமன்றம் இருக்கும்.

[3][* * *]

**215. உயர் நீதிமன்றங்கள் நிலையாவண நீதிமன்றங்களாக இருக்கும் :**

உயர் நீதிமன்றம் ஒவ்வொன்றும் ஒரு நிலையாவண நீதிமன்றமாக இருக்கும்; மேலும், தன்னை அவமதித்ததற்காகத் தண்டிக்கும் அதிகாரம் உள்ளடங்கலாக, அத்தகு நீதிமன்றத்திற்குள்ள அதிகாரங்கள் அனைத்தையும் அது உடையதாக இருக்கும்.

**216. உயர் நீதிமன்றங்களின் அமைப்பு :**

உயர் நீதிமன்றம் ஒவ்வொன்றும், தலைமை நீதிபதி ஒருவரையும், குடியரசுத்தலைவர் தேவையெனக் கருதி அவ்வப்போது அமர்த்தும் பிற நீதிபதிகளையும் கொண்டதாக இருக்கும்.

[4][* * *]

---

1. (4) ஆம் கூறு, அரசமைப்புச் (முப்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 3 ஆம் பிரிவினால் (முன்மேவுறுமாறு) புகுத்தப்பட்டது; மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 27 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

2. "(1)" அடைப்புக்குறிகள் மற்றும் எண், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

3. (2) மற்றும் (3) ஆம் கூறுகள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

4. வரம்புரையானது, *மேற்படிச் சட்டத்தின்* 11 ஆம் பிரிவினால் விட்டுவிடப்பட்டது.

Provided that, for the purposes of the provisions of this Constitution relating to the effect of an Act of the Legislature of a State which is repugnant to an Act of Parliament or an existing law with respect to a matter enumerated in the Concurrent List, an Ordinance Promulgated under this article in pursuance of instructions from the President shall be deemed to be an Act of the Legislature of the State which has been reserved for the consideration of the President and assented to by him.

[1](4) * * *

## CHAPTER V

## THE HIGH COURTS IN THE STATES

### 214. High Courts for States:

[2]***There shall be a High Court for each State.

[3][* * *]

### 215. High Courts to be courts of record:

Every High Court shall be a court of record and shall have all the powers of such a court including the power to punish for contempt of itself.

### 216. Constitution of High Courts:

Every High Court shall consist of a Chief Justice and such other Judges as the President may from time to time deem it necessary to appoint.

[4][* * *]

---

1. Cl. *(4)* was ins. by the Constitution (Thirty-eighth Amendment) Act, 1975, s. 3 (retrospectively) and omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 27 (w.e.f. 20-6-1979).
2. The brackets and figure "(1)"omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f.1-11-1956).
3. Cls. *(2)* and *(3)* omitted by *ibid.*
4. Proviso omitted by s. 11, *ibid.*

**217. உயர் நீதிமன்ற நீதிபதி ஒருவரின் அமர்த்துகை மற்றும் அப்பதவிக்கான வரைக்கட்டுகள் :**

(1) உயர் நீதிமன்ற நீதிபதி ஒவ்வொருவரையும், குடியரசுத் தலைவர், [1][124 (அ) உறுப்பில் சுட்டப்பட்ட தேசிய நீதித்துறை பதவியமர்த்துகைகள் ஆணையத்தின் பரிந்துரைகளின் பேரில்] தம் கையொப்பமும் முத்திரையும் கொண்ட அதிகார ஆணையின்வழி அமர்த்துவார்; மற்றும், [2][அவர் ஒரு கூடுதல் அல்லது செயலமர் நீதிபதியாக இருப்பின், 224 ஆம் உறுப்பில் வகைசெய்யப்பட்டுள்ளவாறும், பிற நேர்வு எதிலும், அவர் [3][அறுபத்திரண்டு] வயது நிறைவெய்தும் வரையுலும் பதவி வகிப்பார்.

வரம்புரையாக :

(அ) நீதிபதி ஒருவர், குடியரசுத்தலைவருக்குத் தம் கையொப்பமிட்டு எழுத்துவழித் தெரிவித்துத் தம் பதவியை விட்டு விலகிக் கொள்ளலாம்;

(ஆ) நீதிபதி ஒருவர், உச்ச நீதிமன்றத்தின் நீதிபதி ஒருவரைப் பதவியிலிருந்து அகற்றுவதற்கு 124 ஆம் உறுப்பின் (4) ஆம் கூறில் வகைசெய்யப்பட்டுள்ள வழிமுறையின்படி, பதவியிலிருந்து குடியரசுத்தலைவரால் அகற்றப்படலாம்;

(இ) நீதிபதி ஒருவர் உச்ச நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாகக் குடியரசுத் தலைவரால் அமர்த்தப்பெறுவதன் மேல் அல்லது இந்திய ஆட்சிநிலவரைக்குள் உள்ள வேறு உயர் நீதிமன்றம் எதற்கும் குடியரசுத்தலைவரால் அவர் மாற்றல் செய்யப்பெறுவதன் மேல், அவருடைய பதவி காலியாகிவிடும்.

(2) ஒருவர், இந்தியக் குடிமகனாக இருப்பதுடன்—

(அ) இந்திய ஆட்சிநிலவரையில் குறைந்தது பத்தாண்டுகள் நீதித்துறைப் பதவியை வகித்துள்ளவராக; அல்லது

(ஆ) [4]***ஓர் உயர் நீதிமன்றத்திலோ, தொடர்ந்து இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட [4]***அத்தகைய நீதிமன்றங்களிலோ குறைந்தது பத்தாண்டுகள் வழக்குரைஞராக இருந்துள்ளவராக

இருந்தாலன்றி, உயர் நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாக அமர்த்தப்பெறுவதற்குத் தகுதிப்பாடு உடையவர் ஆகார்.

[5](இ) * * *

**விளக்கம். -** இந்தக் கூறினைப் பொறுத்தவரை –

1. குறித்தசில சொற்களுக்கு, அரசமைப்புச் (தொண்ணூற்று ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2014 இன் 6 ஆம் பிரிவினால் (13–4–2015 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன. இந்தத் திருத்தம், உச்ச நீதிமன்றத்தால் அறவு செய்யப்பட்டுள்ளது. ஏ.ஐ.ஆர். 2016 உ. நீ 117 இல் வெளியிடப்பட்டுள்ள உச்ச நீதிமன்ற பதிவுறு வழக்குரைஞர்கள் சங்கம் மற்றும் பிறர் எதிர் இந்திய ஒன்றியம் என்ற வழக்கில் உச்ச நீதிமன்றம் பிறப்பித்த, 2015, அக்டோபர் 16 ஆம் நாளிட்ட ஆணையைப் பார்க்கவும்.
2. "அவர் அறுபது வயது நிறைவெய்தும் வரையிலும் பதவி வகிப்பார்'' என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 12 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "அறுபது" என்பதற்கு, அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 4 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
4. "முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்ட மாநிலம் எதிலும் உள்ள'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.
5. "அல்லது" என்ற சொல்லும் (இ) உட்கூறும் அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 36 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது; மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 28 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு ) விட்டுவிடப்பட்டது.

**217. Appointment and conditions of the office of a Judge of a High Court :**

(1) Every Judge of a High Court shall be appointed by the President by warrant under his hand and seal [1][on the recommendations of the National Judicial Appointments Commission referred to in article 124A] and [2][shall hold office, in the case of an additional or acting Judge, as provided in article 224, and in any other case, until he attains the age of [3][sixty- two years]:]

Provided that —

(a) a Judge may, by writing under his hand addressed to the President, resign his office;

(b) a Judge may be removed from his office by the President in the manner provided in clause (4) of article 124 for the removal of a Judge of the Supreme Court;

(c) the office of a Judge shall be vacated by his being appointed by the President to be a Judge of the Supreme Court or by his being transferred by the President to any other High Court within the territory of India.

(2) A person shall not be qualified for appointment as a Judge of a High Court unless he is a citizen of India and—

(a) has for at least ten years held a judicial office in the territory of India; or

(b) has for at least ten years been an advocate of a High Court[4]*** or of two or more such Courts in succession[4]***;

[5](c) * * *

**Explanation.** - for the purposes of this clause –

---

1. Subs. by the Constitution (Ninety-ninth Amendment) Act, 2014, s. 6, for certain words (w.e.f.13-4-2015). This amendment has been struck down by the Supreme Court vide its order dated the 16th October, 2015 in the Supreme Court Advocates-on-Record Association and Another Vs. Union of India reported in AIR 2016 SC 117.
2. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 12, for "shall hold office until he attains the age of sixty years" w.e.f.(1-11-1956).
3. Subs. by the Constitution (Fifteenth Amendment) Act, 1963, s. 4, for "sixty years" (w.e.f. 5-10-1963).
4. The words "in any State specified in the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).
5. The word "or" and sub. cl. (c) ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 36 (w.e.f. 3-1-1977) and omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 28 (w.e.f. 20-6-1979).

[1][(அ) ஒருவர் இந்திய ஆட்சிநிலவரையில் நீதித்துறைப் பதவியை வகித்துள்ள காலஅளவைக் கணக்கிடுகையில், அவர் நீதித்துறைப் பதவி எதனையும் வகித்திருந்த பின்பு, உயர் நீதிமன்ற வழக்குரைஞராக அவர் இருந்துவந்துள்ள அல்லது ஒரு தீர்ப்பாயத்தின் உறுப்பினர் பதவியை அல்லது ஒன்றியத்தின்கீழ் அல்லது ஒரு மாநிலத்தின்கீழ் சட்டத்தில் சிறப்பறிவு தேவைப்படுகிற பதவியிடம் ஒன்றை வகித்து வந்திருக்கிற காலஅளவையும் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும்; ]

[2][(அஅ)] ஒருவர், உயர் நீதிமன்ற வழக்குரைஞராக இருந்துள்ள காலஅளவைக் கணக்கிடுகையில், அவர் வழக்குரைஞரான பின்பு, [3][ஒரு நீதித்துறைப் பதவியை அல்லது ஒரு தீர்ப்பாயத்தின் உறுப்பினர் பதவியை அல்லது ஒன்றியத்தின்கீழ் அல்லது ஒரு மாநிலத்தின்கீழ் சட்டத்தில் சிறப்பறிவு தேவைப்படுகிற பதவியிடம் ஒன்றை வகித்து வந்திருக்கிற] காலஅளவையும் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும்;

(ஆ) ஒருவர், இந்திய ஆட்சிநிலவரையில் நீதித்துறைப் பதவியை வகித்துள்ள அல்லது உயர் நீதிமன்ற வழக்குரைஞராக இருந்துள்ள காலஅளவைக் கணக்கிடுகையில், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு இந்திய அரசுச் சட்டம், 1935 ஆல் வரையறை செய்யப்பட்டிருந்த இந்தியாவிற்குள் 1947 ஆம் ஆண்டு ஆகஸ்டு 14 ஆம் நாளுக்கு முன்பு அடங்கியிருந்த பரப்பிடம் எதிலும் அவர் நீதித்துறைப் பதவி வகித்துள்ள அல்லது, நேர்வுக்கேற்ப, அத்தகைய பரப்பிடம் எதிலும் உள்ள உயர் நீதிமன்றம் எதிலும் ஒரு வழக்குரைஞராக இருந்துள்ள காலஅளவையும் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும்.

[4][(3) உயர் நீதிமன்ற நீதிபதி ஒருவரின் வயது என்ன என்பது குறித்து வினா எதுவும் எழுமாயின், அவ்வினா இந்தியத் தலைமை நீதிபதியைக் கலந்தாய்வு செய்த பின்பு, குடியரசுத்தலைவரால் முடிபு செய்யப்படுதல் வேண்டும்; மேலும், குடியரசுத்தலைவரின் முடிபே அறுதியானது ஆகும்.]

**218. உச்ச நீதிமன்றம் தொடர்பான குறித்தசில வகையங்கள் உயர் நீதிமன்றங்களுக்குப் பொருந்துதல் :**

124 ஆம் உறுப்பின் (4), (5) ஆகிய கூறுகளின் வகையங்கள், உச்ச நீதிமன்றம் தொடர்பாகப் பொருந்துவன போன்றே, அவற்றிலுள்ள உச்ச நீதிமன்றம் என்னும் சுட்டுகைகளுக்கு மாற்றாக உயர் நீதிமன்றம் என்னும் சுட்டுகைகளைக் கொண்டு உயர் நீதிமன்றம் தொடர்பாகவும் பொருந்துவன ஆகும்.

**219. உயர் நீதிமன்ற நீதிபதிகளுக்குள்ள ஆணைமொழி அல்லது உறுதிமொழி :**

[5]***உயர் நீதிமன்ற நீதிபதியாக அமர்த்தப்பெறும் ஒவ்வொருவரும், அவர் தம் பதவியை ஏற்பதற்கு முன்பு, மாநில ஆளுநரின் அல்லது அதன்பொருட்டு அவரால் அமர்த்தப்பெறும் ஒருவரின் முன்னிலையில், மூன்றாம் இணைப்புப்பட்டியலில் அதற்கென உள்ள சொன்முறையில் ஓர் ஆணைமொழியை அல்லது உறுதிமொழியை ஏற்றுக் கையொப்பமிடுதல் வேண்டும்.

---

1. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 28 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. (அ) கூறு, *மேற்படிச் சட்டத்தினால்* (அ அ) கூறாக மறு எண்ணிடப்பட்டது.

3. "நீதித்துறைப் பதவியை வகித்துள்ள" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 36 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

4. அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 4 ஆம் பிரிவினால் (முன்மேவு செல்திறனுடன்) (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

5. "ஒரு மாநிலத்தின்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

[1][(a) in computing the period during which a person has held judicial office in the territory of India, there shall be included any period, after he has held any judicial office, during which the person has been an advocate of a High Court or has held the office of a member of a tribunal or any post, under the Union or a State, requiring special knowledge of law;]

[2][(aa)] in computing the period during which a person has been an advocate of a High Court, there shall be included any period during which the person [3][has held judicial office or the office of a member of a tribunal or any post, under the Union or a State, requiring special knowledge of law] after he became an advocate;

(b) in computing the period during which a person has held judicial office in the territory of India or been an advocate of a High Court, there shall be included any period before the commencement of this Constitution during which he has held judicial office in any area which was comprised before the fifteenth day of August, 1947, within India as defined by the Government of India Act, 1935, or has been an advocate of any High Court in any such area, as the case may be.

[4][(3) If any question arises as to the age of a Judge of a High Court, the question shall be decided by the President after consultation with the Chief Justice of India and the decision of the President shall be final.]

**218. Application of certain provisions relating to Supreme Court to High Courts :**

The provisions of clauses (4) and (5) of article 124 shall apply in relation to a High Court as they apply in relation to the Supreme Court with the substitution of references to the High Court for references to the Supreme Court.

**219. Oath or affirmation by Judges of High Courts :**

Every person appointed to be a Judge of a High Court [5]*** shall, before he enters upon his office, make and subscribe before the Governor of the State, or some person appointed in that behalf by him, an oath or affirmation according to the form set out for the purpose in the Third Schedule.

---

1. Ins. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 28 (w.e.f. 20-6-1979).
2. Cl. (a) re-numbered as cl. (aa) by *ibid* .
3. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 36, for "has held judicial office" (w.e.f. 3-1-1977).
4. Ins. by the Constitution (Fifteenth Amendment) Act, 1963, s. 4 (with retrospective effect) (w.e.f. 5-10-1963).
5. The words "in a State" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

[1][220. நிலையமர் நீதிபதியாக இருந்தவர் வழக்குரைஞராகத் தொழிலாற்றுவதன் மீது வரையறை :

இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்குப் பின்பு, ஓர் உயர் நீதிமன்றத்தில் நிலையமர் நீதிபதியாகப் பதவி வகித்த எவரும், உச்ச நீதிமன்றத்திலும் பிற உயர் நீதிமன்றங்களிலும் தவிர, இந்தியாவிலுள்ள வேறு நீதிமன்றம் எதிலும் அல்லது அதிகார அமைப்பு எதன் முன்பும் வழக்குரைஞராக வாதிடுதலோ செயல்படுதலோ ஆகாது.

விளக்கம். - இந்த உறுப்பில், ''உயர் நீதிமன்றம்'' என்னும் சொற்றொடர் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் தொடக்கநிலைக்கு முன்பு இருந்துவந்த, முதலாம் இணைப்புப்பட்டியலின் (ஆ) பகுதியில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஒரு மாநிலத்திற்கான உயர் நீதிமன்றத்தை உள்ளடக்குவதில்லை.]

221. நீதிபதிகளின் வரையூதியங்கள் முதலியவை :

[2][(1) உயர் நீதிமன்றம் ஒவ்வொன்றின் நீதிபதிகளுக்கும் நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கும் வரையூதியங்கள் வழங்கப்படும்; அவ்வாறு அதன்பொருட்டு வகைசெய்யப்படும் வரையிலும், இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியங்கள் வழங்கப்பட்டு வரும்.]

(2) நீதிபதி ஒவ்வொருவரும், நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தாலோ அதன் வழியாலோ தீர்மானிக்கப்படும் படித்தொகைகள், வாராமை விடுப்பும் ஓய்வூதியமும் பொறுத்த உரிமைகள் ஆகியவற்றிற்கு உரிமை கொண்டவர் ஆவார்; அவ்வாறு தீர்மானிக்கப்படும் வரையிலும், இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள படித்தொகைகள், உரிமைகள் ஆகியவற்றிற்கு அவர் உரிமைகொண்டவராய் இருப்பார்:

வரம்புரையாக : நீதிபதி ஒருவரின் படித்தொகைகளோ வாராமை விடுப்பு அல்லது ஓய்வூதியம் பொறுத்த அவருடைய உரிமைகளோ அவர் அமர்த்தப்பெற்ற பின்பு அவருக்குப் பாதகமான வகையில் மாறுதல் செய்யப்படுதல் ஆகாது.

222. நீதிபதி ஒருவரை ஓர் உயர் நீதிமன்றத்திலிருந்து மற்றொன்றிற்கு மாற்றுதல் :

(1) குடியரசுத்தலைவர், [3][124 (அ) உறுப்பில் சுட்டப்பட்ட தேசிய நீதித்துறை பதவியமர்த்துகைகள் ஆணையத்தின் பரிந்துரையின் பேரில்], ஓர் உயர் நீதிமன்றத்தின் நீதிபதி ஒருவரைப்[4]*** பிற உயர் நீதிமன்றம் எதற்கும் மாற்றலாம்.

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 13 ஆம் பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டது.

2. (1) ஆம் கூறுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1986 இன் 3 ஆம் பிரிவினால் (1 –4–1986 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. ''இந்தியத் தலைமை நீதிபதியைக் கலந்தாய்வு செய்த பின்பு'' என்பதற்கு, அரசமைப்புச் (தொண்ணூற்று ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2014 இன் 7 ஆம் பிரிவினால் (13–4–2015 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. இந்தத் திருத்தம், உச்ச நீதிமன்றத்தால் அறவு செய்யப்பட்டுள்ளது. ஏ.ஐ.ஆர். 2016 உநீ 117 இல் வெளியிடப்பட்டுள்ள உச்ச நீதிமன்ற பதிவுறு வழக்குரைஞர்கள் சங்கம் மற்றும் பிறர் எதிர் இந்திய ஒன்றியம் என்ற வழக்கில் உச்ச நீதிமன்றம் பிறப்பித்த, 2015, அக்டோபர் 16 ஆம் நாளிட்ட ஆணையைப் பார்க்கவும்.

4. ''இந்திய ஆட்சிநிலவரையிலுள்ள'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 14 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

[1][220. **Restriction on practice after being a permanent Judge :**

No person who, after the commencement of this Constitution, has held office as a permanent Judge of a High Court shall plead or act in any court or before any authority in India except the Supreme Court and other High Courts.

**Explanation.** — In this article, the expression "High Court" does not include a High Court for a State specified in Part B of the First Schedule as it existed before the commencement of the Constitution (Seventh Amendment) Act, 1956.]

**221. Salaries etc., of Judges :**

[2][(1) There shall be paid to the Judges of each High Court such salaries as may be determined by Parliament by law and, until provision in that behalf is so made, such salaries as are specified in the Second Schedule.]

(2) Every Judge shall be entitled to such allowances and to such rights in respect of leave of absence and pension as may from time to time be determined by or, under law made by Parliament and, until so determined, to such allowances and rights as are specified in the Second Schedule:

Provided that neither the allowances of a Judge nor his rights in respect of leave of absence or pension shall be varied to his disadvantage after his appointment.

**222. Transfer of a Judge from one High Court to another :**

(1) The President may, [3][on the recommendation of the National Judicial Appointments Commission referred to in article 124A], transfer a Judge from one High Court to any other High Court[4]***.

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 13.
2. Subs. by the Constitution (Fifty-fourth Amendment) Act, 1986, s. 3, for cl. *(1)* (w.e.f. 1-4-1986).
3. Subs. by the Constitution (Ninety-ninth Amendment) Act, 2014, s. 7, for "after consultation with the Chief Justice of India"(w.e.f. 13-4-2015). This amendment has been struck down by the Supreme Court *vide* its order dated the 16th October, 2015 in the *Supreme Court Advocates-on-Record Association and Another Vs. Union of India* reported in AIR 2016 SC 117.
4. The words "within the territory of India" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 14 (w.e.f. 1-11-1956).

[1][(2) அவ்வாறு மாற்றப்பெற்றுள்ள அல்லது மாற்றப்பெறும் நீதிபதி ஒருவர், அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம், 1963 இன் தொடக்கநிலைக்குப் பின்பு பிற உயர் நீதிமன்றத்தின் நீதிபதியாகப் பணிபுரிகிற காலத்தில் தமது வரையூதியத்துடன் சேர்த்து, நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கும் சரியீட்டுப் படித்தொகைக்கும் அவ்வாறு தீர்மானிக்கப்படும் வரையில், குடியரசுத்தலைவர் ஆணையின்வழி குறித்திடும் சரியீட்டுப் படித்தொகைக்கும் உரிமைகொண்டவர் ஆவார்.]

**223. செயலமர் தலைமை நீதிபதியை அமர்த்துதல் :**

ஓர் உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதிப் பதவி காலியாக இருக்கும் போது, அல்லது அத்தகைய தலைமை நீதிபதி எவரும் தம் இருத்தலின்மை அல்லது பிறவாறான காரணத்தால் தமது பதவிக்குரிய கடமைகளைப் புரிய இயலாதிருக்கும்போது, குடியரசுத்தலைவர் அதன்பொருட்டு அமர்த்தும் அந்நீதிமன்றத்துப் பிற நீதிபதிகளில் ஒருவர் அப்பதவிக்குரிய கடமைகளைப் புரிந்து வருவார்.

**[2][224. கூடுதல் மற்றும் செயலமர் நீதிபதிகளை அமர்த்துதல் :**

(1) ஓர் உயர் நீதிமன்றத்தின் அலுவல் அப்போதைக்கு அதிகரித்துள்ளதன் காரணமாக அல்லது அங்குள்ள வேலை நிலுவைகள் காரணமாக, அந்த நீதிமன்றத்தின் நீதிபதிகளின் எண்ணிக்கையை அப்போதைக்கு உயர்த்த வேண்டுமெனக் குடியரசுத்தலைவருக்குத் தோன்றுமாயின், [3][குடியரசுத்தலைவர், தேசிய நீதித்துறை பதவியமர்த்துகைகள் ஆணையத்துடன் கலந்தாய்வு செய்து], உரிய தகுதிப்பாடுள்ளவர்களை ஈராண்டுக்கு மேற்படாமல், தாம் குறித்துரைக்கும் காலஅளவுக்கு அந்நீதிமன்றத்தின் கூடுதல் நீதிபதிகளாக [3][அமர்த்தலாம்.]

(2) ஓர் உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியல்லாத பிற நீதிபதி எவரும் தம் இருத்தலின்மை காரணமாக அல்லது பிற காரணம் எதனாலும் தமது பதவிக்குரிய கடமைகளைப் புரிய இயலாதிருக்கும்போது அல்லது தலைமை நீதிபதியாக அப்போதைக்குச் செயல்படுவதற்கு அமர்த்தப்பெறுகிறபோது, [3][குடியரசுத்தலைவர், தேசிய நீதித்துறை பதவியமர்த்துகைகள் ஆணையத்துடன் கலந்தாய்வு செய்து], உரிய தகுதிப்பாடுள்ள ஒருவரை, அந்த நீதிமன்றத்தின் நிலையமர் நீதிபதி தமது கடமைகளை மீண்டும் தொடங்குகிற வரையிலும், அந்நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாகச் செயல்படுவதற்கு [3][அமர்த்தலாம்.]

(3) ஓர் உயர் நீதிமன்றத்தின் கூடுதல் அல்லது செயலமர் நீதிபதியாக அமர்த்தப்பெறும் எவரும், [4][அறுபத்திரண்டு] வயதுநிறைவெய்திய பின்பு பதவி வகித்தல் ஆகாது].

---

1. அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 5 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது. முதன்முதலில் இருந்த (2) ஆம் கூறு அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 14 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

2. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 15 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

3. "குடியரசுத் தலைவர் அமர்த்தலாம்" என்பதற்கு, அரசமைப்புச் (தொண்ணூற்று ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2014 இன் 8 ஆம் பிரிவினால் (13–4–2015 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது. இந்தத் திருத்தம், உச்ச நீதிமன்றத்தால் அறவு செய்யப்பட்டுள்ளது. ஏ.ஐ.ஆர். 2016 உ. நீ 117 இல் வெளியிடப்பட்டுள்ள உச்ச நீதிமன்ற பதிவுறு வழக்குரைஞர்கள் சங்கம் மற்றும் பிறர் எதிர் இந்திய ஒன்றியம் என்ற வழக்கில் உச்ச நீதிமன்றம் பிறப்பித்த, 2015, அக்டோபர் 16 ஆம் நாளிட்ட ஆணையைப் பார்க்கவும்.

4. "அறுபது" என்பதற்கு, அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 6 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

[1][(2) When a Judge has been or is so transferred, he shall, during the period he serves, after the commencement of the Constitution (Fifteenth Amendment) Act, 1963, as a Judge of the other High Court, be entitled to receive in addition to his salary such compensatory allowance as may be determined by Parliament by law and, until so determined such compensatory allowance as the President may by order fix.]

**223. Appointment of acting Chief Justice:**

When the office of Chief Justice of a High Court is vacant or when any such Chief Justice is by reason of absence or otherwise, unable to perform the duties of his office, the duties of the office shall be performed by such one of the other Judges of the Court as the President may appoint for the purpose.

**[2][224. Appointment of additional and acting Judges:**

(1) If by reason of any temporary increase in the business of a High Court or by reason of arrears of work therein, it appears to the President that the number of the Judges of that Court should be for the time being increased, [3][the President may, in consultation with the National Judicial Appointments Commission, appoint] duly qualified persons to be additional Judges of the Court for such period not exceeding two years as he may specify.

(2) When any Judge of a High Court other than the Chief Justice is by reason of absence or for any other reason unable to perform the duties of his office or is appointed to act temporarily as Chief Justice, [3][the President may, in consultation with the National Judicial Appointments Commission, appoint] a duly qualified person to act as a Judge of that Court until the permanent Judge has resumed his duties.

(3) No person appointed as an additional or acting Judge of a High Court shall hold office after attaining the age of [4][sixty-two years].]

---

1. Ins. by the Constitution (Fifteenth Amendment) Act, 1963, s. 5 (w.e.f. 5-10-1963). Original cl. (2) was omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 14 (w.e.f. 1-11-1956).
2. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 15 (w.e.f. 1-11-1956).
3. Subs. by the Constitution (Ninety-ninth Amendment) Act, 2014, s. 8, for "the President may appoint" (w.e.f. 13-4-2015). This amendment has been struck down by the Supreme Court vide its order dated the 16th October, 2015 in the Supreme Court Advocates-on-Record Association and Another Vs. Union of India reported in AIR 2016 SC 117.
4. Subs. by the Constitution (Fifteenth Amendment) Act, 1963, s. 6, for "sixty years" (w.e.f. 5-10-1963).

[1][224 (அ). உயர் நீதிமன்றங்களின் அமர்வுகளில், ஓய்வு பெற்ற நீதிபதிகளை அமர்த்துதல் :

இந்த அத்தியாயத்தில், எது எவ்வாறிருப்பினும், [2][தேசிய நீதித்துறை பதவியமர்த்துகைகள் ஆணையம், எந்த ஒரு மாநில உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியினால் செய்யப்படும் சுட்டுகையின் பேரில் குடியரசுத்தலைவரின் முன்னிசைவுடன்,] அந்த நீதிமன்றத்தில் அல்லது பிற உயர் நீதிமன்றம் எதிலும் நீதிபதி பதவி வகித்த ஒருவரை அந்த மாநிலத்து உயர் நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாக அமர்ந்து செயல்படும்படி கேட்டுக்கொள்ளலாம்; அவ்வாறு கேட்டுக்கொள்ளப்பெற்ற ஒவ்வொருவரும், அதன்படி அமர்ந்து செயல்படுங்கால், குடியரசுத் தலைவர் ஆணையின்வழி தீர்மானிக்கும் படித்தொகைகளுக்கு உரிமை கொண்டிருப்பதோடு, அந்த உயர் நீதிமன்றத்தின் நீதிபதி ஒருவருக்குள்ள அதிகாரவரம்பு, அதிகாரங்கள், மதிப்புரிமைகள் ஆகிய அனைத்தையும் உடையவர் ஆவார்; ஆனால், மற்றபடி அவர் அந்நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாகக் கொள்ளப்பெறுவதில்லை :

வரம்புரையாக: மேலே கூறப்பட்ட எவரும், அந்நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாக அமர்ந்து செயல்படுவதற்கு இசைவளித்திருந்தாலன்றி, அவரை அவ்வாறு செயல்படும்படி இந்த உறுப்பிலுள்ள எதுவும் வேண்டுறுத்துவதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.]

225. நிலவுறும் உயர் நீதிமன்றங்களின் அதிகாரவரம்பு :

இந்த அரசமைப்பின் வகையங்களுக்கும் இந்த அரசமைப்பினால் வழங்கப்பட்ட அதிகாரங்களின் பயன்திறன்வழி உரிய சட்ட மன்றம் இயற்றிய சட்டம் ஒன்றின் வகையங்களுக்கும் உட்பட்டு, நிலவுறும் உயர் நீதிமன்றம் ஒன்றினுக்குள்ள அதிகாரவரம்பும், அதில் முறையாற்றப்படும் சட்டநெறியும், அந்நீதிமன்றத்தின் விதிகளை வகுப்பதற்கும், அந்நீதிமன்றத்தின் அமர்வுகள், அதன் உறுப்பினர்கள் தனியாக அல்லது ஆயமாக அமர்தல் ஆகியவற்றை ஒழுங்குறுத்துவதற்குமான அதிகாரம் எதுவும் உள்ளடங்கலாக, அந்நீதிமன்றத்தில் நீதி நிருவாகம் தொடர்பாக அதன் நீதிபதிகளுக்கு உள்ளதான அதிகாரங்களும், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு இருந்தவாறே இருந்துவரும்:

[3][வரம்புரையாக : வருவாய் பற்றிய அல்லது அதனை ஈட்டுவதற்கென இடப்பட்ட ஆணை அல்லது செய்யப்பட்ட செயல் பற்றிய பொருட்பாடு எதனையும் பொறுத்து, உயர் நீதிமன்றங்களில் எதுவும் முதலேற்பு அதிகாரம் செலுத்துவதற்கு இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு இருந்துவந்த வரையறை எதுவும், அத்தகைய அதிகாரத்தைச் செலுத்துவதற்கு இனிமேற்கொண்டு பொருந்துவதில்லை.]

---

1. அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 7 ஆம் பிரிவினால் புகுத்தப்பட்டது.
2. ''எந்த ஒரு மாநில உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி, எச்சமயத்திலும், குடியரசுத் தலைவரின் முன்னிசைவுடன்'' என்பதற்கு, அரசமைப்புச் (தொண்ணூற்று ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2014 இன் 9 ஆம் பிரிவினால் (13–4–2015 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. இந்தத் திருத்தம், உச்ச நீதிமன்றத்தால் அறவு செய்யப்பட்டுள்ளது. ஏ.ஐ.ஆர். 2016 உ. நீ 117 இல் வெளியிடப்பட்டுள்ள உச்ச நீதிமன்ற பதிவுறு வழக்குரைஞர்கள் சங்கம் மற்றும் பிறர் எதிர் இந்திய ஒன்றியம் என்ற வழக்கில் உச்ச நீதிமன்றம் பிறப்பித்த, 2015, அக்டோபர் 16 ஆம் நாளிட்ட ஆணையைப் பார்க்கவும்.
3. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 29 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது. முதன்முதலில் இருந்த வரம்புரை அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 37 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

**[1][224A. Appointment of retired Judges at sittings of High Courts:**

Notwithstanding anything in this Chapter, [2][the National Judicial Appointments Commission on a reference made to it by the Chief Justice of a High Court for any State, may with the previous consent of the President], request any person who has held the office of a Judge of that Court or of any other High Court to sit and act as a Judge of the High Court for that State, and every such person so requested shall, while so sitting and acting, be entitled to such allowances as the President may by order determine and have all the jurisdiction, powers and privileges of, but shall not otherwise be deemed to be, a Judge of that High Court:

Provided that nothing in this article shall be deemed to require any such person aforesaid to sit and act as a Judge of that High Court unless he consents so to do.]

**225. Jurisidiction of existing High Courts :**

Subject to the provisions of this Constitution and to the provisions of any law of the appropriate Legislature made by virtue of powers conferred on that Legislature by this Constitution, the jurisdiction of, and the law administered in, any existing High Court, and the respective powers of the Judges thereof in relation to the administration of justice in the Court, including any power to make rules of Court and to regulate the sittings of the Court and of members thereof sitting alone or in Division Courts, shall be the same as immediately before the commencement of this Constitution:

[3][Provided that any restriction to which the exercise of original jurisidiction by any of the High Courts with respect to any matter concerning the revenue or concerning any act ordered or done in the collection thereof was subject immediately before the commencement of this Constitution shall no longer apply to the exercise of such jurisdiction.]

---

1. Ins. by the Constitution (Fifteenth Amendment) Act, 1963, s. 7.

2. Subs. by the Constitution (Ninety-ninth Amendment) Act, 2014, s. 9, for "the Chief Justice of a High Court for any State may at anytime, with the previous consent of the President" (w.e.f. 13-4-2015). This amendment has been struck down by the Supreme Court *vide* its order dated the 16th October, 2015 in the *Supreme Court Advocates-on-Record Association and Another Vs. Union of India* reported in AIR 2016 SC 117.

3. Ins. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 29 (w.e.f. 20-6.1979). Original Proviso was omitted by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 37 (w.e.f. 1-2-1977).

[1][226. குறித்தசில நீதிப்பேராணைகளைப் பிறப்பிக்க உயர் நீதிமன்றங்களுக்குள்ள அதிகாரம் :

(1) 32 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், [2]*** [3][III ஆம் பகுதியினால் வழங்கப்பெறும் உரிமைகளில் எதனையும் செயலுறுத்துவதற்காகவும், பிற நோக்கம் எதற்காகவும்,] உயர் நீதிமன்றம் ஒவ்வொன்றும், தான் அதிகாரம் செலுத்துகிற ஆட்சிநிலவரைகள் எங்கணும் உள்ள எவருக்கும், அல்லது உரிய நேர்வுகளில் அந்த ஆட்சிநிலவரைகளுக்குள் உள்ள அரசு எதுவும் உள்ளடங்கலாக அதிகாரஅமைப்பு எதற்கும், பணிப்புரைகள், ஆணைகள் அல்லது [3][*ஆட்கொணர்விப்பு, செயலுறுத்து,* தடையுறுத்து, *தகுதிவினவு, நெறிமுறைக்கேட்பு* ஆகியவற்றின் தன்மை கொண்ட நீதிப்பேராணைகளை அல்லது அவற்றில் எதனையும்] பிறப்பிப்பதற்கு அதிகாரம் உடையது ஆகும்.

(2) அரசு அல்லது அதிகாரஅமைப்பு எதற்கும் அல்லது எவர் ஒருவருக்கும் பணிப்புரைகள், ஆணைகள், அல்லது நீதிப்பேராணைகள் பிறப்பிப்பதற்கு (1) ஆம் கூறினால் வழங்கப்பட்ட அதிகாரத்தை, அதைச் செலுத்துவதற்கான வழக்குமூலம் முழுமையாகவோ பகுதியாகவோ எழுந்துள்ள நிலவரைகளில் அதிகாரம் செலுத்துகிற எந்த உயர் நீதிமன்றமும், அந்நிலவரைகளில் அத்தகைய அரசின் அல்லது அதிகாரஅமைப்பின் அமர்கையிடம் அல்லது அத்தகையவரின் உறைவிடம் இல்லாதிருப்பினும், செலுத்தலாம்.

[4][(3). (1) ஆம் கூறின்படியான ஒரு மனுவின் மீது அல்லது அது தொடர்பான நடவடிக்கை எதிலும், உறுத்துக்கட்டளை அல்லது நிறுத்திவைப்பு ஆணை வாயிலாகவோ வேறெந்த முறையிலோ தரப்பினர் எவருக்கும் எதிராக, இடைக்கால ஆணை ஒன்று—

(அ) அந்தத் தரப்பினருக்கு அந்த மனுவின் படிகளையும் அத்தகைய இடைக்கால ஆணை கோரும் வாதத்திற்கு ஆதரவாகவுள்ள ஆவணங்கள் அனைத்தின் படிகளையும் அளிக்காமலும்,

(ஆ) விசாரிக்கப்படும் வாய்ப்பினை அந்தத் தரப்பினருக்கு வழங்காமலும்

பிறப்பிக்கப்பட்டிருந்து, அதன்மேல் அந்த ஆணையை நீக்கம் செய்வதற்கு உயர் நீதிமன்றத்திடம் அந்தத் தரப்பினர் ஒரு விண்ணப்பம் செய்து, அந்த ஆணை யாருக்குச் சாதகமாகப் பிறப்பிக்கப்பட்டிருக்கிறதோ அந்தத் தரப்பினருக்கு அல்லது அந்தத் தரப்பினரின் வழக்குரைஞருக்கு அத்தகைய விண்ணப்பத்தின் ஒரு படியினையும் அளித்திருப்பாராயின், உயர் நீதிமன்றம் அந்த விண்ணப்பத்தினைப் பெற்ற தேதி அல்லது அத்தகைய விண்ணப்பத்தின் ஒரு படி அளிக்கப்பட்ட தேதி, இதில் எது பிந்தியதோ, அத்தேதியிலிருந்து இரண்டு வாரக் காலஅளவு முடிவடைவதற்கு முன்பு அல்லது அந்தக் காலஅளவின் கடைசி நாளன்று உயர் நீதிமன்றம் மூடப்பட்டிருக்குமாயின், உயர் நீதிமன்றம் அடுத்துத் திறக்கப்படுகிற நாள் முடிவடைவதற்கு முன்பு, அந்த விண்ணப்பத்தினை அந்நீதிமன்றம் தீர்வுசெய்தல் வேண்டும்; அந்த விண்ணப்பம் அவ்வாறு தீர்வு செய்யப்படவில்லையானால், அந்த இடைக்கால ஆணையானது, அந்தக் காலஅளவு கழிவுற்றதும் அல்லது, நேர்வுக்கேற்ப, மேற்சொன்ன அடுத்த நாள் முடிவுற்றதும், நீக்கமுற்றதாக ஆகிவிடும்.]

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 38 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

2. "ஆனால் 131 (அ) உறுப்பின் மற்றும் 226 (அ) உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு" என்ற சொற்கள், எண்கள் மற்றும் எழுத்துக்கள், அரசமைப்புச் (நாற்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1977 இன் 7 ஆம் பிரிவினால் (13–3–1978 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

3. "ஆட்கொணர்விப்பு, செயலுறுத்து, தடையுறுத்து, தகுதி வினவு, நெறிமுறை கேட்பு ஆகியவற்றின் தன்மை கொண்ட நீதிப்பேராணைகளை அல்லது அவற்றில் எதனையும்" என்ற சொற்களுடன் தொடங்கி, "அத்தகைய சட்டமுரண், நீதியின் பெரும் செயலற்ற நிலைக்கு வழிவகுத்துள்ளது" என்ற சொற்களுடன் முடியும் பகுதிக்கு அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 30 ஆம் பிரிவினால் ( 1–8–1979 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டன.

4. (3), (4), (5) மற்றும் (6) ஆம் கூறுகளுக்கு, *மேற்படிச் சட்டத்தின்* 30 ஆம் பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டன.

[1][226. **Power of High Courts to issue certain writs :**

(1) Notwithstanding anything in article 32[2]***, every High Court shall have power, throughout the territories in relation to which it exercises jurisdiction, to issue to any person authority, including in appropriate cases, any Government, within those territories directions, orders or [3][writs, including writs in the nature of *hebeas corpus*, *mandamus*, prohibition, *quo warranto* and *certiorari*, or any of them, for the enforcement of any of the rights conferred by Part III and for any other purpose.]

(2) The power conferred by clause (1) to issue directions, orders or writs to any Government, authority or person may also be exercised by any High Court exercising jurisidiction in relation to the territories within which the cause of action, wholly or in part, arises for the exercise of such power, notwithstanding that the seat of such Government or authority or the residence of such person is not within those territories.

[4][(3) Where any party against whom an interim order, whether by way of injunction or stay or in any other manner, is made on, or in any proceedings relating to, a petition under clause (1), without—

(a) furnishing to such party copies of such petition and all documents in support of the plea for such interim order; and

(b) giving such party an opportunity of being heard,

makes an application to the High Court for the vacation of such order and furnishes a copy of such application to the party in whose favour such order has been made or the counsel of such party, the High Court shall dispose of the application within a period of two weeks from the date on which it is received or from the date on which the copy of such application is so furnished, whichever is later, or where the High Court is closed on the last day of that period, before the expiry of the next day afterwards on which the High Court is open; and if the application is not so disposed of, the interim order shall, on the expiry of that period, or, as the case may be, the expiry of the said next day, stand vacated.]

---

1. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 38 (w.e.f. 1-2-1977).
2. The words, figures and letters "but subject to the provisions of article 131A and article 226A" omitted by the Constitution (Forty third Amendment) Act, 1977, s. 7 (w.e.f. 13-4-1978).
3. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 30 for the portion beginning with the words "writs in the nature of habeas corpus, mandamus, prohibition, quo warranto and certiorari, or any of them" and ending with the words "such illegality has resulted in substantial failure of justice" (w.e.f. 1-8-1979).
4. Subs. by *ibid.*, s. 30, for clauses *(3)*, *(4)*, *(5)* and *(6)*.

[1][(4)] இந்த உறுப்பினால் ஓர் உயர் நீதிமன்றத்திற்கு வழங்கப்பெறும் அதிகாரம், 32 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறின்படி உச்ச நீதிமன்றத்திற்கு வழங்கப்பெற்றுள்ள அதிகாரத்தைத் திறக்குறைவு செய்வதில்லை.]

[2][**226 (அ)**. *மைய சட்டங்களின் அரசமைப்புச் செல்லுந்தன்மை 226 ஆம் உறுப்பின் கீழான நடவடிக்கையில் ஓர்வு செய்யப்படுதல் ஆகாது.*]

**227. அனைத்து நீதிமன்றங்களையும் கண்காணிப்பதற்கு உயர் நீதிமன்றத்திற்குள்ள அதிகாரம் :**

[3][(1) உயர் நீதிமன்றம் ஒவ்வொன்றும், தான் அதிகாரம் செலுத்தி வருகிற ஆட்சிநிலவரைகள் எங்கணும் உள்ள நீதிமன்றங்கள், தீர்ப்பாயங்கள் அனைத்தின்மீதும் கண்காணிப்பு அதிகாரம் உடையது ஆகும்.]

(2) மேலேகண்ட வகையத்தின் பொதுப்பாங்கிற்குக் குந்தகமின்றி உயர் நீதிமன்றம் –

(அ) அத்தகைய நீதிமன்றங்களிலிருந்து விவர அறிக்கைகளைக் கேட்டுப் பெறலாம்;

(ஆ) அத்தகைய நீதிமன்றங்களின் நடைமுறையினையும் நடவடிக்கைகளையும் ஒழுங்குறுத்துவதற்காகப் பொதுவியலான விதிகளை வகுத்தளிப்பதுடன், முறையமை படிவங்களையும் வகுத்தமைக்கலாம்; மற்றும்

(இ) அத்தகைய நீதிமன்றங்களின் அலுவலர்கள் வைத்துவர வேண்டிய புத்தகங்கள், பதிவுக்குறிப்புகள், கணக்குகள் ஆகியவற்றுக்கான முறையமை படிவங்களை வகுத்தமைக்கலாம்.

(3) உயர் நீதிமன்றம், அத்தகைய நீதிமன்றங்களின் கட்டளைக்காப்புநருக்கும், எழுத்தர்கள், அலுவலர்கள் ஆகிய அனைவருக்கும், அங்குத் தொழிலாற்றுகிற வழக்காற்றுநர்கள், வழக்குரைஞர்கள், வாதுரைஞர்கள் ஆகியோருக்கும் வழங்கப்படவேண்டிய கட்டணவீத அட்டவணைகளையும் திட்டப்படுத்தலாம்:

வரம்புரையாக : (2) ஆம் கூறின்படி அல்லது (3) ஆம் கூறின்படி வகுக்கப்பட்ட விதிகள், வகுத்தமைக்கப்பட்ட முறையமை படிவங்கள், அல்லது திட்டப்படுத்தப்பட்ட அட்டவணைகள் எவையும், நிகழுறுகாலத்தில் செல்லாற்றலிலுள்ள சட்டத்தின் வகையங்களுக்கு முரணாக இருத்தல் ஆகாது; அவற்றுக்கு ஆளுநரின் முன் ஒப்பேற்பும் வேண்டுறுவதாகும்.

(4) இந்த உறுப்பிலுள்ள எதுவும், ஆயுதப்படைகள் தொடர்பான சட்டத்தாலோ அதன் வழியாலோ அமைக்கப்படும் நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எதன்மீதும் கண்காணிப்பு அதிகாரங்களை ஓர் உயர் நீதிமன்றத்திற்கு வழங்குவதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

[4](5)* * *

---

1. (7) ஆம் கூறு, (4) ஆம் கூறாக, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 30 ஆம் பிரிவினால் (1–8–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மறுஎண்ணிடப்பட்டது.
2. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 39 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது. அத்திருத்தம் அரசமைப்புச் (நாற்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1977 இன் 8 ஆம் பிரிவினால் (13–4–1978 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.
3. (1) ஆம் கூறு, மேலே உள்ளவாறு வாசிக்க, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 40 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு) மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 31 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) அடுத்தடுத்து மாற்றாக அமைக்கப்பட்டது.
4. (5) ஆம் கூறு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 40 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு), புகுத்தப்பட்டது மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 31 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

[1][(4)] The power conferred on a High Court by this article shall not be in derogation of the power conferred on the Supreme Court by clause (2) of article 32.]

[2][**226A**. *Constitutional validity of Central laws not to be considered in proceedings under article 226.*]

**227. Power of superintendence over all courts by the High Court :**

[3][(1) Every High Court shall have superintendence over all courts and tribunals throughout the territories in relation to which it exercises jurisdiction.]

(2) Without Prejudice to the generality of the foregoing provision, the High Court may—

(a) call for returns from such courts;

(b) make and issue general rules and prescribe forms for regulating the practice and proceedings of such courts; and

(c) prescribe forms in which books, entries and accounts shall be kept by the officers of any such courts.

(3) The High Court may also settle tables of fees to be allowed to the sheriff and all clerks and officers of such courts and to attorneys, advocates and pleaders practising therein:

Provided that any rules made, forms prescribed or tables settled under clause (2) or clause (3) shall not be inconsistent with the provision of any law for the time being in force, and shall require the previous approval of the Governor.

(4) Nothing in this article shall be deemed to confer on a High Court powers of superintendence over any court or tribunal consituted by or under any law relating to the Armed Forces.

[4](5)* * *

---

1. Cl. (7) renumbered as cl. (4) by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 30 (w.e.f. 1-8-1979).
2. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 39 (w.e.f. 1-2-1977). and omitted by the Constitution ( Forty – third Amendment) Act , 1977,Sec .8 (w.ef 13-4-1978).
3. Cl. (1) has been successively subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 40 (w.e.f. 1-2-1977) and the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 31 to read as above (w.e.f. 20-6-1979).
4. Cl. (5) was ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 40 (w.e.f. 1-2-1977) and omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 31 (w.e.f. 20-6-1979).

**228. குறித்தசில வழக்குகளை உயர் நீதிமன்றத்திற்கு மாற்றுதல் :**

உயர் நீதிமன்றம், தனக்குக் கீழமைந்துள்ள ஒரு நீதிமன்றத்தில் முடிவுறாநிலையிலுள்ள ஒரு வழக்கில், இந்த அரசமைப்பின் பொருள்கோள் குறித்துச் செறிவான சட்டவினா ஒன்று உள்ளது என்றும், அதனைத் தீர்வுசெய்தல் அந்த வழக்கினை முடிவு செய்வதற்கு அவசியமாகிறது என்றும் தெளிவுறக்காணுமாயின், [1][[2]*** தான் அந்த வழக்கினைஎடுத்துக்கொண்டு, —]

(அ) அந்த வழக்கினையே முடிவு செய்து விடலாம்; அல்லது

(ஆ) மேற்சொன்ன சட்டவினாவைத் தீர்வுசெய்து, அந்த வழக்கு எந்த நீதிமன்றத்திடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டதோ அந்த நீதிமன்றத்திற்கு, அத்தகைய வினா மீதான தனது தீர்ப்புரையின் ஒருபடியுடன் சேர்த்து, அவ்வழக்கைத் திருப்பியனுப்பலாம்; மேற்சொன்ன நீதிமன்றம் அதனைப் பெற்றுக் கொண்டதன்மேல், அத்தகைய தீர்ப்புரைக்கு இணங்க அந்த வழக்கினை முடிவு செய்வதற்கு முற்படுதல் வேண்டும்.

[3][**228 (அ)**. *மாநிலச் சட்டங்களின் அரசமைப்புச் செல்லுந்தன்மை தொடர்பான வினாக்களை முடிவு செய்தலுக்கான தனியுறு வகையங்கள்] — அரசமைப்புச் (நாற்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1977 இன் 10 ஆம் பிரிவினால் (13–4–1978 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**229. உயர் நீதிமன்றங்களின் அலுவலர்களும் பணியாளர்களும் செலவுகளும் :**

(1) உயர் நீதிமன்றத்தின் அலுவலர்கள், பணியாளர்கள் ஆகியோர் அந்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாலோ, அவரால் பணிக்கப்பெறும் அந்நீதிமன்றத்தின் வேறொரு நீதிபதியாலோ அலுவலராலோ அமர்த்தப்பெறுவர்:

**வரம்புரையாக :** [4]***மாநில ஆளுநர், தாம் வகுக்கும் விதியினால், அவ்விதியில் குறித்துரைக்கப்படும் நேர்வுகளில், ஏற்கெனவே அந்நீதிமன்றத்தைச் சேர்ந்தவர் அல்லாத எவரும் மாநிலத்து அரசுப் பணியாளர் தேர்வாணையத்தைக் கலந்தாய்வு செய்தபின்பல்லாமல், அந்நீதிமன்றம் தொடர்பான பதவி எதற்கும் அமர்த்தப்பெறுதல் ஆகாது என வேண்டுறுத்தலாம்.

(2) மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்படும் சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு உட்பட்டு, உயர் நீதிமன்றத்தின் அலுவலர்கள், பணியாளர்கள் ஆகியோரின் பணிவரைக்கட்டுகள், உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாலோ அவரால் அதற்கென விதிகள் வகுப்பதற்கு அதிகாரமளிக்கப்பெற்றுள்ள அந்நீதிமன்றத்தின் வேறு நீதிபதி அல்லது அலுவலர் ஒருவராலோ வகுக்கப்படும் விதிகள் வகுத்துரைக்கின்றவாறு இருக்கும் :

**வரம்புரையாக :** இந்தக் கூறின்படி வகுக்கப்படும் விதிகளில், வரையூதியங்கள், படித்தொகைகள், விடுப்பு அல்லது ஓய்வூதியங்கள் பற்றிய விதிகளுக்கு [4]***மாநில ஆளுநரின் ஒப்பேற்பு வேண்டுறுவதாகும்.

---

1. "தான் அந்த வழக்கினை எடுத்துக் கொண்டு மற்றும்—" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 41 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. "131 (அ) உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு" என்ற சொற்கள், எண்கள் மற்றும் எழுத்து, அரசமைப்புச் (நாற்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1977 இன் 9 ஆம் பிரிவினால் (13–4–1978 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.
3. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 42 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. "உயர் நீதிமன்றத்தின் தலைமை அமர்கையிடத்தைக் கொண்டுள்ள" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

**228. Transfer of certain cases to High Court :**

If the High Court is satisfied that a case pending in a court subordinate to it involves a substantial question of law as to the interpretation of this Constitution the determination of which is necessary for the disposal of the case, [1][it shall withdraw the case and[2]*** may —]

(a) either dispose of the case itself, or

(b) determine the said question of law and return the case to the court from which the case has been so withdrawn together with a copy of its judgment on such question, and the said court shall on receipt thereof proceed to dispose of the case in conformity with such judgment.

[3][**228A.** *Special provisions as to disposal of questions relating to Constitutional validity of State laws.*] — *Omitted by the Constitution (Forty-third Amendment) Act, 1977, s. 10 (w.e.f. 13-4-1978).*

**229. Officers and servants and the expenses of High Courts :**

(1) Appointments of officers and servants of a High Court shall be made by the Chief Justice of the Court or such other Judge or officer of the Court as he may direct:

Provided that the Governor of the State[4]*** may by rule require that in such cases as may be specified in the rule no person not already attached to the Court shall be appointed to any office connected with the Court save after consultation with the State Public Service Commission.

(2) Subject to the provisions of any law made by the Legislature of the State, the conditions of service of officers and servants of a High Court shall be such as may be prescribed by rules made by the Chief Justice of the Court or by some other Judge or officer of the Court authorised by the Chief Justice to make rules for the purpose:

Provided that the rules made under this clause shall, so far as they relate to salaries, allowances leave or pensions, require the approval of the Governor of the State.[4]***

---

1. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 41, for "it shall withdraw the case and may—" (w.e.f.1-2-1977).
2. The words, figures and letter "subject to the provisions of article 131A," omitted by the Constitution (Forty-third Amendment) Act, 1977, s. 9 (w.e.f. 13-4-1978).
3. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 42 (w.e.f. 1-2-1977).
4. The words "in which the High Court has its principal seat" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

(3) ஓர் உயர் நீதிமன்றத்தின் அலுவலர்கள், பணியாளர்கள் ஆகியோருக்கும் அவர்கள் பொறுத்தும் வழங்கத்தக்க வரையூதியங்கள், படித்தொகைகள், ஓய்வூதியங்கள் அனைத்தும் உள்ளிட்ட அதன் நிருவாகச் செலவுகள், மாநிலத் திரள்நிதியத்தின்மீது சார்த்தப்படும்; மேலும், அந்நீதிமன்றம் பெறும் கட்டணங்களும் பிற பணத்தொகைகளும் அந்நிதியத்தைச் சேர்வன ஆகும்.

**[1][230. உயர் நீதிமன்றங்களின் அதிகாரவரம்பை ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளுக்கு அளாவச்செய்தல் :**

(1) நாடாளுமன்றம், சட்டத்தினால், ஓர் உயர் நீதிமன்றத்தின் அதிகாரவரம்பை, ஒன்றியத்து ஆட்சிநிலவரை எதற்கும் அளாவச் செய்யலாம் அல்லது ஓர் உயர் நீதிமன்றத்தின் அதிகாரவரம்பை ஒன்றியத்து ஆட்சிநிலவரை எதிலிருந்தும் நீக்கிவிடலாம்.

(2) ஓர் ஒன்றியத்து ஆட்சிநிலவரை தொடர்பாக ஒரு மாநிலத்தின் உயர் நீதிமன்றம் அதிகாரம் செலுத்தி வருகிறவிடத்து,—

(அ) இந்த அரசமைப்பிலுள்ள எதுவும், அந்த அதிகாரவரம்பைக் கூட்டவோ குறுக்கவோ ஒழிக்கவோ அந்த மாநிலச் சட்டமன்றத்திற்கு அதிகாரமளிப்பதாகப் பொருள்கொள்ளப்படுதல் ஆகாது; மற்றும்

(ஆ) 227 ஆம் உறுப்பில் ஆளுநர் என்று சுட்டப்பட்டிருப்பது, அந்த ஆட்சிநிலவரையிலுள்ள கீழமை நீதிமன்றங்களுக்கான விதிகள், முறையமைபடிவங்கள், அட்டவணைகள் இவற்றின் தொடர்பாக குடியரசுத்தலைவர் என்று சுட்டுவதாகப் பொருள் கொள்ளப்படுதல் வேண்டும்.

**231. இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களுக்குப் பொதுவானதோர் உயர் நீதிமன்றத்தினை நிறுவுதல்:**

(1) இந்த அத்தியாயத்தின் முந்தைய வகையங்களில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், நாடாளுமன்றம், சட்டத்தினால் இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களுக்காக அல்லது இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கும் ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒன்றிற்குமாக, பொதுவானதோர் உயர் நீதிமன்றத்தினை நிறுவலாம்.

(2) அத்தகைய உயர் நீதிமன்றம் எதன் தொடர்பாகவும்,—

[2][* * *]

(ஆ) 227 ஆம் உறுப்பில் ஆளுநர் என்று சுட்டப்பட்டிருப்பது, கீழமை நீதிமன்றங்களுக்கான விதிகள், முறையமை படிவங்கள் அட்டவணைகள் இவற்றின் தொடர்பாக அந்தக் கீழமை நீதிமன்றங்கள் அமைந்துள்ள மாநில ஆளுநரைச் சுட்டுவதாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும்; மற்றும்

---

1. 230, 231 மற்றும் 232 ஆம் உறுப்புகளுக்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 16 ஆம் பிரிவினால் ( 1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

2. (அ) உட்கூறு, அரசமைப்புச் (தொண்ணூற்று ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2014 இன் 10 ஆம் பிரிவினால் (13–4–2015 முதல் செல்திறம் பெறுமாறு ) விட்டுவிடப்பட்டது. இந்தத் திருத்தம், உச்ச நீதிமன்றத்தால் அறவு செய்யப்பட்டுள்ளது. உச்சநீதிமன்ற பதிவுறு வழக்குரைஞர்கள் சங்கம் மற்றும் பிறர் எதிர் இந்திய ஒன்றியம் என்ற வழக்கில் உச்ச நீதிமன்றம் பிறப்பித்த, 2015, அக்டோபர் 16 ஆம் நாளிட்ட ஆணையைப் பார்க்கவும். ஏ.ஐ.ஆர். 2016 உநீ 117 இல் வெளியிடப்பட்டுள்ளது. திருத்தத்திற்கு முன்பு, (அ) உட்கூறு கீழே உள்ளவாறு இருந்தது :– "(அ) 217 ஆம் உறுப்பில் மாநிலத்தின் ஆளுநர் என சுட்டப்பட்டிருப்பது உயர் நீதிமன்றம் தன்னுடைய அதிகாரவரம்பை செலுத்துகிற அனைத்து மாநிலங்களின் ஆளுநர்களை சுட்டுவதாகப் பொருள் கொள்ளப்படுதல் வேண்டும்".

(3) The administrative expenses of a High Court, including all salaries, allowances and pensions payable to or in respect of the officers and servants of the Court, shall be charged upon the Consolidated Fund of the State, and any fees or other moneys taken by the Court shall form part of that Fund.

[1][**230. Extension of jurisdiction of High Courts to Union territories :**

(1) Parliament may by law extend the jurisdiction of a High Court to, or exclude the jurisdiction of a High Court from, any Union territory.

(2) Where the High Court of a State exercises jurisdiction in relation to a Union territory,—

(a) nothing in this Constitution shall be construed as empowering the Legislature of the State to increase, restrict or abolish that jurisdiction ; and

(b) the reference in article 227 to the Governor shall, in relation to any rules, forms or tables for subordinate courts in that territory, be construed as a reference to the President.

**231. Establishment of a common High Court for two or more States :**

(1) Notwithstanding anything contained in the preceding provisions of this Chapter, Parliament may by law establish a common High Court for two or more States or for two or more States and a Union territory.

(2) In relation to any such High Court,—

[2][* * *]

(b) the reference in article 227 to the Governor shall, in relation to any rules, forms or tables for subordinate courts, be construed as a reference to the Governor of the State in which the subordinate courts are situate; and

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 16, for arts. 230, 231 and 232 (w.e.f. 1-11-1956).

2. Sub-clause (*a*) omitted by the Constitution (Ninety-ninth Amendment) Act, 2014, s. 10 (w.e.f. 13-4-2015). This amendment has been struck down by the Supreme Court *vide* its order dated the 16th October, 2015 in the *Supreme Court Advocates' on Record Association and Another Vs. Union of India* reported in AIR 2016 SC 117. Before Amendment Sub-clause *(a)* was as under:– "(a) the reference in article 217 to the Governor of the State shall be construed as to the reference to the Governors of all the State's in relation to which the High Court exercises jurisdiction".

(இ) 219, 229 ஆகிய உறுப்புகளில் மாநிலம் என்று சுட்டப்பட்டிருப்பது, உயர் நீதிமன்றத்தின் தலைமை அமர்கையிடத்தைக் கொண்டுள்ள மாநிலத்தைச் சுட்டுவதாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும்:

வரம்புரையாக : அத்தகைய தலைமை அமர்கையிடம் ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒன்றில் இருக்குமாயின், 219, 229 ஆகிய உறுப்புகளில் ஆளுநர், அரசுப் பணியாளர் தேர்வாணையம், சட்டமன்றம், மாநிலத் திரள்நிதியம் என்று சுட்டப்பட்டிருப்பவை முறையே, குடியரசுத்தலைவர், ஒன்றியத்து அரசுப்பணியாளர் தேர்வாணையம், நாடாளுமன்றம், இந்தியத் திரள்நிதியம் என்று சுட்டுவனவாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும்.]

[232. *பொருள்கோள்– 230, 231 மற்றும் 232 ஆம் உறுப்புகள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம் ) சட்டம், 1956 இன் 16 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) 230 மற்றும் 231 ஆம் உறுப்புகளுடன் மாற்றாக அமைக்கப்பட்டன.*]

## அத்தியாயம் VI

## கீழமை நீதிமன்றங்கள்

**233. மாவட்ட நீதிபதிகளை அமர்த்துதல் :**

(1) மாநிலம் எதிலும் மாவட்ட நீதிபதிகளை அமர்த்துதல், அவர்களுக்குப் பணியிடங்களைக் குறித்தல், பதவிஉயர்வு அளித்தல் ஆகியவை அந்த மாநிலம் தொடர்பாக அதிகாரம் செலுத்திவருகிற உயர் நீதிமன்றத்தைக் கலந்தாய்ந்து அந்த மாநில ஆளுநரால் செய்யப்படுதல் வேண்டும்.

(2) ஒன்றியத்தின் அல்லது மாநிலத்தின் பணியில் ஏற்கெனவே இல்லாத எவரும், அவர் ஏழாண்டுகளுக்குக் குறையாமல் ஒரு வழக்குரைஞராக அல்லது வாதுரைஞராக இருந்திருந்து, அவரை ஒரு மாவட்ட நீதிபதியாக அமர்த்துவதற்கு உயர் நீதிமன்றம் பரிந்துரைத்திருந்தால் மட்டுமே, அவர் அவ்வாறு ஒரு மாவட்ட நீதிபதியாக அமர்த்தப்பெறுவதற்குத் தகுதியுடையவர் ஆவார்.

**[1][233(அ). குறித்தசில மாவட்ட நீதிபதிகளின் அமர்த்துகை, அவர்கள் வழங்கிய தீர்ப்புரைகள் முதலியவற்றைச் செல்லத்தக்கன ஆக்குதல் :**

நீதிமன்றம் ஒன்றின் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது ஆணை எதுவும் எவ்வாறிருப்பினும்,—

(அ) 233 ஆம் உறுப்பின் அல்லது 235 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு இணங்கியவாறு அல்லாமல், பிறவாறு அரசமைப்புச் (இருபதாம் திருத்தம்) சட்டம், 1966 இன் தொடக்கநிலைக்கு முன்பு எச்சமயத்திலேனும்,—

(i) ஒரு மாநில நீதித்துறைப் பணியத்தில் ஏற்கெனவே உள்ள ஒருவரை அல்லது ஏழாண்டுகளுக்குக் குறையாமல் ஒரு வழக்குரைஞராக அல்லது ஒரு வாதுரைஞராக இருந்துள்ள ஒருவரை அந்த மாநிலத்தின் ஒரு மாவட்ட நீதிபதியாக அமர்த்திய செயல் எதுவும்,

(ii) அத்தகைய எவருக்கும் ஒரு மாவட்ட நீதிபதியாகப் பணியிடம் குறித்தல், பதவி உயர்வு அளித்தல் அல்லது மாற்றல் செய்தல் எதுவும்,

1. அரசமைப்புச் (இருபதாம் திருத்தம்) சட்டம், 1966 இன் 2 ஆம் பிரிவினால் (22–12–1966 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(c) the reference in articles 219 and 229 to the State shall be construed as a reference to the State in which the High Court has its principal seat:

Provided that if such principal seat is in a Union territory, the references in articles 219 and 229 to the Governor , Public Service Commission, Legislature and Consolidated Fund of the State shall be construed respectively as references to the President, Union Public Service Commission, Parliament and Consolidated Fund of India.]

[**232.** *Interpretation.-Articles 230, 231 and 232 substituted with articles 230 and 231 by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 16 (w.e.f. 1-11-1956).*]

## CHAPTER VI

## SUBORDINATE COURTS

### 233. Appointment of district Judges :

(1) Appointments of persons to be, and the posting and promotion of, district judges in any State shall be made by the Governor of the State in consultation with the High Court exercising jurisdiction in relation to such State.

(2) A person not already in the service of the Union or of the State shall only be eligible to be appointed a district judge if he has been for not less than seven years an advocate or a pleader and is recommended by the High Court for appointment.

### [1][233A. Validation of appointments of, and judgments, etc., delivered by, certain district judges :

Notwithstanding any judgment, decree or order of any court,—

(a) (i) no appointment of any person already in the judicial service of a State or of any person who has been for not less than seven years an advocate or a pleader, to be a district judge in that State, and

(ii) no posting, promotion or transfer of any such person as a district judge,

1. Ins. by the Constitution (Twentieth Amendment) Act, 1966, s. 2 (w.e.f. 22-12-1966).

அத்தகைய அமர்த்துகை, பணியிடம் குறித்தல், பதவிஉயர்வு, அல்லது மாற்றல், மேற்சொன்ன வகையங்களுக்கு இணங்கியவாறு செய்யப்படவில்லை என்ற காரணத்தால் மட்டுமே, அது சட்ட முரணானது அல்லது இல்லாநிலையது என்றோ அல்லது சட்டமுரணானதாக அல்லது இல்லாநிலையதாக எப்போதேனும் இருந்தது என்றோ கொள்ளப்படுதல் ஆகாது;

(ஆ) 233 ஆம் உறுப்பின் அல்லது 235 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு இணங்கியவாறு அல்லாமல், பிறவாறு மாநிலம் எதிலும் ஒரு மாவட்ட நீதிபதியாக அமர்த்தப்பெற்ற, பணியிடம் குறிக்கப்பெற்ற, பதவி உயர்த்தப்பெற்ற, அல்லது மாற்றப்பெற்ற ஒருவரால் அல்லது அவர் முன்னிலையில் அரசமைப்புச் (இருபதாம் திருத்தம்) சட்டம், 1966 இன் தொடக்கநிலைக்கு முன்பு, செலுத்தப்பட்ட அதிகாரம், வழங்கப்பட்ட தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது தீர்ப்புத்தண்டனை எதுவும், அல்லது பிறப்பிக்கப்பட்ட ஆணை மற்றும் செய்யப்பட்ட பிறசெயல் அல்லது எடுக்கப்பட்ட பிற நடவடிக்கை எதுவும், அவருடைய அமர்த்துகை, பணியிடம் குறித்தல், பணியிட நியமனம், பதவி உயர்வு, அல்லது மாற்றல் மேற்சொன்ன வகையங்களுக்கு இணங்கியவாறு செய்யப்படவில்லை என்ற காரணத்தால் மட்டுமே, அது சட்டமுரணானது அல்லது செல்லாநிலையது என்றோ அல்லது சட்டமுரணானதாக அல்லது செல்லாநிலையதாக எப்போதேனும் இருந்தது என்றோ கொள்ளப்படுதல் ஆகாது.]

**234. நீதித்துறைப் பணியத்திற்கு மாவட்ட நீதிபதிகள் அல்லாத பிறரை எடுத்தல் :**

மாநிலம் ஒன்றில் நீதித்துறைப் பணியத்திற்கு மாவட்ட நீதிபதிகள் அல்லாத பிறர், அந்த மாநில ஆளுநரால், அந்த மாநிலத்து அரசுப் பணியாளர் தேர்வாணையத்தையும் அத்தகைய மாநிலம் தொடர்பாக அதிகாரம் செலுத்துகிற உயர் நீதிமன்றத்தையும் கலந்தாய்வு செய்த பின்பு, அவரால் அதன்பொருட்டு வகுக்கப்படும் விதிகளுக்கு இணங்க அமர்த்தப்பெறுவர்.

**235. கீழமை நீதிமன்றங்கள் மீதான கட்டாள்கை :**

ஒரு மாநிலத்தின் நீதித்துறைப் பணியத்தைச் சேர்ந்த மாவட்ட நீதிபதிப் பதவிக்குக் குறைவான பதவி எதனையும் வகித்து வருகிறவர்களின் பணியிடம் குறித்தல், பதவிஉயர்வு அளித்தல், அவர்களுக்கு விடுப்பு வழங்குதல் உள்ளடங்கலாக, மாவட்ட நீதிமன்றங்கள், அவற்றிற்குக் கீழமைந்த நீதிமன்றங்கள் இவற்றின் மீதான கட்டாள்கை உயர் நீதிமன்றத்திடம் உற்றமைந்திருக்கும்; ஆனால், இந்த உறுப்பிலுள்ள எதுவும், அத்தகையவர் எவரிடமிருந்தும், அவருடைய பணிவரைக்கட்டுகளை ஒழுங்குறுத்துகிற சட்டத்தின்படி அவருக்குள்ள மேல்முறையீட்டு உரிமை எதனையும் பறிப்பதாகவோ அத்தகைய சட்டத்தின்படி வகுத்துரைக்கப்பட்டுள்ள அவருடைய பணிவரைக்கட்டுகளுக்கு இணங்கியவாறு அல்லாமல் பிறவாறு அவர் மீது நடவடிக்கை எடுப்பதற்கு உயர் நீதிமன்றத்திற்கு அதிகாரமளிப்பதாகவோ பொருள்கொள்ளப்படுதல் ஆகாது.

**236. பொருள்கோள் :**

இந்த அத்தியாயத்தில் –

(அ) "மாவட்ட நீதிபதி" என்னும் சொற்றொடர், மாநகர் உரிமையியல் நீதிமன்றம் ஒன்றின் நீதிபதி, கூடுதல் மாவட்ட நீதிபதி, இணை மாவட்ட நீதிபதி, உதவி மாவட்ட நீதிபதி, சிறுவழக்கு நீதிமன்றம் ஒன்றின் தலைமை நீதிபதி, மாகாணத் தலைநகர் தலைமைக் குற்றவியல் நடுவர், கூடுதல் மாகாணத் தலைநகர் தலைமைக் குற்றவியல் நடுவர், அமர்வு நீதிபதி, கூடுதல் அமர்வு நீதிபதி, உதவி அமர்வு நீதிபதி ஆகியோரை உள்ளடக்கும்;

made at any time before the commencement of the Constitution (Twentieth Amendment) Act, 1966, otherwise than in accordance with the provisions of article 233 or article 235 shall be deemed to be illegal or void or ever to have become illegal or void by reason only of the fact that such appointment, posting, promotion or transfer was not made in accordance with the said provisions;

(b) no jurisdiction exercised, no judgment, decree, sentence or order passed or made, and no other act or proceeding done or taken, before the commencement of the Constitution (Twentieth Amendment) Act, 1966 by, or before, any person appointed, posted, promoted or transferred as a district judge in any State otherwise than in accordance with the provisions of article 233 or article 235 shall be deemed to be illegal or invalid or ever to have become illegal or invalid by reason only of the fact that such appointment, posting, promotion or transfer was not made in accordance with the said provisions.]

**234. Recruitment of persons other than district Judges to the judicial service :**

Appointments of persons other than district judges to the judicial service of a State shall be made by the Governor of the State in accordance with rules made by him in that behalf after consultation with the State Public Service Commission and with the High Court exercising jurisdiction in relation to such State.

**235. Control over subordinate courts :**

The control over district courts and courts subordinate thereto including the posting and promotion of, and the grant of leave to, persons belonging to the judicial service of a State and holding any post inferior to the post of district judge shall be vested in the High Court, but nothing in this article shall be construed as taking away from any such person any right of appeal which he may have under the law regulating the conditions of his service or as authorising the High Court to deal with him otherwise than in accordance with the conditions of his service prescribed under such law.

**236. Interpretation :**

In this Chapter—

(a) the expression "district Judge" includes judge of a city civil court, additional district judge, joint district judge, assistant district judge, chief judge of a small cause court, chief presidency magistrate, additional chief presidency magistrate, sessions judge, additional sessions judge and assistant sessions judge;

(ஆ) “நீதித்துறைப் பணியம்” என்னும் சொற்றொடர், மாவட்ட நீதிபதிப் பதவியிலும் மாவட்ட நீதிபதிப் பதவிக்குக் குறைவாக பிற உரிமையியல் நீதித்துறைப் பதவிகளிலும் அமர்த்தப்பெறுபவர்களை மட்டுமே கொண்ட ஒரு பணியம் என்று பொருள்படும்.

**237. இந்த அத்தியாயத்தின் வகையங்கள் குறித்தசில வகுப்பு அல்லது வகுப்புகளைச் சேர்ந்த குற்றவியல் நடுவர்களுக்குப் பொருந்துதல் :**

ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாக இந்த அத்தியாயத்தின் மேலேகண்ட வகையங்களும் அவற்றின்படி வகுக்கப்பட்ட விதிகளும், மாநில நீதித்துறைப் பணியத்திற்கு அமர்த்தப்பெறுபவர்கள் தொடர்பாகப் பொருந்துவன போன்றே, அவை இதற்கெனக் குறித்திடும் தேதியிலிருந்து அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்படும் விதிவிலக்குகளுக்கு மற்றும் மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அந்த மாநிலத்திலுள்ள எந்தவொரு வகுப்பையும் அல்லது வகுப்புகளையும் சேர்ந்த குற்றவியல் நடுவர்களுக்கும் பொருந்தும் எனப் பணிக்கலாம்.

## பகுதி VII

[முதலாம் இணைப்புப்பட்டியலின் (ஆ) *பகுதியில் உள்ள மாநிலங்கள்*]. *அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**238.** *[முதலாம் இணைப்புப்பட்டியலின்* (ஆ) *பகுதியில் உள்ள மாநிலங்களுக்கு பகுதி VI இன் வகையங்கள் பொருந்துதல்.]- அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

## பகுதி VIII

### [1][ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள்]

**[2][239. ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளின் நிருவாகம் :**

(1) நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகைசெய்தால் அல்லாமல், ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒவ்வொன்றையும், குடியரசுத்தலைவர் தாம் குறித்துரைக்கும் பதவிப்பெயருடன் அமர்த்தும் ஆளுகையர் ஒருவர் மூலமாகத் தாம் தக்கதெனக் கருதுகிறவாறு நிருவாகம் செய்வார்.

(2) VI ஆம் பகுதியில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், குடியரசுத்தலைவர், ஒரு மாநிலத்தின் ஆளுநரை அந்த மாநிலத்தை ஒட்டியுள்ள ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒன்றின் ஆளுகையராக அமர்த்தலாம்; அவ்வாறு ஆளுநர் ஒருவர் அமர்த்தப்பெறுமிடத்து, அவர் தமது அமைச்சரவையைச் சாராது தனித்து அத்தகைய ஆளுகையராகத் தமது பதவிப்பணிகளை ஆற்றுவார்.]

---

1. “முதலாம் இணைப்புப்பட்டியலின் (இ) பகுதியிலுள்ள மாநிலங்கள்” என்ற தலைப்பிற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 17 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. 239 மற்றும் 240 ஆம் உறுப்புகளுக்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டன.

(b) The expression "judicial service" means a service consisting exclusively of persons intended to fill the post of district judge and other civil judicial posts inferior to the post of district judge.

**237. Application of the provisions of this Chapter to certain class or classes of magistrates :**

The Governor may by public notification direct that the foregoing provisions of this Chapter and any rules made thereunder shall with effect from such date as may be fixed by him in that behalf apply in relation to any class or classes of magistrates in the State as they apply in relation to persons appointed to the judicial service of the State subject to such exceptions and modifications as may be specified in the notification.

## PART VII

[The States in Part B of the First Schedule]. *Omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).*

**238.** [*Application of provisions of Part VI to States in Part B of the First Schedule.*]–*Omitted by the Constitution (Seventh Amendment) Act,* 1956, *s.* 29 *and Sch. (w.e.f. 1-11-1956).*

## PART VIII

## [1][THE UNION TERRITORIES]

[2][**239. Administration of Union territories :**

(1) Save as otherwise provided by Parliament by law, every Union territory shall be administered by the President acting, to such extent as he thinks fit, through an administrator to be appointed by him with such designation as he may specify.

(2) Notwithstanding anything contained in Part VI, the President may appoint the Governor of a State as the administrator of an adjoining Union territory, and where a Governor is so appointed, he shall exercise his functions as such administrator independently of his Council of Ministers.]

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 17, for the heading "THE STATES IN PART C OF THE FIRST SCHEDULE" (w.e.f. 1-11-1956).
2. Subs. by *ibid.*, for arts. 239 and 240.

[1][239 (அ). குறித்தசில ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளுக்கென சட்டமன்றங்களை அல்லது அமைச்சரவையை அல்லது இரண்டையும் உருவாக்குதல் :

(1) நாடாளுமன்றம் சட்டத்தினால் [2][[3][புதுச்சேரி] எனும் ஒன்றியத்து ஆட்சிநிலவரைக்காக] அந்தச் சட்டத்தில் குறித்துரைக்கப்படும் அமைப்பாக்கம், அதிகாரங்கள், பதவிப்பணிகள் ஆகியவற்றுடன்—

(அ) அந்த ஒன்றியத்து ஆட்சிநிலவரைக்கான சட்டமன்றமாக இயங்குவதற்கு, தேர்ந்தெடுக்கப்பட்டதாக அல்லது ஒரு பகுதி நியமனம் செய்யப்பட்டதாகவும், ஒரு பகுதி தேர்ந்தெடுக்கப்பட்டதாகவும் உள்ள ஒரு குழுமத்தை, அல்லது

(ஆ) ஓர் அமைச்சரவையை

அல்லது இரண்டையும் உருவாக்கலாம்.

(2). (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட சட்டம் ஒன்றில், இந்த அரசமைப்பைத் திருத்துகிற அல்லது திருத்தும் விளைவை ஏற்படுத்துகிற வகையம் எதுவும் அதில் அடங்கியிருந்தபோதிலும், அந்தச் சட்டம் 368 ஆம் உறுப்பைப் பொறுத்தவரை, இந்த அரசமைப்பின் திருத்தம் எனக் கொள்ளப்படுதல் ஆகாது. ]

[4][239 (அ)(அ). தில்லியை பொறுத்த சிறப்பு ஏற்பாடுகள் :

(1) அரசமைப்புச் (அறுபத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1991 இன் தொடக்கத் தேதியிலிருந்து தில்லி எனும் ஒன்றியத்து ஆட்சிநிலவரையானது, தில்லி தேசிய தலைநகர ஆட்சிநிலவரை என வழங்கப்பெறும்; (இதன் பின்பு இந்தப் பகுதியில் தேசிய தலைநகர ஆட்சிநிலவரை என்று குறிப்பிடப்படும்) மற்றும் 239 ஆம் உறுப்பின்படி அமர்த்தப்பெறும் அதன் ஆளுகையர், துணைநிலை ஆளுநர் எனும் பதவிப்பெயரில் குறிப்பிடப்படுவார்.

(2). (அ) தேசிய தலைநகர ஆட்சிநிலவரைக்காக சட்டமன்றப் பேரவை ஒன்று இருத்தல் வேண்டும் மற்றும் அத்தகைய பேரவையிலுள்ள பதவியிடங்கள், தேசிய தலைநகர ஆட்சிநிலவரைத் தேர்தல் தொகுதிகளிலிருந்து நேரடித் தேர்தல் மூலமாகத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களால் நிரப்பப்படுதல் வேண்டும்.

(ஆ) சட்டமன்றப் பேரவையிலுள்ள பதவியிடங்களின் மொத்த எண்ணிக்கை, பட்டியலில்கண்ட சாதியினருக்காக ஒதுக்கீடு செய்யப்படும் பதவியிடங்களின் எண்ணிக்கை, தேசிய தலைநகர ஆட்சிநிலவரையை ஆட்சிநிலவரைத் தேர்தல் தொகுதிகளாகப் பிரித்தல் (அத்தகைய பிரித்தலுக்கான அடிப்படை உள்ளடங்கலாக) மற்றும் சட்டமன்றப் பேரவை செயற்படுவது தொடர்பான அனைத்துப் பிற பொருட்பாடுகள் ஆகியவை நாடாளுமன்றத்தினால் சட்டத்தின்வழி ஒழுங்குறுத்தப்படுதல் வேண்டும்.

---

1. இந்திய அரசமைப்புச் (பதினான்காம் திருத்தம்) சட்டம், 1962 இன் 4 ஆம் பிரிவினால் (28–12–1962 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. "கோவா, தமண் மற்றும் டையூ மற்றும் பாண்டிச்சேரி ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள் ஒன்றிற்காக" என்பதற்கு, கோவா, தமண் மற்றும் டையூ மறுஅமைப்புச் சட்டம், 1987 (18/1987) இன் 63 ஆம் பிரிவினால் (30–5–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "பாண்டிச்சேரி" என்பதற்கு, பாண்டிச்சேரி (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (44/2006) இன் 4 ஆம் பிரிவினால் (1–10–2006 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
4. அரசமைப்புச் (அறுபத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1991 இன் 2 ஆம் பிரிவினால் (1–2–1992 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**[1][239A. Creation of local Legislatures or Council of Ministers or both for certain Union territories :**

(1) Parliament may by law create [2][for the Union territory of [3][Puducherry—]]

(a) a body, whether elected or partly nominated and partly elected, to function as a Legislature for the Union territory, or

(b) a Council of Ministers,

or both with such constitution, powers and functions, in each case, as may be specified in the law.

(2) Any such law as is referred to in clasue (I) shall not be deemed to be an amendment of this Constitution for the purposes of article 368 notwithstanding that it contains any provision which amends or has the effect of amending this Constitution.]

**[4][239AA. Special provisions with respect to Delhi :**

(1) As from the date of commencement of the Constitution (Sixty-ninth Amendment) Act, 1991, the Union territory of Delhi shall be called the National Capital Territory of Delhi (hereafter in this Part referred to as the National Capital Territory) and the administrator thereof appointed under article 239 shall be designated as the Lieutenant Governor.

(2) (a) There shall be a Legislative Assembly for the National Capital Territory and the seats in such Assembly shall be filled by members chosen by direct election from territorial constituencies in the National Capital Territory.

(b) The total number of seats in the Legislative Assembly, the number of seats reserved for Scheduled Castes, the division of the National Capital Territory into territorial constituencies (including the basis for such division) and all other matters relating to the functioning of the Legislative Assembly shall be regulated by law made by Parliament.

---

1. Ins. by the Constitution (Fourteenth Amendment) Act, 1962, s. 4 (w.e.f. 28-12-1962).

2. Subs. by the Goa, Daman and Diu Reorganisation Act, 1987 (18 of 1987) s. 63, for "for any of the Union territories of Goa, Daman and Diu and Pondicherry" (w.e.f. 30-5-1987).

3. Subs. by the Pondicherry (Alteration of Name) Act, 2006 (44 of 2006), s. 4, for "Pondicherry" (w.e.f. 1-10-2006).

4. Ins. by the Constitution (Sixty-ninth Amendment) Act, 1991, s. 2 (w.e.f. 1-2-1992).

(இ) 324 முதல் 327 வரையிலான மற்றும் 329 ஆம் உறுப்புகளின் வகையங்கள், அவை, முறையே ஒரு மாநிலம், ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவை மற்றும் அதன் உறுப்பினர்கள் தொடர்பாகப் பொருந்துவது போன்றே, தேசிய தலைநகர ஆட்சிநிலவரை, தேசிய தலைநகர ஆட்சிநிலவரை சட்டமன்றப் பேரவை மற்றும் அதன் உறுப்பினர்கள் தொடர்பாகப் பொருந்தும்; மற்றும் 326, 329 ஆம் உறுப்புகளில் "உரிய சட்டமன்றம்" என்பதற்கான சுட்டுகை எதுவும் நாடாளுமன்றத்துக்கான சுட்டுகை ஒன்றாகக் கொள்ளப்படுதல் வேண்டும்.

(3). (அ) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, சட்டமன்றப்பேரவை, தேசிய தலைநகர ஆட்சிநிலவரை முழுவதுக்கும் அல்லது அதன்பகுதி எதற்கும், மாநிலப் பட்டியலில் அல்லது ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்ட பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்தவரையில், அத்தகைய பொருட்பாடு எதுவும், மாநிலப் பட்டியலின் 1, 2 மற்றும் 18 ஆம் பதிவுகளும், அந்தப் பட்டியலின் 64, 65 மற்றும் 66 ஆம் பதிவுகள், மேற்சொன்ன 1, 2 மற்றும் 18 ஆம் பதிவுகள் பொறுத்த பொருட்பாடுகள் தவிர அவை தொடர்புள்ளதாக இருக்கும் அளவுக்கு அவையும் ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளுக்கு அத்தகைய பொருட்பாடுகள் பொருந்தும் அளவுக்கு, சட்டங்கள் இயற்றுவதற்கு அதிகாரம் கொண்டிருத்தல் வேண்டும்.

(ஆ). (அ) உட்கூறிலுள்ள எதுவும் ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒன்றுக்கு அல்லது அதன் பகுதி எதற்குமான பொருட்பாடு எதனையும் பொறுத்து, சட்டங்கள் இயற்றுவதற்கு இந்த அரசமைப்பின்படி நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரங்களைத் திறக்குறைவு செய்வதில்லை.

(இ) எந்தப் பொருட்பாட்டினையும் பொறுத்து, சட்டமன்றப் பேரவையினால் இயற்றப்பட்ட சட்டத்தின் வகையம் எதுவும், அந்தப் பொருட்பாட்டினைப் பொறுத்து, அச்சட்டமன்றப் பேரவையினால் இயற்றப்பட்ட சட்டத்திற்கு முன்போ பின்போ நிறைவேற்றப்பட்டிருந்தாலும், நாடாளுமன்றத்தினால் இயற்றப்பட்ட சட்டம் ஒன்றின் அல்லது சட்டமன்றப் பேரவையினால் இயற்றப்பட்ட ஒரு சட்டமாக அல்லாத பிற முந்தைய சட்டம் ஒன்றின் வகையம் எதற்கும் முரண்படுமாயின், அப்போது, அவ்விரு நேர்வுகளில் எதிலும், நாடாளுமன்றத்தினால் இயற்றப்பட்ட சட்டம், அல்லது நேர்வுக்கேற்ப, அத்தகைய முந்தைய சட்டம், மேலோங்கி நிற்கும் மற்றும் சட்டமன்றப் பேரவையினால் இயற்றப்பட்ட சட்டமானது, அம்முரண்பாடு உள்ள அளவுக்கு இல்லாநிலையது ஆகும்:

**வரம்புரையாக** : சட்டமன்றப் பேரவையினால் இயற்றப்பட்ட அத்தகைய சட்டம் எதுவும், குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக வைக்கப்பட்டிருந்து, அவருடைய ஏற்பிசைவினைப் பெற்றிருக்குமாயின், அத்தகைய சட்டம் தேசிய தலைநகர ஆட்சிநிலவரையில் மேலோங்கி நிற்கும்:

**மேலும் வரம்புரையாக** : இந்தக் கூறிலுள்ள எதுவும், சட்டமன்றப் பேரவையினால் அவ்வாறு இயற்றப்பட்ட சட்டத்துடன் சேர்க்கின்ற, அதனைத் திருத்துகின்ற, மாற்றுகின்ற அல்லது நீக்கறவு செய்கின்ற சட்டம் ஒன்று உள்ளடங்கலாக, அதே பொருட்பாடு பொறுத்த சட்டம் எதனையும் எச்சமயத்திலும் நாடாளுமன்றம் இயற்றுவதற்குத் தடையூறு ஆவதில்லை.

(c) The provisions of articles 324 to 327 and 329 shall apply in relation to the National Capital Territory, the Legislative Assembly of the National Capital Territory and the members thereof as they apply, in relation to a State, the Legislative Assembly of a State and the members thereof respectively; and any reference in articles 326 and 329 to "appropriate Legislature" shall be deemed to be a reference to Parliament.

(3) (a) Subject to the provisions of this Constitution, the Legislative Assembly shall have power to make laws for the whole or any part of the National Capital Territory with respect to any of the matters enumerated in the State List or in the Concurrent List in so far as any such matter is applicable to Union territories except matters with respect to Entries 1,2 and 18 of the State List and Entries 64,65 and 66 of that List in so far as they relate to the said Entries 1,2 and 18.

(b) Nothing in sub-clause (a) shall derogate from the powers of Parliament under this Constitution to make laws with respect to any matter for a Union territory or any part thereof.

(c) If any provision of a law made by the Legislative Assembly with respect to any matter is repugnant to any provision of a law made by Parliament with respect to that matter, whether passed before or after the law made by the Legislative Assembly, or of an earlier law, other than a law made by the Legislative Assembly, then, in either case, the law made by Parliament, or, as the case may be, such earlier law, shall prevail and the law made by the Legislative Assembly shall, to the extent of the repugnancy, be void :

Provided that if any such law made by the Legislative Assembly has been reserved for the consideration of the President and has received his assent, such law shall prevail in the National Capital Territory:

Provided further that nothing in this sub-clause shall prevent Parliament from enacting at any time any law with respect to the same matter including a law adding to, amending, varying or repealing the law so made by the Legislative Assembly.

(4) துணைநிலை ஆளுநர், சட்டம் எதனாலுமோ அதன் வழியாகவோ, தம் உளத்தேர்வுப்படி செயல்பட வேண்டுறுத்தப்பட்டுள்ள அளவுக்குத் தவிர, எந்தப் பொருட்பாடுகள் பொறுத்து, சட்டமன்றப் பேரவை சட்டங்கள் இயற்றுவதற்கு அதிகாரம் கொண்டிருக்கிறதோ, அந்தப் பொருட்பாடுகள் தொடர்பாக அவர் தம் பதவிப்பணிகளை ஆற்றுகையில், அவருக்கு உறுதுணையாக இருப்பதற்கும், தேர்வுரை வழங்குவதற்கும், சட்டமன்றப் பேரவை உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் பத்து விழுக்காட்டிற்கு மேற்படாமல், முதலமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சரவை ஒன்று இருத்தல் வேண்டும்:

வரம்புரையாக : எந்தப் பொருட்பாட்டிலேனும் துணைநிலை ஆளுநருக்கும், அவரது அமைச்சர்களுக்கும் இடையே கருத்து வேறுபாடு இருக்கும் நேர்வில், துணைநிலை ஆளுநர், அதனை முடிபு செய்வதற்காக குடியரசுத்தலைவருக்கு சுட்டியனுப்பி, அதன்பேரில் குடியரசுத் தலைவரால் கொடுக்கப்பட்ட முடிபுக்கு இணங்க, செயல்படுதல் வேண்டும்; மற்றும் அத்தகைய முடிபு எடுக்கப்படும் வரையில், தம் கருத்துப்படி உடனடியாக நடவடிக்கை எடுப்பதைத் தேவையானதாக ஆக்குகிற அளவுக்கு, பொருட்பாடு அவசரமானதாக இருக்கிற நேர்வில், தாம் தேவையானதெனக் கொள்கிறவாறு, அந்தப் பொருட்பாட்டில் அத்தகைய நடவடிக்கையினை எடுப்பது அல்லது அதில் அத்தகைய பணிப்புரையினைக் கொடுப்பது துணைநிலை ஆளுநருக்கு தகுதிறமுடையதாகும்.

(5) முதலமைச்சர், குடியரசுத்தலைவரால் பதவியில் அமர்த்தப்பெறுவார்; மற்றும் பிற அமைச்சர்கள், முதலமைச்சரின் தேர்வுரையின்படி குடியரசுத்தலைவரால் பதவியில் அமர்த்தப்பெறுவர்; மற்றும் அமைச்சர்கள், குடியரசுத்தலைவர் விழையுமளவும் பதவி வகிப்பர்.

(6) அமைச்சரவை, சட்டமன்றப் பேரவைக்குக் கூட்டுப் பொறுப்புடையதாக இருக்கும்.

[1][(7) (அ)] நாடாளுமன்றம், சட்டத்தினால், மேலேகண்ட கூறுகளில் அடங்கியுள்ள வகையங்களுக்குச் செல்திறம் கொடுப்பதற்கான அல்லது அதற்குத் துணையாக அமையும் மற்றும் அதற்குச் சார்வுறுவான அல்லது விளைவுறுவான பொருட்பாடுகள் அனைத்திற்கும், வகையங்கள் செய்யலாம்.

[2][(ஆ). (அ) கூறில் குறிப்பிடப்பட்ட சட்டம் ஒன்றில், இந்த அரசமைப்பைத் திருத்துகிற அல்லது திருத்தும் விளைவை ஏற்படுத்துகிற வகையம் எதுவும் அடங்கியிருந்த போதிலும், அந்தச் சட்டம், 368 ஆம் உறுப்பைப் பொறுத்தவரை, இந்த அரசமைப்பின் திருத்தம் எனக் கொள்ளப்படுதல் ஆகாது.]

(8) 239 (ஆ) எனும் உறுப்பின் வகையங்கள், கூடியவரை, அவை முறையே, [3][புதுச்சேரி] ஒன்றியத்து ஆட்சிநிலவரை, ஆளுகையர் மற்றும் சட்டமன்றம் தொடர்பாகப் பொருந்துவது போன்றே, தேசிய தலைநகர ஆட்சிநிலவரை, துணைநிலை ஆளுநர் மற்றும் சட்டமன்றப் பேரவை தொடர்பாகப் பொருந்தும், மற்றும் அந்த உறுப்பில், "239 (அ) எனும் உறுப்பின் (1) ஆம் கூறுக்கான" சுட்டுகை எதுவும், இந்த உறுப்பின் அல்லது, நேர்வுக்கேற்ப 239 (அ) (ஆ) எனும் உறுப்புக்கான ஒரு சுட்டுகையாகக் கொள்ளப்படுதல் வேண்டும்.

1. "(7)" என்பதற்கு, அரசமைப்புச் (எழுபதாம் திருத்தம்) சட்டம், 1992 இன் 3 ஆம் பிரிவினால் (21–12–1991 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.

3. "பாண்டிச்சேரி" என்பதற்கு, பாண்டிச்சேரி (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (44/2006) இன் 4 ஆம் பிரிவினால் (1–10–2006 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(4) There shall be a Council of Ministers consisting of not more than ten percent, of the total number of members in the Legislative Assembly, with the Chief Minister at the head to aid and advise the Lieutenant Governor in the exercise of his functions in relation to matters with respect to which the Legislative Assembly has power to make laws, except in so far as he is, by or under any law, required to act in his discretion:

Provided that in the case of difference of opinion between the Lieutenant Governor and his Ministers on any matter, the Lieutenant Governor shall refer it to the President for decision and act according to the decision given thereon by the President and pending such decision it shall be competent for the Lieutenant Governor in any case where the matter in his opinion, is so urgent that it is necessary for him to take immediate action, to take such action or to give such direction in the matter as he deems necessary.

(5) The Chief Minister shall be appointed by the President and the other Ministers shall be appointed by the President on the advice of the Chief Minister and the Ministers shall hold office during the pleasure of the President.

(6) The Council of Ministers shall be collectively responsible to the Legislative Assembly.

[1][(7) (a)] Parliament may, by law, make provisions for giving effect to, or supplementing the provisions contained in the foregoing clauses and for all matters incidental or consequential thereto.

[2][(b) Any such law as is referred to in sub-clause (a) shall not be deemed to be an amendment of this Constitution for the purposes of article 368 notwithstanding that it contains any provision which amends or has the effect of amending, this Constitution].

(8) The provisions of article 239B shall, so far as may be, apply in relation to the National Capital Territory, the Lieutenant Governor and the Legislative Assembly, as they apply in relation to the Union territory of [3][Puducherry], the administrator and its Legislature, respectively; and any reference in that article to "clause (1) of article 239A" shall be deemed to be a reference to this article or article 239AB, as the case may be.

---

1. Subs. by the Constitution (Seventieth Amendment) Act, 1992, s. 3, for "(7)" (w.e.f. 21-12-1991).
2. Ins. by *ibid.*
3. Subs. by the Pondicherry (Alteration of Name) Act, 2006 (44 of 2006), s. 4, for "Pondicherry" (w.e.f. 1-10-2006).

**239 (அ)(ஆ). அரசமைப்பின் இயங்குமுறை செயலற்றுப்போகும் நேர்வில் ஏற்பாடுகள் :**

குடியரசுத்தலைவர், துணைநிலை ஆளுநரிடமிருந்து அறிக்கை ஒன்றைப் பெறுவதன் பேரில் அல்லது பிறவாறு—

(அ) 239 (அ)(அ) எனும் உறுப்பின் அல்லது அந்த உறுப்பினைப் பின்பற்றி இயற்றப்பட்ட சட்டம் எதனின் வகையங்களுக்கும் இணங்க, தேசிய தலைநகர ஆட்சிநிலவரையின் நிருவாகத்தை நடத்திச் செல்ல இயலாத ஒரு நிலைமை எழுந்துள்ளதென; அல்லது

(ஆ) தேசிய தலைநகர ஆட்சிநிலவரையினை முறையாக நிருவாகம் செய்வதற்கு அவ்வாறு செய்வது தேவையென அல்லது உகந்ததென

தெளிவுறக்காண்பாராயின், குடியரசுத்தலைவர், ஆணையின் வழி, 239 (அ)(அ) எனும் உறுப்பின் வகையம் எதனின் அல்லது அந்த உறுப்பினைப் பின்பற்றி இயற்றப்பட்ட சட்டம் எதனின் வகையங்கள் அனைத்தின் அல்லது அவற்றில் எதனின் செயற்பாட்டினையும், அந்தச் சட்டத்தில் குறித்துரைக்கப்படும் காலஅளவுக்கும், வரைக்கட்டுகளுக்கு உட்பட்டும், தற்காலிகமாக நிறுத்திவைத்து, தேசிய தலைநகர ஆட்சிநிலவரையினை 239 ஆம் உறுப்பின் மற்றும் 239 (அ)(அ) உறுப்பின் வகையங்களுக்கு இணங்க, நிருவாகம் செய்வதற்குத் தேவையென அல்லது தமக்கு உகந்ததெனத் தோன்றும் சார்வுறு மற்றும் விளைவுறு ஏற்பாடுகளைச் செய்யலாம்.]

[1][239 (ஆ). **சட்டமன்றக் கூட்டத்தொடர் இறுதிசெய்யப்பட்டுள்ள காலத்தின்போது அவசரச் சட்டங்களைச் சாற்றம் செய்வதற்கு ஆளுகையருக்குள்ள அதிகாரம் :**

(1) [2][[3][புதுச்சேரி] எனும் ஒன்றியத்து ஆட்சிநிலவரையின்]] சட்டமன்றக் கூட்டத்தொடர் தொடர்நிலையிலுள்ள காலம் தவிர, வேறு எச்சமயத்திலேனும், அதன் ஆளுகையர் தாம் அவசரமாக நடவடிக்கை எடுக்க வேண்டியதை அவசியமாக்கும் சூழ்நிலைகள் உள்ளன என்று தெளிவுறக் காண்பாராயின், அச்சூழ்நிலைகளுக்கேற்பத் தேவை என்று தாம் கருதும் அவசரச்சட்டங்களைச் சாற்றம் செய்யலாம்:

**வரம்புரையாக** : அத்தகைய அவசரச்சட்டம் எதனையும் இதற்கெனக் குடியரசுத்தலைவரிடம் இருந்து நெறியுறுத்தங்களைப் பெற்ற பின்பு அல்லாமல் அந்த ஆளுகையர் சாற்றம் செய்தல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக** : மேற்சொன்ன சட்டமன்றம் கலைக்கப்பட்டிருக்கும் போதும், 239 (அ) உறுப்பின் (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்ட சட்டம் எதன்படியும் எடுக்கப்பட்ட நடவடிக்கை காரணமாக அது இயங்குவது தற்காலிகமாக நிறுத்திவைக்கப்பட்டிருக்கும்போதும், ஆளுகையர், அவ்வாறு கலைக்கப்பட்டிருக்கும் அல்லது அது இயங்குவது தற்காலிகமாக நிறுத்திவைக்கப்பட்டிருக்கும் காலஅளவின் போது அவசரச்சட்டம் எதனையும் சாற்றம் செய்தல் ஆகாது.

(2) குடியரசுத்தலைவரின் நெறியுறுத்தங்களைத் தொடர்ந்து இந்த உறுப்பின்படி சாற்றம் செய்யப்படும் ஓர் அவசரச்சட்டம், 239 (அ) உறுப்பின் (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்ட சட்டம் ஒன்றில் அடங்கியுள்ள வகையங்களுக்கு இணங்க, ஒன்றியத்து ஆட்சிநிலவரையில் சட்டமன்றத்தால் உரியவாறு இயற்றப்பட்டுள்ள ஒரு சட்டமாகக் கொள்ளப்படும்; ஆனால், அத்தகைய அவசரச்சட்டம் ஒவ்வொன்றும் —

---

1. அரசமைப்புச் (இருபத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 1971 இன் 3 ஆம் பிரிவினால் (30–12–1971 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. "239 உறுப்பின் (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒன்றின்'' என்பதற்கு, கோவா, தமண் மற்றும் டையூ மறுஅமைப்புச் சட்டம், 1987 (18/1987) இன் 63 ஆம் பிரிவினால் (30–5–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

3. "பாண்டிச்சேரி" என்பதற்கு, பாண்டிச்சேரி (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (44/2006) இன் 4 ஆம் பிரிவினால் (1–10–2006 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

**239AB. Provision in case of failure of constitutional machinery :**

If the President, on receipt of a report from the Lieutenant Governor or otherwise, is satisfied—

(a) that a situation has arisen in which the administration of the National capital Territory cannot be carried on in accordance with the provisions of article 239AA or of any law made in pursuance of that article; or

(b) that for the proper administration of the National Capital Territory it is necessary or expedient so to do,

the President may by order suspend the operation of any provision of article 239AA or of all or any of the provisions of any law made in pursuance of that article for such period and subject to such conditions as may be specified in such law and make such incidental and consequential provisions as may appear to him to be necessary or expedient for administering the National Capital Territory in accordance with the provisions of article 239 and article 239AA.]

[1][**239B. Power of administrator to promulgate Ordinances during recess of Legislature:**

(1) If at any time, except when the Legislature of [2][the Union territory of [3][Puducherry]] is in session, the administrator thereof is satisfied that circumstances exist which render it necessary for him to take immediate action, he may promulgate such Ordinances as the circumstances appear to him to require:

Provided that no such Ordinance shall be promulgated by the administrator except after obtaining instructions from the President in that behalf:

Provided, further that whenever the said Legislature is dissolved, or its functioning remains suspended on account of any action taken under any such law as is referred to in clause (1) of article 239A, the administrator shall not promulgate any ordinance during the period of such dissolution or suspension.

(2) An Ordinance promulgated under this article in pursuance of instructions from the President shall be deemed to be an Act of the Legislature of the Union territory which has been duly enacted after complying with the provisions in that behalf contained in any such law as is referred to in clause (1) of article 239A, but every such Ordinance —

---

1. Ins. by the Constitution (Twenty-seventh Amendment) Act, 1971, s. 3 (w.e.f. 30-12-1971).

2. Subs. by the Goa, Daman and Diu Reorganisation Act, 1987 (18 of 1987) s. 63, for "for any of the Union territory referred to in clause (1) article 239A" (w.e.f. 30-5-1987).

3. Subs. by the Pondicherry (Alteration of Name) Act, 2006 (44 of 2006), s. 4, for "Pondicherry" (w.e.f. 1-10-2006).

(அ) ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் சட்டமன்றத்தின் முன்பு வைக்கப்படுதல் வேண்டும்; மற்றும் அந்தச் சட்டமன்றம் மீண்டும் கூடியதிலிருந்து ஆறு வாரங்கள் கழிவுற்றவுடன் அல்லது அந்தக் காலஅளவு கழிவுறுவதற்கு முன்பே அதற்கு ஒப்பேற்பு அளிக்க மறுக்கும் ஒரு தீர்மானத்தை அச்சட்டமன்றம் நிறைவேற்றுமாயின், அந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டவுடன் செயற்பாடு அற்றுப் போகும்; மேலும்

(ஆ) இதற்கெனக் குடியரசுத்தலைவரிடமிருந்து நெறியுறுத்தங்களைப் பெற்ற பின்பு, ஆளுகையரால், எச்சமயத்திலும் விலக்கிக் கொள்ளப்படலாம்.

(3). 239 (அ) உறுப்பின் (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்ட சட்டம் ஒன்றில் அடங்கியுள்ள வகையங்களுக்கு இணங்க ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தில் இடம் பெற்றிருந்தாலும் எத்தகைய வகையம் செல்லுந்தன்மையற்றுப்போகுமோ அத்தகைய வகையம் எதனையும், இந்த உறுப்பின்படி சாற்றம் செய்யப்படும் ஓர் அவசரச்சட்டம் கொண்டிருப்பின், அந்த வகையத்தின் அளவிற்கு அது *இல்லாநிலையது* ஆகும்.]

[1]* * *

**240. குறித்தசில ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளுக்காக ஒழுங்குறுத்தும் விதிகளை வகுப்பதற்கு குடியரசுத்தலைவருக்குள்ள அதிகாரம் :**

(1) குடியரசுத்தலைவர்—

(அ) அந்தமான்— நிக்கோபார்த் தீவுகள்;

[2][(ஆ) இலட்சத்தீவு ;]

[3][(இ) தாத்ரா – நாகர்ஹவேலி மற்றும் தமண் மற்றும் டையூ ;]

[4][(ஈ) * * *;]

[5][(உ) [6][புதுச்சேரி];]

---

1. (4) ஆம் கூறு, அரசமைப்புச் (முப்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1978 இன் 4 ஆம் பிரிவினால் முன்மேவுற) புகுத்தப்பட்டது; மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 32 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

2. (ஆ) பதிவிற்கு, இலக்கத்தீவு, மினிக்காய் மற்றும் அமினித்தீவுகள் (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 1973 (34/1973) இன் 4 ஆம் பிரிவினால் (1–11–1973 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. தாத்ரா–நாகர்ஹவேலி மற்றும் தமண் மற்றும் டையூ (ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளை ஒன்றிணைத்தல்) சட்டம், 2019 (44/2019) ஆல் (19–12–2019 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது. (இ) பதிவு, அரசமைப்புச் (பத்தாம் திருத்தம்) சட்டம், 1961 இன் 3 ஆம் பிரிவினால் (11–8–1961 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

4. (ஈ) பதிவு, தாத்ரா–நாகர்ஹவேலி மற்றும் தமண் மற்றும் டையூ (ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளை ஒன்றிணைத்தல்) சட்டம், 2019 (44/2019) ஆல் (19–12–2019 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது. முதன்முதலில் இருந்த (ஈ) பதிவு, அரசமைப்புச் (பன்னிரெண்டாம் திருத்தம்) சட்டம், 1962 இன் 3 ஆம் பிரிவினால் (20–12–1961 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது மற்றும் (ஈ) பதிவுக்கு, கோவா, தமண் மற்றும் டையூ மறுஅமைப்புச் சட்டம், 1987 (18/1987) இன் 63 ஆம் பிரிவினால் (30–5–1987 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

5. அரசமைப்புச் (பதினான்காம் திருத்தம்) சட்டம், 1962 இன் 5 மற்றும் 7 ஆம் பிரிவினால் (16–8–1962 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

6. ''பாண்டிச்சேரி'' என்பதற்கு, பாண்டிச்சேரி (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (44/2006) இன் 4 ஆம் பிரிவினால் (1–10–2006 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(a) shall be laid before the Legislature of the Union territory and shall cease to operate at the expiration of six weeks from the reassembly of the Legislature or if, before the expiration of that period, a resolution disapproving it is passed by the Legislature, upon the passing of the resolution; and

(b) may be withdrawn at any time by the administrator after obtaining instructions from the President in that behalf.

(3) If and so far as an Ordinance under this article makes any provision which would not be valid if enancted in an Act of the Legislature of the Union territory made after complying with the provisions in that behalf contained in any such law as is referred to in clause (1) of article 239A, it shall be *void*.]

[1]* * *

**240. Power of President to make regulations for certain Union territories :**

(1) The President may make regulations for the peace, progress and good government of the Union territory of —

(a) the Andaman and Nicobar Islands;

[2][(b) Lakshadweep;]

[3][(c) Dadra and Nagar Haveli and Daman and Diu;]

[4][(d) * * *;]

[5][(*e*) [6][Puducherry];]

---

1. Cl. (4) was ins. by the Constitution (Thirty-eighth Amendment) Act, 1978, s. 4 (retrospectively) and omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 32 (w.e.f. 20-6-1979).
2. Subs. by the Laccadive, Minicoy and Amindivi Islands (Alteration of Name) Act, 1973 (34 of 1973), s. 4, for entry (b) (w.e.f. 1-11-1973).
3. Subs by the Dadra and Nagar Haveli and Daman and Diu (Merger of Union Territories) Act, 2019 (44 of 2019), (w.e.f. 19-12-2019). Entry (C) was ins. by the Constitution (Tenth Amendment) Act, 1961, s. 3 (w.e.f. 11-8-1961).
4. Entry (d) omitted by the Dadra and Nagar Haveli and Daman and Diu (Merger of Union Territories) Act, 2019 (44 of 2019), (w.e.f. 19-12-2019). Original entry (d) was ins. by the Constitution (Twelfth Amendment) Act, 1962, s. 3 (w.e.f. 20-12-1961) and subs. by the Goa, Daman and Diu Reorganisation Act, 1987 (18 of 1987), s. 63, for entry (d) (w.e.f. 30-5-1987).
5. Ins. by the Constitution (Fourteenth Amendment) Act, 1962, s. 5 and 7 (w.e.f. 16-8-1962).
6. Subs. by Pondicherry (Alteration of Name) Act, 2006 (44 of 2006), s. 4, for "Pondicherry" (w.e.f. 1-10-2006).

[1](ஊ) * * *

[2]( எ) * * *

ஆகிய ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளின் அமைதி, முன்னேற்றம், நல்லாட்சி ஆகியவற்றுக்கான ஒழுங்குறுத்தும்விதிகளை வகுக்கலாம்:

[3][வரம்புரையாக : [4][[5]புதுச்சேரி]] எனும் ஒன்றியத்து ஆட்சிநிலவரையின்] சட்டமன்றமாக இயங்குவதற்கு 239 (அ) உறுப்பின்படி குழுமம் எதுவும் உருவாக்கப்பட்டிருப்பின், அந்தச் சட்டமன்றத்தின் முதல் கூட்டத்திற்கெனக் குறிப்பிடப்படும் தேதிக்குப் பின்னர் குடியரசுத்தலைவர், அந்த ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் அமைதி, முன்னேற்றம், நல்லாட்சி ஆகியவற்றுக்கான ஒழுங்குறுத்தும்விதி எதனையும் வகுத்தல் ஆகாது:]

[6][மேலும் வரம்புரையாக : புதுச்சேரி எனும் ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் சட்டமன்றமாக இயங்கிவந்த குழுமம் கலைக்கப்பட்டிருக்கும்போதும், அந்தக் குழுமம் அத்தகைய சட்டமன்றமாக இயங்குவது 239 (அ) உறுப்பின் (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்ட சட்டம் எதன்படியும் எடுக்கப்பட்ட நடவடிக்கை காரணமாகத் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும்போதும், குடியரசுத் தலைவர், அவ்வாறு கலைக்கப்பட்டிருக்கும் அல்லது அது இயங்குவது தற்காலிகமாக நிறுத்திவைக்கப்பட்டிருக்கும் காலஅளவின்போது, அந்த ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் அமைதி, முன்னேற்றம், நல்லாட்சி ஆகியவற்றுக்கான ஒழுங்குறுத்தும்விதிகளை வகுக்கலாம்.]

(2) அவ்வாறு வகுக்கப்பட்ட ஒழுங்குறுத்தும்விதி எதுவும், அப்போதைக்கு அந்த ஒன்றியத்து ஆட்சிநிலவரைக்குப் பொருந்தும் நாடாளுமன்றச் சட்டம் அல்லது [7][பிற சட்டம் எதனையும்] நீக்கறவு செய்யலாம் அல்லது திருத்தம் செய்யலாம்; மேலும், அதைக் குடியரசுத்தலைவர் சாற்றம் செய்யும்போது அந்த ஆட்சிநிலவரைக்குப் பொருந்தும் ஒரு நாடாளுமன்றச் சட்டத்தைப்போன்று, அதே செல்லாற்றலும் செல்திறமும் அது உடையது ஆகும்.]

1. மிசோரம் தொடர்பான (ஊ) பதிவு, மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 39 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.
2. அருணாச்சலப் பிரதேசம் தொடர்பான (எ) பதிவு, அருணாச்சலப் பிரதேச மாநிலச் சட்டம், 1986 (69/1986) இன் 42 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.
3. அரசமைப்புச் (பதினான்காம் திருத்தம்) சட்டம், 1962 இன் 5 ஆம் பிரிவினால் (28–12–1962 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. "கோவா, தமண் மற்றும் டையூ அல்லது பாண்டிச்சேரி ஒன்றியத்து ஆட்சிநிலவரையின்" என்பதற்கு, அரசமைப்புச் (இருபத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 1971 இன் 4 ஆம் பிரிவினால் (15–2–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
5. "பாண்டிச்சேரி" என்பதற்கு, பாண்டிச்சேரி (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (44/2006) இன் 4 ஆம் பிரிவினால் (1–10–2006 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
6. அரசமைப்புச் (இருபத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 1971 இன் 4 ஆம் பிரிவினால் (15–2–1972 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
7. "நிலவுறும் சட்டம் எதனையும்" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* (15–2–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

[1](f) * * *

[2](g) * * *

[3][Provided that when any body is created under article 239A to function as a Legislature for the [4][Union territory of [5][Puducherry]], the President shall not make any regulation for the peace, progress and good government of that Union territory with effect from the date appointed for the first meeting of the Legislature:]

[6][Provided further that whenever the body functioning as a Legislature for the Union territory of [Puducherry is dissolved, or the functioning of that body as such Legislature remains suspended on account of any action taken under such law as is referred to in clause (1) of article 239A, the President may, during the period of such dissolution or suspension, make regulations for the peace, progress and good government of that Union territory.]

(2) Any regulation so made may repeal or amend any Act made by Parliament or [7][any other law] which is for the time being applicable to the Union territory and, when promulgated by the President, shall have the same force and effect as an Act of Parliament which applies to that territory.]

1.The entry (f) relating to Mizoram omitted by the State of Mizoram Act, 1986 (34 of 1986) s. 39 (w.e.f.20-2-1987).
2.The entry (g) relating to Arunachal Pradesh omitted by the State of Arunachal Pradesh Act, 1986 (69 of 1986), s. 42 (w.e.f. 20-2-1987).
3. Ins. by the Constitution (Fourteenth Amendment) Act, 1962, s. 5 (w.e.f.28-12-1962).
4.Subs. by the Constitution (Twenty-seventh Amendment) Act, 1971, s. 4, for "Union territory of Goa, Daman and Diu or Pondicherry" (w.e.f.15-2-1972).
5. Subs. by the Pondicherry (Alteration of Name) Act, 2006 (44 of 2006), s. 4, for "Pondicherry" (w.e.f.1-10-2006).
6. Ins. by the Constitution (Twenty-seventh Amendment) Act, 1971, s. 4 (w.e.f.15-2-1972).
7.Subs. by *ibid.*, for "any existing law" (w.e.f.15-2-1972).

**241. ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளுக்கான உயர் நீதிமன்றங்கள் :**

(1) நாடாளுமன்றம், சட்டத்தினால் [1][ஓர் ஒன்றியத்து ஆட்சிநிலைவரைக்கென] உயர் நீதிமன்றம் ஒன்றை அமைக்கலாம்; அல்லது [2][அத்தகைய ஆட்சிநிலவரையிலுள்ள] நீதிமன்றம் எதனையும், இந்த அரசமைப்பின் அனைத்து நோக்கங்களுக்காக அல்லது அவற்றில் எந்த ஒரு நோக்கத்திற்காகவும் ஓர் உயர் நீதிமன்றமாகும் என விளம்பலாம்.

(2) VI ஆம் பகுதியின் V ஆம் அத்தியாயத்தின் வகையங்கள் 214 ஆம் உறுப்பில் குறிப்பிடப்பட்ட ஓர் உயர் நீதிமன்றத்திற்குப் பொருந்துவன போன்றே, (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்ட ஒவ்வோர் உயர் நீதிமன்றத்திற்கும், நாடாளுமன்றம் சட்டத்தினால் வகைசெய்யும் மாற்றமைவுகளுக்கு அல்லது விதிவிலக்குகளுக்கு உட்பட்டுப் பொருந்தும்.

[3][(3) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கும், இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ உரிய சட்டமன்றத்திற்கு வழங்கப்பட்ட அதிகாரங்களைக் கொண்டு அச்சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தின் வகையங்களுக்கும் உட்பட்டு, ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒன்றின் தொடர்பாக, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் தொடக்கநிலைக்கு உடன்முன்பு அதிகாரம் செலுத்திவந்த உயர் நீதிமன்றம் ஒவ்வொன்றும், அத்தகைய தொடக்க நிலைக்குப் பின்பும் அந்த ஆட்சிநிலவரை தொடர்பாக அத்தகைய அதிகாரத்தைத் தொடர்ந்து செலுத்திவரும்.

(4) இந்த உறுப்பிலுள்ள எதுவும், ஒரு மாநில உயர் நீதிமன்றத்திற்குள்ள அதிகாரவரம்பை ஒன்றியத்து ஆட்சிநிலவரை அல்லது அதன் பகுதி எதற்கும் நீட்டிக்கச் செய்வதற்கோ, அதனின்றும் அதை நீக்குவதற்கோ, நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தைத் திறக்குறைவு செய்வதில்லை.]

**242.**[குடகு.]. – *அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

---

1. "முதலாம் இணைப்புப்பட்டியலின் (இ) பகுதியில் குறித்துரைக்கப்பட்டுள்ள மாநிலம்" என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. "அத்தகைய மாநிலத்திலுள்ள" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.

3. (3) மற்றும் (4) ஆம் கூறுகளுக்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டன.

**241. High Courts for Union territories :**

(1) Parliament may by law constitute a High Court for a [1][Union territory] or declare any court in any [2][such territory] to be a High Court for all or any of the purposes of this Constitution.

(2) The provisions of Chapter V of Part VI shall apply in relation to every High Court referred to in clause (1) as they apply in relation to a High Court referred to in article 214 subject to such modifications or exceptions as Parliament may by law provide.

[3][(3) Subject to the provisions of this Constitution and to the provisions of any law of the appropriate Legislature made by virtue of powers conferred on that Legislature by or under this Constitution, every High Court excercising jurisdiction immediately before the commencement of the Constitution (Seventh Amendment) Act, 1956, in relation to any Union territory shall continue to exercise such jurisdiction in relation to that territory after such commencement.

(4) Nothing in this article derogates from the power of Parliament to extend or exclude the jurisdiction of a High Court for State to, or from, any Union territory or part thereof.]

**242.** [*Coorg.*].–*Omitted by the Constitution* (*Seventh Amendment*) *Act,* 1956, *s.* 29 *and Sch. (w.e.f. 1-11-1956).*

---

1.Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch., for "State specified in Part C of the First Schedule" (w.e.f. 1-11-1956).

2. Subs. by *ibid.*, for "such State".

3. Subs. by *ibid.*, for cls. *(3)* and *(4)*.

## [1][பகுதி IX

## ஊராட்சிகள்

**243. பொருள்வரையறைகள் :**

இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி,–

(அ) ''மாவட்டம்'' என்பது, ஒரு மாநிலத்திலுள்ள மாவட்டம் என்று பொருள்படும்;

(ஆ) ''கிராமசபை'' என்பது, ஒரு ஊரைப் பொறுத்த நிலையில், ஊராட்சி பரப்பிடத்திற்குள் அடங்கியுள்ள ஊர் தொடர்பாக வாக்காளர் பட்டியல்களில் பதிவு செய்யப்பட்ட நபர்களைக் கொண்டதாக உள்ள குழுமம் என்று பொருள்படும்;

(இ) ''இடைப்பட்டநிலை'' என்பது, இந்தப் பகுதியின் நோக்கங்களுக்காக, பொது அறிவிக்கை வாயிலாக, இடைப்பட்ட நிலை என மாநில ஆளுநரால் குறித்துரைக்கப்படும் ஊர் மற்றும் மாவட்ட நிலைகளுக்கு இடைப்பட்ட நிலை என்று பொருள்படும்;

(ஈ) ''ஊராட்சி'' என்பது, ஊரகப் பரப்பிடங்களுக்காக, 243 (ஆ) உறுப்பின்படி அமைக்கப்பட்ட தன்னாட்சி அமைப்பு ஒன்று (அவை எந்தப் பெயரால் அழைக்கப்பட்டாலும்) என்று பொருள்படும்;

(உ) ''ஊராட்சிப் பரப்பிடம்'' என்பது, ஓர் ஊராட்சியின் ஆட்சிநிலவரைப் பரப்பிடம் என்று பொருள்படும்;

(ஊ) ''மக்கள்தொகை'' என்பது, கடைசிமுறை மக்கள் கணக்கெடுப்பின்படி தொடர்புடைய விவரங்களைக் கண்டறிந்து வெளியிடப்பட்டுள்ள மக்கள்தொகை என்று பொருள்படும்;

(எ) ''ஊர்'' என்பது, இந்தப் பகுதியின் நோக்கங்களுக்காக, ஆளுநரால் பொது அறிவிக்கை வாயிலாக ஊர் என குறித்துரைக்கப்படும் ஊர் என்று பொருள்படும்; மற்றும் அவ்வாறு குறித்துரைக்கப்பட்ட ஊர்களின் தொகுப்பை உள்ளடக்கும்.

**243 (அ). கிராம சபை :**

ஒரு கிராம சபை, ஊர் நிலையில் ஒரு மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் வகை செய்யும் அதிகாரங்களைச் செலுத்தலாம் மற்றும் செயற்பணிகளைப் புரியலாம்.

**243 (ஆ). ஊராட்சிகளை அமைத்தல் :**

(1) ஒவ்வொரு மாநிலத்திலும், ஊர் நிலையிலும், இடைப்பட்ட மற்றும் மாவட்ட நிலைகளிலும், இந்தப் பகுதியின் வகையங்களுக்கிணங்க ஊராட்சிகள் அமைக்கப்படுதல் வேண்டும்.

(2). (1) ஆம் கூறில் எது எவ்வாறிருப்பினும், இடைப்பட்ட நிலையிலுள்ள ஊராட்சிகள், இருபது இலட்சத்திற்கு மேற்படாத மக்கள் தொகையைக் கொண்டிருக்கிற ஒரு மாநிலத்தில் அமைக்கப்படுதல் ஆகாது.

---

1. அரசமைப்புச் (எழுபத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1992 இன் 2 ஆம் பிரிவினால் (24–4–1993 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது. முதன்முதலில் இருந்த IX ஆம் பகுதி அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (19–10–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

## [1][PART IX
## THE PANCHAYATS

**243. Definitions:**

In this Part, unless the context otherwise requires,—

(a) "district" means a district in a State;

(b) "Gram Sabha" means a body consisting of persons registered in the electoral rolls relating to a village comprised within the area of Panchayat at the village level;

(c) "intermediate level" means a level between the village and district levels specified by the Governor of a State by public notification to be the intermediate level for the purposes of this Part;

(d) "Panchayat" means an institution (by whatever name called) of self-government constituted under article 243B, for the rural areas;

(e) "Panchayat area" means the territorial area of a Panchayat;

(f) "Population" means the population as ascertained at the last preceding census of which the relevant figures have been published;

(g) "village" means a village specified by the Governor by public notification to be a village for the purposes of this Part and includes a group of villages so specified.

**243A. Gram Sabha :**

A Gram Sabha may exercise such powers and perform such functions at the village level as the Legislature of a State may, by law, provide.

**243B. Constitution of Panchayats :**

(1) There shall be constituted in every State, Panchayats at the village, intermediate and district levels in accordance with the provisions of this Part.

(2) Notwithstanding anything in clause (1), Panchayats at the intermediate level may not be constituted in a State having a population not exceeding twenty lakhs.

---

1. Ins. by the Constitution (Seventy third Amendment) Act, 1992, s. 2 (w.e.f. 24-4-1993). Original Part IX was omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 19-10-1956).

**243 (இ). ஊராட்சிகளின் கட்டமைப்பு :**

(1) இந்தப் பகுதியின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒரு மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், ஊராட்சிகளின் கட்டமைப்பு குறித்த வகையங்களைச் செய்யலாம்:

**வரம்புரையாக :** எந்த நிலையிலும், ஊராட்சியின் ஆட்சிநிலவரைப் பரப்பிடத்திலுள்ள மக்கள் தொகைக்கும், அந்த ஊராட்சியில் தேர்தல் மூலம் நிரப்பப்பட வேண்டிய பதவியிடங்களின் எண்ணிக்கைக்கும் இடையே உள்ள வீதமானது, கூடுமானவரையில், மாநிலம் எங்கணும் ஒருபடித்தாய் இருத்தல் வேண்டும்.

(2) ஊராட்சியிலுள்ள அனைத்துப் பதவியிடங்களும், ஊராட்சிப் பரப்பிடங்களிலுள்ள ஆட்சிநிலவரைத் தேர்தல் தொகுதிகளிலிருந்து நேரடித் தேர்தல் மூலம் தெரிந்தெடுக்கப்பட்ட நபர்களால் நிரப்பப்படுதல் வேண்டும்; மற்றும் இந்த நோக்கத்திற்காக, ஒவ்வோர் ஊராட்சிப் பரப்பிடமும், ஒவ்வொரு தேர்தல் தொகுதியின் மக்கள் தொகைக்கும் அதற்கு ஒதுக்கப்பட்ட பதவியிடங்களின் எண்ணிக்கைக்கும் இடையேயுள்ள வீதமானது, கூடுமானவரையில், ஊராட்சிப் பரப்பிடம் எங்கணும் ஒருபடித்தாய் இருத்தல் வேண்டும் என்ற முறையில் ஆட்சிநிலவரைப் தேர்தல் தொகுதிகளாகப் பிரிக்கப்படுதல் வேண்டும்.

(3) ஒரு மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால் –

(அ) ஊர் நிலையில் உள்ள ஊராட்சிகளின், இடைப்பட்ட நிலையிலுள்ள ஊராட்சிகளின் அல்லது இடைப்பட்ட நிலையில் ஊராட்சிகள் இல்லாத மாநிலத்தில், மாவட்ட நிலையிலுள்ள ஊராட்சிகளின் தலைமையர்களும்;

(ஆ) இடைப்பட்ட நிலையிலுள்ள ஊராட்சிகளின், மாவட்ட நிலையிலுள்ள ஊராட்சிகளின் தலைமையர்களும்;

(இ) ஓர் ஊராட்சியில், ஊர் நிலையில் அல்லாத பிற நிலையில், ஊராட்சிப் பரப்பிடத்தை முழுவதுமாக அல்லது பகுதியாக உள்ளடக்கியிருக்கிற தேர்தல் தொகுதிகளைச் சார்பாற்றம் செய்கிற மக்களவையின் உறுப்பினர்களும் மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களும்;

(ஈ). (i) இடைப்பட்ட நிலையிலுள்ள ஊராட்சிப் பரப்பிடத்திற்குள் வாக்காளர்களாகப் பதிவு செய்து கொண்டிருக்கிறவிடத்து, இடைப்பட்ட நிலையிலுள்ள ஊராட்சியில்;

(ii) மாவட்ட நிலையிலுள்ள ஊராட்சிப் பகுதிக்குள் வாக்காளர்களாகப் பதிவு செய்து கொண்டிருக்கிறவிடத்து, மாவட்ட நிலையில் உள்ள ஊராட்சியில்; மாநிலங்களவை உறுப்பினர்களும், மாநிலச் சட்ட மேலவை உறுப்பினர்களும்

சார்பாற்றம் செய்வதற்கு வகைசெய்யலாம்.

(4) ஊராட்சிப் பரப்பிடத்திலுள்ள ஆட்சிநிலவரைத் தேர்தல் தொகுதியிலிருந்து நேரடித் தேர்தல் வாயிலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பினும் இல்லாவிடினும், ஊராட்சித் தலைமையரும், ஊராட்சியின் பிற உறுப்பினர்களும், ஊராட்சிகளின் கூட்டங்களில் வாக்களிக்க உரிமை உடையவர் ஆவர்.

**243 (ல). நிதி ஆணையம்:**

(1) 243 (ஐ) உறுப்பின் கீழ் அமைக்கப்பட்ட நிதி ஆணையம், நகராட்சிகளின் நிதி நிலையை மறுஆய்வு செய்து, பின்வருவன குறித்து ஆளுநருக்குப் பரிந்துரைகள் செய்தல் வேண்டும் –

(அ). (i) இந்தப் பகுதியின்படி மாநிலத்திற்கும் நகராட்சிகளுக்கும் இடையே பிரிக்கப்படலாகிறதும், மாநிலங்களால் விதிக்கத்தக்கதுமான வரிகள், தீர்வைகள், சுங்கவரிகள், கட்டணங்கள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் நிகரத் தொகைகளை அவற்றுக்கிடையே பகிர்ந்தளித்தல் மற்றும், அத்தகைய தொகைகளில், முறையே, அவற்றிற்குரிய பங்குகளை அனைத்து நிலைகளிலுமுள்ள நகராட்சிகளுக்கிடையே பகிர்ந்து ஒதுக்குதல்;

(ii) நகராட்சிகளுக்குக் குறித்தளிக்கப்படலாகும் அல்லது நகராட்சிகளால் பயன்படுத்தப்படலாகும் வரிகள், தீர்வைகள், சுங்கவரிகள், கட்டணங்கள் ஆகியவற்றைத் தீர்மானித்தல்;

(iii) மாநிலத் திரள்நிதியத்திலிருந்து நகராட்சிகளுக்கு உதவி மானியங்களை அளித்தல்;

ஆகியவற்றில் பின்பற்றப்பட வேண்டிய நெறிகள்;

(ஆ) நகராட்சிகளின் நிதி நிலையை மேம்படுத்துவதற்குத் தேவைப்படும் நடவடிக்கைகள்;

(இ) நகரட்சிகளின் சீரான நிதி நலன் கருதி ஆளுநரால், நிதி ஆணையத்திற்கு குறித்தனுப்பும் பிற பொருட்பாடு எதுவும்.

(2) ஆளுநர், இந்த உறுப்பின்படி ஆணையத்தால் செய்யும் ஒவ்வொரு பரிந்துரையையும், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் குறித்த விளக்க விவரக்குறிப்புடன் சேர்த்து, மாநிலச் சட்டமன்றத்தின் முன் வைக்கப்படுமாறு செய்தல் வேண்டும்.

**243 (வ). நகராட்சிகளின் கணக்குகளைத் தணிக்கை செய்தல் :**

ஒரு மாநிலச் சட்டமன்றம், நகராட்சிகளால் கணக்குகள் வைத்துவரப்படுவதையும் அந்தக் கணக்குகள் தணிக்கை செய்யப்படுவதையும் பொறுத்த வகையங்களைச் சட்டத்தினால் செய்யலாம்.

**243 (வ)(அ). நகராட்சிகளுக்குத் தேர்தல்கள் :**

(1) நகராட்சிகளுக்கான தேர்தல்கள் அனைத்திற்காகவும், வாக்காளர் பட்டியல்களைத் தயாரிப்பதற்பதற்கான மற்றும் அத்தேர்தல்களை நடத்துவதற்கான கண்காணிப்பு, நெறிப்படுத்துகை, கட்டாள்கை, ஆகியவை, 243 (ஒ) உறுப்பில் சுட்டப்படும் மாநிலத் தேர்தல் ஆணையத்திடம் உற்றமைந்திருக்கும்.

(2) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால், நகராட்சிகளுக்கான தேர்தல்கள் பொறுத்த அல்லது அவை தொடர்பான, பொருட்பாடுகள் அனைத்தையும் குறித்து வகை செய்யலாம்.

**243Y. Finance Commission:**

(1) The Finance Commission constituted under article 243-I shall also review the financial position of the Municipalities and make recommendation to the Governor as to —

(a) the Principles which should govern —

(i) the distribution between the State and the Municipalities of the net proceeds of the taxes, duties, tolls and fees leviable by the State, which may be divided between them under this Part and the allocation between the Municipalities at all levels of their respective shares of such proceeds;

(ii) the determination of the taxes, duties, tolls and fees which may be assigned to, or appropriated by, the Municipalities;

(iii) the grants-in-aid to the Municipalities from the Consolidated Fund of the State;

(b) the measures needed to improve the financial position of the Municipalities;

(c) any other matter referred to the Finance Commission by the Governor in the interests of sound finance of the Municipalities.

(2) The Governor shall cause every recommendation made by the Commission under this article together with an explanatory memorandum as to the action taken thereon to be laid before the Legislature of the State.

**243Z. Audit of accounts of Municipalities :**

The Legislature of a State may, by law, make provisions with respect to the maintenance of accounts by the Municipalities and the auditing of such accounts.

**243ZA. Elections to the Municipalities :**

(1) the superintendence, direction and control of the preparation of electoral rolls for and the conduct of, all elections to the Municipalities shall be vested in the State Election Commission referred to in article 243K.

(2) Subject to the provisions of this Constitution, the Legislature of a State may, by law, make provision with respect to all matters relating to, or in connection with, elections to the Municipalities.

**243 (வ)(ஆ). ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளுக்குப் பொருந்துதல்:**

இந்தப் பகுதியின் வகையங்கள், ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளுக்குப் பொருந்தும் மற்றும் ஓர் ஒன்றியத்து ஆட்சிநிலவரைக்குப் பொருந்தச் செய்கையில், ஒரு மாநில ஆளுநர் குறித்த சுட்டுகைகள், 239 ஆம் உறுப்பின்படி அமர்த்தப்பட்ட ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் ஆளுகையர் குறித்த சுட்டுகையாக இருந்தாற்போன்றும் மற்றும் ஒரு மாநிலச் சட்டமன்றம் அல்லது சட்டமன்றப் பேரவை குறித்த சுட்டுகைகள், சட்டமன்றப் பேரவையைக் கொண்டிருக்கிற ஒன்றியத்து ஆட்சிநிலவரையைப் பொறுத்தவரை, அந்தச் சட்டமன்றப் பேரவையைக் குறித்த சுட்டுகையாக இருந்தாற்போன்றும், செல்திறம் உடையதாகும்:

வரம்புரையாக : குடியரசுத் தலைவர், பொது அறிவிக்கை வாயிலாக, அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கலாகும் விலக்குகளுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டு, ஒன்றியத்து ஆட்சிநிலவரை எதற்கும் அல்லது அதன் பகுதிக்கு, இந்தப் பகுதியின் வகையங்கள் பொருந்துதல் வேண்டும் என்று பணிக்கலாம்.

**243 (வ)(இ). இந்தப் பகுதி குறித்தசில வரையிடங்களுக்குப் பொருந்தாது.**

(1) இந்தப் பகுதியிலுள்ள எதுவும், 244 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட பட்டியல் வரையிடங்களுக்கும், (2) ஆம் கூறில் சுட்டப்பட்ட பழங்குடியினர் வரையிடங்களுக்கும் பொருந்துதல் ஆகாது.

(2) இந்தப் பகுதியிலுள்ள எதுவும், மேற்கு வங்காள மாநிலத்தின் டார்ஜிலிங் மாவட்டத்தின் குன்று வரையிடங்களுக்காக, அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டத்தின்படி அமைக்கப்பட்ட டார்ஜிலிங் கோர்கா குன்று மன்றத்தின் அலுவற்பணிகளையும், அதிகாரங்களையும் பாதிப்பதாகப் பொருள்கொள்ளப்படுதல் ஆகாது.

(3) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், நாடாளுமன்றம், சட்டத்தினால், அந்தச் சட்டத்தில் குறித்துரைக்கப்படலாகும் விலக்குகளுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டு, (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட பட்டியல் வரையிடங்களுக்கும், பழங்குடியினர் வரையிடங்களுக்கும், இந்தப் பகுதியின் வகையங்களை நீட்டிக்கலாம், மேலும் அந்தச் சட்டம் எதுவும், 368 ஆம் உறுப்பின் நோக்கங்களுக்காக, இந்த அரசமைப்பின் ஒரு திருத்தமாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

**243 (வ)(ஈ). மாவட்டத் திட்டக் குழு :**

(1) ஒரு மாவட்டத்தில் ஊராட்சிகளாலும் நகராட்சிகளாலும் தயாரிக்கப்படும் திட்டங்களை ஒருங்கிணைத்து, அந்த மாவட்டம் முழுமைக்கும் மேம்பாட்டுத் திட்ட வரைவு ஒன்றைத் தயாரிப்பதற்காக, மாவட்ட அளவில் ஒரு மாவட்டத் திட்டக் குழு, ஒவ்வொரு மாநிலத்திலும் அமைக்கப்படுதல் வேண்டும்.

(2) ஒரு மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால் பின்வருவன குறித்து வகைசெய்யலாம்.—

(அ) மாவட்டத் திட்டக் குழுக்களின் கட்டமைப்பு;

(ஆ) அந்தக் குழுக்களில் பதவியிடங்கள் நிரப்பப்படவேண்டிய முறை:

வரம்புரையாக : அந்தக் குழு உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் ஐந்தில் நான்குப் பங்கிற்குக் குறையாதவர்கள், மாவட்ட அளவில் ஊராட்சியின் மற்றும் மாவட்டத்தில் நகராட்சிகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களாலும் அவர்களுக்கிடையேயிருந்தும், மாவட்டத்தில் ஊரகப் பகுதிகளிலுள்ள மக்கள் தொகைக்கும் நகரப் பகுதிகளிலுள்ள மக்கள் தொகைக்கும் இடையேயுள்ள விகிதப்படியான வீத அளவில் தேர்ந்தெடுக்கப்படுதல் வேண்டும்;

**243ZB. Application to Union territories:**

The provisions of this Part shall apply to the Union territories and shall, in their application to a Union territory, have effect as if the references to the Governor of a State were references to the Administrator of the Union territory appointed under article 239 and references to the Legislature or the Legislative Assembly of a State were references in relation to a Union territory having a Legislative Assembly, to that Legislative Assembly:

Provided that the President may, by public notification, direct that the provisions of this Part shall apply to any Union territory or part thereof subject to such exceptions and modifications as he may specify in the notification.

**243ZC. Part not to apply to certain areas:**

(1) Nothing in this Part shall apply to the Scheduled Areas referred to in clause (1), and the Tribal Areas referred to in clause (2), of Article 244.

(2) Nothing in this Part shall be construed to affect the functions and powers of the Darjeeling Gorkha Hill Council constituted under any law for the time being in force for the hill areas of the district of Darjeeling in the State of West Bengal.

(3) Notwithstanding anything in this Constitution, Parliament may, by law, extend the provisions of this Part to the Scheduled Areas and the tribal areas referred to in clause (1) subject to such exceptions and modifications as may be specified in such law, and no such law shall be deemed to be an amendment of this Constitution for the purposes of article 368.

**243ZD. Committee for district planning:**

(1) There shall be constituted in every State at the district level a District Planning Committee to consolidate the plans prepared by the Panchayats and the Municipalities in the district and to prepare a draft development plan for the district as a whole.

(2) The Legislature of a State may, by law, make provision with respect to.—

(a) the composition of the District Planning Committees;

(b) the manner in which the seats in such Committees shall be filled:

Provided that not less than four-fifths of the total number of members of such Committee shall be elected by, and from amongst, the elected members of the Panchayat at the district level and of the Municipalities in the district in proportion to the ratio between the population of the rural areas and of the urban areas in the district;

(இ) அத்தகைய குழுக்களுக்குக் குறித்தளிக்கப்படலாகும் மாவட்டத் திட்டம் தொடர்பான செயற்பணிகள்;

(ஈ) அத்தகைய குழுக்களின் தலைமையர்கள் தெரிந்தெடுக்கப்பட வேண்டிய முறை.

(3) மாவட்டத் திட்டக்குழு ஒவ்வொன்றும், மேம்பாட்டுத் திட்டவரைவு தயாரிக்கையில்,—

(அ). (i) இடஞ்சார்ந்த திட்டம், நீர் பிற இயற்பொருள் சார்ந்த மற்றும் இயற்கை வள ஆதாரங்களைப் பகிர்ந்து கொள்ளுதல், கட்டமைப்பின் ஒருங்கிணைந்த மேம்பாடு மற்றும் சுற்றுச்சூழல் பாதுகாப்பு உள்ளடங்கலாக, ஊராட்சிகளுக்கும் நகராட்சிகளுக்கும் இடையே உள்ள பொது நலன் குறித்த பொருட்பாடுகள்;

(ii) நிதிசார்ந்ததான அல்லது பிறவாறாகக் கிடைக்கத்தக்க வளஆதாரங்களின் அளவு மற்றும் வகை;

ஆகியவற்றைக் கவனத்திற்கொள்ளுதல் வேண்டும்.

(ஆ) ஆளுநர், ஆணை வாயிலாகக் குறித்துரைக்கலாகும் நிறுவனங்களையும் அமைவனங்களையும் கலந்தாய்வு செய்தல் வேண்டும்.

(4) மாவட்டத் திட்டக்குழு ஒவ்வொன்றின் தலைமையரும், அந்தக் குழுவால் பரிந்துரை செய்யப்பட்டவாறான மேம்பாட்டுத் திட்டத்தை மாநில அரசிற்குப் பணிந்தனுப்புதல் வேண்டும்.

**243 (வ)(உ) . பெருநகர்த் திட்டத்திற்கான குழு:**

(1) பெருநகர்ப் பகுதி முழுமைக்கும் மேம்பாட்டுத் திட்டவரைவைத் தயாரிப்பதற்கு, பெருநகர்த் திட்டக்குழு ஒன்று, பெருநகர்ப் பகுதி ஒவ்வொன்றுக்கும் அமைக்கப்படுதல் வேண்டும்.

(2) மாநிலச் சட்ட மன்றம், சட்டத்தினால் பின்வருவன குறித்து வகைசெய்யலாம்—

(அ) பெருநகர்த் திட்டக் குழுக்களின் கட்டமைப்பு;

(ஆ) அந்தக் குழுக்களில் பதவியிடங்கள் நிரப்பப்பட வேண்டிய முறை:

வரம்புரையாக : அந்தக் குழுவின் உறுப்பினர்கள், மூன்றில் இரண்டு பங்கிற்குக் குறையாத பெருநகர்ப் பகுதியில் நகராட்சிகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களாலும் மற்றும் ஊராட்சிகளின் தலைமையர்களாலும் அவர்களுக்கிடையேயிருந்து, அந்தப் பகுதியில் நகராட்சிகளின் மக்கள் தொகைக்கும் ஊராட்சிகளின் மக்கள் தொகைக்கும், இடையே உள்ள விகிதப்படியான வீத அளவில் தேர்ந்தெடுக்கப்படுதல் வேண்டும்;

(இ) அந்தக் குழுக்களுக்குக் குறித்தளிக்கப்பட்ட செயற்பணிகளை ஆற்றுவதற்காக, அந்தக் குழுக்களில், இந்திய அரசு மற்றும் மாநில அரசு மற்றும் தேவையெனக் கருதலாகும், அமைவனங்கள் மற்றும் அமைப்புகளுக்கான சார்பாற்றம்;

(ஈ) அந்தக் குழுக்களுக்குக் குறித்தளிக்கப்படலாகும் பெருநகர்ப் பகுதிக்குத் திட்டமிடுதல் மற்றும் ஒருங்கிணைத்தல் தொடர்பான செயற்பணிகள்;

(c) the functions relating to district planning which may be assigned to such Committees;

(d) the manner in which the Chairpersons of such Committees shall be chosen.

(3) Every District Planning Committee shall, in preparing the draft development plan,—

(a) have regard to—

(i) matters of common interest between the Panchayats and the Municipalities including spatial planning, sharing of water and other physical and natural resources, the integrated development of infrastructure and environmental conservation;

(ii) the extend and type of available resources whether financial or otherwise;

(b) consult such institutions and organisations as the Governor may, by order, specify.

(4) The Chairperson of every District Planning Committee shall forward the development plan, as recommended by such Committee, to the Government of the State.

**243ZE. Committee for Metropolitan Planning:**

(1) There shall be constituted in every Metropolitan area a Metropolitan Planning Committee to prepare a draft development plan for the Metropolitan area as a whole.

(2) The Legislature of a State may, by law, make provision with respect to—

(a) the composition of the Metropolitan Planning Committees;

(b) the manner in which the seats in such Committees shall be filled:

Provided that not less than two-thirds of the members of such Committee shall be elected by, and from amongst, the elected members of the Municipalities and Chairpersons of the Panchayats in the Metropolitan area in proportion to the ratio between the population of the Municipalities and of the Panchayats in that area;

(c) the representation in such Committees of the Government of India and the Government of the State and of such organizations and institutions as may be deemed necessary for carrying out the functions assigned to such Committees;

(d) the functions relating to planning and co-ordination for the Metropolitan area, which may be assigned to such Committees;

(உ) அந்தக் குழுக்களின் தலைமையர்கள் தெரிந்தெடுக்கப்பட வேண்டிய முறை.

(3) பெருநகர்த் திட்டக் குழு ஒவ்வொன்றும், மேம்பாட்டுத் திட்டவரைவத் தயாரிக்கையில், —

(அ) (i) பெருநகர்ப் பகுதிகளிலுள்ள நகராட்சிகளாலும் ஊராட்சிகளாலும் தயாரிக்கப்பட்ட திட்டங்கள்;

(ii) ஒருங்கிணைந்த அந்தப் பகுதியின் இடஞ்சார்ந்த திட்டம், நீர், பிற இயற்பொருள் சார்ந்த, பகிர்ந்து கொள்ளுதல் மற்றும் இயற்கை வள ஆதாரங்களைப் பகிர்ந்து கொள்ளுதல், கட்டமைப்பின் ஒருங்கிணைந்த மேம்பாடு, சுற்றுச்சூழல் பாதுகாப்பு உள்ளடங்கலாக, நகராட்சிகளுக்கும் ஊராட்சிகளுக்கும் இடையே உள்ள பொது நலன் குறித்த பொருட்பாடுகள்;

(iii) இந்திய அரசால் மற்றும் மாநில அரசால் ஏற்படுத்தப்பட்ட ஒட்டுமொத்த நோக்கங்கள் மற்றும் முந்துரிமைகள்;

(iv) இந்திய அரசின் மற்றும் மாநில அரசின் முகவாண்மைகளால் பெருநகர்ப் பகுதியில் செய்யப்படக்கூடிய முதலீடுகளின் அளவு மற்றும் தன்மை, மற்றும் கிடைக்கத்தக்க நிதி சார்ந்ததான அல்லது பிறவாறான வள ஆதாரங்கள்

ஆகியவற்றைக் கவனத்திற்கொள்ளுதல் வேண்டும்;

(ஆ) ஆளுநர், ஆணை வாயிலாகக் குறித்துரைக்கலாகும் அமைப்புகளையும் அமைவனங்களையும் கலந்தாய்வு செய்தல் வேண்டும்.

(4) பெருநகர்த் திட்டக் குழு ஒவ்வொன்றின் தலைமையரும், அந்தக் குழுவால் பரிந்துரை செய்யப்பட்டவாறான, மேம்பாட்டுத் திட்டத்தை மாநில அரசிற்குப் பணிந்தனுப்புதல் வேண்டும்.

**243 (வ)(ஊ). நிலவுறும் சட்டங்களும் நகராட்சிகளும் தொடர்ந்து இருந்து வருதல் :**

இந்தப் பகுதியில் எது எவ்வாறிருப்பினும், இந்தப் பகுதியின் வகையங்களுக்கு முரணாக, அரசமைப்புச் (எழுபத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1992 இன் தொடக்கநிலைக்கு உடன்முன்பு ஒரு மாநிலத்தில் செல்லாற்றலிலிருந்த நகராட்சிகள் தொடர்பான சட்டம் எதனின் வகையம் எதுவும் தகுதிறமுள்ள சட்டமன்றத்தால் அல்லது பிற அதிகாரஅமைப்பால் திருத்தம் செய்யப்படும் அல்லது நீக்கறவு செய்யப்படும்வரை அல்லது அத்தகைய தொடக்கநிலையிலிருந்து ஓராண்டு கழிவுறும்வரை இவற்றில் எது முந்தியதோ, அதுவரை செல்லாற்றலில் தொடர்ந்து இருந்து வரும்:

**வரம்புரையாக** : அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு இருந்து வரும் நகராட்சிகள் அனைத்தும், அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையால் அல்லது சட்டமன்ற மேலவையை உடைய மாநிலம் ஒன்றைப் பொறுத்தவரை, அந்த மாநிலத்தின் சட்டமன்ற ஈரவைகளில் ஒவ்வொன்றாலும் அந்தப்படிக்கு நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தால் உடனடியாகக் கலைக்கப்பட்டாலன்றி, அவற்றின் காலவரை கழிவுறும்வரை தொடர்ந்து இருந்து வருதல் வேண்டும்.

(e) the manner in which the Chairpersons of such Committees shall be chosen.

(3) Every Metropolitan Planning Committee shall, in preparing the draft development plan, -

(a) have regard to -

(i) the plans prepared by the Municipalities and the Panchayats in the Metropolitan area;

(ii) matters of common interest between the Municipalities and the Panchayats, including co-ordinated spatial planning of the area, sharing of water and other physical and natural resources, the integrated development of infrastructure and environmental conservation;

(iii) the overall objectives and priorities set by the Government of India and the Government of the State;

(iv) the extent and nature of investments likely to be made in the Metropolitan area by agencies of the Government of India and of the Government of the State and other available resources whether financial or otherwise;

(b) consult such institutions and organisations as the Governor may, by order, specify.

(4) the Chairperson of every Metropolitan Planning Committee shall forward the development plan,as recommended by such Committee, to the Government of the State.

**243ZF. Continuance of existing laws and Municipalities:**

Notwithstanding anything in this Part, any provision of any law relating to Municipalities in force in a State immediately before the commencement of the Constitution (Seventy- fourth Amendment) Act, 1992, which is inconsistent with the provisions of this Part, shall continue to be in force until amended or repealed by a competent Legislature or other competent authority or until the expiration of one year from such commencement, whichever is earlier:

Provided that all the Municipalities existing immediately before such commencement shall continue till the expiration of their duration, unless sooner dissolved by a resolution passed to that effect by the Legislative Assembly of that State or, in the case of a State having a Legislative Council, by each House of the Legislature of that State.

**243ZG. Bar to interference by courts in electoral matters:**

Notwithstanding anything in this Constitution, —

(a) the validity of any law relating to the delimitation of constituencies or the allotment of seats to such constituencies, made or purporting to be made under Article 243ZF shall not be called in question in any court;

(b) no election to any Municipality shall be called in question except by an election petition presented to such authority and in such manner as is provided for by or under any law made by the Legislature of a State.]

## [1][PART IX-B

## THE CO-OPERATIVE SOCIETIES

**243ZH. Definitions:**

In this part, unless the context otherwise requires, -

(a) "authorised person" means a person referred to as such in article 243-ZQ;

(b) "board" means the board of directors or the governing body of a co-operative society, by whatever name called, to which the direction and control of the management of the affairs of a society is entrusted to;[1]

(c) "co-operative society" means a society registered or deemed to be registered under any law relating to co-opeative societies for the time being in force in any State;

(d) "multi-State co-operative society" means a society with objects not confined to one state and registered or deemed to be registered under any law for the time being in force relating to such co-operative;

(e) "Office bearer" means a President, Vice-President, Chairperson, Vice-Chairperson, Secretary or Treasurer of a co-operative society and included any other person to be elected by the board of any co-operative society;

1. Ins. by the Constitution (Ninety-seventh Amendment) Act, 2011, s. 4 (w.e.f. 15-2-2012).

**243 (வ)(எ). தேர்தல் பற்றிய பொருட்பாடுகளில் நீதிமன்றங்கள் தலையிடுவதற்குத் தடை :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், –

(அ) தேர்தல் தொகுதிகளை வரையறை செய்தல் அல்லது அத்தகைய தொகுதிகளுக்குப் பதவியிடங்களைப் பகிர்ந்து ஒதுக்குதல் தொடர்பாக, 243 (வ) (ஊ) உறுப்பின்படி இயற்றப்பட்ட அல்லது இயற்றப்பட வேண்டியதாகப் புலப்படுகிற சட்டம் ஒன்றின் செல்லுந்தன்மை நீதிமன்றம் எதிலும் எதிர்த்து வாதிடப்படுதல் ஆகாது;

(ஆ) நகராட்சி எதற்குமான தேர்தல் எதுவும் மாநிலச் சட்டமன்றத்தினால் இயற்றப்பட்ட சட்டத்தினாலோ அதன் வழியாலோ வகை செய்யப்பட்டுள்ளவாறு அதிகார அமைப்பிற்கு, மற்றும் அத்தகைய முறையில் முன்னிடப்படும் ஒரு தேர்தல் மனு வாயிலாக அன்றி, எதிர்த்து வாதிடப்படுதல் ஆகாது.]

## [1][பகுதி IX - (ஆ)

### கூட்டுறவுச் சங்கங்கள்

**243 (வ)(ஏ). பொருள்வரையறைகள் :**

இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி,–

(அ) "அதிகாரமளிக்கப்பெற்றுள்ள நபர்" என்பது, 243 (வ)(ட) உறுப்பில் அவ்வாறாகச் சுட்டப்பட்டுள்ள ஒருவர் என்று பொருள்படும் ;

(ஆ) "குழுமம்" என்பது, கூட்டுறவுச் சங்கம் ஒன்றின் அலுவற்பாடுகளின் மேலாண்மையை நெறிப்படுத்துவதும் கட்டாள்கை செய்வதும் ஒப்படைக்கப்பட்டிருக்கும், எந்தப் பெயராலும் வழங்கப்பெறும் அக்கூட்டுறவுச் சங்கம் ஒன்றின் இயக்குநர்கள் குழு அல்லது குழுமம் என்று பொருள்படும்;[2]

(இ) "கூட்டுறவுச் சங்கம்" என்பது, மாநிலம் எதிலும் அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள கூட்டுறவுச் சங்கங்கள் தொடர்பான சட்டம் எதன்படியும் பதிவு செய்யப்பட்ட அல்லது பதிவு செய்யப்படுவதாகக் கொள்ளப்படும் ஒரு சங்கம் என்று பொருள்படும்;

(ஈ) "பன்–மாநிலக் கூட்டுறவுச் சங்கம்" என்பது, ஒரு மாநிலத்திற்கு மட்டுமேயென அல்லாத நோக்கங்களைக் கொண்டதும் கூட்டுறவுச் சங்கங்கள் தொடர்பாக அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டம் எதன்படியும் பதிவு செய்யப்பட்டதும் அல்லது பதிவு செய்யப்படுவதாகக் கொள்ளப்படுவதுமான ஒரு சங்கம் என்று பொருள்படும்;

(உ) "அலுவலகப் பொறுப்பாளர்" என்பது, ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் ஒரு தலைவர், துணைத்தலைவர், தலைமையர், துணைத்தலைமையர், செயலாளர் அல்லது பொருளாளர் என்று பொருள்படும் மற்றும் கூட்டுறவுச் சங்கம் எதனின் குழுமத்தின் தேர்ந்தெடுக்கப்பெறவேண்டிய பிற நபர் எவரையும் உள்ளடக்கும்;

---

1. அரசமைப்புச் (தொண்ணூற்று ஏழாம் திருத்தம்) சட்டம், 2011 இன் 4 ஆம் பிரிவினால் (15–2–2012 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(f) "Registrar" means the Central Registrar appointed by the Central Government in relation to the multi-State co-operative societies and the Registrar for co-operative societies appointed by the State Government under the law made by the Legislature of a State in relation to Co-operative societies;

(g) "State Act" means any law made by the Legistature of a State;

(h) "State level co-operative society" means a co-operative society having its area of operation extending to the whole of a State and defined as such in any law made by the Legislature of State.

**243ZI. Incorporation of co-operative societies:**

Subject to the provisions of this Part, the Legislature of a State may, by law, make provisions with respect to the incorporation, regulation and winding up of co-operative societies based on the principles of voluntary formation, democratic member control, member-economic participation and autonomous functioning.

**243ZJ. Number and term of members of board and its office bearers:**

(1) The board shall consist of such number of directors as may be provided by the Legislature of a State, by law:

Provided that the maximum number of directors of a co-operative society shall not exceed twenty-one:

Provided further that the Legislature of a State shall, by law, provide for the reservation of one seat for the Scheduled Castes or the Scheduled Tribes and two seats for women on board of every co-operative society consisting of individuals as members and having members from such class or category of persons.

(2) The term of office of elected members of the board and its office bearers shall be five years from the date of election and the term of office bearers shall be coterminous with the term of the board:

Provided that the board may fill a casual vacancy on the board by nomination out of the same class of members in respect of which the casual vacancy has arisen, if the term of office of the board is less than half of its original term.

(ஊ) ''பதிவாளர்'' என்பது, பன்–மாநிலக் கூட்டுறவுச் சங்கங்கள் பொறுத்து மைய அரசால் அமர்த்தப்பெற்ற மையப் பதிவாளர் என்றும் மற்றும் கூட்டுறவுச் சங்கங்கள் தொடர்பாக ஒரு மாநிலத்தின் சட்டமன்றத்தினால் இயற்றப்பட்ட சட்டத்தின்படி மாநில அரசால் அமர்த்தப்பெற்ற கூட்டுறவுச் சங்கங்களுக்கான பதிவாளர் என்றும் பொருள்படும்;

(எ) ''மாநிலச் சட்டம்'' என்பது, மாநிலம் ஒன்றின் சட்டமன்றத்தினால் இயற்றப்பட்ட சட்டம் எதுவும் என்று பொருள்படும்;

(ஏ) ''மாநில நிலையிலான கூட்டுறவுச் சங்கம்'' என்பது, மாநிலம் முழுவதையும் அளாவி நிற்கும் அதன் செயற்பாட்டு எல்லையைக் கொண்டதும் மற்றும் ஒரு மாநிலச் சட்டமன்றத்தினால் இயற்றப்பட்ட சட்டம் எதிலும் அவ்வாறாக வரையறை செய்யப்பட்டதுமான ஒரு கூட்டுறவுச் சங்கம் என்று பொருள்படும்.

**243(வ)(ஐ) . கூட்டுறவுச் சங்கங்களைக் கூட்டுருமமாகப் பதிவுசெய்தல் :**

இந்தப் பகுதியின் வகையங்களுக்கு உட்பட்டு, கூட்டுறவுச் சங்கங்களை, தன்விருப்ப உருவாக்கம், மக்களாட்சிமுறை உறுப்பினர் கட்டாள்கை, உறுப்பினர் பொருளாதார பங்களிப்பு மற்றும் தன்னாட்சி இயக்கம் ஆகிய கோட்பாடுகளின் அடிப்படையில் கூட்டுருமமாகப் பதிவு செய்தல், முறைப்படுத்துதல் மற்றும் முடிவுறுத்துதல் பொறுத்து, ஒரு மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், வகையங்களைச் செய்யலாம்.

**243 (வ)(ஒ). குழுமத்தின் உறுப்பினர்கள், மற்றும் அதன் அலுவலகப் பொறுப்பாளர்கள் ஆகியோரின் எண்ணிக்கையும் காலமுறையும் :**

**(1)** குழுமமானது, மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், வகைசெய்யப்படலாகும் அத்தகைய எண்ணிக்கையில் இயக்குநர்களைக் கொண்டிருத்தல் வேண்டும்:

**வரம்புரையாக :** கூட்டுறவுச் சங்கம் ஒன்றின் இயக்குநர்களின் மேல்வரை எண்ணிக்கை, இருபத்தொன்றுக்கு மேற்படுதல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக :** தனிநபர்களை உறுப்பினர்களாகக் கொண்டதும் பட்டியலில்கண்ட சாதியினர் மற்றும் பட்டியலில்கண்ட பழங்குடியினர் மற்றும் பெண்கள் ஆகிய பிரிவினர் அல்லது வகையினரிடமிருந்து உறுப்பினர்களைக் கொண்டதுமான கூட்டுறவுச் சங்கம் ஒவ்வொன்றின் குழுமத்திற்கும் பட்டியலில்கண்ட சாதியினர் அல்லது பட்டியலில்கண்ட பழங்குடியினருக்காக ஓர் இடமும் பெண்களுக்காக இரண்டு இடங்களும் ஒதுக்கீடு செய்வதற்காக மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால் வகை செய்தல் வேண்டும்.

**(2)** குழுமத்தின் தேர்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்கள் மற்றும் அதன் அலுவலகப் பொறுப்பாளர்கள் ஆகியோரின் பதவிக்காலம், தேர்ந்தெடுத்த தேதியிலிருந்து ஐந்து ஆண்டுகள் ஆகும் மற்றும் அலுவலகப் பொறுப்பாளர்களின் பதவிக்காலம் குழுமத்தின் காலத்தோடு தொடர்ச்சிபெற்றிருத்தல் வேண்டும்:

**வரம்புரையாக :** குழுமத்திற்கான பதவிக்காலம் அதன் முதன்முதல் காலவரையில் பாதிக்குக் குறைவாக இருக்குமானால், குழுமத்தின் இடையெழும் காலியிடம் ஒன்றை, அந்த இடையெழும் காலியிடம் எந்த வகை உறுப்பினர்கள் பொறுத்து எழுந்ததோ அதே வகை உறுப்பினர்களிலிருந்து நியமனம் மூலமாகக் குழுமம் நிரப்பலாம்.

(3) The Legislature of a State shall, by law, make provisions for co-option of persons to be members of the board having experience in the field of banking, management, finance or specialization in any other field relating to the objects and activities undertaken by the co-operative society, as members of the board of such society:

Provided that the number of such co-opted members shall not exceed two in addition to twenty-one directors specified in the first proviso to clause (1):

Provided further that such co-opted members shall not have the right to vote in any election of the co-operative society in their capacity as such member or to be eligible to be elected as office bearers of the board:

Provided also that the functional directors of a co-operative society shall also be the members of the board and such members shall be excluded for the purpose of counting the total number of directors specified in the first proviso to clause (1).

**243ZK. Election of members of board:**

(1) Notwithstanding anything contained in any law made by the Legislature of a State, the election of a board shall be conducted before the expiry of the term of the board so as to ensure that the newly elected members of the board assume office immediately on the expiry of the term of the office of members of the outgoing board.

(2) The superintendence, direction and control of the preparation of electoral rolls for, and the conduct of, all elections to a co-operative society shall vest in such an authority or body, as may be provided by the Legislature of a State, by law:

Provided that the Legislature of a State may, by law, provide for the procedure and guidelines for the conduct of such elections.

**243ZL. Supersession and suspension of board and interim management:**

(1) Notwithstanding anything contained in any law for the time being in force, no board shall be superseded or kept under suspension for a period exceeding six months:

Provided that the board may be superseded or kept under suspension in case —

(i) of its persistent default; or

(ii) of negligence in the performance of its duties; or

(3) வங்கித்தொழில், மேலாண்மை, நிதி தொடர்புடைய களத்தில் பட்டறிவோ அல்லது கூட்டுறவுச் சங்கக் குழுமத்தின் உறுப்பினர்களாக அத்தகைய சங்கத்தால் மேற்கொள்ளப்படும் குறிக்கோள்களுக்கும் நடவடிக்கைகளுக்கும் தொடர்புடைய பிற களம் எதிலும் நிபுணத்துவமோ கொண்டிருக்கும் நபர்களைக் குழுமத்தின் உறுப்பினர்களாக இருப்பதற்கு ஒத்துத் தேர்ந்தெடுப்பதற்காக மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், வகைசெய்தல் வேண்டும்:

**வரம்புரையாக :** அத்தகைய ஒத்துத் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களின் எண்ணிக்கை, (1) ஆம் கூறுக்கான முதலாம் வரம்புரையில் குறித்துரைக்கப்பட்டுள்ள இருபத்தொரு இயக்குநர்களோடும் கூட இரண்டிற்கு மேற்படுதல் ஆகாது :

**மேலும் வரம்புரையாக :** அத்தகைய ஒத்துத் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்கள் அத்தகைய உறுப்பினராக அவர்களுடைய தகுநிலையில் கூட்டுறவுச் சங்கத்தின் தேர்தல் எதிலும் வாக்களிப்பதற்கான உரிமை கொண்டிருத்தலோ அல்லது குழுமத்தின் அலுவலகப் பொறுப்பாளர்களாக தேர்ந்தெடுக்கப்படுவதற்குத் தகுமை கொண்டிருத்தலோ ஆகாது:

**இன்னும் வரம்புரையாக :** கூட்டுறவுச் சங்கம் ஒன்றின் செயல் இயக்குநர்கள், குழுமத்தின் உறுப்பினர்களாகவும் கூட இருப்பர் மற்றும் அத்தகைய உறுப்பினர்கள் (1) ஆம் கூறுக்கான முதலாம் வரம்புரையில் குறித்துரைக்கப்பட்ட இயக்குநர்களின் மொத்த எண்ணிக்கையைக் கணக்கிடும் நோக்கத்திற்காகச் சேர்த்துக் கொள்ளப்படுதல் ஆகாது.

**243(வ)(ஓ) . குழுமத்தின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தல்:**

(1) மாநிலச் சட்டமன்றத்தினால் இயற்றப்பட்ட சட்டம் எதிலும் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், குழுமம் ஒன்றுக்கான தேர்தல், முந்தியக் குழும உறுப்பினர்களின் பதவி கழிவுறுவதையொட்டி குழுமத்தின் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்கள் பதவியேற்பதை உறுதிசெய்யும் வகையில் குழுமத்தின் காலமுறை கழிவுறுவதற்கு முன்பு நடத்தப்படுதல் வேண்டும்.

(2) கூட்டுறவுச் சங்கம் ஒன்றுக்கான தேர்தல்கள் அனைத்திற்கும், வாக்காளர் பட்டியல்களைத் தயாரிப்பதற்கும் மற்றும் அத்தேர்தல்களை நடத்துவதற்குமான கண்காணிப்பும், நெறிப்படுத்துகையும், கட்டாள்கையும், மாநிலச் சட்டமன்றத்தால், சட்டத்தினால் வகைசெய்யப்படலாகும் அத்தகைய அதிகாரஅமைப்பு அல்லது குழுமம் ஒன்றிடம் உற்றமைதல் வேண்டும்:

**வரம்புரையாக :** மாநிலச் சட்டமன்றம், அத்தகைய தேர்தல்களை நடத்துவதற்கான நெறிமுறைக்கும் வழிகாட்டு நெறிகளுக்கும், சட்டத்தினால் வகைசெய்யலாம்.

**243(வ)(ஔ) . குழுமத்தைக் கலைத்துக் கைக்கொள்ளுதலும் தற்காலிகமாக நிறுத்திவைத்தலும் மற்றும் இடைக்கால மேலாண்மையும்:**

(1) அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டம் எதிலும் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், குழுமம் எதுவும் ஆறு மாதங்களுக்கு மேற்படும் காலஅளவு ஒன்றுக்கு கலைத்துக்கைக்கொள்ளப்படுதலோ அல்லது தற்காலிகமாக நிறுத்திவைக்கப்படுதலோ ஆகாது :

**வரம்புரையாக :** குழுமம்,—

(i) அதன் தொடர்ச்சியான தவறுகையின் நேர்வில்; அல்லது

(ii) அதன் கடமைகளைப் புரிவதிலுள்ள அசட்டையின் நேர்வில்; அல்லது

(iii) the board has committed any act prejudicial to the interests of the co-operative society or its members; or

(iv) there is a stalemate in the constitution of functions of the board; or

(v) the authority or body as provided by the Legislature of a State, by law, under clause (2) of article 243ZK, has failed to conduct elections in accordance with the provisions of the State Act:

Provided further that the board of any such co-operative society shall not be superseded or kept under suspension where there is no Government shareholding or loan or financial assistance or any guarantee by the Government:

Provided also that in case of a co-operative society carrying on the business of banking, the provisions of the Banking Regulation Act, 1949 shall also apply:

Provided also that in case of a co-operative society, other than a multi State co-operative society, carrying on the business of banking, the provisions of this clause shall have the effect as if, for the words "six months", the words "one year" had been substituted.

(2) In case of supersession of a board, the administrator appointed to manage the affairs of such co-operative society shall arrange for conduct of elections within the period specified in clause (1) and handover the management to the elected board.

(3) The Legislature of a State may, by may, make provisions for the conditions of service of the administrator.

**243ZM. Audit of accounts of co-operative societies :**

(1) The Legislature of a State may, by law, make provisions with respect to the maintenance of accounts by the co-operative societies and auditing of such accounts at least once in each financial year.

(2) The Legislature of a State shall, by law, lay down the minimum qualifications and experience of auditors and auditing firms that shall be eligible for auditing accounts of the co-operative societies.

(3) Every co-operative society shall cause to be audited by an auditor or auditing firms referred to in clause (2) appointed by the general body of the co-operative society:

(iii) கூட்டுறவுச் சங்கத்தின் அல்லது அதன் உறுப்பினர்களின் நலன்களுக்குக் குந்தகமான செயல் எதுவும் குழுமம் இழைத்திருக்கும் நேர்வில்; அல்லது

(iv) குழுமத்தின் அமைப்பிலோ செயற்பணிகளிலோ இக்கட்டுநிலை இருக்கும் நேர்வில்; அல்லது

(v) 243 (வ)(ஓ) உறுப்பின் (2) ஆம் கூறின்படி, மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், வகை செய்யப்பட்டவாறான அதிகாரஅமைப்பு அல்லது குழுமம், மாநிலச் சட்டத்தின் வகையங்களுக்கிணங்க தேர்தல்களை நடத்துவதற்குத் தவறியிருக்கும் நேர்வில்,

கலைத்துக்கைக்கொள்ளப்படுதலோ அல்லது தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்படுதலோ வேண்டும்:

**மேலும் வரம்புரையாக :** அத்தகைய கூட்டுறவுச் சங்கம் எதனின் குழுமமானது, அரசுப் பங்குடைமையோ பெறுகடனோ அல்லது நிதியுதவியோ அல்லது அரசின் உத்தரவாதம் எதுவுமோ இல்லாதவிடத்து அதன் குழுமமானது, கலைத்துக்கைக்கொள்ளப்படுதலோ அல்லது தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்படுதலோ ஆகாது :

**இன்னும் வரம்புரையாக :** வங்கித் தொழில் அலுவலை நடத்திவரும் கூட்டுறவுச் சங்கம் ஒன்றைப் பொறுத்தவரை, வங்கித்தொழில் முறைப்படுத்துதல் சட்டம், 1949 இன் வகையங்களும் கூட பொருந்துதல் வேண்டும்:

**இன்னும் வரம்புரையாக :** வங்கித்தொழில் அலுவலை நடத்திவரும், ஒரு பன்–மாநிலக் கூட்டுறவுச் சங்கமாக அல்லாத பிற, கூட்டுறவுச் சங்கம் ஒன்றைப் பொறுத்தவரை, இந்தக் கூறின் வகையங்கள், ''ஆறு மாதங்கள்'' என்ற சொற்களுக்குப் பதிலாக, ''ஓர் ஆண்டு'' என்ற சொற்கள், மாற்றாக அமைக்கப்பட்டிருந்தாற் போன்று செல்திறம் பெறுதல் வேண்டும்.

(2) குழுமம் ஒன்றைக் கலைத்துக்கைக்கொள்ளும் நேர்வில், அத்தகைய கூட்டுறவுச் சங்கத்தின் அலுவற்பாடுகளை மேலாண்மை செய்வதற்கு அமர்த்தப்பெறும் நிருவாகி, (1) ஆம் கூறில் குறித்துரைக்கப்பட்டுள்ள காலஅளவிற்குள் தேர்தல்களை நடத்துவதற்கான ஏற்பாட்டினைச் செய்து, தேர்ந்தெடுக்கப்பட்ட குழுமத்திடம் மேலாண்மையை ஒப்படைத்தல் வேண்டும்.

(3) மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், நிருவாகியின் பணிவரைக்கட்டுகளுக்கான வகையங்களைச் செய்யலாம்.

**243 (வ)(க) . கூட்டுறவுச் சங்கங்களின் கணக்குகளைத் தணிக்கைசெய்தல் :**

(1) மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், கூட்டுறவுச் சங்கங்களால் கணக்குகள் வைத்துவரப்படுவதையும் அத்தகைய கணக்குகள் ஒவ்வொரு நிதியாண்டிலேனும் குறைந்தது ஒருமுறையேனும் தணிக்கை செய்யப்படுவதையும் பொறுத்த வகையங்களைச் செய்யலாம்.

(2) மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், கூட்டுறவுச் சங்கங்களின் கணக்குகளைத் தணிக்கை செய்வதற்காகத் தகுமையுடைய தணிக்கையாளர்கள் மற்றும் தணிக்கை செய்யும் நிறுவனங்கள் குறைந்தளவு தகுதிப்பாடுகளையும் பட்டறிவையும் விதித்தல் வேண்டும்.

(3) ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கமும் கூட்டுறவுச் சங்கத்தின் பொதுக்குழுவினால் அமர்த்தப்பெறும் (2) ஆம் கூறில் சுட்டப்பட்டுள்ள தணிக்கையாளர் ஒருவராலோ அல்லது தணிக்கை செய்யும் நிறுவகங்களாலோ தணிக்கை செய்யப்படச் செய்வித்தல் வேண்டும் :

Provided that such auditors or auditing firms shall be appointed from a panel approved by a State Government or an authority authorised by the State Government in this behalf.

(4) The accounts of every co-operative society shall be audited within six months of the close of the financial year to which such accounts relate.

(5) The audit report of the accounts of an apex co-operative society, as may be defined by the State Act, shall be laid before the State Legislature in the manner, as may be provided by the State Legislature, by law.

**243ZN. Convening of general body meetings:**

The Legislature of a State may, by law, make provisions that the annual general body meeting of every co-operative society shall be convened within a period of six months of close of the financial year to transact the business as may be provided in such law.

**243ZO. Right of a member to get information :**

(1) The Legislature of a State may, by law, provide for access to every member of a co-operative society to the books, information and accounts of the co-operative society kept in regular transaction of its business with such members.

(2) The Legislature of a State may, by law, make provisions to ensure the participation of members in the management of the co-operative society providing minimum requirement of attending meetings by the members and utilising the minimum level of services as may be provided in such law.

(3) The Legislature of a State may, by law, provide for co-operative education and training for its members.

**243ZP. Returns :**

Every co-operative society shall file returns, withing six months of the close of every financial year, to the authority designated by the State Government including the following matters, namely: —

(a) annual report of its activities;

(b) its audited statement of accounts;

**வரம்புரையாக** : அத்தகைய தணிக்கையாளர்கள் அல்லது தணிக்கை செய்யும் நிறுவகங்கள் மாநில அரசாலோ அல்லது மாநில அரசால் இதற்கென அதிகாரமளிக்கப்பெற்ற ஓர் அதிகார அமைப்பினாலோ ஒப்பேற்பளிக்கப்பட்டப் பெயர்ப்பட்டியல் ஒன்றிலிருந்து அமர்த்தப்பெறுதல் வேண்டும்.

(4) கூட்டுறவுச் சங்கம் ஒவ்வொன்றின் கணக்குகளும் அத்தகைய கணக்குகள் எந்த நிதியாண்டிற்குத் தொடர்புடையதோ அந்த நிதியாண்டு முடிவுற்றதிலிருந்து ஆறு மாதங்களுக்குள் தணிக்கை செய்யப்படுதல் வேண்டும்.

(5) மாநிலச் சட்டத்தினால் பொருள்வரையறை செய்யப்படலாகும் தலைமைக் கூட்டுறவுச் சங்கம் ஒன்றின் கணக்குகளின் தணிக்கை அறிக்கையானது மாநிலச் சட்டமன்றத்தால், சட்டத்தினால் வகைசெய்யப்படலாகும் முறையில் மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்கப்படுதல் வேண்டும்.

**243(வ)(ங). பொதுக்குழுக் கூட்டங்களைக் கூட்டுதல்:**

மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கத்தின் ஆண்டுப் பொதுக்குழுக் கூட்டமும், அத்தகைய சட்டத்தினால் வகைசெய்யப்படலாகும் அலுவலை நடத்துவதற்காக, நிதியாண்டு முடிவுற்றதிலிருந்து ஆறுமாதக் காலஅளவு ஒன்றுக்குள் கூட்டப்படுதல் வேண்டும் என்று வகைசெய்யலாம்.

**243(வ)(ச). தகவல் பெறுவதற்கு ஓர் உறுப்பினருக்கான உரிமை:**

(1) மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், கூட்டுறவுச் சங்கம் ஒன்றின் உறுப்பினர் ஒவ்வொருவருக்கும், அத்தகைய உறுப்பினருடனான கூட்டுறவுச் சங்கத்தின் வழக்கமான அலுவல் நடவடிக்கை தொடர்பாக வைத்துவரப்படும் அதன் புத்தகங்கள், தகவல் மற்றும் கணக்குகள் ஆகியவற்றை அணுகி அறிந்துகொள்ளும் வாய்ப்பிற்கு வகைசெய்யலாம்.

(2) மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், அத்தகைய சட்டத்தில் வகைசெய்யப்படலாகிறவாறு, உறுப்பினர்கள், கூட்டுறவுச் சங்கக் கூட்டங்களில் வருகைதருவதற்காக குறைந்த அளவேனும் வகைசெய்தும் குறைந்த அளவேனும் பணிகளைப் பயன்படுத்துவதற்கும், கூட்டுறவுச் சங்கத்தின் மேலாண்மையில் உறுப்பினர்கள் பங்கு பெறுவதை உறுதிசெய்வதற்கான வகையங்களைச் செய்யலாம்.

(3) மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால், அதன் உறுப்பினர்களுக்குக் கூட்டுறவுக் கல்விக்கும் பயிற்சிக்கும் வகைசெய்யலாம்.

**243(வ)(ஞ). விவர அறிக்கைகள்:**

ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கமும், ஒவ்வொரு நிதியாண்டு முடிவுற்றதிலிருந்து ஆறு மாதங்களுக்குள், மாநில அரசால் பெயர்க்குறித்தமர்த்தப்படும் அதிகார அமைப்பிற்குப் பின்வரும் பொருட்பாடுகள் உள்ளடங்கலான விவர அறிக்கைகளை முன்னிடுதல் வேண்டும், அவையாவன:–

(அ) அதன் நடவடிக்கைகள் பற்றிய ஆண்டறிக்கை;

(ஆ) தணிக்கை செய்யப்பட்ட அதன் கணக்குகள் குறித்த அறிக்கை;

(c) plan for surplus disposal as approved by the general body of the co-operative society;

(d) list of amendments to the bye-laws of the co-operative society, if any;

(e) declaration regarding date of holding of its general body meeting and conduct of elections when due; and

(f) any other information required by the Registrar in pursuance of any of the provisions of the State Act.

**243ZQ. Offences and penalties:**

(1) The legislature of a State may, by law, make provisions for the offences relating to the co-operative societies and penalties for such offences.

(2) A law made by the Legislature of a State under clause (1) shall include the commission of the following act or omission as offence, namely:-

(a) a co-operative society of an officer or member thereof wilfully makes a false return or furnishes false information, or any person wilfully not furnishes any information required from him by a person authorised in this behalf under the provisions of the State Act;

(b) any person wilfully or without any reasonable excuse disobeys any summons, requisition or lawful written order issued under the provisions of the State Act;

(c) any employer who, without sufficient cause, fails to pay to a co-operative society amount deducted by him from its employee within a period of fourteen days from the date on which such deduction is made;

(d) any officer or custodian who wilfully fails to handover custody of books, accounts, documents, records, cash, security and other property belonging to a co-operatie society of which he is an officer or custodian, to an authorised person; and

(e) whoever, before, during or after the election of members of the board or office bearers, adopts any corrupt practice.

(இ) கூட்டுறவுச் சங்கத்தின் பொதுக்குழுவினால் ஒப்பேற்பளிக்கப்பட்டவாறான உபரிப் பங்கீட்டிற்கான திட்டம்;

(ஈ) கூட்டுறவுச் சங்கத்தின் துணைவிதிகளுக்கான திருத்தங்கள் ஏதேனுமிருப்பின் அதன் பட்டியல்;

(உ) அதன் பொதுக்குழுக்கூட்டத்தை நடத்துவதற்கான தேதி மற்றும் குறிக்கப்பட்ட காலத்தின்போது தேர்தல்களை நடத்துதல் தொடர்பான விளம்புகை; மற்றும்

(ஊ) மாநிலச் சட்டத்தின் வகையங்களில் எதற்கும் இணங்க பதிவாளரால் வேண்டுறுத்தப்படும் பிற தகவல் எதுவும்.

**243 (வ)(ட) . குற்றச்செயல்களும் தண்டனைகளும் :**

(1) மாநிலச் சட்டமன்றம், சட்டத்தினால் கூட்டுறவுச் சங்கங்கள் தொடர்பான குற்றச் செயல்கள் குறித்தும், அத்தகைய குற்றச்செயல்களுக்கான தண்டனைகள் குறித்தும் வகையங்களைச் செய்யலாம்.

(2). (1) ஆம் கூறின்படி மாநிலச் சட்டமன்றத்தினால் இயற்றப்படும் சட்டம் ஒன்று பின்வரும் செயலைச் செய்வதை அல்லது செய்யாதுவிடுகையை இழைப்பதானது குற்றச்செயல்களாக உள்ளடக்கும், அவையாவன:—

(அ) கூட்டுறவுச் சங்கம் ஒன்றோ அல்லது அதன் அலுவலர் அல்லது உறுப்பினர் ஒருவரோ வேண்டுமென்றே பொய்யான விவர அறிக்கையொன்றை அளித்தல் அல்லது பொய்யான தகவலை அளித்தல், அல்லது மாநிலச் சட்டத்தின் வகையங்களின்படி இதற்கென அதிகாரமளிக்கப்பெற்ற நபர் ஒருவரால், அவரிடமிருந்து வேண்டுறுத்தப்படும் தகவல் எதனையும், அவர் வேண்டுமென்றே அளிக்காதிருத்தல்;

(ஆ) மாநிலச் சட்டத்தின் வகையங்களின்படி வழங்கப்படும் அழைப்பாணை, கோரிக்கைக் கட்டளை அல்லது சட்டமுறை எழுத்துவழி ஆணை எதற்கும், எவரும் வேண்டுமென்றோ அல்லது தகுமான காரணம் எதுவுமின்றியோ கீழ்ப்படியாதிருத்தல்;

(இ) வேலைக்கு அமர்த்தியவர் எவரும் அவர், போதிய காரணமின்றி, கூட்டுறவுச் சங்கம் ஒன்றின் பணியாளரிடமிருந்து பிடித்தம் செய்யப்பட்ட தொகையினை அத்தகைய பிடித்தம் எந்தத் தேதியன்று செய்யப்படுகிறதோ அந்தத் தேதியிலிருந்து பதினான்கு நாட்கள் காலஅளவு ஒன்றுக்குள் அக்கூட்டுறவுச் சங்கத்திற்குச் செலுத்தத் தவறுதல்;

(ஈ) ஒரு கூட்டுறவுச் சங்கத்தின், ஓர் அலுவலராகவோ அல்லது பொறுப்பாளராகவோ இருக்கிற அலுவலர் அல்லது பொறுப்பாளர் எவரும், அக்கூட்டுறவுச் சங்கத்திற்குச் சொந்தமான புத்தகங்கள், கணக்குகள், ஆவணங்கள், பதிவணங்கள், பணம், காப்புறுதி மற்றும் பிற சொத்து ஆகியவற்றின் கையடைவினை, அதிகாரமளிக்கப்பெற்ற நபர் ஒருவரிடம் வேண்டுமென்றே ஒப்படைக்கத் தவறுதல்; மற்றும்

(உ) எவராகிலும், குழு உறுப்பினர்களுக்கான அல்லது அலுவலகப் பொறுப்பாளர்களுக்கான தேர்தல் நடைபெறுவதற்கு முன்போ, நடைபெறும் போதோ அதன் பின்போ ஊழல் நடவடிக்கை எதுவும் மேற்கொள்ளுதல்.

**243ZR. Application to multi- State Co-operative societies:**

The provisions of this Part shall apply to the multi-State co-operative societies subject to the modification that any reference to "Legislature of a State", "State Act" or "State Government" shall be construed as a reference to "Parliament", "Central Act" or "the Central Government" respectively.

**243ZS. Application to Union territories:**

The provisions of this Part shall apply to the Union territories and shall, in their application to a Union territory, having no Legislative Assembly as if the reference to the Legislature of a State were a reference to the administrator thereof appointed under article 239 and, in relation to a Union territory having a Legislative Assembly, to that Legislative Assembly:

Provided that the President may, by notification in the Official Gazette, direct that the provisions of this Part shall not apply to any Union territory or part thereof as he may specify in the notification.

**243ZT. Continuance of existing laws:**

Notwithstanding anything in this Part, any provision of any law relating to co-operative societies in force in a State immediately before the commencement of the Constitution (Ninety - seventh Amendment) Act, 2011 which is inconsistent with the provisions of this Part, shall continue to be in force until amended or repealed by a competent Legislature or other competent authority or until the expiration of one year from such commencement, whichever is less.]

## PART X

## THE SCHEDULED AND TRIBAL AREAS

**244. Administration of Scheduled Areas and Tribal Areas :**

(1) The provisions of the Fifth Schedule shall apply to the administration and control of the Scheduled Areas and Scheduled Tribes in any State[1]*** other than [2][the States of Assam, [3][ [4][Meghalaya, Tripura and Mizoram.]]]

(2) The provisions of the Sixth Schedule shall apply to the administration of the tribal areas [2][in the States of Assam, [5][, [6][Meghalaya, Tripura and Mizoram]]].

---

1. The words and letters "specified in Part A and Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. Subs. by the North Eastern Areas (Reorganisation) Act,1971 (81 of 1971), s. 71, for "the State of Assam" (w.e.f. 21-1-1972).

3. Subs. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 2 for "and Meghalaya" (w.e.f. 1-4-1985).

4. Subs. by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 39, for "Meghalaya and Tripura" (w.e.f. 20-2-1987).

5. Subs. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 2, for "and Meghalaya" (w.e.f. 1-4-1985).

6. Subs. by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 39, for "Meghalaya and Tripura and the Union territory of Mizoram" (w.e.f. 20-2-1987).

**243 (வ)(ண) . பன்– மாநிலக் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பொருந்துதல் :**

இந்தப் பகுதியின் வகையங்கள், ''மாநிலச் சட்டமன்றம்'', ''மாநிலச் சட்டம்'' அல்லது ''மாநில அரசு'' என்பதற்கான சுட்டுகை எதுவும், முறையே, ''நாடாளுமன்றம்'', ''மையச் சட்டம்'' அல்லது ''மைய அரசு'' என்பதற்கான ஒரு சுட்டுகையாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும் என்ற மாற்றமைவிற்கு உட்பட்டு பன் – மாநிலக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு பொருந்துதல் வேண்டும்.

**243 (வ)(த) . ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளுக்குப் பொருந்துதல் :**

இந்தப் பகுதியின் வகையங்கள், ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளுக்குப் பொருந்துதல் வேண்டும்; மற்றும் சட்டமன்றப் பேரவையைக் கொண்டிராத ஓர் ஒன்றியத்து ஆட்சிநிலவரைக்குப் பொருந்தச் செய்கையில் ஒரு மாநிலச் சட்டமன்றம் என்பதற்கான சுட்டுகைகள், 239 ஆம் உறுப்பின்படி அமர்த்தப்பட்ட அதன் ஆளுகையர் என்பதற்கான சுட்டுகை போன்றும், சட்டமன்றப் பேரவையைக் கொண்டிருக்கிற ஒன்றியத்து ஆட்சிநிலவரையைப் பொறுத்தவரை, அந்தச் சட்டமன்றப் பேரவை என்பதற்கான சுட்டுகை போன்றும் பொருந்துதல் வேண்டும்:

வரம்புரையாக : குடியரசுத்தலைவர், அதிகாரமுறை அரசிதழில் அறிவிக்கை வாயிலாக, அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கலாகும் ஒன்றியத்து ஆட்சிநிலவரை எதற்கும் அல்லது அதன் பகுதிக்கு இந்தப்பகுதியின் வகையங்கள் பொருந்துதல் ஆகாது என்று பணிக்கலாம்.

**243 (வ)(ந) . நிலவுறும் சட்டங்கள் தொடர்ந்திருத்தல் :**

இந்தப் பகுதியில் எது எவ்வாறிருப்பினும், இந்தப் பகுதியின் வகையங்களுக்கு முரணாக இருக்கும் அரசமைப்புச் (தொண்ணூற்று ஏழாம் திருத்தம்) சட்டம், 2011 இன் தொடக்கநிலைக்கு முன் தேதியில் இருந்து ஒரு மாநிலத்தில் செல்லாற்றலிலுள்ள கூட்டுறவுச் சங்கங்கள் தொடர்பான சட்டம் எதனின் வகையம் எதுவும் ஒரு தகுதிறமுள்ள சட்டமன்றத்தினால் அல்லது பிற அதிகாரஅமைப்பினால் திருத்தமோ அல்லது நீக்கறவோ செய்யப்படும் வரையில் அல்லது அத்தகைய தொடக்கநிலையிலிருந்து ஓர் ஆண்டு கழிவுறும் வரையில், இவற்றில் எது குறைவோ அது வரையில், தொடர்ந்து செல்லாற்றலில் இருத்தல் வேண்டும்.]

## பகுதி X

## பட்டியல் வரையிடங்களும் பழங்குடியினர் வரையிடங்களும்

**244. பட்டியல் வரையிடங்கள், பழங்குடியினர் வரையிடங்கள் ஆகியவற்றின் நிருவாகம் :**

(1) ஐந்தாம் இணைப்புப்பட்டியலின் வகையங்கள், [2][அசாம், [3][[4][மேகாலயா, திரிபுரா, மிசோரம்]]] ஆகிய மாநிலங்கள் அல்லாத[1]*** பிற மாநிலங்களிலுள்ள பட்டியல் வரையிடங்களுக்கும் பட்டியல் பழங்குடியினருக்குமான நிருவாகத்திற்கும் கட்டாள்கைக்கும் பொருந்துதல் வேண்டும்.

(2) ஆறாம் இணைப்புப்பட்டியலின் வகையங்கள், [2][அசாம், [5][[6][மேகாலயா, திரிபுரா, மிசோரம்]]] ஆகிய மாநிலங்களிலுள்ள பழங்குடியினர் வரையிடங்களுக்கான நிருவாகத்திற்குப் பொருந்துதல் வேண்டும்.

---

1. ''முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) மற்றும் பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட'' என்ற சொற்கள் மற்றும் எழுத்துகள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

2. ''அசாம் மாநிலம்'' என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 ஆம் பிரிவினால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. ''மற்றும் மேகாலயா'' என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 2 ஆம் பிரிவினால் (1–4–1985 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

4. ''மேகாலயா மற்றும் திரிபுரா'' என்பதற்கு, மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 39 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

5. ''மற்றும் மேகாலயா'' என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 2 ஆம் பிரிவினால் (1–4–1985 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

6. ''மேகாலயா மற்றும் திரிபுரா மற்றும் மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரை'' என்பதற்கு, மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 39 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

[1][244A. **Formation of an autonomous State comprising certain tribal areas in Assam and creation of local Legislature or Council of Ministers or both therefor:**

(1) Notwithstanding anything in this Constitution, Parliament may, by law, form within the State of Assam an autonomous State comprising (whether wholly or in part) all or any of the tribal areas specified in [2][Part I] of the table appended to paragraph 20 of the Sixth Schedule and create there for—

(a) a body, whether elected or partly nominated and partly elected, to function as a Legislature for the autonomous State, or

(b) a Council of Ministers,

or both with such Constitution, powers and functions, in each case, as may be specified in the law.

(2) Any such law as is referred to in clause (1) may, in particular,—

(a) specify the matters enumerated in the State List or the Concurrent List with respect to which the Legislature of the autonomous State shall have power to make laws for the whole or any part thereof, whether to the exclusion of the Legislature of the State of Assam or otherwise;

(b) define the matters with respect to which the executive power of the autonomous State shall extend;

(c) provide that any tax levied by the State of Assam shall be assigned to the autonomous State in so far as the proceeds thereof are attributable to the autonomous State;

(d) provide that any reference to a State in any article of this Constitution shall be construed as including a reference to the autonomous State; and

(e) make such supplemental, incidental and consequential provisions as may be deemed necessary.

---

1. Ins. by the Constitution (Twenty-second Amendment) Act, 1969, s. 2 (w.e.f. 25-9-1969).

2. Subs. by the North Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71, for "Part A" (w.e.f. 21-1-1972).

[1][244 (அ). அசாமிலுள்ள குறித்தசில பழங்குடியினர் வரையிடங்களை உள்ளடக்கிய தன்னாட்சிக் குறுநிலத்தை அமைத்தலும் அவ்விடங்களுக்கென உள்ளாட்சி சட்டமன்றத்தை அல்லது அமைச்சரவையை அல்லது இரண்டையும் உருவாக்குதலும்:

(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், ஆறாம் இணைப்புப்பட்டியலின் 20 ஆம் பத்திக்குப் பிற்சேர்க்கையாகவுள்ள அட்டவணையின் [2][I ஆம் பகுதியில்] குறித்துரைக்கப்பட்டுள்ள பழங்குடியினர் வரையிடங்கள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் (முழுமையாகவாயினும் பகுதியாகவாயினும்) உள்ளடக்கிய ஒரு தன்னாட்சிக் குறுநிலத்தை அசாம் மாநிலத்திற்குள்ளேயே நாடாளுமன்றம், சட்டத்தினால் அமைக்கலாம்; மேலும், அந்தச் சட்டத்தில் குறித்துரைக்கப்படும் அமைப்பாக்கம், அதிகாரங்கள், பதவிப்பணிகள் ஆகியவற்றுடன்—

(அ) அந்தத் தன்னாட்சிக் குறுநிலத்திற்கான ஒரு சட்டமன்றமாக இயங்குவதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அல்லது ஒரு பகுதி நியமனம் செய்யப்பட்டதாகவும் ஒரு பகுதி தேர்ந்தெடுக்கப்பட்டதாகவும் உள்ள ஒரு குழுமத்தை, அல்லது

(ஆ) ஓர் அமைச்சரவையை

அல்லது அவை இரண்டையும் உருவாக்கலாம்.

(2). (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்டுள்ள சட்டம் எதுவும், குறிப்பாக –

(அ) அசாம் மாநிலச் சட்டமன்ற அதிகாரத்தை நீக்கியோ நீக்காமலோ தன்னாட்சிக் குறுநிலச் சட்டமன்றம், அந்தக் குறுநிலம் முழுமைக்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்தும் வகையில் சட்டம் இயற்றுவதற்கு உரிய பொருட்பாடுகள், மாநிலப் பட்டியலில் அல்லது ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எவை எவை என்று குறித்துரைக்கலாம்;

(ஆ) அந்தத் தன்னாட்சிக் குறுநிலத்தின் ஆட்சி அதிகாரம் அளாவி நிற்க வேண்டிய பொருட்பாடுகள் எவை எவை என்று வரையறுக்கலாம்;

(இ) அசாம் மாநிலத்தால் விதிக்கப்படும் வரி மூலமாக ஈட்டப்படும் தொகையில் அந்தத் தன்னாட்சிக் குறுநிலத்திலிருந்து கிடைத்துள்ள பங்கு எவ்வளவோ அதனை அந்தத் தன்னாட்சிக் குறுநிலத்திற்கே குறித்தளித்தல் வேண்டும் என்று வகைசெய்யலாம்;

(ஈ) இந்த அரசமைப்பின் உறுப்பு எதிலும், ஒரு மாநிலம் என்று குறிப்பிடப்படுவது அந்தத் தன்னாட்சிக் குறுநிலத்தையும் உள்ளடக்குவதாகப் பொருள்கொள்ளுதல் வேண்டும் என்று வகை செய்யலாம்; மேலும்

(உ) தேவையெனக் கருதப்படும் துணைவறு, சார்வறு மற்றும் விளைவறு வகையங்களைச் செய்யலாம்.

---

1. அரசமைப்புச் (இருபத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1969 இன் 2 ஆம் பிரிவினால் (25–9–1969 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. "பகுதி (அ) இல்" என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 ஆம் பிரிவினால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(3) An amendment of any such law as aforesaid in so far as such amendment relates to any of the matters specified in sub-clause *(a)* or sub-clause *(b)* of clause (2) shall have no effect unless the amendment is passed in each House of Parliament by not less than two-thirds of the members present and voting.

(4) Any such law as is referred to in this article shall not be deemed to be an amendment of this Constitution for the purposes of article 368 notwithstanding that it contains any provision which amends or has the effect of amending this Constitution.]

# PART XI

# RELATIONS BETWEEN THE UNION AND THE STATES

## CHAPTER I

## LEGISLATIVE RELATIONS

*Distribution of legislative powers*

**245. Extent of laws made by Parliament and by the Legislatures of State:**

(1) Subject to the provisions of this Constitution, Parliament may make laws for the whole or any part of the territory of India, and the Legislature of a State may make laws for the whole or any part of the State.

(2) No law made by Parliament shall be deemed to be invalid on the ground that it would have extra-territorial operation.

**246. Subject-matter of laws made by Parliament and by the Legislatures of States:**

(1) Notwithstanding anything in clauses (2) and (3), Parliament has exclusive power to make laws with respect to any of the matters enumerated in List I in the Seventh Schedule (in this Constitution referred to as the "Union List").

(2) Notwithstanding anything in clause (3), Parliament, and, subject to clause (1), the Legislature of any State [1]*** also, have power to make Laws with respect to any of the matters enumerated in List III in the Seventh Schedule (in this Constitution referred to as the "Concurrent List").

(3) Subject to clauses (1) and (2), the Legislature of any State has exclusive power to make laws for such State or any part thereof with respect to any of the matters enumerated in List II in the Seventh Schedule (in this Constitution referred to as the "State List").

1. The words and letters "specified in Part A and Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

(3). (2) ஆம் கூறின் (அ) உட்கூறில் அல்லது (ஆ) உட்கூறில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதற்கும் தொடர்புடைய திருத்தம் எதுவும் மேற்சொன்ன சட்டத்தில் செய்யப்படுமாயின், அந்தத் திருத்தம், நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றிலும் வந்திருந்து வாக்களிக்கும் அதன் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினருக்குக் குறையாதவர்களால் நிறைவேற்றப்பட்டாலன்றி, செல்திறம் உடையது ஆகாது.

(4) இந்த உறுப்பில் குறிப்பிடப்பட்ட சட்டம் ஒன்றில், இந்த அரசமைப்பைத் திருத்துகிற அல்லது திருத்தும் விளைவை ஏற்படுத்துகிற வகையம் எதுவும் அடங்கியிருந்தபோதிலும், அந்தச் சட்டம் 368 ஆம் உறுப்பைப் பொறுத்தவரை இந்த அரசமைப்பின் திருத்தம் எனக் கொள்ளப்படுதல் ஆகாது.]

## பகுதி XI

## ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் உள்ள தொடர்புநிலைகள்

### அத்தியாயம் I

### சட்டமியற்றுத் தொடர்புநிலைகள்

*சட்டமியற்று அதிகாரப் பகிர்வு*

**245. நாடாளுமன்றத்தாலும், மாநிலங்களின் சட்டமன்றங்களாலும் இயற்றப்படும் சட்டங்களின் அளாவுகை:**

(1) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, நாடாளுமன்றம், இந்திய ஆட்சிநிலவரை முழுவதற்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் சட்டங்கள் இயற்றலாம்; ஒரு மாநிலச் சட்டமன்றம், அந்த மாநிலம் முழுவதற்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் சட்டங்கள் இயற்றலாம்.

(2) நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டம் எதனையும், அது ஆட்சிநிலவரைக்குப் புறத்தேயும் செயற்பாடு உடையது என்னும் காரணத்தால், செல்லாநிலையது எனக் கொள்ளுதல் ஆகாது.

**246. நாடாளுமன்றத்தாலும், மாநிலங்களின் சட்டமன்றங்களாலும் இயற்றப்படும் சட்டங்களின் உறுபொருள்:**

(1). (2), (3) ஆகிய கூறுகளில் எது எவ்வாறிருப்பினும், ஏழாம் இணைப்புப்பட்டியலிலுள்ள (இந்த அரசமைப்பில் "ஒன்றியத்துப் பட்டியல்" எனக் குறிப்பிடப்படும்) I ஆம் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும் சட்டங்கள் இயற்றுவதற்கு, நாடாளுமன்றமே தனிநிலை அதிகாரம் உடையது ஆகும்.

(2). (3) ஆம் கூறில் எது எவ்வாறிருப்பினும், ஏழாம் இணைப்புப்பட்டியலிலுள்ள (இந்த அரசமைப்பில் "ஒருங்கியல் பட்டியல்" எனக் குறிப்பிடப்படும்) III ஆம் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும் சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றமும், (1) ஆம் கூறுக்கு உட்பட்டு மாநிலம் ஒன்றின்[1]*** சட்டமன்றமும், அதிகாரம் உடையன ஆகும்.

(3). (1), (2) ஆகிய கூறுகளுக்கு உட்பட்டு, ஏழாம் இணைப்புப்பட்டிலிலுள்ள (இந்த அரசமைப்பில் "மாநிலத்துப் பட்டியல்" எனக் குறிப்பிடப்படும்) II ஆம் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும் மாநிலம் ஒன்றின் சட்டமன்றமே, அந்த மாநிலத்திற்கு அல்லது அதன் பகுதி எதற்கும் சட்டங்கள் இயற்றுவதற்குத் தனிநிலை அதிகாரம் உடையது ஆகும்.

---

1."முதலாம் இணைப்புப்படியலின் பகுதி (அ) மற்றும் பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள் மற்றும் எழுத்துக்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

(4) Parliament has power to make laws with respect to any matter for any part of the territory of India not included [1][in a State] notwithstanding that such matter is; matter enumerated in the State List.

[2][**246 A. Special provision with respect to goods and services tax:**

(1) Notwithstanding anything contained in articles 246 and 254, Parliament, and, subject to clause (2), the Legislature of every State, have power to make laws with respect to goods and services tax imposed by the Union or by such State.

(2) Parliament has exclusive power to make laws with respect to goods and services tax where the supply of goods, or of services, or both takes place in the course of inter-State trade or commerce.

**Explanation**.- The provisions of this article, shall, in respect of goods and services tax referred to in clause (5) of article 279A, take effect from the date recommended by the Goods and Services Tax Council.]

**247. Power of Parliament to provide for the establishment of certain additional courts:**

Notwithstanding anything in this Chapter, Parliament may, by law, provide for the establishment of any additional courts for the better administration of laws made by Parliament or of any existing law with respect to a matter enumerated in the Union List.

**248. Residuary powers of Legislation:**

(1) . [3][Subject to article 246A, Parliament] has exclusive power to make any law with respect to any matter not enumerated in the Concurrent List or State List.

(2) Such power shall include the power of making any law imposing a tax not mentioned in either of those Lists.

---

1.Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956 for "in Part A or Part B of the First Schedule".

2.Ins. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 2 (w.e.f. 16-9-2016).

3. Subs. by s. 3, *ibid.*, for the word "Parliament".

(4) [1][மாநிலம் எதிலும்] உள்ளடங்கியிராத இந்திய ஆட்சிநிலவரையின் பகுதி எதற்கும், எந்தவொரு பொருட்பாட்டினைப் பொறுத்தும், அந்தப் பொருட்பாடு மாநிலத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ளதாக இருப்பதாயினும் கூட, சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

**[2][ 246(அ) . சரக்குகள் மற்றும் சேவை வரியைப் பொருத்துத் தனியுறு வகையம்:**

(1) 246 மற்றும் 254 ஆகிய உறுப்புகளில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், ஒன்றியத்தாலோ மாநிலத்தாலோ விதிக்கப்படும் சரக்குகள் மற்றும் சேவைவரியைப் பொறுத்து சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றமும், (2) ஆம் கூறுக்கு உட்பட்டு ஒவ்வொரு மாநிலச் சட்டமன்றமும், அதிகாரம் உடையன ஆகும்.

(2) சரக்குகள் அல்லது சேவை, அல்லது அவை இரண்டின் வழங்கீடானது மாநிலங்களிடையேயான வணிகத்தின் அல்லது வாணிபத்தின் போது நிகழ்கிறவிடத்து சரக்குகள் மற்றும் சேவை வரியைப் பொறுத்துச் சட்டங்கள் இயற்றுவதற்கு, நாடாளுமன்றமே தனிநிலை அதிகாரம் உடையது ஆகும்.

**விளக்கம்.–** 279 (அ) உறுப்பின் (5) ஆம் கூறில் சுட்டப்பட்ட சரக்குகள் மற்றும் சேவை வரி பொறுத்து, இந்த உறுப்பின் வகையங்கள், சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றத்தால் பரிந்துரை செய்யப்படும் தேதியிலிருந்து செல்திறம் பெறும்.]

**247. குறித்தசில கூடுதல் நீதிமன்றங்களை நிறுவ வகை செய்வதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம் :**

இந்த அத்தியாயத்தில் எது எவ்வாறிருப்பினும், ஒன்றியத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள ஒரு பொருட்பாடு பொறுத்து நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டங்களை அல்லது நிலவுறும் சட்டங்களை மேலும் திறம்படச் செயற்படுத்துவதற்காகக் கூடுதல் நீதிமன்றங்களை நிறுவுவதற்கு நாடாளுமன்றம், சட்டத்தினால் வகைசெய்யலாம்.

**248. சட்டமியற்றுவதற்கான எஞ்சிய அதிகாரங்கள் :**

(1) ஒருங்கியல் பட்டியலிலும், மாநிலத்துப் பட்டியலிலும் எண்ணிடப்பட்டிராத பொருட்பாடு எதனைப் பொறுத்தும் சட்டமியற்றுவதற்கு [3][246 (அ) உறுப்பிற்கு உட்பட்டு, நாடாளுமன்றமே] தனிநிலை அதிகாரம் உடையது ஆகும்.

(2) அத்தகைய அதிகாரத்தில், அந்த இரண்டு பட்டியல்களிலும் குறிப்பிடப்பட்டிராத வரி எதனையும் விதிக்கும் சட்டம் இயற்றுவதற்கான அதிகாரமும் அடங்கும்.

---

1. ''முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) மற்றும் பகுதி (ஆ) இல்'' என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 ஆல் மாற்றாக அமைக்கப்பட்டது.

2. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 2 ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

3. ''நாடாளுமன்றம்'' என்ற சொல்லுக்கு, *மேற்படிச் சட்டத்தின்* 3 ஆம் பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டது.

**249. Power of Parliament to legislate with respect to a matter in the State List in the national interest:**

(1) Notwithstanding anything in the foregoing provisions of this Chapter, if the Council of States has declared by resolution supported by not less than two-thirds of the members present and voting that it is necessary or expedient in the national interest that Parliament should make laws with respect to any matter enumerated in the State List specified in the resolution, it shall be lawful for Parliament to make laws for the whole or any part of the territory of India with respect to [1][goods and services tax provided under article 246A or] that matter while the resolution remains in force.

(2) A resolution passed under clause (1) shall remain in force for such period not exceeding one year as may be specified therein:

Provided that, if and so often as a resolution approving the continuance in force of any such resolution is passed in the manner provided in clause (1), such resolution shall continue in force for a further period of one year from the date on which under this clause it would otherwise have ceased to be in force.

(3) A law made by Parliament which Parliament would not but for the passing of a resolution under clause (1) have been competent to make shall, to the extent of the incompetency, cease to have effect on the expiration of a period of six months after the resolution has ceased to be in force, except as respects things done or omitted to be done before the expiration of the said period.

**250. Power of Parliament to legislate with respect to any matter in the State List if a Proclamation of Emergency is in operation:**

(1) Notwithstanding anything in this Chapter, Parliament shall, while a Proclamation of Emergency is in operation, have power to make laws for the whole or any part of the territory of India with respect to [2][goods and services tax provided under article 246A or] any of the matters enumerated in the State List.

(2) A law made by Parliament which Parliament would not but for the issue of a Proclamation of Emergency have been competent to make shall, to the extent of the incompetency, cease to have effect on the expiration of a period of six months after the Proclamation has ceased to operate, except as respects things done or omitted to be done before the expiration of the said period.

---

1.Ins. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 4 (w.e.f. 16-9-2016).

2. Ins. by s. 5, *ibid.*, (w.e.f. 16-9-2016).

**249.** நாட்டின் நலன் கருதி மாநிலத்துப் பட்டியலிலுள்ள பொருட்பாடு எதனைப் பொறுத்தும் சட்டமியற்ற நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம் :

(1) இந்த அத்தியாயத்தின் மேலேகண்ட வகையங்களில் எது எவ்வாறிருப்பினும், மாநிலங்களவை, வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினருக்குக் குறையாதவர்களால் ஆதரிக்கப்படும் ஒரு தீர்மானத்தின் வாயிலாக, மாநிலத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் [1][246 (அ) உறுப்பின் படி வகைசெய்யப்பட்ட சரக்குகள் மற்றும் சேவை வரி அல்லது] எதனையும் குறித்துரைத்து, அதனைப் பொறுத்து நாடாளுமன்றம் சட்டமியற்ற வேண்டியது நாட்டின் நலனுக்கு அவசியமானது அல்லது உகந்தது என்று விளம்புமாயின், அந்தத் தீர்மானம் செல்லாற்றலில் இருந்து வருங்காலத்தில், அந்தப் பொருட்பாடு பொறுத்து இந்திய ஆட்சிநிலவரை முழுமைக்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் நாடாளுமன்றம் சட்டங்கள் இயற்றுவது சட்டமுறையானது ஆகும்.

(2). (1) ஆம் கூறின்படி நிறைவேற்றப்படும் ஒரு தீர்மானம், ஓராண்டிற்கு மேற்படாதவாறு அத்தீர்மானம் குறித்துரைக்கும் காலஅளவிற்குச் செல்லாற்றலில் இருந்துவரும்:

வரம்புரையாக: அத்தகைய தீர்மானம் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவருவதற்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று (1) ஆம் கூறில் வகை செய்யப்பட்ட முறையில் நிறைவேற்றப்படுமாயின், அவ்வாறு நிறைவேற்றப்படுந்தோறும், முந்தைய தீர்மானம் இந்தக் கூறின்படி எந்தத் தேதியில் செல்லாற்றல் அற்றுப்போகுமோ அந்தத் தேதியிலிருந்து மேலும் ஓராண்டுக் காலஅளவிற்கு, தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்.

(3). (1) ஆம் கூறின்படி நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் வாயிலாக மட்டுமே தகுதிறம் பெற்று, அதன்படி நாடாளுமன்றம் இயற்றும் எந்தச் சட்டமும், அத்தீர்மானம் செல்லாற்றல் அற்றுப்போய் ஆறுமாதக் காலஅளவு கழிவுற்றதன்மேல், நாடாளுமன்றம் தகுதிறம் பெற்றிராத அளவிற்குச் செல்திறம் அற்றதாகிவிடும்; ஆனால், அக் காலஅளவு கழிவுறுவதற்கு முன்பு செய்யப்பட்டவை அல்லது செய்யாது விடப்பட்டவை பாதிக்கப்படுவதில்லை.

**250.** நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டில் இருக்குங்கால், மாநிலத்துப் பட்டியலிலுள்ள எந்தப் பொருட்பாட்டினைப் பொறுத்தும் சட்டமியற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம்:

(1) இந்த அத்தியாயத்தில் எது எவ்வாறிருப்பினும், நெருக்கடி நிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டில் இருக்குங்கால், [2][246 (அ) உறுப்பின்படி வகைசெய்யப்பட்ட சரக்குகள் மற்றும் சேவை வரி அல்லது] மாநிலத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும் இந்திய ஆட்சிநிலவரை முழுவதற்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் சட்டமியற்றுவதற்கு நாடாளுமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

(2) நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று பிறப்பிக்கப்பட்டதன் வாயிலாக மட்டுமே தகுதிறம் பெற்று அதன்படி நாடாளுமன்றம் இயற்றும் எந்தச் சட்டமும், அந்தச் சாற்றாணை செயற்பாடு அற்றுப்போய் ஆறுமாதக் காலஅளவு கழிவுறுவதன்மேல், நாடாளுமன்றம் தகுதிறம் பெற்றிராத அளவிற்குச் செல்திறம் அற்றதாகிவிடும்; ஆனால் அக்காலஅளவு கழிவுறுவதற்கு முன்பு செய்யப்பட்டவை அல்லது செய்யாதுவிடப்பட்டவை பாதிக்கப்படுவதில்லை.

---

1. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 4 ஆம் பிரிவினால் (16-9-2016 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. *மேற்படிச் சட்டத்தின்* 5 ஆம் பிரிவினால் (16-9-2016 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**251. நாடாளுமன்றத்தால் 249, 250 ஆகிய உறுப்புகளின்படி இயற்றப்பட்ட சட்டங்களுக்கும், மாநிலச் சட்டமன்றங்களால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கும் இடையே முரண்பாடு :**

249, 250 ஆகிய உறுப்புகளில் உள்ள எதுவும், சட்டம் எதனையும் இயற்றுவதற்கு இந்த அரசமைப்பின்படி ஒரு மாநிலச் சட்டமன்றத்திற்குள்ள அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதில்லை; ஆனால், ஒரு மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட்டம் ஒன்றின் வகையம் எதுவும், மேற்சொன்ன உறுப்புகளில் ஒன்றின்படியுள்ள அதிகாரத்தின்கீழ் நாடாளுமன்றம் இயற்றிய ஒரு சட்டத்தின் வகையம் எதற்கும் முரணாக இருக்குமாயின், நாடாளுமன்றம் இயற்றிய சட்டமே, அது மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட்டத்திற்கு முன்போ பின்போ நிறைவேற்றப்பட்டிருந்தாலும், மேலோங்கி நிற்கும்; மாநிலச் சட்டமன்றம் நிறைவேற்றிய சட்டம், எந்த அளவிற்கு முரணாகவுள்ளதோ அந்த அளவிற்கு, நாடாளுமன்றம் இயற்றிய சட்டம் தொடர்ந்து செல்திறம் பெற்றிருக்கின்ற காலம் வரையில் செயற்பாடு அற்றதாகிவிடும்.[5]

**252. இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களுக்காக அவற்றின் இசைவுடன் சட்டமியற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரமும், அத்தகைய சட்டத்தைப் பிற மாநிலம் எதுவும் ஏற்றுமேற்கொள்ளுதலும்:**

(1) 249, 250 ஆகிய உறுப்புகளில் வகைசெய்யப்பட்டுள்ள முறையில் தவிர, மாநிலங்களுக்காச் சட்டமியற்றுவதற்கு, நாடாளுமன்றம் அதிகாரம் பெற்றிராத பொருட்பாடுகளில் எதனையும், தத்தம் மாநிலங்களில் நாடாளுமன்றம் சட்டத்தினால் ஒழுங்குறுத்துவது விரும்பத்தக்கதென இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களின் சட்டமன்றங்கள் கருதி, அதன்படி அந்த மாநிலங்களின் சட்டமன்ற அவைகள் அனைத்தும் தீர்மானங்களை நிறைவேற்றுமாயின் அதற்கிணங்க, அந்தப் பொருட்பாட்டை அவ்வாறு ஒழுங்குறுத்துவதற்கான சட்டம் ஒன்றை நாடாளுமன்றம் இயற்றுவது சட்டமுறையானது ஆகும்; அவ்வாறு இயற்றப்படும் சட்டம் எதுவும், அத்தகைய மாநிலங்களுக்குப் பொருந்துவதாகும்; மேலும் பின்னர் பிற மாநிலம் எதுவும், அந்த மாநிலச் சட்டமன்ற அவையினால் அல்லது இரண்டு அவைகள் இருக்குமிடத்து, அவ்விரண்டு அவைகளினாலும் நிறைவேற்றப்படும் தீர்மானத்தின்வழி அச்சட்டத்தை ஏற்றுமேற்கொள்ளுமாயின், அச்சட்டம் அந்தப் பிற மாநிலத்திற்கும் பொருந்துவதாகும்.

(2) நாடாளுமன்றத்தால் அவ்வாறு நிறைவேற்றப்படும் சட்டம் எதுவும், அதே போன்ற முறையில் நிறைவேற்றப்படும் அல்லது ஏற்றுமேற்கொள்ளப்படும் நாடாளுமன்றச் சட்டம் ஒன்றினால் திருத்தப்படலாம் அல்லது நீக்கறவு செய்யப்படலாம்; ஆனால், அச்சட்டம் பொருந்தும் மாநிலம் எதனையும் பொருத்தவரை, அந்த மாநிலத்தின் சட்டமன்றச் சட்டம் ஒன்றினால் அது திருத்தப்படுதலோ நீக்கறவு செய்யப்படுதலோ ஆகாது.

**253. பன்னாட்டு உடன்பாடுகளைச் செல்திறப்படுத்துவதற்காகச் சட்டமியற்றுதல் :**

இந்த அத்தியாயத்தின் மேலேகண்ட வகையங்களில் எது எவ்வாறிருப்பினும், பிற நாட்டுடன் அல்லது நாடுகளுடன் செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கை, உடன்பாடு அல்லது இணங்காறு எதனையும் அல்லது பன்னாட்டு மாநாடு, கழகம் அல்லது பிற குழுமத்தில் எடுக்கப்படும் முடிவு எதனையும் செயற்படுத்துவதற்காக, இந்திய ஆட்சிநிலவரை முழுவதற்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் சட்டம் எதனையும் இயற்றுவதற்கு நாடாளுமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

**251. Inconsisitency between laws made by Parliament under articles 249 and 250 and laws made by the Legislatures of States:**

Nothing in articles 249 and 250 shall restrict the power of the Legislature of a State to make any law which under this Constitution it has power to make, but if any provision of a law made by the Legislature of a State is repugnant to any provision of a law made by Parliament which Parliament has under either of the said articles power to make, the law made by Parliament, whether passed before or after the law made by the Legislature of the State, shall prevail, and the law made by the Legislature of the State shall to the extent of the repugnancy, but so long only as the law made by Parliament continues to have effect, be inoperative.

**252. Power of Parliament to legislate for two or more States by consent and adoption of such legislation by any other State:**

(1) If it appears to the Legislatures of two or more States to be desirable that any of the matters with respect to which Parilament has no power to make laws for the States except as provided in articles 249 and 250 should be regulated in such States by Parliament by law, and if resolutions to that effect are passed by all the Houses of the Legislatures of those States, it shall be lawful for Parliament to pass an Act for regulating that matter accordingly, and any Act so passed shall apply to such States and to any other State by which it is adopted afterwards by resolution passed in that behalf by the House or, where there are two Houses, by each of the Houses of the Legislature of that State.

(2) Any Act so passed by Parliament may be amended or repealed by an Act of Parliament passed or adopted in like manner but shall not, as respects any State to which it applies, be amended or repealed by an Act of the Legislature of that State.

**253. Legislation for giving effect to international agreements:**

Notwithstanding anything in the foregoing provisions of this Chapter, Parliament has power to make any law for the whole or any part or the territory of India for implementing any treaty, agreement or convention with any other country or countries or any decision made at any international conference, association or other body.

**254.** **நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கும் மாநிலங்களின் சட்டமன்றங்களினால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கும் இடையே முரண்பாடு :**

(1) மாநிலம் ஒன்றின் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின் வகையம் எதுவும், நாடாளுமன்றம் தனக்குள்ள தகுதிறனைக் கொண்டு இயற்றும் சட்டம் ஒன்றின் வகையம் எதற்கும் அல்லது ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் ஒன்றைப் பொறுத்து நிலவுறும் சட்டம் ஒன்றின் வகையம் எதற்கும் முரணாக இருக்குமாயின், நாடாளுமன்றம் இயற்றிய சட்டம், அந்த மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட்டத்திற்கு முன்போ பின்போ நிறைவேற்றப்பட்டிருந்தாலும், அச்சட்டமே அல்லது, நேர்வுக்கேற்ப, நிலவுறும் சட்டமே (2) ஆம் கூறின் வகையங்களுக்கு உட்பட்டு, மேலோங்கி நிற்கும்; அந்த மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் அவ்வாறு முரணாக உள்ள அளவிற்கு, இல்லாநிலையது ஆகும்.

(2) ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும், [1]***ஒரு மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு சட்டம், அதே பொருட்பாட்டினைப் பொறுத்து நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு முந்தைய சட்டத்தின் அல்லது ஒரு நிலவுறும் சட்டத்தின் வகையங்களுக்கு முரணான வகையம் எதனையும் கொண்டிருக்குமிடத்து, மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட அத்தகைய சட்டம், ஏற்கெனவே குடியரசுத் தலைவரின் ஓர்வுக்காக வைக்கப்பட்டிருந்து அவருடைய ஏற்பிசைவையும் பெற்றிருக்குமாயின், அதுவே அந்த மாநிலத்தில் மேலோங்கி நிற்கும்:

வரம்புரையாக: இந்தக் கூறிலுள்ள எதுவும், மாநிலச் சட்டமன்றத்தால் அவ்வாறு இயற்றப்பட்ட சட்டத்துடன் சேர்க்கின்ற, அதனைத் திருத்துகின்ற, மாற்றுகின்ற அல்லது நீக்கறவு செய்கின்ற சட்டம் ஒன்று உள்ளடங்கலாக, அதே பொருட்பாடு பொறுத்த சட்டம் எதனையும், எச்சமயத்திலும் நாடாளுமன்றம் இயற்றுவதற்குத் தடையூறு ஆவதில்லை.

**255.** **பரிந்துரைகள் முன்ஒப்பளிப்புகள் ஆகியவை பற்றிய வேண்டுறுத்தங்களை நெறிமுறை சார்ந்த பொருட்பாடுகளாக மட்டுமே கொள்ளுதல் வேண்டும் :**

நாடாளுமன்றம் அல்லது[1]*** மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட்டம் மற்றும் அதன் வகையம் எதற்கும், இந்த அரசமைப்பில் –

(அ) ஆளுநரின் பரிந்துரை வேண்டுறுத்தப்பட்டவிடத்து, ஆளுநர் அல்லது குடியரசுத்தலைவர்;

(ஆ) இராஜப்பிரமுகரின் பரிந்துரை வேண்டுறுத்தப்பட்டவிடத்து, இராஜப்பிரமுகர் அல்லது குடியரசுத்தலைவர்;

(இ) குடியரசுத்தலைவரின் பரிந்துரை அல்லது முன்ஒப்பளிப்பு வேண்டுறுத்தப்பட்டவிடத்து, குடியரசுத்தலைவர்

ஏற்பிசைவு அளித்துவிட்டநிலையில், இந்த அரசமைப்பின்படி வேண்டுறுத்தப்படும் பரிந்துரை அல்லது முன்ஒப்பளிப்பு அளிக்கப்படவில்லை என்ற காரணத்தால் மட்டுமே அவை செல்லாநிலையென ஆவதில்லை.

---

1. ''முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) மற்றும் பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட'' என்ற சொற்கள் மற்றும் எழுத்துக்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

**254. Inconsistency between laws made by Parliament and laws made by the Legislatures of States:**

(1) If any provision of a law made by the Legislature of a State is repugnant to any provision of a law made by Parliament which Parliament is competent to enact, or to any provision of an existing law with respect to one of the matters enumerated in the Concurrent List, then, subject to the provisions of clause(2), the law made by Parliament, whether passed before or after the law made by the Legislature of such State or, as the case may be, the exisiting law, shall prevail and the law made by the Legislature of the State shall, to the extent of the repugnancy, be void.

(2) Where a law made by the legislature of a State[1]*** with respect to one of the matters enumerated in the Concurrent List contains any provision repugnant to the provisions of an earlier law made by Parliament or an existing law with respect to that matter, then, the law so made by the Legislature of such State shall, if it has been reserved for the consideration of the President and has received his assent, prevail in that State:

Provided that nothing in this clause shall prevent Parliament from enacting at any time any law with respect to the same matter including a law adding to, amending, varying or repealing the law so made by the Legislature of the State.

**255. Requirements as to recommendations and previous sanctions to be regarded as matters of procedure only:**

No Act of Parliament or of the Legislature of a State[1]***, and no provision in any such Act, shall be invalid by reason only that some recommendation or previous sanction required by this Constitution was not given, if assent to that Act was given—

(a) where the recommendation required was that of the Governor, either by the Governor or by the President;

(b) where the recommendation required was that of the Rajpramukh, either by the Rajpramukh or by the President;

(c) Where the recommendation or previous sanction required was that of the President, by the President.

---

1. The words and letters "specified in Part A and Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

# அத்தியாயம் II

## நிருவாகத் தொடர்புநிலைகள்

### பொதுவியல்

**256. மாநிலங்களின் மற்றும் ஒன்றியத்தின் கடமைப்பாடு:**

மாநிலம் ஒவ்வொன்றின் ஆட்சி அதிகாரமும், நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கும் அந்த மாநிலத்திற்குப் பொருந்துகிற நிலவுறு சட்டங்களுக்கும் இணங்கி இயங்குவதை உறுதிசெய்யும் வகையில் செலுத்தப்படுதல் வேண்டும்; மேலும், மேற்சொன்ன நோக்கம் நிறைவேறுவதற்குத் தேவையென இந்திய அரசு கருதும் பணிப்புரைகளை மாநிலம் எதற்கும் இடுவதும் ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

**257. குறித்தசில நேர்வுகளில் மாநிலங்கள் மீது ஒன்றியத்திற்குள்ள கட்டாள்கை :**

(1) மாநிலம் ஒவ்வொன்றின் ஆட்சி அதிகாரமும், ஒன்றியத்து ஆட்சி அதிகாரம் செலுத்தப்படுவதற்குத் தடங்கலோ குந்தகமோ இல்லாதவாறு செலுத்தப்படுதல் வேண்டும்; மேலும், மேற்சொன்ன நோக்கம் நிறைவேறுவதற்குத் தேவையென இந்திய அரசு கருதும் பணிப்புரைகளை மாநிலம் எதற்கும் இடுவதும் ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

(2) தேசிய அல்லது படைத்துறை முக்கியத்துவம் வாய்ந்தவை எனப் பணிப்புரையில் விளம்பப்படும் போக்குவரவு இணைவங்களை அமைத்தல், அவற்றைப் பேணிவருதல் ஆகியவை குறித்த பணிப்புரைகளை மாநிலம் எதற்கும் இடுவது ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்:

வரம்புரையாக : இந்தக் கூறிலுள்ள எதுவும், நெடுஞ்சாலைகள் அல்லது நீர்வழிகள் எவற்றையும், தேசிய நெடுஞ்சாலைகள் அல்லது தேசிய நீர்வழிகள் என விளம்புவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தையோ அவ்வாறு விளம்பப்பட்ட நெடுஞ்சாலைகள் அல்லது நீர்வழிகளைப் பொறுத்து ஒன்றியத்திற்குள்ள அதிகாரத்தையோ, கடற்படை, தரைப்படை, வான்படை ஆகியவற்றைப் பொறுத்த தனது செயற்பணிகளில் அடங்கும் போக்குவரவு இணைவங்களை அமைப்பதற்கும், அவற்றைப் பேணிவருவதற்கும் ஒன்றியத்திற்குள்ள அதிகாரத்தையோ கட்டுப்படுத்துவதாகக் கருதப்படுதல் ஆகாது.

(3) ஒரு மாநிலத்திலுள்ள இருப்புப்பாதைகளைப் பாதுகாப்பதற்கென எடுக்கப்படவேண்டிய நடவடிக்கைகள் குறித்து அந்த மாநிலத்திற்குப் பணிப்புரைகள் இடுவதும் ஒன்றியத்து ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

(4) போக்குவரவு இணைவங்களை அமைத்தல் அல்லது அவற்றைப் பேணிவருதல் குறித்து (2) ஆம் கூறின்படியோ இருப்புப்பாதைகளைப் பாதுகாப்பதற்கென எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள் குறித்து (3) ஆம் கூறின்படியோ மாநிலம் எதற்கும் இடப்பட்ட பணிப்புரை எதனையும் நிறைவேற்றுகையில், அத்தகைய பணிப்புரை இடப்படாத நிலையில் அந்த மாநிலத்தின் வழக்கமான கடமைகளை ஆற்றுவதற்கு ஏற்படக்கூடிய செலவு எவ்வளவோ அதைவிடக் கூடுதல் செலவுகள் செய்யப்பட்டிருக்குமிடத்து அந்த மாநிலம் செய்யநேர்ந்த கூடுதல் செலவடைகள் பொறுத்து ஒப்பியவாறான தொகையையோ, அவ்வாறு ஒப்புதல் ஏற்படாதவிடத்து, இந்தியாவின் தலைமை நீதிபதியால் அமர்த்தப்பெறும் ஒரு பொதுவர் தீர்மானிக்கும் தொகையையோ அந்த மாநிலத்திற்கு இந்திய அரசு வழங்குதல் வேண்டும்.

[1][257 (அ). *ஒன்றியத்து ஆயுதப்படை அல்லது அதன் பிற படைகளை செலுத்துதல் மூலம் மாநிலங்களுக்கு உதவுதல்.*] — *அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 33 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 43 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

## CHAPTER II

## ADMINISTRATIVE RELATIONS

## GENERAL

### 256. Obligation of States and the Union:

The executive power of every State shall be so exercised as to ensure compliance with the laws made by Parliament and any existing laws which apply in that State, and the executive power of the Union shall extend to the giving of such directions to a State as may appear to the Government of India to be necessary for that purpose.

### 257. Control of the Union over States in certain cases:

(1) The executive power of every State shall be so exercised as not to impede or prejudice the exercise of the executive power of the Union, and the executive power of the Union shall extend to the giving of such directions to a State as may appear to the Government of India to be necessary for that purpose.

(2) The executive power of the Union shall also extend to the giving of directions to a State as to the construction and maintenance of means of communication declared in the direction to be of national or military importance:

Provided that nothing in this clause shall be taken as restricting the power of Parliament to declare highways or waterways to be national highways or national waterways or the power of the Union with respect to the highways or waterways so declared or the power of the Union to construct and maintain means of communication as part of its functions with respect to naval, military and air force works.

(3) The executive power of the Union shall also extend to the giving of directions to a State as to the measures to be taken for the protection of the railways within the State.

(4) Where in carrying out any direction given to a State under clause (2) as to the construction or maintenance of any means of communication or under clause (3) as to the measures to be taken for the protection of any railway, costs have been incurred in excess of those which would have been incurred in the discharge of the normal duties of the State if such direction had not been given, there shall be paid by the Government of India to the State such sum as may be agreed, or, in default of agreement, as may be determined by an arbitrator appointed by the Chief Justice of India, in respect of the extra costs so incurred by the State.

[1][**257A.** *Assistance to States by deployment of armed forces or other forces of the Union.*] — *Omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 33 (w.e.f. 20-6-1979).*

1. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 43 (w.e.f. 3-1-1977).

**258. குறித்தசில நேர்வுகளில் மாநிலங்களுக்கு அதிகாரங்கள் முதலியவற்றை வழங்குவதற்கு ஒன்றியத்திற்குள்ள அதிகாரம்:**

(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், குடியரசுத்தலைவர், ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கிய பொருட்பாடு ஒன்றின் தொடர்பான செயற்பணிகளை, வரைக்கட்டுடனோ வரைக்கட்டின்றியோ, ஒரு மாநில அரசின் இசைவுடன், அந்த அரசிடம் அல்லது அதன் அலுவலர்களிடம் ஒப்படைக்கலாம்.

(2) நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்டு, மாநிலம் எதற்கும் பொருந்துகிற ஒரு சட்டம், அது அந்த மாநிலச் சட்டமன்றம் சட்டமியற்றுவதற்கு அதிகாரம் பெற்றிராத ஒரு பொருட்பாடு பற்றியதாக இருந்தபோதிலும், அந்த மாநிலத்திற்கு அல்லது அதன் அலுவலர்களுக்கும் அதிகார அமைப்புகளுக்கும், அதிகாரங்களை வழங்கி, கடமைகளை விதிக்கலாம் அல்லது அதிகாரங்களை வழங்குவதற்கும் கடமைகளை விதிப்பதற்கும் அதிகாரம் அளிக்கலாம்.

(3) இந்த உறுப்பின் பயன்திறன்வழி ஒரு மாநிலத்திற்கு அல்லது அதன் அலுவலர்களுக்கு அல்லது அதிகாரஅமைப்புகளுக்கு அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்குமிடத்து அல்லது கடமைகள் விதிக்கப்பட்டிருக்குமிடத்து, அந்த அதிகாரங்களைச் செலுத்துவதையும் கடமைகளை ஆற்றுவதையும் பொறுத்து அந்த மாநிலம் செய்ய நேர்ந்த கூடுதல் நிருவாகச் செலவுகள் குறித்து, ஒப்பியவாறான தொகையையோ, அவ்வாறு ஒப்புதல் ஏற்படாதவிடத்து, இந்தியாவின் தலைமை நீதிபதியால் அமர்த்தப்பெறும் ஒரு பொதுவர் தீர்மானிக்கும் தொகையையோ அம்மாநிலத்திற்கு இந்திய அரசு வழங்குதல் வேண்டும்.

[1][**258 (அ). ஒன்றியத்திடம் செயற்பணிகளை ஒப்படைப்பதற்கு மாநிலங்களுக்குள்ள அதிகாரம்:**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், மாநிலம் ஒன்றின் ஆளுநர் அந்த மாநிலத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கிய பொருட்பாடு ஒன்றின் தொடர்பான செயற்பணிகளை இந்திய அரசின் இசைவுடன் வரைக்கட்டுடனோ வரைக்கட்டின்றியோ, அந்த அரசிடம் அல்லது அதன் அலுவலர்களிடம் ஒப்படைக்கலாம்.]

259. *[முதலாம் இணைப்புப்பட்டியலின் (ஆ) பகுதியிலுள்ள மாநிலங்களிலுள்ள ஆயுதப்படைகள்.]— அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**260. இந்தியாவிற்கு வெளியிலுள்ள நிலவரைகள் தொடர்பாக ஒன்றியத்திற்குள்ள அதிகாரம்:**

இந்திய அரசு, இந்திய ஆட்சிநிலவரையின் பகுதி அல்லாத நிலவரை ஒன்றின் அரசுடன் செய்து கொள்ளும் உடன்பாட்டின் வாயிலாக, அந்த நிலவரையின் அரசிடம் உற்றமைந்துள்ள ஆட்சித்துறை, சட்டமியற்று துறை அல்லது நீதித் துறை சார்ந்த செயற்பணிகள் எவற்றையும் மேற்கொள்ளலாம்; ஆனால், அத்தகைய உடன்பாடு ஒவ்வொன்றும், அயல்நாட்டில் அதிகாரம் செலுத்துவது தொடர்பாக நிகழுறு காலத்தில் செல்லாற்றலிலுள்ள சட்டத்திற்கு உட்பட்டதாகவும் அதன்வழி அமைவதாகவும் இருத்தல் வேண்டும்.

**261. அரசின் செயற்பாடுகள், பதிவணங்கள் மற்றும் நீதித்துறை நடவடிக்கைகள் :**

(1) ஒன்றியத்து மற்றும் ஒவ்வொரு மாநிலத்து அரசின் செயற்பாடுகள், பதிவணங்கள், நீதித்துறை நடவடிக்கைகள் ஆகியவற்றின் மீது இந்திய ஆட்சிநிலவரை எங்கணும் முழுநிறை நம்பிக்கையும் நன்மதிப்பும் வைக்கப்படுதல் வேண்டும்.

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 18 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**258. Power of the Union to confer powers, etc., on States in certain cases:**

(1) Notwithstanding anything in this Constitution, the President may, with the consent of the Government of a State, entrust either conditionally or unconditionally to that Government or to its officers functions in relation to any matter to which the executive power of the Union extends.

(2) A law made by Parliament which applies in any State may, notwithstanding that if relates to a matter with respect to which the Legislature of the State has no power to make laws, confer powers and impose duties, or authorise the conferring of powers and the imposition of duties, upon the State or officers and authorities thereof.

(3) Where by virtue of this article powers and duties have been conferred or imposed upon a State or officers or authorities thereof, there shall be paid by the Government of India to the State such sum as may be agreed, or, in default of agreement, as may be determined by an arbitrator appointed by the Chief Justice of India, in respect of any extra costs of administration incurred by the State in connection with the exercise of those powers and duties.

[1][**258A. Power of the States to entrust functions to the Union:**

Notwithstanding anything in this Constitution, the Governor of a State may, with the consent of the Government of India, entrust either conditionally or unconditionally to that Government or to its officers functions in relation to any matter to which the executive power of the State extends.]

**259.** [*Armed Forces in States in Part B of the First Schedule.*]—*Omitted by the Constitution* (*Seventh Amendment*) *Act*, 1956, s. 29 *and Sch.(w.e.f. 1-11-1956).*

**260. Jurisdiction of the Union in relation to territories outside India:**

The Government of Indian may by agreement with the Government of any territory not being part of the territory of India undertake any executive, legislative or judicial functions vested in the Government of such territory, but every such agreement shall be subject to, and governed by, any law relating to the exercise of foreign jurisdiction for the time being in force.

**261. Public acts, records and judicial proceedings:**

(1) Full faith and credit shall be given throughout the territory of India to public acts, records and judicial proceedings of the Union and of every State.

---

1. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 18 (w.e.f. 1-11-1956).

(2). (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட செயற்பாடுகள், பதிவணங்கள், நடவடிக்கைகள் ஆகியவற்றை மெய்ப்பிக்க வேண்டியதும், அவற்றின் செல்திறனைத் தீர்மானிக்க வேண்டியதும் எந்த முறையில், எந்த நிலையில் இருத்தல் வேண்டும் என்பது நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தில் வகைசெய்யப்பட்டவாறு இருத்தல் வேண்டும்.

(3) இந்திய ஆட்சிநிலவரையின் பகுதி எதிலுமுள்ள உரிமையியல் நீதிமன்றங்களால் வழங்கப்பட்ட இறுதித் தீர்ப்புரைகள் அல்லது பிறப்பிக்கப்பட்ட ஆணைகள், அந்த ஆட்சிநிலவரை எங்கணும் சட்டத்திற்கிணங்க நிறைவேற்றப்படத் தகுவன ஆகும்.

## நீர் தொடர்பான பூசல்கள்

**262.** மாநிலங்களிடையேயான ஆறுகளின் அல்லது ஆற்றுப் பள்ளதாக்குகளின் நீர் தொடர்பான பூசல்களுக்கு நீதிமுறைத் தீர்வு:

(1) மாநிலங்களிடையேயான ஆறு அல்லது ஆற்றுப்பள்ளத்தாக்கு ஒன்றின் அல்லது அதிலுள்ள நீரின் பயன்பாடு, பகிர்ந்தளிப்பு அல்லது அதன்மீது கட்டாள்கை பொறுத்த பூசல் அல்லது முறையீடு எதனையும் நீதிமுறையில் தீர்வு செய்வதற்கு நாடாளுமன்றம் சட்டத்தினால் வகை செய்யலாம்.

(2) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட பூசல் அல்லது முறையீடு எதனையும் பொறுத்து, உச்ச நீதிமன்றமோ வேறெந்த நீதிமன்றமோ அதிகாரம் செலுத்துதல் ஆகாது என்று நாடாளுமன்றம் சட்டத்தினால் வகைசெய்யலாம்.

## மாநிலங்கள் இயைந்து இயங்குதல்

**263.** மாநிலங்களிடையமை மன்றம் தொடர்பான ஏற்பாடுகள்:

குடியரசுத்தலைவர், பின்வரும் கடமைகள் சார்த்தப்பட்ட மன்றம் ஒன்றை நிறுவுவது பொதுநலன்களுக்கு உதவும் என்று கருதுங்கால், அவர் அத்தகையதொரு மன்றத்தை ஓர் ஆணை வாயிலாக நிறுவுவதும், அம்மன்றம் புரிய வேண்டிய கடமைகளின் தன்மை, அதன் அமைப்பு, நெறிமுறை இவற்றை வரையறுப்பதும் சட்டமுறையானது ஆகும் –

(அ) மாநிலங்களிடையே எழும் பூசல்களை விசாரணை செய்து, அவற்றின் மீது கருத்துரை வழங்குதல்;

(ஆ) மாநிலங்களில் சிலவோ அனைத்துமோ அல்லது ஒன்றியத்துடன் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களோ பொதுவான அக்கறை கொண்டுள்ள பொருள்களைக் குறித்து ஆய்வு செய்தல் மற்றும் ஆய்வுரையளித்தல்; அல்லது

(இ) அத்தகைய ஆய்வுப்பொருள் எதன்மீதும் பரிந்துரைகளை, குறிப்பாக அந்தப் பொருள் தொடர்பான கொள்கை, நடவடிக்கை ஆகியவற்றைச் சிறந்த முறையில் ஒருங்கிணைப்பதற்கான பரிந்துரைகளைச் செய்தல்.

(2) The manner in which and the conditions under which the acts, records and proceedings referred to in clause (1) shall be proved and the effect thereof determined shall be as provided by law made by Parliament.

(3) Final judgements or orders delivered or passed by civil courts in any part of the territory of India shall be capable of execution anywhere within that territory according to law.

## DISPUTES RELATING TO WATERS

**262. Adjudication of disputes relating to waters of inter-State rivers or river valleys:**

(1) Parliament may by law provide for the adjudication of any dispute or complaint with respect to the use, distribution or control of the waters of, or in any inter-state river or river valley.

(2) Notwithstanding anything in this Constitution, Parliament may, by law provide that neither the Supreme Court nor any other court shall exercise jurisdiction in respect of any such dispute or complaint as is referred to in clause (1).

## CO-ORDINATION BETWEEN STATES

**263. Provisions with respect to an inter-State Council:**

If at any time it appears to the President that the public interests would be served by the establishment of a council charged with the duty of—

(a) inquiring into and advising upon disputes which may have arisen between States;

(b) investigating and discussing subjects in which some or all the States, or the Union and one or more of the States, have a common interest; or

(c) making recommendations upon any such subject and, in particular, recommendations for the better co-ordination of policy and action with respect to that subject,

it shall be lawful for the President by order to establish such a council, and to define the nature of the duties to be performed by it and its organisations and procedure.

## பகுதி XII

## நிதி, சொத்து, ஒப்பந்தங்கள் மற்றும் உரிமைவழக்குகள்

### அத்தியாயம் I - நிதி

### பொதுவியல்

[1][264. பொருள்கோள் :

இந்தப் பகுதியில், "நிதி ஆணையம்" என்பது, 280 ஆம் உறுப்பின்படி அமைக்கப்படும் ஒரு நிதி ஆணையம் என்று பொருள்படும். ]

**265.** சட்டத்தினால் பெறும் அதிகாரத்தின்படி அல்லாமல், வரிகளை விதித்தல் ஆகாது :

வரி எதனையும் சட்டத்தினால் பெறும் அதிகாரத்தின்படி அல்லாமல், விதித்தலோ ஈட்டுதலோ ஆகாது.

**266.** இந்தியாவின் மற்றும் மாநிலங்களின் திரள்நிதியங்களும் அரசுப் பொதுக் கணக்குகளும் :

(1) 267 ஆம் உறுப்பின் வகையங்களுக்கும், குறித்தசில வரிகள், தீர்வைகள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் நிகரத் தொகையை, முழுமையாகவோ அதில் ஒரு பகுதியினையோ மாநிலங்களுக்குக் குறித்தொதுக்குவது பொறுத்த இந்த அத்தியாயத்தின் வகையங்களுக்கும் உட்பட்டு, இந்திய அரசு பெறும் வருவாய்கள் அனைத்தும், கருவூலச் சீட்டுகளின் வெளியீடு, பெறுகடன்கள் அல்லது வழிவகை முன்பணத்தொகைகள் வாயிலாக அரசு எழுப்பும் பெறுகடன்கள் அனைத்தும், மற்றும் பெறுகடன்கள் திருப்பிச்செலுத்தப்படும் வகையில் அந்த அரசு பெறும் பணத்தொகைகள் அனைத்தும், "இந்தியாவின் திரள்நிதியம்" என்னும் பெயரால் ஒரு திரள்நிதியமாக அமைவுறும்; மேலும், மாநில அரசு பெறும் வருவாய்கள் அனைத்தும், கருவூலச் சீட்டுகள் வெளியீடு, பெறுகடன்கள், வழிவகை முன்பணத்தொகைகள் வாயிலாக அந்த அரசு எழுப்பும் பெறுகடன்கள் அனைத்தும் மற்றும் பெறுகடன்கள் திருப்பிச் செலுத்தப்படும் வகையில் அந்த அரசு பெறும் பணத்தொகைகள் அனைத்தும், "மாநிலத் திரள்நிதியம்" என்னும் பெயரால் ஒரு திரள்நிதியமாக அமைவுறும்.

(2) இந்திய அரசால் அல்லது அதன் சார்பாக, மாநில அரசால் அல்லது அதன் சார்பாகப் பெறப்படும் பிற பொதுப் பணத்தொகைகள் அனைத்தும், இந்திய அரசுப் பொதுக்கணக்கில் அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாநில அரசுப் பொதுக்கணக்கில் வரவு வைக்கப்படுதல் வேண்டும்.

(3) சட்டத்திற்கிணங்கியவாறும், இந்த அரசமைப்பில் வகைசெய்யப்பட்டுள்ள நோக்கங்களுக்காகவும் வகைசெய்யப்பட்டுள்ள முறையிலும் அல்லாமல் இந்தியத் திரள்நிதியத்திலிருந்தோ ஒரு மாநிலத் திரள்நிதியத்திலிருந்தோ பணம் எதனையும் ஒதுக்களிப்புச் செய்தல் ஆகாது.

**267.** நினையாநிகழ்வு நிதியம் :

(1) "இந்திய நினையாநிகழ்வு நிதியம்" என்னும் பெயரால், வசக்கட்டுப்பணம் போல்வதான ஓர் நினையாநிகழ்வு நிதியத்தை நாடாளுமன்றம் சட்டத்தினால் நிறுவலாம்; அச்சட்டத்தினால் தீர்மானிக்கப்படும் தொகைகள் அவ்வப்போது அந்நிதியத்தில் செலுத்தப்படுதல் வேண்டும்; மேலும், எதிர்பாராச் செலவுகளுக்கு 115 ஆம் உறுப்பு அல்லது 116 ஆம் உறுப்பின்படி நாடாளுமன்றம் சட்டத்தினால் அனுமதி அளிக்கும்வரை, அச்செலவுகளைச் செய்யும்பொருட்டு மேற்சொன்ன நிதியத்திலிருந்து முன்பணத்தொகைகளைக் குடியரசுத்தலைவர் வழங்க இயலும் வகையில் அந்த நிதியம் அவருடைய பொறுப்பில் வைக்கப்படும்.

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1-11-1956 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

# PART XII

## FINANCE, PROPERTY, CONTRACTS AND SUITS

## CHAPTER I - FINANCE

## GENERAL

[1][**264. Interpretation:**

In this Part, "Finance Commission" means a Finance Commission constituted under article 280.]

**265. Taxes not to be imposed save by authority of law:**

No tax shall be levied or collected execpt by authority of law.

**266. Consolidated Funds and public accounts of India and of the States:**

(1) Subject to the provisions of article 267 and to the provisions of this Chapter with respect to the assignment of the whole or part of the net proceeds of certain taxes and duties to States, all revenues received by the Government of India, all loans raised by that Government by the issue of treasury bills, loans or ways and means, advances and all moneys received by that Government in repayment of loans shall form one consolidated fund to be entitled "the Consolidated Fund of India," and all revenues received by the Government of a State, all loans raised by that Government by the issue of treasury bills, loans or ways and means, advances and all moneys received by that Government in repayment of loans shall form one consolidated fund to be entitled "the Consolidated Fund of the State."

(2) All other public moneys received by or on behalf of the Government of India or the Government of a State shall be credited to the public account of India or the public account of the State, as the case may be.

(3) No moneys out of the Consolidated Fund of India or the Consolidated Fund of a State shall be appropriated except in accordance with law and for the purposes and in the manner provided in this Constitution.

**267. Contingency Fund:**

(1) Parliament may, by law, establish a Contingency Fund in the nature of an imprest to be entitled "the Contingency Fund of India" into which shall be paid from time to time such sums as may be determined by such law, and the said Fund shall be placed at the disposal of the President to enable advances to be made by him out of such Fund for the purposes of meeting unforeseen expenditure pending authorisation of such expenditure by Parliament by law under article 115 or article 116.

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

(2) ''மாநில நினையாநிகழ்வு நிதியம்'' என்னும் பெயரால், வசக்கட்டுப்பணம் போல்வதான ஓர் நினையாநிகழ்வு நிதியத்தை மாநிலம் ஒன்றின் சட்டமன்றம் சட்டத்தினால் நிறுவலாம்; அச்சட்டத்தினால் தீர்மானிக்கப்படும் தொகைகள் அவ்வப்போது அந்நிதியத்தில் செலுத்தப்படுதல் வேண்டும்; மேலும், எதிர்பாராச் செலவுகளுக்கு 205 ஆம் உறுப்பு அல்லது 206 ஆம் உறுப்பின்படி அந்த மாநிலத்தின் சட்டமன்றம் அனுமதி அளிக்கும்வரை அச்செலவுகளைச் செய்யும் பொருட்டு மேற்சொன்ன நிதியத்திலிருந்து முன்பணத்தொகைகளை அந்த மாநில ஆளுநர்[1]*** வழங்க இயலும் வகையில் அந்த நிதியம் அவருடைய பொறுப்பில் வைக்கப்படும்.

### ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே வருவாய்களைப் பகிர்ந்தளித்தல்

**268. ஒன்றியத்தால் விதிக்கப்பட்டு, ஆனால் மாநிலங்கள் ஈட்டிப் பயன்படுத்திக் கொள்ளும் தீர்வைகள் :**

(1) ஒன்றியத்துப் பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள முத்திரைத் தீர்வைகளும், [2]*** இந்திய அரசால் விதிக்கப்படும்; ஆனால் –

(அ) அத்தகைய தீர்வைகள் [3][ஒன்றியத்து ஆட்சிநிலவரை] எதற்குள்ளும் விதிக்கத்தக்கனவாக இருக்கும் நேர்வில், இந்திய அரசாலும்,

(ஆ) பிற நேர்வுகளில், எந்த மாநிலங்களுக்குள் முறையே அத்தீர்வைகள் விதிக்கத்தக்கனவாக உள்ளனவோ அந்த மாநிலங்களாலும் ஈட்டப்படும்.

(2) மாநிலம் எதற்குள்ளும் விதிக்கத்தக்க அத்தகைய தீர்வையின் மூலம் ஒரு நிதியாண்டில் கிடைக்கும் தொகை, இந்தியத் திரள்நிதியத்தின் பகுதியாக ஆவதில்லை; மாறாக, அது அந்த மாநிலத்திற்கே குறித்தொதுக்கப்படுதல் வேண்டும்.

[4][**268 (அ)**. *[ஒன்றியத்தால் விதிக்கப்பட்டு மற்றும் ஒன்றியமும் மாநிலங்களும் ஈட்டிப் பயன்படுத்திக் கொள்ளும் சேவை வரி ]- அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 7 ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**269. ஒன்றியத்தால் விதித்து ஈட்டப்பட்டு, ஆனால் மாநிலங்களுக்குக் குறித்தொதுக்கப்படும் வரிகள்:**

[5][(1) சரக்குகளின் விற்பனை அல்லது கொள்வினையின் மீதான வரிகளும், சரக்குகளின் அனுப்புகை, [6][269 (ஆ) உறுப்பின் படி வகைசெய்யப்பட்ட] சரக்குகள் மற்றும் சேவை வரி [6][தவிர] மீதான வரிகளும், இந்திய அரசால் விதித்து ஈட்டப்படுதல் வேண்டும் மற்றும் (2) ஆம் கூறில் வகை செய்யப்பட்டுள்ள முறையில், 1996 ஏப்ரல் 1 ஆம் நாளன்று அல்லது அதற்குப் பின்பு, மாநிலங்களுக்குக் குறித்தொதுக்கப்படுதல் வேண்டும் மற்றும் குறித்தொதுக்கப்பட்டிருப்பதாகக் கொள்ளப்படுதல் வேண்டும்.

---

1. ''அல்லது இராஜபிரமுகர்'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. ''மருந்து மற்றும் ஒப்பனை பொருள்களின் மீதான ஆயத்தீர்வைகளும்'' என்ற சொற்கள், அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம் சட்டம், 2016 இன் 6 ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

3. ''முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (இ) இல் குறித்துரைக்கப்பட்ட மாநிலம்'' என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

4. 268 (அ) உறுப்பு, அரசமைப்புச் (எண்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 2 ஆம் பிரிவினால் புகுத்தப்பட்டது, (தேதி இன்னும் அறிவிக்கை செய்யப்பட வேண்டும்).

5. (1) மற்றும் (2) ஆம் கூறுகளுக்காக, அரசமைப்புச் (எண்பதாம் திருத்தம்) சட்டம், 2000 இன் 2 ஆம் பிரிவினால் (9–6–2000 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

6. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 8 ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(2) The legislature of a State may by law establish a Contingency Fund in the nature of an imprest to be entitled " the Contingency Fund of the State" into which shall, be paid from time to time such sums as may be determined by such law and the said Fund shall be placed at the disposal of the Governor[1]*** of the State to enable advances to be made by him out of such Fund for the purposes of meeting unforseen expenditure pending authorisation of such expenditure by the Legislature of the State by law under article 205 or article 206.

## DISTRIBUTION OF REVENUES BETWEEN THE UNION AND THE STATES

**268. Duties levied by the Union but collected and appropriated by the States:**

(1) Such stamp duties [2]*** as are mentioned in the Union List shall be levied by the Government of India but shall be collected—

(a) in the case where such duties are leviable within any [3][Union territory] by the Government of India, and

(b) in other cases, by the States within which such duties are respectively leviable.

(2) The proceeds in any financial year of any such duty leviable within any State shall not form part of the Consolidated Fund of India, but shall be assigned to that State.

[4][**268A.** [*Service tax levied by Union and collected and appropriated by the Union and the State.*].— *Omitted by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 7 (w.e.f. 16-9-2016).*

**269. Taxes levied and collected by the Union but assigned to the States:**

[5][(1) Taxes on the sale of purchase of Goods and taxes on the consignment of goods [6][except as provided in ariticle 269A] shall be levied and collected by the Government of India but shall be assigned and shall be deemed to have been assigned to the States on or after the 1st day of April, 1996 in the manner provided in clause (2).

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. The words "and such duties of excise on medicinal and toilet preparations" omitted by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 6 (w.e.f. 16-9-2016).

3. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch., for "State specified in Part C of the First Schedule" (w.e.f. 1-11-1956).

4. Art. 268A was ins. by the Constitution (Eighty-eighth Amendment) Act, 2003, s. 2. (date yet to be notified).

5. Subs. by the Constitution (Eightieth Amendment) Act, 2000, s. 2, for cls. *(1)* and *(2)* (w.e.f. 9-6-2000).

6. Ins. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016 s. 8 (w.e.f. 16-9-2016).

**விளக்கம்.** – இந்தக் கூறின் நோக்கங்களுக்காக,–

(அ) "சரக்குகளின் விற்பனை அல்லது கொள்வினையின் மீதான வரிகள்" என்ற சொற்றொடர், செய்தித்தாள்கள் அல்லாத பிற சரக்குகளின் விற்பனையோ கொள்வினையோ மாநிலங்களிடையேயுள்ள வணிகத்தின் அல்லது வாணிபத்தின்போது நிகழுமிடத்து, அத்தகைய விற்பனை அல்லது கொள்வினை மீதான வரிகள் என்று பொருள்படும்;

(ஆ) "சரக்குகளின் அனுப்புகை மீதான வரிகள்" என்ற சொற்றொடர், சரக்குகளின் அனுப்புகை (பிறர் எவருக்காயினும்) மாநிலங்களிடையேயுள்ள வணிகத்தின் அல்லது வாணிபத்தின்போது நிகழுமிடத்து, அத்தகைய அனுப்புகையின் மீதான வரிகள் என்று பொருள்படும்.

(2) ஒரு நிதியாண்டில் அத்தகைய வரி எதிலிருந்தும் கிடைக்கும் நிகரத்தொகை, ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளிலிருந்து கிடைத்தாகும் அளவு நீங்கலாக, எஞ்சிய அளவு, இந்தியத் திரள்நிதியத்தின் பகுதியாக அமைவதில்லை. மாறாக, அது அந்த ஆண்டில் அந்த வரி விதிக்கப்படுவதாகும் மாநிலங்களுக்கே குறித்தொதுக்கப்படுதல் வேண்டும், மேலும், அத்தொகை, நாடாளுமன்றம், சட்டத்தினால் வகுக்கும் பகிர்ந்தளிப்பு நெறிகளுக்கிணங்கிய வகையில் அந்த மாநிலங்களுக்கிடையே பகிர்ந்தளிக்கப்படும்.]

[1][(3) மாநிலங்களுக்கிடையேயான வணிகத்தின் அல்லது வாணிபத்தின்போது [2][சரக்குகளின் விற்பனை அல்லது கொள்வினை அல்லது அனுப்புகை] நிகழ்வது எப்போது என்பதைத் தீர்மானிப்பதற்கான நெறிகளை நாடாளுமன்றம் சட்டத்தினால் வகுக்கலாம்.]

[3][**269(அ). மாநிலங்களுக்கிடையேயான வணிகத்தின் அல்லது வாணிபத்தின் போது சரக்குகள் மற்றும் சேவை வரி விதித்து ஈட்டுதல்:**

(1) மாநிலங்களுக்கிடையேயான வணிகத்தின் அல்லது வாணிபத்தின் போது வழங்கீடுகளின் மீதான சரக்குகள் மற்றும் சேவை வரி இந்திய அரசால் விதித்து ஈட்டப்படுதல் வேண்டும் மற்றும் அத்தகைய வரி, சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றத்தின் பரிந்துரையின் பேரில் நாடாளுமன்றத்தால் சட்டத்தினால் வகுத்துரைக்கப்படலாகும் முறையில் ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே பங்கீடு செய்யப்படுதல் வேண்டும்.

**விளக்கம்.**– இந்தக் கூறின் நோக்கங்களுக்காக, இந்திய ஆட்சிநிலவரைக்குள் இறக்குமதி செய்யும் போது சரக்குகள், அல்லது சேவை அல்லது அவை இரண்டின் வழங்கீடு, மாநிலங்களுக்கிடையேயான வணிகத்தின் அல்லது வாணிபத்தின் போதான சரக்குகள், அல்லது சேவை அல்லது அவை இரண்டின் வழங்கீடாகக் கொள்ளப்படுதல் வேண்டும்.

(2). (1) ஆம் கூறின்படி மாநிலம் ஒன்றிற்குப் பங்கீடு செய்யப்படும் தொகை இந்தியத் திரள்நிதியத்தை சேர்வதாகாது.

---

1. அரசமைப்புச் (ஆறாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 3 ஆம் பிரிவினால் (11–9–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. "சரக்குகளின் விற்பனை அல்லது கொள்வினை" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1982 இன் 2 ஆம் பிரிவினால் (2–2–1983 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 9 ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

*Explanation.*- For the purposes of this clause,—

(a) the expression "taxes on the sale or purchase of goods" shall mean taxes on sale or purchase of goods other than newspapers,where such sale or purchase takes place in the course of inter-State trade or commerce;

(b) the expression "taxes on the consignment of goods" shall mean taxes on the consignment of goods (whether the consignment is to the person making it or to any other person), where such consignment takes place in the course inter-State trade or commerce.

(2) The net proceeds in any financial year of any such tax, except in so far as those proceeds represent proceeds attributable to Union territories, shall not form part of Consolidated Fund of India, but shall be assigned to the States within which that tax is leviable in that year, and shall be distributed among those States in accordance with such principles of distribution as may be formulated by Parliament by law.]

[1][(3) Parliament may by law formulate principles for determining when a [2][sale or purchase of, or consignment of, goods] takes place in the course of inter-State trade or commerce.]

**[3][269A. Levy and collection of goods and services tax in course of inter - State trade or commerce:**

(1) Goods and services tax on supplies in the course of inter-State trade or commerce shall be levied and collected by the Government of India and such tax shall be apportioned between the Union and the States in the manner as may be provided by Parliament by law on the recommendations of the Goods and Services Tax Council.

**Explanation**.- For the purposes of this clause, supply of goods, or of services, or both in the course of import into the territory of India shall be deemed to be supply of goods, or of services, or both in the course of inter-State trade or commerce.

(2) The amount apportioned to a State under clause (1) shall not form part of the Consolidated Fund of India.

---

1.Ins. by the Constitution (Sixth Amendment) Act, 1956, s. 3 (w.e.f. 11-9-1956).

2. Subs. by the Constitution (Forty-sixth Amendment) Act, 1982, s. 2, for "sale or purchase of good" (w.e.f. 2-2-1983).

3. Ins. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 9 (w.e.f. 16-9-2016).

(3). (1) ஆம் கூறின்படி விதிக்கப்படும் வரியாக ஈட்டப்படும் தொகையொன்று 246 (அ) உறுப்பின்படி ஒரு மாநிலத்தால் விதிக்கப்படும் வரியைச் செலுத்துவதற்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறவிடத்து, அத்தகைய தொகை, இந்தியத் திரள்நிதியத்தை சேர்வதாகாகது.

(4). 246 (அ) உறுப்பின்படி ஒரு மாநிலத்தால் விதிக்கப்பட்ட வரியாக ஈட்டப்பட்டும் தொகையொன்று (1) ஆம் உட்பிரிவின்படி விதிக்கப்படும் வரியைச் செலுத்துவதற்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறவிடத்து, அத்தகைய தொகை, மாநிலத் திரள்நிதியத்தை சேர்வதாகாது.

(5) நாடாளுமன்றம், மாநிலங்களிடையேயான வணிகத்தின் அல்லது வாணிபத்தின் போது சரக்குகள், அல்லது சேவை, அல்லது அவை இரண்டின் வழங்கீட்டு இடத்தையும், வழங்கீடு ஒன்று நிகழ்வதன் நேரம் எப்போது என்பதையும் தீர்மானிப்பதற்கான நெறிகளை சட்டத்தினால், வகுக்கலாம்.]

[1][270. **ஒன்றியத்தால் விதிக்கப்பட்டு ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே பகிர்ந்தளிக்கப்படும் வரிகள் :**

(1) முறையே [2][268, 269, 269 (அ)], ஆகிய உறுப்புகளில் சுட்டப்பட்ட தீர்வைகளும் வரிகளும் நீங்கலாக, ஒன்றியத்துப் பட்டியலில் சுட்டப்பட்ட அனைத்து வரிகளும் தீர்வைகளும், 271 ஆம் உறுப்பில் சுட்டப்பட்ட வரிகள் மற்றும் தீர்வைகளின் பேரிலான மேல்வரியும், நாடாளுமன்றத்தால் செய்யப்பட்ட சட்டத்தின்படி குறித்துரைக்கப்பட்ட நோக்கங்களுக்காக விதிக்கப்பட்ட மேல்வரி எதுவும், இந்திய அரசால் விதிக்கப்பட்டு ஈட்டப்படுதல் வேண்டும். மேலும், (2) ஆம் கூறில் வகை செய்யப்பட்ட முறையில் ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே பகிர்ந்தளிக்கப்படுதல் வேண்டும்.

[3][ (1 (அ)) . 246 (அ) உறுப்பின் (1) ஆம் கூறின்படி ஒன்றியத்தால் ஈட்டப்படும் வரியும் கூட, (2) ஆம் கூறில் வகைசெய்யப்பட்ட முறையில் ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே பகிர்ந்தளிக்கப்படுதல் வேண்டும்.

(1 (ஆ)). 246 (அ) உறுப்பின் (1) ஆம் கூறின்படி ஒன்றியத்தால் விதிக்கப்படும் வரியைச் செலுத்துவதற்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கும், 246 (அ) உறுப்பின் (2) ஆம் கூறின்படியும் 269 (அ) உறுப்பின்படியும், ஒன்றியத்தால் விதித்து ஈட்டப்படும் வரியும், 269 (அ) உறுப்பின் (1) ஆம் கூறின்படி ஒன்றித்திற்குப் பங்கீடு செய்யப்படும் தொகையும் கூட, (2) ஆம் கூறில் வகைசெய்யப்பட்ட முறையில் ஒன்றித்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே பகிர்ந்தளிக்கப்படுதல் வேண்டும்.]

---

1. அரசமைப்புச் (எண்பதாம் திருத்தம்) சட்டம், 2000 இன் 3 ஆம் பிரிவினால் (9–6–2000 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

2. "268 மற்றும் 269 ஆகிய உறுப்புகள்" என்ற சொற்கள் மற்றும் எண்கள், "268, 269 மற்றும் 269 (அ) ஆகிய உறுப்புகளாக" ஆக அரசமைப்புச் (எண்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 3 ஆம் பிரிவினால் (செயலுறுத்தப்படவில்லை), மாற்றாக அமைக்கப்பட்டது மற்றும் அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 10 ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) மேலும் மாற்றாக அமைக்கப்பட்டது.

3. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.

(3) Where an amount collected as tax levied under clause (1) has been used for payment of the tax levied by a State under article 246-A, such amount shall not form part of the Consolidated Fund of India.[7]

(4) Where an amount collected as tax levied by a State under article 246-A has been used for payment of the tax levied under clause (1), such amount shall not form part of the Consolidated Fund of the State.

(5) Parliament may, by law, formulate the principles for determining the place of supply, and when a supply of goods, or of services, or both takes place in the course of inter-State trade or commerce.]

**[1][270. Taxes levied and distributed between the Union and the States.**

(1) All taxes and duties referred to in the Union List, except the duties and taxes referred to in articles [2][268, 269 and 269A], respectively, surcharge on taxes and duties referred to in article 271 and any cess levied for specific purposes under any law made by Parliament shall be levied and collected by the Government of India and shall be distributed between the Union and the States in the manner provided in clause (2).

[3][(1A) The tax collected by the Union under clause (1) of article 246A shall also be distributed between the Union and the States in the manner provided in clause (2).

(1B) The tax levied and collected by the Union under clause (2) of article 246A and article 269A, which has been used for payment of the tax levied by the Union under clause (1) of article 246A and the amount apportioned to the Union under clause (1) of article 269A, shall also be distributed between the Union and the States in the manner provided in clause (2).]

---

1. Subs. by the Constitution (Eightieth Amendment) Act, 2000, s. 3 (w.e.f. 9-6-2000).
2. The words and figures "articles 268 and 269 substituted as "268, 269 and 269A" by the Constitution (Eighty-eighth Amendment) Act, 2003, s. 3. (not enforced) and further substituted by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 10 (w.e.f. 16-9-2016).
3. Ins. by *ibid.*

(2) ஒரு நிதியாண்டில் அத்தகைய வரி அல்லது தீர்வையிலிருந்து கிடைக்கும் நிகரத்தொகையில் வகுத்துரைக்கப்படும் விழுக்காடு, இந்தியத் திரள்நிதியத்தின் பகுதியாக அமைவதில்லை. மாறாக, அந்த ஆண்டில் அந்த வரி அல்லது தீர்வை விதிக்கப்படுவதாகும் மாநிலங்களுக்கே குறித்தொதுக்கப்பட்டு, வகுத்துரைக்கப்படலாகும் முறைப்படியும், வகுத்துரைக்கப்படலாகும் காலத்திலிருந்தும் (3) ஆம் கூறில் வகை செய்யப்பட்ட முறையில் மாநிலங்களுக்கிடையே பகிர்ந்தளிக்கப்படும்.

(3) இந்த உறுப்பில் "வகுத்துரைக்கப்பட்ட" என்பது,–

(i) நிதி ஆணையம் ஒன்று அமைக்கப்படும் வரையில், குடியரசுத் தலைவரால் ஆணையின் வழி வகுத்துரைக்கப்பட்ட என்றும்,

(ii) நிதி ஆணையம் ஒன்று அமைக்கப்பட்ட பின்பு, நிதி ஆணையத்தின் பரிந்துரைகளை ஓர்வு செய்த பின்பு குடியரசுத்தலைவரால் ஆணையின் வழி வகுத்துரைக்கப்பட்ட என்றும்

பொருள்படும்.]

**271. ஒன்றியத்தின் நோக்கங்களுக்காகக் குறித்தசில தீர்வைகள், வரிகள் ஆகியவற்றின் மீதான மேல்வரி :**

269, 270 ஆகிய உறுப்புகளில் எது எவ்வாறிருப்பினும், நாடாளுமன்றம், எச்சமயத்திலும் அந்த உறுப்புகளில் [1][246 (அ) உறுப்பின்படி சரக்குகள் மற்றும் சேவை வரி தவிர] சுட்டப்பட்டுள்ள தீர்வைகளில் அல்லது வரிகளில் எதனையும் ஒன்றியத்தின் நோக்கங்களுக்காக, மேல்வரி விதிப்பதன் வாயிலாக உயர்த்தலாம்; அத்தகைய மேல்வரியிலிருந்து கிடைக்கும் தொகை முழுவதும் இந்தியத் திரள்நிதியத்தின் பகுதியாக அமைதல் வேண்டும்.

**272.** *[ஒன்றியத்தால் விதித்து ஈட்டப்பட்டு ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே பகிர்ந்தளிக்கப்படும் வரிகள்.]- அரசமைப்புச் (எண்பதாம் திருத்தம்) சட்டம், 2000 இன் 4 ஆம் பிரிவினால் (9–6–2000 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**273. சணல், சணற்பொருள்கள் ஆகியவற்றின் மீதான ஏற்றுமதித் தீர்வைக்குப் பதிலாக மானியங்கள் :**

(1) அசாம், பீகார், [2][ஒடிசா], மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களுக்குச் சணல், சணற்பொருள்கள் ஆகியவற்றின் மீதான ஏற்றுமதித் தீர்வை பொறுத்து ஒவ்வோர் ஆண்டிலும் கிடைக்கும் நிகரத்தொகையிலிருந்து பங்கு எதனையும் குறித்தொதுக்குவதற்குப் பதிலாக, ஒவ்வோர் ஆண்டிலும், அந்த மாநிலங்களின் வருவாய்களுக்கு உதவி மானியங்களாக வகுத்துரைக்கப்படும் தொகைகள் இந்தியத் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்படுதல் வேண்டும்.

(2) சணல் அல்லது சணற்பொருள்களின் மீதான ஏற்றுமதித் தீர்வையை இந்திய அரசு தொடர்ந்து விதித்து வருகின்ற காலம் அல்லது இந்த அரசமைப்பின் தொடக்க நிலையிலிருந்து பத்தாண்டுகள் கழிவுறுகிற காலம், இவற்றில் எது முந்தியதோ அது வரையில், அவ்வாறு வகுத்துரைக்கப்படும் தொகைகள் தொடர்ந்து இந்தியத் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்பட்டு வருதல் வேண்டும்.

---

1. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 11 ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. "ஒரிசா" என்பதற்கு, ஒரிசா (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2011 (15/2011) இன் 5 ஆம் பிரிவினால் (1–11–2011 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(2) Such percentage, as may be prescribed, of the net proceeds of any such tax or duty in any financial year shall not form part of the Consolidated Fund of India, but shall be assigned to the States within which that tax or duty is leviable in that year, and shall be distributed among those States in such manner and from such time as may be prescribed in the manner provided in clause (3).

(3) In this article,"prescribed" means,-

(i) until a Finance Commission has been constituted, prescribed by the President by order, and

(ii) after a Finance Commission has been constituted, prescribed by the President by order after considering the recommendations of the Finance Commission.]

**271. Surcharge on certain duties and taxes for purposes of the Union:**

Notwithstanding anything in articles 269 and 270, Parliament may at any time increase any of the duties or taxes referred to in those articles [1][except the goods and services tax under article 246A,] by a surcharge for purposes of the Union and the whole proceeds of any such surcharge shall form part of the Consolidated Fund of India.

**272.** [*Taxes which are levied and collected by the Union and may be distributed between the Union and the States.*].–*Omitted by the Constitution (Eightieth Amendment) Act, 2000, s. 4 (w.e.f. 9-6-2000)*

**273. Grants in lieu of export duty on jute and jute products:**

(1) There shall be charged on the Consolidated Fund of India in each year as grants-in-aid of the revenues of the States of Assam, Bihar, [2][Odisha] and West Bengal, in lieu of assignment of any share of the net proceeds in each year of export duty on jute and jute products to those States, such sums as may be prescribed.

(2) The sums so prescribed shall continue to be charged on the Consolidated Fund of India so long as any export duty on jute or jute products continues to be levied by the Government of India or until the expiration of ten years from the commencement of this Constitution, whichever is earlier.

1. Ins. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 11 (w.e.f. 16-9-2016).

2. Subs. by Orissa (Alteration of Name) Act, 2011 (15 of 2011) s. 5, for "Orissa" (w.e.f. 1-11-2011).

(3) இந்த உறுப்பில், ''வகுத்துரைக்கப்படும்'' என்னும் சொல், 270 ஆம் உறுப்பில் கூறப்பட்டுள்ள அதே பொருளை உடையது ஆகும்.

**274. மாநிலங்கள் அக்கறை கொண்டுள்ள வரி விதிப்பைப் பாதிக்கும் சட்டமுன் வடிவுகளுக்குக் குடியரசுத்தலைவரின் முன்பரிந்துரை வேண்டுறுவதாகும்:**

(1) மாநிலங்கள் அக்கறை கொண்டுள்ள வரி அல்லது தீர்வை எதனையும் விதிக்கிற அல்லது மாறுதல் செய்கிற அல்லது இந்திய வருமான வரி தொடர்பான சட்டங்களுக்காகப் பொருள் வரையறுக்கப்பட்ட ''வேளாண் வருமானம்'' என்னும் சொல்லின் பொருளை மாறுதல் செய்கிற, அல்லது இந்த அத்தியாயத்தின் மேலேகண்ட வகையங்களில் எதன் படியும் பணத் தொகைகள் எந்த நெறிகளின் படி மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கத்தக்கனவோ அந்த நெறிகளைப் பாதிக்கின்ற, அல்லது இந்த அத்தியாயத்தின் மேலேகண்ட வகையங்களில் குறிப்பிடப்பட்டுள்ள ஒன்றியத்தின் நோக்கங்களுக்காக மேல்வரி எதனையும் விதிக்கின்ற சட்ட முன்வடிவு அல்லது திருத்தம் எதுவும், குடியரசுத்தலைவரின் பரிந்துரையின்மீது அல்லாமல், நாடாளுமன்ற அவைகளில் எதிலும் அறிமுகப்படுத்தப்படுதலோ கொண்டுவரப்படுதலோ ஆகாது.

(2) இந்த உறுப்பில், ''மாநிலங்கள் அக்கறை கொண்டுள்ள வரி அல்லது தீர்வை'' என்னும் சொற்றொடர் —

(அ) ஒரு வரி அல்லது தீர்வையிலிருந்து கிடைக்கும் நிகரத்தொகை முழுவதுமோ அதில் ஒரு பகுதியோ மாநிலம் ஒன்றுக்குக் குறித்தொதுக்கப்படுகின்றதெனில், அந்த வரி அல்லது தீர்வை; அல்லது

(ஆ) ஒரு வரி அல்லது தீர்வையிலிருந்து கிடைக்கும் நிகரத்தொகையைக் குறிக்கும் வகையில், மாநிலம் எதற்கும் இந்தியத் திரள்நிதியத்திலிருந்து நிகழுறும் காலத்தில் தொகைகள் வழங்கப்படுகின்றதெனில், அந்த வரி அல்லது தீர்வை

என்று பொருள்படும்.

**275. குறித்தசில மாநிலங்களுக்கு ஒன்றியத்திலிருந்து மானியங்கள் :**

(1) உதவி தேவையுள்ளவை என்று நாடாளுமன்றம் தீர்மானிக்கும் மாநிலங்களின் வருவாய்களுக்கு உதவி மானியங்களாக ஒவ்வோர் ஆண்டிலும் நாடாளுமன்றம் சட்டத்தினால் வகைசெய்யும் தொகைகள், இந்தியத் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்படுதல் வேண்டும்; வெவ்வேறு மாநிலங்களுக்கு வெவ்வேறான தொகைகள் நிருணயிக்கப்படலாம்:

**வரம்புரையாக** : ஒரு மாநிலத்திலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினரின் நலப்பாட்டினை வளர்ப்பதற்காக, அல்லது அதிலுள்ள பட்டியல் பகுதிகளின் நிருவாகத் தரநிலையை அந்த மாநிலத்தின் பிற பகுதிகளின் நிருவாகத் தரநிலைக்கு உயர்த்துவதற்காக, இந்திய அரசின் ஒப்பேற்புடன் அந்த மாநிலத்தால் மேற்கொள்ளப்படும் வளர்ச்சித் திட்டங்களுக்கான வரவு–செலவுகளைச் செய்ய அந்த மாநிலத்தை இயல்விப்பதற்குத் தேவைப்படும் மூலதனத் தொகையும், தொடர் செலவடைத் தொகையும் அந்த மாநிலத்தின் வருவாய்களுக்கு உதவி மானியங்களாக இந்தியத் திரள்நிதியத்திலிருந்து வழங்கப்படுதல் வேண்டும்:

(3) In this article, the expression "prescribed" has the same meaning as in article 270.

**274. Prior recommendation of President required to Bills affecting taxation in which States are interested:**

(1) No Bill or amendment which imposes or varies any tax or duty in which States are interested, or which varies the meaning of the expression "agricultural income" as defined for the purposes of the enactments relating to Indian income-tax, or which affects the principles on which under any of the foregoing provisions of this Chapter moneys are or may be distributable to States, or which imposes any such surcharge for the purposes of the Union as is mentioned in the foregoing provisions of this Chapter, shall be introduced or moved in either House of Parliament except on the recommendation of the President.

(2) In this article, the expression " tax or duty in which States are interested" means—

(a) a tax or duty the whole or part of the net proceeds whereof are assigned to any State; or

(b) a tax or duty by reference to the net proceeds whereof sums are for the time being payable out of the Consolidated Fund of India to any State.[1]

**275. Grants from the Union to certain States :**

(1) Such sums as Parliament may by law provide shall be charged on the Consolidated Fund of India in each year as grants-in-aid of the revenues of such States as Parliament may determine to be in need of assistance, and different sums may be fixed for different States:

Provided that there shall be paid out of the Consolidated Fund of India as grants-in-aid of the revenues of a State such capital and recurring sums as may be necessary to enable that State to meet the costs of such schemes of development as may be undertaken by the State with the approval of the Government of India for the purpose of promoting the welfare of the Scheduled Tribes in that State or raising the level of administration of the Scheduled Areas therein to that of the administration of the rest of the areas of that State:

மேலும் வரம்புரையாக : அசாம் மாநிலத்தின் வருவாய்களுக்கு உதவி மானியங்களாக—

(அ) ஆறாம் இணைப்புப்பட்டியலின் 20 ஆம் பத்தியுடன் இணைக்கப்பட்டுள்ள அட்டவணையின் [1][I ஆம் பகுதியில்] குறித்துரைக்கப்பட்டுள்ள பழங்குடியினர் பகுதிகளின் நிருவாகத்தைப் பொறுத்தவரை, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முந்திய இரண்டு ஆண்டுகளின்போது வருவாய்களுக்கு மேல் ஏற்பட்ட சராசரி செலவுக்கும்,

(ஆ) மேற்சொன்ன பகுதிகளின் நிருவாகத் தரநிலையை, அந்த மாநிலத்தின் பிறபகுதிகளின் நிருவாகத் தரநிலைக்கு உயர்த்துவதற்காக, இந்திய அரசின் ஒப்பேற்புடன் அந்த மாநிலத்தால் மேற்கொள்ளப்படும் வளர்ச்சித் திட்டங்களுக்கான செலவடைகளுக்கும்

சமமான மூலதனத்தொகையும் தொடர் செலவடைத் தொகையும் இந்தியத் திரள்நிதியத்திலிருந்து வழங்கப்படும்.

[2][1 (அ). 244 (அ) உறுப்பின்படி தன்னாட்சி மாநிலம் உருவாக்கப்படுவதன் பேரிலும், அது முதற்கொண்டும் —

(i) (1) ஆம் கூறுக்கான இரண்டாம் வரம்புரையின் (அ) கூறில் சுட்டப்பட்டுள்ள பழங்குடியினர் பகுதிகள் அனைத்தும் அடங்கியதாக அத்தன்னாட்சி மாநிலம் இருக்குமாயின், அக்கூறின்படி வழங்கப்படுவதாகும் தொகைகள், அந்தத் தன்னாட்சி மாநிலத்திற்கு வழங்கப்படும்; அந்தத் தன்னாட்சி மாநிலம் அந்தப் பழங்குடியினர் பகுதிகளில் சிலவற்றை மட்டுமே கொண்டதாக இருக்குமாயின், குடியரசுத்தலைவர் ஆணையின் வழி குறித்துரைக்கிறவாறு, அசாம் மாநிலத்திற்கும் அத்தன்னாட்சி மாநிலத்திற்குமிடையே அத்தொகை பங்கீடு செய்யப்படுதல் வேண்டும்;

(ii) அந்தத் தன்னாட்சி மாநிலத்தின் நிருவாகத் தர நிலையை அசாம் மாநிலத்தின் பிற பகுதிகளின் நிருவாகத் தரநிலைக்கு உயர்த்துவதற்காக இந்திய அரசின் ஒப்பேற்புடன் அந்தத் தன்னாட்சி மாநிலத்தால் மேற்கொள்ளப்படும் வளர்ச்சித் திட்டங்களுக்கான செலவடைத் தொகைக்குச் சமமான மூலதனத் தொகையும் தொடர் செலவடைத் தொகையும் அந்தத் தன்னாட்சி மாநிலத்தின் வருவாய்களுக்கு உதவிமானியங்களாக இந்தியத் திரள்நிதியத்திலிருந்து வழங்கப்படும்.]

(2). (1) ஆம் கூறின்படி நாடாளுமன்றத்தால் வகைசெய்யப்படும் வரையில், அந்தக் கூறின்படி நாடாளுமன்றத்திற்கு வழங்கப்பட்ட அதிகாரங்கள் குடியரசுத்தலைவரால் ஆணையின்வழி செலுத்தப்படுதல் வேண்டும்; இந்தக் கூறின்படி குடியரசுத்தலைவரால் பிறப்பிக்கப்படும் ஆணை எதுவும், நாடாளுமன்றத்தால் அவ்வாறு செய்யப்பட்ட வகையம் எதற்கும் உட்பட்டுச் செல்திறம் உடையது ஆகும்:

வரம்புரையாக : நிதி ஆணையம் ஒன்று அமைக்கப்பட்ட பின்பு, அந்த ஆணையத்தின் பரிந்துரைகளை ஓர்வு செய்ததன்மேல் அல்லாமல், குடியரசுத்தலைவர் இந்தக் கூறின்படி ஆணை எதனையும் பிறப்பித்தல் ஆகாது.

1. "பகுதி (அ) இல்'' என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 ஆம் பிரிவினால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. அரசமைப்புச் (இருபத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1969 இன் 3 ஆம் பிரிவினால் (25–9–1969 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

Provided further that there shall be paid out of the Consolidated Fund of India as grants-in-aid of the revenues of the State of Assam sums, capital and recurring, equivalent to—

(a) the average excess of expenditure over the revenues during the two years immediately preceding the commencement of this Constitution in respect of the admnistration of the tribal areas specified in [1][Part I] of the table appended to paragraph 20 of the Sixth Schedule; and

(b) the costs of such schemes of development as may be undertaken by that State with the approval of the Government of India for the purpose of raising the level of administration of the said areas to that of the administration of the rest of the areas of that State.

[2][(1A) On and from the formation of the autonomous State under Article 244A,—

(i) any sums payable under clause (a) of the second proviso to clause (1) shall, if the autonomous State comprises all the tribal areas referred to therein, be paid to the autonomous State, and, if the autonomous State comprises only some of those tribal areas, be apportioned between the State of Assam and the autonomous State as the President may, by order specify;

(ii) there shall be paid out of the Consolidated Fund of India as grants-in-aid of the revenues of the autonomous State sums, capital and recurring, equivalent to the costs of such schemes of development as may be undertaken by the autonomous State with the approval of the Government of India for the purpose of raising the level of administration of that State to that of the administration of the rest of the State of Assam.]

(2) Until provision is made by Parliament under clause (1), the powers conferred on Parliament under that clause shall be exercisable by the President by order and any order made by the President under this clause shall have effect subject to any provision so made by Parliament:

Provided that after a Finance Commission has been constituted no order shall be made under this clause by the President except after considering the recommendations of the Finance Commission.

---

1.Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971) s. 71, for " Part A" (w.e.f. 21-1-1972).

2. Ins. by the Constitution (Twenty-second Amendment) Act, 1969, s. 3 (w.e.f. 25-9-1969).

**276. விழைதொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள், வேலையமர்த்தங்கள் ஆகியவற்றின் மீதான வரிகள் :**

(1) 246 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், விழைதொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள் அல்லது வேலையமர்த்தங்கள் பொறுத்து, ஒரு மாநிலத்தின் அல்லது அதிலுள்ள ஒரு நகராட்சி, மாவட்ட வாரியம், உள்ளாட்சி வாரியம் அல்லது பிற உள்ளாட்சி அதிகாரஅமைப்பின் நலனுக்கான வரிகள் தொடர்பாக அந்த மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் எதுவும் அது வருமானத்தின்மீதான ஒரு வரியைப் பற்றியது என்ற காரணத்தால் செல்லாநிலையது ஆவதில்லை.

(2) அந்த மாநிலத்திற்கோ அந்த மாநிலத்திலுள்ள நகராட்சி, மாவட்ட வாரியம், உள்ளாட்சி வாரியம் அல்லது பிற உள்ளாட்சி அதிகாரஅமைப்பு எதற்குமோ, விழைதொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள், வேலையமர்த்தங்கள் ஆகியவற்றின்மீதான வரிகளாக ஒருவரைப் பொறுத்து செலுத்துவதாகும் மொத்தத் தொகை ஆண்டொன்றுக்கு [1][இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு] மேற்படுதல் ஆகாது.

[2] * * *

(3) விழைதொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள், வேலையமர்த்தங்கள் ஆகியவற்றின்மீதான வரிகள் பொறுத்து, மேற்சொன்னவாறு சட்டங்களை இயற்றுவதற்கு ஒரு மாநிலச் சட்டமன்றத்திற்குள்ள அதிகாரமானது, விழைதொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள், வேலையமர்த்தங்கள் ஆகியற்றிலிருந்து வந்தடைகின்ற அல்லது கிடைக்கின்ற வருமானத்தின் மீதான வரிகள் பொறுத்துச் சட்டங்களை இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தினை எவ்வகையிலும் வரம்பிடுவதாகப் பொருள்கொள்ளுதல் ஆகாது.

**277. காப்புரைகள் :**

இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, மாநிலம் ஒன்றின் அரசினால் அல்லது நகராட்சி அல்லது பிற உள்ளாட்சி அதிகாரஅமைப்பு அல்லது குழுமம் எதனாலும் அந்த மாநிலம், நகராட்சி, மாவட்டம் அல்லது பிற வட்டாரப்பகுதி இவற்றின் பொருட்டு சட்டப்படி விதிக்கப்பட்டுவந்த வரிகள், தீர்வைகள், மிகைவரிகள், கட்டணங்கள் எவையும், ஒன்றியத்துப் பட்டியலில் குறிப்பிடப்பட்டிருப்பினும், நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகைசெய்யும் வரையில் தொடர்ந்து விதிக்கப்பட்டு, அதே நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்படலாம்.

**278.** *[குறித்தசில நிதி பற்றிய பொருட்பாடுகள் தொடர்பாக முதலாம் இணைப்புப்பட்டியலின் (ஆ) பகுதியிலுள்ள மாநிலங்கள் உடனான உடன்படிக்கை.]- அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

---

1. "இருநூற்று ஐம்பது ரூபாய்" என்பதற்கு, அரசமைப்புச் (அறுபதாம் திருத்தம்) சட்டம், 1988 இன் 2 ஆம் பிரிவினால் (20–12–1988 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. வரம்புரை *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டது.

**276. Taxes on professions, trades, callings and employments :**

(1) Notwithstanding anything in article 246, no law of the Legislature of a State relating to taxes for the benefit of the State or of a municipality, district board, local board or other local authority therein in respect of professions, trades, callings or employments shall be invalid on the ground that it relates to a tax on income.

(2) The total amount payable in respect of any one person to the State or to any one municipality, district board, local board or other local authority in the state by way of taxes on professions, trades, callings and employments shall not exceed [1][two thousand and five hundred rupees] per annum.

[2] * * *

(3) The power of the Legislature of a State to make laws as aforesaid with respect to taxes on professions, trades, callings and employments shall not be construed as limiting in any way the power of Parliament to make laws with respect to taxes on income accruing from or arising out of professions, trades, callings and employments.

**277. Savings :**

Any taxes, duties, cesses or fees which, immediately before the commencement of this Constitution, were being lawfully levied by the Government of any State or by any municipality or other local authority or body for the purposes of the State, municipality, district or other local area may notwithstanding that those taxes, duties, cesses or fees are mentioned in the Union List, continue to be levied and to be applied to the same purposes until provision to the contrary is made by Parliament by law.

**278.** [*Agreement with States in Part B of the First Schedule with regard to certain financial matters.*]- *Omitted by the Constitution (Seventh Amendment) Act,* 1956, *s.* 29 *and Sch. (w.e.f. 1-11-1956).*

---

1. Subs. by the Constitution (Sixtieth Amendment) Act, 1988, s. 2, for "two hundred and fifty rupees". (w.e.f. 20-12-1988).
2. Proviso omitted by ibid.

**279. "நிகரத் தொகை" முதலியவற்றைக் கணக்கிடுதல் :**

(1) இந்த அத்தியாயத்தின் மேலேகண்ட வகையங்களில், வரி அல்லது தீர்வை ஒன்றின் தொடர்பாக "நிகரத் தொகை" என்பது அவ்வரி அல்லது தீர்வையிலிருந்து கிடைக்கும் தொகையிலிருந்து ஈட்டுவதற்காகும் செலவடை கழிக்கப்பட்டதன் பின்பு வரும் தொகை என்று பொருள்படும் அந்த வகையங்களைப் பொறுத்தவரை, வரையிடம் ஒன்றின் அல்லது அதைச் சேர்வதான வரி அல்லது தீர்வை ஒன்றிலிருந்து அல்லது வரி அல்லது தீர்வை ஒன்றின் பகுதியிலிருந்து கிடைக்கும் நிகரத்தொகை எவ்வளவு என்பதை இந்தியக் கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையர் கண்டறிந்து உறுதிச்சான்றளிப்பார். அவரது அந்த உறுதிச் சான்றே அறுதியானது ஆகும்.

(2) மேலேகண்டவற்றிற்கும், இந்த அத்தியாயத்தின் பிற வெளிப்படையான வகையம் எதற்கும் உட்பட்டு, நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு சட்டமோ குடியரசுத்தலைவரால் பிறப்பிக்கப்பட்ட ஓர் ஆணையோ இந்தப் பகுதியின்படி தீர்வை அல்லது வரி எதிலிருந்தும் கிடைக்கும் தொகை ஒரு மாநிலத்திற்குக் குறித்தொதுக்கப்படும் அல்லது குறித்தொதுக்கத்தக்கதாகும் நேர்வில், எந்த முறையில் அத்தொகை கணக்கிடப்படவேண்டும் என்பதற்கும், எந்தக் காலத்திலிருந்து அல்லது எந்தக் காலத்திலும் முறையிலும் அத்தொகைகள் வழங்கப்படவேண்டும் என்பதற்கும், ஒரு நிதியாண்டிற்கும் மற்றொன்றுக்கும் இடையே கணக்கில் நேரமைவு செய்வதற்கும் பிற சார்வுருவான அல்லது சார்பியலான பொருட்பாடுகளுக்கும் வகைசெய்யலாம்.

**[1][279 (அ). சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றம் :**

(1) குடியரசுத்தலைவர், அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் தொடக்கத் தேதியிலிருந்து அறுபது நாட்களுக்குள், ஆணையின் வழி, சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றம் என வழங்கப்படும் மன்றம் ஒன்றை அமைப்பார்.

(2) சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றம், பின்வரும் உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்கும், அவர்களாவர்:–

(அ) ஒன்றியத்து நிதி அமைச்சர் – தலைமையர்;

(ஆ) வருவாய் அல்லது நிதித் துறையைப் பொறுப்பில் கொண்டுள்ள ஒன்றியத்து இணை அமைச்சர் – உறுப்பினர்;

(இ) ஒவ்வொரு மாநில அரசாலும் நியமனம் செய்யப்பெறும் நிதி அல்லது வரிவிதிப்புத் துறையைப் பொறுப்பில் கொண்டுள்ள அமைச்சர் அல்லது பிற அமைச்சர் எவரும் – உறுப்பினர்கள்.

(3). (2) ஆம் கூறின் (இ) உட்கூறில் குறிப்பிடப்பட்ட சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றத்தின் உறுப்பினர்கள், கூடிய விரைவில், தாம் முடிவு செய்யலாகும் அத்தகைய காலஅளவிற்குத் தங்களிடமிருந்து ஒருவரை மன்றத்தின் துணைத் தலைமையராகத் தெரிந்தெடுத்தல் வேண்டும்.

(4) சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றம்–

---

1. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 12 ஆம் பிரிவினால் (12–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**279. Calculation of "net proceeds", etc. :**

(1) In the foregoing provisions of this Chapter,"net proceeds" means in relation to any tax or duty the proceeds thereof reduced by the cost of collection, and for the purposes of those provisions the net proceeds of any tax or duty, or of any part of any tax or duty, in or attributable to any area shall be ascertained and certified by the Comptroller and Auditor-General of India, whose certificate shall be final.

(2) Subject as aforesaid, and to any other express provision of this Chapter, a law made by Parliament or an order of the President may, in any case where under this Part the proceeds of any duty or tax are , or may be, assigned to any State, provide for the manner in which the proceeds are to be calculated, for the time from or at which and the manner in which any payments are to be made, for the making of adjustments between one financial year and another, and for any other incidental or ancillary matters.

[1][**279A. Goods and Services Tax Council :**

(1) The President shall, within sixty days from the date of commencement of the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, by order, constitue a Council to be called the Goods and Services Tax Council.

(2) The Goods and Services Tax Council shall consist of the following members, namely:-

(a) the Union Finance Minister - Chairperson;

(b) the Union Minister of State in charge of Revenue or Finance - Member;

(c) the Minister in charge of Finance or Taxation or any other Minister nominated by each State Government - Members.

(3) The Members of the Goods and Services Tax Council referred to in sub-clause (c) of clause (2) shall, as soon as may be, choose one amongst themselves to be the Vice-Chairperson of the Council for such period as they may decide.

(4) The Goods and Services tax Council shall make recommendations to the Union and the States on-

---

1. Ins. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 12 (w.e.f. 12-9-2016).

(அ) சரக்குகள் மற்றும் சேவை வரியில் உட்படுத்தப்படுவதாகும் ஒன்றியத்தாலும் மாநிலங்களாலும், உள்ளாட்சி அமைப்புகளாலும் விதிக்கப்படும் வரிகள், மிகைவரிகள் மற்றும் மேல்வரிகள் மீதும்;

(ஆ) சரக்குகள் மற்றும் சேவை வரிவிதிப்பிற்கு உட்படலாகும், அல்லது அதிலிருந்து விலக்களிக்கப்படலாகும் சரக்குகள் மற்றும் சேவை மீதும்;

(இ) மாதிரி சரக்குகள் மற்றும் சேவை வரிச் சட்டங்கள், 269 (அ) உறுப்பின்படி மாநிலங்களிடையேயான வணிகத்தின் அல்லது வாணிபத்தின் போது வழங்கீடுகளின் மீது விதிக்கப்படும் சரக்குகள் மற்றும் சேவை வரியை விதிக்கும், பங்கீடு செய்யும் நெறிகள் மற்றும் வழங்கீட்டு இடத்தை நெறிப்படுத்தும் நெறிகள் மீதும்;

(ஈ) எந்தத் தொடக்கநிலை வணிக மொத்தத் தொகையின் அளவிற்குக் கீழ் சரக்குகளும் சேவையும் சரக்குகள் மற்றும் சேவை வரியிலிருந்து விலக்களிக்கப்படலாகுமோ அந்த அளவு மீதும்;

(உ) சரக்குகள் மற்றும் சேவை வரிக் கட்டுகளுடன் அடிநிலை வீதங்கள் உள்ளடங்கலான வீதங்கள் மீதும்;

(ஊ) இயற்கைப் பேரிடர் அல்லது பேராபத்து எதன்போதும் கூடுதல் வருவாய் ஆதாரங்களைத் திரட்டும் பொருட்டு, குறித்துரைக்கப்பட்ட காலஅளவு ஒன்றிற்குத் தனியுறு வீதம் அல்லது வீதங்கள் மீதும்;

(எ) அருணாச்சலப் பிரதேசம், அசாம், ஜம்மு–காஷ்மீர், மணிப்பூர், மேகாலயா, மிசோரம், நாகாலாந்து, சிக்கிம், திரிபுரா, இமாச்சலப் பிரதேசம் மற்றும் உத்தரகாண்ட் ஆகிய மாநிலங்களைப் பொறுத்து தனியுறு வகையம் மீதும்; மற்றும்

(ஏ) சரக்குகள் மற்றும் சேவை வரி பொறுத்து, மன்றம் முடிபு செய்யலாகும் பிற பொருட்பாடு எதன்மீதும்;

ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் பரிந்துரைகளைச் செய்தல் வேண்டும்.

(5) சுத்திகரிக்கப்படாத கல்நாரெண்ணெய், அதிவேக டீசல், (கல்எண்ணெய் என பொதுவாக வழங்கப்படும்) இயக்க சாராவி, இயற்கை எரிவாயு மற்றும் வான்வழிப்பயண விசையாழி எரிபொருள் ஆகியவற்றின் மீது எந்தத் தேதியன்று சரக்குகள் மற்றும் சேவை வரி விதிக்கப்படும் என்பதைச் சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றம் பரிந்துரை செய்தல் வேண்டும்.

(6) சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றம், இந்த உறுப்பினால் அளிக்கப்பட்ட செயற்பணிகளை ஆற்றுகையில், சரக்குகள் மற்றும் சேவை வரியின் நல்லிணக்கமான கட்டமைப்பிற்கும் சரக்குகள் மற்றும் சேவைகளுக்கு நல்லிணக்கமானதொரு தேசிய வாணிகக்களத்தை வளர்ப்பதற்குமான தேவையின் படி வழிப்படுத்தப்படுதல் வேண்டும்.

(7) சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றத்தின் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் ஒரு பாதிப் பகுதியினர் அதன் கூட்டங்களின் குறைவெண்ணாக அமைவர்.

(8) சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றம், அதன் செயற்பணிகளைப் புரிவதில் நெறிமுறையினைத் தீர்மானித்தல் வேண்டும்.

(9) சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றத்தின் கூட்டம் ஒன்றில், வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களின் மதிப்பீட்டு வாக்குகளில் நான்கில் மூன்று பகுதியினருக்குக் குறையாத பெரும்பான்மையினரால், பின்வரும் கோட்பாடுகளுக்கு இணங்க, ஒவ்வொரு முடிவும் எடுக்கப்படுதல் வேண்டும். அவையாவன:—

(a) the taxes, cesses and surcharges levied by the Union, the States and the local bodies which may be subsumed in the goods and services tax;

(b) the goods and services that may be subjected to, or exempted from the goods and services tax;

(c) model Goods and Services Tax laws, principles of levy, apportionment of Goods and Services Tax levied on supplies in the course of inter-state trade or commerce under article 269 A and the principles that govern the place of supply;

(d) the threshold limit of turnover below which goods and services may be exempted from goods and services tax;

(e) the rates including floor rates with bands of goods and services tax;

(f) any special rate or rates for a specified period, to raise additional resources during any natural calamity or disaster;

(g) special provision with respect to the states of Arunachal Pradesh, Assam, Jammu and Kashmir, Mainpur, Meghalaya, Mizoram, Nagaland, Sikkim, Tripura, Himachal Pradesh and Uttarakhand; and

(h) any other matter relating to the goods and services tax, as the Council may decide.

(5) The Goods and Services Tax Council shall recommend the date on which the goods and services tax be levied on petroleum crude, high speed diesel, motor spirit (commonly known as petrol), natural gas and aviation turbine fuel.

(6) While discharging the function conferred by this article, the Goods and Services Tax Council shall be guided by the need for a harmonised structure of goods and services tax and for the development of a harmonised national market for goods and services.

(7) One-half of the total number of Members of the Goods and Services Tax Council shall constitute the quorum at its meetings.

(8) The Goods and Services Tax Council shall determine the procedure in the performance of its functions.

(9) Every decision of the Goods and Services Tax Council shall be taken at a meeting, by a majority of not less than three – fourths of the weighter votes of the members present and voting, in accordance with the following principles, namely:-

அந்தக் கூட்டத்தில்,

(அ) அளிக்கப்பட்ட மொத்த வாக்குகளில், மைய அரசின் வாக்கு, மூன்றில் ஒரு பங்கு மதிப்புடையதாகும், மற்றும்

(ஆ) அளிக்கப்பட்ட மொத்த வாக்குகளில் மாநில அரசுகள் அனைத்தின் வாக்குகளின் ஒன்றுசேர்ந்தக் கணக்கீடானது, மூன்றில் – இரண்டு பங்கு மதிப்புடையதாகும்.

(10) சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றத்தின் செயல் அல்லது நடவடிக்கைகள் எவையும்—

(அ) மன்றத்தின் அமைப்பாக்கத்திலுள்ள காலியிடம் எதனின், அல்லது குறைபாடு எதனின்; அல்லது

(ஆ) மன்றத்தின் உறுப்பினராக ஒருவரின் அமர்த்தத்திலுள்ள குறைபாடு எதனின்; அல்லது

(இ) நேர்வின் தகுதிகளைப் பாதிக்காத மன்றத்தின் நெறிமுறைகள் சார்ந்த குறைபாடு எதனின்

காரணமாக மட்டுமே செல்லாநிலையது ஆகாது.

(11) சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றத்தின் பரிந்துரைகளிலிருந்து அல்லது அவற்றைச் செயற்படுத்துவதிலிருந்து –

(அ) இந்திய அரசுக்கும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கும் இடையே; அல்லது

(ஆ) இந்திய அரசும் மாநிலம் எதுவும் அல்லது மாநிலங்கள் எவையும் ஒருபுறமும், ஒன்று அல்லது அதற்கு மேற்படும் மாநிலங்கள் மறுபுறமும் இவற்றிற்கு இடையே; அல்லது

(இ) இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்படும் மாநிலங்களுக்கு இடையே, எழும் பூசல் எதனையும் நீதிமுறையில் தீர்மானிப்பதற்குச் சரக்குகள் மற்றும் சேவை வரி மன்றம் இயங்கும் செயலமைவு ஒன்றை அமைத்தல் வேண்டும்.]

280. நிதி ஆணையம் :

(1) குடியரசுத்தலைவர், இந்த அரசமைப்பின் தொடக்க நிலையிலிருந்து இரண்டு ஆண்டுகளுக்குள்ளும், அதற்குப் பின்பு ஒவ்வோர் ஐந்தாவது ஆண்டு முடிவிலும் அல்லது குடியரசுத்தலைவர் தேவையெனக் கருதும் அதற்கு முந்தியதொரு காலத்திலும், நிதி ஆணையம் ஒன்றை ஆணையின்வழி, அமைப்பார்: அவ்வாணையம் குடியரசுத்தலைவரால் அமர்த்தப்பெறும் தலைமையாளர் ஒருவரையும் பிற நான்கு உறுப்பினர்களையும் கொண்டிருக்கும்.

(2) நாடாளுமன்றம் சட்டத்தினால், அந்த ஆணையத்தின் உறுப்பினர்களாக அமர்த்தப் பெறுவதற்குத் தேவைப்படும் தகுதிப்பாடுகளையும் அவர்கள் தெரிந்தெடுக்கப்படவேண்டிய முறையையும் தீர்மானிக்கலாம்.

(a) the vote of the Central Government shall have a weightage of one-thirds of the total votes cast, and

(b) the vote of the Central Government taken together shall have a weightage of two-thirds of the total votes cast, in that meeting.

(10) No act or proceedings of the Goods and Services Tax Council shall be invalid merely by reason of -

(a) any vacancy in, or any defect in, the constitution of the Council; or

(b) any defect in the appointment of a person as a Member of the Council; or

(c) any procedural irregularity of the Council not affecting the merits of the case.

(11) The Goods and Services Tax Council shall establish a mechanism to adjudicate any dispute -

(a) between the Government of India and one or more States; or

(b) between the Government of India and any State or States on one side and one or more other States on the other side; or

(c) between two or more States, arising out of the recommendations of the Council or implementation thereof.]

**280. Finance Commission :**

(1) The President shall, within two years from the commencement of this Constitution and thereafter at the expiration of every fifth year or at such earlier time as the President considers necessary, by order constitute a Finance Commission which shall consist of a Chairman and four other members to be appointed by the President.

(2) Parliament may by law determine the qualifications which shall be requisite for appointment as members of the Commission and the manner in which they shall be selected.

(3) பின்வருவன குறித்து குடியரசுத்தலைவருக்குப் பரிந்துரைகள் செய்வது இந்த ஆணையத்தின் கடமை ஆகும்:

(அ) இந்த அத்தியாயத்தின்படி ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே பிரிக்கப்படவேண்டிய அல்லது பிரிக்கப்படுவதாகும் வரிகளிலிருந்து கிடைக்கும் நிகரத்தொகைகளை அவற்றுக்கிடையே பகிர்ந்தளித்தல் மற்றும், அத்தகைய தொகைகளில் முறையே அவற்றிற்குரிய பங்குகளை அந்த மாநிலங்களுக்கிடையே பகிர்ந்து ஒதுக்குதல்;

(ஆ) இந்தியத் திரள்நிதியத்திலிருந்து மாநிலங்களின் வருவாய்களுக்காக உதவி மானியங்களை அளிப்பதில் பின்பற்றப்பட வேண்டிய நெறிகள்;

[1][(ஆஆ) அந்த மாநிலத்தின் நிதி ஆணையத்தால் செய்யப்படும் பரிந்துரைகளின்பேரில், மாநிலத்திலுள்ள ஊராட்சிகளின் வருவாய் அதிகாரங்களுக்குத் துணையாக அமைவதற்கு ஒரு மாநிலத்தில் திரள்நிதியத்தை அதிகரிப்பதற்குத் தேவைப்படுகிற நடவடிக்கைகள்;]

[2][(இ) மாநில நிதி ஆணையத்தினால் செய்யப்பட்ட பரிந்துரைகளின்பேரில், மாநிலத்திலுள்ள நகராட்சிகளின் வருவாய் ஆதாரங்களுக்குத் துணையாக அமைவதற்கு மாநிலத் திரள்நிதியத்தை அதிகரிப்பதற்கு தேவையான நடவடிக்கைகள்;]

[3][(ஈ)] சீரான நிதி நலம் கருதி குடியரசுத்தலைவர் இந்த ஆணையத்திற்குச் சுட்டியனுப்பும் பிற பொருட்பாடு எதுவும்.

(4) அந்த ஆணையம் தனது நெறிமுறையைத் தானே தீர்மானித்துக் கொள்ளுதல் வேண்டும்; மேலும், தனது செயற்பணிகளைப் புரிந்துவருவதற்கு, நாடாளுமன்றம் சட்டத்தினால் அதற்கு வழங்கும் அதிகாரங்களையும் அது கொண்டிருத்தல் வேண்டும்.

**281. நிதி ஆணையத்தின் பரிந்துரைகள் :**

குடியரசுத்தலைவர், இந்த அரசமைப்பின் வகையங்களின்படி இந்த நிதி ஆணையம் செய்யும் பரிந்துரை ஒவ்வொன்றையும், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் குறித்து விளக்க விவரக்குறிப்புரையுடன் சேர்த்து நாடாளுமன்றத்தின் ஒவ்வோர் அவை முன்பும் வைக்குமாறு செய்வார்.

---

1. அரசமைப்புச் (எழுபத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1992 இன் 3 ஆம் பிரிவினால் (24–4–1993 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (எழுபத்து நான்காம் திருத்தம்) சட்டம். 1992 இன் 3 ஆம் பிரிவினால் (1–6–1993 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. (இ) உட்கூறு *மேற்படிச் சட்டத்தினால்,* (ஈ) உட்கூறாக மறு எழுத்திடப்பட்டது.

(3) It shall be the duty of the Commission to make recommendations to the President as to —

(a) the distribution between the Union and the States of the net proceeds of taxes which are to be, or may be, divided between them under this Chapter and the allocation between the States of the respective shares of such proceeds;

(b) the principles which should govern the grants-in-aid of the revenues of the States out of the Consolidated Fund of India;

[1][(bb) the measures needed to augment the Consolidated Fund of a State to supplement the resources of the Panchayats in the State on the basis of the recommendations made by the Finance Commission of the State;]

[2][(c) the measures needed to augment the Consolidated Fund of a State to supplement the resources of the Municipalities in the State on the basis of the recommendations made by the Finance Commission of the State;]

[3][(d)] any other matter referred to the Commission by the President in the interests of sound finance.

(4) The Commission shall determine their procedure and shall have such powers in the performance of their functions as Parliament may by law confer on them.

**281. Recommendations of the Finance commission :**

The President shall cause every recommendation made by the Finance Commission under the provisions of this Constitution together with an explanatory memorandum as to the action taken thereon to be laid before each House of Parliament.

---

1. Ins. by the Constitution (Seventy-third Amendment) Act, 1992, s. 3 (w.e.f. 24-4-1993).
2. Ins. by the Constitution (Seventy-fourth Amendment) Act, 1992, s. 3 (w.e.f. 1-6-1993).
3. Sub-clause *(c)* re-lettered as sub-clause *(d)* by *ibid.*

## நிதி பற்றிய பல்வகை வகையங்கள்

**282. ஒன்றியம் அல்லது ஒரு மாநிலம் அதன் வருவாய்களிலிருந்து செய்வதாகும் செலவுகள் :**

ஒன்றியம் அல்லது ஒரு மாநிலம், பொது நோக்கம் எதற்காகவும், அந்நோக்கம் நாடாளுமன்றம் அல்லது அந்த மாநிலச் சட்டமன்றச் சட்டங்கள் இயற்றுவதற்கு உரியதொன்றாக இல்லாதபோதிலும், மானியங்கள் எவற்றையும் வழங்கலாம்.

**283. திரள்நிதியங்கள் நினையாநிகழ்வு நிதியங்கள், அரசுப் பொதுக் கணக்குகளில் வரவு வைக்கப்படும் பணத்தொகைகள் ஆகியவற்றைக் கைப்பொறுப்பில் வைத்திருத்தல் முதலியவை :**

(1) இந்தியத் திரள்நிதியம், இந்திய நினையாநிகழ்வு நிதியம் ஆகியவற்றைக் கைப்பொறுப்பில் வைத்திருப்பதும், அந்நிதியங்களில் பணத்தொகைகளைச் செலுத்துவதும், அவற்றிலிருந்து பணத் தொகைகளைத் திரும்ப எடுப்பதும், இந்திய அரசால் அல்லது அதன் சார்பாகப் பெற்றுக் கொள்ளப்பட்டு அந்நிதியங்களில் வரவு வைக்கப்பட்டவை அல்லாத பிற பொதுப் பணத் தொகைகளைக் கைப்பொறுப்பில் வைத்திருப்பதும், அவற்றை இந்தியப் பொதுக் கணக்கில் செலுத்துவதும் இந்தக் கணக்கிலிருந்த பணத் தொகைகளைத் திரும்ப எடுப்பதும் மேற்சொன்ன பொருட்பாடுகளுக்குத் தொடர்பான அல்லது அவற்றிற்குச் சார்பியல்வான பிற பொருட்பாடுகள் அனைத்தும் நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தினால் ஒழுங்குறுத்தப்படுதல் வேண்டும்; அதன் பொருட்டு அவ்வாறு வகை செய்யப்படும் வரை, குடியரசுத்தலைவர் செய்யும் விதிகளின் வழி அவை ஒழுங்குறுத்தப்படுதல் வேண்டும்.

(2) ஒரு மாநிலத்தின் திரள்நிதியம், ஒரு மாநிலத்தின் நினையாநிகழ்வு நிதியம் ஆகியவற்றைக் கைப்பொறுப்பில் வைத்திருப்பதும், அந்நிதியங்களில் பணத்தொகைகளைச் செலுத்துவதும், அவற்றிலிருந்து பணத்தொகைகளைத் திரும்ப எடுப்பதும், அந்த மாநில அரசால் அல்லது அதன் சார்பாகப் பெற்றுக்கொள்ளப்பட்டு அந்நிதியங்களில் வரவுவைக்கப்பட்டவை அல்லாத பிற பொதுப் பணத்தொகைகளைக் கைப்பொறுப்பில் வைத்திருப்பதும், அவற்றை மாநிலப் பொதுக் கணக்கில் செலுத்துவதும், அந்தக் கணக்கிலிருந்து பணத்தொகைகளைத் திரும்ப எடுப்பதும், மேற்சொன்ன பொருட்பாடுகளுக்குத் தொடர்பான அல்லது அவற்றிற்குச் சார்பியல்வான பிற பொருட்பாடுகள் அனைத்தும் அந்த மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தினால் ஒழுங்குறுத்தப்படுதல் வேண்டும்; அதன்பொருட்டு அவ்வாறு வகைசெய்யப்படும் வரையில், அந்த மாநிலத்தின் ஆளுநர்[1]*** செய்யும் விதிகளின்வழி அவை ஒழுங்குறுத்தப்படுதல் வேண்டும்.

**284. அரசுப் பணியாளர்களாலும் நீதிமன்றங்களாலும் பெற்றுக்கொள்ளப்படும் வழக்காளிகளின் வைப்பீடுகள், பிற பணத்தொகைகள் ஆகியவற்றைக் கைப்பொறுப்பில் வைத்திருத்தல் :**

(அ) இந்திய அரசால் அல்லது, நேர்வுக்கேற்ப, ஒரு மாநில அரசால் திரட்டப்பட்ட அல்லது பெறப்பட்ட வருவாய்கள் அல்லது பொதுப் பணத்தொகைகள் அல்லாத வகையில் ஒன்றியத்தின் அல்லது ஒரு மாநிலத்தின் அலுவற்பாடுகள் தொடர்பாக வேலையில் அமர்த்தப்பெற்றுள்ள அலுவலர் எவராலும் அத்தகைய அலுவலர் என்ற முறையில் அவரால் பெற்றுக்கொள்ளப்பட்ட அல்லது அவரிடம் வைப்பீடு செய்யப்பட்ட, அல்லது

1. ''அல்லது இராஜபிரமுகர்'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1-11-1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

## MISCELLANEOUS FINANCIAL PROVISIONS

**282. Expenditure defrayable by the Union or a State out of its revenues :**

The Union or a State may make any grants for any public purpose, notwithstanding that the purpose is not one with respect to which Parliament or the legislature of the State, as the case may be, may make laws.

**283. Custody, etc., of Consolidated Funds, Contingency Funds and moneys credited to the public accounts :**

(1) The custody of the Consolidated Fund of India and the Contingency Fund of India, the payment of moneys into such Funds, the withdrawal of moneys therefrom, the custody of public moneys other than those credited to such Funds received by or on behalf of the Government of India, their payment into the public account of India and the withdrawal of moneys from such account and all other matters connected with or ancillary to matters aforesaid shall be regulated by law made by Parliament, and, until provision in that behalf is so made, shall be regulated by rules made by the President.

(2) The custody of the Consolidated Fund of a State and the Contingency Fund of a State, the payment of moneys into such Funds, the withdrawal of moneys therefrom, the custody of public moneys other than those credited to such Funds received by or on behalf of the Government of the State, their payment into the public account of the State and the withdrawal of moneys from such account and all other matters connected with or ancillary to matters aforesaid shall be regulated by law made by the Legislature of the State, and, until provision in that behalf is so made, shall be regulated by rules made by the Governor[1]*** of the State.

**284. Custody of suitors' deposits and other moneys received by public servants and courts :**

All moneys received by or deposited with —

(a) any officer employed in connection with the affairs of the Union or of a State in his capacity as such, other than revenues or public moneys raised or received by the Government of India or the Government of the State, as the case may be, or

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

(ஆ) வழக்கு, பொருட்பாடு அல்லது கணக்கு ஒன்றில் அல்லது நபர்களின் பேரில் வரவுவைக்கப்படுவதற்காக இந்திய ஆட்சிநிலவரைக்குள் உள்ள ஒரு நீதிமன்றத்தினால் பெற்றுக்கொள்ளப்பட்ட அல்லது அதனிடம் வைப்பீடு செய்யப்பட்ட

பணத் தொகைகள் அனைத்தும், இந்தியப் பொதுக் கணக்கில், அல்லது நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் அரசுப் பொதுக் கணக்கில் செலுத்தப்படுதல் வேண்டும்.

**285. மாநில வரி விதிப்பிலிருந்து ஒன்றியத்து சொத்திற்கு விலக்களிப்பு :**

(1) ஒன்றியத்தின் சொத்து எதுவும், நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகைசெய்யும் அளவிற்கு அல்லாமல், மாநிலம் ஒன்றினால் அல்லது மாநிலம் ஒன்றிலுள்ள அதிகாரஅமைப்பினால் விதிக்கப்படும் வரிகள் அனைத்திலிருந்தும் விலக்களிக்கப்படுவதாகும்.

(2) நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகைசெய்யும் வரையில், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு ஒரு மாநிலத்தில் வரிவிதிப்புக்கு உற்றதாக இருந்த அல்லது உற்றதாகக் கருதப்பட்ட ஒன்றியத்துச் சொத்து எதன்மீதும் அந்த மாநிலத்தில் வரி எதுவும் தொடர்ந்து விதிக்கப்பட்டு வரும் வரையில், அவ்வரியை அந்த மாநிலத்திலுள்ள அதிகாரஅமைப்பு எதுவும் விதிப்பதற்கு, (1) ஆம் கூறிலுள்ள எதுவும் தடையூறு ஆவதில்லை .

**286. சரக்குகளின் விற்பனை அல்லது கொள்வினை மீது வரி விதிப்பது குறித்த வரையறைகள் :**

(1) மாநிலம் ஒன்றின் சட்டம் எதுவும், [1][சரக்குகள் அல்லது சேவை அல்லது அவை இரண்டின் வழங்கீடு நிகழுமிடத்து அத்தகைய வழங்கீடு] –

(அ) அந்த மாநிலத்திற்கு வெளியே; அல்லது

(ஆ) இந்திய ஆட்சிநிலவரைக்குள் [2][அச்சரக்குகளை அல்லது சேவையை அல்லது அவை இரண்டையும்] இறக்குமதி செய்கையில் அல்லது அதற்கு வெளியே [2][அச்சரக்குகளை அல்லது சேவையை அல்லது அவை இரண்டையும்] ஏற்றுமதி செய்கையின்

மீது வரி எதனையும் விதித்தலோ விதிப்பதற்கு அதிகாரம் அளித்தலோ ஆகாது.

[3]* * *

[4][(2) (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்டுள்ள வழிமுறைகளில் எதன்படியும் [5][சரக்குகளின் அல்லது சேவையின் அல்லது அவை இரண்டின் வழங்கீடு] எப்போது நிகழ்கிறது என்பதைத் தீர்மானிப்பதற்கான நெறிகளை நாடாளுமன்றம் சட்டத்தினால் வகுக்கலாம்.]

---

1. "சரக்குகளின் விற்பனை அல்லது கொள்வினை நிகழுமிடத்து அத்தகைய சரக்குகளின் விற்பனை அல்லது கொள்வினை" என்ற சொற்களுக்கு, அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 13 (i) (அ) பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

2. "சரக்குகள்" என்ற சொல்லுக்கு, *மேற்படிச் சட்டத்தின்* (13) (i) (ஆ) பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டது.

3. (1) ஆம் கூறின் *விளக்கம்,* அரசமைப்புச் (ஆறாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 4 ஆம் பிரிவினால் (11–9–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

4. (2) மற்றும் (3) ஆம் கூறுகளுக்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டன.

5. "சரக்குகளின் விற்பனை அல்லது கொள்வினை நிகழுமிடத்து" என்ற சொற்களுக்கு, அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 13 (ii) ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

(b) any court within the territory of India to the credit of any cause, matter, account or persons,

shall be paid into the public account of India or the public account of the State, as the case may be.

**285. Exemption of property of the Union from State taxation :**

(1) The property of the Union shall, save in so far as Parliament may by law otherwise provide, be exempt from all taxes imposed by a State or by any authority within a State.

(2) Nothing in clause (1) shall, until Parliament by law otherwise provides prevent any authority within a State from levying any tax on any property of the Union to which such property was immediately before the commencement of this Constitution liable or treated as liable, so long as that tax continues to be levied in that State.

**286. Restrictions as to imposition of tax on the sale or purchase of goods :**

(1) No law of a State shall impose, or authorise the imposition of, a tax on [1][ the supply of goods or of services or both, where such supply takes place]-

(a) outside the State; or

(b) in the course of the import of the [2][goods or services or both] into, or export of the [2][goods or services or both] out of, the territory of India.

[3]* * *

[4][(2) Parliament may by law formulate principles for determining when a [5][supply of goods or of services or both] in any of the ways mentioned in clause (1).]

1. Subs. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s.13(*i*)(A), for the words "the sale or purchase of goods where such sale or purchase takes place" (w.e.f. 16-9-2016).
2. Subs. by s. 13(*i*)(*B*), *ibid.*, for the words "goods".
3. *Explanation* to cl. *(1)* omitted by the Constitution (Sixth Amendment) Act, 1956, s. 4 (w.e.f. 11-9-1956).
4. Subs. by *ibid.* for cls. *(2)* and *(3)*.
5. Subs. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 13(*ii*), for the words "sale or purchase of goods takes place" (w.e.f. 16-9-2016).

[1]* * *

## 287. மின்சாரம் மீதான வரிகளிலிருந்து விலக்களிப்பு :

நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகைசெய்யும் அளவிற்கு அல்லாமல், மாநிலம் ஒன்றின் சட்டம் எதுவும் –

(அ) இந்திய அரசால் பயனுறுத்தப்படுகிற அல்லது இந்திய அரசின் பயனுறுத்தத்திற்காக அந்த அரசிற்கு விற்கப்படுகிற; அல்லது

(ஆ) இருப்பூர்தியம் எதனையும் அமைப்பதில், பேணிவருவதில் அல்லது இயக்குவதில் இந்திய அரசாலோ அந்த இருப்பூர்தியத்தை இயக்கிவருகிற ஓர் இருப்பூர்தி நிறுமத்தாலோ பயனுறுத்தப்படுகிற அல்லது இருப்பூர்தியம் எதனையும் அமைப்பதில் பேணிவருவதில் அல்லது இயக்குவதில் பயனுறுத்தப்படுவதற்காக

அந்த அரசிற்கு அல்லது மின்சாரத்தின் அந்த இருப்பூர்தி நிறுமத்திற்கு (அதை உற்பத்தி செய்தது அரசாயினும் பிறராயினும்) பயனுறுத்தம் அல்லது விற்பனையின்மீது வரி எதனையும் விதித்தலோ விதிப்பதற்கு அதிகாரம் அளித்தலோ ஆகாது; மேலும், மின்சாரத்தின் விற்பனை மீது வரி எதனையும் விதிக்கின்ற அல்லது விதிப்பதற்கு அதிகாரம் அளிக்கின்ற அத்தகைய சட்டம் எதுவும், இந்திய அரசால் பயனுறுத்தப்படுவதற்காக அந்த அரசிற்கு அல்லது இருப்பூர்தியம் எதனையும் அமைப்பதில், பேணுவதில் அல்லது இயக்குவதில் பயனுறுத்தப்படுவதற்காக மேற்சொன்னவாறு அத்தகைய இருப்பூர்திய நிறுமத்திற்கு விற்பனை செய்யப்படும் மின்சாரத்தின் விலை, மின்சாரத்தைக் கணிசமான அளவிற்குப் பயனுறுத்தும் பிறருக்குக் குறிக்கப்படும் விலையைவிட அந்த வரித்தொகையின் அளவிற்குக் குறைந்ததாக இருக்கும்படி உறுதிசெய்தல்வேண்டும்.

## 288. குறித்தசில நேர்வுகளில் நீர் அல்லது மின்சாரத்திற்கு மாநிலங்களின் வரிவிதிப்பிலிருந்து விலக்களிப்பு :

(1) குடியரசுத்தலைவர் ஆணையின்வழி பிறவாறு வகைசெய்யும் அளவிற்கு அல்லாமல், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு செல்லாற்றலில் இருந்த மாநிலச் சட்டம் எதுவும், மாநிலங்களிடையே அமைந்த ஆறு அல்லது ஆற்றுப்பள்ளத்தாக்கு ஒன்றை ஒழுங்குறுத்துவதற்காகவோ மேம்படுத்துவற்காகவோ நிலவுறும் சட்டம் ஒன்றினால் அல்லது நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டம் ஒன்றினால் நிறுவப்படும் அதிகாரஅமைப்பு எதனாலும் சேமித்து வைக்கப்படுகிற, உற்பத்தி செய்யப்படுகிற, பயனுறுத்தப்படுகிற, வழங்கப்படுகிற அல்லது விற்கப்படுகிற நீர் அல்லது மின்சாரம் எதனையும் பொறுத்து வரி ஒன்றை விதித்தலோ விதிப்பதற்கு அதிகாரம் அளித்தலோ ஆகாது.

**விளக்கம்.** – இந்தக் கூறில், “செல்லாற்றலில் இருந்த மாநிலச் சட்டம்” என்னும் சொற்றொடர், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு நிறைவேற்றப்பட்டு அல்லது இயற்றப்பட்டு முன்னரே நீக்கறவு செய்யப்படாத ஒரு சட்டத்தை, அத்தகைய சட்டம் எதுவும் அல்லது அதன் பகுதிகள் எவையும் அப்போது முற்றிலுமோ குறிப்பிட்ட பரப்பிடங்களிலோ செயற்பாட்டில் இல்லாதிருப்பினும், உள்ளடக்கும்.

---

1. (3) ஆம் கூறு, அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 13 (iii) ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

[1]* * *

## 287. Exemption from taxes on electricity :

Save in so far as Parliament may by law otherwise provide, no law of a State shall impose, or authorise the imposition of, a tax on the consumption or sale of electricity (whether produced by a Government or other persons) which is—

(a) consumed by the Government of India, or sold to the Government of India for consumption by that Government; or

(b) consumed in the construction, maintenance or operation of any railway by the Government of India or a railway company operating that railway, or sold to that Government or any such railway company for consumption in the construction, maintenance or operation of any railway,

and any such law imposing, or authorising the imposition of, a tax on the sale of electricity shall secure that the price of electricity sold to the Government of India for consumption by that Government, or to any such railway company as aforesaid for consumption in the construction, maintenance or operation of any railway, shall be less by the amount of the tax than the price charged to other consumers of a substantial quantity of electricity.

## 288. Exemption from taxation by States in respect of water or electricity in certain cases :

(1) Save in so far as the President may by order otherwise provide, no law of a State in force immediately before the commencement of this Constitution shall impose, or authorise the imposition of, a tax in respect of any water or electricity stored, generated, consumed, distributed or sold by any authority established by any existing law or any law made by Parliament for regulating or developing any inter-state river or river-valley.

**Explanation.**— The expression "law of a State in force" in this clause shall include a law of a State passed or made before the commencement of this Constitution and not previously repealed, notwithstanding that it or parts of it may not be then in operation either at all or in particular areas.

---

1. Cl. *(3)* omitted by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 13 (*iii*) (w.e.f. 16-9-2016).

(2) மாநிலம் ஒன்றின் சட்ட மன்றம் (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்ட வரி எதனையும் சட்டத்தினால் விதிக்கலாம் அல்லது விதிப்பதற்கு அதிகாரம் அளிக்கலாம்; ஆனால், அத்தகைய சட்டம் எதுவும் குடியரசுத்தலைவரின் ஓர்விற்காக ஒதுக்கிவைக்கப்பட்டு, அவருடைய ஏற்பிசைவை அது பெற்றிருந்தாலன்றி, செல்திறம் உடையது ஆகாது; மேலும், அத்தகைய சட்டம் எதுவும், அதிகாரஅமைப்பு ஒன்றினால் அச்சட்டத்தின்படி வகுக்கப்படும் விதிகளின் அல்லது பிறப்பிக்கப்படும் ஆணைகளின்வழி அத்தகைய வரியின் வீதங்களையும் பிற வரிச் சுமத்தங்களையும் நிருணயிப்பதற்கு வகைசெய்யுமாயின், அத்தகைய விதியை வகுப்பதற்கு அல்லது ஆணையைப் பிறப்பிப்பதற்குக் குடியரசுத்தலைவரின் முன்னிசைவினைப் பெறுதல் வேண்டும் என அச்சட்டம் வகைசெய்தல் வேண்டும்.

**289. மாநிலம் ஒன்றின் சொத்திற்கும் வருமானத்திற்கும் ஒன்றியத்து வரி விதிப்பிலிருந்து விலக்களிப்பு:**

(1) மாநிலம் ஒன்றின் சொத்தும் வருமானமும் ஒன்றியத்து வரி விதிப்பிலிருந்து விலக்களிப்புப் பெறுவன ஆகும்.

(2) மாநிலம் ஒன்றின் அரசாலோ அதன் சார்பாகவோ நடத்தப்படும் எவ்வகையானதுமான வணிகம், வணிகத்தொழில் அல்லது அதனுடன் தொடர்புடைய நடவடிக்கைகள் பொறுத்து அல்லது அத்தகைய வணிகம், வணிகத்தொழில் பொருட்டுப் பயன்படுத்தப்படுகிற அல்லது கையுடைமையிலிருக்கிற சொத்து எதனையும் பொறுத்து, அதன் தொடர்பாக வந்தடைகின்ற அல்லது அதிலிருந்து கிடைக்கின்ற வருமானம் எதனையும் பொறுத்து, நாடாளுமன்றம் சட்டத்தினால் வகைசெய்யும் அளவு, ஏதேனும் இருப்பின், அந்த அளவிற்கு வரி எதனையும் ஒன்றியம் விதிப்பதற்கோ விதிப்பதற்கு அதிகாரம் அளிப்பதற்கோ (1) ஆம் கூறிலுள்ள எதுவும் தடையூறு ஆவதில்லை .

(3) . (2) ஆம் கூறிலுள்ள எதுவும், அரசின் வழக்கமான செயற்பணிகளைச் சார்ந்தவை என நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும் வணிகம் அல்லது வணிகத்தொழில் எதற்குமோ எவ்வகையான வணிகம் அல்லது வணிகத்தொழில் எதற்குமோ பொருந்துவது இல்லை.

**290. குறித்தசில செலவுகள், ஓய்வூதியங்கள் ஆகியவை பொறுத்த நேரமைவு :**

இந்த அரசமைப்பின் வகையங்களின்படி நீதிமன்றம் அல்லது ஆணையம் ஒன்றின் செலவுகள் அல்லது இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு, முடியரசின் கீழ் இந்தியாவின் அல்லது அத்தகைய தொடக்கநிலைக்குப் பின்பு ஒன்றியம் அல்லது மாநிலம் ஒன்றின் அலுவற்பாடுகள் தொடர்பாகப் பணிபுரிந்திருக்கின்ற ஒருவருக்கு அல்லது அவர் பொருட்டு வழங்கப்படுவதான ஓய்வூதியம் இந்தியத் திரள்நிதியத்தின் மீதோ, மாநிலம் ஒன்றின் திரள்நிதியத்தின் மீதோ சார்த்தப்பட்டதாக இருக்குமிடத்து—

(அ) இந்தியத் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்பட்ட ஒரு செலவாக இருக்கும் நேர்வில், அந்நீதிமன்றமோ ஆணையமோ மாநிலம் ஒன்றின் தனிப்பட்ட தேவைகளில் எதனையும் நிறைவுறுத்துமாயின், அல்லது அந்த நபர் மாநிலம் ஒன்றின் அலுவற்பாடுகள் தொடர்பாக முழுமையாகவோ பகுதியாகவோ பணிபுரிந்திருப்பாராயின்; அல்லது

(ஆ) மாநிலம் ஒன்றின் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்பட்ட ஒரு செலவாக இருக்கும் நேர்வில், அந்நீதிமன்றமோ ஆணையமோ ஒன்றியத்தின் அல்லது பிறிதொரு மாநிலத்தின் தனிப்பட்ட தேவைகளில் எதனையும் நிறைவுறுத்துமாயின் அல்லது அந்த நபர் ஒன்றியத்தின் அல்லது பிறிதொரு மாநிலத்தின் அலுவற்பாடுகள் தொடர்பாக முழுமையாகவோ பகுதியாகவோ பணிபுரிந்திருப்பாராயின்

(2) The Legislature of a State may by law impose, or authorise the imposition of, any such tax as is mentioned in clause (1), but no such law shall have any effect unless it has, after having been reserved for the consideration of the President, received his assent; and if any such law provides for the fixation of the rates and other incidents of such tax by means of rules or orders to be made under the law by any authority, the law shall provide for the previous consent of the President being obtained to the making of any such rule or order.

**289. Exemption of property and income of a State from Union taxation :**

(1) The property and income of a State shall be exempt from Union taxation.

(2) Nothing in clause (1) shall prevent the Union from imposing, or authorising imposition of, any tax to such extent, if any, as Parliament may by law provide in respect of a trade or business of any kind carried on by, or on behalf of, the Government of a State, or any operations connected therewith, or any property used or occupied for the purposes of such trade or business, or any income accruing or arising in connection therewith.

(3) Nothing in clause (2) shall apply to any trade or business, or to any class of trade or business, which Parliament may by law declare to be incidental to the ordinary functions of Government.

**290. Adjustment in respect of certain expenses and pensions :**

Where under the provisions of this Constitution the expenses of any Court or Commission, or the pension payable to or in respect of a person who has served before the commencement of this Constitution under the Crown in India or after such commencement in connection with the affairs of the Union or of a State, are charged on the Consolidated Fund of India or the Consolidated Fund of a State, then, if—

(a) in the case of a charge on the Consolidated Fund of India, the court or Commission serves any of the separate needs of a State, or the person has served wholly or in part in connection with the affiairs of a State; or

(b) in the case of a charge on the Consolidated Fund of a State, the court or Commission serves any of the separate needs of the Union or another State, or the person has served wholly or in part in connection with the affairs of the Union or another State,

அச்செலவுகள் அல்லது ஓய்வூதியம் பொறுத்து ஒப்பியவாறான பங்களிப்புத் தொகை அல்லது ஒப்புதல் ஏற்படாதவிடத்து இந்தியாவின் தலைமை நீதிபதியால் அமர்த்தப்பெறும் பொதுவரால் தீர்மானிக்கப்படும் பங்களிப்புத் தொகை, அந்த மாநிலத்தின் திரள்நிதியத்தின் மீது அல்லது, நேர்வுக்கேற்ப, இந்தியத் திரள்நிதியத்தின் மீதோ அல்லது பிற மாநிலத்தின் திரள்நிதியத்தின் மீதோ சார்த்தப்பட்டு, அதிலிருந்து வழங்கப்படுதல் வேண்டும்.

**[1][290 (அ). குறித்தசில தேவசுவம் நிதியங்களுக்கு ஆண்டுதோறும் பணம் செலுத்துதல் :**

ஒவ்வோர் ஆண்டும் நாற்பத்தாறு இலட்சத்து ஐம்பதாயிரம் ரூபாய் கேரள மாநிலத்தின் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்பட்டு அதிலிருந்து திருவாங்கூர் தேவசுவம் நிதியத்திற்கு வழங்கப்படும்; மேலும், திருவாங்கூர்– கொச்சி மாநிலத்திலிருந்து 1956 ஆம் ஆண்டு நவம்பர் முதல் நாளன்று தமிழ்நாடு மாநிலத்திற்கு மாற்றப்பட்ட நிலவரைகளில் உள்ள இந்துக் கோயில்கள் வழிபடுதலங்கள் ஆகியவற்றைப் பேணிவருவதற்காகப் பதின்மூன்று இலட்சத்து ஐம்பதாயிரம் ரூபாய் [2][தமிழ்நாடு] மாநிலத்தின் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்பட்டு அதிலிருந்து அந்த மாநிலத்தில் நிறுவப்பட்டுள்ள தேவசுவம் நிதியத்திற்கு ஒவ்வோர் ஆண்டும் வழங்கப்படுதல் வேண்டும்.]

**291.** *[இந்தியக் குறுநில அரசர்களுக்கான மானியத் தொகைகள்.]- அரசமைப்புச் (இருபத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1971 இன் 2 ஆம் பிரிவினால் (28–12–1971 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

## அத்தியாயம் II

## கடன்பெறுதல்

### 292. இந்திய அரசு கடன்பெறுதல் :

ஒன்றியத்து ஆட்சி அதிகாரமானது, நாடாளுமன்றம் சட்டத்தினால், அவ்வப்போது நிருணயிக்கும் வரம்புகள், எவையேனுமிருப்பின், அவற்றிற்குள்ளடங்கி, இந்தியத் திரள்நிதியத்தின் பிணையத்தின்பேரில் கடன் பெறுவதையும் அவ்வாறு நிருணயிக்கப்பட்ட வரம்புகள், எவையேனுமிருப்பின், அவற்றிற்குள்ளடங்கி, பொறுப்புறுதிகள் அளிப்பதையும் அளாவி நிற்கும்.

### 293. மாநிலங்கள் கடன்பெறுதல் :

(1) இந்த உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, மாநிலம் ஒன்றின் ஆட்சி அதிகாரமானது, அந்த மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் அவ்வப்போது நிருணயிக்கும் வரம்புகள், எவையேனுமிருப்பின், அவற்றிற்குள்ளடங்கி, அந்த மாநிலத் திரள்நிதியத்தின் பிணையத்தின்பேரில் இந்திய நிலவரைக்குள் கடன் வாங்குவதையும், அவ்வாறு நிருணயிக்கப்பட்ட வரம்புகள் எவையேனுமிருப்பின், அவற்றிற்குள்ளடங்கி, பொறுப்புறுதிகள் அளிப்பதையும் அளாவி நிற்கும்.

(2) இந்திய அரசு, நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ விதிக்கப்படும் வரைக்கட்டுகளுக்குட்பட்டு, மாநிலம் எதற்கும் பெறுகடன்கள் வழங்கலாம் அல்லது 292 ஆம் உறுப்பின்படி நிருணயிக்கப்பட்ட வரம்புகள் எவற்றிற்கும் மேற்படாமல், மாநிலம் ஒன்றினால் எழுப்பப்படும் பெறுகடன்கள் பொறுத்து பொறுப்புறுதிகள் அளிக்கலாம்; அத்தகைய பெறுகடன்கள் வழங்குவதற்குத் தேவைப்படும் தொகைகள் இந்தியத் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்படும்.

(3) இந்திய அரசால் அல்லது அதற்கு முன்பிருந்த அரசால் மாநிலம் ஒன்றிற்கு வழங்கப்பட்டிருக்கின்ற அல்லது இந்திய அரசால் அல்லது அதற்கு முன்பிருந்த அரசால் பொறுப்புறுதி அளிக்கப்பட்டிருக்கின்ற பெறுகடன் ஒன்றின் பகுதி எதுவும் இன்னும் கொடுபடாமல் இருக்குமாயின், அந்த மாநிலம், இந்திய அரசின் இசைவில்லாமல், பெறுகடன் எதனையும் எழுப்புதல் ஆகாது.

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 19 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. "மெட்ராஸ்" என்பதற்கு, மெட்ராஸ் மாநில (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 1968 (53/1968) இன் 4 ஆம் பிரிவினால் (14–1–1969 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

there shall be charged on and paid out of the Consolidated Fund of the State or, as the case may be, the Consolidated Fund of India or the Consolidated Fund of the other State, such contribution in respect of the expenses or pension as may be agreed, or as may in default of agreement be determined by an arbitrator to be appointed by the Chief Justice of India.

[1][**290A. Annual payment to certain Devaswom funds :**

A sum of forty-six lakhs and fifty thousand rupees shall be charged on, and paid out of the Consolidated Fund of the State of Kerala every year to the Travancore Devaswom Fund; and a sum of thirteen lakhs and fifty thousand rupees shall be charged on, and paid out of the Consolidated Fund of the State of [2][Tamil Nadu] every year to the Devaswom Fund established in that state for the maintenance of Hindu temples and shrines in the territories transferred to that State on the 1st day of November, 1956, from the State of Travancore-Cochin.]

**291.** [*Privy purse sums of Rulers.*].–*Omitted by the Constitution* (*Twenty-sixth Amendment*) *Act, 1971, s. 2 (w.e.f. 28-12-1971)*

## CHAPTER II

## BORROWING

**292. Borrowing by the Government of India:**

The executive power of the Union extends to borrowing upon the security of the Consolidated Fund of India within such limits, if any, as may from time to time be fixed by Parliament by law and to the giving of guarantees within such limits, if any, as may be so fixed.

**293. Borrowing by States :**

(1) Subject to the provisions of this article, the executive power of a State extends to borrowing within the territory of India upon the security of the Consolidated Fund of the State within such limits, if any, as may from time to time be fixed by the Legislature of such State by law and to the giving of guarantees within such limits, if any, as may be so fixed.

(2) The Government of India may, subject to such conditions as may be laid down by or under any law made by Parliament, make loans to any State or so long as any limits fixed under article 292 are not exceeded, give guarantees in respect of loans raised by any State, and any sums required for the purpose of making such loans shall be charged on the Consolidated Fund of India.

(3) A State may not without the consent of the Government of India raise any loan if there is still outstanding any part of a loan which has been made to the State by the Government of India or by its predecessor Government, or in respect of which a gaurantee has been given by the Government of India or by its predecessor Government.

1. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 19 (w.e.f. 1-11-1956).
2. Subs. by the Madras State (Alteration of Name) Act, 1968 (53 of 1968), s. 4, for "Madras" (w.e.f. 14-1-1969).

(4). (3) ஆம் கூறின்படியான இசைவு, இந்திய அரசு தக்கதெனக் கருதி விதிக்கும் வரைக்கட்டுகள், எவையேனுமிருப்பின், அவற்றிற்குட்பட்டு அளிக்கப்படலாம்.

## அத்தியாயம் III

## சொத்து, ஒப்பந்தங்கள், உரிமைகள், பொறுப்படைவுகள், கடமைப்பாடுகள் மற்றும் உரிமைவழக்குகள்

**294. குறித்தசில நேர்வுகளில் சொத்து, சொத்திருப்புகள், உரிமைகள், பொறுப்படைவுகள் மற்றும் கடமைப்பாடுகள் ஆகியவற்றிற்கு வாரிசுரிமை :**

இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு, பாகிஸ்தான் தன்னாட்சியத்தை அல்லது மேற்கு வங்காளம், கிழக்கு வங்காளம், மேற்குப் பஞ்சாப் மற்றும் கிழக்குப் பஞ்சாப் ஆகிய மாகாணங்களை உருவாக்கியதன் காரணமாகச் செய்யப்பட்ட அல்லது செய்யப்படவேண்டிய நேரமைவு எதற்கும் உட்பட்டு, இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து -

(அ) அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு மாட்சிமை தங்கிய மன்னரிடம் இந்தியத் தன்னாட்சிய அரசிற்குமென உற்றமைந்திருந்த சொத்து, சொத்திருப்புகள் ஆகிய அனைத்தும், அத்துடன் அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு மாட்சிமை தங்கிய மன்னரிடம் ஆளுநர் மாகாணம் ஒவ்வொன்றின் அரசிற்குமென உற்றமைந்திருந்த சொத்து, சொத்திருப்புகள் ஆகிய அனைத்தும், முறையே ஒன்றியத்திடமும் நேரிணையான மாநிலத்திடமும் உற்றமையும்; மேலும்,

(ஆ) இந்தியத் தன்னாட்சிய அரசு, ஆளுநர் மாகாணம் ஒவ்வொன்றின் அரசு ஆகியவற்றின் அனைத்து உரிமைகளும் பொறுப்படைவுகளும் கடமைப்பாடுகளும், அவை ஒப்பந்தம் ஒன்றிலிருந்து எழுவனவாயினும் பிறவாறாயினும், முறையே இந்திய அரசு, நேரிணையான மாநிலம் ஒவ்வொன்றின் அரசு ஆகியவற்றின் உரிமைகளாகவும் பொறுப்படைவுகளாகவும் கடமைப்பாடுகளாகவும் இருக்கும்.

**295. பிற நேர்வுகளில் சொத்து, சொத்திருப்புகள், உரிமைகள், பொறுப்படைவுகள் மற்றும் கடமைப்பாடுகள் ஆகியவற்றிற்கு வாரிசுரிமை:**

(1) இந்திய அரசு, இந்தியக் குறுநிலம் ஒன்றின் அரசுடன் பின்வருவன குறித்துச் செய்துகொண்ட உடன்பாடு எதற்கும் உட்பட்டு, இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து –

(4) Consent under clause (3) may be granted subject to such conditions, if any, as the Government of India may think fit to impose.

## CHAPTER III

### PROPERTY, CONTRACTS, RIGHTS, LIABILITIES, OBLIGATIONS AND SUITS

**294. Succession to property, assets, rights, liabilities and obligations in certain cases:**

As from the commencement of this Constitution—

(a) all property and assets which immediately before such commencement were vested in His Majesty for the purposes of the Government of Dominion of India and all property and assets which immediately before such commencement were vested in His Majesty for the purposes of the Government of each Governor's Province shall vest respectively in the Union and the corresponding State, and

(b) all rights, liabilities and obligations of the Government of the Dominion of India and of the Government of each Governor's Province, whether arising out of any contract or otherwise, shall be the rights, liabilities and obligations, respectively of the Government of India and Government of each corresponding State,

subject to any adjustment made or to be made by reason of the creation before the commencement of this Constitution of the Dominion of Pakistan or of the Provinces of West Bengal, East Bengal, West Punjab and East Punjab.

**295. Succession to property, assets, rights, liabilities and obligations in other cases :**

(1) As from the commencement of the Constitution—

(அ) அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு முதலாம் இணைப்புப்பட்டியலின் ஆ பகுதியில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஒரு மாநிலத்திற்கு நேரிணையான இந்தியக் குறுநிலம் ஒன்றிடம் உற்றமைந்திருந்த சொத்து, சொத்திருப்புகள் ஆகிய அனைத்தும், அத்தகைய சொத்தும் சொத்திருப்புகளும், அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு எந்த நோக்கங்களுக்காக வைத்துவரப்பட்டனவோ அந்த நோக்கங்கள், அதன்பின்பு ஒன்றியத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும் ஒன்றியத்து நோக்கங்களாக இருக்குமாயின், அவை ஒன்றியத்திடம் உற்றமைதல் வேண்டும்; மேலும்,

(ஆ) முதலாம் இணைப்புப்பட்டியலின் ஆ பகுதியில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஒரு மாநிலத்திற்கு நேரிணையான இந்தியக் குறுநிலம் ஒன்றின் அரசின் அனைத்து உரிமைகளும் பொறுப்படைவுகளும் கடமைப்பாடுகளும் அவை ஒப்பந்தம் ஒன்றிலிருந்து எழுவனவாயினும் பிறவாறாயினும், எந்த நோக்கங்களுக்காக அத்தகைய தொடக்கநிலைக்கு முன்பு அத்தகைய உரிமைகள் ஈட்டப்பட்டனவோ அல்லது அத்தகைய பொறுப்படைவுகளும் கடமைப்பாடுகளும் மேற்கொள்ளப்பட்டனவோ அந்த நோக்கங்கள் அதன் பின்பு ஒன்றியத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும் இந்திய அரசின் நோக்கங்களாக இருக்குமாயின், அவை இந்திய அரசின் உரிமைகளாகவும் பொறுப்படைவுகளாகவும் கடமைப்பாடுகளாகவும் இருத்தல் வேண்டும்.

(2) மேலே கண்டவற்றிற்கு உட்பட்டு, இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து, (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்டவை அல்லாத பிற சொத்து, சொத்திருப்புகள் ஆகிய அனைத்தையும் மற்றும் அனைத்து உரிமைகளும் பொறுப்படைவுகளும் கடமைப்பாடுகளும் ஒப்பந்தம் ஒன்றிலிருந்து எழுந்தவையாயினும் பிறவாறாயினும் அவை அனைத்தையும் பொறுத்து, முதலாம் இணைப்புப்பட்டியலில் ஆ பகுதியில் குறித்துரைக்கப்பட்டுள்ள மாநிலம் ஒவ்வொன்றின் அரசு என்பது அதற்கு நேரிணையான இந்தியக் குறுநில அரசிற்குப் பின்னமைவுற்ற அரசாக இருத்தல் வேண்டும்.

## 296. வாரிசு இல்லாமை அல்லது உரிமைகோருநர் இல்லாமை அல்லது உரிமைக்குற்றவர் இல்லாமை காரணமாகச் சேர்ந்தடையும் சொத்து :

இதன்பின்பு வகைசெய்யப்பட்டுள்ளதற்கு உட்பட்டு, இந்திய ஆட்சிநிலவரையிலுள்ள சொத்து எதுவும், இந்த அரசமைப்புச் செயற்பாட்டுக்கு வாராதிருப்பின், வாரிசு இல்லாமை அல்லது உரிமைகோருநர் இல்லாமை அல்லது உரிமைக்குற்றவர் இல்லாமை காரணமாக மாட்சிமை தங்கிய மன்னரிடம் அல்லது நேர்வுக்கேற்ப, இந்தியக் குறுநிலம் ஒன்றின் அரசரிடம் சேர்ந்தடைந்திருக்குமாயின், அது மாநிலம் ஒன்றில் அமைந்துள்ள சொத்தாக இருப்பின், அத்தகைய மாநிலத்திடமும், பிற நேர்வு எதிலும் ஒன்றியத்திடமும் உற்றமையும்:

**வரம்புரையாக** : சொத்து எதுவும், மாட்சிமை தங்கிய மன்னரிடம் அல்லது இந்தியக் குறுநிலம் ஒன்றின் அரசரிடம் அவ்வாறு சேர்ந்தடைவதாகும் தேதியில் அது இந்திய அரசின் அல்லது மாநிலம் ஒன்றின் அரசின் உடைமையில் அல்லது கட்டாள்கையில் இருந்திருப்பின், அது, அப்போது பயன்படுத்தப்பட்டதற்கான அல்லது வைத்துவரப்பட்டதற்கான நோக்கங்கள், ஒன்றியத்தின் அல்லது ஒரு மாநிலத்தின் நோக்கங்களாக இருப்பின், அதற்கிணங்க ஒன்றியத்திடமோ அந்த மாநிலத்திடமோ உற்றமையும்.

(a) all property and assets which immediately before such commencement were vested in any Indian State corresponding to a State specified in Part B of the First Schedule shall vest in the Union, if the purposes for which such property and assets were held immediately before such commencement will thereafter be purposes of the Union relating to any of the matters enumerated in the Union List , and

(b) all rights, liabilities and obligations of the Government of any Indian State corresponding to a State specified in Part B of the First Schedule, whether arising out of any contract or otherwise, shall be the rights, liabilities and obligations of the Government of India, if the purposes for which such rights were acquired or liabilities or obligations were incurred before such commencement will thereafter be purposes of the Government of India relating to any of the matters enumerated in the Union List,

subject to any agreement entered into in that behalf by the Government of India with the Government of that State.

(2) Subject as aforesaid, the Government of each State specified in Part B of the first Schedule shall, as from the commencement of this Constitution be the successor of the Government of the corresponding Indian State as regards all property and assets and all rights, liabilities and obligations, whether arising out of any contract or otherwise, other than those referred to in clause (1).

**296. Property accruing by escheat or lapse or as *bona vacantia* :**

Subject as hereinafter provided, any property in the territory of India which, if this Constitution had not come into operation, would have accrued to His Majesty or, as the case may be, to the Ruler of an Indian State by escheat or lapse, or as *bona vacantia* for want of a rightful owner, shall, if it is property situate in a State, vest in such State, and shall, in any other case, vest in the Union:

Provided that any property which at the date when it would have so accrued to His Majesty or to the Ruler of an Indian State was in the possession or under the control of the Government of India or the Government of a State shall, according as the purposes for which it was then used or held were purposes of the Union or of a State, vest in the Union or in that State.

**விளக்கம்.** - இந்த உறுப்பில், "அரசர்கள்", "இந்தியக் குறுநிலம்" என்னும் சொற்றொடர்கள், 363 ஆம் உறுப்பிலுள்ள அதே பொருள்களை உடையனவாம்.

**[1][297. ஆட்சிநிலவரை சார்ந்த கடலினுள் அல்லது கண்டத்திட்டினுள் இருக்கும் பெறுமதியான பொருள்களும், தனிப்பட்டதான பொருளியல் மண்டலங்களின் வளஆதாரங்களும் ஒன்றியத்திடம் உற்றமைதல்:**

(1) இந்திய ஆட்சிநிலவரை சார்ந்த கடலினுள் அல்லது கண்டத்திட்டினுள் அல்லது தனிப்பட்டதான பொருளியல் மண்டலத்தினுள் அடங்கும் கடலடி நிலங்கள், கனிமங்கள், பெறுமதியான பிற பொருள்கள் ஆகிய அனைத்தும் ஒன்றியத்திடம் உற்றமைந்து, ஒன்றியத்தின் நோக்கங்களுக்காக வைத்தாளப்படுதல் வேண்டும்.

(2) இந்தியாவின் தனிப்பட்டதான பொருளியல் மண்டலத்தின் பிற வளஆதாரங்கள் அனைத்தும், ஒன்றியத்திடம் உற்றமைந்து, ஒன்றியத்தின் நோக்கங்களுக்காக வைத்தாளப்படுதல் வேண்டும்.

(3) இந்தியாவின் ஆட்சிநிலவரைச் சார்ந்த கடல், கண்டத்திட்டு, தனிப்பட்டதான பொருளியல் மண்டலம், பிற கடல்சார்ந்த மண்டலங்கள் ஆகியவற்றின் எல்லைகள், நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தாலோ அதன் வழியாலோ அவ்வப்போது குறித்துரைக்கப்படுகிறவாறு இருந்துவருதல் வேண்டும்.]

**[2][298. வணிகம் முதலியவற்றை நடத்திவருவதற்கான அதிகாரம் :**

ஒன்றியத்தின் மற்றும் ஒவ்வொரு மாநிலத்தின் ஆட்சி அதிகாரத்தில் வணிகம் அல்லது ஆகுதொழில் எதனையும் நடத்துவதும் சொத்தினை ஈட்டுதல், வைத்தாளுதல், அயலடைவு செய்தல், எந்நோக்கத்திற்காகவும் ஒப்பந்தங்கள் செய்துகொள்ளுதல் ஆகியவையும் அடங்கும்:

**வரம்புரையாக :**

(அ) மேற்சொன்ன ஒன்றியத்து ஆட்சி அதிகாரமானது, அத்தகைய வணிகம் அல்லது ஆகுதொழில் அல்லது அத்தகைய நோக்கம் எதுவும், நாடாளுமன்றம் சட்டங்கள் இயற்றுவதற்குரியதாக இல்லாதிருக்கும் அளவிற்கு, ஒவ்வொரு மாநிலத்திலும் அந்தந்த மாநிலத்தின் சட்டமியற்றும் அதிகாரத்திற்கு உட்பட்டதாக இருந்துவருதல் வேண்டும்; மற்றும்

(ஆ) மேற்சொன்ன ஒவ்வொரு மாநிலத்தின் ஆட்சி அதிகாரமும் அத்தகைய வணிகம் அல்லது ஆகுதொழில் அல்லது அத்தகைய நோக்கம் எதுவும், மாநிலச் சட்டமன்றம் சட்டங்கள் இயற்றுவதற்குரியதாக இல்லாதிருக்கும் அளவிற்கு, நாடாளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரத்திற்கு உட்பட்டதாக இருந்துவருதல் வேண்டும்.]

**299. ஒப்பந்தங்கள் :**

(1) ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் ஆட்சி அதிகாரத்தைச் செலுத்திச் செய்துகொள்ளப்படும் ஒப்பந்தங்கள் அனைத்தும், குடியரசுத்தலைவரால் அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் ஆளுநரால்[3]*** செய்துகொள்ளப்பட்டனவாக இயம்பப்பெறும்; மேலும், அந்த அதிகாரத்தைச் செலுத்திச் செய்துகொள்ளப்படும் அத்தகைய அனைத்து ஒப்பந்தங்களும் அனைத்துச் சொத்துக் காப்பீடுகளும் குடியரசுத்தலைவர் அல்லது ஆளுநர்[3]*** சார்பாக, அவர் பணிக்கும் அல்லது அதிகாரமளிக்கும் அத்தகைய நபர்களாலும் அத்தகைய முறையிலும் எழுதிக்கொடுக்கப்படுதல் வேண்டும்.

---

1. அரசமைப்புச் (நாற்பதாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 2 ஆம் பிரிவினால் (27–5–1976 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
2. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 20 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

**Explanation.**— In this article, the expressions "Rulers" and "Indian State" have the same meanings as in article 363.

[1][**297. Things of value within territorial waters or continental shelf and resources of the exclusive economic zone to vest in the Union :**

(1) All lands, minerals and other things of value underlying the ocean within the territorial waters, or the continental shelf, or the exclusive economic zone of India shall vest in the Union and be held for the purposes of the Union.

(2) All other resources of the exclusive economic zone of India shall also vest in the Union and be held for the purposes of the Union.

(3) The limits of the territorial waters, the continental shelf, the exclusive economic zone, and other maritime zones, of India shall be such as may be specified, from time to time, by or under any law made by Parliament.]

[2][**298. Power to carry on trade, etc. :**

The executive power of the Union and of each State shall extend to the carrying on of any trade or business and to the acquisition, holding and disposal of property and the making of contracts for any purpose:

Provided that —

(a) the said executive power of the Union shall, in so far as such trade or business or such purpose is not one with respect to which Parliament may make laws, be subject in each State to legislation by the State; and

(b) the said executive power of each State shall, in so far as such trade or business or such purpose is not one with respect to which the State Legislature may make laws, be subject to legislation by parliament.]

**299. Contracts :**

(1) All contracts made in the exercise of the executive power of the Union or of a State shall be expressed to be made by President, or by the Governor[3]***of the State, as the case may be, and all such contracts and all assurances of property made in the exercise of that power shall be executed on behalf of the President or the Governor[3]***by such persons and in such manner as he may direct or authorise.

---

1.Subs. by the Constitution (Fortieth Amendment) Act, 1976, s. 2 (w.e.f. 27-5-1976).

2.Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 20 (w.e.f. 1-11-1956).

3.The words "or the Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s.29 and Sch., (w.e.f. 1-11-1956).

(2) இந்த அரசமைப்பைப் பொறுத்து அல்லது இந்திய அரசு தொடர்பாக இதற்குமுன்பு செல்லாற்றலில் இருந்துவந்த சட்டம் ஒன்றைப் பொறுத்து செய்துகொள்ளப்பட்ட ஒப்பந்தம் அல்லது எழுதிக்கொடுக்கப்பட்ட காப்பீடு எதற்காகவும், குடியரசுத்தலைவரோ ஆளுநரோ[1]*** தம் சொந்த முறையில் பொறுப்படைவுற்றவர் ஆகார்; மேலும், அவர்களில் எவர் சார்பாகவும் எனக் குறித்து அத்தகைய ஒப்பந்தம் அல்லது காப்பீடு எதனையும் செய்துகொள்கின்ற அல்லது எழுதிக்கொடுக்கின்ற எவரும்கூட, அதற்காகத் தம் சொந்தமுறையில் பொறுப்படைவுற்றவர் ஆகார்.

**300. உரிமை வழக்குகளும், நடவடிக்கைகளும் :**

(1) இந்திய ஒன்றியத்தின் பெயரால் இந்திய அரசு வழக்கிடலாம் அல்லது வழக்கிடப்படலாம்; ஒரு மாநிலத்தின் பெயரால் அந்த மாநில அரசு வழக்கிடலாம் அல்லது வழக்கிடப்படலாம்; மேலும், இந்த அரசமைப்பு இயற்றப்படாதிருப்பின், எந்நேர்வுகளில் இந்தியத் தன்னாட்சியமும் நேரிணையான மாகாணங்களும் அல்லது நேரிணையான இந்தியக் குறுநிலங்களும் தத்தம் அலுவற்பாடுகள் தொடர்பாக வழக்கிட்டிருக்கலாமோ வழக்கிடப்பட்டிருக்கலாமோ அத்தகைய நேர்வுகளில், இந்த அரசமைப்பினால் வழங்கப்பட்ட அதிகாரங்களின் பயன்திறன் வழி இயற்றப்பட்ட நாடாளுமன்றச் சட்டத்தினால் அல்லது அத்தகைய மாநிலச் சட்டமன்றச் சட்டத்தினால் செய்யப்படும் வகையங்கள் எவற்றிற்கும் உட்பட்டு, இந்திய அரசும் மாநில அரசும் வழக்கிடலாம் அல்லது வழக்கிடப்படலாம்.

(2) இந்த அரசமைப்பின் தொடக்கநிலையின்போது—

(அ) இந்தியத் தன்னாட்சியத்தை ஒரு தரப்பினராகக் கொண்ட சட்ட நடவடிக்கைகள் எவையும் முடிவுறாநிலையில் இருக்குமாயின், அந்த நடவடிக்கைகளில் இந்தியத் தன்னாட்சியத்திற்குப் பதிலாக இந்திய ஒன்றியம் சேர்க்கப்பட்டதாகக் கொள்ளப்படும்; மேலும்,

(ஆ) ஒரு மாகாணத்தை அல்லது ஓர் இந்தியக் குறுநிலத்தை ஒரு தரப்பினராகக் கொண்ட சட்ட நடவடிக்கைகள் எவையும் முடிவுறாநிலையில் இருக்குமாயின், அந்த நடவடிக்கைகளில் அந்த மாகாணத்திற்கு அல்லது இந்தியக் குறுநிலத்திற்குப் பதிலாக நேரிணையான மாநிலம் சேர்க்கப்பட்டதாகக் கொள்ளப்படும்.

## [2][அத்தியாயம் IV

## சொத்து பொறுத்த உரிமை

**300(அ). சட்டம் அளிக்கும் அதிகாரத்தின்படி அல்லாமல் எவரிடமிருந்தும் சொத்துப் பறிக்கப்படுதல் ஆகாது:**

சட்டம் அளிக்கும் அதிகாரத்தின்படி அல்லாமல், எவரிடமிருந்தும் அவரது சொத்துப் பறிக்கப்படுதல் ஆகாது.]

## பகுதி XIII

## இந்திய ஆட்சிநிலவரைக்குள் வணிகம், வாணிபம் மற்றும் தொடர்புறவுகள்

**301. வணிகம், வாணிபம், தொடர்புறவுகள் ஆகியவற்றிற்குத் தடையின்மை :**

இந்தப் பகுதியின் பிற வகையங்களுக்கு உட்பட்டு, இந்திய ஆட்சிநிலவரை எங்கணும் வணிகம், வாணிபம், தொடர்புறவுகள் ஆகியவை தடையின்றி நிகழ்வுறும்.

---

1. "இராஜபிரமுகரோ" என்ற சொல், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1-11-1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.
2. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 34 ஆம் பிரிவினால் (20-6-1979 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(2) Neither the President nor the Governor[1]*** shall be personally liable in respect of any contract or assurance made or executed for the purposes of this Constitution, or for the purposes of any enactment relating to the Government of India heretofore in force, nor shall any person making or executing any such contract or assurance on behalf of any of them be personally liable in respect thereof.

**300. Suits and proceedings :**

(1) The Government of India may sue or be sued by the name of the Union of India and the Government of a State may sue or be sued by the name of the State and may, subject to any provisions which may be made by Act of Parliament or of the Legislature of such State enacted by virtue of power conferred by this Constitution, sue or be sued in relation to their respective affairs in the like cases as the Dominion of India and the corresponding Provinces or the corresponding Indian States might have sued or been sued if this Constitution had not been enacted.

(2) If at the commencement of this Constitution —

(a) any legal proceedings are pending to which the Dominion of India is a party, the Union of India shall be deemed to be substituted for the Dominion in those proceedings; and

(b) any legal proceedings are pending to which a Province or an Indian State is a party, the corresponding State shall be deemed to be substituted for the Province Indian State in those proceedings.

## [2][CHAPTER IV

## RIGHT TO PROPERTY

**300A. Persons not to be deprived of property save by authority of law :**

No person shall be deprived of his property save by authority of law.]

# PART XIII

## TRADE, COMMERCE AND INTERCOURSE WITHIN THE TERRITORY OF INDIA

**301. Freedom of trade, commerce and intercourse :**

Subject to the other provisions of this Part, trade, commerce and intercourse throughout the territory of India shall be free.

---

1. The words "nor the Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s.29 and Sch., (w.e.f. 1-11-1956).
2. Ins. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 34 (w.e.f. 20-6-1979).

**302. வணிகம், வாணிபம், தொடர்புறவுகள் ஆகியவற்றின் மீது கட்டுப்பாடுகள் விதிப்பதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம்:**

ஒரு மாநிலத்திற்கும் மற்றொன்றிற்கும் இடையே அல்லது இந்திய ஆட்சிநிலவரைப்பகுதி எதற்குள்ளும் வணிகம், வாணிபம் அல்லது தொடர்புறவுகள் நிகழ்வுறுவதற்கான சுதந்திரத்தின்மீது, பொது நலனுக்காகத் தேவைப்படும் கட்டுப்பாடுகளை நாடாளுமன்றம் சட்டத்தினால் விதிக்கலாம்.

**303. வணிகம், வாணிபம், தொடர்பாக ஒன்றியம், மாநிலங்கள் ஆகியவற்றிற்குள்ள சட்டமியற்றும் அதிகாரங்கள் மீது கட்டுப்பாடுகள்:**

(1) 302 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், ஏழாம் இணைப்புப்பட்டியலிலுள்ள பட்டியல்களில் எதிலும் வணிகம் மற்றும் வாணிபம் பற்றிக் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காரணமாகக் கொண்டு ஒரு மாநிலத்திற்கு மற்றொன்றைவிட முன்னுரிமை எதனையும் அளிக்கிற அல்லது அளிப்பதற்கு அதிகாரம் வழங்குகிற அல்லது ஒரு மாநிலத்திற்கும் மற்றொன்றிற்கும் இடையே வேற்றுமை எதனையும் காட்டுகிற அல்லது காட்டுவதற்கு அதிகாரம் வழங்குகிற சட்டம் எதனையும் இயற்றுவதற்கு நாடாளுமன்றமோ மாநிலம் ஒன்றின் சட்டமன்றமோ அதிகாரம் உடையது ஆகாது.

(2) இந்திய ஆட்சிநிலவரைப் பகுதி எதிலும் சரக்குகளின் பற்றாக்குறையினால் எழுகின்ற ஒரு நிலைமையைச் சமாளிக்கும் பொருட்டு முன்னுரிமை அளிப்பது அல்லது அளிப்பதற்கு அதிகாரம் வழங்குவது அல்லது வேற்றுமை எதனையும் காட்டுவது அல்லது காட்டுவதற்கு அதிகாரம் வழங்குவது அவசியமானது என்று சட்டம் எதுவும் விளம்புமாயின், அவ்வாறு செய்கிற அத்தகைய சட்டத்தை நாடாளுமன்றம் இயற்றுவதற்கு, (1) ஆம் கூறிலுள்ள எதுவும் தடையூறு ஆவதில்லை.

**304. மாநிலங்களிடையே வணிகம், வாணிபம், தொடர்புறவுகள் ஆகியவற்றின் மீது கட்டுப்பாடுகள் :**

301 ஆம் உறுப்பில் அல்லது 303 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும் மாநிலம் ஒன்றின் சட்டமன்றம், சட்டத்தினால் –

(அ) பிற மாநிலங்களிலிருந்து [1][அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரைகளிலிருந்து] இறக்குமதி செய்யப்படும் சரக்குகளின்மீது, அவ்வாறு இறக்குமதி செய்யப்படும் சரக்குகளுக்கும் அவ்வாறு தயாரிக்கப்படும் அல்லது உற்பத்தி செய்யப்படும் சரக்குகளுக்கும் இடையே எவ்வகையிலும் வேற்றுமை காட்டாதவாறு, அந்த மாநிலத்தில் தயாரிக்கப்படும் அல்லது உற்பத்தி செய்யப்படும் அதுபோன்ற சரக்குகள் மீது விதிக்கப்படும் வரி எதனையும் விதிக்கலாம்; மற்றும்

(ஆ) அந்த மாநிலத்துடன் அல்லது அந்த மாநிலத்திற்குள் நிகழ்வுறும் வணிகம், வாணிபம் அல்லது தொடர்புறவுகள் ஆகியவற்றிற்கான சுதந்திரத்தின்மீது, பொதுநலன்கருதி வேண்டுறும் தகுமான கட்டுப்பாடுகளை விதிக்கலாம்:

**வரம்புரையாக :** (ஆ) கூறின் நோக்கங்களுக்காக சட்டமுன்வடிவு அல்லது திருத்தம் எதுவும், குடியரசுத்தலைவரின் முன்ஒப்பளிப்பின்றி, மாநிலம் ஒன்றின் சட்டமன்றத்தில் அறிமுகப்படுத்தப்படுதலோ கொண்டுவரப்படுதலோ ஆகாது.

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**302. Power of Parliament to impose restrictions on trade, commerce and intercourse :**

Parliament may by law impose such restrictions on the freedom of trade, commerce or intercourse between one State and another or within any part of the territory of India as may be required in the public interest.

**303. Restrictions on the legislative powers of the Union and of the States with regard to trade and commerce :**

(1) Notwithstanding anything in article 302, neither Parliament nor the Legislature of a State shall have power to make any law giving, or authorising the giving of, any preference to one State over another, or making, or authorising the making of, any discrimination between one State and another, by virtue of any entry relating to trade and commerce in any of the Lists in the Seventh Schedule.

(2) Nothing in clause (1) shall prevent Parliament from making any law giving, or authorising the giving of, any preference or making, or authorising the making of, any discrimination if it is declared by such law that it is necessary to do so for the purpose of dealing with a situation arising from scarcity of goods in any part of the territory of India.

**304. Restrictions on trade, commerce and intercourse among States :**

Notwithstanding anything in article 301 or article 303, the Legislature of a State may by law —

(a) impose on goods imported from other States [1][or the Union territories] any tax to which similar goods manufactured or produced in that State are subject, so, however, as not to discriminate between goods so imported and goods so manufactured or produced; and

(b) impose such reasonable restrictions on the freedom of trade, commerce or intercourse with or within that State as may be required in the public interest:

Provided that no Bill or amendment for the purposes of clause (b) shall be introduced or moved in the Legislature of a State without the previous sanction of the President.

---

1. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

**[1][305. நிலவுறும் சட்டங்களுக்கும் மாநிலத்தின் தனியுரிமைகளுக்கு வகைசெய்யும் சட்டங்களுக்குமான காப்புரை:**

301, 303 ஆகிய உறுப்புகளில் உள்ள எதுவும், குடியரசுத்தலைவர் ஆணையின்வழி பிறவாறு பணிக்கும் அளவுக்கன்றி, நிலவுறும் சட்டம் ஒன்றின் வகையங்களைப் பாதித்தல் ஆகாது; மேலும், 301 ஆம் உறுப்பிலுள்ள எதுவும், 19 ஆம் உறுப்பின் (6) ஆம் கூறின் (ii) ஆம் உட்கூறில் சுட்டப்பட்ட பொருட்பாடு எதற்கும் தொடர்புடையதாய் இருக்கிற அளவிற்கு, அரசமைப்புச் (நான்காம் திருத்தம்) சட்டம், 1955 இன் தொடக்கநிலைக்கு முன்பு இயற்றப்பட்ட சட்டம் எதனின் செயற்பாட்டையும் பாதித்தலுமில்லை; அத்தகைய பொருட்பாடு தொடர்பாக நாடாளுமன்றம் அல்லது மாநிலம் ஒன்றின் சட்டமன்றம் சட்டம் எதனையும் இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.]

**306.** *[வணிகம், வாணிபம் ஆகியவற்றின் மீது கட்டுப்பாடுகள் விதிப்பதற்கு முதலாம் இணைப்புப்பட்டியலின் ஆ பகுதியிலுள்ள குறித்தசில மாநிலங்களின் அதிகாரம்.] அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் **(1–11–1956** முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**307. 301 முதல் 304 வரையிலுள்ள உறுப்புகளின் நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக அதிகார அமைப்பை ஏற்படுத்துதல்:**

301, 302, 303, 304 ஆகிய உறுப்புகளின் நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக, நாடாளுமன்றம் சட்டத்தினால், தான் பொருத்தமெனக் கருதும் அதிகாரஅமைப்பை ஏற்படுத்தி, அவ்வாறு ஏற்படுத்திய அதிகாரஅமைப்பிற்குத் தான் தேவையெனக் கருதுகின்ற அதிகாரங்களையும் கடமைகளையும் வழங்கலாம்.

## பகுதி XIV

## ஒன்றியம், மாநிலங்கள் ஆகியவற்றின் கீழுள்ள பணியங்கள்

### அத்தியாயம் I

### பணியங்கள்

**308. பொருள்கோள் :**

இந்தப் பகுதியில் தறுவாயின் தேவை வேறானாலன்றி, ''மாநிலம்'' என்னும் சொல், [2][ஜம்மு–காஷ்மீர் மாநிலத்தை உள்ளடக்குவதில்லை.]

**309. ஒன்றியத்திற்கு அல்லது ஒரு மாநிலத்திற்குப் பணிபுரிவதற்காக ஆளெடுத்தலும் பணிவரைக்கட்டுகளும் :**

இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு உரிய சட்டமன்றத்தின் சட்டங்கள், ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் அலுவற்பாடுகள் தொடர்பான அரசுப் பணியங்களுக்கும் பணியடைகளுக்கும் ஆளெடுப்பதையும் அவற்றிற்கு அமர்த்தப்பெறுபவர்களின் பணி வரைக்கட்டுகளையும் ஒழுங்குறுத்தலாம்:

---

1. 305 ஆம் உறுப்புக்கு, அரசமைப்புச் (நான்காம் திருத்தம்) சட்டம், 1955 இன் 4 ஆம் பிரிவினால் (27–4–1955 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. ''முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி அ அல்லது பகுதி ஆ இல் குறித்துரைக்கப்பட்ட ஒரு மாநிலம் என்று பொருள்படும்'' என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் **(1–11–1956** முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

### [1][305. Saving of existing laws and laws providing for State monopolies :

Nothing in articles 301 and 303 shall affect the provisions of any existing law except in so far as the President may by order otherwise direct; and nothing in article 301 shall affect the operation of any law made before the commencement of the Constitution (Fourth Amendment) Act, 1955, in so far as it relates to, or prevent Parliament or the Legislature of a State from making any law relating to, any such matter as is referred to in sub-clause (ii) of clause (6) of article 19.]

**306**. [*Power of certain States in Part B of the First Schedule to impose restrictions on trade and commerce.*].– *Omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).*

### 307. Appointment of authority for carrying out the purposes of articles 301 to 304 :

Parliament may by law appoint such authority as it considers appropriate for carrying out the purposes of articles 301, 302, 303 and 304, and confer on the authority so appointed such powers and such duties as it thinks necessary.

## PART XIV

## SERVICES UNDER THE UNION AND THE STATES

## CHAPTER I

## SERVICES

### 308. Interpretation :

In this part, unless the context otherwise requires, the expression "State" [2][does not include the State of Jammu and Kashmir.]

### 309. Recruitment and conditions of service of persons serving the Union or a state :

Subject to the provisions of this Constitution, Acts of the appropriate Legislature may regulate the recruitment, and conditions of service of persons appointed, to public services and posts in connection with the affairs of the Union or of any State:

---

1.Subs. by the Constitution (Fourth Amendment) Act, 1955, s. 4, for art. 305 (w.e.f. 27-4-1955).

2.Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch., for "means a State specified in Part A or Part B of the First Schedule" (w.e.f. 1-11-1956).

வரம்புரையாக : ஒன்றியத்து அலுவற்பாடுகள் தொடர்பான பணியங்கள், பணியடைகள் ஆகியவை பொறுத்து, குடியரசுத்தலைவர் அல்லது அவர் குறிப்பிடும் ஒருவர், மாநிலம் ஒன்றின் அலுவற்பாடுகள் தொடர்பான பணியங்கள், பணியடைகள் ஆகியவை பொறுத்து அந்த மாநிலத்தின் ஆளுநர்[1]*** அல்லது அவர் குறிப்பிடும் ஒருவர், இந்த உறுப்பின்படி உரிய சட்டமன்றத்தின் சட்டத்தாலோ அதன் வழியாலோ அதற்கென வகைசெய்யப்படும் வரையில், அந்தப் பணியங்களுக்கும் பணியடைகளுக்கும் ஆளெடுப்பதையும் அவற்றிற்கு அமர்த்தப்பெறுபவர்களின் பணிவரைக்கட்டுகளையும் ஒழுங்குறுத்தும்விதிகளைச் செய்வதற்கு அதிகாரம் உடையவர் ஆவார்; மேலும், அவ்வாறு செய்யப்படும் விதிகள் எவையும், அத்தகைய சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு உட்பட்டுச் செல்திறம் உடையன ஆகும்.

**310. ஒன்றியத்திற்கு அல்லது ஒரு மாநிலத்திற்குப் பணிபுரிபவர்களின் பதவியுரிமைக் காலம் :**

(1) இந்த அரசமைப்பினால் தெரிநிலையாக வகைசெய்யப்பட்டுள்ளவாறு தவிர, பாதுகாப்புப் படைப் பணியம் ஒன்றிலோ ஒன்றியத்தின் குடியியல் பணியம் ஒன்றிலோ, அனைத்திந்தியப் பணியம் ஒன்றிலோ உறுப்பினராக இருக்கிற அல்லது பாதுகாப்புப்படை தொடர்பான பணியடை எதனையும் அல்லது ஒன்றியத்தின் கீழுள்ள குடியியல் பணியடை எதனையும் வகித்து வருகிற ஒவ்வொருவரும், குடியரசுத்தலைவர் விழையுமளவும் பதவி வகிப்பார்; மேலும், மாநிலம் ஒன்றின் குடியியல் பணியம் ஒன்றில் உறுப்பினராய் இருக்கிற அல்லது ஒரு மாநிலத்தின் கீழுள்ள குடியியல் பணியடை ஒன்றை வகித்து வருகிற ஒவ்வொருவரும், அந்த மாநிலத்தின் ஆளுநர்[2]*** விழையுமளவும் பதவி வகிப்பார்.

(2) ஒன்றியத்தின் கீழுள்ள அல்லது ஒரு மாநிலத்தின் கீழுள்ள குடியியல் பணியடை ஒன்றை வகித்துவரும் ஒருவர், குடியரசுத்தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் ஆளுநர்[1]*** விழையுமளவும் பதவி வகிப்பவராக இருந்தபோதிலும், சிறப்புத் தகுதிப்பாடுகள் கொண்ட ஒருவரின் பணியினைப் பெறுவது தேவையெனக் குடியரசுத்தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, ஆளுநர்[3]*** கருதி, பாதுகாப்புப் படைப் பணியம் ஒன்றிலோ அனைத்திந்தியப் பணியம் ஒன்றிலோ ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் குடியியல் பணியம் ஒன்றிலோ உறுப்பினராக இல்லாத ஒருவரை, ஓர் ஒப்பந்தத்தின்படி அத்தகைய பணியடையை வகிப்பதற்காக இந்த அரசமைப்பின்கீழ் அமர்த்துமிடத்து ஒத்துக்கொண்டுள்ள ஒரு காலஅளவு கழிவுறுவதற்கு முன்பே அப்பணியடை ஒழிக்கப்பட்டுவிடுகிறது அல்லது அவருடைய நெறிதவறிய நடத்தை எதற்கும் தொடர்பில்லாத காரணங்களுக்காக அப்பணியடையை விட்டகலும்படி அவர் வேண்டுறுத்தப்படுகிறார் எனில், அவருக்குச் சரியீடு கொடுப்பதற்கு அந்த ஒப்பந்தம் வகை செய்யலாம்.

**311. ஒன்றியத்தின் அல்லது ஒரு மாநிலத்தின்கீழ் குடியியல் சார்ந்த வேலைக்கு அமர்த்தப்பெற்றுள்ளவர்களைப் பணிநீக்கமோ பணியறவோ பணிநிலையிறக்கமோ செய்தல்:**

(1) ஒன்றியத்தின் குடியியல் பணியம் ஒன்றின் அல்லது அனைத்திந்தியப் பணியம் ஒன்றின் அல்லது ஒரு மாநிலக் குடியியல் பணியம் ஒன்றின் உறுப்பினராக இருக்கிற அல்லது ஒன்றியத்தின்கீழோ ஒரு மாநிலத்தின்கீழோ குடியியல் பணியடை ஒன்றை வகித்து வருகிற எவரும், அவரை அமர்த்திய அதிகாரஅமைப்பிற்குக் கீழமைந்துள்ள அதிகாரஅமைப்பினால் பணிநீக்கம் அல்லது பணியறவு செய்யப்படுதல் ஆகாது.

---

1. "அல்லது இராஜபிரமுகர்"என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.
2. "அல்லது, நேர்வுக்கேற்ப, இராஜபிரமுகர்" என்ற சொற்கள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.
3. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

Provided that it shall be competent for the President or such person as he may direct in the case of services and posts in connection with the affairs of the Union, and for the Governor[1]*** of a State or such person as he may direct in the case of services and posts in connection with the affairs of the State, to make rules regulating the recruitment, and the conditions of service of persons appointed, to such services and posts until provision in that behalf is made by or under an Act of the appropriate Legislature under this article, and any rules so made shall have effect subject to the provisions of any such Act.

**310. Tenure of office of persons serving the Union or a State :**

(1) Except as expressly provided by this Constitution, every person who is a member of a defence service or of a civil service of the Union or of an all - India service or holds any post connected with defence or any civil post under the Union holds office during the pleasure of the President, and every person who is a member of a civil service of a State or holds any civil post under a State holds office during the pleasure of the Governor[2]*** of the State.

(2) Notwithstanding that a person holding a civil post under the Union or a State holds office during the pleasure of the President or, as the case may be, of the Governor[1]*** of the State, any contract under which a person, not being a member of a defence service or of an all-India service or of a civil service of the Union or a State, is appointed under this Constitution to hold such a post may, if the President or the Governor[3]***, as the case may be, deems it necessary in order to secure the services of a person having special qualifications, provide for the payment to him of compensation, if before the expiration of an agreed period that post is abolished or he is, for reasons not connected with any misconduct on his part, required to vacate that post.

**311. Dismissal, removal or reduction in rank of persons employed in civil capacities under the Union or a State:**

(1) No person who is a member of a civil service of the Union or an all-India service or a civil service of a State or holds a civil post under the Union or a State shall be dismissed or removed by an authority subordinate to that by which he was appointed.

---

1. The words "or Rajpramukh" omitted by Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).
2. The words "or, as the case may be, the Rajpramukh" omitted by *ibid*.
3. The words "or the Rajpramukh" omitted by *ibid*.

[1][(2) மேற்கூறப்பட்ட எவரும், அவர்மீதான குற்றச்சார்த்துகளை அவருக்குத் தெரிவித்து, அந்தக் குற்றச்சார்த்துகளைப் பொறுத்து அவர் கூறுவதை, கேட்பதற்குத் தகுமான வாய்ப்பு நல்கி விசாரணை செய்த பின்பு[2]*** தவிர, பணிநீக்கம் அல்லது பணியறவு அல்லது பணிநிலையிறக்கம் செய்யப்படுதல் ஆகாது :

[3][**வரம்புரையாக :** அத்தகைய விசாரணைக்குப் பின்பு, அவருக்கு தண்டனை எதுவும் விதிக்கக் கருதப்படுமிடத்து, அத்தகைய விசாரணையின்போது முன்னிடப்பட்ட சான்றின் அடிப்படையில் அத்தகைய தண்டனை விதிக்கப்படலாம்; மேலும், விதிக்கக் கருதியுள்ள தண்டனை குறித்துக் கூறிக்கொள்வதற்கு அத்தகைய நபருக்கு வாய்ப்பு எதுவும் அளிக்கவேண்டிய தேவையில்லை:

**மேலும் வரம்புரையாக :** இந்தக் கூறு—]

(அ) ஒருவரைக் குற்றவியல் குற்றச்சார்த்து ஒன்றின்மீது தண்டனைத்தீர்ப்புக்கு உள்ளாக்கிய அவருடைய நடத்தையின் அடிப்படையில் அவர் பணிநீக்கம் அல்லது பணியறவு அல்லது பணிநிலையிறக்கம் செய்யப்பட்டிருக்குமிடத்து; அல்லது

(ஆ) ஒருவரைப் பணிநீக்கம் அல்லது பணியறவு அல்லது பணிநிலையிறக்கம் செய்வதற்கு அதிகாரம் பெற்றுள்ள அதிகாரஅமைப்பு அத்தகைய விசாரணையை நடத்துவது, அந்த அதிகாரஅமைப்பால் எழுதிப் பதிவுசெய்ய வேண்டிய காரணம் எதனாலும் தகுமான அளவு நடைமுறையில் இயலாதது எனத் தெளிவுறக்காணுமிடத்து; அல்லது

(இ) அரசின் பாதுகாப்பு நலன்கருதி அத்தகைய விசாரணையை நடத்துவது உகந்ததன்று எனக் குடியரசுத்தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, ஆளுநர் தெளிவுறக்காணுமிடத்து

பொருந்துதல் ஆகாது.

(3) மேற்கூறப்பட்ட எவரையும் பொறுத்து (2) ஆம் கூறில் சுட்டப்பட்ட விசாரணையை நடத்துவது தகுமான அளவு நடைமுறையில் இயலுமா என்ற வினா எழுமாயின், அதன்மீது அவரைப் பணிநீக்கம் அல்லது பணியறவு அல்லது பணிநிலையிறக்கம் செய்வதற்கு அதிகாரம் பெற்றுள்ள அதிகாரஅமைப்பு செய்யும் முடிபே அறுதியானது ஆகும்.]

---

1. (2) மற்றும் (3) ஆம் கூறுகளுக்கு, அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 10 ஆம் பிரிவினால் (5-10-1963 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

2. குறித்தசில சொற்கள், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 44 ஆம் பிரிவினால் (3-1-1977 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

3. குறித்தசில சொற்களுக்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டன.

[1][(2) No such person as aforesaid shall be dismissed or removed or reduced in rank except after an inquiry in which he has been informed of the charges against him and given a reasonable opportunity of being heard in respect of those charges [2]***.

[3][Provided that where it is proposed after such inquiry, to impose upon him any such penalty, such penalty may be imposed on the basis of the evidence adduced during such inquiry and it shall not be necessary to give such person any opportunity of making representation on the penalty proposed:

Provided further that this clause shall not apply—]

(a) where a person is dismissed or removed or reduced in rank on the ground of conduct which has led to his conviction on a criminal charge; or

(b) where the authority empowered to dismiss or remove a person or to reduce him in rank is satisfied that for some reason, to be recorded by that authority in writing, it is not reasonably practicable to hold such inquiry; or

(c) where the President or the Governor, as the case may be, is satisfied that in the interest of the security of the State it is not expedient to hold such inquiry.

(3) If, in respect of any such person as aforesaid, a question arises whether it is reasonably practicable to hold such inquiry as is referred to in clause (2), the decision thereon of the authority empowered to dismiss or remove such person or to reduce him in rank shall be final.]

---

1. Subs. by the Constitution (Fifteenth Amendment) Act, 1963, s. 10, for cls. (2) and (3) (w.e.f. 5-10-1963).

2. Certain words were omitted by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s.44 (w.e.f. 3-1-1977).

3. Subs. by *ibid.*, for certain words

**312. அனைத்திந்தியப் பணியங்கள் :**

(1) [1][VI ஆம் பகுதியின் VI ஆம் அத்தியாயத்தில் அல்லது XI ஆம் பகுதியில்] எது எவ்வாறிருப்பினும், ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் பொதுவான [2][(ஓர் அனைத்திந்திய நீதித்துறைப் பணியம் உள்ளடங்கலாக)], ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட அனைத்திந்தியப் பணியங்களை உருவாக்குவது நாட்டின் நலனுக்குத் தேவையானது அல்லது உகந்தது என்று மாநிலங்களவை, வந்திருந்து வாக்களிக்கும் அதன் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்குக்குக் குறையாதவர்களால் ஆதரிக்கப்பட்ட தீர்மானத்தின் வாயிலாக விளம்புமாயின், நாடாளுமன்றம் சட்டத்தினால் அவ்வாறே வகைசெய்யலாம்; மேலும், அது, இந்த அத்தியாயத்தின் பிற வகையங்களுக்கு உட்பட்டு, அத்தகைய பணியம் எதற்கும் ஆளெடுத்தல், அதற்கு அமர்த்தப்பெறுபவர்களின் பணிவரைக்கட்டுகள் ஆகியவற்றை ஒழுங்குறுத்தலாம்.

(2) இந்த அரசமைப்பின் தொடக்கநிலையில், இந்திய ஆட்சிப் பணியம் எனவும், இந்தியக் காவல்துறைப் பணியம் எனவும் வழங்கப்பட்டு வந்த பணியங்கள், இந்த உறுப்பின்படி நாடாளுமன்றத்தால் உருவாக்கப்பட்ட பணியங்களாகக் கொள்ளப்படும்.

[3][(3). (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட அனைத்திந்திய நீதித்துறைப் பணியம் என்பது, 236 ஆம் உறுப்பில் பொருள்வரையறை செய்யப்பட்ட மாவட்ட நீதிபதியின் பதவிநிலைக்குக் குறைவான பணியடை எதனையும் உள்ளடக்காது.

(4) மேற்கூறப்பட்ட அனைத்திந்திய நீதித்துறைப் பணியத்தை உருவாக்குவதற்கு வகைசெய்யும் சட்டத்தில், அந்தச் சட்டத்தின் வகையங்களுக்குச் செல்திறம் அளிப்பதற்குத் தேவைப்படும் VI ஆம் பகுதியின் VI ஆம் அத்தியாயத்தைத் திருத்தம் செய்வதற்கான வகையங்கள் அடங்கியிருக்கலாம்; மேலும், அத்தகைய சட்டம் எதுவும், 368 ஆம் உறுப்பினைப் பொறுத்த வரை, இந்த அரசமைப்பின் ஒரு திருத்தம் எனக் கொள்ளப்படுதல் ஆகாது.]

**[4][312(அ). குறித்தசில பணியங்களிலுள்ள அலுவலர்களின் பணிவரைக்கட்டுகளை மாற்றுவதற்கு அல்லது முறித்தறவு செய்வதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம் :**

(1) நாடாளுமன்றம் சட்டத்தினால்—

(அ) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு, முடியரசின் இந்தியக் குடியியல் பணியம் ஒன்றிற்கு இந்தியாவிற்கான அமைச்சரால் அல்லது மன்றத்தமர் இந்தியாவிற்கான அமைச்சரால் அமர்த்தப்பெற்றிருந்து, அரசமைப்புச் (இருபத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1972 இன் தொடக்கநிலையிலும் அதன் பின்பும், இந்திய அரசின்கீழ் அல்லது மாநிலம் ஒன்றின்கீழ் பணியம் அல்லது பணியடை எதிலும் தொடர்ந்து பணிபுரிகின்றவர்களின் பணியூதியம், விடுப்பு, ஓய்வூதியம் ஆகியவை பொறுத்த பணிவரைக்கட்டுகளையும் ஒழுங்குநடவடிக்கைப் பொருட்பாடுகள் பொறுத்த உரிமைகளையும் பின்மேவுற அல்லது முன்மேவுறப் பொருந்துமாறு மாற்றலாம் அல்லது முறித்தறவு செய்யலாம்;

---

1. ''XI ஆம் பகுதியில்'' என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 45 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 45 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.
4. அரசமைப்புச் (இருபத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1972 இன் 2 ஆம் பிரிவினால் (29–8–1972 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**312. All-India services :**

(1) Notwithstanding anything in [1][Chapter VI of Part VI or Part XI], if the Council of States has declared by resolution supported by not less than two-thirds of the members present and voting that it is necessary or expedient in the national interest so to do, Parliament may by law provide for the creation of one or more all India services [2][(including an all-India judicial service)] common to the Union and the States, and, subject to the other provisions of this Chapter, regulate the recruitment, and the conditions of service of persons appointed, to any such service.

(2) The services known at the commencement of this Constitution as the Indian Administrative Service and the Indian Police Service shall be deemed to be services created by Parliament under this article.

[3][(3) The all-India judicial service referred to in clause (1) shall not include any post inferior to that of a district judge as defined in article 236.

(4) The law providing for the creation of the all-India judicial service aforesaid may contain such provisions for the amendment of Chapter VI of Part VI as may be necessary for giving effect to the provisions of that law and no such law shall be deemed to be an amendment of this Constitution for the purposes of article 368.]

**[4][312A. Power of Parliament to vary or revoke conditions of service of officers of certain services :**

(1) Parliament may by law—

(a) vary or revoke, whether prospectively or retrospectively, the conditions of services as respects remuneration, leave and pension and the rights as respects disciplinary matters of persons who, having been appointed by the Secretary of State or Secretary of State in Council to a civil service of the Crown in India before the commencement of this Constitution, continue on and after the commencement of the Constitution (Twenty-eighth Amendment) Act, 1972, to serve under the Government of India or of a State in any service or post;

---

1. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 45, for "Part XI" (w.e.f. 3-1-1977).

2. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 45 (w.e.f. 3-1-1977).

3. Ins. by *ibid.*

4. Ins. by the Constitution (Twenty-eighth Amendment) Act, 1972, s. 2 (w.e.f. 29-8-1972).

(ஆ) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு, முடியரசின் இந்தியக் குடியியல் பணியம் ஒன்றிற்கு, இந்தியாவிற்கான அமைச்சரால் அல்லது மன்றத்தமர் இந்தியாவிற்கான அமைச்சரால் அமர்த்தப்பெற்றிருந்து, அரசமைப்புச் (இருபத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1972 இன் தொடக்கநிலைக்கு முன்பு எப்போதேனும் பதவியிலிருந்து ஒய்வு பெற்றவர்களின் அல்லது பிறவாறு பணியத்திலிருந்து அகன்றவர்களின் ஒய்வூதியம் பொறுத்த பணிவரைக்கட்டுகளைப் பின்மேவுற அல்லது முன்மேவுறப் பொருந்துமாறு மாற்றலாம் அல்லது முறித்தறவு செய்யலாம் :

**வரம்புரையாக** : உச்ச நீதிமன்றத்தின் அல்லது உயர் நீதிமன்றம் ஒன்றின் தலைமை நீதிபதி அல்லது பிற நீதிபதி, இந்தியக் கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையர், ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளர் அல்லது பிற உறுப்பினர், அல்லது தலைமைத் தேர்தல் ஆணையர் பதவியை வகிக்கிற அல்லது வகித்திருக்கிற எவரையும் பொறுத்தவரை, அத்தகைய பணியடையில் அவர் அமர்த்தப்பெற்ற பின்பு அவருடைய பணிவரைக்கட்டுகளை இந்தியாவிற்கான அமைச்சரால் அல்லது மன்றத்தமர் இந்தியாவிற்கான அமைச்சரால் முடியரசின் இந்தியக் குடியியல் பணியம் ஒன்றிற்கு அமர்த்தப்பெற்றவராய் அவர் இருப்பதன் காரணமாக அப்பணிவரைக்கட்டுகள் அவருக்குப் பொருந்துவனவாக இருக்கும் அளவிற்குத் தவிர, அவருக்குப் பாதகமான வகையில் மாற்றுவதற்கு அல்லது முறித்தறவு செய்வதற்கு (அ) உட்கூறில் அல்லது (ஆ) உட்கூறில் உள்ள எதுவும் நாடாளுமன்றத்திற்கு அதிகாரமளிப்பதாகப் பொருள்கொள்ளப்படுதல் ஆகாது.

(2) இந்த உறுப்பின்படி நாடாளுமன்றம் சட்டத்தினால் வகைசெய்துள்ள அளவிற்குத் தவிர (1) ஆம் கூறில் சுட்டப்பெற்றவர்களின் பணிவரைக்கட்டுகளை ஒழுங்குறுத்துவதற்கு இந்த அரசமைப்பின் பிற வகையம் எதன்படியும் சட்டமன்றத்திற்கு அல்லது பிற அதிகாரஅமைப்பு எதற்கும் உள்ள அதிகாரத்தை இந்த உறுப்பிலுள்ள எதுவும் பாதிப்பதில்லை.

(3). (அ). (1) ஆம் கூறில் சுட்டப்பெற்ற எவராலும் செய்துகொள்ளப்பட்ட அல்லது எழுதிக்கொடுக்கப்பட்ட இணக்க ஒப்பந்தம், உடன்பாடு அல்லது அதுபோன்ற முறையாவணம் ஒன்றின் வகையம் எதிலிருந்தும் அல்லது அதன் மேற்குறிப்பு எதிலிருந்தும் எழுகிற அல்லது முடியரசின் இந்தியக் குடியியல் பணியம் ஒன்றில் அவர் அமர்த்தப்பெற்றது தொடர்பாகவோ இந்தியத் தன்னாட்சிய அரசின்கீழ் அல்லது அதன் மாகாண அரசு ஒன்றின்கீழ் பணியத்தில் அவர் தொடர்ந்து இருந்துவருவது தொடர்பாகவோ அத்தகையவருக்கு விடுக்கப்பட்ட மடல் எதிலிருந்தும் எழுகிற பூசல் ஒன்றையும்,

(ஆ) முதன்முதலில் இயற்றப்பட்டபடி 314 ஆம் உறுப்பின்படியான உரிமை, பொறுப்படைவு அல்லது கடமைப்பாடு எதனையும் குறித்த பூசல் ஒன்றையும்

பொறுத்து, உச்ச நீதிமன்றமும், பிற நீதிமன்றம் எதுவும் அதிகாரவரம்பு உடையன ஆகா.

(4) முதன்முதலில் இயற்றப்பட்டபடி 314 ஆம் உறுப்பில் அல்லது இந்த அரசமைப்பின் பிற வகையம் எதிலும் எது எவ்வாறிருப்பினும், இந்த உறுப்பின் வகையங்கள் செல்திறம் உடையன ஆகும்.]

(b) vary or revoke, whether prospectively or retrospectively, the conditions of service as respects pension of persons who, having been appointed by the Secretary of State or Secretary of State in Council to a civil service of the Crown in India before the commencement of this Constitution, retired or otherwise ceased to be in service at any time before the commencement of the Constitution (Twenty- eighth Amendment) Act, 1972:

Provided that in the case of any such person who is holding or has held the office of the Chief Justice or other Judge of the Supreme Court or a High Court, the Comptroller and Auditor-General of India, the Chairman or other member of the Union or a State Public Service Commission or the Chief Election Commissioner, nothing in sub-clause (a) or sub-clause (b) shall be construed as empowering Parliament to vary or revoke, after his appointment to such post, the conditions of his service to his disadvantage except in so far as such conditions of service are applicable to him by reason of his being a person appointed by the Secretary of State or Secretary of State in Council to a civil service of the Crown in India.

(2) Except to the extent provided for by Parliament by law under this article, nothing in this article shall affect the power of any Legislature or other authority under any other provision of this Constitution to regulate the conditions of service of persons referred to in clause (1).

(3) Neither the Supreme Court nor any other court shall have jurisdiction in—

(a) any dispute arising out of any provision of, or any endorsement on, any covenant, agreement or other similar instrument which was entered into or executed by any person referred to in clause (1), or arising out of any letter issued to such person, in relation to his appointment to any civil service of the Crown in India or his continuance in service under the Government of the Dominion of India or a Province thereof;

(b) any dispute in respect of any right, liability or obligation under article 314 as originally enacted.

(4) The provisions of this article shall have effect notwithstanding anything in article 314 as originally enacted or in any other provision of this Constitution.]

**313. மாறும் இடைக்காலத்திற்கான வகையங்கள் :**

இந்த அரசமைப்பின்படி இதன்பொருட்டுப் பிற வகையம் எதுவும் செய்யப்படும் வரையில், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு செல்லாற்றலில் இருந்து, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்குப் பின்பும் ஓர் அனைத்திந்திய பணியமாகவோ ஒன்றியம் அல்லது மாநிலம் ஒன்றின் கீழுள்ள பணியமாகவோ பணியடையாகவோ தொடர்ந்து நீடிக்கின்ற அரசுப் பணியம் அல்லது பணியடை ஒன்றிற்குப் பொருந்தும் சட்டங்கள் அனைத்தும், அவை இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு முரணாக இல்லாத அளவிற்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்.

314. [*குறித்தசில பணியங்களுக்கான நிலவுறும் அலுவலர்களின் பாதுகாப்புக்கான வகையம்*].—*அரசமைப்புச் (இருபத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1972 இன் 3 ஆம் பிரிவினால் (29-8-1972 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

## அத்தியாயம் II

## அரசுப் பணியாளர் தேர்வாணையங்கள்

**315. ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் அரசுப் பணியாளர் தேர்வாணையங்கள் :**

(1) இந்த உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒன்றியத்திற்கென அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒன்றும், ஒவ்வொரு மாநிலத்திற்கும் என அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒன்றும் இருந்துவரும்.

(2) இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்கள் அந்த மாநிலங்களின் தொகுப்புக்கென ஒரே அரசுப் பணியாளர் தேர்வாணையம் இருந்துவர உடன்படலாம்; மேலும், அதற்கென, அந்த மாநிலங்கள் ஒவ்வொன்றின் சட்டமன்ற அவையினாலும் அல்லது ஈரவைகள் இருக்குமிடத்து, ஒவ்வோர் அவையினாலும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்படுமாயின், அந்த மாநிலங்களின் தேவைகளை நிறைவுறுத்தும் பொருட்டு (இந்த அத்தியாயத்தில் கூட்டு ஆணையம் என்று சுட்டப்படும்) மாநில அரசுப் பணியாளர் கூட்டுத் தேர்வாணையம் ஒன்றை அமைப்பதற்கு நாடாளுமன்றம், சட்டத்தினால் வகைசெய்யலாம்.

(3) மேற்கூறப்பட்ட சட்டம் எதுவும், அச்சட்டத்தின் நோக்கங்களைச் செல்திறப்படுத்துவதற்கு அவசியமான அல்லது உகந்ததான சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டிருக்கலாம்.

(4) ஒன்றியத்திற்கான அரசுப் பணியாளர் தேர்வாணையம், ஒரு மாநிலத்தின் ஆளுநரால்[1]*** அந்த மாநிலத்தின் தேவைகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் நிறைவுறுத்தும் பொருட்டுப் பணியாற்றக் கேட்டுகொள்ளப்படுமாயின், குடியரசுத்தலைவரின் ஒப்பேற்புடன் அவ்வாறு பணியாற்ற உடன்படலாம்.

(5) இந்த அரசமைப்பில் ஒன்றியத்திற்கான அரசுப் பணியாளர் தேர்வாணையம் அல்லது மாநிலம் ஒன்றின் அரசுப் பணியாளர் தேர்வாணையம் பற்றிய சுட்டுகைகள், தறுவாயின் தேவை வேறானாலன்றி, வினாவிலுள்ள குறிப்பிட்ட பொருட்பாடு பொறுத்து, ஒன்றியத்தின் அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் தேவைகளை நிறைவுறுத்தும் பொருட்டுப் பணிபுரியும் ஆணையத்தைக் குறிப்பிடும் சுட்டுகைகளாகப் பொருள்கொள்ளப்படும்.

---

1. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

**313. Transitional provisions :**

Until other provision is made in this behalf under this Constitution, all the laws in force immediately before the commencement of this Constitution and applicable to any public service or any post which continues to exist after the commencement of this Constitution, as an all-India service or as service or post under the Union or a State shall continue in force so far as consistent with the provisions of this Constitution.

314. *[Provision for protection of existing officers of certain services].— Omitted by the Constitution (Twenty-eighth Amendment) Act, 1972, s. 3 (w.e.f. 29-8-1972).*

## CHAPTER II

## PUBLIC SERVICE COMMISSIONS

**315. Public Service Commissions for the Union and for the States :**

(1) Subject to the provisions of this article, there shall be a Public Service Commission for the Union and a Public Service Commission for each State.

(2) Two or more States may agree that there shall be one Public Service Commission for that group of States, and if a resolution to that effect is passed by the House or, where there are two Houses, by each House of the Legislature of each of those States, Parliament may by law provide for the appointment of a Joint State Public Service Commission (referred to in this Chapter as Joint Commission) to serve the needs of those States.

(3) Any such law as aforesaid may contain such incidental and consequential provisions as may be necessary or desirable for giving effect to the purposes of the law.

(4) The Public Service Commission for the Union, if requested so to do by the Governor [1]*** of a State, may, with the approval of the President, agree to serve all or any of the needs of the State.

(5) References in this Constitution to the Union Public Service Commission or a State Public Service Commission shall, unless the context otherwise requires, be construed as references to the Commission serving the needs of the Union or, as the case may be, the State as respects the particular matter in question.

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

**316. உறுப்பினர்களை அமர்த்துதலும் அவர்களின் பதவிக்காலமும் :**

(1) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைவரும் பிற உறுப்பினர்களும், ஒன்றியத்து ஆணையத்தை அல்லது ஒரு கூட்டு ஆணையத்தைப் பொறுத்த வரை குடியரசுத்தலைவராலும், மாநிலம் ஒன்றின் ஆணையத்தைப் பொறுத்த வரை அந்த மாநிலத்தின் ஆளுநராலும் [1]*** அமர்த்தப்பெறுவர்:

**வரம்புரையாக :** அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒவ்வொன்றின் உறுப்பினர்களில் கூடுமானவரையில் ஒரு பாதியினர், அவர்கள் முறையே அமர்த்தப்பெற்ற தேதிகளில் இந்திய அரசின்கீழ் அல்லது மாநிலம் ஒன்றின் அரசின்கீழ் குறைந்தது பத்தாண்டுகள் பதவி வகித்தவர்களாக இருத்தல் வேண்டும்; மேற்சொன்ன பத்தாண்டுக் காலஅளவைக் கணக்கிடுவதில், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு, ஒருவர், முடியரசின்கீழ் இந்தியாவில் அல்லது இந்தியக் குறுநிலம் ஒன்றின் அரசின்கீழ் பதவி வகித்த காலஅளவையும் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

[2][(1 (அ)) ஆணையத்தின் தலைமையாளர் பதவி காலியாகுமாயின் அல்லது இருத்தலின்மை காரணமாக அல்லது பிற காரணம் எதனாலும் அத்தலைமையாளர் தம் பதவிக் கடமைகளைப் புரிய இயலாதிருப்பாராயின், காலியான அப்பதவிக்கு (1) ஆம் கூறின்படி அமர்த்தப்பெற்றவர், அப்பதவிக் கடமைகளை மேற்கொள்ளும் வரையில் அல்லது, நேர்வுக்கேற்ப, தலைமையாளர் தம் பதவிக் கடமைகளை மீண்டும் மேற்கொள்ளும் வரையில், ஒன்றியத்து ஆணையத்தை அல்லது கூட்டு ஆணையம் ஒன்றைப் பொறுத்தவரை குடியரசுத்தலைவராலும் மாநில ஆணையம் ஒன்றைப் பொறுத்தவரை அந்த மாநிலத்தின் ஆளுநராலும் அதன்பொருட்டு அமர்த்தப்பெறும் அந்த ஆணையத்தின் பிற உறுப்பினர்களில் ஒருவர் அந்தக் கடமைகளைப் புரிந்து வருவார்.]

(2) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒருவர், தாம் பதவியை மேற்கொள்ளும் தேதியிலிருந்து ஆறு ஆண்டுக் காலத்திற்கு அல்லது ஒன்றியத்து ஆணையத்தைப் பொறுத்தவரை அறுபத்தைந்து வயதை எய்தும் வரையில், மாநில ஆணையம் ஒன்றை அல்லது கூட்டு ஆணையம் ஒன்றைப் பொறுத்தவரை [3][அறுபத்திரண்டு] வயதை எய்தும் வரையில், இவற்றில் எது முந்தியதோ அதுவரை, அப்பதவியை வகிப்பார்:

**வரம்புரையாக :**

(அ) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒருவர், ஒன்றியத்து ஆணையத்தை அல்லது கூட்டு ஆணையத்தைப் பொறுத்தவரை குடியரசுத்தலைவருக்கும், மாநில ஆணையம் ஒன்றைப் பொறுத்தவரை அந்த மாநிலத்தின் ஆளுநருக்கும் [1]***, தம் கையொப்பமிட்டு எழுத்துவழித் தெரிவித்துத் தம் பதவியை விட்டு விலகிக்கொள்ளலாம்;

(ஆ) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒருவர், 317 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில் அல்லது (3) ஆம் கூறில் வகை செய்யப்பட்டுள்ள முறையில்அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம்.

(3) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினராகப் பதவி வகிக்கும் ஒருவர், தம் பதவிக்காலம் கழிவுறுவதன்மேல், அந்தப் பதவிக்கு மீண்டும் அமர்த்தப்பெறுவதற்குத் தகுமையற்றவர் ஆவார்.

---

1. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள். அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம். 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு). விட்டுவிடப்பட்டன.

2. அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம். 1963 இன் 11 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

3. "அறுபது" என்பதற்கு. அரசமைப்புச் (நாற்பத்து ஒன்றாம் திருத்தம்) சட்டம். 1975 இன் 2 ஆம் பிரிவினால் (7–9–1976 முதல் செல்திறம் பெறுமாறு). மாற்றாக அமைக்கப்பட்டது.

**316. Appointment and term of office of members :**

(1) The Chairman and other members of a Public Service Commission shall be appointed, in the case of the Union Commission or a Joint Commission, by the President, and in the case of a State Commission, by the Governor [1]*** of the State:

Provided that as nearly as may be one-half of the members of every Public Service Commission shall be persons who at the dates of their respective appointments have held office for at least ten years either under the Government of India or under the Government of a State, and in computing the said period of ten years any period before the commencement of this Constitution during which a person has held office under the Crown in India or under the Government of an Indian State shall be included.

[2][(1A) If the office of the Chairman of the Commission becomes vacant or if any such Chairman is by reason of absence or for any other reason unable to perform the duties of his office, those duties shall, until some person appointed under clause (1) to the vacant office has entered on the duties thereof or, as the case may be, until the Chairman has resumed his duties, be performed by such one of the other members of the Commission as the President, in the case of the Union Commission or a Joint Commission, and the Governor of the State in the case of a State Commission, may appoint for the purpose.]

(2) A member of a Public Service Commission shall hold office for a term of six years from the date on which he enters upon his office or until he attains, in the case of the Union Commission, the age of sixty- five years, and in the case of a State Commission or a Joint Commission, the age of [3][sixty-two years], whichever is earlier:

Provided that—

(a) a member of a Public Service Commission may, by writing under his hand addressed, in the case of the Union Commission or a Joint Commission, to the President, and in the case of a State Commission, to the Governor [1]*** of the State, resign his office;

(b) a member of a Public Service Commission may be removed from his office in the manner provided in clause (1) or clause (3) of article 317.

(3) A person who holds office as a member of a Public Service Commission shall, on the expiration of his term of office, be ineligible for re-appointment to that office.

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. Ins. by the Constitution (Fifteenth Amendment) Act, 1963, s. 11 (w.e.f. 5-10-1963).

3. Subs. by the Constitution (Forty-first Amendment) Act, 1975, s. 2. for "sixty years" (w.e.f. 7-9-1976).

**316. உறுப்பினர்களை அமர்த்துதலும் அவர்களின் பதவிக்காலமும் :**

(1) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைவரும் பிற உறுப்பினர்களும், ஒன்றியத்து ஆணையத்தை அல்லது ஒரு கூட்டு ஆணையத்தைப் பொறுத்த வரை குடியரசுத்தலைவராலும், மாநிலம் ஒன்றின் ஆணையத்தைப் பொறுத்த வரை அந்த மாநிலத்தின் ஆளுநராலும் [1]*** அமர்த்தப்பெறுவர்:

**வரம்புரையாக :** அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒவ்வொன்றின் உறுப்பினர்களில் கூடுமானவரையில் ஒரு பாதியினர், அவர்கள் முறையே அமர்த்தப்பெற்ற தேதிகளில் இந்திய அரசின்கீழ் அல்லது மாநிலம் ஒன்றின் அரசின்கீழ் குறைந்தது பத்தாண்டுகள் பதவி வகித்தவர்களாக இருத்தல் வேண்டும்; மேற்சொன்ன பத்தாண்டுக் காலஅளவைக் கணக்கிடுவதில், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு, ஒருவர், முடியரசின்கீழ் இந்தியாவில் அல்லது இந்தியக் குறுநிலம் ஒன்றின் அரசின்கீழ் பதவி வகித்த காலஅளவையும் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

[2][(1(அ)) ஆணையத்தின் தலைமையாளர் பதவி காலியாகுமாயின் அல்லது இருத்தலின்மை காரணமாக அல்லது பிற காரணம் எதனாலும் அத்தலைமையாளர் தம் பதவிக் கடமைகளைப் புரிய இயலாதிருப்பாராயின், காலியான அப்பதவிக்கு (1) ஆம் கூறின்படி அமர்த்தப்பெற்றவர், அப்பதவிக் கடமைகளை மேற்கொள்ளும் வரையில் அல்லது, நேர்வுக்கேற்ப, தலைமையாளர் தம் பதவிக் கடமைகளை மீண்டும் மேற்கொள்ளும் வரையில், ஒன்றியத்து ஆணையத்தை அல்லது கூட்டு ஆணையம் ஒன்றைப் பொறுத்தவரை குடியரசுத்தலைவராலும் மாநில ஆணையம் ஒன்றைப் பொறுத்தவரை அந்த மாநிலத்தின் ஆளுநராலும் அதன்பொருட்டு அமர்த்தப்பெறும் அந்த ஆணையத்தின் பிற உறுப்பினர்களில் ஒருவர் அந்தக் கடமைகளைப் புரிந்து வருவார்.]

(2) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒருவர், தாம் பதவியை மேற்கொள்ளும் தேதியிலிருந்து ஆறு ஆண்டுக் காலத்திற்கு அல்லது ஒன்றியத்து ஆணையத்தைப் பொறுத்தவரை அறுபத்தைந்து வயதை எய்தும் வரையில், மாநில ஆணையம் ஒன்றை அல்லது கூட்டு ஆணையம் ஒன்றைப் பொறுத்தவரை [3][அறுபத்திரண்டு] வயதை எய்தும் வரையில், இவற்றில் எது முந்தியதோ அதுவரை, அப்பதவியை வகிப்பார்:

**வரம்புரையாக :**

(அ) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒருவர், ஒன்றியத்து ஆணையத்தை அல்லது கூட்டு ஆணையத்தைப் பொறுத்தவரை குடியரசுத்தலைவருக்கும், மாநில ஆணையம் ஒன்றைப் பொறுத்தவரை அந்த மாநிலத்தின் ஆளுநருக்கும் [1]***, தம் கையொப்பமிட்டு எழுத்துவழித் தெரிவித்துத் தம் பதவியை விட்டு விலகிக்கொள்ளலாம்;

(ஆ) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒருவர், 317 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறில் அல்லது (3) ஆம் கூறில் வகை செய்யப்பட்டுள்ள முறையில் அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம்.

(3) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினராகப் பதவி வகிக்கும் ஒருவர், தம் பதவிக்காலம் கழிவுறுவதன்மேல், அந்தப் பதவிக்கு மீண்டும் அமர்த்தப்பெறுவதற்குத் தகுமையற்றவர் ஆவார்.

---

1. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு). விட்டுவிடப்பட்டன.
2. அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 11 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. "அறுபது" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 2 ஆம் பிரிவினால் (7–9–1976 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

**317. Removal and suspension of a member of a Public Service Commission :**

(1) Subject to the provisions of clause (3), the Chairman or any other member of a Public Service Commission shall only be removed from his office by order of the President on the ground of misbehaviour after the Supreme Court, on reference being made to it by the President, has, on inquiry held in accordance with the procedure prescribed in that behalf under article 145, reported that the Chairman or such other member, as the case may be, ought on any such ground to be removed.

(2) The President, in the case of the Union Commission or a Joint Commission, and the Governor [1]*** in the case of a State Commission, may suspend from office the Chairman or any other member of the Commission in respect of whom a reference has been made to the Supreme Court under clause (1) until the President has passed orders on receipt of the report of the Supreme Court on such reference.

(3) Notwithstanding anything in clause (1), the President may by order remove from office the Chairman or any other member of a Public Service Commission if the Chairman or such other member, as the case may be,—

(a) is adjudged an insolvent; or

(b) engages during his term of office in any paid employment outside the duties of his office; or

(c) is, in the opinion of the President, unfit to continue in office by reason of infirmity of mind or body.

(4) If the Chairman or any other member of a Public Service Commission is or becomes in any way concerned or interested in any contract or agreement made by or on behalf of the Government of India or the Government of a State or participates in any way in the profit thereof or in any benefit or emolument arising therefrom otherwise than as a member and in common with the other members of an incorporated company, he shall, for the purposes of clause (1), be deemed to be guilty of misbehaviour.

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

**317. அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒருவரைப் பணியறவு செய்தலும் தற்காலிகமாக நீக்குதலும்:**

(1). (3) ஆம் கூறின் வகையங்களுக்கு உட்பட்டு, உச்ச நீதிமன்றம், தனக்குக் குடியரசுத்தலைவர் குறித்தனுப்புவதன் மீது 145 ஆம் உறுப்பில் இதற்கென வகுக்கப்பட்ட நெறிமுறைக்கிணங்க விசாரணை நடத்தி, அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைவர் அல்லது பிற உறுப்பினர் ஒருவர் நெறிதிறம்பி நடந்துள்ளார் என்னும் காரணத்தின் அடிப்படையில் அவரைப் பணியறவு செய்யவேண்டும் என்று அறிக்கை அளிப்பதன்மேல், அத்தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, அத்தகைய பிற உறுப்பினர், குடியரசுத்தலைவரின் ஆணையின்வழி மட்டுமே பணியறவு செய்யப்பெறுவார்.

(2) ஆணையத்தின் தலைமையாளரை அல்லது பிற உறுப்பினர் ஒருவரைப் பொறுத்து (1) ஆம் கூறின்படி உச்ச நீதிமன்றத்திற்கு குறித்தனுப்பப்பட்டிருந்து, அவ்வாறு குறித்தனுப்பப்பட்டதன் மீது உச்ச நீதிமன்றம் அளிக்கும் அறிக்கையைக் குடியரசுத்தலைவர் பெற்று, அதன்மீது ஆணை பிறப்பிக்கும் வரை, ஒன்றியத்தின் ஆணையத்தையோ ஒரு கூட்டு ஆணையத்தையோ சார்ந்தவராக அவர் இருப்பாராயின், குடியரசுத்தலைவரும் மாநில ஆணையம் ஒன்றைச் சார்ந்தவராக அவர் இருப்பாராயின் ஆளுநரும் [1]***, அவரைப் பதவியிலிருந்து தற்காலிகமாக நீக்கிவைக்கலாம்.

(3). (1) ஆம் கூறில் எது எவ்வாறிருப்பினும், அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளர் அல்லது பிற உறுப்பினர் ஒருவர்—

(அ) நொடித்துப்போனவர் என்று தீர்ப்பளிக்கப்பட்டிருப்பாராயின்; அல்லது

(ஆ) தம் பதவிக்காலத்தின்போது, தம் பதவிக்கடமைகளுக்குப் புறம்பாக ஊதியம் பெறும் வேலை எதிலும் ஈடுபடுவாராயின்; அல்லது

(இ) குடியரசுத்தலைவரின் கருத்தின்படி, மனம் அல்லது உடல் தளர்ச்சி காரணமாகப் பதவியில் தொடர்ந்திருப்பதற்குத் தகுதியற்றவராக இருப்பாராயின், அத்தலைவரை அல்லது, நேர்வுக்கேற்ப, அத்தகைய பிற உறுப்பினரைக் குடியரசுத்தலைவர் ஆணையின்வழி பணியறவு செய்யலாம்.

(4) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளர் அல்லது பிற உறுப்பினர் எவரும், கூட்டுருமமாகப் பதிவுசெய்யப்பட்ட நிறுமம் ஒன்றின் உறுப்பினர் என்ற வகையிலும், அந்த நிறுமத்தின் பிற உறுப்பினர்களோடு சேர்ந்து பொதுவான வகையிலும் அல்லாமல் பிற வகையில் இந்திய அரசால் அல்லது மாநிலம் ஒன்றின் அரசால் அல்லது அதன் சார்பில் செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தம் அல்லது உடன்பாடு எதிலும் எவ்வகையிலேனும் தொடர்பு அல்லது நலப்பற்று கொண்டவராக இருந்தாலும் அல்லது ஆகிவிட்டாலும் அல்லது அதன் ஆதாயத்தில் அல்லது அதிலிருந்து விளையும் நன்மை அல்லது பதவியூதியம் எதிலும் எவ்வகையிலேனும் பங்கு பெறுபவராக இருந்தாலும் (1) ஆம் கூறின் நோக்கங்களைப் பொறுத்தவரை, அவர் நெறிதிறம்பிய நடத்தை என்னும் குற்றம் செய்ததாகக் கொள்ளப்பெறுவார்.

---

1. ''அல்லது இராஜபிரமுகர்'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

**318. Power to make regulations as to conditions of service of members and staff of the Commission :**

In the case of the Union Commission or a Joint Commission, the President and, in the case of a State Commission, the Governor [1]*** of the State may by regulations—

(a) determine the number of members of the Commission and their conditions of service; and

(b) make provision with respect to the number of members of the staff of the Commission and their conditions of service:

Provided that the conditions of service of a member of a Public Service Commission shall not be varied to his disadvantage after his appointment.

**319. Prohibition as to the holding of offices by members of Commission on ceasing to be such members :**

On ceasing to hold office—

(a) the Chairman of the Union Public Service Commission shall be ineligible for further employment either under the Government of India or under the Government of a State;

(b) the Chairman of a State Public Service Commission shall be eligible for appointment as the Chairman or any other member of the Union Public Service Commission or as the Chairman of any other State Public Service Commission, but not for any other employment either under the Government of India or under the Government of a State;

(c) a member other than the Chairman of the Union Public Service Commission shall be eligible for appointment as the Chairman of the Union Public Service Commission or as the Chairman of a State Public Service Commission, but not for any other employment either under the Government of India or under the Government of a State;

(d) a member other than the Chairman of a State Public Service Commission shall be eligible for appointment as the Chairman or any other member of the Union Public Service Commission or as the Chairman of that or any other State Public Service Commission, but not for any other employment either under the Government of India or under the Government of a State.

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

**318. ஆணையத்தின் உறுப்பினர்கள், பணியாளர் தொகுதியினர் ஆகியோருடைய பணிவரைக்கட்டுகளைக் குறித்து ஒழுங்குறுத்தும்விதிகளை வகுப்பதற்குள்ள அதிகாரம் :**

ஒன்றியத்து ஆணையத்தை அல்லது ஒரு கூட்டு ஆணையத்தைப் பொறுத்தவரை குடியரசுத்தலைவரும், மாநிலம் ஒன்றின் ஆணையத்தைப் பொறுத்தவரை அந்த மாநிலத்தின் ஆளுநரும் [1]***, ஒழுங்குறுத்தும்விதிகளின் வழி—

(அ) அவ்வாணையத்து உறுப்பினர்களின் எண்ணிக்கையையும், அவர்களுடைய பணிவரைக்கட்டுகளையும் தீர்மானிக்கலாம்; மேலும்

(ஆ) அவ்வாணையத்துப் பணியாளர் தொகுதியின் உறுப்பினர்களின் எண்ணிக்கையையும், அவர்களுடைய பணிவரைக்கட்டுகளையும் பொறுத்து வகைசெய்யலாம்:

**வரம்புரையாக :** அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் ஒருவரின் பணிவரைக்கட்டுகள் அவர் அமர்த்தப்பெற்ற பின்பு அவருக்குப் பாதகமான வகையில் மாற்றப்படுதல் ஆகாது.

**319. ஆணையத்தின் உறுப்பினர்கள் அத்தகைய உறுப்பினர்களாக இருப்பது அற்றுப்போன பின்பு, பிற பதவிகள் வகிப்பது குறித்த தடை:**

பதவி வகிப்பது அற்றுப்போன பின்பு—

(அ) ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளர், இந்திய அரசின் கீழோ மாநிலம் ஒன்றின் அரசின் கீழோ மேற்கொண்டு வேலையில் அமர்த்தப் பெறுவதற்குத் தகுமையற்றவர் ஆவார்;

(ஆ) மாநிலம் ஒன்றின் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளர், ஒன்றியத்தின் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளராகவோ அதன் பிற உறுப்பினர் ஒருவராகவோ பிறிதொரு மாநில அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளராகவோ அமர்த்தப் பெறுவதற்குத் தகுமையுடையவர் ஆவார்; ஆனால் அவர், இந்திய அரசின் கீழோ மாநிலம் ஒன்றின் அரசின் கீழோ பிற வேலை எதிலும் அமர்த்தப்பெறுவதற்குத் தகுமையுடையவர் ஆகார்;

(இ) ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளர் அல்லாத பிற உறுப்பினர் ஒருவர், ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளராகவோ மாநிலம் ஒன்றின் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளராகவோ அமர்த்தப்பெறுவதற்குத் தகுமையுடையவர் ஆவார்; ஆனால், அவர், இந்திய அரசின் கீழோ மாநில அரசு ஒன்றின் கீழோ பிற வேலை எதிலும் அமர்த்தப்பெறுவதற்குத் தகுமையுடையவர் ஆகார்;

(ஈ) மாநிலம் ஒன்றின் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளர் அல்லாத பிற உறுப்பினர் ஒருவர், ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளராகவோ பிற உறுப்பினர் ஒருவராகவோ அந்த மாநிலத்தின் அல்லது பிறிதொரு மாநிலத்தின் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைமையாளராகவோ அமர்த்தப்பெறுவதற்குத் தகுமையுடையவர் ஆவார்; ஆனால், அவர், இந்திய அரசின் கீழோ மாநில அரசு ஒன்றின் கீழோ பிறவேலை எதிலும் அமர்த்தப்பெறுவதற்குத் தகுமையுடையவர் ஆகார்.

---

1. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

**320. Functions of Public Service Commissions :**

(1) It shall be the duty of the Union and the State Public Service Commissions to conduct examinations for appointments to the services of the Union and the services of the State respectively.

(2) It shall also be the duty of the Union Public Service Commission, if requested by any two or more States so to do, to assist those States in framing and operating schemes of joint recruitment for any services for which candidates possessing special qualifications are required.

(3) The Union Public Service Commission or the State Public Service Commission, as the case may be, shall be consulted—

(a) on all matters relating to methods of recruitment to civil services and for civil posts;

(b) on the principles to be followed in making appointments to civil services and posts and in making promotions and transfers from one service to another and on the suitability of candidates for such appointments, promotions or transfers;

(c) on all disciplinary matters affecting a person serving under the Government of India or the Government of a State in a civil capacity, including memorials or petitions relating to such matters;

(d) on any claim by or in respect of a person who is serving or has served under the Government of India or the Government of a State or under the Crown in India or under the Government of an Indian State, in a civil capacity, that any costs incurred by him in defending legal proceedings instituted against him in respect of acts done or purporting to be done in the execution of his duty should be paid out of the Consolidated Fund of India, or, as the case may be, out of the Consolidated Fund of the State;

(e) on any claim for the award of a pension in respect of injuries sustained by a person while serving under the Government of India or the Government of a State or under the Crown in India or under the Government of an Indian State in a civil capacity, and any question as to the amount of any such award,

**320. அரசுப் பணியாளர் தேர்வாணையங்களின் செயற்பணிகள் :**

(1) ஒன்றியத்துப் பணியங்களிலும் மாநிலத்துப் பணியங்களிலும் அமர்த்தப் பெறுவதற்கான தேர்வுகளை நடத்துவது, முறையே, ஒன்றியம், மாநிலம் ஆகியவற்றின் அரசுப் பணியாளர் தேர்வாணையங்களின் கடமை ஆகும்.

(2) சிறப்புத் தகுதிப்பாடுகள் கொண்டுள்ள வேட்புநர்கள் தேவைப்படும் பணியங்கள் எவற்றிற்கேனும் கூட்டாக ஆளெடுக்கும் திட்டங்களை உருவாக்குவதிலும் செயற்படுத்துவதிலும் உதவிபுரியுமாறு இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்கள் கேட்டுக்கொள்ளுமாயின், அவ்வாறே அவற்றிற்கு உதவிபுரிதலும் ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் கடமை ஆகும்.

(3). (அ) குடியியல் பணியங்கள் குடியியல் பணியடைகள் ஆகியவற்றிற்கு ஆளெடுக்கும் முறைகள் தொடர்பான அனைத்துப் பொருட்பாடுகள் பற்றியும்,

(ஆ) குடியியல் பணியங்கள், பணியடைகள் ஆகியவற்றில் அமர்த்துவதிலும் ஒரு பணியத்திலிருந்து மற்றொன்றுக்குப் பதவி உயர்வுகள், மாற்றங்கள் செய்வதிலும் பின்பற்றப்பட வேண்டிய நெறிகள் பற்றியும், அத்தகைய அமர்த்துகைகள், பதவி உயர்வுகள், பணியடை மாற்றங்கள் ஆகியவற்றின் வேட்புநர்களுக்கான தகுதியுடைமை பற்றியும்,

(இ) இந்திய அரசின்கீழ் அல்லது மாநில அரசு ஒன்றின்கீழ் குடியியல் பணிபுரியும் ஒருவரைப் பாதிக்கும் ஒழுங்குக்கட்டுப்பாட்டுப் பொருட்பாடுகள் தொடர்பான பொதுவிண்ணப்பங்கள் அல்லது, மனுக்கள் உள்ளடங்கலாக, அத்தகைய பொருட்பாடுகள் அனைத்தைப் பற்றியும்,

(ஈ) இந்திய அரசின்கீழ் அல்லது மாநில அரசு ஒன்றின்கீழ் அல்லது முடியரசின்கீழ் இந்தியாவில் அல்லது இந்தியக் குறுநில அரசு ஒன்றின்கீழ் குடியியல் பணிபுரிகின்ற அல்லது பணிபுரிந்திருக்கிற ஒருவர், தம் கடமையை நிறைவேற்றுகையில், செய்த அல்லது செய்ததாகக் கருதப்படும் செயல்கள் பொறுத்து அவர்மீது தொடரப்பட்ட சட்டநடவடிக்கைகளில் எதிர்வாதம் செய்தவகையில் தாம் செய்ய நேரிட்ட செலவடை எதனையும், இந்தியத் திரள்நிதியத்திலிருந்து அல்லது, நேர்வுக்கேற்ப, மாநிலத் திரள்நிதியத்திலிருந்து வழங்கவேண்டுமென்று அவரால் அல்லது அவரைப் பொறுத்துச் செய்யப்படும் கோரிக்கை எதனைப் பற்றியும்,

(உ) இந்திய அரசின்கீழ் அல்லது மாநிலம் ஒன்றின் அரசின்கீழ் அல்லது முடியரசின்கீழ் இந்தியாவில் அல்லது இந்தியக் குறுநில அரசு ஒன்றின்கீழ் குடியியல் பணிபுரிந்தபோது தமக்கு விளைந்த கேடுகள் பொறுத்து ஒய்வூதியம் அளிப்பதற்கான கோரிக்கை எதனைப் பற்றியும், அத்தகைய அளிப்பு எதனின் தொகை குறித்த வினா எதனைப்பற்றியும்

and it shall be the duty of a Public Service Commission to advise on any matter so referred to them and on any other matter which the President, or, as the case may be, the Governor [1]*** of the State, may refer to them:

Provided that the President as respects the all-India services and also as respects other services and posts in connection with the affairs of the Union, and the Governor [2]***, as respects other services and posts in connection with the affairs of a State, may make regulations specifying the matters in which either generally, or in any particular class of case or in any particular circumstances, it shall not be necessary for a Public Service Commission to be consulted.

(4) Nothing in clause (3) shall require a Public Service Commission to be consulted as respects the manner in which any provision referred to in clause (4) of article 16 may be made or as respects the manner in which effect may be given to the provisions of article 335.

(5) All regulations made under the proviso to clause (3) by the President or the Governor [1]*** of a State shall be laid for not less than fourteen days before each House of Parliament or the House or each House of the Legislature of the State, as the case may be, as soon as possible after they are made, and shall be subject to such modifications, whether by way of repeal or amendment, as both Houses of Parliament or the House or both Houses of the Legislature of the State may make during the session in which they are so laid.

**321. Power to extend functions of Public Service Commissions :**

An Act made by Parliament or, as the case may be, the Legislature of a State may provide for the exercise of additional functions by the Union Public Service Commission or the State Public Service Commission as respects the services of the Union or the State and also as respects the services of any local authority or other body corporate constituted by law or of any public institution.

**322. Expenses of Public Service Commissions :**

The expenses of the Union or a State Public Service Commission, including any salaries, allowances and pensions payable to or in respect of the members or staff of the Commission, shall be charged on the Consolidated Fund of India or, as the case may be, the Consolidated Fund of the State.

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. The words 'or Rajpramukh, as the case may be" omitted by *ibid.*

ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணையத்தை அல்லது, நேர்வுக்கேற்ப, மாநில அரசுப் பணியாளர் தேர்வாணையத்தைக் கலந்தாய்வு செய்தல் வேண்டும்; மேலும், தங்களுக்கு அவ்வாறு குறித்தனுப்பப்பட்ட பொருட்பாடு எதன் மீதும், குடியரசுத்தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் ஆளுநர் [1]*** தங்களுக்குக் குறித்தனுப்பும் பிற பொருட்பாடு எதன்மீதும் தேர்வுரை வழங்குவது அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் கடமை ஆகும்:

**வரம்புரையாக :** அனைத்திந்தியப் பணியங்களைப் பொறுத்தும், ஒன்றியத்தின் அலுவற்பாடுகள் தொடர்பான பிற பணியங்கள், பணியடைகள் இவற்றைப் பொறுத்தும் குடியரசுத்தலைவரும், மாநிலம் ஒன்றின் அலுவற்பாடுகள் தொடர்பான பிற பணியங்கள், பணியடைகள் இவற்றைப் பொறுத்து ஆளுநரும் [2]*** பொதுவியலான அல்லது குறிப்பிட்ட வகையான நேர்வில் அல்லது குறிப்பிட்ட சூழ்நிலைகளில் எந்தெந்தப் பொருட்பாடுகள் பற்றி அரசுப் பணியாளர் தேர்வாணையத்தைக் கலந்தாய்வு செய்யத் தேவையில்லை என்பதைக் குறித்துரைக்கும் ஒழுங்குறுத்தும்விதிகளை வகுக்கலாம்.

(4) 16 ஆம் உறுப்பின் (4) ஆம் கூறில் வகைசெய்யப்பட்டுள்ளதை எந்த முறையில் நிறைவேற்றலாம் என்பதைப் பொறுத்தும், 335 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு எந்த முறையில் செல்திறமளிக்கலாம் என்பதைப் பொறுத்தும், அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒன்றைக் கலந்தாய்வு செய்தல் வேண்டும் என (3) ஆம் கூறிலுள்ள எதுவும் வேண்டுறுத்துதல் ஆகாது.

(5) குடியரசுத்தலைவரால் அல்லது மாநிலம் ஒன்றின் ஆளுநரால் [1]*** (3) ஆம் கூறுக்கான வரம்புரையின்படி செய்யப்பட்ட ஒழுங்குறுத்தும்விதிகள் அனைத்தும், அவை செய்யப்பட்ட பின்பு பதினான்கு நாட்களுக்குக் குறையாமல், கூடுமான விரைவில், நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றின் முன்பும் அல்லது, நேர்வுக்கேற்ப, மாநிலச் சட்டமன்ற அவையின் அல்லது ஒவ்வோர் அவையின் முன்பும் வைக்கப்படுதல் வேண்டும்; மேலும், அந்த ஒழுங்குறுத்தும் விதிகள், அவ்வாறு வைக்கப்பட்ட கூட்டத்தொடரின்போது நாடாளுமன்றத்தின் ஈரவைகளும் அல்லது அந்த மாநிலச் சட்டமன்றத்தின் அவை அல்லது ஈரவைகளும் நீக்கறவு அல்லது திருத்தம் வாயிலாகச் செய்யும் மாற்றமைவுகளுக்கு உட்பட்டவையாக இருக்கும்.

### 321. அரசுப் பணியாளர் தேர்வாணையங்களின் செயற்பணிகளை விரிவாக்குவதற்கான அதிகாரம் :

நாடாளுமன்றத்தால் அல்லது, நேர்வுக்கேற்ப, மாநிலம் ஒன்றின் சட்டமன்றத்தால் இயற்றப்படும் ஒரு சட்டம், ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் பணியங்களைப் பொறுத்தும், உள்ளாட்சி அதிகாரஅமைப்பு அல்லது சட்டத்தினால் அமைக்கப்பட்ட கூட்டுருமக்குழுமம் ஒன்றின் அல்லது அரசு நிறுவனம் ஒன்றின் பணியங்களைப் பொறுத்துங்கூட, ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணையம் அல்லது மாநிலத்து அரசுப் பணியாளர் தேர்வாணையம் கூடுதலாகச் செயற்பணிகளை ஆற்றுவதற்கு வகைசெய்யலாம்.

### 322. அரசுப் பணியாளர் தேர்வாணையங்களின் செலவுகள் :

ஒன்றியத்து அல்லது மாநிலம் ஒன்றின் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர்களுக்கு அல்லது பணியாளர் தொகுதிக்கு அல்லது அவர்கள் தொடர்பாக வழங்கப்படும் வரையூதியங்கள், படித்தொகைகள், ஒய்வூதியங்கள் உள்ளடங்கலான, அவ்வாணையத்தின் செலவுகள், இந்தியத் திரள்நிதியத்தின் மீது அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத் திரள்நிதியத்தின் மீது சார்த்தப்படும்.

---

1. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம். 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு). விட்டுவிடப்பட்டன.

2. "அல்லது, நேர்வுக்கேற்ப, இராஜபிரமுகர்" என்ற சொற்கள். *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

**323. Reports of Public Service Commissions :**

(1) It shall be the duty of the Union Commission to present annually to the President a report as to the work done by the Commission and on receipt of such report the President shall cause a copy thereof together with a memorandum explaining, as respects the cases, if any, where the advice of the Commission was not accepted, the reasons for such non-acceptance to be laid before each House of Parliament.

(2) It shall be the duty of a State Commission to present annually to the Governor [1]*** of the State a report as to the work done by the Commission, and it shall be the duty of a Joint Commission to present annually to the Governor [2]*** of each of the States the needs of which are served by the Joint Commission a report as to the work done by the Commission in relation to that State, and in either case the Governor [1]***, shall, on receipt of such report, cause a copy thereof together with a memorandum explaining, as respects the cases, if any, where the advice of the Commission was not accepted, the reasons for such non- acceptance to be laid before the Legislature of the State.

## [3][PART XIVA

## TRIBUNALS

**323A. Administrative tribunals :**

(1) Parliament may, by law, provide for the adjudication or trial by administrative tribunals of disputes and complaints with respect to recruitment and conditions of service of persons appointed to public services and posts in connection with the affairs of the Union or of any State or of any local or other authority within the territory of India or under the control of the Government of India or of any corporation owned or controlled by the Government.

(2) A law made under clause (1) may—

(a) provide for the establishment of an administrative tribunal for the Union and a separate administrative tribunal for each State or for two or more States;

(b) specify the jurisdiction, powers (including the power to punish for contempt) and authority which may be exercised by each of the said tribunals;

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2 The words "or Rajpramukh, as the case may be" omitted by *ibid.*

3. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 46 (w.e.f. 3-1-1977)

**323. அரசுப்பணியாளர் தேர்வாணையங்களின் அறிக்கைகள் :**

(1) ஒன்றியத்து ஆணையம் செய்த பணியைப் பற்றிய ஓர் அறிக்கையை ஆண்டுதோறும் குடியரசுத்தலைவரிடம் முன்னிடுவது அந்த ஆணையத்தின் கடமை ஆகும்; மேலும், அந்த அறிக்கையைப் பெற்றதன்மேல், குடியரசுத்தலைவர், அதன் ஒரு படியினை, ஆணையத்தின் தேர்வுரை ஏற்றுக்கொள்ளப்படாத நேர்வுகள், எவையேனுமிருப்பின், அந்நேர்வுகளில், அவ்வாறு ஏற்றுக் கொள்ளப்படாததற்கான காரணங்களை விளக்கும் விவரக்குறிப்புடன் சேர்த்து, நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றின் முன்பும் வைக்கும்படி செய்வார்.

(2) மாநிலம் ஒன்றின் ஆணையம் செய்த பணியைப் பற்றிய ஓர் அறிக்கையை ஆண்டுதோறும் அந்த மாநிலத்தின் ஆளுநரிடம் [1]*** முன்னிடுவது அந்த ஆணையத்தின் கடமை ஆகும்; மேலும், ஒரு கூட்டு ஆணையம் எந்த மாநிலங்களின் தேவைகளை நிறைவுறுத்தும் பொருட்டுப் பணிபுரிகிறதோ அந்த மாநிலங்கள் ஒவ்வொன்றின் ஆளுநரிடமும் [2]***, அந்த மாநிலம் தொடர்பாக அந்த ஆணையம் செய்த பணியைப் பற்றிய ஓர் அறிக்கையை ஆண்டுதோறும் முன்னிடுவது அந்த ஆணையத்தின் கடமை ஆகும்; அந்நேர்வுகளில் எதிலும், ஆளுநர் [1]***, அந்த அறிக்கையைப் பெற்றதன் பின்பு, அதன் ஒரு படியினை, ஆணையத்தின் தேர்வுரை ஏற்றுக்கொள்ளப்படாத நேர்வுகள், எவையேனுமிருப்பின், அந்நேர்வுகளில், அவ்வாறு ஏற்றுக் கொள்ளப்படாததற்கான காரணங்களை விளக்கும் விவரக்குறிப்புடன் சேர்த்து, அந்த மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்கும்படி செய்வார்.

## [3][பகுதி XIV (அ)

## தீர்ப்பாயங்கள்

**323 (அ). நிருவாகப்பணித் தீர்ப்பாயங்கள் :**

(1) ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் அலுவற்பாடுகளுடனோ இந்திய ஆட்சிநிலவரைக்குள் உள்ள அல்லது இந்திய அரசின் கட்டாள்கையிலுள்ள உள்ளாட்சி அல்லது பிற அதிகாரஅமைப்பு ஒன்றின் அல்லது அரசிற்குச் சொந்தமான அல்லது அதன் கட்டாள்கையிலுள்ள கூட்டுருமம் ஒன்றின் அலுவற்பாடுகளுடனோ தொடர்புடைய அரசுப் பணியங்களுக்கும் பணியடைகளுக்கும் ஆளெடுத்தல், அவற்றிற்கு அமர்த்தப் பெற்றவர்களின் பணிவரைக்கட்டுகள் பொறுத்த பூசல்கள், முறையீடுகள் ஆகியவற்றை நிருவாகப்பணித் தீர்ப்பாயங்கள் நீதிமுறையில் தீர்ப்பதற்கு அல்லது விசாரணை செய்வதற்கு நாடாளுமன்றம் சட்டத்தினால் வகைசெய்யலாம்.

(2). (1) ஆம் கூறின்படி இயற்றப்படும் ஒரு சட்டம்—

(அ) ஒன்றியத்திற்கென ஒரு நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தையும் ஒவ்வொரு மாநிலத்திற்கும் எனவும் அல்லது இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கு எனவும் தனித்தனி நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தையும் நிறுவுவதற்கு வகை செய்யலாம்;

(ஆ) மேற்சொன்ன தீர்ப்பாயங்கள் ஒவ்வொன்றும் செலுத்துவதாகும் அதிகாரவரம்பு (அவமதிப்புக்காகத் தண்டிக்கும் அதிகாரம் உள்ளடங்கலான) அதிகாரங்கள், அதிகாரஅடைவு ஆகியவற்றைக் குறித்துரைக்கலாம்;

---

1. "அல்லது இராஜபிரமுகர்'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. "அல்லது நேர்வுக்கேற்ப இராஜபிரமுகர்"' என்ற சொற்கள், மேற்படிச் சட்டத்தினால் விட்டுவிடப்பட்டன.

3. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 46 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு ) புகுத்தப்பட்டது.

(c) provide for the procedure (including provisions as to limitation and rules of evidence) to be followed by the said tribunals;

(d) exclude the jurisdiction of all courts, except the jurisdiction of the Supreme Court under article 136, with respect to the disputes or complaints referred to in clause (1);

(e) provide for the transfer to each such administrative tribunal of any cases pending before any court or other authority immediately before the establishment of such tribunal as would have been within the jurisdiction of such tribunal if the causes of action on which such suits or proceedings are based had arisen after such establishment;

(f) repeal or amend any order made by the President under clause (3) of article 371D;

(g) contain such supplemental, incidental and consequential provisions (including provisions as to fees) as Parliament may deem necessary for the effective functioning of, and for the speedy disposal of cases by, and the enforcement of the orders of, such tribunals.

(3) The provisions of this article shall have effect notwithstanding anything in any other provision of this Constitution or in any other law for the time being in force.

**323B. Tribunals for other matters :**

(1) The appropriate Legislature may, by law, provide for the adjudication or trial by tribunals of any disputes, complaints, or offences with respect to all or any of the matters specified in clause (2) with respect to which such Legislature has power to make laws.

(2) The matters referred to in clause (1) are the following, namely:—

(a) levy, assessment, collection and enforcement of any tax;

(b) foreign exchange, import and export across customs frontiers;

(c) industrial and labour disputes;

(d) land reforms by way of acquisition by the State of any estate as defined in article 31A or of any rights therein or the extinguishment or modification of any such rights or by way of ceiling on agricultural land or in any other way;

(e) ceiling on urban property;

(இ) மேற்சொன்ன தீர்ப்பாயங்கள் பின்பற்றவேண்டிய (காலவரம்பு, சான்று விதிகள் ஆகியவை பற்றிய வகையங்கள் உள்ளடங்கலான) நெறிமுறைக்கு வகைசெய்யலாம்;

(ஈ) 136 ஆம் உறுப்பின்படி உச்ச நீதிமன்றத்திற்குள்ள அதிகாரம் நீங்கலாக, (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட பூசல்கள் அல்லது முறையீடுகள் பொறுத்துப் பிற நீதிமன்றங்கள் அனைத்திற்கும் உள்ள அதிகாரத்தை விலக்கிவிடலாம்;

(உ) அத்தகைய நிருவாகப்பணித் தீர்ப்பாயம் நிறுவப்படுவதற்கு உடன்முன்பு ஒரு நீதிமன்றம் அல்லது பிற அதிகாரஅமைப்பு எதிலும் முடிவுறாநிலையிலுள்ள வழக்குகள் எவற்றையும் அவற்றில் அடங்கும் உரிமைவழக்குகளுக்கோ நடவடிக்கைகளுக்கோ ஆதாரமான வழக்குமூலங்கள் மேற்சொன்ன தீர்ப்பாயம் நிறுவப்பட்டதன் பின்பு எழுந்திருந்திருக்குமாயின், எந்தத் தீர்ப்பாயத்தின் அதிகாரத்திற்கு உட்பட்டனவாக இருந்திருக்குமோ அந்தத் தீர்ப்பாயத்திற்கு மாற்றுவதற்கு வகைசெய்யலாம்;

(ஊ) 371(ஈ) உறுப்பின் (3) ஆம் கூறின்படி குடியரசுத்தலைவர் பிறப்பிக்கும் ஆணை எதனையும் நீக்கறவு அல்லது திருத்தம் செய்யலாம்;

(எ) அத்தகைய தீர்ப்பாயங்கள் திறம்படச் செயற்படுவதற்காகவும், அவற்றால் வழக்குகள் விரைவாகத் தீர்க்கப்படுவதற்காகவும், அவற்றின் ஆணைகளைச் செயலுறுத்துவதற்காகவும் தேவையென நாடாளுமன்றம் கருதும் (கட்டணங்கள் பற்றிய வகையங்கள் உள்ளடங்கலான) துணைவுறு, சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டிருக்கலாம்.

(3) இந்த அரசமைப்பின் பிற வகையம் எதிலும் அல்லது நிகழுறு காலத்தில் செல்லாற்றலிலுள்ள பிற சட்டம் எதிலும் எது எவ்வாறிருப்பினும், இந்த உறுப்பின் வகையங்களே செல்திறம் உடையன ஆகும்.

**323(ஆ). பிற பொருட்பாடுகளுக்கான தீர்ப்பாயங்கள் :**

(1) உரிய சட்டமன்றம், (2) ஆம் கூறில் குறித்துரைக்கப்பட்டவையாகவும் தான் சட்டங்களியற்றுவதற்கு அதிகாரம் கொண்டுள்ளவையாகவும் உள்ள பொருட்பாடுகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் பொறுத்து எழும் பூசல்கள், முறையீடுகள் அல்லது குற்றச்செயல்கள் எவற்றையும், தீர்ப்பாயங்களால் நீதிமுறையில் தீர்ப்பதற்கு அல்லது விசாரணை செய்வதற்குச் சட்டத்தினால் வகைசெய்யலாம்.

(2). (1) ஆம் கூறில் சுட்டப்பட்டுள்ள பொருட்பாடுகள் பின்வருவனவாகும், அவையாவன:—

(அ) வரி எதனையும் விதித்தல், கணித்தல், ஈட்டுதல் மற்றும் செயலுறுத்துதல்;

(ஆ) அயல்நாட்டுச் செலாவணி, சுங்க எல்லைகளிடையே இறக்குமதியும் ஏற்றுமதியும்;

(இ) தொழில்துறை மற்றும் தொழிலாளர் பூசல்கள்;

(ஈ) 31(அ) உறுப்பில் பொருள்வரையறை செய்யப்பட்ட உரிமை நிலச்சொத்து எதனையும் அல்லது அதிலுள்ள உரிமைகள் எவற்றையும், அரசு கையகப்படுத்துதல் வாயிலாகவோ அத்தகைய உரிமைகள் எவற்றையும், அழித்தல் அல்லது மாற்றமைவு செய்தல் வாயிலாகவோ, வேளாண் நிலத்திற்கு உச்சவரம்பு விதிப்பதன் வாயிலாக அல்லது பிற வழி எதனாலும் செய்யப்படும் நிலச்சீர்திருத்தங்கள்;

(உ) நகரகச் சொத்தின் மீது உச்சவரம்பு விதித்தல்;

(f) elections to either House of Parliament or the House or either House of the Legislature of a State, but excluding the matters referred to in article 329 and article 329A;

(g) production, procurement, supply and distribution of food-stuffs (including edible oilseeds and oils) and such other goods as the President may, by public notification, declare to be essential goods for the purpose of this article and control of prices of such goods;

[1][(h) rent, its regulation and control and tenancy issues including the right, title and interest of landlords and tenants;]

[2][(i)] offences against laws with respect to any of the matters specified in sub-clauses (a) to [3][(h)] and fees in respect of any of those matters;

[2][(j)] any matter incidental to any of the matters specified in sub-clauses (a) to [4][(i)].

(3) A law made under clause (1) may—

(a) provide for the establishment of a hierarchy of tribunals;

(b) specify the jurisdiction, powers (including the power to punish for contempt) and authority which may be exercised by each of the said tribunals;

(c) provide for the procedure (including provisions as to limitation and rules of evidence) to be followed by the said tribunals;

(d) exclude the jurisdiction of all courts, except the jurisdiction of the Supreme Court under article 136, with respect to all or any of the matters falling within the jurisdiction of the said tribunals;

(e) provide for the transfer to each such tribunal of any cases pending before any court or any other authority immediately before the establishment of such tribunal as would have been within the jurisdiction of such tribunal if the causes of action on which such suits or proceedings are based had arisen after such establishment;

---

1. Ins. by the Constitution (Seventy-fifth Amendment) Act, 1993, s. 2 (w.e.f. 15-5-1994).

2. Sub-clause (h) and (i) re-lettered as (i) and (j) by the Constitution (Seventy-fifth Amendment) Act, 1993, s.2 (w.e.f. 15-5-1994).

3. Subs. by *ibid.*, for "(g)".

4. Subs. by *ibid.*, for "(h)".

(ஊ) 329, 329(அ) உறுப்புகளில் சுட்டப்பட்டுள்ள பொருட்பாடுகள் நீங்கலாக நாடாளுமன்ற ஈரவைகளில் எதற்கும் அல்லது மாநிலம் ஒன்றின் சட்டமன்ற அவைக்கு அல்லது ஈரவைகளில் எதற்கும் நடத்தப்படும் தேர்தல்கள்;

(எ) (உண்தகு எண்ணெய் வித்துக்கள் மற்றும் எண்ணெய்கள் உள்ளடங்கலான) உணவுப் பண்டங்களின் மற்றும் இந்த உறுப்பினைப் பொறுத்தவரை, இன்றிமையாச் சரக்குகள் எனப் பொது அறிவிக்கை வாயிலாகக் குடியரசுத்தலைவர் விளம்பும் பிற சரக்குகளின் உற்பத்தி, கொள்முதல், வழங்கீடு, பகிர்ந்தளிப்பு மற்றும் அத்தகைய சரக்குகளின் விலைகளைக் கட்டுப்படுத்துதல்;

[1][(ஏ) குத்தகை, அதனை ஒழுங்குறுத்துதல் மற்றும் கட்டாள்கை செய்தல் மற்றும் நிலக்கிழார்களின் மற்றும் குத்தகைக்காரர்களின் உரிமை, உரிமைமூலம் மற்றும் உரித்தம் உள்ளடங்கலாக குத்தகையுரிமை எழுவினாக்கள்;]

[2][(ஐ)] (அ) முதல் [3][(ஏ)] வரையுள்ள உட்கூறுகளில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த சட்டங்களுக்கு எதிராகச் செய்யப்படும் குற்றச்செயல்கள் மற்றும் அந்தப் பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த கட்டணங்கள்;

[2][(ஒ)] (அ) முதல் [4][(ஐ)] வரையுள்ள உட்கூறுகளில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதனையும் சார்ந்த பொருட்பாடு.

(3). (1) ஆம் கூறின்படி இயற்றப்படும் ஒரு சட்டம்—

(அ) தீர்ப்பாயங்களைப் படிநிலை அமைப்பில் நிறுவுவதற்காக வகை செய்யலாம்;

(ஆ) மேற்சொன்ன தீர்ப்பாயங்கள் ஒவ்வொன்றும் செலுத்துவதாகும் அதிகாரவரம்பு (அவமதிப்புக்காகத் தண்டிக்கும் அதிகாரம் உள்ளடங்கலான) அதிகாரங்கள், அதிகார அடைவு ஆகியவற்றைக் குறித்துரைக்கலாம்;

(இ) மேற்சொன்ன தீர்ப்பாயங்கள் பின்பற்றவேண்டிய (காலவரம்பு, சான்று பற்றிய விதிகள் ஆகியவை குறித்த வகையங்கள் உள்ளடங்கலான) நெறிமுறைக்கு வகைசெய்யலாம்;

(ஈ) 136 ஆம் உறுப்பின்படி உச்ச நீதிமன்றத்திற்குள்ள அதிகாரம் நீங்கலாக, மேற்சொன்ன தீர்ப்பாயங்களின் அதிகாரவரம்புக்குள் வரும் பொருட்பாடுகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் பொறுத்துப் பிற நீதிமன்றங்கள் அனைத்திற்கும் உள்ள அதிகாரத்தை விலக்கிவிடலாம்;

(உ) அத்தகைய நிருவாகப்பணித் தீர்ப்பாயம் நிறுவப்படுவதற்கு உடன்முன்பு நீதிமன்றம் அல்லது பிற அதிகாரஅமைப்பு எதிலும் முடிவுறாநிலையிலுள்ள வழக்குகள் எவற்றையும், அவற்றில் அடங்கும் உரிமைவழக்குகளுக்கோ நடவடிக்கைகளுக்கோ ஆதாரமான வழக்கு மூலங்கள், மேற்சொன்ன தீர்ப்பாயம் நிறுவப்பட்டதன் பின்பு எழுந்து இருந்திருக்குமாயின், எந்தத் தீர்ப்பாயத்தின் அதிகாரத்திற்கு உட்பட்டனவாக இருந்திருக்குமோ அந்தத் தீர்ப்பாயத்திற்கு மாற்றுவதற்கு வகை செய்யலாம்;

---

1. அரசமைப்புச் (எழுபத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1993 இன் 2 ஆம் பிரிவினால் (15-5-1994 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. (ஏ) மற்றும் (ஐ) உட்கூறு, அரசமைப்புச் (எழுபத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1993 இன் 2 ஆம் பிரிவினால் (ஐ) மற்றும் (ஒ) ஆக (15-5-1994 முதல் செல்திறம் பெறுமாறு), மறு எழுத்திடப்பட்டது.

3. "(எ)" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்,* மாற்றாக அமைக்கப்பட்டது.

4. "(ஏ)" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்,* மாற்றாக அமைக்கப்பட்டது.

(f) contain such supplemental, incidental and consequential provisions (including provisions as to fees) as the appropriate Legislature may deem necessary for the effective functioning of, and for the speedy disposal of cases by, and the enforcement of the orders of, such tribunals.

(4) The provisions of this article shall have effect notwithstanding anything in any other provision of this Constitution or in any other law for the time being in force.

**Explanation.** — In this article, "appropriate Legislature", in relation to any matter, means Parliament or, as the case may be, a State Legislature competent to make laws with respect to such matter in accordance with the provisions of Part XI.]

## PART XV

## ELECTIONS

**324. Superintendence, direction and control of elections to be vested in an Election Commission :**

(1) The superintendence, direction and control of the preparation of the electoral rolls for, and the conduct of, all elections to Parliament and to the Legislature of every State and of elections to the offices of President and Vice-President held under this Constitution [1]*** shall be vested in a Commission (referred to in this Constitution as the Election Commission).

(2) The Election Commission shall consist of the Chief Election Commissioner and such number of other Election Commissioners, if any, as the President may from time to time fix and the appointment of the Chief Election Commissioner and other Election Commissioners shall, subject to the provisions of any law made in that behalf by Parliament be made by the President.

(3) When any other Election Commissioner is so appointed the Chief Election Commissioner shall act as the Chairman of the Election Commission.

(4) Before each general election to the House of the People and to the Legislative Assembly of each State, and before the first general election and thereafter before each biennial election to the Legislative Council of each State having such Council, the President may also appoint after consultation with the Election Commission such Regional Commissioners as he may consider necessary to assist the Election Commission in the performance of the functions conferred on the Commission by clause (1).

---

1. The words "including the appointment of election tribunals for the decision of doubts and disputes arising out of or in connection with elections to Parliament and to the Legislatures of States" omitted by the Constitution (Nineteenth Amendment) Act, 1966, s. 2 (w.e.f. 11-12-1966).

(ஊ) அத்தகைய தீர்ப்பாயங்கள் திறம்படச் செயற்படுவதற்காகவும், அவற்றால் வழக்குகள் விரைவாகத் தீர்க்கப்படுவதற்காகவும், அவற்றின் ஆணைகளைச் செயலுறுத்துவதற்காகவும் தேவையென உரிய சட்டமன்றம் கருதும் (கட்டணங்கள் பற்றிய வகையங்கள் உள்ளடங்கலான) துணைவுறு, சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டிருக்கலாம்.

(4) இந்த அரசமைப்பின் பிற வகையம் எதிலும் அல்லது நிகழுறு காலத்தில் செல்லாற்றலிலுள்ள பிற சட்டம் எதிலும் எது எவ்வாறிருப்பினும், இந்த உறுப்பின் வகையங்களே செல்திறன் உடையன ஆகும்.

**விளக்கம்.** – இந்த உறுப்பில், பொருட்பாடு எதன் தொடர்பாகவும், "உரிய சட்டமன்றம்" என்பது அத்தகைய பொருட்பாடு பொறுத்து XI ஆம் பகுதியின் வகையங்களுக்கிணங்க சட்டங்கள் இயற்றுவதற்குத் தகுதிறம் உள்ள நாடாளுமன்றம் அல்லது, நேர்வுக்கேற்ப, ஒரு மாநிலச் சட்டமன்றம் என்று பொருள்படும்.]

## பகுதி XV

## தேர்தல்கள்

### 324. தேர்தல்களைக் கண்காணிப்பதும், நெறிப்படுத்துவதும், கட்டாள்கை புரிவதும், தேர்தல் ஆணையத்திடம் உற்றமைந்திருக்கும் :

(1) நாடாளுமன்றம், மாநிலம் ஒவ்வொன்றின் சட்டமன்றம் இவற்றிற்கான தேர்தல்கள் அனைத்திற்கும், வாக்காளர் பட்டியல்களைத் தயாரிப்பது, அத்தேர்தல்களை நடத்துவது, இந்த அரசமைப்பின்படி, குடியரசுத்தலைவர், துணைத்தலைவர் ஆகியோரின் பதவிகளுக்கான தேர்தல்களை நடத்துவது, [1]*** இவற்றைக் கண்காணிப்பதும் நெறிப்படுத்துவதும் கட்டாள்கை புரிவதும் (இந்த அரசமைப்பில் தேர்தல் ஆணையம் எனச் சுட்டப்படும்) ஓர் ஆணையத்திடம் உற்றமைந்திருக்கும்.

(2) தேர்தல் ஆணையமானது, தலைமைத் தேர்தல் ஆணையரையும், குடியரசுத்தலைவர் அவ்வப்போது குறித்திடும் எண்ணிக்கையிலான பிற தேர்தல் ஆணையர்கள், எவரேனுமிருப்பின், அவர்களையும் கொண்டிருக்கும்; மேலும், தலைமைத் தேர்தல் ஆணையர், பிற தேர்தல் ஆணையர்கள் ஆகியோர், நாடாளுமன்றம் இதன்பொருட்டு இயற்றும் சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு உட்பட்டு, குடியரசுத்தலைவரால் அமர்த்தப்பெறுவர்.

(3) பிற தேர்தல் ஆணையர் எவரும் அவ்வாறு அமர்த்தப்பெறும்போது தேர்தல் ஆணையத்தின் தலைமையாளராகத் தலைமைத் தேர்தல் ஆணையர் செயல்படுவார்.

(4) மக்களவைக்கும், மாநிலம் ஒவ்வொன்றின் சட்டமன்றப் பேரவைக்குமான ஒவ்வொரு பொதுத் தேர்தலுக்கு முன்பும் சட்டமன்ற மேலவை உள்ள மாநிலம் ஒவ்வொன்றிலும் முதலாம் பொதுத் தேர்தலுக்கு முன்பும் அதன்பின்பு நடைபெறும் அம்மேலவைக்கான ஈராண்டுமுறைத் தேர்தல் ஒவ்வொன்றுக்கும் முன்பும், குடியரசுத்தலைவர் தேர்தல் ஆணையத்துடன் கலந்தாய்வு செய்த பின்பு, (1) ஆம் கூறினால் அந்த ஆணையத்திற்கு வழங்கப்பட்டுள்ள செயற்பணிகளை புரிவதில் தேர்தல் ஆணையத்திற்கு உற்றுதவி செய்வதற்குத் தேவையெனத் தாம் கருதும் மண்டல ஆணையர்களையும் அமர்த்தலாம்.

---

1. "நாடாளுமன்றம் மற்றும் மாநிலங்களின் சட்டமன்றங்களுக்கான தேர்தல்களில் இருந்து அல்லது தேர்தல்கள் தொடர்பாக எழும் ஐயப்பாடுகளையும் பூசல்களையும் முடிபு செய்வதற்கான தேர்தல் தீர்ப்பாயம் அமர்த்தப்பெறுதலை உள்ளடக்கிய" என்ற சொற்கள், அரசமைப்புச் (பத்தொன்பதாம் திருத்தம்) சட்டம், 1966 இன் 2 ஆம் பிரிவினால் (11–12–1966 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

(5) Subject to the provisions of any law made by Parliament, the conditions of service and tenure of office of the Election Commissioners and the Regional Commissioners shall be such as the President may by rule determine:

Provided that the Chief Election Commissioner shall not be removed from his office except in like manner and on the like grounds as a Judge of the Supreme Court and the conditions of service of the Chief Election Commissioner shall not be varied to his disadvantage after his appointment:

Provided further that any other Election Commissioner or a Regional Commissioner shall not be removed from office except on the recommendation of the Chief Election Commissioner.

(6) The President, or the Governor [1]*** of a State, shall, when so requested by the Election Commission, make available to the Election Commission or to a Regional Commissioner such staff as may be necessary for the discharge of the functions conferred on the Election Commission by clause (1).

**325. No person to be ineligible for inclusion in, or to claim to be included in a special, electoral roll on grounds of religion, race, caste or sex :**

There shall be one general electoral roll for every territorial constituency for election to either House of Parliament or to the House or either House of the Legislature of a State and no person shall be ineligible for inclusion in any such roll or claim to be included in any special electoral roll for any such constituency on grounds only of religion, race, caste, sex or any of them.

**326. Elections to the House of the People and to the Legislative Assemblies of States to be on the basis of adult suffrage :**

The elections to the House of the People and to the Legislative Assembly of every State shall be on the basis of adult suffrage; that is to say, every person who is a citizen of India and who is not less than [2][eighteen years] of age on such date as may be fixed in that behalf by or under any law made by the appropriate Legislature and is not otherwise disqualified under this Constitution or any law made by the appropriate Legislature on the ground of non-residence, unsoundness of mind, crime or corrupt or illegal practice, shall be entitled to be registered as a voter at any such election.

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. Subs. by the Constitution (Sixty-first Amendment) Act, 1988, s. 2, for "twenty-one years" (w.e.f. 28-3-1989).

(5) நாடாளுமன்றம் இயற்றும் சட்டம் எதனின் வகையங்களுக்கு உட்பட்டு, தேர்தல் ஆணையர்கள், மண்டல ஆணையர்கள் ஆகியோரின் பணி வரைக்கட்டுகளும் பதவியுரிமைக்காலமும், குடியரசுத்தலைவர் வகுக்கும் விதிகளின் வழித் தீர்மானிக்கிறவாறு இருக்கும்:

**வரம்புரையாக :** உச்ச நீதிமன்ற நீதிபதி ஒருவரை அகற்றுவதுபோல் அதே முறையிலும் அதே காரணங்களின்மீதும் அன்றி, தலைமைத் தேர்தல் ஆணையரை அவருடைய பதவியிலிருந்து அகற்றுதல் ஆகாது; மேலும், தலைமைத் தேர்தல் ஆணையரின் பணிவரைக்கட்டுகள், அவர் அமர்த்தப்பெற்ற பின்பு அவருக்குப் பாதகமான வகையில் மாற்றப்படுதல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக :** பிற தேர்தல் ஆணையர் அல்லது மண்டல ஆணையர் எவரையும் தலைமைத் தேர்தல் ஆணையரின் பரிந்துரையின்மீது அன்றி, பதவியிலிருந்து அகற்றுதல் ஆகாது.

(6). (1) ஆம் கூறின்படி தேர்தல் ஆணையத்திற்கு வழங்கப்பட்டுள்ள செயற்பணிகளை ஆற்றுவதற்குத் தேவைப்படும் பணியாளர் தொகுதியைத் தேர்தல் ஆணையம் வேண்டும்போது அத்தேர்தல் ஆணையத்திற்கு அல்லது மண்டல ஆணையருக்குக் குடியரசுத்தலைவர் அல்லது ஒரு மாநில ஆளுநர் [1]*** கிடைக்குமாறு செய்வார்.

**325. சமயம், இனம், சாதி அல்லது பாலினம் காரணமாக, வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்படுவதற்கோ, தனியுறு வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்பட வேண்டுமெனக் கோருவதற்கோ எவரும் தகுமையற்றவர் ஆகார்:**

நாடளுமன்ற ஈரவைகளில் எதற்கும் அல்லது ஒரு மாநிலச் சட்டமன்ற அவைக்கு அல்லது சட்டமன்ற ஈரவைகளில் எதற்கும் நடைபெறும் தேர்தலுக்காக, நிலவரைத் தேர்தல் தொகுதி ஒவ்வொன்றுக்கும் பொதுவியலான வாக்காளர் பட்டியல் ஒன்று இருக்கும்; மேலும், சமயம், இனம், சாதி, பாலினம் மட்டுமே அல்லது அவற்றுள் ஏதொன்றையும் மட்டுமே காரணமாகக்கொண்டு அத்தகைய பட்டியலில் சேர்க்கப்படுவதற்கோ, அத்தேர்தல் தொகுதிக்கென தனியுறு வாக்காளர் பட்டியல் ஒன்றில் சேர்க்கப்பட வேண்டுமெனக் கோருவதற்கோ எவரும் தகுமையற்றவர் ஆகார்.

**326. மக்களவைக்கும், மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளுக்குமான தேர்தல்கள் வயதுவந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் இருக்கும்:**

மக்களவைக்கும், ஒவ்வொரு மாநிலத்தின் சட்டமன்றப் பேரவைக்குமான தேர்தல்கள் வயதுவந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் இருக்கும்; அதாவது இந்தியக் குடிமகனாகவும், உரிய சட்டமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ அதன் பொருட்டுக் குறித்திடப்படும் தேதியன்று [2][பதினெட்டு] வயதுக்குக் குறையாதவராகவும், இந்த அரசமைப்பின்படி அல்லது உரிய சட்டமன்றம் இயற்றிய சட்டம் எதன்படியும் குடியிருப்பின்மை, பித்துநிலை, குற்றம் புரிதல் அல்லது தேர்தலில் ஒழுங்கீனமான அல்லது சட்டமுரணான நடவடிக்கை காரணமாகப் பிறவாறு தகுதிக்கேடுறாதவராகவும் உள்ள ஒவ்வொருவரும், அத்தகைய தேர்தல் எதிலும் வாக்காளராகப் பதிவு செய்யப்படுவதற்கு உரிமை கொண்டவர் ஆவார்.

---

1. "அல்லது இராஜபிரமுகர்'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. "இருபத்தோர்'' என்பதற்கு, அரசமைப்புச் (அறுபத்து ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1988 இன் 2 ஆம் பிரிவினால் (28–3–1989 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

**327. Power of Parliament to make provision with respect to elections to Legislatures :**

Subject to the provisions of this Constitution, Parliament may from time to time by law make provision with respect to all matters relating to, or in connection with, elections to either House of Parliament or to the House or either House of the Legislature of a State including the preparation of electoral rolls, the delimitation of constituencies and all other matters necessary for securing the due constitution of such House or Houses.

**328. Power of Legislature of a State to make provision with respect to elections to such Legislature :**

Subject to the provisions of this Constitution and in so far as provision in that behalf is not made by Parliament, the Legislature of a State may from time to time by law make provision with respect to all matters relating to, or in connection with, the elections to the House or either House of the Legislature of the State including the preparation of electoral rolls and all other matters necessary for securing the due constitution of such House or Houses.

**329. Bar to interference by courts in electoral matters :**

[1][Notwithstanding anything in this Constitution [2]*** —]

(a) the validity of any law relating to the delimitation of constituencies or the allotment of seats to such constituencies, made or purporting to be made under article 327 or article 328, shall not be called in question in any court;

(b) no election to either House of Parliament or to the House or either House of the Legislature of a State shall be called in question except by an election petition presented to such authority and in such manner as may be provided for by or under any law made by the appropriate Legislature.

[3][**329A.** *Special provision as to elections to Parliament in the case of Prime Minister and Speaker.*— [*Repealed by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 36 (w.e.f. 20-6-1979).*]]

[3]***

---

1. Subs, by the Constitution (Thirty-ninth Amendment) Act, 1975, s. 3, for certain words (w.e.f. 10-8-1975).
2. The words, figures and letters "but subject to the provisions of article 329A" omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 35 (w.e.f. 20-6-1979).
3. Ins. by the Constitution (Thirty-ninth Amendment) Act, 1975, s. 4 and Rep. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 36 (w.e.f. 20-6-1979).

**327. சட்டமன்றங்களுக்கான தேர்தல்கள் பொறுத்து வகைசெய்வதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம் :**

இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, நாடளுமன்ற ஈரவைகளில் எதற்கும் அல்லது ஒரு மாநிலச் சட்டமன்ற அவைகளின் அல்லது அதன் ஈரவைகளில் எதற்குமான தேர்தல்களைப் பொறுத்து அல்லது அவை தொடர்பாக வாக்காளர் பட்டியல்கள் தயாரித்தல், தேர்தல் தொகுதிகளை வரையறுத்தல் அத்தகைய அவையை அல்லது அவைகளை உரியவாறு அமைப்பதற்குத் தேவையான பிற பொருட்பாடுகள் ஆகிய அனைத்தையும் பொறுத்து நாடளுமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் வகைசெய்யலாம்.

**328. ஒரு மாநிலத்தின் சட்டமன்றத்திற்கான தேர்தல்கள் பொறுத்து வகைசெய்வதற்கு அச்சட்டமன்றத்திற்குள்ள அதிகாரம் :**

இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, நாடாளுமன்றத்தால் இதன்பொருட்டு வகைசெய்யப்பட்டிராத அளவுக்கும், ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் அவைக்கான அல்லது அதன் ஈரவைகளில் எதற்குமான தேர்தல்களைப் பொறுத்து அல்லது அவை தொடர்பாக வாக்காளர் பட்டியல்கள் தயாரித்தல், அத்தகைய அவையை அல்லது அவைகளை அமைப்பதற்குத் தேவையான பிற பொருட்பாடுகள் ஆகிய அனைத்தையும் பொறுத்து அந்த மாநிலச் சட்டமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் வகைசெய்யலாம்.

**329. தேர்தல் பற்றிய பொருட்பாடுகளில் நீதிமன்றங்கள் தலையிடுவதற்குத் தடை :**

[1][இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும் [2]*** —]

(அ) தேர்தல் தொகுதிகளை வரையறுத்தல் அல்லது அத்தகைய தொகுதிகளுக்குப் பதவியிடங்களைப் பகிர்ந்து ஒதுக்குதல் தொடர்பாக, 327 ஆம் உறுப்பின்படி அல்லது 328 ஆம் உறுப்பின்படி இயற்றப்பட்டுள்ள அல்லது இயற்றப்பட்டதாகக் கருதப்படுகிற சட்டம் ஒன்றின் செல்லுந்தன்மையை எதிர்த்து நீதிமன்றம் எதிலும் வாதிடுதல் ஆகாது;

(ஆ) நாடாளுமன்ற ஈரவைகளில் எதற்கும் அல்லது ஒரு மாநிலச் சட்டமன்ற அவைக்கான அல்லது அதன் ஈரவைகளில் எதற்குமான தேர்தல் எதனையும், உரிய சட்டமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ வகைசெய்யப்பட்டுள்ளவாறான அதிகார அமைப்பிற்கு, அவ்வாறான முறையில் முன்னிடப்படும் ஒரு தேர்தல் மனு வாயிலாக அன்றி, எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

[3][**329 (அ)**. *தலைமை அமைச்சர் மற்றும் மக்களவைத் தலைவரைப் பொறுத்து நாடாளுமன்றத் தேர்தலுக்கான தனியுறு வகையம்.— [அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம்,1978 இன் 36 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.]]*

[3]***

1. குறித்தசில சொற்களுக்கு, அரசமைப்புச் (முப்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 3 ஆம் பிரிவினால் (10–8–1975 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

2. "ஆனால் 329 (அ) உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு" என்ற சொற்கள், எண்கள் மற்றும் எழுத்துக்கள் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 35 ஆம் பிரிவினால் (20.6.1979 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

3. அரசமைப்புச் (முப்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 4 ஆம் பிரிவினால் புகுத்தப்பட்டது மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 36 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு ) விட்டுவிடப்பட்டது.

# PART XVI

## SPECIAL PROVISIONS RELATING TO CERTAIN CLASSES

**330. Reservation of seats for Scheduled Castes and Scheduled Tribes in the House of the People :**

(1) Seats shall be reserved in the House of the People for—

(a) the Scheduled Castes;

[1][(b) the Scheduled Tribes except the Scheduled Tribes in the autonomous districts of Assam; and]

(c) the Scheduled Tribes in the autonomous districts of Assam.

(2) The number of seats reserved in any State [2][or Union territory] for the Scheduled Castes or the Scheduled Tribes under clause (1) shall bear, as nearly as may be, the same proportion to the total number of seats allotted to that State [2][or Union territory] in the House of the People as the population of the Scheduled Castes in the State [2][or Union territory] or of the Scheduled Tribes in the State [2][or Union territory] or part of the State or [2][Union territory], as the case may be, in respect of which seats are so reserved, bears to the total population of the State [2][or Union territory].

[3][(3) Notwithstanding anything contained in clause (2), the number of seats reserved in the House of the People for the Scheduled Tribes in the autonomous districts of Assam shall bear to the total number of seats allotted to that State a proportion not less than the population of the Scheduled Tribes in the said autonomous districts bears to the total population of the State.]

[4][**Explanation.**— In this article and in article 332, the expression "population" means the population as ascertained at the last preceding census of which the relevant figures have been published:

---

1.Subs. by the Constitution (Fifty-first Amendment) Act, 1984, s. 2, for sub-clause (b) (w.e.f. 16-6-1986).

2.Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

3.Ins. by the Constitution (Thirty-first Amendment) Act, 1973, s. 3 (w.e.f. 17-10-1973).

4.Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 47 (w.e.f. 3-1-1977).

## பகுதி XVI

## குறித்தசில வகுப்பினர் தொடர்பான தனியுறு வகையங்கள்

**330. பட்டியலில்கண்ட சாதியினருக்கும் பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கும் மக்களவையில் பதவியிடங்களை ஒதுக்கீடுசெய்தல் :**

(1) மக்களவையில்—

(அ) பட்டியலில்கண்ட சாதியினர்,

[1][(ஆ) அசாமின் தன்னாட்சி மாவட்டங்களிலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினர் அல்லாத பிற பட்டியலில்கண்ட பழங்குடியினர்.]

(இ) அசாமின் தன்னாட்சி மாவட்டங்களிலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினர்

ஆகியோருக்காகப் பதவியிடங்கள் ஒதுக்கீடுசெய்யப்படுதல் வேண்டும்.

(2) மாநிலம் [2][அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரை] எதிலும் உள்ள பட்டியலில்கண்ட சாதியினருக்கு அல்லது பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கு, (1) ஆம் கூறின்படி ஒதுக்கப்படும் பதவியிடங்களின் எண்ணிக்கைக்கும் மக்களவையில் அந்த மாநிலத்திற்கு [2][அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரைக்குப்] பகிர்ந்து ஒதுக்கப்படும் பதவியிடங்களின் மொத்த எண்ணிக்கைக்கும் இடையிலான வீதஅளவானது, கூடுமானவரையில், அவ்வாறு பதவியிடங்கள் ஒதுக்கீடு செய்யப்படும் அந்த மாநிலத்திலுள்ள [2][அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரையிலுள்ள] பட்டியலில் கண்ட சாதியினருடைய அல்லது அந்த மாநிலத்தில் [2][அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரையில்] அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் [2][அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரையின்] பகுதியில் உள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினருடைய மக்கள்தொகைக்கும் அந்த மாநிலத்தில் [2][அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரையிலுள்ள] மொத்த மக்கள்தொகைக்கும் இடையிலான அதே வீத அளவில் இருத்தல் வேண்டும்.

[3][(3). (2) ஆம் கூறில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், அசாமின் தன்னாட்சி மாவட்டங்களிலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினருக்காக மக்களவையில் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள பதவியிடங்களின் எண்ணிக்கைக்கும் அந்த மாநிலத்திற்குப் பகிர்ந்து ஒதுக்கப்பட்டுள்ள பதவியிடங்களின் மொத்த எண்ணிக்கைக்கும் இடையிலான வீத அளவானது, அந்தத் தன்னாட்சி மாவட்டங்களிலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினரின் மக்கள் தொகைக்கும் அந்த மாநிலத்தின் மொத்த மக்கள்தொகைக்கும் இடையிலான வீத அளவிற்குக் குறையாமல் இருத்தல் வேண்டும்.]

[4][**விளக்கம். —** இந்த உறுப்பிலும் **332** ஆம் உறுப்பிலும் ''மக்கட்தொகை'' என்னும் சொல், கடைசி முறை மக்கள் கணக்கெடுப்பின்படி தொடர்புடைய விவரங்களைக் கண்டறிந்து வெளியிடப்பட்டுள்ள மக்கட்தொகை என்று பொருள்படும்:

---

1. (ஆ) உட்கூறுக்கு, அரசமைப்புச் (ஐம்பத்து ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 2 ஆம் பிரிவினால் (16–6–1986 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. அரசமைப்புச் (முப்பத்து ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1973 இன் 3 ஆம் பிரிவினால் (17–10–1973 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 47 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

Provided that the reference in this Explanation to the last preceding census of which the relevant figures have been published shall, until the relevant figures for the first census taken after the year [1][2026] have been published, be construed as a reference to the [2][2001] census.]

**331. Representation of the Anglo-Indian Community in the House of the People :**

Notwithstanding anything in article 81, the President may, if he is of opinion that the Anglo-Indian community is not adequately represented in the House of the People, nominate not more than two members of that community to the House of the People.

**332. Reservation of seats for Scheduled Castes and Scheduled Tribes in the Legislative Assemblies of the States :**

(1) Seats shall be reserved for the Scheduled Castes and the Scheduled Tribes, [3][except the Scheduled Tribes in the autonomous districts of Assam], in the Legislative Assembly of every State [4]***.

(2) Seats shall be reserved also for the autonomous districts in the Legislative Assembly of the State of Assam.

(3) The number of seats reserved for the Scheduled Castes or the Scheduled Tribes in the Legislative Assembly of any State under clause (1) shall bear, as nearly as may be, the same proportion to the total number of seats in the Assembly as the population of the Scheduled Castes in the State or of the Scheduled Tribes in the State or part of the State, as the case may be, in respect of which seats are so reserved, bears to the total population of the State.

[5][(3A) Notwithstanding anything contained in clause (3), until the taking effect, under article 170, of the re-adjustment, on the basis of the first census after the year [6][2026], of the number of seats in the Legislative Assemblies of the States of Arunachal Pradesh, Meghalaya, Mizoram and Nagaland, the seats which shall be reserved for the Scheduled Tribes in the Legislative Assembly of any such State shall be,—

---

1. Subs. by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 6, for "2000" (w.e.f. 21-2-2001).
2. Subs. by the Constitution (Eighty-seventh Amendment) Act, 2003, s. 5 for "1991" (w.e.f. 22-6-2003).
3. Subs. by the Constitution (Fifty-first Amendment) Act, 1984, s. 3, for certain words (w.e.f. 16-6-1986).
4. The words and letters "specified in Part A or Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).
5. Ins. by the Constitution (Fifty-seventh Amendment) Act, 1987, s. 2 (w.e.f. 21-9-1987)
6. Subs. by the Constitution (Eighty-fourth Amendment) Act, 2001, s. 7, for "2000" (w.e.f. 21-2-2002).

**வரம்புரையாக** : இந்த விளக்கத்தில் தொடர்புடைய விவரங்கள் வெளியிடப்பட்டுள்ள கடைசி முறை மக்கள் கணக்கெடுப்பு என்பது [1][2026] ஆம் ஆண்டிற்குப் பின்னர் முதலாவதாக எடுக்கப்படும் மக்கள் கணக்கெடுப்பின்படியான தொகை விவரங்கள் வெளியிடப்படும் வரையிலும் [2][2001] ஆம் ஆண்டு மக்கள் கணக்கெடுப்பைச் சுட்டுவதாகவே பொருள் கொள்ளப்படுதல் வேண்டும்.]

**331. மக்களவையில் ஆங்கிலோ–இந்தியர் சமூகத்தினருக்குச் சார்பாற்றம் :**

81 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், குடியரசுத்தலைவர், மக்களவையில் ஆங்கிலோ இந்தியர் சமூகத்தினர் போதிய அளவு சார்பாற்றம் பெற்றிருக்கவில்லையெனக் கருதுவாராயின், அச்சமூகத்தினரில் இருவருக்கு மேற்படாதவர்களை மக்களவைக்கு உறுப்பினர்களாக நியமனம் செய்யலாம்.

**332. பட்டியலில்கண்ட சாதியினருக்கும் பட்டியலில்கண்ட பழங்குடி யினருக்கும் மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளில் பதவியிடங்களை ஒதுக்கீடு செய்தல் :**

(1) [4]***ஒவ்வொரு மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையிலும், பட்டியலில்கண்ட சாதியினருக்கும் [3][அசாமின் தன்னாட்சி மாவட்டங்களிலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினர் அல்லாத பிற] பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கும் பதவியிடங்கள் ஒதுக்கீடு செய்யப்படுதல் வேண்டும்.

(2) அசாம் மாநிலச் சட்டமன்றப் பேரவையில், தன்னாட்சி மாவட்டங்களுக்காகவும் பதவியிடங்கள் ஒதுக்கீடு செய்யப்படுதல் வேண்டும்.

(3) மாநிலம் ஒன்றின் சட்டமன்றப் பேரவையில் பட்டியலில்கண்ட சாதியினருக்கு அல்லது பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கு (1) ஆம் கூறின்படி ஒதுக்கீடு செய்யப்படும் பதவியிடங்களின் எண்ணிக்கைக்கும் அப்பேரவையில் உள்ள பதவியிடங்களின் மொத்த எண்ணிக்கைக்கும் இடையிலான வீத அளவானது, கூடுமானவரையில், அவ்வாறு பதவியிடங்கள் ஒதுக்கீடு செய்யப்படும் அந்த மாநிலத்திலுள்ள பட்டியலில்கண்ட சாதியினருடைய அல்லது அந்த மாநிலத்தில் அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் பகுதியில் உள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினருடைய மக்கள் தொகைக்கும் அந்த மாநிலத்தின் மொத்த மக்கள் தொகைக்கும் இடையிலான அதே வீத அளவில் இருத்தல் வேண்டும்.

[5][(3அ). (3) ஆம் கூறில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், [6][2026] ஆம் ஆண்டுக்குப் பின்பு எடுக்கப்படும் முதலாம் மக்கள் கணக்கெடுப்பின் அடிப்படையில் அருணாச்சலப் பிரதேச, மேகாலயா, மிசோரம், நாகலாந்து ஆகிய மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளிலுள்ள பதவியிடங்களின் எண்ணிக்கையில் செய்யப்படும் மறுநேரமைவானது 170 ஆம் உறுப்பின்படி செல்திறம் பெறும்வரையில், அத்தகைய மாநிலம் எதனின் சட்டமன்றப் பேரவையிலும் பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கென ஒதுக்கீடு செய்யப்படவேண்டிய பதவியிடங்கள் கீழ்க்கண்டவாறு இருத்தல் வேண்டும்.

---

1. "2000" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 6 ஆம் பிரிவினால் (21–2–2001 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. "1991" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 5 ஆம் பிரிவினால் (22–6–2003 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. குறித்தசில சொற்களுக்கு, அரசமைப்புச் (ஐம்பத்து ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 3 ஆம் பிரிவினால் (16–6–1986 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.
4. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி அ மற்றும் பகுதி ஆ இல் குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள் மற்றும் எழுத்துகள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.
5. அரசமைப்புச் (ஐம்பத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 1987 இன் 2 ஆம் பிரிவினால் (21–9–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
6. "2000" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 7 ஆம் பிரிவினால் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(a) if all the seats in the Legislative Assembly of such State in existence on the date of coming into force of the Constitution (Fifty-seventh Amendment) Act, 1987 (hereafter in this clause referred to as the existing Assembly) are held by members of the Scheduled Tribes, all the seats except one;

(b) in any other case, such number of seats as bears to the total number of seats, a proportion not less than the number (as on the said date) of members belonging to the Scheduled Tribes in the existing Assembly bears to the total number of seats in the existing Assembly.]

[1][(3B) Notwithstanding anything contained in clause (3), until the re-adjustment, under article 170, takes effect on the basis of the first census after the year [2][2026], of the number of seats in the Legislative Assembly of the State of Tripura, the seats which shall be reserved for the Scheduled Tribes in the Legislative Assembly shall be, such number of seats as bears to the total number of seats, a proportion not less than the number, as on the date of coming into force of the Constitution (Seventy-second Amendment) Act, 1992, of members belonging to the Scheduled Tribes in the Legislative Assembly in existence on the said date bears to the total number of seats in that Assembly.]

(4) The number of seats reserved for an autonomous district in the Legislative Assembly of the State of Assam shall bear to the total number of seats in that Assembly a proportion not less than the population of the district bears to the total population of the State.

(5) The constituencies for the seats reserved for any autonomous district of Assam shall not comprise any area outside that district [3]***.

(6) No person who is not a member of a Scheduled Tribe of any autonomous district of the State of Assam shall be eligible for election to the Legislative Assembly of the State from any constituency of that district [3]*** :

[4][Provided that for elections to the Legislative Assembly of the State of Assam, the representation of the Scheduled Tribes and non-Scheduled Tribes in the constituencies included in the Bodoland Territorial Areas District, so notified, and existing prior to the constitution of Bodoland Territorial Areas District, shall be maintained.]

---

1. Ins. by the Constitution (Seventy-second Amendment) Act, 1992, s. 2 (w.e.f. 5-12-1992).

2. Subs. by the Constitution (Eighty- fourth Amendment) Act, 2001, s. 7 for "2000" (w.e.f. 21-2-2002).

3. Certain words omitted by the North-Eastern Areas (Reorganisation) Act. 1971 (81 of 1971), s. 71 (w.e.f.21-1-1972).

4. Ins. by the Constitution (Ninetieth Amendment) Act. 2003, s. 2 (w.e.f. 28-9-2003).

(அ) அரசமைப்புச் (ஐம்பத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 1987 செல்லாற்றல் பெறும் தேதியன்று, அந்த மாநிலத்தில் (இந்தக் கூறில் இதன் பின்பு நிலவுறும் சட்டமன்றப் பேரவை எனச் சுட்டப்படும்) நிலவுறும் சட்டமன்றப் பேரவையிலுள்ள பதவியிடங்கள் அனைத்தும் பட்டியலில்கண்ட பழங்குடி உறுப்பினர்களால் வகித்து வரப்படுமாயின், அவற்றில் ஒரு பதவியிடம் தவிர, பிற பதவியிடங்கள் அனைத்தும்:

(ஆ) பிற நேர்வு எதிலும், (மேற்சொன்ன தேதியன்று) நிலவுறும் சட்டமன்றப் பேரவையில் பட்டியலில்கண்ட பழங்குடியினரின் எண்ணிக்கை, நிலவுறும் அச்சட்டமன்றப் பேரவையிலுள்ள மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் எந்த வீத அளவில் உள்ளதோ அந்த வீத அளவிற்குக் குறையாத எண்ணிக்கையுள்ள பதவியிடங்கள்.]

[1][(3 ஆ). (3) ஆம் கூறில் அடங்கியுள்ள எது எவ்வாறிப்பினும், [2][2026] ஆம் ஆண்டுக்குப் பின்பு எடுக்கப்படும் முதலாம் மக்கள் கணக்கெடுப்பின் அடிப்படையில் திரிபுரா மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையிலுள்ள பதவியிடங்களின் எண்ணிக்கையில் செய்யப்படும் மறுநேரமைவானது, 170 ஆம் உறுப்பின்படி செல்திறம் பெறும் வரையில், சட்டமன்றப் பேரவையில் பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கென ஒதுக்கீடு செய்யப்படவேண்டிய பதவியிடங்கள், அரசமைப்புச் (எழுபத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1992 செல்லாற்றல் பெறும் தேதியன்று நிலவுறும் சட்டமன்றப் பேரவையில் பட்டியலில்கண்ட பழங்குடியினரின் எண்ணிக்கை, மேற்சொன்ன தேதியில் அந்தப் பேரவையிலுள்ள மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் எந்த வீத அளவில் உள்ளதோ அந்த வீத அளவிற்குக் குறையாத எண்ணிக்கையுள்ள பதவியிடங்களாக இருத்தல் வேண்டும்.]

(4) அசாம் மாநிலச் சட்டமன்றப் பேரவையிலுள்ள மொத்தப் பதவியிடங்களின் எண்ணிக்கையில் ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கு ஒதுக்கீடு செய்யப்படும் பதவியிடங்களின் எண்ணிக்கையின் வீத அளவானது, அந்த மாநிலத்தின் மொத்த மக்கள்தொகையில் அந்த மாவட்டத்தின் மக்கள்தொகையின் வீத அளவிற்குக் குறையாமல் இருத்தல் வேண்டும்.

(5) அசாமின் தன்னாட்சி மாவட்டம் எதற்கும் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள பதவியிடங்களுக்கான தேர்தல் தொகுதிகளில் [3]*** அந்த மாவட்டத்திற்கு வெளியேயுள்ள பரப்பிடம் எதுவும் அடங்குவதில்லை.

(6) அசாம் மாநிலத்தின் தன்னாட்சி மாவட்டம் ஒன்றின் பட்டியலில்கண்ட பழங்குடியைச் சேர்ந்தவராக இல்லாத எவரும், [3]*** அந்த மாவட்டத்தின் தேர்தல் தொகுதி எதிலிருந்தும் அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்குத் தகுமையுடையவர் ஆகார்:

[4][**வரம்புரையாக** : அசாம் மாநிலச் சட்டமன்றப் பேரவைக்கான தேர்தல்களுக்காக, அவ்வாறு அறிவிக்கை செய்யப்பட்ட, போடோலாந்து நில ஆட்சிநிலவரைப் பகுதிகள் மாவட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ள மற்றும் போடோலாந்து ஆட்சிநிலவரைகள் பகுதிகள் மாவட்டத்தினை அமைப்பதற்கு முன்பு இருந்துவந்த தொகுதிகளில் பட்டியலில்கண்ட பழங்குடியினர் மற்றும் பட்டியலில்கண்ட பழங்குடியினர் அல்லாதவருக்கான சார்பாற்றம் தொடர்ந்து இருந்துவருதல் வேண்டும்.]

---

1. அரசமைப்புச் (எழுபத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1992 இன் 2 ஆம் பிரிவினால் (5–12–1992 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. "2000" என்பதற்கு, அரசமைப்புச் (எண்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 2001 இன் 7 ஆம் பிரிவினால் (21–2–2002 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. குறித்தசில சொற்கள், வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 ஆம் பிரிவினால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.
4. அரசமைப்புச் (தொண்ணூறாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 2 ஆம் பிரிவினால் (28–9–2003 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

### 333. Representation of the Anglo-Indian community in the Legislative Assemblies of the States :

Notwithstanding anything in article 170, the Governor [1]*** of a State may, if he is of opinion that the Anglo-Indian community needs representation in the Legislative Assembly of the State and is not adequately represented therein, [2][nominate one member of that community to the Assembly].

### 334. [3][Reservation of seats and special representation to cease after certain period] :

Notwithstanding anything in the foregoing provisions of this Part, the provisions of this Constitution relating to—

(a) the reservation of seats for the Scheduled Castes and the Scheduled Tribes in the House of the People and in the Legislative Assemblies of the States; and

(b) the representation of the Anglo-Indian community in the House of the People and in the Legislative Assemblies of the States by nomination,

shall cease to have effect on the expiration of a period of [4][eighty years in respect of clause (a) and seventy years in respect of clause (b)] from the commencement of this Constitution:

Provided that nothing in this article shall affect any representation in the House of the People or in the Legislative Assembly of a State until the dissolution of the then existing House or Assembly, as the case may be.

### 335. Claims of Scheduled Castes and Scheduled Tribes to services and posts :

The claims of the members of the Scheduled Castes and the Scheduled Tribes shall be taken into consideration, consistently with the maintenance of efficiency of administration, in the making of appointments to services and posts in connection with the affairs of the Union or of a State:

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).
2. Subs. by the Constitution (Twenty-third Amendment) Act,1969, s. 4 for "nominate such number of members of the community to the Assembly as he considers appropriate". (w.e.f. 23-1-1970).
3. Subs. by the Constitution (One Hundred and Fourth Amendment) Act, 2019, s. 2 (w.e.f. 25-1-2020).
4. Subs. by the Constitution (One Hundred and Fourth Amendment) Act, 2019, s. 2, for the words "seventy years" (w.e.f. 25-1-2020). The words "seventy years" were subs. for the words "sixty years" by the Constitution (Ninety-fifth Amendment) Act, 2009, s. 2. (w.e.f. 25-1-2010). The words "sixty years" were subs. for the words "fifty years" by the Constitution (Seventy-ninth Amendment) Act, 1999, s. 2. (w.e.f. 25-1-2000). The words "fifty years" were subs. for the words "forty years" by the Constitution (Sixty-second Amendment) Act, 1989, s. 2. The words "forty years" were subs. for the original words "thirty years" by the Constitution (Forty-fifth Amendment) Act, 1980, s. 2.

**333. மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளில் ஆங்கிலோ–இந்தியர் சமூகத்தினருக்குச் சார்பாற்றம் :**

170 ஆம் உறுப்பில் எது எவ்வாறிப்பினும், ஒரு மாநில ஆளுநர் [1]***, அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையில் ஆங்கிலோ – இந்தியர் சமூகத்தினருக்குச் சார்பாற்றம் தேவைப்படுகிறது என்றும் அதில் அந்தச் சமூகத்தினர் போதிய சார்பாற்றம் பெற்றிருக்கவில்லை என்றும் கருதுவாராயின், [2][அச்சமூகத்தினரில் ஒருவரை அப்பேரவைக்கு உறுப்பினராக நியமனம் செய்யலாம்].

**334. [3][பதவியிடங்களை ஒதுக்கீடு செய்தலும் தனியுறு சார்பாற்றம் அளித்தலும் குறித்தசில காலஅளவுக்குப் பின்பு அற்றுப்போதல்] :**

இந்தப் பகுதியின் மேலேகண்ட வகையங்களில் எது எவ்வாறிருப்பினும்—

(அ) மக்களவையிலும் மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளிலும் பட்டியலில்கண்ட சாதியினருக்கும் பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கும் பதவியிடங்களை ஒதுக்கீடு செய்தல்; மற்றும்

(ஆ) மக்களவையிலும் மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளிலும் நியமனம் வாயிலாக ஆங்கிலோ–இந்தியர் சமூகத்தினருக்குச் சார்பாற்றம் அளித்தல்,

ஆகியவை தொடர்பான இந்த அரசமைப்பின் வகையங்கள், இந்த அரசமைப்பின் தொடக்க நிலையிலிருந்து [4][(அ) கூறைப் பொறுத்தமட்டில் எண்பது ஆண்டுகள் மற்றும் (ஆ) கூறைப் பொறுத்தமட்டில் எழுபது ஆண்டுக்] காலஅளவு கழிவுற்றதும் செல்திறம் அற்றுப் போகும்:

**வரம்புரையாக :** அப்போது நிலவுறும் மக்களவை அல்லது, நேர்வுக்கேற்ப, ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவை கலைக்கப்படும் வரையில், இந்த உறுப்பிலுள்ள எதுவும், மக்களவையில் அல்லது அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையிலுள்ள சார்பாற்றம் எதனையும் பாதித்தல் ஆகாது.

**335. பணியங்களுக்கும் பணியடைகளுக்கும் பட்டியலில்கண்ட சாதியினர், பட்டியலில்கண்ட பழங்குடியினர் ஆகியோரின் கோருரிமைகள் :**

ஒன்றியத்தின் அல்லது ஒரு மாநிலத்தின் அலுவற்பாடுகள் தொடர்பான பணியங்களுக்கும் பணியடைகளுக்கும் அமர்த்தங்கள் செய்யுங்கால், நிருவாகத் திறப்பாட்டினைப் பேணுவதற்கு ஒவ்வும் வகையில், பட்டியலில்கண்ட சாதியினர், பட்டியலில்கண்ட பழங்குடியினர் ஆகியோரின் கோருரிமைகளைக் கருத்தில் கொள்ளுதல் வேண்டும்:

---

1. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. "அச்சமூகத்தினரில் தான் பொருத்தமெனக் கருதும் அத்தகைய எண்ணிக்கையிலான உறுப்பினர்களை அப்பேரவைக்கு நியமனம் செய்யலாம்" என்பதற்கு, அரசமைப்புச் (முப்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1969 இன் 4 ஆம் பிரிவினால் (23–1–1970 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

3. அரசமைப்புச் (நூற்று நான்காம் திருத்தம்) சட்டம், 2019 இன் 2 ஆம் பிரிவினால் (25–1–2020 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

4. "எழுபது ஆண்டுகள்" என்ற சொற்கள், அரசமைப்புச் (நூற்று நான்காம் திருத்தம்) சட்டம், 2019 இன் 2 ஆம் பிரிவினால் (25–1–2020 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன. "அறுபது ஆண்டுகள்" என்ற சொற்களுக்கு, "எழுபது ஆண்டுகள்" என்ற சொற்கள், அரசமைப்புச் (தொண்ணூற்று ஐந்தாம் திருத்தம்) சட்டம், 2009 இன் 2 ஆம் பிரிவினால் (25–1–2010 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. "ஐம்பது ஆண்டுகள்" என்ற சொற்களுக்கு, "அறுபது ஆண்டுகள்" என்ற சொற்கள், அரசமைப்புச் (எழுபத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1992 இன் 2 ஆம் பிரிவினால் (25–1–2000 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன. "நாற்பது ஆண்டுகள்" என்ற சொற்களுக்கு, "ஐம்பது ஆண்டுகள்" என்ற சொற்கள், அரசமைப்புச் (அறுபத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1989 இன் 2 ஆம் பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டன. முதன்முதலில் இருந்த சொற்கள் "முப்பது ஆண்டுகள்" என்பதற்கு, "நாற்பது ஆண்டுகள்" என்ற சொற்கள், அரசமைப்புச் (நாற்பத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1980 இன் 2 ஆம் பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டன.

[1][Provided that nothing in this article shall prevent in making of any provision in favour of the members of the Scheduled Castes and the Scheduled Tribes for relaxation in qualifying marks in any examination or lowering the standards of evaluation, for reservation in matters or promotion to any class or classes of services or posts in connection with the affairs of the Union or of a State.]

**336. Special provision for Anglo-Indian community in certain services :**

(1) During the first two years after the commencement of this Constitution, appointments of members of the Anglo-Indian community to posts in the railway, customs, postal and telegraph services of the Union shall be made on the same basis as immediately before the fifteenth day of August, 1947.

During every succeeding period of two years, the number of posts reserved for the members of the said community in the said services shall, as nearly as possible, be less by ten percent than the numbers so reserved during the immediately preceding period of two years:

Provided that at the end of ten years from the commencement of this Constitution all such reservations shall cease.

(2) Nothing in clause (1) shall bar the appointment of members of the Anglo-Indian community to posts other than, or in addition to, those reserved for the community under that clause if such members are found qualified for appointment on merit as compared with the members of other communities.

**337. Special provision with respect to educational grants for the benefit of Anglo-Indian community :**

During the first three financial years after the commencement of this Constitution, the same grants, if any, shall be made by the Union and by each State [2]*** for the benefit of the Anglo-Indian community in respect of education as were made in the financial year ending on the thirty-first day of March, 1948.

During every succeeding period of three years the grants may be less by ten percent than those for the immediately preceding period of three years:

Provided that at the end of ten years from the commencement of this Constitution such grants, to the extent to which they are a special concession to the Anglo-Indian community, shall cease:

---

1. Ins. by the Constitution (Eighty-second Amendment) Act, 2000, s. 2 (w.e.f. 6-9-2000).
2. The words and letters "specified in Part A or Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

[1][வரம்புரையாக : ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் அலுவற்பாடுகளுடன் தொடர்புடைய பணியங்களின் அல்லது பணியடைகளின் வகை எதிலும் அல்லது வகைகள் எவற்றிலும் பதவி உயர்வு குறித்த பொருட்பாடுகளில் ஒதுக்கீடு செய்வதற்காக தேர்வு எதிலும் தகுதிப்பாடுடைய மதிப்பெண்களைத் தளர்த்துவதன் வாயிலாக அல்லது மதிப்பீட்டுத் தரமுறைகளை தாழ்த்துவதன் வாயிலாக பட்டியலில்கண்ட சாதிகளின் மற்றும் பட்டியலில்கண்ட பழங்குடியினர்களின் உறுப்பினர்கள் சார்பாக வகையம் எதனையும் செய்வதற்கு இந்த உறுப்பில் உள்ள எதுவும் தடையூறு ஆவதில்லை.]

**336. குறித்தசில பணியங்களில் ஆங்கிலோ–இந்தியர் சமூகத்தினருக்கான தனியுறு வகையம் :**

(1) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்குப் பின்பு முதல் ஈராண்டுகளின்போது, இருப்பூர்தியம், சுங்கம், அஞ்சல், தந்தி ஆகிய ஒன்றியத்துப் பணியங்களிலுள்ள பணியடைகளுக்கு ஆங்கிலோ – இந்தியர் சமூகத்தினரின் அமர்த்துகை, 1947 ஆம் ஆண்டு ஆகஸ்டு பதினைந்தாம் நாளுக்கு உடன்முன்பு இருந்த அதே அடிப்படையில் செய்யப்படுதல் வேண்டும்.

அதற்கு அடுத்துப் பின்வரும் ஒவ்வோர் ஈராண்டுக் காலஅளவின் போதும் மேற்சொன்ன பணியங்களில் அச்சமூகத்தினருக்கு ஒதுக்கீடு செய்யப்படும் பணியடைகளின் எண்ணிக்கை, அதற்கு உடன்முந்தைய ஈராண்டுக் காலஅளவின் போது அவ்வாறு ஒதுக்கீடு செய்யப்பட்ட எண்ணிக்கையைவிட ஏறத்தாழப் பத்து விழுக்காடு குறைவாயிருக்கும்:

**வரம்புரையாக** : இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து பத்தாண்டுகள் முடிவுற்றதும், அத்தகைய ஒதுக்கீடுகள் அனைத்தும் அற்றுப்போகும்.

(2) ஆங்கிலோ–இந்தியர் சமூகத்தினரைப் பிற சமூகத்தினருடன் ஒப்பிடுகையில், திறமையின் அடிப்படையில் அமர்த்தப்பெறுவதற்கு அவர்கள் தகுதிப்பாடுடையவர்களாக இருக்குமிடத்து, (1)ஆம் கூறிலுள்ள எதுவும், அந்தக் கூறின்படி அச்சமூகத்தினருக்கென ஒதுக்கீடு செய்யப்படும் பணியடைகள் அல்லாத பிற பணியடைகளுக்கோ அதற்கும் கூடுதலான பணியடைகளுக்கோ அச்சமூகத்தினரை அமர்த்துவதற்குத் தடையாக இருப்பதில்லை.

**337. ஆங்கிலோ–இந்தியர் சமூகத்தினரின் நலனுக்காகக் கல்வி மானியங்கள் பொறுத்த தனியுறு வகையம் :**

இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்குப் பின்பு முதல் மூன்று நிதியாண்டுகளின்போது கல்வி பொறுத்து, ஆங்கிலோ – இந்தியர் சமூகத்தினரின் நலனுக்காக, 1948 மார்ச் முப்பத்து ஒன்றாம் நாளுடன் முடிவடைந்த நிதியாண்டில் அளிக்கப்பட்டுவந்த மானியங்கள், எவையேனுமிருப்பின், அவை ஒன்றியத்தினாலும் [2]*** ஒவ்வொரு மாநிலத்தினாலும் அளிக்கப்பட்டு வருதல் வேண்டும்.

அதற்கு அடுத்துப் பின்வரும் ஒவ்வொரு மூன்றாண்டுக் காலஅளவின் போதும் அந்த மானியங்கள், அதற்கு உடன்முந்தைய மூன்றாண்டுக் காலஅளவிற்கு வழங்கப்பட்ட மானியங்களைவிடப் பத்து விழுக்காடு குறைவாக இருக்கலாம்:

**வரம்புரையாக :** இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து பத்தாண்டுகள் முடிவுற்றதும், அத்தகைய மானியங்கள், அவை ஆங்கிலோ–இந்தியர் சமூகத்தினருக்கான ஒரு தனியுறு சலுகையாக இருக்கின்ற அளவுக்கு அற்றுப்போகும்:

---

1. அரசமைப்புச் (எண்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 2000 இன் 2 ஆம் பிரிவினால் (6–9–2000 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. ''முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) அல்ல பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட'' என்ற சொற்கள் மற்றும் எழுத்துகள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

Provided further that no educational institution shall be entitled to receive any grant under this article unless at least forty percent of the annual admissions therein are made available to members of communities other than the Anglo-Indian community.

**338. [1][National Commission for Scheduled Castes] :**

[2][[3][(1) There shall be a Commission for the Scheduled Castes to be known as the National Commission for the Scheduled Castes.

(2) Subject to the provisions of any law made in this behalf by Parliament, the Commission shall consist of a Chairperson, Vice-Chairperson and three other Members and the conditions of service and tenure of office of the Chairperson, Vice-Chairperson and other Members so appointed shall be such as the President may by rule determine.]

(3) The Chairperson, Vice-Chairperson and other Members of the Commission shall be appointed by the President by warrant under his hand and seal.

(4) The Commission shall have the power to regulate its own procedure.

(5) It shall be the duty of the Commission—

(a) to investigate and monitor all matters relating to the safeguards provided for the Scheduled Castes [4]*** under this Constitution or under any other law for the time being in force or under any order of the Government and to evaluate the working of such safeguards;

(b) to inquire into specific complaints with respect to the deprivation of rights and safeguards of the Scheduled Castes [4]***;

(c) to participate and advise on the planning process of socio-economic development of the Scheduled Castes [4]*** and to evaluate the progress of their development under the Union and any State;

(d) to present to the President, annually and at such other times as the Commission may deem fit, reports upon the working of those safeguards;

---

1. Subs. by the Constitution (Eighty-ninth Amendment) Act, 2003, s. 2, for the marginal heading (w.e.f. 19-2-2004).
2. For cls. (1) and (2), cls. (1) to (9) was substituted (w.e.f. 12-3-1992) by the Constitution (Sixty-fifth Amendment) Act, 1990.
3. Subs. by the Constitution (Eighty-ninth Amendment) Act, 2003, s. 2, for cls. (1) and (2) (w.e.f. 19-2-2004).
4. The words "and Scheduled Tribes" omitted by *ibid*.

**மேலும் வரம்புரையாக** : கல்வி நிறுவனம் எதிலும் ஆண்டுதோறும் சேர்க்கப்பெறுபவர்களில் குறைந்தது நாற்பது விழுக்காடு ஆங்கிலோ–இந்தியர் சமூகத்தினர் அல்லாத பிற சமூகத்தினராக இருந்தாலன்றி, அக்கல்வி நிறுவனம் இந்த உறுப்பின்படி மானியம் எதனையும் பெறுவதற்கு உரிமை கொண்டது ஆகாது.

**338.** [1][**பட்டியலில்கண்ட சாதியினருக்கான தேசிய ஆணையம்**] :

[2][[3][(1) பட்டியலில்கண்ட சாதியினருக்கான தேசிய ஆணையம் என்று அழைக்கப்பெறும் ஆணையம் ஒன்று பட்டியலில்கண்ட சாதியினருக்காக இருத்தல் வேண்டும்.

(2) நாடாளுமன்றத்தினால் இதன்பொருட்டு இயற்றப்படும் சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு உட்பட்டு, தலைமையர், துணைத்தலைமையர் மற்றும் மூன்று உறுப்பினர்களைக் கொண்டதாக இந்த ஆணையம் இருக்கும்; மேலும், அவ்வாறு அமர்த்தப்பெறும் தலைமையர், துணைத்தலைமையர், பிற உறுப்பினர்கள் ஆகியோரின் பணி வரைக்கட்டுகளும் பதவிக்காலமும் குடியரசுத் தலைவர் வகுக்கும் விதிகளின்படி இருக்கும்.]

(3) ஆணையத்தின் தலைமையர், துணைத்தலைமையர், பிற உறுப்பினர்கள் ஆகியோரை குடியரசுத்தலைவர், தம் கையொப்பமும் முத்திரையும் கொண்ட அதிகார ஆணையின்வழி அமர்த்துவார்.

(4) ஆணையம், தனக்குரிய நெறிமுறையை ஒழுங்குறுத்த அதிகாரம் உடையது ஆகும்.

(5) பின்வருவன ஆணையத்தின் கடமைகள் ஆகும்—

(அ) இந்த அரசமைப்பின்படி அல்லது அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள பிற சட்டம் ஒன்றின்படி அல்லது அரசு ஆணை ஒன்றின்படி பட்டியலில்கண்ட சாதியினருக்கு [4]*** வகை செய்யப்பட்டுள்ள காப்பணைவுகள் தொடர்பான பொருட்பாடுகள் அனைத்தையும் ஆய்ந்து காணுதல் மற்றும் கண்காணித்தல்; மேலும், அந்தக் காப்பணைவுகளின் செயற்பாட்டு விளைபயனைக் கணித்தல்;

(ஆ) பட்டியலில்கண்ட சாதியினரின் [4]*** உரிமைகளும் காப்பணைவுகளும் பறிக்கப்படுவது பற்றிய குறிப்பிட்ட முறையீடுகளை விசாரணை செய்தல்;

(இ) பட்டியலில்கண்ட சாதியினரின் [4]*** சமூக–பொருளியல் வளர்ச்சிக்கான திட்டமிடு செய்முறையில் பங்கேற்றல் மற்றும் அறிவுரை வழங்குதல்; மேலும், ஒன்றியத்திலும் மாநிலம் எதிலும் அவர்கள் வளர்ச்சியில் ஏற்படும் முன்னேற்றத்தைக் கணித்தல்;

(ஈ) அந்தக் காப்பணைவுகளின் செயற்பாடு பற்றிய அறிக்கைகளை ஆண்டுதோறும் மற்றும் ஆணையம் பொருத்தமெனக் கருதும் பிற காலங்களிலும் குடியரசுத்தலைவரிடம் முன்னிடுதல்;

---

1. ஓரத்தலைப்பிற்கு, அரசமைப்புச் (எண்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 2 ஆம் பிரிவினால் (19–2–2004 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. (1) மற்றும் (2) ஆம் கூறுகளுக்கு, மாற்றாக (1) முதல் (9) கூறுகள் அரசமைப்புச் (அறுபத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1990 ஆல் (12–3–1992 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

3. (1) மற்றும் (2) ஆம் கூறுகளுக்கு, அரசமைப்புச் (எண்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 2 ஆம் பிரிவினால் (19–2–2004 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

4. "மற்றும் பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கு" என்ற சொற்கள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

(e) to make in such reports recommendations as to the measures that should be taken by the Union or any State for the effective implementation of those safeguards and other measures for the protection, welfare and socio-economic development of the Scheduled Castes [1]***; and

(f) to discharge such other functions in relation to the protection, welfare and development and advancement of the Scheduled Castes[1]*** as the President may, subject to the provisions of any law made by Parliament, by rule specify.

(6) The President shall cause all such reports to be laid before each House of Parliament along with a memorandum explaining the action taken or proposed to be taken on the recommendations relating to the Union and the reasons for the non - acceptance, if any, of any of such recommendations.

(7) Where any such report, or any part thereof, relates to any matter with which any State Government is concerned, a copy of such report shall be forwarded to the Governor of the State who shall cause it to be laid before the Legislature of the State along with a memorandum explaining the action taken or proposed to be taken on the recommendations relating to the State and the reasons for the non -acceptance, if any, of any of such recommendations.

(8) The Commission shall, while investigating any matter referred to in sub-clause (a) or inquiring into any complaint referred to in sub-clause (b) of clause (5), have all the powers of a civil court trying a suit and in particular in respect of the following matters, namely:—

(a) summoning and enforcing the attendance of any person from any part of India and examining him on oath;

(b) requiring the discovery and production of any document;

(c) receiving evidence on affidavits;

(d) requisitioning any public record or copy thereof from any court or office;

(e) issuing commissions for the examination of witnesses and documents;

(f) any other matter which the President may, by rule, determine.

---

1.The words "and Scheduled Tribes" omitted by the Constitution (Eighty-ninth Amendment) Act, 2003, s. 2 (w.e.f. 19-2-2004).

(உ) பட்டியலில்கண்ட சாதியினருக்கான[1]*** காப்பணைவுகளையும் அவர்களுடைய பாதுகாப்பு, நலவாழ்வு, சமூக–பொருளியல் வளர்ச்சி ஆகியவற்றிற்கான பிற நடவடிக்கைகளையும் திறம்படச் செயற்படுத்துவதற்காக, ஒன்றியம் அல்லது ஒரு மாநிலம் எடுக்கவேண்டிய நடவடிக்கைகள் குறித்து அத்தகைய அறிக்கைகளில் பரிந்துரைகள் செய்தல்; மற்றும்

(ஊ) பட்டியலில்கண்ட சாதியினருக்கான[1]*** பாதுகாப்பு, நலவாழ்வு, வளர்ச்சி, மேம்பாடு ஆகியவை தொடர்பாக நாடாளுமன்றம் இயற்றும் சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு உட்பட்டு, குடியரசுத்தலைவர் வகுக்கும் விதிகளின்படி செயற்பணிகளை ஆற்றுதல்.

(6) அத்தகைய அறிக்கைகள் அனைத்துடனும், ஒன்றியம் தொடர்பான பரிந்துரைகளின்மீது எடுக்கப்படும் அல்லது எடுக்கக் கருதப்படும் நடவடிக்கையையும் அத்தகைய பரிந்துரைகளில் எவையும் ஏற்றுக்கொள்ளப்படாவிடின், அதற்கான காரணங்களையும் விளக்குகின்ற விவரக்குறிப்புடன் சேர்த்து, நாடாளுமன்ற ஈரவைகளின் முன்பும் வைக்குமாறு குடியரசுத்தலைவர் செய்விப்பார்.

(7) அத்தகைய அறிக்கை எதுவும் அல்லது அதன் பகுதி எதுவும், ஒரு மாநில அரசு தொடர்புடைய பொருட்பாடு குறித்ததாயிருக்குமிடத்து, அத்தகைய அறிக்கையின் படியொன்று, மாநில ஆளுநருக்கு அனுப்பி வைக்கப்படுதல் வேண்டும், அவர், அத்தகைய அறிக்கையுடன் மாநிலம் தொடர்பான பரிந்துரைகளின் மீது எடுக்கப்படும் அல்லது எடுக்கக் கருதப்படும் நடவடிக்கையையும், அத்தகைய பரிந்துரைகளில் எவையும் ஏற்றுக்கொள்ளப்படாவிடின், அதற்கான காரணங்களையும் விளக்குகின்ற விவரக்குறிப்புடன் சேர்த்து, மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்குமாறு செய்விப்பார்.

(8) ஆணையமானது, 5 ஆம் கூறின் (அ) உட்கூறில் சுட்டப்பட்ட பொருட்பாடு எதனையும் ஆய்ந்து காண்கையில் அல்லது (ஆ) உட்கூறில் சுட்டப்பட்ட முறையீடு எதனையும் விசாரணை செய்கையில், உரிமைவழக்கு ஒன்றை விசாரணை செய்யும் ஓர் உரிமையியல் நீதிமன்றம், குறிப்பாகப் பின்வரும் பொருட்பாடுகளைப் பொறுத்து கொண்டிருக்கும் அனைத்து அதிகாரங்களையும் உடையது ஆகும், அவையாவன:—

(அ) இந்தியாவின் எந்தவொரு பகுதியிலிருந்தும் நபர் எவரையும் அழைப்பாணை அனுப்பி வரவழைத்தல் மற்றும் ஆணைமொழியின் மீது அவரை விசாரணை செய்தல்;

(ஆ) ஆவணம் எதனையும் வெளிக்கொணர்ந்து முன்னிலைப்படுத்துமாறு வேண்டுறுத்தல்;

(இ) ஆணையுறுதி ஆவணங்களைச் சான்றாக ஏற்றல்;

(ஈ) நீதிமன்றம் அல்லது அலுவலகம் எதிலிருந்தும் அரசுப் பதிவணம் அல்லது அதன் படி எதனையும் பெறுவதற்கு வேண்டுதலாணை இடுதல்;

(உ) சாட்சிகளை விசாரணை செய்வதற்காகவும் ஆவணங்களை ஆய்வு செய்வதற்காகவும் பணிப்பாணைகளைப் பிறப்பித்தல்;

(ஊ) குடியரசுத்தலைவர் வகுக்கும் விதிகளால் கூறப்படும் பிற பொருட்பாடுகள்.

1. "மற்றும் பட்டியலில்கண்ட பழங்குடியினர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (எண்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 2 ஆம் பிரிவினால் (19–2–2004 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

(9) The Union and every State Government shall consult the Commission on all major policy matters affecting Scheduled Castes [1]***.]

[2][(10)] In this article, references to the Scheduled Castes [1]*** shall be construed as including references [3]*** to the Anglo-Indian Community.

**[4][338A. National Commission for Scheduled Tribes :**

(1) There shall be a Commission for the Scheduled Tribes to be known as the National Commission for the Scheduled Tribes.

(2) Subject to the provisions of any law made in this behalf by Parliament, the Commission shall consist of a Chairperson, Vice-Chairperson and three other Members and the conditions of service and tenure of office of the Chairperson, Vice-Chairperson and other Members so appointed shall be such as the President may by rule determine.

(3) The Chairperson, Vice-Chairperson and other Members of the Commission shall be appointed by the President by warrant under his hand and seal.

(4) The Commission shall have the power to regulate its own procedure.

(5) It shall be the duty of the Commission—

(a) to investigate and monitor all matters relating to the safeguards provided for the Scheduled Tribes under this Constitution or under any other law for the time being in force or under any order of the Government and to evaluate the working of such safeguards;

(b) to inquire into specific complaints with respect to the deprivation of rights and safeguards of the Scheduled Tribes;

(c) to participate and advise on the planning process of socio-economic development of the Scheduled Tribes and to evaluate the progress of their development under the Union and any State;

---

1. The words "and Scheduled Tribes" omitted by the Constitution (Eighty-ninth Amendment) Act, 2003, s. 2 (w.e.f. 19-2-2004).
2. Cl (3) re-numbered as cl. (10) by the Constitution (Sixty-fifth Amendment) Act, 1990, s. 2 (w.e.f. 12-3-1992).
3. The words "to such other backward classes as the President may, on receipt of the report of a Commission appointed under clause (1) of article 340, by order specify and also" omitted by the Constitution (One Hundred and Second Amendment) Act, 2018, s. 2 (w.e.f. 11-8-2018).
4. Ins. by the Constitution (Eighty-ninth Amendment) Act, 2003, s. 3 (w.e.f. 19-2-2004).

(9) ஒன்றியமும், ஒவ்வொரு மாநில அரசும் பட்டியலில்கண்ட சாதியினரைப் [1]*** பாதிக்கும் முக்கியமான கொள்கைகள் அனைத்திலும் ஆணையத்தைக் கலந்தாய்வு செய்தல் வேண்டும்.]

[2][(10)] இந்த உறுப்பில், பட்டியலில்கண்ட சாதியினர் [1]*** என்னும் சுட்டுரைகள், [3]*** ஆங்கிலோ–இந்தியர் சமூகத்தினரையும் உள்ளடகிக் குறிப்பதாகப் பொருள் கொள்ளப்பட வேண்டும்.

**[4][338(அ). பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கான தேசிய ஆணையம் :**

(1) பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கான தேசிய ஆணையம் என்று அழைக்கப்பெறும் ஆணைம் ஒன்று பட்டியலில்கண்ட பழங்குடியினருக்காக இருத்தல் வேண்டும்.

(2) நாடாளுமன்றத்தினால் இதன்பொருட்டு இயற்றப்படும் சட்டம் எதனின் வகையங்களுக்கு உட்பட்டு, தலைமையர், துணைத்தலைமையர் மற்றும் மூன்று உறுப்பினர்களைக் கொண்டதாக இந்த ஆணையம் இருக்கும்; மேலும், அவ்வாறு அமர்த்தப்பெறும் தலைமையர், துணைத்தலைமையர், பிற உறுப்பினர்கள் ஆகியோரின் பணி வரைக்கட்டுகளும் பதவிக்காலமும் குடியரசுத்தலைவர் வகுக்கும் விதிகளின்படி இருக்கும்.

(3) ஆணையத்தின் தலைமையர், துணைத்தலைமையர், பிற உறுப்பினர்கள் ஆகியோரை குடியரசுத்தலைவர், தம் கையொப்பமும் முத்திரையும் கொண்ட அதிகார ஆணையின் வழி அமர்த்துவார்.

(4) ஆணையம், தனக்குரிய நெறிமுறையை ஒழுங்குறுத்த அதிகாரம் உடையது ஆகும்.

(5) பின்வருவன ஆணையத்தின் கடமைகள் ஆகும்—

(அ) இந்த அரசமைப்பின்படி அல்லது அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள பிற சட்டம் எதனின்படி அல்லது அரசு ஆணை ஒன்றின்படி பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கு வகைசெய்யப்பட்டுள்ள காப்பணைவுகள் தொடர்பான பொருட்பாடுகள் அனைத்தையும் ஆய்ந்து காணுதல் மற்றும் கண்காணித்தல், மேலும், அந்தக் காப்பணைவுகளின் செயற்பாட்டு விளைபயனைக் கணித்தல்;

(ஆ) பட்டியலில்கண்ட பழங்குடியினரின் உரிமைகளும் காப்பணைவுகளும் பறிக்கப்படுவது பற்றிய குறிப்பிட்ட முறையீடுகளை விசாரணை செய்தல்;

(இ) பட்டியலில்கண்ட பழங்குடியினரின் சமூக–பொருளியல் வளர்ச்சிக்கான திட்டமிடு செய்முறையில் பங்கேற்றல் மற்றும் அறிவுரை வழங்குதல்; மேலும், ஒன்றியத்திலும் மாநிலம் எதிலும் அவர்கள் வளர்ச்சியில் ஏற்படும் முன்னேற்றத்தைக் கணித்தல்;

---

1. "மற்றும் பட்டியலில்கண்ட பழங்குடியினரை" என்ற சொற்கள், அரசமைப்புச் (எண்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 2 ஆம் பிரிவினால் (19–2–2004 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. (3) ஆம் கூறு, (10) ஆம் கூறாக அரசமைப்புச் (அறுபத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1990 இன் 2 ஆம் பிரிவினால் (12–3–1992 முதல் செல்திறம் பெறுமாறு), மறு எண்ணிடப்பட்டது.

3. "குடியரசுத்தலைவர், 340 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின்படி அமர்த்தப்படும் ஓர் ஆணையத்தின் அறிக்கையைப் பெற்றதன் மேல், ஆணையின்வழி குறித்துரைக்கும் அத்தகைய பிற பிற்படுத்தப்பட்ட வகுப்பினரையும் அத்துடன்" என்ற சொற்கள், அரசமைப்புச் (நூற்று இரண்டாம் திருத்தம்) சட்டம், 2018 இன் 2 ஆம் பிரிவினால் (11–8–2018 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

4. அரசமைப்புச் (எண்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 3 ஆம் பிரிவினால் (19–2–2004 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(d) to present to the President, annually and at such other times as the Commission may deem fit, reports upon the working of those safeguards;

(e) to make in such reports recommendation as to the measures that should be taken by the Union or any State for the effective implementation of those safeguards and other measures for the protection, welfare and socio-economic development of the Scheduled Tribes; and

(f) to discharge such other functions in relation to the protection, welfare and development and advancement of the Scheduled Tribes as the President may, subject to the provisions of any law made by Parliament, by rule specify.

(6) The President shall cause all such reports to be laid before each House of Parliament along with a memorandum explaining the action taken or proposed to be taken on the recommendations relating to the Union and the reasons for the non-acceptance, if any, of any of such recommendations.

(7) Where any such report, or any part thereof, relates to any matter with which any State Government is concerned, a copy of such report shall be forwarded to the Governor of the State who shall cause it to be laid before the Legislature of the State along with a memorandum explaining the action taken or proposed to be taken on the recommendations relating to the State and the reasons for the non-acceptance, if any, of any of such recommendations.

(8) The Commission shall, while investigating any matter referred to in sub-clause (a) or inquiring into any complaint referred to in sub-clause (b) of clause (5), have all the powers of a civil court trying a suit and in particular in respect of the following matters, namely:—

(a) summoning and enforcing the attendance of any person from any part of India and examining him on oath;

(b) requiring the discovery and production of any document;

(c) receiving evidence on affidavits;

(d) requisitioning any public record or copy thereof from any court or office;

(e) issuing commissions for the examination of witnesses and documents;

(f) any other matter which the President may, by rule, determine.

(ஈ) அந்தக் காப்பணைவுகளின் செயற்பாடு பற்றிய அறிக்கைகளை ஆண்டுதோறும் மற்றும் ஆணையம் பொருத்தமெனக் கருதும் பிற காலங்களிலும் குடியரசுத்தலைவரிடம் முன்னிடுதல்;

(உ) பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கான காப்பணைவுகளையும் அவர்களுடைய பாதுகாப்பு, நலவாழ்வு, சமூக–பொருளியல் வளர்ச்சி ஆகியவற்றிற்கான பிற நடவடிக்கைகளையும் திறம்படச் செயற்படுத்துவதற்காக, ஒன்றியம் அல்லது ஒரு மாநிலம் எடுக்கவேண்டிய நடவடிக்கைகள் குறித்து அத்தகைய அறிக்கைகளில் பரிந்துரைகள் செய்தல்; மற்றும்

(ஊ) பட்டியலில்கண்ட பழங்குடியினருக்கான பாதுகாப்பு, நலவாழ்வு, வளர்ச்சி, மேம்பாடு ஆகியவை தொடர்பாக, நாடாளுமன்றம் இயற்றும் சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு உட்பட்டு, குடியரசுத்தலைவர் வகுக்கும் விதிகளின்படி செயற்பணிகளை ஆற்றுதல்.

(6) அத்தகைய அறிக்கைகள் அனைத்துடனும், ஒன்றியம் தொடர்பான பரிந்துரைகளின்மீது எடுக்கப்படும் அல்லது எடுக்கக் கருதப்படும் நடவடிக்கையையும் அத்தகைய பரிந்துரைகளில் எவையும் ஏற்றுக்கொள்ளப்படாவிடின், அதற்கான காரணங்களையும் விளக்குகின்ற விவரக்குறிப்புடன் சேர்த்து, நாடாளுமன்ற ஈரவைகளின் முன்பும் வைக்குமாறு குடியரசுத் தலைவர் செய்விப்பார்.

(7) அத்தகைய அறிக்கை எதுவும் அல்லது அதன் பகுதி எதுவும், ஒரு மாநில அரசு தொடர்புடைய பொருட்பாடு குறித்ததாயிருக்குமிடத்து, அத்தகைய அறிக்கையின் படியொன்று, மாநில ஆளுநருக்கு அனுப்பிவைக்கப்படுதல் வேண்டும், அவர், அத்தகைய அறிக்கையுடன் மாநிலம் தொடர்பான பரிந்துரைகளின் மீது எடுக்கப்படும் அல்லது எடுக்கக் கருதப்படும் நடவடிக்கையையும், அத்தகைய பரிந்துரைகளில் எவையும் ஏற்றுக்கொள்ளப்படாவிடின், அதற்கான காரணங்களையும் விளக்குகின்ற விவரக்குறிப்புடன் சேர்த்து, மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்குமாறு செய்விப்பார்.

(8) ஆணையமானது, (5) ஆம் கூறின் (அ) உட்கூறில் சுட்டப்பட்ட பொருட்பாடு எதனையும் ஆய்ந்து காண்கையில் அல்லது (ஆ) உட்கூறில் சுட்டப்பட்ட முறையீடு எதனையும் விசாரணை செய்கையில், உரிமை வழக்கு ஒன்றை விசாரணை செய்யும் ஓர் உரிமையியல் நீதிமன்றம், குறிப்பாக பின்வரும் பொருட்பாடுகளைப் பொறுத்து கொண்டிருக்கும் அனைத்து அதிகாரங்களையும் உடையது ஆகும், அவையாவன:–

(அ) இந்தியாவின் எந்தவொரு பகுதியிலிருந்தும் நபர் எவரையும் அழைப்பாணை அனுப்பி வரவழைத்தல் மற்றும் ஆணைமொழியின் மீது அவரை விசாரணை செய்தல்;

(ஆ) ஆவணம் எதனையும் வெளிக்கொணர்ந்து முன்னிலைப்படுத்துமாறு வேண்டுறுத்தல்;

(இ) ஆணையுறுதி ஆவணங்களைச் சான்றாக ஏற்றல்;

(ஈ) நீதிமன்றம் அல்லது அலுவலகம் எதிலிருந்தும் அரசுப் பதிவணம் அல்லது அதன் படி எதனையும் பெறுவதற்கு வேண்டுதலாணை இடுதல்;

(உ) சாட்சிகளை விசாரணை செய்வதற்காகவும் ஆவணங்களை ஆய்வு செய்வதற்காகவும் பணிப்பாணைகளைப் பிறப்பித்தல்;

(ஊ) குடியரசுத்தலைவர் வகுக்கும் விதிகளில் கூறப்படும் பிற பொருட்பாடுகள்.

(9) The Union and every State Government shall consult the Commission on all major policy matters affecting Scheduled Tribes.]

[1][338B. **National Commission for Backward Classes :**

(1) There shall be a Commission for the socially and educationally backward classes to be known as the National Commission for Backward Classes.

(2) Subject to the provisions of any law made in this behalf by Parliament, the Commission shall consist of a Chairperson, Vice-Chairperson and three other Members and the conditions of service and tenure of office of the Chairperson, Vice-Chairperson and other Members so appointed shall be such as the President may by rule determine.

(3) The Chairperson, Vice-Chairperson and other Members of the Commission shall be appointed by the President by warrant under his hand and seal.

(4) The Commission shall have the power to regulate its own procedure.

(5) It shall be the duty of the Commission—

(a) to investigate and monitor all matters relating to the safeguards provided for the socially and educationally backward classes under this Constitution or under any other law for the time being in force or under any order of the Government and to evaluate the working of such safeguards;

(b) to inquire into specific complaints with respect to the deprivation of rights and safeguards of the socially and educationally backward classes;

(c) to participate and advise on the socio-economic development of the socially and educationally backward classes and to evaluate the progress of their development under the Union and any State;

(d) to present to the President, annually and at such other times as the Commission may deem fit, reports upon the working of those safeguards;

(e) to make in such reports the recommendations as to the measures that should be taken by the Union or any State for the effective implementation of those safeguards and other measures for the protection, welfare and socio-economic development of the socially and educationally backward classes; and

---

1. Ins. by the Constitution (One Hundred and Second Amendment) Act, 2018, s. 3 (w.e.f. 11-8-2018).

(9) ஒன்றியமும், ஒவ்வொரு மாநில அரசும் பட்டியலில்கண்ட பழங்குடியினரைப் பாதிக்கும் முக்கியமான கொள்கைகள் அனைத்திலும் ஆணையத்தைக் கலந்தாய்வு செய்தல் வேண்டும்.]

[1][338 (ஆ). பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கான தேசிய ஆணையம் :

(1) பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கான தேசிய ஆணையம் என்று அழைக்கப்பெறும் ஆணையம் ஒன்று சமுதாய நிலையிலும் கல்வி நிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்காக இருத்தல் வேண்டும்.

(2) நாடாளுமன்றத்தினால் இதன் பொருட்டு இயற்றப்படும் சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு உட்பட்டு, தலைமையர், துணைத்தலைமையர் மற்றும் மூன்று உறுப்பினர்களைக் கொண்டதாக இந்த ஆணையம் இருக்கும்; மேலும், அவ்வாறு அமர்த்தப்பெறும் தலைமையர், துணைத்தலைமையர், பிற உறுப்பினர்கள் ஆகியோரின் பணி வரைக்கட்டுகளும் பதவிக்காலமும் குடியரசுத்தலைவர் வகுக்கும் விதிகளின்படி இருக்கும்.

(3) ஆணையத்தின் தலைமையர், துணைத்தலைமையர் பிற உறுப்பினர்கள் ஆகியோரை குடியரசுத்தலைவர், தம் கையொப்பமும் முத்திரையும் கொண்ட அதிகார ஆணையின் வழி அமர்த்துவார்.

(4) ஆணையம், தனக்குரிய நெறிமுறையை ஒழுங்குறுத்த அதிகாரம் உடையது ஆகும்.

(5) பின்வருவன ஆணையத்தின் கடமைகள் ஆகும்—

(அ) இந்த அரசமைப்பின்படி அல்லது அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள பிற சட்டம் ஒன்றின்படி அல்லது அரசு ஆணை ஒன்றின்படி சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு வகைசெய்யப்பட்டுள்ள காப்பணைவுகள் தொடர்பான பொருட்பாடுகள் அனைத்தையும் ஆய்ந்து காணுதல் மற்றும் கண்காணித்தல்; மேலும் அந்த காப்பணைவுகளின் செயற்பாட்டு விளைபயனைக் கணித்தல்;

(ஆ) சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் உரிமைகளும் காப்பணைவுகளும் பறிக்கப்படுவது பற்றிய குறிப்பிட்ட முறையீடுகளை விசாரணை செய்தல்;

(இ) சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் சமூக–பொருளியல் வளர்ச்சியில் பங்கேற்றல் மற்றும் அறிவுரை வழங்குதல்; மேலும், ஒன்றியத்திலும் மாநிலம் எதிலும் அவர்கள் வளர்ச்சியில் ஏற்படும் முன்னேற்றத்தைக் கணித்தல்;

(ஈ) அந்தக் காப்பணைவுகளின் செயற்பாடு பற்றிய அறிக்கைகளை ஆண்டுதோறும் மற்றும் ஆணையம் பொருத்தமெனக் கருதும் பிற காலங்களிலும் குடியரசுத்தலைவரிடம் முன்னிடுதல்;

(உ) சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கான காப்பணைவுகளையும் அவர்களுடைய பாதுகாப்பு, நலவாழ்வு, சமூக–பொருளியல் வளர்ச்சி ஆகியவற்றிற்கான பிற நடவடிக்கைகளையும் திறம்படச் செயற்படுத்துவதற்காக, ஒன்றியம் அல்லது ஒரு மாநிலம் எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் குறித்து அத்தகைய அறிக்கைகளில் பரிந்துரைகள் செய்தல்; மற்றும்

---

1. அரசமைப்புச் (நூற்று இரண்டாம் திருத்தம்) சட்டம், 2018 இன் 3 ஆம் பிரிவினால் (11–8–2018 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(f) to discharge such other functions in relation to the protection, welfare and development and advancement of the socially and educationally backward classes as the President may, subject to the provisions of any law made by Parliament, by rule specify.

(6) The President shall cause all such reports to be laid before each House of Parliament along with a memorandum explaining the action taken or proposed to be taken on the recommendations relating to the Union and the reasons for the non-acceptance, if any, of any of such recommendations.

(7) Where any such report, or any part thereof, relates to any matter with which any State Government is concerned, a copy of such report shall be forwarded to the State Government which shall cause it to be laid before the Legislature of the State along with a memorandum explaining the action taken or proposed to be taken on the recommendations relating to the State and the reasons for the non-acceptance, if any, of any of such recommendations.

(8) The Commission shall, while investigating any matter referred to in sub-clause (a) or inquiring into any complaint referred to in sub-clause (b) of clause (5), have all the powers of a civil court trying a suit and in particular in respect of the following matters, namely:—

(a) summoning and enforcing the attendance of any person from any part of India and examining him on oath;

(b) requiring the discovery and production of any document;

(c) receiving evidence on affidavits;

(d) requisitioning any public record or copy thereof from any court or office;

(e) issuing commissions for the examination of witnesses and documents;

(f) any other matter which the President may, by rule, determine.

(9) The Union and every State Government shall consult the Commission on all major policy matters affecting the socially and educationally backward classes.]

(ஊ) சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கான பாதுகாப்பு, நலவாழ்வு, வளர்ச்சி, மேம்பாடு ஆகியவை தொடர்பாக, நாடாளுமன்றம் இயற்றும் சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு உட்பட்டு, குடியரசுத்தலைவர் வகுக்கும் விதிகளின்படி செயற்பணிகளை ஆற்றுதல்.

(6) அத்தகைய அறிக்கைகள் அனைத்துடனும், ஒன்றியம் தொடர்பான பரிந்துரைகளின் மீது எடுக்கப்படும் அல்லது எடுக்கக்கருதப்படும் நடவடிக்கையையும் அத்தகைய பரிந்துரைகளில் எவையும் ஏற்றுக்கொள்ளப்படாவிடின், அதற்கான காரணங்களையும் விளக்குகின்ற விவரக்குறிப்புடன் சேர்த்து, நாடாளுமன்ற ஈரவைகளின் முன்பும் வைக்குமாறு குடியரசுத்தலைவர் செய்விப்பார்.

(7) அத்தகைய அறிக்கை எதுவும் அல்லது அதன் பகுதி எதுவும், ஒரு மாநில அரசு தொடர்புடைய பொருட்பாடு குறித்ததாயிருக்குமிடத்து, அத்தகைய அறிக்கையின் படியொன்று, மாநில அரசிற்கு அனுப்பிவைக்கப்படுதல் வேண்டும், அது, அத்தகைய அறிக்கையுடன் மாநிலம் தொடர்பான பரிந்துரைகளின் மீது எடுக்கப்படும் அல்லது எடுக்கக் கருதப்படும் நடவடிக்கையையும், அத்தகைய பரிந்துரைகளில் எவையும் ஏற்றுக்கொள்ளபடாவிடின், அதற்கான காரணங்களையும் விளக்குகின்ற விவரக்குறிப்புடன் சேர்த்து, மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்குமாறு செய்வித்தல் வேண்டும்.

(8) ஆணையமானது, (5) ஆம் கூறின் (அ) உட்கூறில் சுட்டப்பட்ட பொருட்பாடு எதனையும் ஆய்ந்து காண்கையில் அல்லது (ஆ) உட்கூறில் சுட்டப்பட்ட முறையீடு எதனையும் விசாரணை செய்கையில், உரிமை வழக்கு ஒன்றை விசாரணை செய்யும் ஓர் உரிமையில் நீதிமன்றம், குறிப்பாக பின்வரும் பொருட்பாடுகளைப் பொறுத்து, கொண்டிருக்கும் அனைத்து அதிகாரங்களையும் உடையது ஆகும், அவையாவன:—

(அ) இந்தியாவின் எந்தவொரு பகுதியிலிருந்தும் நபர் எவரையும் அழைப்பாணை அனுப்பி வரவழைத்தல் மற்றும் ஆணைமொழியின் மீது அவரை விசாரணை செய்தல்;

(ஆ) ஆவணம் எதனையும் வெளிக்கொணர்ந்து முன்னிலைப்படுத்துமாறு வேண்டுறுத்துதல்;

(இ) ஆணையுறுதி ஆவணங்களைச் சான்றாக ஏற்றல் ;

(ஈ) நீதிமன்றம் அல்லது அலுவலகம் எதிலிருந்தும் அரசுப் பதிவணம் அல்லது அதன் படி எதனையும் பெறுவதற்கு வேண்டுதலாணை இடுதல்;

(உ) சாட்சிகளை விசாரணை செய்வதற்காகவும் ஆவணங்களை ஆய்வு செய்வதற்காகவும் பணிப்பாணைகளைப் பிறப்பித்தல்;

(ஊ) குடியரசுத் தலைவர் வகுக்கும் விதிகளில் கூறப்படும் பிற பொருட்பாடுகள்

(9) ஒன்றியமும், ஒவ்வொரு மாநில அரசும் சமுதாயநிலையிலும் கல்வி நிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினரைப் பாதிக்கும் முக்கியமான கொள்கைகள் அனைத்திலும் ஆணையத்தைக் கலந்தாய்வு செய்தல் வேண்டும். ]

**339. Control of the Union over the administration of Scheduled Areas and the welfare of Scheduled Tribes :**

(1) The President may at any time and shall, at the expiration of ten years from the commencement of this Constitution by order appoint a Commission to report on the administration of the Scheduled Areas and the welfare of the Scheduled Tribes in the States [1]***.

The order may define the composition, powers and procedure of the Commission and may contain such incidental or ancillary provisions as the President may consider necessary or desirable.

(2) The executive power of the Union shall extend to the giving of directions to [2][a State] as to the drawing up and execution of schemes specified in the direction to be essential for the welfare of the Scheduled Tribes in the State.

**340. Appointment of a Commission to investigate the conditions of backward classes :**

(1) The President may by order appoint a Commission consisting of such persons as he thinks fit to investigate the conditions of socially and educationally backward classes within the territory of India and the difficulties under which they labour and to make recommendations as to the steps that should be taken by the Union or any State to remove such difficulties and to improve their condition and as to the grants that should be made for the purpose by the Union or any State and the conditions subject to which such grants should be made, and the order appointing such Commission shall define the procedure to be followed by the Commission.

(2) A Commission so appointed shall investigate the matters referred to them and present to the President a report setting out the facts as found by them and making such recommendations as they think proper.

(3) The President shall cause a copy of the report so presented together with a memorandum explaining the action taken thereon to be laid before each House of Parliament.

---

1. The words and letters "specified in Part A and Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. Subs. by *ibid.*, for "any such state".

**339. பட்டியல் வரையிடங்களின் நிருவாகம், பட்டியலில்கண்ட பழங்குடியினரின் நலவாழ்வு ஆகியவற்றின் மீது ஒன்றியத்திற்குள்ள கட்டாள்கை :**

(1) குடியரசுத்தலைவர், ஆணையின்வழி [1]*** மாநிலங்களிலுள்ள பட்டியல் வரையிடங்களின் நிருவாகம் குறித்தும் பட்டியலில்கண்ட பழங்குடியினரின் நலவாழ்வு பற்றியும் அறிக்கை அளிப்பதற்காக ஆணையம் ஒன்றை எச்சமயத்திலும் அமர்த்தலாம்; ஆனால், இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து பத்தாண்டுகள் கழிவுற்றதும் அத்தகைய ஆணையத்தை அமர்த்துதல் வேண்டும்.

அந்த ஆணையத்தின் கட்டமைப்பு, அதிகாரங்கள், நெறிமுறை ஆகியவற்றை அந்த ஆணை வரையறை செய்யலாம்; மேலும், குடியரசுத்தலைவர் தேவையென அல்லது உகந்ததெனக் கருதும் சார்வுறு மற்றும் சார்பியல் வகையங்களையும் அந்த ஆணை கொண்டிருக்கலாம்.

(2) ஒரு மாநிலத்திலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினரின் நலவாழ்விற்கு இன்றியமையாதவை எனப் பணிப்புரையில் குறித்துரைக்கப்படும் திட்டங்களை வகுப்பது பற்றியும், அவற்றை நிறைவேற்றுவது குறித்தும் [2][அந்த மாநிலத்திற்குப்] பணிப்புரைகள் இடுவதும் ஒன்றியத்து ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

**340. பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் நிலைமைகளை ஆய்ந்து காண்பதற்கு ஆணையம் ஒன்றை அமர்த்துதல் :**

(1) இந்திய ஆட்சிநிலவரையிலுள்ள சமூக நிலையிலும் கல்வி நிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் நிலைமைகளையும் அவர்களை உழற்றும் இடர்ப்பாடுகளையும் ஆய்ந்து காண்பதற்கும் அத்தகைய இடர்ப்பாடுகளை அகற்றி, அவர்களின் நிலைமையை மேம்படுத்துவதற்கு ஒன்றியம் அல்லது மாநிலம் எதுவும் எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் குறித்தும் அதன்பொருட்டு ஒன்றியம் அல்லது ஒரு மாநிலம் அளிக்கவேண்டிய மானியங்கள் பொறுத்தும் அம்மானியங்கள் எந்த வரைக்கட்டுகளுக்குட்பட்டு அளிக்கப்படவேண்டும் என்பது பற்றியும் பரிந்துரைகள் செய்வதற்கும், குடியரசுத்தலைவர் ஆணையின்வழி, தாம் தக்கவர்களெனக் கருதுபவர்களைக் கொண்ட ஆணையம் ஒன்றை அமர்த்தலாம்; அத்தகைய ஆணையத்தை அமர்த்துகிற ஆணையானது, அந்த ஆணையம் பின்பற்றவேண்டிய நெறிமுறைகளையும் வரையறை செய்யும்.

(2) அவ்வாறு அமர்த்தப்பட்ட ஆணையம், தனக்குக் குறித்தனுப்பப்பட்டுள்ள பொருட்பாடுகளை ஆய்வுசெய்து தான் கண்டறிந்த பொருண்மைகளை விவரித்துத் தான் ஏற்புடையவை எனக் கருதும் பரிந்துரைகளுடன் ஓர் அறிக்கையைக் குடியரசுத்தலைவரிடம் அளித்தல் வேண்டும்.

(3) அவ்வாறு அளிக்கப்பட்ட அறிக்கையின் ஒரு படியினை, அதன் மீது மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கையை விளக்கும் விவரக்குறிப்புடன் சேர்த்து, குடியரசுத்தலைவர், நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றின் முன்பும் வைக்குமாறு செய்வார்.

---

1 ''முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) மற்றும் பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட'' என்ற சொற்கள் மற்றும் எழுத்துகள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. ''அத்தகைய மாநிலம் எதற்கும்'' என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.

**341. Scheduled Castes :**

(1) The President [1][may with respect to any State [2][or Union territory], and where it is a State [3]***, after consultation with the Governor [4]*** thereof,] by public notification, specify the castes, races or tribes or parts of or groups within castes, races or tribes which shall for the purposes of this Constitution be deemed to be Scheduled Castes in relation to that State [5][or Union territory, as the case may be.]

(2) Parliament may by law include in or exclude from the list of Scheduled Castes specified in a notification issued under clause (1) any caste, race or tribe or part of or group within any caste, race or tribe, but save as aforesaid a notification issued under the said clause shall not be varied by any subsequent notification.

**342. Scheduled Tribes :**

(1) The President [6][may with respect to any State or Union territory, and where it is a State [7]***, after consultation with the Governor [8]*** thereof,] by public notification, specify the tribes or tribal communities or parts of or groups within tribes or tribal communities which shall for the purposes of this Constitution be deemed to be Scheduled Tribes in relation to that State [5][or Union territory, as the case may be.]

---

1. Subs. by the Constitution (First Amendment) Act, 1951, s. 10, for "may, after consultation with the Governor or Rajpramukh of a State," (w.e.f. 18-6-1951).
2. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).
3. The words and letters "specified in Part A and Part B of the First Schedule" omitted by *ibid.*
4. The words "or Rajpramukh" omitted by *ibid.*
5. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch.(w.e.f. 1-11-1956).
6. Subs. by the Constitution (First Amendment) Act, 1951, s. 11, for "may, after consultation with the Governor or Rajpramukh of a State," (w.e.f. 18-6-1951).
7. The words and letters "specified in Part A or Part B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).
8. The words "or Rajpramukh" omitted by s. 29 and Sch., *ibid.*

**341. பட்டியலில்கண்ட சாதிகள் :**

(1) [1][மாநிலம் [2][அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரை] எதனைப் பொறுத்தும், அது [3]*** ஒரு மாநிலமாக இருக்குமிடத்து, அதன் ஆளுநரைக்[4]*** கலந்தாய்வு செய்தபின்பு], அந்த மாநிலம் [5][அல்லது, நேர்வுக்கேற்ப, ஒன்றியத்து ஆட்சிநிலவரை] தொடர்பாக, இந்த அரசமைப்பினைப் பொறுத்தவரை பட்டியலில்கண்ட சாதிகள் என்று கொள்ளப்படவேண்டிய சாதிகள், இனங்கள் அல்லது பழங்குடிகள் எவை என்றும், சாதிகளில், இனங்களில் அல்லது பழங்குடிகளில் உள்ள பகுதிகள் அல்லது தொகுதிகள் எவை என்றும் குடியரசுத்தலைவர் பொது அறிவிக்கை வாயிலாகக் குறித்துரைக்கலாம்.

(2) நாடாளுமன்றம் சட்டத்தினால், சாதி, இனம் அல்லது பழங்குடி எதனையும் அல்லது சாதியில், இனத்தில் அல்லது பழங்குடியில் உள்ள பகுதிகள் அல்லது தொகுதிகள் எவற்றையும், (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட அறிவிக்கை ஒன்றில் குறித்துரைக்கப்பட்ட பட்டியலில்கண்ட சாதிகளின் வரிசைத் தொகுப்பில் சேர்க்கலாம் அல்லது அத்தொகுப்பிலிருந்து நீக்கிவிடலாம்; ஆனால், மேலே கண்டவாறன்றி, மேற்சொன்ன கூறின்படி பிறப்பிக்கப்பட்ட ஓர் அறிவிக்கையானது பிந்திய அறிவிக்கை எதனாலும் மாறுதல் செய்யப்படுதல் ஆகாது.

**342. பட்டியலில்கண்ட பழங்குடிகள் :**

(1) [6][மாநிலம் அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரை எதனைப் பொறுத்தும், அது[7]*** ஒரு மாநிலமாக இருக்குமிடத்து, அதன் ஆளுநரைக் [8]*** கலந்தாய்வு செய்த பின்பு,] அந்த மாநிலம் [5][அல்லது, நேர்வுக்கேற்ப, ஒன்றியத்து ஆட்சிநிலவரை] தொடர்பாக, இந்த அரசமைப்பினைப் பொறுத்தவரை பட்டியலில்கண்ட பழங்குடிகள் என்று கொள்ளப்படவேண்டிய பழங்குடிகள், பழங்குடிச் சமூகங்கள் எவை என்றும், பழங்குடிகளில் அல்லது பழங்குடிச் சமூகங்களில் உள்ள பகுதிகள் அல்லது தொகுதிகள் எவை என்றும் குடியரசுத்தலைவர் பொது அறிவிக்கை வாயிலாகக் குறித்துரைக்கலாம்.

---

1. "ஒரு மாநிலத்தின் ஆளுநர் அல்லது இராஜபிரமுகருடன் கலந்தாய்வு செய்த பின்பு" என்பதற்கு, அரசமைப்புச் (முதலாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 10 ஆம் பிரிவினால் (18–6–1951 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

3. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) மற்றும் பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள் மற்றும் எழுத்துகள் *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

4. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

5. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

6. "ஒரு மாநிலத்தின் ஆளுநர் அல்லது இராஜபிரமுகருடன் கலந்தாய்வு செய்த பின்பு" என்பதற்கு, அரசமைப்புச் (முதலாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 11 ஆம் பிரிவினால் (18–6–1951 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

7. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) அல்லது பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள் மற்றும் எழுத்துகள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

8. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், *மேற்படிச் சட்டத்தின்* 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் விட்டுவிடப்பட்டன.

(2) Parliament may by law include in or exclude from the list of Scheduled Tribes specified in a notification issued under clause (1) any tribe or tribal community or part of or group within any tribe or tribal community, but save as aforesaid a notification issued under the said clause shall not be varied by any subsequent notification.

**[1][342A. Socially and educationally backward classes :**

(1) The President may with respect to any State or Union territory, and where it is a State, after consultation with the Governor thereof, by public notification, specify the socially and educationally backward classes which shall for the purposes of this Constitution be deemed to be socially and educationally backward classes in relation to that State or Union territory, as the case may be.

(2) Parliament may by law include in or exclude from the Central List of socially and educationally backward classes specified in a notification issued under clause (1) any socially and educationally backward class, but save as aforesaid a notification issued under the said clause shall not be varied by any subsequent notification.]

# PART XVII

## OFFICIAL LANGUAGE

## CHAPTER I

## LANGUAGE OF THE UNION

**343. Official language of the Union :**

(1) The official language of the Union shall be Hindi in Devanagari script.

The form of numerals to be used for the official purposes of the Union shall be the international form of Indian numerals.

(2) Notwithstanding anything in clause (1), for a period of fifteen years from the commencement of this Constitution, the English language shall continue to be used for all the official purposes of the Union for which it was being used immediately before such commencement:

Provided that the President may, during the said period, by order authorise the use of the Hindi language in addition to the English language and of the Devanagari form of numerals in addition to the international form of Indian numerals for any of the official purposes of the Union.

---

1. Ins. by the Constitution (One Hundred and Second Amendment) Act, 2018, s. 4 (w.e.f. 11-8-2018).

(2) நாடாளுமன்றம், சட்டத்தினால் பழங்குடி அல்லது பழங்குடிச் சமூகம் எதனையும் அல்லது அந்த பழங்குடி அல்லது பழங்குடிச் சமூகம் எதிலும் உள்ள பகுதிகள் அல்லது தொகுதிகள் எவற்றையும், (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட அறிவிக்கை ஒன்றில் குறித்துரைக்கப்பட்ட பட்டியலில்கண்ட பழங்குடிகளின் வரிசைத் தொகுப்பில் சேர்க்கலாம் அல்லது அத்தொகுப்பிலிருந்து நீக்கிவிடலாம்; ஆனால், மேலே கண்டவாறன்றி, மேற்சொன்ன கூறின்படி பிறப்பிக்கப்பட்ட ஓர் அறிவிக்கையானது, பிந்திய அறிவிக்கை எதனாலும் மாறுதல் செய்யப்படுதல் ஆகாது.

**[1][342 (அ). சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் :**

(1) மாநிலம் அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரை எதனைப் பொறுத்தும், அது ஒரு மாநிலமாக இருக்குமிடத்து அதன் ஆளுநரைக் கலந்தாய்வு செய்த பின்பு, அந்த மாநிலம் அல்லது, நேர்வுக்கேற்ப, ஒன்றியத்து ஆட்சிநிலவரை தொடர்பாக, இந்த அரசமைப்பினைப் பொறுத்தவரை சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்புகள் என்று கொள்ளப்படவேண்டிய வகுப்புகள் எவை என்று குடியரசுத்தலைவர் பொது அறிவிக்கை வாயிலாகக் குறித்துரைக்கலாம்.

(2) நாடாளுமன்றம், சட்டத்தினால் சமுதாய–நிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பு எதனையும் (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட அறிவிக்கை ஒன்றில் குறித்துரைக்கப்பட்ட சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் மைய வரிசைத் தொகுப்பில் சேர்க்கலாம் அல்லது அத்தொகுப்பிலிருந்து நீக்கிவிடலாம்; ஆனால், மேலேகண்டவாறன்றி, மேற்சொன்ன கூறின்படி பிறப்பிக்கப்பட்ட ஓர் அறிவிக்கையானது, பிந்திய அறிவிக்கை எதனாலும் மாறுதல் செய்யப்படுதல் ஆகாது.]

## பகுதி XVII

## ஆட்சி மொழி

## அத்தியாயம் I

## ஒன்றியத்தின் மொழி

**343. ஒன்றியத்தின் ஆட்சி மொழி :**

(1) தேவநாகரி வரிவடிவிலுள்ள இந்தி, ஒன்றியத்தின் ஆட்சி மொழியாக இருக்கும்.

ஒன்றியத்து அரசு அலுவல் நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்பட வேண்டிய எண்களின் வடிவம், இந்திய எண்களின் பன்னாட்டு வடிவமாக இருக்கும்.

(2). (1) ஆம் கூறில் எது எவ்வாறிருப்பினும், இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து பதினைந்து ஆண்டுக் காலஅளவிற்கு ஆங்கில மொழியே, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு பயன்படுத்தப்பட்டவாறு ஒன்றியத்து அரசு அலுவல் நோக்கங்கள் அனைத்திற்கும் தொடர்ந்து பயன்படுத்தப்பட்டு வரும்:

**வரம்புரையாக :** மேற்சொன்ன காலஅளவின்போது, ஒன்றியத்து அரசு அலுவல் நோக்கங்களில் எதற்கும் ஆங்கில மொழியோடும்கூட இந்தி மொழியையும், இந்திய எண்களின் பன்னாட்டு வடிவத்தோடுங்கூட, அந்த எண்களின் தேவநாகரி வடிவத்தையும் பயன்படுத்துவதற்கு, குடியரசுத்தலைவர் ஆணையின்வழி அதிகாரமளிக்கலாம்.

1. அரசமைப்புச் (நூற்று இரண்டாம் திருத்தம்) சட்டம், 2018 இன் 4 ஆம் பிரிவினால் (11–8–2018 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(3) Notwithstanding anything in this article, Parliament may by law provide for the use, after the said period of fifteen years, of—

(a) the English language, or

(b) the Devanagari form of numerals,

for such purposes as may be specified in the law.

**344. Commission and Committee of Parliament on official language :**

(1) The President shall, at the expiration of five years from the commencement of this Constitution and thereafter at the expiration of ten years from such commencement, by order constitute a Commission which shall consist of a Chairman and such other members representing the different languages specified in the Eighth Schedule as the President may appoint, and the order shall define the procedure to be followed by the Commission.

(2) It shall be the duty of the Commission to make recommendations to the President as to—

(a) the progressive use of the Hindi language for the official purposes of the Union;

(b) restrictions on the use of the English language for all or any of the official purposes of the Union;

(c) the language to be used for all or any of the purposes mentioned in article 348;

(d) the form of numerals to be used for any one or more specified purposes of the Union;

(e) any other matter referred to the Commission by the President as regards the official language of the Union and the language for communication between the Union and a State or between one State and another and their use.

(3) In making their recommendations under clause (2), the Commission shall have due regard to the industrial, cultural and scientific advancement of India, and the just claims and the interests of persons belonging to the non-Hindi speaking areas in regard to the public services.

(4) There shall be constituted a Committee consisting of thirty members, of whom twenty shall be members of the House of the People and ten shall be members of the Council of States to be elected respectively by the members of the House of the People and the members of the Council of States in accordance with the system of proportional representation by means of the single transferable vote.

(5) It shall be the duty of the Committee to examine the recommendations of the Commission constituted under clause (1) and to report to the President their opinion thereon.

(3) இந்த உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், மேற்சொன்ன பதினைந்து ஆண்டுக் காலஅளவிற்குப் பின்பும், நாடாளுமன்றம் சட்டத்தினால் அந்தச் சட்டத்தில் குறித்துரைக்கப்படும் நோக்கங்களுக்காக—

(அ) ஆங்கில மொழியினை, அல்லது

(ஆ) எண்களின் தேவநாகரி வடிவத்தினைப்

பயன்படுத்துவதற்கு வகைசெய்யலாம்.

**344. ஆட்சி மொழிக்கான ஆணையமும் நாடாளுமன்றக் குழுவும் :**

(1) இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து ஐந்தாண்டுகள் கழிவுறும்போதும் அதன்பின்பு அத்தகைய தொடக்கநிலையிலிருந்து பத்தாண்டுகள் கழிவுறும்போதும், குடியரசுத்தலைவர் ஆணையின்வழி, ஒரு தலைமையாளரையும், எட்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள வெவ்வேறு மொழிகளுக்குச் சார்பாற்றுநர்களாகக் குடியரசுத்தலைவரால் அமர்த்தப்பெறும் பிற உறுப்பினர்களையும் கொண்ட ஓர் ஆணையத்தை அமைப்பார்; மேலும், அந்த ஆணையம் பின்பற்றவேண்டிய நெறிமுறையையும் அந்த ஆணை வரையறை செய்யும்.

(2) குடியரசுத்தலைவருக்குப் பின்வருவனபற்றி பரிந்துரைகள் செய்வது அந்த ஆணையத்தின் கடமை ஆகும்—

(அ) ஒன்றியத்து அரசு அலுவல்களுக்காக மேன்மேலும் இந்திமொழியைப் பயன்படுத்துதல்;

(ஆ) ஒன்றியத்து அரசுஅலுவல்கள் அனைத்திற்கும் அல்லது அவற்றுள் எதற்கும் ஆங்கிலமொழியைப் பயன்படுத்துவதை வரையறுத்தல்;

(இ) 348 ஆம் உறுப்பில் குறிப்பிடப்பட்டுள்ள நோக்கங்கள் அனைத்திற்காகவும் அல்லது அவற்றுள் எதற்காகவும் பயன்படுத்தப்படவேண்டிய மொழி;

(ஈ) குறித்துரைக்கப்படும் ஒன்றியத்து நோக்கங்களில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்டவற்றுக்குப் பயன்படுத்தப்படவேண்டிய எண்களின் வடிவம்;

(உ) ஒன்றியத்தின் ஆட்சி மொழி, ஒன்றியத்திற்கும் ஒரு மாநிலத்திற்கும் இடையே அல்லது ஒரு மாநிலத்திற்கும் மற்றொன்றிற்கும் இடையே செய்தித் தொடர்புக்கான மொழி, அவற்றின் பயன்பாடு ஆகியவை பற்றி குடியரசுத்தலைவர் ஆணையத்திற்குக் குறித்தனுப்பும் பிற பொருட்பாடு எதுவும்.

(3) இந்த ஆணையம் (2) ஆம் கூறின்படி தனது பரிந்துரைகளைச் செய்கையில், இந்தியாவின் தொழில்துறை, பண்பாடு, அறிவியல் ஆகியவற்றின் முன்னேற்றத்திற்கும் அரசுப் பணியங்களைப் பொறுத்து இந்தி பேசாத பகுதிகளைச் சார்ந்தவர்களின் நலன்களுக்கும் நேரிய கோரிக்கைகளுக்கும் உரிய மதிப்புக் கொடுத்தல் வேண்டும்.

(4) முப்பது உறுப்பினர்கள் அடங்கிய ஒரு குழு அமைக்கப்படும்; அக்குழு ஒற்றைமாற்று வாக்கு என்னும் முறையில் வீதச் சார்பாற்று முறைக்கிணங்க, மக்களவை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பெற வேண்டிய மக்களவை உறுப்பினர்கள் இருபது பேரையும் மாநிலங்களவை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பெற வேண்டிய மாநிலங்களவை உறுப்பினர்கள் பத்துபேரையும் கொண்டிருக்கும்.

(5). (1) ஆம் கூறின்படி அமைக்கப்படும் ஆணையத்தின் பரிந்துரைகளை ஆராய்ந்து, அவற்றின் மீதான தன் கருத்தினைக் குடியரசுத்தலைவருக்கு அறிவித்தல் அந்தக் குழுவின் கடமை ஆகும்.

(6) Notwithstanding anything in article 343, the President may, after consideration of the report referred to in clause (5), issue directions in accordance with the whole or any part of that report.

## CHAPTER II

## REGIONAL LANGUAGES

**345. Official language or languages of a State :**

Subject to the provisions of articles 346 and 347, the Legislature of a State may by law adopt any one or more of the languages in use in the State or Hindi as the language or languages to be used for all or any of the official purposes of that State:

Provided that, until the Legislature of the State otherwise provides by law, the English language shall continue to be used for those official purposes within the State for which it was being used immediately before the commencement of this Constitution.

**346. Official language for communication between one State and another or between a State and the Union :**

The language for the time being authorised for use in the Union for official purposes shall be the official language for communication between one State and another State and between a State and the Union:

Provided that if two or more States agree that the Hindi language should be the official language for communication between such States, that language may be used for such communication.

**347. Special provision relating to language spoken by a section of the population of a State :**

On a demand being made in that behalf the President may, if he is satisfied that a substantial proportion of the population of a State desire the use of any language spoken by them to be recognised by that State, direct that such language shall also be officially recognised throughout that State or any part thereof for such purpose as he may specify.

(6). 343 ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், குடியரசுத்தலைவர், (5)ஆம் கூறில் சுட்டப்பட்டுள்ள அறிக்கையை ஓர்வு செய்தபின்பு, அந்த அறிக்கை முழுவதற்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் இணங்க பணிப்புரைகளை இடலாம்.

## அத்தியாயம் II

## மண்டல மொழிகள்

### 345. மாநிலத்தின் ஆட்சி மொழி அல்லது மொழிகள் :

346, 347 ஆகிய உறுப்புகளின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒரு மாநிலச் சட்டமன்றம், அந்த மாநிலத்தில் பயன்பாட்டிலுள்ள மொழிகளில் ஏதேனும் ஒன்றை அல்லது அதற்கு மேற்பட்டவற்றை அல்லது இந்தியை அந்த மாநிலத்தின் அரசு அலுவல்கள் அனைத்திற்கும் அல்லது அவற்றுள் எதற்கும் பயன்படுத்தப்படுவதற்கான மொழியாக அல்லது மொழிகளாகச் சட்டத்தினால் ஏற்று மேற்கொள்ளலாம் :

**வரம்புரையாக :** அந்த மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகைசெய்கிற வரையில், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு அந்த மாநிலத்திற்குள் ஆங்கிலமொழி பயன்படுத்தப்பட்டுவந்த அரசு அலுவல்களுக்கு அம்மொழியே தொடர்ந்து பயன்படுத்தப்பட்டுவரும்.

### 346. ஒரு மாநிலத்திற்கும் மற்றொன்றிற்கும் இடையே அல்லது ஒரு மாநிலத்திற்கும் ஒன்றியத்திற்கும் இடையே செய்தித் தொடர்புக்கான ஆட்சி மொழி :

ஒன்றியத்தின் அரசு அலுவல்களுக்குப் பயன்படுத்துவதற்கென அப்போதைக்கு அதிகாரம் பெற்ற மொழியே, ஒரு மாநிலத்திற்கும் மற்றொரு மாநிலத்திற்கும் இடையேயும், ஒரு மாநிலத்திற்கும் ஒன்றியத்திற்கும் இடையேயும் செய்தித் தொடர்புக்கான ஆட்சி மொழியாக இருக்கும்:

**வரம்புரையாக :** இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்கள், தங்களுக்கிடையே செய்தித் தொடர்புக்கான ஆட்சி மொழியாக இந்திமொழி இருத்தல் வேண்டுமென ஒத்துக்கொள்ளுமாயின், அத்தகைய செய்தித் தொடர்புக்காக அந்த மொழியே பயன்படுத்தப்படலாம்.

### 347. ஒரு மாநில மக்கள்தொகையில் ஒரு பகுதியினர் பேசும் மொழி பொறுத்த தனியுறு வகையம் :

ஒரு மாநில மக்கள்தொகையில் கணிசமான விகிதத்தினர், தாங்கள் பேசும் மொழியின் பயன்பாட்டிற்கு அந்த மாநிலம் ஏற்பளிக்க வேண்டுமென விரும்புகிறார்கள் என்பதை, அதற்கென விடுக்கப்பட்ட ஒரு கோரிக்கையின்மீது குடியரசுத்தலைவர் தெளிவுறக்காண்பாராயின், அவர், தாம் குறித்துரைக்கும் நோக்கத்திற்காக, அந்த மாநிலம் எங்கணும் அல்லது அதன் பகுதி எதிலும், அந்த மொழிக்கும் அதிகாரமுறையில் ஏற்பளிக்க வேண்டுமெனப் பணிக்கலாம்.

## CHAPTER III

## LANGUAGE OF THE SUPREME COURT, HIGH COURTS, ETC.

**348. Language to be used in the Supreme Court and in the High Courts and for Acts, Bills, etc :**

Notwithstanding anything in the foregoing provisions of this Part, until Parliament by law otherwise provides—

(a) all proceedings in the Supreme Court and in every High Court,

(b) the authoritative texts—

(i) of all Bills to be introduced or amendments thereto to be moved in either House of Parliament or in the House or either House of the Legislature of a State,

(ii) of all Acts passed by Parliament or the Legislature of a State and of all Ordinances promulgated by the President or the Governor [1]*** of a State, and

(iii) of all orders, rules, regulations and bye-laws issued under this Constitution or under any law made by Parliament or the Legislature of a State,

shall be in the English language.

(2) Notwithstanding anything in sub-clause (a) of clause (1), the Governor of a State may, with the previous consent of the President, authorise the use of the Hindi language, or any other language used for any official purposes of the State, in proceedings in the High Court having its principal seat in that State:

Provided that nothing in this clause shall apply to any judgment, decree or order passed or made by such High Court.

(3) Notwithstanding anything in sub-clause (b) of clause (1), where the Legislature of a State has prescribed any language other than the English language for use in Bills introduced in, or Acts passed by, the Legislature of the State or in Ordinances promulgated by the Governor [1]*** of the State or in any order, rule, regulation or bye-law referred to in paragraph (iii) of that sub-clause, a translation of the same in the English language published under the authority of the Governor [1]*** of the State in the Official Gazette of that State shall be deemed to be the authoritative text thereof in the English language under this article.

---

1.The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s.29 and Sch. (w.e.f.1-11-1956).

## அத்தியாயம் III

### உச்ச நீதிமன்றம், உயர் நீதிமன்றங்கள் முதலியவற்றின் மொழி

**348. உச்ச நீதிமன்றம், உயர் நீதிமன்றங்கள் ஆகியவற்றிலும் சட்டங்கள், சட்டமுன்வடிவுகள் முதலியவற்றிற்கும் பயன்படுத்த வேண்டிய மொழி :**

(1) இந்தப் பகுதியின் மேலேகண்ட வகையங்களில் எது எவ்வாறிருப்பினும், நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகை செய்யும் வரை—

(அ) உச்ச நீதிமன்றத்தின் மற்றும் ஒவ்வோர் உயர் நீதிமன்றத்தின் அனைத்து நடவடிக்கைகளும்,

(ஆ) (i) நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலும் அல்லது மாநிலச் சட்டமன்ற அவையில் அல்லது ஈரவைகளில் எதிலும் அறிமுகப்படுத்தப்படவிருக்கும் சட்டமுன்வடிவுகள் அல்லது முன்மொழியப்படவிருக்கும் அனைத்துத் திருத்தங்கள்,

(ii) நாடாளுமன்றத்தால் அல்லது ஒரு மாநிலச் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்படும் அனைத்துச் சட்டங்கள், குடியரசுத்தலைவரால் அல்லது ஒரு மாநில ஆளுநரால் [1]*** சாற்றம் செய்யப்படும் அனைத்து அவசரச்சட்டங்கள், மற்றும்

(iii) இந்த அரசமைப்பின்படி அல்லது நாடாளுமன்றத்தால் அல்லது ஒரு மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்படும் சட்டம் எதன்படியும் பிறப்பிக்கப்படும் அனைத்து ஆணைகள், விதிகள், ஒழுங்குறுத்தும் விதிகள், துணைவிதிகள்

ஆகியவற்றின் அதிகார உறுதிபெற்ற வாசகங்களும் ஆங்கில மொழியில் இருத்தல் வேண்டும்.

(2). (1) ஆம் கூறின் (அ) உட்கூறில் எது எவ்வாறிருப்பினும் ஒரு மாநில ஆளுநர், குடியரசுத்தலைவரின் முன் இசைவுடன், அந்த மாநிலத்தில் தலைமை அமர்கையிடம் கொண்டுள்ள உயர் நீதிமன்றத்தின் நடவடிக்கைகளில் இந்தி மொழியை அல்லது அந்த மாநிலத்து அரசு அலுவல்கள் எவற்றிற்கும் பயன்படுத்தப்படும் பிற மொழி எதனையும் பயன்படுத்துவதற்கு அதிகாரமளிக்கலாம்:

**வரம்புரையாக :** இந்தக் கூறிலுள்ள எதுவும், அத்தகைய உயர் நீதிமன்றம் வழங்கும் அல்லது பிறப்பிக்கும் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது ஆணை எதற்கும் பொருந்துதல் ஆகாது.

(3). (1) ஆம் கூறின் (ஆ) உட்கூறில் எது எவ்வாறிருப்பினும், ஒரு மாநிலச் சட்டமன்றத்தில் அறிமுகப்படுத்தப்படும் சட்டமுன்வடிவுகளில் அல்லது அந்தச் சட்டமன்றம் நிறைவேற்றும் சட்டங்களில் அல்லது அந்த மாநில ஆளுநர் [1]*** சாற்றம் செய்யும் அவசரச்சட்டங்களில் அல்லது அந்த உட்கூறின் (iii) ஆம் பத்தியில் சுட்டப்பட்டுள்ள ஆணை, விதி, ஒழுங்குறுத்தும்விதி அல்லது துணைவிதி எதிலும் பயன்படுத்துவதற்காக, ஆங்கில மொழி அல்லாத பிற மொழி எதனையும் அந்த மாநிலச் சட்டமன்றம் வகுத்துரைத்துள்ளவிடத்து அந்த மாநிலத்தின் அதிகாரமுறை அரசிதழில் அந்த மாநில ஆளுநரின்[1]***அதிகாரத்தின்படி ஆங்கில மொழியில் வெளியிடப்படும் அதன் மொழிபெயர்ப்பானது, இந்த உறுப்பின்படி ஆங்கில மொழியில் அதன் அதிகாரஉறுதிபெற்ற வாசகமாகக் கொள்ளப்படும்.

---

1. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

**349. Special procedure for enactment of certain laws relating to language :**

During the period of fifteen years from the commencement of this Constitution, no Bill or amendment making provision for the language to be used for any of the purposes mentioned in clause (1) of article 348 shall be introduced or moved in either House of Parliament without the previous sanction of the President, and the President shall not give his sanction to the introduction of any such Bill or the moving of any such amendment except after he has taken into consideration the recommendations of the Commission constituted under clause (1) of article 344 and the report of the Committee constituted under clause (4) of that article.

## CHAPTER IV

## SPECIAL DIRECTIVES

**350. Language to be used in representations for redress of grievances :**

Every person shall be entitled to submit a representation for the redress of any grievance to any officer or authority of the Union or a State in any of the languages used in the Union or in the State, as the case may be.

**[1][350A. Facilities for instruction in mother-tongue at primary stage :**

It shall be the endeavour of every State and of every local authority within the State to provide adequate facilities for instruction in the mother-tongue at the primary stage of education to children belonging to linguistic minority groups; and the President may issue such directions to any State as he considers necessary or proper for securing the provision of such facilities.

**350B. Special Officer for linguistic minorities :**

(1) There shall be a Special Officer for linguistic minorities to be appointed by the President.

(2) It shall be the duty of the Special Officer to investigate all matters relating to the safeguards provided for linguistic minorities under this Constitution and report to the President upon those matters at such intervals as the President may direct, and the President shall cause all such reports to be laid before each House of Parliament, and sent to the Governments of the States concerned.]

---

1. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 21 (w.e.f. 1-11-1956).

**349. மொழி தொடர்பாகக் குறித்தசில சட்டங்களை இயற்றுவதற்கான தனியுறு நெறிமுறை :**

இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து பதினைந்தாண்டுக் காலஅளவின்போது 348 ஆம் உறுப்பின்(1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்ட நோக்கங்களில் எதற்கும் பயன்படுத்தப்பட வேண்டிய மொழிக்காக வகை செய்யும் சட்டமுன்வடிவு அல்லது திருத்தம் எதுவும், குடியரசுத்தலைவரின் முன் ஒப்பளிப்பு இன்றி, நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலும் அறிமுகப்படுத்தப்படுதலோ முன்மொழியப்படுதலோ ஆகாது; மேலும், குடியரசுத்தலைவர், 344 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின்படி அமைக்கப்பட்ட ஆணையத்தின் பரிந்துரைகளையும் அந்த உறுப்பின் (4) ஆம் கூறின்படி அமைக்கப்பட்ட குழுவின் அறிக்கையையும் ஓர்வு செய்தபின்பு தவிர, அத்தகைய சட்டமுன்வடிவு எதனையும் அறிமுகப்படுத்துவதற்கு அல்லது திருத்தம் எதனையும் முன்மொழிவதற்குத் தமது ஒப்பளிப்பை அளித்தல் ஆகாது.

## அத்தியாயம் IV

## தனியுறு நெறியுரைகள்

**350. குறைகளைத் தீர்ப்பதற்கான உரையீடுகளில் பயன்படுத்தப்படவேண்டிய மொழி :**

ஒன்றியத்தின் அல்லது ஒரு மாநிலத்தின் அலுவலர் எவரிடமும் அல்லது அதிகாரஅமைப்பு எதனிடமும், குறை எதனையும் தீர்ப்பதற்கான ஓர் உரையீட்டினை அந்த ஒன்றியத்தில் அல்லது, நேர்வுக்கேற்ப, மாநிலத்தில் பயன்படுத்தப்படும் மொழிகள் எதனிலும் அளிப்பதற்கு ஒவ்வொருவரும் உரிமை கொண்டவர் ஆவார்.

**[1][350 (அ). தொடக்க நிலையில் தாய்மொழியில் கல்வி கற்பிப்பதற்கான வசதிகள் :**

மொழிச் சிறுபான்மைக் குழுமங்களைச் சார்ந்த குழந்தைகள் தொடக்கநிலையில் தாய்மொழியில் கல்வி கற்கப் போதிய வசதிகள் செய்து கொடுக்க ஒவ்வொரு மாநிலமும் அந்த மாநிலத்திற்குள் உள்ள உள்ளாட்சி அதிகாரஅமைப்பு ஒவ்வொன்றும் முனைந்து முயலுதல் வேண்டும்; மேலும், குடியரசுத்தலைவர் அத்தகைய வசதிகளை உறுதி செய்வதற்குத் தேவையானவை அல்லது முறையானவை என்று தாம் கருதும் பணிப்புரைகளை மாநிலம் எதற்கும் பிறப்பிக்கலாம்.

**350 (ஆ). மொழிச் சிறுபான்மையினருக்கான தனி அலுவலர் :**

(1) மொழிச் சிறுபான்மையினருக்கென குடியரசுத்தலைவரால் அமர்த்தப்பெறும் தனி அலுவலர் ஒருவர் இருப்பார்.

(2) இந்த அரசமைப்பின்படி மொழிச் சிறுபான்மையினருக்காக வகை செய்யப்பட்டுள்ள பாதுகாப்புகள் தொடர்பான அனைத்துப் பொருட்பாடுகளையும் ஆராய்ந்து, அந்தப் பொருட்பாடுகளின்மீது குடியரசுத்தலைவர் பணிக்கும் காலங்களில் குடியரசுத்தலைவருக்கு அறிக்கை அளிப்பது அந்தத் தனி அலுவலரின் கடமை ஆகும்; மேலும், குடியரசுத்தலைவர், அத்தகைய அறிக்கைகள் அனைத்தையும் நாடாளுமன்ற ஈரவைகளின் முன்பும் வைக்கும்படியும் தொடர்புடைய மாநிலங்களின் அரசுகளுக்கு அனுப்பும்படியும் செய்வார்.]

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 21 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

### 351. Directive for development of the Hindi language :

It shall be the duty of the Union to promote the spread of the Hindi language, to develop it so that it may serve as a medium of expression for all the elements of the composite culture of India and to secure its enrichment by assimilating without interfering with its genius, the forms, style and expressions used in Hindustani and in the other languages of India specified in the Eighth Schedule, and by drawing, wherever necessary or desirable, for its vocabulary, primarily on Sanskrit and secondarily on other languages.

## PART XVIII

## EMERGENCY PROVISIONS

### 352. Proclamation of Emergency :

(1) If the President is satisfied that a grave emergency exists whereby the security of India or of any part of the territory thereof is threatened, whether by war or external aggression or [1][armed rebellion], he may, by Proclamation, make a declaration to that effect [2][in respect of the whole of India or of such part of the territory thereof as may be specified in the Proclamation.]

[3][**Explanation.**— A Proclamation of Emergency declaring that the security of India or any part of the territory thereof is threatened by war or by external aggression or by armed rebellion may be made before the actual occurrence of war or of any such aggression or rebellion, if the President is satisfied that there is imminent danger thereof.]

[4][(2) A Proclamation issued under clause (1) may be varied or revoked by a subsequent Proclamation.

(3) The President shall not issue a Proclamation under clause (1) or a Proclamation varying such Proclamation unless the decision of the Union Cabinet (that is to say, the Council consisting of the Prime Minister and other Ministers of Cabinet rank appointed under article 75) that such a Proclamation may be issued has been communicated to him in writing.

---

1.Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 37, for "internal disturbances" (w.e.f. 20-6-1979).

2.Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 48 (w.e.f. 3-1-1977).

3.Ins. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 37 (w.e.f. 20-6-1979).

4.Subs. by *ibid.*, for cls. (2), (2A) and (3).

**351. இந்தி மொழி வளர்ச்சிக்கான நெறியுரை :**

இந்தி மொழியைப் பரப்புவதற்கு ஊக்கமளிப்பதும், இந்தியாவின் கலப்புருவான பண்பாட்டின் எல்லாக் கூறுகளையும் எடுத்துக்காட்டும் சாதனமாக இருக்கும் வண்ணம் அதனை வளர்ப்பதும், அதன் தனி நீர்மையைக் கலைக்காது இந்துஸ்தானியிலும் எட்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள பிற இந்திய மொழிகளிலும் பயன்படுத்தப்படும் வடிவமைவுகள், நடையமைவுகள், உரையமைவுகள் ஆகியவற்றைத் தன்மயமாக்குவதன் மூலமும், அதன் சொல்வளத்திற்குத் தேவையாகவோ விரும்பத் தகுந்ததாகவோ உள்ள இடத்தெல்லாம் முதலில் சமஸ்கிருதத்திலிருந்தும் இரண்டவதாகப் பிற மொழிகளிலிருந்தும் சொற்களைப் பெற்றுக்கொள்வதன் மூலமும், அதனை வளப்படுத்த முயல்வதும் ஒன்றியத்தின் கடமை ஆகும்.

## பகுதி XVIII

## நெருக்கடிநிலை பற்றிய வகையங்கள்

**352. நெருக்கடிநிலைச் சாற்றாணை:**

(1) போர் அல்லது அயல்நாட்டு ஆக்கிரமிப்பு அல்லது [1][ஆயுதந்தாங்கியோரின் கிளர்ச்சி] காரணமாக, இந்தியாவின் அல்லது அதன் ஆட்சிநிலவரைப் பகுதி எதனின் பாதுகாப்பிற்கும் ஆபத்து விளைவிக்கும் கடுமையான நெருக்கடி நிலை எழுந்துள்ளது எனக் குடியரசுத்தலைவர் தெளிவுறக்காண்பாராயின், அவர், சாற்றாணையின்வழி, [2][இந்தியா முழுவதிலுமோ அச்சாற்றாணையில் குறித்துரைக்கப்படும் அதன் ஆட்சிநிலவரைப் பகுதி எதிலுமோ], அத்தகைய நிலை எழுந்துள்ளது என விளம்பலாம்.

[3][**விளக்கம். —** குடியரசுத்தலைவர் அத்தகைய போர் அல்லது ஆக்கிரமிப்பு அல்லது கிளர்ச்சி உள்ளபடியே நிகழ்வதற்கு முன்பேகூட, போர் அல்லது அயல்நாட்டு ஆக்கிரமிப்பு அல்லது ஆயுதந்தாங்கியோரின் கிளர்ச்சி காரணமாக இந்தியாவின் அல்லது அதன் ஆட்சிநிலவரைப் பகுதி எதனின் பாதுகாப்பிற்கும் உடனடி ஆபத்து உள்ளது என தெளிவுறக்காண்பாராயின், அவர், அவ்வாறான உடனடி ஆபத்து விளைந்துள்ளது என விளம்புகிற நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்றைப் பிறப்பிக்கலாம்.]

[4][(2). (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட ஒரு சாற்றாணை பிந்திய சாற்றாணை ஒன்றினால் மாறுதலோ முறித்தறவோ செய்யப்படலாம்.

(3). (1) ஆம் கூறின்படியான ஒரு சாற்றாணையை அல்லது அத்தகைய சாற்றாணையை மாறுதல் செய்கிற ஒரு சாற்றாணையை அத்தகைய சாற்றாணை ஒன்று பிறப்பிக்கப்படலாம் என்கிற ஒன்றியத்து அமைச்சரவையின் (அதாவது, 75 ஆம் உறுப்பின்படி அமர்த்தப்பெற்ற தலைமை அமைச்சரையும் அமைச்சரவைப் படிநிலையிலுள்ள பிற அமைச்சர்களையும் கொண்ட அமைச்சரவையின்) முடிவு எழுத்துவடிவில் குடியரசுத்தலைவருக்குத் தெரிவிக்கப்பட்டிருந்தாலன்றி, அவர் பிறப்பித்தல் ஆகாது.

---

1. ''உள்நாட்டுக் குழப்பங்கள்'' என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 37 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.
2. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 48 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 37 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. (2), (2 (அ) ) மற்றும் (3) ஆம் கூறுகளுக்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டன.

(4) Every Proclamation issued under this article shall be laid before each House of Parliament and shall, except where it is a Proclamation revoking a previous Proclamation, cease to operate at the expiration of one month unless before the expiration of that period it has been approved by resolutions of both Houses of Parliament:

Provided that if any such Proclamation (not being a Proclamation revoking a previous Proclamation) is issued at a time when the House of the People has been dissolved, or the dissolution of the House of the People takes place during the period of one month referred to in this clause, and if a resolution approving the Proclamation has been passed by the Council of States, but no resolution with respect to such Proclamation has been passed by the House of the People before the expiration of that period, the Proclamation shall cease to operate at the expiration of thirty days from the date on which the House of the People first sits after its reconstitution, unless before the expiration of the said period of thirty days a resolution approving the Proclamation has been also passed by the House of the People.

(5) A Proclamation so approved shall, unless revoked, cease to operate on the expiration of a period of six months from the date of the passing of the second of the resolutions approving the Proclamation under clause (*4*):

Provided that if and so often as a resolution approving the continuance in force of such a Proclamation is passed by both Houses of Parliament the Proclamation shall, unless revoked, continue in force for a further period of six months from the date on which it would otherwise have ceased to operate under this clause:

Provided further that if the dissolution of the House of the People takes place during any such period of six months and a resolution approving the continuance in force of such Proclamation has been passed by the Council of States but no resolution with respect to the continuance in force of such Proclamation has been passed by the House of the People during the said period, the Proclamation shall cease to operate at the expiration of thirty days from the date on which the House of the People first sits after its reconstitution unless before the expiration of the said period of thirty days, a resolution approving the continuance in force of the Proclamation has been also passed by the House of the People.

(6) For the purposes of clauses (4) and (5), a resolution may be passed by either House of Parliament only by a majority of the total membership of that House and by a majority of not less than two-thirds of the members of that House present and voting.

(4) இந்த உறுப்பின்படி பிறப்பிக்கப்படும் சாற்றாணை ஒவ்வொன்றும் நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றிலும் முன்னிடப்படுதல் வேண்டும்; மேலும், முந்திய சாற்றாணையை முறித்தறவு செய்வதல்லாத சாற்றாணை எதுவும், ஒரு மாதக் காலஅளவு கழிவுறுவதற்கு முன்பே, நாடாளுமன்ற ஈரவைகளும் தீர்மானங்கள் வாயிலாக அதற்கு ஒப்பேற்பு அளித்திருந்தாலன்றி, அக்காலஅளவு கழிவுற்றதும், செயற்பாடு அற்றுப்போகும்:

**வரம்புரையாக** : (முந்திய சாற்றாணையை முறித்தறவு செய்வதல்லாத) சாற்றாணை எதுவும், மக்களவை கலைக்கப்பட்டிருக்கும் காலத்தின்போது பிறப்பிக்கப்படுகிறது என்றாலும் அல்லது இந்தக் கூறில் சுட்டப்பட்ட ஒரு மாதக் காலஅளவின்போது மக்களவையின் கலைப்பு நிகழ்கிறது என்றாலும், அச்சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மாநிலங்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்து, ஆனால், அக்காலஅளவு கழிவுறுவதன் முன்பு அச்சாற்றாணை பொறுத்த தீர்மானம் எதுவும் மக்களவையால் நிறைவேற்றப்படவில்லை என்றாலும், மக்களவை, அதன் மறுஅமைப்புக்குப் பின்பு முதன்முறையாக அமரும் தேதியிலிருந்து முப்பது நாள் கழிவுறுவதற்கு முன்பு அச்சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மக்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்தாலன்றி, அச்சாற்றாணை, அத்தேதியிலிருந்து முப்பது நாள் காலஅளவு கழிவுற்றதும் செயற்பாடு அற்றுப்போகும்.

(5) மேற்கண்டவாறு ஒப்பேற்பளிக்கப்பட்ட சாற்றாணை ஒன்று முறித்தறவு செய்யப்பட்டாலன்றி, (4) ஆம் கூறின்படி அச்சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்கிற தீர்மானங்களில் இரண்டாம் தீர்மானம் நிறைவேற்றப்படும் தேதியிலிருந்து ஆறு மாதக் காலஅளவு கழிவுறுவதன்மேல், அது செயற்பாடு அற்றுப் போகும்:

**வரம்புரையாக** : அத்தகைய சாற்றாணை ஒன்று தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வருவதற்கு ஒப்பேற்பளிக்கும் ஒரு தீர்மானம், நாடாளுமன்ற ஈரவைகளாலும் நிறைவேற்றப்படுமாயின், அவ்வாறு நிறைவேற்றப்படுந்தோறும், அந்தச் சாற்றாணை முறித்தறவு செய்யப்பட்டிருந்தாலன்றி, இந்தக் கூறின்படி பிறவாறு அது செயற்பாடு அற்றுப்போயிருக்கும் தேதியிலிருந்து மேற்கொண்டும் ஓர் ஆறு மாதக் காலஅளவுக்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்:

**மேலும் வரம்புரையாக** : அத்தகைய ஆறு மாதக் காலஅளவின் போது மக்களவை கலைக்கப்பட்டு அத்தகைய சாற்றாணை தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வருவதற்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மாநிலங்களவையால் நிறைவேற்றப்பட்டு ஆனால் அச்சாற்றாணை தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வருவதற்கான தீர்மானம் எதுவும் மேற்சொன்ன காலஅளவின்போது மக்களவையால் நிறைவேற்றப்படாமலிருப்பின், மக்களவை, அதன் மறு அமைப்புக்கு பின்பு முதன் முறையாக அமரும் தேதியிலிருந்து முப்பது நாள் கழிவுறுவதற்கு முன்பு, அச்சாற்றாணை தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வருவதற்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மக்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்தாலன்றி, அச்சாற்றாணை அத்தேதியிலிருந்து முப்பது நாள் காலஅளவு கழிவுற்றதும் செயற்பாடு அற்றுப்போகும்.

(6). (4), (5) ஆகிய கூறுகளின் நோக்கங்களைப் பொறுத்தவரை, நாடாளுமன்ற ஈரவைகளில் எதனாலும், அந்த அவையின் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையும் அந்த அவையில் வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினருக்குக் குறையாத பெரும்பான்மையும் பெற்றிருந்தால் மட்டுமே அத்தீர்மானம் நிறைவேற்றப்படலாம்.

(7) Notwithstanding anything contained in the foregoing clauses, the President shall revoke a Proclamation issued under clause (1) or a Proclamation varying such Proclamation if the House of the People passes a resolution disapproving, or, as the case may be, disapproving the continuance in force of, such Proclamation.

(8) Where a notice in writing signed by not less than one-tenth of the total number of members of the House of the People has been given, of their intention to move a resolution for disapproving, or, as the case may be, for disapproving the continuance in force of, a Proclamation issued under clause (1) or a Proclamation varying such Proclamation,—

(a) to the Speaker, if the House is in session; or

(b) to the President, if the House is not in session,

a special sitting of the House shall be held within fourteen days from the date on which such notice is received by the Speaker, or, as the case may be, by the President, for the purpose of considering such resolution.]

[1][[2][(9)] The power conferred on the President by this article shall include the power to issue different Proclamations on different grounds, being war or external aggression or [3][armed rebellion] or imminent danger of war or external aggression or [3][armed rebellion], whether or not there is a Proclamation already issued by the President under clause (1) and such Proclamation is in operation.

[4]* * *]

**353. Effect of Proclamation of Emergency :**

While a Proclamation of Emergency is in operation, then—

(a) notwithstanding anything in this Constitution, the executive power of the Union shall extend to the giving of directions to any State as to the manner in which the executive power thereof is to be exercised;

---

1. Ins. by the Constitution (Thirty-eighth Amendment) Act, 1975, s. 5 (retrospectively).

2. Cl. (4) re-numbered as cl. (9) by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 37 (w.e.f. 20-6-1979).

3. Subs. by *ibid*, for "internal disturbances".

4. Cl. (5) omitted by *ibid*.

(7) மேலேகண்ட கூறுகளில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட ஒரு சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்க அல்லது, நேர்வுக்கேற்ப, அச்சாற்றாணை தொடர்ந்து செல்லாற்றலிலிருந்து வருவதற்கு ஒப்பேற்பளிக்க மறுக்கிற தீர்மானம் ஒன்றை மக்களவை நிறைவேற்றுமாயின், குடியரசுத்தலைவர், அத்தகைய சாற்றாணையை அல்லது அத்தகைய சாற்றாணையில் மாறுதல் செய்யும் சாற்றாணையை முறித்தறவு செய்தல் வேண்டும்.

(8). (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட ஒரு சாற்றாணைக்கு அல்லது அத்தகைய சாற்றாணையில் மாறுதல் செய்யும் ஒரு சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்க மறுப்பதற்கு அல்லது, நேர்வுக்கேற்ப, அது தொடர்ந்து செல்லாற்றலிலிருந்து வருவதற்கு ஒப்பேற்பளிக்க மறுப்பதற்கு ஒரு தீர்மானத்தைக் கொணர்வதற்கான தங்கள் கருத்தைத் தெரிவித்து, மக்களவை மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் பத்தில் ஒரு பகுதிக்குக் குறையாதவர்கள் கையொப்பமிட்ட எழுத்துவடிவிலான ஓர் அறிவிப்பு,—

(அ) அவையின் கூட்டத்தொடர் தொடர்நிலையிலிருந்தால், அவைத்தலைவருக்கு; அல்லது

(ஆ) அவையின் கூட்டத்தொடர் தொடர்நிலையில் இல்லாதிருந்தால், குடியரசுத்தலைவருக்கு

அளிக்கப்பட்டிருக்குமிடத்து, அவைத்தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, குடியரசுத்தலைவர் அத்தகைய அறிவிப்பைப் பெற்றுக்கொண்ட தேதியிலிருந்து பதினான்கு நாட்களுக்குள் அத்தகைய தீர்மானத்தை ஓர்வு செய்வதற்காக அவையின் தனி அமர்வு ஒன்று நடத்தப்படுதல் வேண்டும்.]

[1][[2][(9)] இந்த உறுப்பின்படி குடியரசுத்தலைவருக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தில், (1) ஆம் கூறின்படி குடியரசுத்தலைவரால் ஒரு சாற்றாணை ஏற்கனவே பிறப்பிக்கப்பட்டிருந்து, அத்தகைய சாற்றாணை செயற்பாட்டில் இருப்பினும் இல்லாவிடினும் போரோ அயல்நாட்டு ஆக்கிரமிப்போ [3][ஆயுதந்தாங்கியோரின் கிளர்ச்சியோ] ஏற்பட்டுள்ளது அல்லது போரோ அயல்நாட்டு ஆக்கிரமிப்போ [3][ஆயுதந்தாங்கியோரின் கிளர்ச்சியோ] உடனடியாக ஏற்படக்கூடிய ஆபத்து நிலை உள்ளது என்கிற வெவ்வேறு காரணங்களின் மீது வெவ்வேறான சாற்றாணைகள் பிறப்பிப்பதற்கான அதிகாரமும் அடங்கும்.

[4]* * *]

**353. நெருக்கடிநிலைச் சாற்றாணையின் விளைவு :**

நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டில் இருக்குங்கால்—

(அ) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், மாநிலம் ஒன்றின் ஆட்சி அதிகாரம் எம்முறையில் செலுத்தப்படவேண்டும் என்று பணிப்புரைகள் இடுவதற்கான அதிகாரமும் ஒன்றியத்து ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்,

1. அரசமைப்புச் (முப்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 5 ஆம் பிரிவினால் (முன்மேவுற) புகுத்தப்பட்டது.

2. (4) ஆம் கூறு, (9) ஆம் கூறாக அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 37 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மறுஎண்ணிடப்பட்டது.

3. "உள்நாட்டுக் குழப்பங்கள்" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டன.

4. (5) ஆம் கூறு, *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டது.

(b) the power of Parliament to make laws with respect to any matter shall include power to make laws conferring powers and imposing duties, or authorising the conferring of powers and the imposition of duties, upon the Union or officers and authorities of the Union as respects that matter, not withstanding that it is one which is not enumerated in the Union List:

[1][Provided that where a Proclamation of Emergency is in operation only in any part of the territory of India,—

(i) the executive power of the Union to give directions under clause (a), and

(ii) the power of Parliament to make laws under clause (b),

shall also extend to any State other than a State in which or in any part of which the Proclamation of Emergency is in operation if and in so far as the security of India or any part of the territory thereof is threatened by activities in or in relation to the part of the territory of India in which the Proclamation of Emergency is in operation.]

**354. Application of provisions relating to distribution of revenues while a Proclamation of Emergency is in operation :**

(1) The President may, while a Proclamation of Emergency is in operation, by order direct that all or any of the provisions of articles 268 to 279 shall for such period, not extending in any case beyond the expiration of the financial year in which such Proclamation ceases to operate, as may be specified in the order, have effect subject to such exceptions or modifications as he thinks fit.

(2) Every order made under clause (1) shall, as soon as may be after it is made, be laid before each House of Parliament.

**355. Duty of the Union to protect States against external aggression and internal disturbance :**

It shall be the duty of the Union to protect every State against external aggression and internal disturbance and to ensure that the Government of every State is carried on in accordance with the provisions of this Constitution.

---

1. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 49 (w.e.f. 3-1-1977).

(ஆ) எந்தப் பொருட்பாடு பொறுத்தும் சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரமானது, ஒன்றியத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள ஒன்றாக அந்தப் பொருட்பாடு இல்லாதிருப்பினுங்கூட ஒன்றியத்திற்கு அல்லது ஒன்றியத்தின் அலுவலர்களுக்கும் அதிகாரஅமைப்புகளுக்கும் அந்தப் பொருட்பாடு பொறுத்து அதிகாரங்களை வழங்குதல், கடமைகளை விதித்தல் ஆகியவற்றிற்கான சட்டங்களை அல்லது அவ்வாறு அதிகாரங்களை வழங்கவும் கடமைகளை விதிக்கவும் அதிகாரமளிப்பதற்கான சட்டங்களை இயற்றுவதற்கான அதிகாரத்தையும் உள்ளடக்கும்:

[1][வரம்புரையாக : நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று, இந்திய ஆட்சிநிலவரையின் ஒரு பகுதியில் மட்டுமே செயற்பாட்டில் இருக்குமிடத்து—

(i) (அ) கூறின்படி பணிப்புரைகள் இடுவதற்கு ஒன்றியத்திற்குள்ள ஆட்சி அதிகாரமும்,

(ii) (ஆ) கூறின்படி சட்டங்களியற்றவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரமும்,

நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டிலுள்ள இந்திய ஆட்சிநிலவரையின் அப்பகுதியில் நடைபெறும் அல்லது அதன் தொடர்பாக நடைபெறும் செயல்களால், இந்தியாவின் அல்லது அதன் ஆட்சிநிலவரைப் பகுதி எதனின் பாதுகாப்பிற்கும் ஆபத்து எழுமாயின், அவ்வாறு எழும் அளவிற்கு, நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டிலிருக்கிற மாநிலமாகவோ அதன் பகுதி எதுவுமாகவோ இல்லாத பிற மாநிலம் எதனையுங்கூட அளாவி நிற்கும்.]

**354. நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டில் இருக்குங்கால் வருவாய்களைப் பகிர்ந்தளித்தல் தொடர்பான வகையங்கள் பொருந்துதல் :**

(1) நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டில் இருக்குங்கால், குடியரசுத் தலைவர், ஆணையின்வழி, 268 முதல் 279 வரையுள்ள உறுப்புகளின் வகையங்கள் அனைத்தும் அல்லது அவற்றில் எதுவும், தாம் தக்கதெனக் கருதும் விதிவிலக்குகள் அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு எந்நேர்விலும், அந்தச் சாற்றாணை செயற்பாடு அற்றுப்போகும் நிதியாண்டு முடிவடையும் காலத்திற்கு மேற்படாமல், அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் காலஅளவிற்குச் செல்திறம் உடையன ஆகும் எனப் பணிக்கலாம்.

(2). (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்படும் ஆணை ஒவ்வொன்றும், அது பிறப்பிக்கப்பட்ட பின்பு, கூடுமான விரைவில், நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றிலும் முன்னிடப்படுதல் வேண்டும்.

**355. அயல்நாட்டு ஆக்கிரமிப்பிலிருந்தும் உள்நாட்டுக் குழப்பத்திலிருந்தும் மாநிலங்களைப் பாதுகாப்பதற்கு ஒன்றியத்திற்குள்ள கடமை :**

மாநிலம் ஒவ்வொன்றையும் அயல்நாட்டு ஆக்கிரமிப்பிலிருந்தும் உள்நாட்டுக் குழப்பத்திலிருந்தும் பாதுகாப்பதும், இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு இணங்க ஒவ்வொரு மாநில அரசையும் நடத்திச் செல்வதை உறுதிசெய்வதும் ஒன்றியத்தின் கடமை ஆகும்.

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 49 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**356. Provisions in case of failure of constitutional machinery in States :**

(1) If the President, on receipt of a report from the Governor [1]*** of a State or otherwise, is satisfied that a situation has arisen in which the Government of the State cannot be carried on in accordance with the provisions of this Constitution, the President may by Proclamation—

(a) assume to himself all or any of the functions of the Government of the State and all or any of the powers vested in or exercisable by the Governor [2]*** or any body or authority in the State other than the Legislature of the State;

(b) declare that the powers of the Legislature of the State shall be exercisable by or under the authority of Parliament;

(c) make such incidental and consequential provisions as appear to the President to be necessary or desirable for giving effect to the objects of the Proclamation, including provisions for suspending in whole or in part the operation of any provisions of this Constitution relating to any body or authority in the State:

Provided that nothing in this clause shall authorise the President to assume to himself any of the powers vested in or exercisable by a High Court, or to suspend in whole or in part the operation of any provision of this Constitution relating to High Courts.

(2) Any such Proclamation may be revoked or varied by a subsequent Proclamation.

(3) Every Proclamation under this article shall be laid before each House of Parliament and shall, except where it is a Proclamation revoking a previous Proclamation, cease to operate at the expiration of two months unless before the expiration of that period it has been approved by resolutions of both Houses of Parliament:

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. The words "or Rajpramukh, as the case may be" omitted by *ibid*.

**356.** மாநிலங்களில் அரசமைப்பின் இயங்குமுறை செயலற்றுப்போகும் நேர்வில், அதற்கான ஏற்பாடுகள் :

(1) குடியரசுத்தலைவர், ஒரு மாநில ஆளுநரிடமிருந்து [1]*** அறிக்கை ஒன்றைப் பெறுவதன் மேல் அல்லது பிறவாறு, இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு இணங்க மாநில அரசை நடத்திச் செல்ல இயலாத ஒரு நிலைமை எழுந்துள்ளதெனத் தெளிவுறக்காண்பாராயின், குடியரசுத்தலைவர் ஒரு சாற்றாணையின் வழி —

(அ) அந்த மாநில அரசின் செயற்பணிகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும், அந்த மாநில ஆளுநரிடம் [2]*** அல்லது அந்த மாநிலத்திலுள்ள அந்த மாநிலச் சட்டமன்றம் அல்லாத பிற குழுமம் அல்லது அதிகாரஅமைப்பு எதனிடமும் உற்றமைந்த அல்லது அவர்களால் செலுத்தப்படுவதாகும் அதிகாரங்கள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் தாமே மேற்கொள்ளலாம்;

(ஆ) அந்த மாநிலச் சட்டமன்றத்தின் அதிகாரங்கள், நாடாளுமன்றத்தின் அதிகாரத்தாலோ அதன் வழியாலோ செலுத்தப்படுவதாகும் என விளம்பலாம்;

(இ) அந்த மாநிலத்திலுள்ள குழுமம் அல்லது அதிகாரஅமைப்பு தொடர்பாக உள்ள இந்த அரசமைப்பின் வகையங்களில் எதன் செயற்பாட்டையும் முழுவதுமாகவோ பகுதியாகவோ தற்காலிகமாக நிறுத்திவைப்பதற்கான ஏற்பாடுகள் உள்ளடங்கலாக, இந்தச் சாற்றாணையின் நோக்கங்களைச் செயற்படுத்துவற்குத் தேவையென அல்லது உகந்தவையெனக் குடியரசுத்தலைவருக்குத் தோன்றும் சார்வுறு மற்றும் விளைவுறு ஏற்பாடுகளைச் செய்யலாம்:

**வரம்புரையாக :** இந்தக் கூறிலுள்ள எதுவும், ஓர் உயர் நீதிமன்றத்திடம் உற்றமைந்துள்ள அல்லது அதனால் செலுத்தப்படுவதாகும் அதிகாரங்களில் எதனையும் தாமே மேற்கொள்ளவோ, உயர் நீதிமன்றங்கள் தொடர்பான இந்த அரசமைப்பின் வகையம் எதனின் செயற்பாட்டையும் முழுவதுமாக அல்லது பகுதியாக, தற்காலிகமாக நிறுத்திவைக்கவோ குடியரசுத்தலைவருக்கு அதிகாரமளிப்பதில்லை .

(2) அத்தகைய சாற்றாணை எதுவும், பிந்திய சாற்றாணை ஒன்றினால் முறித்தறவோ மாறுதலோ செய்யப்படலாம்.

(3) இந்த உறுப்பின்படி பிறப்பிக்கப்படும் சாற்றாணை ஒவ்வொன்றும், நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றிலும் முன்னிடப்படுதல் வேண்டும்; மேலும், முந்திய சாற்றாணை ஒன்றை முறித்தறவு செய்வதல்லாத சாற்றாணை எதுவும், இரண்டு மாதம் கழிவுறுவதற்கு முன்பே நாடாளுமன்ற ஈரவைகளும் தீர்மானங்கள் வாயிலாக அதற்கு ஒப்பேற்பு அளித்திருந்தாலன்றி, அக்காலஅளவு கழிவுற்றதும் செயற்பாடு அற்றுப்போகும்:

---

1. ''அல்லது இராஜபிரமுகர்'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.
2. ''அல்லது இராஜபிரமுகர் நேர்வுக்கேற்ப'', என்ற சொற்கள் *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

Provided that if any such Proclamation (not being a Proclamation revoking a previous Proclamation) is issued at a time when the House of the People is dissolved or the dissolution of the House of the People takes place during the period of two months referred to in this clause, and if a resolution approving the Proclamation has been passed by the Council of States, but no resolution with respect to such Proclamation has been passed by the House of the People before the expiration of that period, the Proclamation shall cease to operate at the expiration of thirty days from the date on which the House of the People first sits after its reconstitution unless before the expiration of the said period of thirty days a resolution approving the Proclamation has been also passed by the House of the People.

(4) A Proclamation so approved shall, unless revoked, cease to operate on the expiration of a period of [1][six months from the date of issue of the Proclamation:]

Provided that if and so often as a resolution approving the continuance in force of such a Proclamation is passed by both Houses of Parliament, the Proclamation shall, unless revoked, continue in force for a further period of [2][six months] from the date on which under this clause it would otherwise have ceased to operate, but no such Proclamation shall in any case remain in force for more than three years:

Provided further that if the dissolution of the House of the People takes place during any such period of [2][six months] and a resolution approving the continuance in force of such Proclamation has been passed by the Council of States, but no resolution with respect to the continuance in force of such Proclamation has been passed by the House of the People during the said period, the Proclamation shall cease to operate at the expiration of thirty days from the date on which the House of the People first sits after its reconstitution unless before the expiration of the said period of thirty days a resolution approving the continuance in force of the Proclamation has been also passed by the House of the People:

[3][Provided also that in the case of the Proclamation issued under clause (1) on the 11th day of May, 1987 with respect to the State of Punjab, the reference in the first proviso to this clause to "three years" shall be construed as a reference to [4][five years.]]

---

1. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 38, for "one year from the date of the passing of the second of the resolutions approving the Proclamation under clause (3)" (w.e.f. 20-6-1979). The words "one year" were subs. for the original words "six months" by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 50 (w.e.f. 3-1-1977).

2. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 38 for "one year" (w.e.f. 20-6-1979). The words "one year" were subs. for the original words "six months" by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 50 (w.e.f. 3-1-1977).

3. Ins. by the Constitution (Sixty-fourth Amendment) Act, 1990, s. 2 (w.e.f. 16-4-1990).

4. Subs. by the Constitution (Sixty-seventh Amendment) Act, 1990, s. 2 (w.e.f. 4-10-1990) and the Constitution (Sixty-eighth Amendment) Act, 1991, s. 2 to read as above (w.e.f. 12-3-1991).

**வரம்புரையாக :** (முந்திய சாற்றாணையை முறித்தறவு செய்வதல்லாத) சாற்றாணை எதுவும் மக்களவை கலைக்கப்பட்டிருக்கும் காலத்தின்போது பிறப்பிக்கப்படுகிறது என்றாலும் அல்லது இந்தக் கூறில் சுட்டப்பட்ட இரண்டு மாதக் காலஅளவின் போது மக்களவையின் கலைப்பு நிகழ்கிறது என்றாலும், அந்தச் சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மாநிலங்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்து, ஆனால் அக்காலஅளவு கழிவுறுவதன் முன்பு, அச்சாற்றாணை பொறுத்த தீர்மானம் எதுவும் மக்களவையால் நிறைவேற்றப்படவில்லை என்றாலும், மக்களவை, அதன் மறுஅமைப்புக்குப் பின்பு, முதன்முறையாக அமரும் தேதியிலிருந்து முப்பது நாள் கழிவுறுவதற்கு முன்பு, அச்சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மக்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்தாலன்றி, அச்சாற்றாணை அத்தேதியிலிருந்து முப்பது நாள் காலஅளவு கழிவுற்றதும் செயற்பாடு அற்றுப்போகும்.

(4) மேற்கண்டவாறு ஒப்பேற்பளிக்கப்பட்ட சாற்றாணை ஒன்று முறித்தறவு செய்யப்பட்டிருந்தாலன்றி, [1][அச்சாற்றாணை பிறப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து ஆறு மாதக்] காலஅளவு கழிவுற்றதும், அது செயற்பாடு அற்றுப்போகும்:

**வரம்புரையாக :** அத்தகைய சாற்றாணை ஒன்று தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வருவதற்கு ஒப்பேற்பளிக்கும் ஒரு தீர்மானம் நாடாளுமன்ற ஈரவைகளாலும் நிறைவேற்றப்படுமாயின், அவ்வாறு நிறைவேற்றப்படுந்தோறும் அந்தச் சாற்றாணை முறித்தறவு செய்யப்பட்டாலன்றி, இந்தக் கூறின்படி பிறவாறு அது செயற்பாடு அற்றுப்போயிருக்கும் தேதியிலிருந்து மேற்கொண்டும் ஓர் [2][ஆறு மாதக்] காலஅளவுக்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்; ஆனால், அத்தகைய சாற்றாணை எதுவும், எந்நேர்விலும், மூன்றாண்டுகளுக்கு மேல் செல்லாற்றலில் இருந்துவருதல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக :** அத்தகைய [2][ஆறு மாதக்] காலஅளவின்போது மக்களவை கலைக்கப்பட்டு அத்தகைய சாற்றாணை தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவருவதற்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மாநிலங்களவையால் நிறைவேற்றப்பட்டு ஆனால், அச்சாற்றாணை தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வருவதற்கான தீர்மானம் எதுவும் மேற்சொன்ன காலஅளவின்போது மக்களவையால் நிறைவேற்றப்படாமலிருப்பின், மக்களவை, அதன் மறுஅமைப்புக்குப் பின்பு முதன்முறையாக அமரும் தேதியிலிருந்து முப்பதுநாள் கழிவுறுவதற்கு முன்பு அச்சாற்றாணை தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வருவதற்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மக்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்தாலன்றி, அச்சாற்றாணை, அத்தேதியிலிருந்து முப்பதுநாள் காலஅளவு கழிவுற்றதும் செயற்பாடு அற்றுப்போகும்:

[3][**பின்னும் வரம்புரையாக :** பஞ்சாப் மாநிலத்தைப் பொறுத்து, 1987 மே 11 ஆம் நாளன்று (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட சாற்றாணையைப் பொறுத்தவரை, இந்தக் கூறின் முதலாம் வரம்புரையில் "மூன்று ஆண்டுகள்" என்று சுட்டப்படுவது, [4][ஐந்து ஆண்டுகள்] என்று சுட்டப்படுவதாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும்.]

---

1. "(3) ஆம் கூறின்படி அச்சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்கிற தீர்மானங்களில் இரண்டாம் தீர்மானம் நிறைவேற்றப்படும் தேதியிலிருந்து ஓர் ஆண்டு" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 38 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. "ஆறு மாதங்கள்" என்று முதன்முதலில் இருந்த "ஓர் ஆண்டு" என்ற சொற்கள், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 50 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

2. "ஓர் ஆண்டு" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 38 ஆம் பிரிவினால் (20–06–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. "ஆறு மாதங்கள்" என்று முதன்முதலில் இருந்த "ஓர் ஆண்டு" என்ற சொற்கள், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 50 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

3. அரசமைப்புச் (அறுபத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1990 இன் 2 ஆம் பிரிவினால் (16–4–1990 முதல் செல்திறம் பெறுமாறு), புகுத்தப்பட்டது.

4. அரசமைப்புச் (அறுபத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 1990 இன் 2 ஆம் பிரிவினால் (4–10–1990 முதல் செல்திறம் பெறுமாறு) மற்றும் அரசமைப்புச் (அறுபத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1991 இன் 2 ஆம் பிரிவினால் (12–3–1991 முதல் செல்திறம் பெறுமாறு), மேலே உள்ளவாறு வாசிக்குமாறு மாற்றாக அமைக்கப்பட்டது.

[1][(5) Notwithstanding anything contained in clause (4), a resolution with respect to the continuance in force of a Proclamation approved under clause (3) for any period beyond the expiration of one year from the date of issue of such Proclamation shall not be passed by either House of Parliament unless—

(a) a Proclamation of Emergency is in operation, in the whole of India or, as the case may be, in the whole or any part of the State, at the time of the passing of such resolution, and

(b) the Election Commission certifies that the continuance in force of the Proclamation approved under clause (3) during the period specified in such resolution is necessary on account of difficulties in holding general elections to the Legislative Assembly of the State concerned:]

[2][Provided that nothing in this clause shall apply to the Proclamation issued under clause (1) on the 11$^{th}$ day of May, 1987 with respect to the State of Punjab.]

**357. Exercise of legislative powers under Proclamation issued under article 356 :**

(1) Where by a Proclamation issued under clause (1) of article 356, it has been declared that the powers of the Legislature of the State shall be exercisable by or under the authority of Parliament, it shall be competent—

(a) for Parliament to confer on the President the power of the Legislature of the State to make laws, and to authorise the President to delegate, subject to such conditions as he may think fit to impose, the power so conferred to any other authority to be specified by him in that behalf;

(b) for Parliament, or for the President or other authority in whom such power to make laws is vested under sub-clause (a), to make laws conferring powers and imposing duties, or authorising the conferring of powers and the imposition of duties, upon the Union or officers and authorities thereof;

---

1. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 38, for cl. (5) (w.e.f. 20-6-1979). Cl. (5) was ins. by the Constitution (Thirty-eighth Amendment) Act, 1975, s. 6 (retrospectively).

2. Omitted by the Constitution (Sixty-third Amendment) Act, 1989, s. 2 (w.e.f. 6-1-1990) and ins. by the Constitution (Sixty-fourth Amendment) Act, 1990, s. 2 (w.e.f. 16-4-1990).

[1][(5). (4) ஆம் கூறில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், (3) ஆம் கூறின்படி ஒப்பேற்பளிக்கப்பட்ட ஒரு சாற்றாணையை, அச்சாற்றாணை பிறப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து ஓராண்டு கழிவுற்ற பின்னரும் ஒரு காலஅளவுக்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவருமாறு செய்வதற்கான ஒரு தீர்மானம்—

(அ) அத்தகைய தீர்மானம் நிறைவேற்றப்படும்போது, இந்தியா முழுவதிலும் அல்லது, நேர்வுக்கேற்ப, மாநிலம் முழுவதிலும் அல்லது அதன்பகுதி எதிலும், ஒரு நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டில் இருந்தாலன்றியும்,

(ஆ) தொடர்புடைய மாநிலச் சட்டமன்றப் பேரவைக்குப் பொதுத் தேர்தல்கள் நடத்துவதில் எழும் இடர்ப்பாடுகள் காரணமாக, (3) ஆம் கூறின்படி ஒப்பேற்பளிக்கப்பட்ட சாற்றாணை அத்தகைய தீர்மானத்தில் குறித்துரைக்கப்படும் காலஅளவுக்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருத்தல் தேவையாகிறது எனத் தேர்தல் ஆணையம் உறுதிச்சான்றளித்தாலன்றியும்

நாடாளுமன்ற ஈரவைகளில் எதனாலும் நிறைவேற்றப்படுதல் ஆகாது:]

[2][**வரம்புரையாக** : இந்தக் கூறிலுள்ள எதுவும், பஞ்சாப் மாநிலத்தைப் பொறுத்து, 1987 மே 11 ஆம் நாளன்று, (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட சாற்றாணைக்குப் பொருந்துதல் ஆகாது.]

**357. 356 ஆம் உறுப்பின்படி பிறப்பிக்கப்பட்ட சாற்றாணையின் வழி சட்டமியற்றும் அதிகாரங்களைச் செலுத்துதல் :**

(1). 356 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட சாற்றாணையின் வழி, ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் அதிகாரங்கள், நாடாளுமன்றத்தின் அதிகாரத்தாலோ அதன்வழியாலோ செலுத்தப்படுவதாகும் என்று விளம்புகை செய்யப்படுகிறவிடத்து —

(அ) சட்டங்கள் இயற்றுவதற்கான அந்த மாநிலச் சட்டமன்றத்தின் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவருக்கு வழங்கவும், அவ்வாறு அவருக்கு வழங்கப்பட்ட அதிகாரத்தைத் தாம் பொருத்தமெனக் கருதி விதிக்கும் வரைக்கட்டுகளுக்கு உட்பட்டு, அதன்பொருட்டுத் தாம் குறித்துரைக்கும் பிற அதிகாரஅமைப்பு எதற்கும் ஒப்படைவு செய்வதற்குக் குடியரசுத்தலைவருக்கு அதிகாரமளிக்கவும் நாடாளுமன்றத்திற்குத் தகுதிறம் உண்டு;

(ஆ) ஒன்றியத்திற்கு அல்லது அதன் அலுவலர்களுக்கும் அதிகாரஅமைப்புக்கும் அதிகாரங்களை வழங்குதல், கடமைகளை விதித்தல் ஆகியவற்றிற்கான சட்டங்களையும், அதிகாரங்களை வழங்கவும் கடமைகளை விதிக்கவும் அதிகாரமளிப்பதற்கான சட்டங்களையும் இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்கும் அல்லது (அ) உட்கூறின்படி சட்டங்கள் இயற்றுவதற்கான அத்தகைய அதிகாரம் உற்றமைந்திருக்கிற குடியரசுத்தலைவருக்கும் பிற அதிகாரஅமைப்பிற்கும் தகுதிறம் உண்டு ;

1. (5) ஆம் கூறுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 38 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. (5) ஆம் கூறு, அரசமைப்புச் (முப்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 6 ஆம் பிரிவினால் (முன்மேவுறுமாறு) புகுத்தப்பட்டது.

2. அரசமைப்புச் (அறுபத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1989 இன் 2 ஆம் பிரிவினால் (6–1–1990 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது மற்றும் அரசமைப்புச் (அறுபத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1990 இன் 2 ஆம் பிரிவினால் (16–4–1990 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(c) for the President to authorise when the House of the People is not in session expenditure from the Consolidated Fund of the State pending the sanction of such expenditure by Parliament.

[1][(2) Any law made in exercise of the power of the Legislature of the State by Parliament or the President or other authority referred to in sub-clause (a) of clause (1) which Parliament or the President or such other authority would not, but for the issue of a Proclamation under article 356, have been competent to make shall, after the Proclamation has ceased to operate, continue in force until altered or repealed or amended by a competent Legislature or other authority.]

**358. Suspension of provisions of article 19 during emergencies :**

[2][(1)] [3][While a Proclamation of Emergency declaring that the security of India or any part of the territory thereof is threatened by war or by external aggression is in operation], nothing in article 19 shall restrict the power of the State as defined in Part III to make any law or to take any executive action which the State would but for the provisions contained in that Part be competent to make or to take, but any law so made shall, to the extent of the incompetency, cease to have effect as soon as the Proclamation ceases to operate, except as respects things done or omitted to be done before the law so ceases to have effect:

[4][Provided that [5][where such Proclamation of Emergency] is in operation only in any part of the territory of India, any such law may be made, or any such executive action may be taken, under this article in relation to or in any State or Union territory in which or in any part of which the Proclamation of Emergency is not in operation, if and in so far as the security of India or any part of the territory thereof is threatened by activities in or in relation to the part of the territory of India in which the Proclamation of Emergency is in operation.]

---

1. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 51, for cl. (2) (w.e.f. 3-1-1977).
2. Art. 358 re-numbered as cl. (1) thereof by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 39 (w.e.f. 20-6-1979).
3. Subs. by *ibid.*, for "while a Proclamation of Emergency is in operation".
4. Ins.by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 52 (w.e.f. 3-1-1977).
5. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 39, for "where a Proclamation of Emergency" (w.e.f. 20-6-1979).

(இ) மக்களவையின் கூட்டத்தொடர், தொடர்நிலையில் இல்லாதிருக்கும்போது, நாடாளுமன்றம், மாநிலத் திரள்நிதியத்திலிருந்து செய்யப்படும் செலவினத்திற்கு ஒப்பளிப்பு வழங்கும் வரையில், அச்செலவினம் பொறுத்து அதிகாரமளிப்பதற்குக் குடியரசுத்தலைவருக்குத் தகுதிறம் உண்டு.

[1][(2) நாடாளுமன்றத்திற்கு அல்லது குடியரசுத்தலைவருக்கு அல்லது (1) ஆம் கூறின் (அ) உட்கூறில் சுட்டப்பட்ட பிற அதிகாரஅமைப்பிற்கு 356 ஆம் உறுப்பின்படி பிறப்பிக்கப்பட்ட சாற்றாணையின்வழி மாநிலச் சட்டமன்றத்தின் சட்டமியற்று அதிகாரம் அளிக்கப்பட்டு, அதன்படி நாடாளுமன்றம் அல்லது குடியரசுத்தலைவர் அல்லது பிற அதிகாரஅமைப்பு எதுவும் சட்டம் இயற்றியிருப்பின், அச்சட்டமானது அச்சாற்றாணை செயற்பாட்டிலிருப்பது அற்றுப்போனதன் பின்பும் ஒரு தகுதிறமுள்ள சட்டமன்றத்தினால் அல்லது பிற அதிகாரஅமைப்பினால் மாற்றமோ நீக்கறவோ திருத்தமோ செய்யப்படும்வரையில், தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்.]

## 358. நெருக்கடிநிலைகளின் போது 19 ஆம் உறுப்பின் வகையங்களைத் தற்காலிகமாக நிறுத்திவைத்தல் :

[2][(1)] [3][போர் அல்லது அயல்நாட்டு ஆக்கிரமிப்பு காரணமாக இந்தியாவின் அல்லது அதன் ஆட்சிநிலவரைப்பகுதி எதனின் பாதுகாப்பிற்கும் ஆபத்து விளைந்துள்ளது என விளம்புகிற நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டிலிருக்குங்கால்], 19 ஆம் உறுப்பில் உள்ள எதுவும், III ஆம் பகுதியில் பொருள்வரையறை செய்யப்பட்டவாறான அரசு, அந்தப்பகுதியில் அடங்கியுள்ள வகையங்கள் இல்லாதிருந்தால், சட்டங்களை இயற்றுவதற்கும் ஆட்சித் துறை நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கும் எவ்வாறு தகுதிறம் கொண்டிருக்குமோ அவ்வாறே சட்டங்களை இயற்றுவதற்கும் ஆட்சித் துறை நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கும் அரசுக்குள்ள அதிகாரத்தை வரையறுப்பதில்லை; ஆனால், அவ்வாறு இயற்றப்பட்ட சட்டம் எதுவும், அந்தச் சாற்றாணையின் செயற்பாடு அற்றுப்போன உடனேயே அரசின் தகுதிறமின்மையின் அளவுக்குச் செல்திறம் அற்றுப்போகும்; எனினும், அவ்வாறு அச்சட்டம் செல்திறம் அற்றுப் போவதற்கு முன்பு செய்யப்பட்ட அல்லது செய்யாது விடப்பட்ட எதுவும் பாதிக்கப்படுவதில்லை:

[4][**வரம்புரையாக :** அத்தகைய நெருக்கடிநிலைச் சாற்றாணை இந்திய ஆட்சிநிலவரையின் ஒரு பகுதியில் மட்டுமே செயற்பாட்டில் இருக்குமிடத்து, அந்த [5][நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டிலுள்ள] இந்திய ஆட்சிநிலவரையின் அப்பகுதியில் நடைபெறும் அல்லது அதன் தொடர்பாக நடைபெறும் செயல்களால், இந்தியாவின் அல்லது அதன் ஆட்சிநிலவரைப்பகுதி எதனின் பாதுகாப்பிற்கும் ஆபத்து எழுமாயின், அவ்வாறு எழும் அளவிற்கு, அந்த நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டில் இல்லாதிருக்கிற மாநிலம் அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒன்றில் அல்லது அதன் பகுதி எதிலும் அல்லது அதன் தொடர்பாக, இந்த உறுப்பின்படி அத்தகைய சட்டம் எதுவும் இயற்றப்படலாம்; அல்லது அத்தகைய ஆட்சித் துறை நடவடிக்கை எதுவும் மேற்கொள்ளப்படலாம்.]

---

1. (2) ஆம் கூறுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 51 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. 358 ஆம் உறுப்பு, அதன் (1) ஆம் கூறாக, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 39 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மறுஎண்ணிடப்பட்டது.

3. "நெருக்கடிநிலைச் சாற்றாணை செயல்பாட்டில் இருக்கும்பொழுது" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.

4. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 52 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

5. "நெருக்கடிநிலைச் சாற்றாணை செயல்பாட்டில் இருக்குமிடத்து" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 39 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

[1][(2) Nothing in clause (1) shall apply—

(a) to any law which does not contain a recital to the effect that such law is in relation to the Proclamation of Emergency in operation when it is made; or

(b) to any executive action taken otherwise than under a law containing such a recital.]

**359. Suspension of the enforcement of the rights conferred by Part III during emergencies :**

(1) Where a Proclamation of Emergency is in operation, the President may by order declare that the right to move any court for the enforcement of such of [2][the rights conferred by Part III (except articles 20 and 21)] as may be mentioned in the order and all proceedings pending in any court for the enforcement of the rights so mentioned shall remain suspended for the period during which the Proclamation is in force or for such shorter period as may be specified in the order.

[3][(1A) While an order made under clause (1) mentioning any of the rights conferred by Part III (except articles 20 and 21) is in operation, nothing in that Part conferring those rights shall restrict the power of the State as defined in the said Part to make any law or to take any executive action which the State would but for the provisions contained in that Part be competent to make or to take, but any law so made shall, to the extent of the incompetency, cease to have effect as soon as the order aforesaid ceases to operate, except as respects things done or omitted to be done before the law so ceases to have effect:]

[4][Provided that where a Proclamation of Emergency is in operation only in any part of the territory of India, any such law may be made, or any such executive action may be taken, under this article in relation to or in any State or Union territory in which or in any part of which the Proclamation of Emergency is not in operation, if and in so far as the security of India or any part of the territory thereof is threatened by activities in or in relation to the part of the territory of India in which the Proclamation of Emergency is in operation.]

---

1. Ins. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978.
2. Subs. by *ibid.*, s. 40, for "the rights conferred by Part III" (w.e.f. 20-6-1979).
3. Ins. by the Constitution (Thirty-eighth Amendment) Act, 1975, s. 7 (retrospectively).
4. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 53 (w.e.f. 3-1-1977).

[1][(2). (1) ஆம் கூறில் உள்ள எதுவும்—

(அ) சட்டம் ஒன்று இயற்றப்படும்போது செயற்பாட்டிலிருக்கும் நெருக்கடிநிலைச் சாற்றாணைக்கு அச்சட்டம் தொடர்புடையது என்ற ஒரு வாசகத்தினைக் கொண்டிராத அத்தகைய சட்டம் எதற்கும்; அல்லது

(ஆ) அத்தகைய வாசகத்தினைக் கொண்டிருக்கும் ஒரு சட்டத்தின்படி அல்லாமல் பிறவாறு மேற்கொள்ளப்பட்ட ஆட்சித் துறை நடவடிக்கை

எதற்கும் பொருந்துவதில்லை.]

**359. நெருக்கடிநிலைகளின் போது III ஆம் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகள் செயலுறுத்தப்படுவதைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்தல் :**

(1) நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டிலிருக்குமிடத்து, குடியரசுத்தலைவர், ஆணையின்வழி, [2][(20, 21 ஆகிய உறுப்புகளைத் தவிர்த்து) III ஆம் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளில்], அந்த ஆணையில் குறிப்பிடப்படும் உரிமைகளைச் செயலுறுத்துவதற்கென நீதிமன்றம் எதிலும் நடவடிக்கை தொடர்வதற்குள்ள உரிமையும், அவ்வாறு குறிப்பிடப்பட்ட உரிமைகளைச் செயலுறுத்துவதற்கென நீதிமன்றம் எதிலும் முடிவுறாநிலையிலுள்ள நடவடிக்கைகள் அனைத்தும், அச்சாற்றாணை செல்லாற்றலிலுள்ள காலஅளவுக்கு அல்லது அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் குறைந்த காலஅளவுக்குத் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் என விளம்பலாம்.

[3][(1(அ)). (20, 21 ஆகிய உறுப்புகளைத் தவிர்த்து) III ஆம் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளில் எதனையும் குறிப்பிட்டு (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்படும் ஓர் ஆணை செயற்பாட்டிலிருக்குங்கால், அந்த உரிமைகளை வழங்குகிற அப்பகுதியிலுள்ள எதுவும், மேற்சொன்ன III ஆம் பகுதியில் பொருள்வரையறை செய்யப்பட்டவாறான அரசு, அப்பகுதியில் அடங்கியுள்ள வகையங்கள் இல்லாதிருந்தால், சட்டங்களை இயற்றுவதற்கும் ஆட்சித் துறை நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கும் எவ்வாறு தகுதிறம் கொண்டிருக்குமோ அவ்வாறே சட்டங்களை இயற்றுவதற்கும் ஆட்சித் துறை நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதற்கும், அந்த அரசிற்குள்ள அதிகாரத்தை வரையறுப்பதில்லை; ஆனால், அவ்வாறு இயற்றப்பட்ட சட்டம் எதுவும், மேற்சொன்ன ஆணை செயற்படுவது அற்றுப்போனவுடனேயே, அரசின் தகுதிறமின்மையின் அளவுக்கு, செல்திறம் அற்றுப்போகும், எனினும் அவ்வாறு அச்சட்டம் செல்திறம் அற்றுப் போவதற்கு முன்பு செய்யப்பட்ட அல்லது செய்யாது விடப்பட்ட எதுவும் பாதிக்கப்படுவதில்லை : ]

[4][**வரம்புரையாக** : நெருக்கடிநிலைச் சாற்றாணை இந்திய ஆட்சிநிலவரையின் ஒரு பகுதியில் மட்டுமே செயற்பாட்டில் இருக்குமிடத்து, அந்த நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டிலுள்ள இந்திய ஆட்சிநிலவரையின் அப்பகுதியில் நடைபெறும் அல்லது அதன் தொடர்பாக நடைபெறும் செயல்களால், இந்தியாவின் அல்லது அதன் ஆட்சிநிலவரைப் பகுதி எதனின் பாதுகாப்பிற்கும் ஆபத்து எழுமாயின், அவ்வாறு எழும் அளவிற்கு, அந்த நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டில் இல்லாதிருக்கிற மாநிலம் அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒன்றில் அல்லது அதன் பகுதி எதிலும் அல்லது அதன் தொடர்பாக, இந்த உறுப்பின்படி அத்தகைய சட்டம் எதுவும் இயற்றப்படலாம்; அல்லது அத்தகைய ஆட்சித் துறை நடவடிக்கை எதுவும் மேற்கொள்ளப்படலாம்.]

---

1. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 ஆல் புகுத்தப்பட்டது.
2. ''III ஆம் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளில்'' என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தின்* 40 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
3. அரசமைப்புச் (முப்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 7 ஆம் பிரிவினால் (முன்மேவுறுமாறு) புகுத்தப்பட்டது.
4. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 53 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

[1][(1B) Nothing in clause (1A) shall apply—

(a) to any law which does not contain a recital to the effect that such law is in relation to the Proclamation of Emergency in operation when it is made; or

(b) to any executive action taken otherwise than under a law containing such a recital.]

(2) An order made as aforesaid may extend to the whole or any part of the territory of India:

[2][Provided that where a Proclamation of Emergency is in operation only in a part of the territory of India, any such order shall not extend to any other part of the territory of India unless the President, being satisfied that the security of India or any part of the territory thereof is threatened by activities in or in relation to the part of the territory of India in which the Proclamation of Emergency is in operation, considers such extension to be necessary.]

(3) Every order made under clause (1) shall, as soon as may be after it is made, be laid before each House of Parliament.

[3]**359A**. [*Application of this Part to the State of Punjab.*].–*Omitted by the Constitution (Sixty-third Amendment) Act, 1989, s. 3 (w.e.f. 6-1-1990).*

**360. Provisions as to financial emergency :**

(1) If the President is satisfied that a situation has arisen whereby the financial stability or credit of India or of any part of the territory thereof is threatened, he may by a Proclamation make a declaration to that effect.

[4][(2) A Proclamation issued under clause (1)—

(a) may be revoked or varied by a subsequent Proclamation;

(b) shall be laid before each House of Parliament;

(c) shall cease to operate at the expiration of two months, unless before the expiration of that period it has been approved by resolutions of both Houses of Parliament:

---

1. Ins. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 40 (w.e.f. 20-6-1979).
2. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 53 (w.e.f. 3-1-1977).
3. Ins.by the Constitution (Fifty-ninth Amendment) Act, 1988, s. 3 (w.e.f. 30-3-1988). It shall cease to operate on the expiry of a period of two years from the commencement of this Act, i.e. 30th day of March, 1988.
4. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 41, for cl. (2) (w.e.f. 20-6-1979).

[1][(1 ஆ). (1 அ) கூறில் உள்ள எதுவும்—

(அ) ஒரு சட்டம் இயற்றப்படும்போது செயற்பாட்டிலிருக்கும் நெருக்கடிநிலைச் சாற்றாணைக்கு அச்சட்டம் தொடர்புடையது என்ற ஒரு வாசகத்தினைக் கொண்டிராத அத்தகைய சட்டம் எதற்கும்; அல்லது

(ஆ) அத்தகைய வாசகத்தினைக் கொண்டிருக்கும் ஒரு சட்டத்தின்படி அல்லாமல் பிறவாறு மேற்கொள்ளப்பட்ட ஆட்சித் துறை நடவடிக்கை எதற்கும்

பொருந்துவதில்லை.]

(2) மேற்சொன்னவாறு பிறப்பிக்கப்பட்ட ஓர் ஆணை, இந்திய ஆட்சிநிலவரை முழுவதையுமோ அதன் பகுதி எதனையுமோ அளாவி நிற்கலாம்:

[2][**வரம்புரையாக** : நெருக்கடிநிலைச் சாற்றாணை இந்திய ஆட்சிநிலவரையின் ஒரு பகுதியில் மட்டுமே செயற்பாட்டிலிருக்குமிடத்து, அந்த நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டிலுள்ள இந்திய ஆட்சிநிலவரையின் அப்பகுதியில் நடைபெறும் அல்லது அதன் தொடர்பாக நடைபெறும் செயல்களால் இந்தியாவின் அல்லது அதன் ஆட்சிநிலவரைப் பகுதி எதனின் பாதுகாப்பிற்கும் ஆபத்து எழுந்துள்ளதெனக் குடியரசுத்தலைவர் தெளிவுறக்கண்டு, அத்தகைய ஆணை எதனையும் இந்திய ஆட்சிநிலவரையின் பிற பகுதி எதற்கும் அளாவச் செய்வது அவசியமெனக் கருதினாலன்றி, அந்த ஆணை அத்தகைய பிற பகுதி எதனையும் அளாவி நிற்காது.]

(3). (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்படும் ஆணை ஒவ்வொன்றும் அது பிறப்பிக்கப்பட்ட பின்பு, கூடுமான விரைவில், நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றிலும் முன்னிடப்படுதல் வேண்டும்.

[3]**359 (அ).** [*பஞ்சாப் மாநிலத்திற்கான இந்தப் பகுதியின் பொருந்துதல்*].*—அரசமைப்புச் (அறுபத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1989 இன் 3 ஆம் பிரிவினால் (6–1–1990 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

**360. நிதிநிலை நெருக்கடி பற்றிய வகையங்கள் :**

(1) இந்தியாவின் அல்லது அதன் ஆட்சிநிலவரைப் பகுதி எதனின் நிதி பொறுத்த நிலைத்திறத்திற்கு அல்லது நிதிமதிப்பு நிலைக்கு ஆபத்து விளைவிக்கும் நிலை எழுந்துள்ளது எனக் குடியரசுத்தலைவர் தெளிவுறக்காண்பாராயின், அவர், ஒரு சாற்றாணையின் வழி, அத்தகைய நிலை எழுந்துள்ளதென விளம்பலாம்.

[4][(2). (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்படும் சாற்றாணை எதுவும்—

(அ) பிந்திய சாற்றாணை ஒன்றினால் முறித்தறவோ மாறுதலோ செய்யப்படலாம்;

(ஆ) நாடாளுமன்ற ஈரவைகளின் முன்பும் வைக்கப்படுதல் வேண்டும்;

(இ) இரண்டு மாதக் காலஅளவு கழிவுறுவதற்கு முன்பே, நாடாளுமன்ற ஈரவைகளும் தீர்மானங்கள் வாயிலாக ஒப்பேற்பு அளித்திருந்தாலன்றி, அக்காலஅளவு கழிவுற்றதும் செயற்பாடு அற்றுப் போகும்:

---

1. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 40 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 53 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. அரசமைப்புச் (ஐம்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1988 இன் 3 ஆம் பிரிவினால் (30–3–1988 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது. இது, இந்தச் சட்டத்தின் தொடக்கநிலையிலிருந்து இரண்டு ஆண்டுக் காலஅளவு கழிவுற்றபோது செயற்பாடு அற்றுப்போகும், அதாவது 1988, மார்ச் 30 ஆம் நாள்.
4. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 41 ஆம் பிரிவு (2) ஆம் கூறுக்கு (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

Provided that if any such Proclamation is issued at a time when the House of the People has been dissolved or the dissolution of the House of the People takes place during the period of two months referred to in sub-clause (c), and if a resolution approving the Proclamation has been passed by the Council of States, but no resolution with respect to such Proclamation has been passed by the House of the People before the expiration of that period, the Proclamation shall cease to operate at the expiration of thirty days from the date on which the House of the People first sits after its reconstitution unless before the expiration of the said period of thirty days a resolution approving the Proclamation has been also passed by the House of the People.]

(3) During the period any such Proclamation as is mentioned in clause (1) is in operation, the executive authority of the Union shall extend to the giving of directions to any State to observe such canons of financial propriety as may be specified in the directions, and to the giving of such other directions as the President may deem necessary and adequate for the purpose.

(4) Notwithstanding anything in this Constitution—

(a) any such direction may include—

(i) a provision requiring the reduction of salaries and allowances of all or any class of persons serving in connection with the affairs of a State;

(ii) a provision requiring all Money Bills or other Bills to which the provisions of article 207 apply to be reserved for the consideration of the President after they are passed by the Legislature of the State;

(b) it shall be competent for the President during the period any Proclamation issued under this article is in operation to issue directions for the reduction of salaries and allowances of all or any class of persons serving in connection with the affairs of the Union including the Judges of the Supreme Court and the High Courts.

[1]* * *

1. Cl. (5) was ins. by the Constitution (Thirty-eighth Amendment) Act, 1975, s. 8 (retrospectively) and omitted by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 41 (w.e.f. 20-6-1979).

**வரம்புரையாக :** அத்தகைய சாற்றாணை எதுவும், மக்களவை கலைக்கப்பட்டிருக்கும் காலத்தின்போது பிறப்பிக்கப்படுகிறது அல்லது (இ) உட்கூறில் சுட்டப்பட்டுள்ள இரண்டு மாதக் காலஅளவின்போது மக்களவையின் கலைப்பு நிகழ்கிறது என்றாலும், அந்தச் சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மாநிலங்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்து, ஆனால் அக்காலஅளவு கழிவுறுவதன் முன்பு, அச்சாற்றாணை பொறுத்து தீர்மானம் எதுவும் மக்களவையால் நிறைவேற்றப்படவில்லை என்றாலும், மக்களவை, அதன் மறுஅமைப்புக்குப் பின்பு முதன்முதலாக அமரும் தேதியிலிருந்து முப்பது நாள் கழிவுறுவதற்கு முன்பு, அச்சாற்றாணைக்கு ஒப்பேற்பளிக்கும் தீர்மானம் ஒன்று மக்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்தாலன்றி, அச்சாற்றாணை மேற்சொன்ன அந்த முப்பது நாள் காலஅளவு கழிவுற்றதும் செயற்பாடு அற்றுப்போகும்.]

(3). (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்டுள்ள சாற்றாணை எதுவும் செயற்பாட்டிலிருக்கும் காலஅளவின்போது, ஒன்றியத்து ஆட்சி அதிகாரமானது, அதன் பணிப்புரைகளில் குறித்துரைக்கப்படும் நிதிநெறி விதிமுறைகளைக் கடைப்பிடிக்குமாறு மாநிலம் எதற்கும் பணிப்புரைகள் இடுவதையும் அதற்குத் தேவை எனவும், ஏற்றவை எனவும் குடியரசுத்தலைவர் கருதும் பிற பணிப்புரைகளை இடுவதையும் அளாவி நிற்கும்.

(4) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்—

(அ) அத்தகைய பணிப்புரை எதுவும்—

(i) ஒரு மாநிலத்து அலுவற்பாடுகள் தொடர்பாக பணிபுரிகிறவர்கள் அனைவரின் அல்லது அவர்களில் ஒரு வகையினரின் வரையூதியங்களையும் படித்தொகைகளையும் குறைப்பதை வேண்டுறுத்தும் வகையம் ஒன்றை உள்ளடக்கலாம்;

(ii) பணச்சட்ட முன்வடிவுகள் அனைத்தும் அல்லது 207 ஆம் உறுப்பின் வகையங்கள் பொருந்துகிற பிற சட்டமுன்வடிவுகள் அந்த மாநிலச் சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட பின்பு குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கி வைக்கப்பட வேண்டுமென வேண்டுறுத்துகிற வகையம் ஒன்றை உள்ளடக்கலாம்.

(ஆ) இந்த உறுப்பின்படி பிறப்பிக்கப்படும் சாற்றாணை எதுவும் செயற்பாட்டிலிருக்கும் காலஅளவின்போது உச்ச நீதிமன்றம், உயர் நீதிமன்றங்கள் ஆகியவற்றின் நீதிபதிகள் உள்ளடங்கலாக, ஒன்றியத்து அலுவற்பாடுகள் தொடர்பாகப் பணிபுரிபவர்கள் அனைவரின் அல்லது அவர்களின் ஒரு வகையினரின் வரையூதியங்களையும் படித்தொகைகளையும் குறைப்பதற்கான பணிப்புரைகள் இடுவதற்குக் குடியரசுத்தலைவர் தகுதிறம் உடையவர் ஆவார்.

[1]* * *

---

1. (5) ஆம் கூறு, அரசமைப்புச் (முப்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 8 ஆம் பிரிவினால் (முன்மேவுறுமாறு) புகுத்தப்பட்டது மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 41 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

# PART XIX

## MISCELLANEOUS

**361. Protection of President and Governors and Rajpramukhs :**

(1) The President, or the Governor or Rajpramukh of a State, shall not be answerable to any court for the exercise and performance of the powers and duties of his office or for any act done or purporting to be done by him in the exercise and performance of those powers and duties:

Provided that the conduct of the President may be brought under review by any court, tribunal or body appointed or designated by either House of Parliament for the investigation of a charge under article 61:

Provided further that nothing in this clause shall be construed as restricting the right of any person to bring appropriate proceedings against the Government of India or the Government of a State.

(2) No criminal proceedings whatsoever shall be instituted or continued against the President, or the Governor [1]*** of a State, in any court during his term of office.

(3) No process for the arrest or imprisonment of the President, or the Governor [1]*** of a State, shall issue from any court during his term of office.

(4) No civil proceedings in which relief is claimed against the President, or the Governor [1]*** of a State, shall be instituted during his term of office in any court in respect of any act done or purporting to be done by him in his personal capacity, whether before or after he entered upon his office as President, or as Governor [1]*** of such State, until the expiration of two months next after notice in writing has been delivered to the President or the Governor [1]***, as the case may be, or left at his office stating the nature of the proceedings, the cause of action therefor, the name, description and place of residence of the party by whom such proceedings are to be instituted and the relief which he claims.

[2][**361A. Protection of publication of proceedings of Parliament and State Legislatures :**

(1) No person shall be liable to any proceedings, civil or criminal, in any court in respect of the publication in a newspaper of a substantially true report of any proceedings of either House of Parliament or the Legislative Assembly, or, as the case may be, either House of the Legislature, of a State, unless the publication is proved to have been made with malice:

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. Ins. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 42 (w.e.f. 20-6-1979).

# பகுதி XIX

## பல்வகை

### 361. குடியரசுத்தலைவர், ஆளுநர்கள், இராஜப்பிரமுகர்கள் ஆகியோருக்குக் காப்பளிப்பு :

(1) குடியரசுத்தலைவர் அல்லது ஒரு மாநிலத்தின் ஆளுநர் அல்லது இராஜப்பிரமுகர் தமது பதவியின் அதிகாரங்களைச் செலுத்துவதற்காகவும் கடமைகளைப் புரிவதற்காகவும், அல்லது அந்த அதிகாரங்களைச் செலுத்துவதிலும் கடமைகளைப் புரிவதிலும் அவர் செய்த அல்லது செய்ததாகக் கருதப்படும் செயல் எதனையும் குறித்து நீதிமன்றம் எதற்கும் காரணங்கூறும் பொறுப்புடையவர் ஆகார்:

**வரம்புரையாக :** 61 ஆம் உறுப்பின்படியான ஒரு குற்றச்சார்த்தினை விசாரிப்பதற்காக நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் எதனாலும் அமர்த்தப்பட்ட அல்லது குறித்திடப்பட்ட நீதிமன்றம், தீர்ப்பாயம் அல்லது குழுமம் எதனாலும் குடியரசுத்தலைவரின் நடத்தை ஆய்வு செய்யப்படுவதற்காக கொண்டுவரப்படலாம்:

**மேலும் வரம்புரையாக :** இந்தக் கூறிலுள்ள எதுவும், இந்திய அரசிற்கு அல்லது ஒரு மாநில அரசிற்கு எதிராக உரிய நடவடிக்கைகளை எடுப்பதற்கு எவருக்கும் உள்ள உரிமையை வரையறை செய்வதாகப் பொருள்கொள்ளப்படுதல் ஆகாது.

(2) குடியரசுத்தலைவரின் அல்லது ஒரு மாநில ஆளுநரின் [1]*** பதவிக் காலத்தின்போது, அவருக்கு எதிராக நீதிமன்றம் எதிலும் எவ்வகையான குற்றவியல் நடவடிக்கையும் தொடரப்படுதலோ தொடர்ந்து நடத்தப்படுதலோ ஆகாது.

(3) குடியரசுத்தலைவரின் அல்லது ஒரு மாநில ஆளுநரின் [1]*** பதவிக் காலத்தின்போது அவரைக் கைதுசெய்வதற்கோ சிறையிடுவதற்கோ நீதிமுறைக் கட்டளை எதுவும், நீதிமன்றம் எதிலிருந்தும் பிறப்பிக்கப்படுதல் ஆகாது.

(4) குடியரசுத்தலைவராக அல்லது ஒரு மாநில ஆளுநராக [1]*** ஒருவர் பதவி ஏற்பதற்கு முன்போ பின்போ தமது சொந்தமுறையில் செய்த அல்லது செய்ததாகக் கருதப்படுகிற செயல் எதற்காகவும், குடியரசுத்தலைவருக்கு அல்லது அந்த ஆளுநருக்கு [1]*** எதிராகத் தீருதவி கோரும் உரிமையியல் நடவடிக்கை எதுவும், அவரது பதவிக்காலத்தின்போது அந்நடவடிக்கையின் தன்மை, அதற்கான வழக்குமூலம், அந்நடவடிக்கையினைத் தொடரவிருக்கும் தரப்பினரின் பெயர், விவரம், உறைவிடம், அவர் கோரும் தீருதவி ஆகியவற்றைக் குறிப்பிட்டு எழுத்துமூலமாக அறிவிப்பு ஒன்று குடியரசுத்தலைவரிடம் அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த ஆளுநரிடம் [1]*** ஒப்புவிக்கப்பட்டதற்கு அல்லது அவரது அலுவலகத்தில் சேர்ப்பிக்கப்பட்டதற்கு அடுத்துப் பின்பு இரண்டு மாதம் கழிவுற்றதன்மேலன்றி, நீதிமன்றம் எதிலும் தொடரப்படுதல் ஆகாது.

### [2][361 (அ). நாடாளுமன்றம், மாநிலச் சட்டமன்றங்கள் ஆகியவற்றின் நடவடிக்கைகளை வெளியிடுவதற்குக் காப்பளிப்பு :

(1) நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் அல்லது மாநிலம் ஒன்றின் சட்டமன்றப் பேரவை அல்லது, நேர்வுக்கேற்ப, சட்டமன்ற ஈரவைகளில் ஒன்றின் நடவடிக்கைகள் எவற்றையும் பற்றி உறுபொருளின் உண்மையான அறிக்கையைச் செய்தித்தாளில் வெளியிட்டது பொறுத்து, அது தீய நோக்குடன் வெளியிடப்பட்டிருப்பதாக மெய்ப்பிக்கப்பட்டாலன்றி, நீதிமன்றம் எதிலும் எவரொருவரும் உரிமையியல் அல்லது குற்றவியல் நடவடிக்கை எதற்கும் உள்ளாகமாட்டார்:

---

1. ''அல்லது இராஜபிரமுகர்'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 42 ஆம் பிரிவினால் (20–6–1979 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

Provided that nothing in this clause shall apply to the publication of any report of the proceedings of a secret sitting of either House of Parliament or the Legislative Assembly, or, as the case may be, either House of the Legislature, of a State.

(2) Clause (1) shall apply in relation to reports or matters broadcast by means of wireless telegraphy as part of any programme or service provided by means of a broadcasting station as it applies in relation to reports or matters published in a newspaper.

**Explanation.**— In this article, "newspaper" includes a news agency report containing material for publication in a newspaper.]

[1][**361B. Disqualification for appointment on remunerative political post :**

A member of a House belonging to any political party who is disqualified for being a member of the House under paragraph 2 of the Tenth Schedule shall also be disqualified to hold any remunerative political post for duration of the period commencing from the date of his disqualification till the date on which the term of his office as such member would expire or till the date on which he contests an election to a House and is declared elected, whichever is earlier.

**Explanation.** — For the purposes of this article,—

(a) the expression "House" has the meaning assigned to it in clause (a) of paragraph 1 of the Tenth Schedule;

(b) the expression "remunerative political post" means any office—

(i) under the Government of India or the Government of a State where the salary or remuneration for such office is paid out of the public revenue of the Government of India or the Government of the State, as the case may be; or

(ii) under a body, whether incorporated or not, which is wholly or partially owned by the Government of India or the Government of State, and the salary or remuneration for such office is paid by such body,

except where such salary or remuneration paid is compensatory in nature.]

**362.** [*Rights and privileges of Rulers of Indian States.*] *Omitted by the Constitution (Twenty-sixth Amendment) Act, 1971, s. 2 (w.e.f. 28-12-1971).*

---

1. Ins. by the Constitution (Ninety-first Amendment) Act, 2003, s. 4 (w.e.f. 1-1-2004).

**வரம்புரையாக :** இந்தக் கூறிலுள்ள எதுவும், நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் அல்லது மாநிலம் ஒன்றின் சட்டமன்றப்பேரவை அல்லது, நேர்வுக்கேற்ப, சட்டமன்ற ஈரவைகளின் ஒன்றின் இரகசிய அமர்வின் நடவடிக்கைகள் பற்றிய அறிக்கை எதனையும் வெளியிடுவதற்குப் பொருந்துவதில்லை.

(2). (1) ஆம் கூறு, ஒரு செய்தித்தாளில் வெளியிடப்பட்ட அறிக்கைகள் அல்லது பொருட்பாடுகள் தொடர்பாகப் பொருந்துவது போன்றே, ஓர் ஒலிபரப்பு நிலைய நிகழ்ச்சியின் அல்லது பணியின் பகுதியாகக் கம்பியில்லாத் தந்தி மூலம் ஒலிபரப்பப்படும் அறிக்கைகள் அல்லது பொருட்பாடுகள் தொடர்பாகவும் பொருந்துவதாகும்.

**விளக்கம். –** இந்த உறுப்பில் 'செய்தித்தாள்'' என்பது, செய்தித்தாளில் வெளியிடுவதற்கான தகவல்கள் அடங்கிய செய்தி நிறுவன அறிக்கையையும் உள்ளடக்கும்.]

**[1][361 (ஆ). ஊதியம் வழங்கத்தக்க அரசியல் பணியடையில் அமர்த்துவதற்கான தகுதிக்கேடு :**

பத்தாம் இணைப்புப்பட்டியலின் 2 ஆம் பத்தியின்படி அவை ஒன்றின் உறுப்பினராக இருப்பதற்குத் தகுதிக்கேடுற்றவராக இருக்கிற, அரசியல்கட்சி எதனையும் சார்ந்துள்ள, அவை ஒன்றின் உறுப்பினர் ஒருவர், அவர் தகுதிக்கேடுற்ற தேதியிலிருந்து தொடங்கி அத்தகைய உறுப்பினராக அவருடைய பதவிக்காலம் கழிவுறும் தேதி வரையில் அல்லது அவை ஒன்றுக்கான தேர்தலில் அவர் போட்டியிட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்டவராக விளம்புகை செய்யப்பட்ட தேதி வரையில், இவற்றில் எது முந்தியதோ அதுவரையில் ஊதியம் வழங்கத்தக்க அரசியல் பணியடை எதனையும் கூட வகிப்பதற்குத் தகுதிக்கேடுற்றவர் ஆவார்.

**விளக்கம்.** — இந்த உறுப்பின் நோக்கங்களுக்காக,—

(அ) ''அவை'' என்ற சொல், பத்தாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பத்தியின் (அ) கூறில் அதற்குக் குறித்தளிக்கப்பட்ட பொருளை உடையதாகும்;

(ஆ) ''ஊதியம் வழங்கத்தக்க அரசியல் பணியடை' என்னும் சொற்றொடர்.—

(i) இந்திய அரசின் கீழோ அல்லது ஒரு மாநில அரசின் கீழோ உள்ள பதவி எதற்கும், அத்தகைய பதவிக்கான வரையூதியமும் அல்லது பதவியூதியம், இந்திய அரசின் அல்லது நேர்வுக்கேற்ப, ஒரு மாநில அரசின் பொது வருவாயிலிருந்து, வழங்கப்படுகிறவிடத்து; அல்லது

(ii) ஒரு குழுமத்தின் கீழுள்ள பதவி எதற்கும், அந்தக் குழுமம் கூட்டுருமமாகப் பதிவு செய்யப்பட்டிருந்தாலும் இல்லாவிட்டாலும் அல்லது இந்திய அரசால் அல்லது ஒரு மாநில அரசால் முழுமையாக அல்லது பகுதியாகச் சொந்தமாகக் கொண்டிருக்கப்பட்டு, அத்தகைய பதவிக்கான வரையூதியம் அல்லது பதவியூதியம், அத்தகைய குழுமத்தால் வழங்கப்படுகிறவிடத்து

வழங்கப்பட்ட வரையூதியம் அல்லது பதவியூதியம் ஈடுசெய்யும் தன்மையதாக இருக்கிறவிடத்து தவிர, அத்தகைய பதவி எதுவும் என்று பொருள்படும்.]

**362.** *[இந்தியக் குறுநில ஆட்சியாளர்களின் உரிமைகளும் மதிப்புரிமைகளும்.] அரசமைப்புச் (இருபத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1971 இன் 2 ஆம் பிரிவினால் (28–12–1971 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.*

1. அரசமைப்புச் (தொண்ணூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 4 ஆம் பிரிவினால் (1–1–2004 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**363. Bar to interference by courts in disputes arising out of certain treaties, agreements, etc :**

(1) Notwithstanding anything in this Constitution but subject to the provisions of article 143, neither the Supreme Court nor any other court shall have jurisdiction in any dispute arising out of any provision of a treaty, agreement, covenant, engagement, *sanad* or other similar instrument which was entered into or executed before the commencement of this Constitution by any Ruler of an Indian State and to which the Government of the Dominion of India or any of its predecessor Governments was a party and which has or has been continued in operation after such commencement, or in any dispute in respect of any right accruing under or any liability or obligation arising out of any of the provisions of this Constitution relating to any such treaty, agreement, covenant, engagement, *sanad* or other similar instrument.

(2) In this article—

(a) "Indian State" means any territory recognised before the commencement of this Constitution by His Majesty or the Government of the Dominion of India as being such a State; and

(b) "Ruler" includes the Prince, Chief or other person recognised before such commencement by His Majesty or the Government of the Dominion of India as the Ruler of any Indian State.

[1][**363A. Recognition granted to Rulers of Indian States to cease and privy purses to be abolished.**

Notwithstanding anything in this Constitution or in any law for the time being in force—

(a) the Prince, Chief or other person who, at any time before the commencement of the Constitution (Twenty-sixth Amendment) Act, 1971, was recognised by the President as the Ruler of an Indian State or any person who, at any time before such commencement, was recognised by the President as the successor of such ruler shall, on and from such commencement, cease to be recognised as such Ruler or the successor of such Ruler;

---

1. Ins. by the Constitution (Twenty-sixth Amendment) Act, 1971, s. 3 (w.e.f. 28-12-1971).

**363. குறித்தசில உடன்படிக்கைகள், உடன்பாடுகள், முதலியவற்றிலிருந்து எழும் பூசல்களில் நீதிமன்றங்களின் தலையீட்டிற்குத் தடையுறுத்தம்:**

(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், 143 ஆம் உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்பு இந்தியக் குறுநில அரசர் ஒருவரால் செய்துகொள்ளப்பட்டு அல்லது எழுதிக்கொடுக்கப்பட்டு, இந்தியத் தன்னாட்சிய அரசு அல்லது அதற்கு முன்பிருந்த அரசுகளில் எதுவும் ஒரு தரப்பினராயிருந்து அத்தகைய தொடக்கநிலைக்குப் பின்பும் செயற்பாட்டில் தொடர்ந்திருக்கிறதான அல்லது தொடர்ந்திருந்து வந்திருக்கிற உடன்படிக்கை, உடன்பாடு இணக்கஒப்பந்தம், உறுதிவாக்கேற்பு, *சன்னது* அல்லது அதுபோன்ற பிற முறையாவணம் ஒன்றின் வகையம் எதிலிருந்தும் எழுகிற பூசல் எதிலும், அத்தகைய உடன்படிக்கை, உடன்பாடு இணக்க ஒப்பந்தம், உறுதிவாக்கேற்பு, *சன்னது* அல்லது அதுபோன்ற பிற முறையாவணம் தொடர்பாக உள்ள இந்த அரசமைப்பின் வகையங்களில் எதன்படியும் சேர்ந்தடையும் உரிமை எதனையும் அல்லது அவ்வகையங்களில் எதிலிருந்தும் எழுகிற பொறுப்படைவு அல்லது கடமைப்பாடு எதனையும் பொறுத்த பூசல் எதிலும் உச்ச நீதிமன்றம் அல்லது பிற நீதிமன்றம் எதுவும் அதிகாரம் உடையது ஆகாது.

(2) இந்த உறுப்பில்—

(அ) ''இந்தியக் குறுநிலம்'' என்பது, அத்தகைய குறுநிலம் என இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு மாட்சிமை தங்கிய மன்னரால் அல்லது இந்தியத் தன்னாட்சிய அரசால் ஏற்பளிக்கப்பட்ட ஆட்சிநிலவரை எதுவும் என்று பொருள்படும்;

(ஆ) "அரசர்" என்பது, அத்தகைய தொடக்கநிலைக்கு முன்பு இந்தியக் குறுநிலம் ஒன்றின் அரசர் என மாட்சிமை தங்கிய மன்னரால் அல்லது இந்தியத் தன்னாட்சிய அரசால் ஏற்பளிக்கப்பட்ட மன்னரை, குடித்தலைவரை அல்லது பிறர் ஒருவரை உள்ளடக்கும்.

**[1][363 (அ). இந்தியக் குறுநில அரசர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த ஏற்பளிப்பு அற்றுப்போதல் மற்றும் மன்னர் மானியங்கள் ஒழிக்கப்படுதல் :**

இந்த அரசமைப்பில் அல்லது நிகழுறு காலத்தில் செல்லாற்றலிலுள்ள சட்டம் எதிலும் எது எவ்வாறிருப்பினும்—

(அ) அரசமைப்புச் (இருபத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1971 இன் தொடக்கநிலைக்கு முன்பு, எச்சமயத்திலேனும், இந்தியக் குறுநிலம் ஒன்றின் அரசர் எனக் குடியரசுத்தலைவரால் ஏற்பளிக்கப்பட்ட மன்னர், குடித்தலைவர் அல்லது பிறர் ஒருவர் அல்லது அத்தகைய தொடக்கநிலைக்கு முன்பு எச்சமயத்திலேனும் அத்தகைய அரசரின் வழி வந்தவர் எனக் குடியரசுத் தலைவரால் ஏற்பளிக்கப்பட்ட எவரும், அத்தகைய தொடக்கநிலையிலிருந்தும் அது முதற்கொண்டும் அத்தகைய அரசராக அல்லது அத்தகைய அரசரின் வழி வந்தவர் என ஏற்பளிக்கப்பட்டது அற்றுப்போகும்.

1. அரசமைப்புச் (இருபத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1971 இன் 3 ஆம் பிரிவினால் (28–12–1971 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(b) on and from the commencement of the Constitution (Twenty-sixth Amendment) Act, 1971, privy purse is abolished and all rights, liabilities and obligations in respect of privy purse are extinguished and accordingly the Ruler or, as the case may be, the successor of such Ruler, referred to in clause (a) or any other person shall not be paid any sum as privy purse.]

**364. Special provisions as to major ports and aerodromes :**

(1) Notwithstanding anything in this Constitution, the President may by public notification direct that as from such date as may be specified in the notification—

(a) any law made by Parliament or by the Legislature of a State shall not apply to any major port or aerodrome or shall apply thereto subject to such exceptions or modifications as may be specified in the notification, or

(b) any existing law shall cease to have effect in any major port or aerodrome except as respects things done or omitted to be done before the said date, or shall in its application to such port or aerodrome have effect subject to such exceptions or modifications as may be specified in the notification.

(2) In this article—

(a) "major port" means a port declared to be a major port by or under any law made by Parliament or any existing law and includes all areas for the time being included within the limits of such port;

(b) "aerodrome" means aerodrome as defined for the purposes of the enactments relating to airways, aircraft and air navigation.

**365. Effect of failure to comply with, or to give effect to, directions given by the Union :**

Where any State has failed to comply with, or to give effect to, any directions given in the exercise of the executive power of the Union under any of the provisions of this Constitution, it shall be lawful for the President to hold that a situation has arisen in which the Government of the State cannot be carried on in accordance with the provisions of this Constitution.

(ஆ) அரசமைப்புச் (இருபத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1971 இன் தொடக்கநிலையிலிருந்தும், அது முதற்கொண்டும் மன்னர் மானியம் ஒழிக்கப்படுகிறது; அத்துடன், மன்னர் மானியம் பொறுத்த உரிமைகள், பொறுப்படைவுகள், கடமைப்பாடுகள், அனைத்தும் இறுதியுறுகின்றன; மேலும், அதற்கிணங்க (அ) கூறில் சுட்டப்பட்ட அரசர் அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த அரசருக்குப் பின்னர் பதவிக்கு அடுத்து வந்தவர் அல்லது பிறர் எவருக்கும் மன்னர் மானியமாகத் தொகை எதுவும் வழங்கப்படுதல் ஆகாது.]

**364. பெருந்துறைமுகங்கள், வானூர்தி நிலையங்கள் ஆகியவை குறித்த தனியுறு வகையங்கள் :**

(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், குடியரசுத்தலைவர், பொது அறிவிக்கை வாயிலாக, அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்படும் தேதியிலிருந்து—

(அ) நாடாளுமன்றத்தால் அல்லது ஒரு மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் எதுவும், பெருந்துறைமுகம் அல்லது வானூர்திநிலையம் எதற்கும் பொருந்துவதாகாது என்றோ, அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்படும் விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு அதற்குப் பொருந்துவதாகும் என்றோ பணிக்கலாம்; அல்லது

(ஆ) நிலவுறும் சட்டம் எதுவும், மேற்சொன்ன தேதிக்கு முன்பு செய்யப்பட்டவை அல்லது செய்யாது விடப்பட்டவை பொறுத்துத் தவிர, பெருந்துறைமுகம் அல்லது வானூர்திநிலையம் எதிலும் செல்திறம் அற்றுப்போகும் என்றோ, அது அத்தகைய துறைமுகம் அல்லது வானூர்திநிலையத்திற்குப் பொருந்துவதில், அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்படும் விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைகளுக்கு உட்பட்டுச் செல்திறம்பெறும் என்றோ பணிக்கலாம்.

(2) இந்த உறுப்பில்—

(அ) ''பெருந்துறைமுகம்'' என்பது நாடாளுமன்றம் இயற்றிய சட்டம் எதனாலுமோ அதன் வழியாலோ அல்லது நிலவுறும் சட்டம் எதனாலுமோ அதன் வழியாலோ, பெருந்துறைமுகம் என விளம்பப்பட்டுள்ள ஒரு துறைமுகம் என்று பொருள்படும்; மேலும், அப்போதைக்கு அத்தகைய துறைமுகத்தின் எல்லைகளுக்குள் அடங்கியுள்ள பரப்பிடங்கள் அனைத்தையும் அது உள்ளடக்கும்;

(ஆ) ''வானூர்திநிலையம்'' என்பது, வானூர்தியங்கள், வானூர்திகள், வான்வழிச் செலுத்தம் ஆகியவை தொடர்பான சட்டங்களின் பொருட்டு பொருள்வரையறை செய்யப்பட்ட வானூர்திநிலையம் என்று பொருள்படும்.

**365. ஒன்றியத்தின் பணிப்புரைகளுக்கு இணங்கி நடக்கவோ அவற்றை செல்திறப்படுத்தவோ தவறுமிடத்து ஏற்படும் விளைவு :**

இந்த அரசமைப்பின் வகையங்களில் எதன்படியும் ஒன்றியத்து ஆட்சி அதிகாரத்தைச் செலுத்துகையில் இடப்படும் பணிப்புரைகள் எவற்றுக்கும் இணங்கி நடக்கவோ அவற்றைச் செல்திறப்படுத்தவோ மாநிலம் எதுவும் தவறியிருக்குமிடத்து, அந்த மாநிலத்தின் அரசை இந்த அரசமைப்பின் வகையங்களின்படி நடத்த இயலாத ஒரு நிலை ஏற்பட்டிருக்கிறது எனக் குடியரசுத்தலைவர் முடிவு செய்தால், அது சட்டமுறையானது ஆகும்.

**366. Definitions :**

In this Constitution, unless the context otherwise requires, the following expressions have the meanings hereby respectively assigned to them, that is to say—

(1) "agricultural income" means agricultural income as defined for the purposes of the enactments relating to Indian income-tax;

(2) "an Anglo-Indian" means a person whose father or any of whose other male progenitors in the male line is or was of European descent but who is domiciled within the territory of India and is or was born within such territory of parents habitually resident therein and not established there for temporary purposes only;

(3) "article" means an article of this Constitution;

(4) "borrow" includes the raising of money by the grant of annuities, and "loan" shall be construed accordingly;

[1]* * *

(5) "clause" means a clause of the article in which the expression occurs;

(6) "corporation tax" means any tax on income, so far as that tax is payable by companies and is a tax in the case of which the following conditions are fulfilled:—

(a) that it is not chargeable in respect of agricultural income;

(b) that no deduction in respect of the tax paid by companies is, by any enactments which may apply to the tax, authorised to be made from dividends payable by the companies to individuals;

(c) that no provision exists for taking the tax so paid into account in computing for the purposes of Indian income-tax the total income of individuals receiving such dividends, or in computing the Indian income-tax payable by, or refundable to, such individuals;

(7) "corresponding Province", "corresponding Indian State" or "corresponding State" means in cases of doubt such Province, Indian State or State as may be determined by the President to be the corresponding Province, the corresponding Indian State or the corresponding State, as the case may be, for the particular purpose in question;

---

1. Cl. (4A) was ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 54 (w.e.f. 1-2-1977) and omitted by the Constitution (Forty-third Amendment) Act, 1977, s. 11 (w.e.f. 13-4-1978).

**366. பொருள்வரையறைகள் :**

இந்த அரசமைப்பின் தறுவாயின்தேவை வேறானாலன்றி, பின்வரும் சொற்றொடர்கள் அவற்றுக்கு முறையே ஈங்கிதனால் குறித்தளிக்கப்படும் பொருள்களை உடையன ஆகும்; அவையாவன:—

(1) ''வேளாண் வருமானம்'' என்பது, இந்திய வருமானவரி தொடர்பான சட்டங்களின் பொருட்டு பொருள்வரையறை செய்யப்பட்ட வேளாண் வருமானம் என்று பொருள்படும்;

(2) ''ஓர் ஆங்கிலோ இந்தியர்'' என்பது, தம்முடைய தந்தையோ பிற ஆண்வழி மூதாதையர் எவருமோ ஐரோப்பியக் குடிவழியினராய் இருப்பவராகவும் அல்லது இருந்தவராகவும், ஆனால், இந்திய ஆட்சிநிலவரைக்குள் நிலைவாழ்வகம் உடையவராகவும் இருப்பதுடன் தற்காலிக நோக்கங்களுக்காக மட்டுமின்றி அத்தகைய ஆட்சிநிலவரையிலேயே வழக்கமாகக் குடியிருக்கும் பெற்றோருக்கு அந்த ஆட்சிநிலவரைக்குள் பிறக்கின்றவராகவும் அல்லது பிறந்தவராகவும் உள்ள ஒருவர் என்று பொருள்படும்;

(3) ''உறுப்பு'' என்பது, இந்த அரசமைப்பின் ஓர் உறுப்பு என்று பொருள்படும்;

(4) ''கடன் பெறுதல்'' என்பது, ஆண்டுத் தொகைகள் வழங்குவதன் வாயிலாகப் பணம் திரட்டுவதை உள்ளடக்கும், மேலும், ''பெறுகடன்'' என்பதும் அவ்வாறே பொருள்கொள்ளப்படுதல் வேண்டும் ;

[1]* * *

(5) ''கூறு'' என்பது, அந்தச் சொல் இடம் பெறுகிற உறுப்பின் ஒரு கூறு என்று பொருள்படும்;

(6) ''கூட்டுரும வரி'' என்பது, நிறுமங்களால் செலுத்தப்பட வேண்டிய வரியாகவும், பின்வரும் வரைக்கட்டுகளுக்கு இயைபுடைய வரியாகவும் உள்ள அளவிற்கு வருமானத்தின் மீதான வரி எதுவும் என்று பொருள்படும்:—

(அ) அது வேளாண் வருமானம் மீது சார்த்தத்தக்கதாக இல்லாமை;

(ஆ) நிறுமங்கள் செலுத்தும் வரியின் வகைக்காக, அந்நிறுமங்களால் தனிநபர்களுக்குச் செலுத்தப்பட வேண்டிய பங்கு ஆதாயங்களிலிருந்து கழித்துக் கொள்வதற்கு அந்த வரிக்குப் பொருந்தும் சட்டங்களில் எதுவும் அதிகாரமளிக்காமை;

(இ) இந்திய வருமான வரியைப் பொறுத்தவரை, அத்தகைய பங்கு ஆதாயங்களைப் பெறும் தனிநபர்களுடைய மொத்த வருமானத்தைக் கணக்கிடுவதில் அல்லது அத்தகைய தனி நபர்கள் செலுத்த வேண்டிய அல்லது அவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டிய இந்திய வருமான வரியைக் கணக்கிடுவதில், அவ்வாறு செலுத்தப்பட்ட வரியைக் கணக்கில் எடுத்துக் கொள்வதற்கான வகையம் எதுவும் இல்லாமை;

(7) ''நேரிணையான மாகாணம்'', ''நேரிணையான இந்தியக் குறுநிலம்'' அல்லது "நேரிணையான மாநிலம்" என்பது, ஐயப்பாடான நேர்வுகளில் வினாவிலுள்ள குறிப்பிட்ட நோக்கத்திற்காக நேர்வுக்கேற்ப, நேரிணையான மாகாணம், நேரிணையான இந்தியக் குறுநிலம் அல்லது நேரிணையான மாநிலம் எனக் குடியரசுத்தலைவரால் தீர்மானிக்கப்படும் மாகாணம், இந்தியக் குறுநிலம் அல்லது மாநிலம் என்று பொருள்படும்;

---

1. (4 (அ)) கூறு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 54 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு), புகுத்தப்பட்டது மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1977 இன் 11 ஆம் பிரிவினால் (13–4–1978 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

(8) "debt" includes any liability in respect of any obligation to repay capital sums by way of annuities and any liability under any guarantee, and "debt charges" shall be construed accordingly;

(9) "estate duty" means a duty to be assessed on or by reference to the principal value, ascertained in accordance with such rules as may be prescribed by or under laws made by Parliament or the Legislature of a State relating to the duty, of all property passing upon death or deemed, under the provisions of the said laws, so to pass;

(10) "existing law" means any law, Ordinance, order, bye-law, rule or regulation passed or made before the commencement of this Constitution by any Legislature, authority or person having power to make such a law, Ordinance, order, bye-law, rule or regulation;

(11) "Federal Court" means the Federal Court constituted under the Government of India Act, 1935;

(12) "goods" includes all materials, commodities, and articles;

[1][(12A) "goods and services tax" means any tax on supply of goods, or services or both except taxes on the supply of the alcoholic liquor for human consumption;]

(13) "guarantee" includes any obligation undertaken before the commencement of this Constitution to make payments in the event of the profits of an undertaking falling short of a specified amount;

(14) "High Court" means any Court which is deemed for the purposes of this Constitution to be a High Court for any State and includes—

(a) any Court in the territory of India constituted or reconstituted under this Constitution as a High Court, and

(b) any other Court in the territory of India which may be declared by Parliament by law to be a High Court for all or any of the purposes of this Constitution;

(15) "Indian State" means any territory which the Government of the Dominion of India recognised as such a State;

(16) "Part" means a Part of this Constitution;

---

1. Ins. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 14(i) (w.e.f. 16-9-2016).

(8) ''உறுகடன்'' என்பது, ஆண்டுத் தொகைகள் வாயிலாக மூலதனத் தொகைகளைத் திருப்பிச் செலுத்தும் கடமைப்பாடு பொறுத்த பொறுப்படைவு எதனையும், பொறுப்புறுதி எதற்கும் உட்பட்ட பொறுப்படைவு எதனையும் உள்ளடக்கும்; மேலும், ''உறுகடன் செலவீடுகள்'' என்பதற்கும் அதற்கிணங்கப் பொருள்கொள்ளுதல் வேண்டும்;

(9) ''இறங்குசொத்துத் தீர்வை'' என்பது, ஒருவரது இறப்பின் பேரில் இறங்குகிற அல்லது நாடாளுமன்றத்தால் அல்லது ஒரு மாநிலத்தின் சட்டமன்றத்தால் அத்தீர்வை தொடர்பாக இயற்றப்படும் சட்டங்களின் வகையங்களின்படி அவ்வாறு இறங்குவதாகக் கொள்ளப்படுகிற சொத்து அனைத்திற்கும் அச்சட்டங்களாலோ அவற்றின் வழியாலோ வகுக்கப்படும் விதிகளுக்கு இணங்கக் கண்டறிந்த மூலதன மதிப்பின்மீது அல்லது அதனை அடிப்படையாகக்கொண்டு கணிக்கப்பட வேண்டிய தீர்வை என்று பொருள்படும்;

(10) ''நிலவுறும் சட்டம்'' என்பது, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு சட்டம், அவசரச்சட்டம், ஆணை, துணைவிதி, விதி அல்லது ஒழுங்குறுத்தும்விதி எதனையும் இயற்றுவதற்கு அதிகாரம் உடையதாக இருந்த சட்டமன்றம், அதிகாரஅமைப்பு எதனாலும் அல்லது நபர் எவராலும் இயற்றப்பட்ட அல்லது பிறப்பிக்கப்பட்ட சட்டம், அவசரச்சட்டம், ஆணை, துணைவிதி, விதி அல்லது ஒழுங்குறுத்தும்விதி என்று பொருள்படும்;

(11) ''கூட்டாட்சிய நீதிமன்றம்'' என்பது, இந்திய அரசுச் சட்டம், 1935 இல் அமைக்கப்பட்ட கூட்டாட்சிய நீதிமன்றம் என்று பொருள்படும்;

(12) ''சரக்குகள்'' என்பது, பொருள்கள், பண்டங்கள், உருப்பொருட்கள் அனைத்தையும் உள்ளடக்கும்;

[1][(12 (அ) ). ''சரக்குகள் மற்றும் சேவை வரி'' என்பது, மனிதர் நுகர்வதற்கான வெறியம் கலந்த மதுக்குடிவகை வழங்கீட்டின் மீதான வரிகள் தவிர சரக்குகள், அல்லது சேவை அல்லது இரண்டின் வழங்கீட்டின் மீதான வரி எதுவும் என்று பொருள்படும்;]

(13) ''பொறுப்புறுதி'' என்பது, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு ஒரு பொறுப்பேற்பு நிறுவனத்தின் ஆதாயங்கள், குறித்துரைக்கப்படும் ஒரு தொகைக்குக் குறையுமாயின், அத்தொகையை செலுத்துவதாகப் பொறுப்பேற்றுக்கொண்ட கடமைப்பாடு எதனையும் உள்ளடக்கும்;

(14) ''உயர் நீதிமன்றம்'' என்பது, இந்த அரசமைப்பினைப் பொறுத்தவரை, மாநிலம் எதற்குமான ஓர் உயர் நீதிமன்றமாகக் கொள்ளப்படுகிற நீதிமன்றம் எதுவும் என்று பொருள்படும்; மேலும், அது—

(அ) இந்த அரசமைப்பின்படி இந்திய ஆட்சிநிலவரையில் ஓர் உயர் நீதிமன்றமாக அமைக்கப்பட்ட அல்லது மறுஅமைப்பு செய்யப்பட்ட நீதிமன்றம் எதனையும்; மற்றும்

(ஆ) இந்த அரசமைப்பின் நோக்கங்கள் அனைத்திற்காகவும் அல்லது அவற்றுள் எதற்காகவும் ஓர் உயர் நீதிமன்றம் என நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும் இந்திய ஆட்சிநிலவரையிலுள்ள பிற நீதிமன்றம் எதனையும் உள்ளடக்கும்;

(15) ''இந்தியக் குறுநிலம்'' என்பது, இந்தியத் தன்னாட்சிய அரசினால் அத்தகையதொரு குறுநிலமாக ஏற்பளிக்கப்பட்ட ஆட்சிநிலவரை எதுவும் என்று பொருள்படும்;

(16) ''பகுதி'' என்பது, இந்த அரசமைப்பின் ஒரு பகுதி என்று பொருள்படும்;

---

1. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 14(i) ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(17) "pension" means a pension, whether contributory or not, of any kind whatsoever payable to or in respect of any person, and includes retired pay so payable; a gratuity so payable and any sum or sums so payable by way of the return, with or without interest thereon or any other addition thereto, of subscriptions to a provident fund;

(18) "Proclamation of Emergency" means a Proclamation issued under clause (1) of article 352;

(19) "public notification" means a notification in the Gazette of India, or, as the case may be, the Official Gazette of a State;

(20) "railway" does not include—

(a) a tramway wholly within a municipal area, or

(b) any other line of communication wholly situate in one State and declared by Parliament by law not to be a railway;

[1]* * *

[2][(22) "Ruler" means the Prince, Chief or other person who, at any time before the commencement of the Constitution (Twenty-sixth Amendment) Act, 1971, was recognised by the President as the Ruler of an Indian State or any person who, at any time before such commencement, was recognised by the President as the successor of such Ruler;]

(23) "Schedule" means a Schedule to this Constitution;

(24) "Scheduled Castes" means such castes, races or tribes or parts of or groups within such castes, races or tribes as are deemed under article 341 to be Scheduled Castes for the purposes of this Constitution;

(25) "Scheduled Tribes" means such tribes or tribal communities or parts of or groups within such tribes or tribal communities as are deemed under article 342 to be Scheduled Tribes for the purposes of this Constitution;

(26) "securities" includes stock;

[3]* * *

---

1. Cl. (21) omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. Subs. by the Constitution (Twenty-sixth Amendment) Act, 1971, s. 4, for cl. (22) (w.e.f. 28-12-1971).

3. Cl. (26A) was ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 54 (w.e.f. 1-2-1977) and omitted by the Constitution (Forty-third Amendment) Act, 1977, s. 11 (w.e.f. 13-4-1978).

(17) ''ஒய்வூதியம்'' என்பது, பங்களிப்பு முறையிலாயினும் இல்லாவிடினும், ஒருவருக்கு அல்லது அவர் பொறுத்துச் செலுத்தப்பட வேண்டிய எவ்வகையானதுமான ஓர் ஒய்வூதியம் என்று பொருள்படும்; மேலும், அது அவ்வாறு செலுத்தப்பட வேண்டிய ஓய்வுக்காலச் சம்பளத்தையும், அவ்வாறு செலுத்தப்பட வேண்டிய ஒரு பணிக்கொடையையும், வருங்கால வைப்புநிதியம் ஒன்றுக்கான தொகையளிப்புகளை அவற்றின் மீதான வட்டியுடனோ இன்றியோ அல்லது பிறதொகை எதனையும் சேர்த்தோ அவ்வாறு திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய தொகை எதனையும் அல்லது தொகைகளையும் உள்ளடக்கும்;

(18) ''நெருக்கடிநிலைச் சாற்றாணை'' என்பது, 352 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்படும் ஒரு சாற்றாணை என்று பொருள்படும்;

(19) ''பொது அறிவிக்கை'' என்பது, இந்திய அரசிதழில் அல்லது, நேர்வுக்கேற்ப, ஒரு மாநிலத்தின் அதிகாரமுறை அரசிதழில் உள்ள ஓர் அறிவிக்கை என்று பொருள்படும்;

(20) ''இருப்பூர்தியம்'' என்பது—

(அ) முற்றிலும் ஒரு நகராட்சிப் பகுதிக்குள் அமைந்த காந்த வண்டிப்பாதையை; அல்லது

(ஆ) முற்றிலும் ஒரே மாநிலத்திற்குள் அமைந்துள்ளதும், இருப்பூர்தியம் அல்லாதது என நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புகிறதுமான பிற போக்குவரவு இணைவள்கள் எதனையும் உள்ளடக்காது;

[1]* * *

[2][(22) ''அரசர்'' என்பது, அரசமைப்புச் (இருபத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1971 இன் தொடக்கநிலைக்கு முன்பு எச்சமயத்திலேனும் இந்தியக் குறுநிலம் ஒன்றின் அரசர் எனக் குடியரசுத்தலைவரால் ஏற்பளிக்கப்பட்ட மன்னர், குடித்தலைவர் அல்லது பிறர் ஒருவர் என்றோ, அத்தகைய தொடக்கநிலைக்கு முன்பு எச்சமயத்திலேனும், அத்தகைய அரசரின் வழிவந்தவர் எனக் குடியரசுத்தலைவரால் ஏற்பளிக்கப்பட்டவர் என்றோ பொருள்படும்;]

(23) ''இணைப்புப்பட்டியல்'' என்பது, இந்த அரசமைப்பின் ஓர் இணைப்புப்பட்டியல் என்று பொருள்படும்;

(24) ''பட்டியலில்கண்ட சாதிகள்'' என்பது, இந்த அரசமைப்பினைப் பொறுத்தவரை, 341 ஆம் உறுப்பின்படி பட்டியலில்கண்ட சாதிகள் எனக் கொள்ளப்படுகின்ற சாதிகள், இனங்கள் அல்லது பழங்குடிகள் அல்லது அத்தகைய சாதிகள், இனங்கள், பழங்குடிகள் இவற்றின் பகுதிகள் அல்லது தொகுதிகள் என்று பொருள்படும்;

(25) ''பட்டியலில்கண்ட பழங்குடிகள்'' என்பது, இந்த அரசமைப்பினைப் பொறுத்தவரை, 342 ஆம் உறுப்பின்படி பட்டியலில்கண்ட பழங்குடிகள் எனக் கொள்ளப்படுகிற பழங்குடிகள் அல்லது பழங்குடிச் சமூகங்கள், அத்தகைய பழங்குடிகள் அல்லது பழங்குடிச் சமூகங்கள் இவற்றின் பகுதிகள் அல்லது தொகுதிகள் என்று பொருள்படும்;

(26) ''காப்புறுதிகள்'' என்பது, பங்கு மூலதனத்தையும் உள்ளடக்கும்;

[3]* * *

---

1. (21) ஆம் கூறு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

2. (22) ஆம் கூறுக்கு, அரசமைப்புச் (இருபத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1971 இன் 4 ஆம் பிரிவினால் (28–12–1971 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. (26 (அ)) கூறு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 54 ஆம் பிரிவினால் (1–2–1977 முதல் செல்திறம் பெறுமாறு), புகுத்தப்பட்டது மற்றும் அரசமைப்புச் (நாற்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1977 இன் 11 ஆம் பிரிவினால் (13–4–1978 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

[1][(26A) "Services" means anything other than goods;

(26B) "State" with reference to articles 246A, 268, 269, 269A and article 279A includes a Union territory with Legislature;]

[2][(26C) "socially and educationally backward classes" means such backward classes as are so deemed under article 342A for the purposes of this Constitution;]

(27) "sub-clause" means a sub-clause of the clause in which the expression occurs;

(28) "taxation" includes the imposition of any tax or impost, whether general or local or special, and "tax" shall be construed accordingly;

(29) "tax on income" includes a tax in the nature of an excess profits tax;

[3][(29A) "tax on the sale or purchase of goods" includes—

(a) a tax on the transfer, otherwise than in pursuance of a contract, of property in any goods for cash, deferred payment or other valuable consideration;

(b) a tax on the transfer of property in goods (whether as goods or in some other form) involved in the execution of a works contract;

(c) a tax on the delivery of goods on hire-purchase or any system of payment by instalments;

(d) a tax on the transfer of the right to use any goods for any purpose (whether or not for a specified period) for cash, deferred payment or other valuable consideration;

(e) a tax on the supply of goods by any unincorporated association or body of persons to a member thereof for cash, deferred payment or other valuable consideration;

(f) a tax on the supply, by way of or as part of any service or in any other manner whatsoever, of goods, being food or any other article for human consumption or any drink (whether or not intoxicating), where such supply or service, is for cash, deferred payment or other valuable consideration,

1. Ins. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 14 (ii) (w.e.f. 16-9-2016).

2. Ins. by the Constitution (One Hundred and Second Amendment) Act, 2018, s. 5 (w.e.f. 11-8-2018).

3. Ins. by the Constitution (Forty-sixth Amendment) Act, 1982, s. 4 (w.e.f. 2-2-1983).

[1][(26 (அ)) "சேவை" என்பது, சரக்குகள் அல்லாத பிற ஏதேனுமொன்று என்று பொருள்படும்;

(26 (ஆ)) "மாநிலம்" என்பது, 246 (அ), 268, 269, 269 (அ) ஆகிய உறுப்புகள் மற்றும் 279 (அ) உறுப்பு குறித்து, சட்டமன்றத்தைக் கொண்டுள்ள ஓர் ஒன்றியத்து ஆட்சி நிலவரையை உள்ளடக்குவதாகும்.]

[2][(26 (இ)) "சமுதாயநிலையிலும் கல்விநிலையிலும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர்" என்பது, இந்த அரசமைப்பினைப் பொறுத்தவரை, 342 (அ) உறுப்பின்படி அத்தகைய பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் எனக் கொள்ளப்படுகின்ற பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் என்று பொருள்படும்;]

(27) "உட்கூறு" என்பது, அச்சொல் இடம்பெறுகிற கூறின் ஓர் உட்கூறு என்று பொருள்படும்;

(28) "வரிவிதிப்பு" என்பது, பொதுவியலான அல்லது உள்ளாட்சிக்குள்ள அல்லது தனிவகையான வரி அல்லது தீர்வை எதனையும் விதிப்பதை உள்ளடக்கும்; மேலும் "வரி" என்பதும், அதற்கிணங்கப் பொருள்கொள்ளப்படும்;

(29) "வருமானம் மீதான வரி" என்பது, ஒரு மிகை ஆதாய வரி போல்வதான ஒரு வரியையும் உள்ளடக்கும்;

[3][(29 (அ)) "சரக்குகளின் விற்பனை அல்லது கொள்வினை மீதான வரி" என்பது—

(அ) உடன் பணத்திற்காக, தள்ளிவைக்கப்பட்ட அல்லது வேறுவகை மதிப்புள்ள மறுபயனுக்காக ஓர் ஒப்பந்தம் எதனையும் பின்பற்றியல்லாமல் பிறவாறு சரக்குகள் எவற்றிலும், சொத்து உரிமைமாற்றம் செய்வதன் மீதான வரி;

(ஆ) ஒரு பணிமான ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதில் உள்ளடங்கும் (சரக்குகளாகவோ பிறவடிவிலோ இருக்கும்) சரக்குகள் எவற்றிலும், சொத்து உரிமைமாற்றம் செய்வதன் மீதான வரி;

(இ) தவணைமுறைக் கொள்வினை அல்லது தவணைச் செலுத்தமுறை வாயிலாகச் சரக்குகளை ஒப்படைவு செய்வதன் மீதான வரி;

(ஈ) உடன் பணத்திற்காக, தள்ளிவைக்கப்பட்ட அல்லது வேறு வகை மதிப்புள்ள மறுபயன் எதற்காகவும் (குறித்த ஒரு காலஅளவுக்காயினும், இல்லாவிடினும்) சரக்குகள் எவற்றையும் பயன்படுத்தும் உரிமையினை மாற்றம் செய்வதன் மீதான வரி;

(உ) கூட்டுருமமாக இல்லாத கழகம் அல்லது நபர்களின் குழுமம் எதனாலும் அதன் உறுப்பினர் ஒருவருக்கு உடன் பணம், தள்ளிவைக்கப்பட்ட செலுத்தம் அல்லது வேறுவகை மதிப்புள்ள மறுபயனுக்காக வழங்கப்படும் சரக்குகள் மீதான வரி;

(ஊ) உடன் பணத்திற்காக, தள்ளிவைக்கப்பட்ட அல்லது வேறு வகை மதிப்புள்ள மறுபயனுக்காக, பயன்தரு பணியாகவோ அதன் பகுதியாகவோ வேறு முறையிலோ வழங்கப்படும் அல்லது மக்கள் நுகரும் பிற பொருள், அல்லது (போதையூட்டுவதாகவோ அல்லாததாகவோ உள்ள) குடிவகைகள், இவ்வகைச் சரக்குகள் மீதான வரி,

1. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 14 (ii) ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (நூற்று இரண்டாம் திருத்தம்) சட்டம், 2018 இன் 5 ஆம் பிரிவினால் (11–8–2018 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. அரசமைப்புச் (நாற்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1982 இன் 4 ஆம் பிரிவினால் (2–2–1983 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

and such transfer, delivery or supply of any goods shall be deemed to be a sale of those goods by the person making the transfer, delivery or supply and a purchase of those goods by the person to whom such transfer, delivery or supply is made;]

[1][(30) "Union territory" means any Union territory specified in the First Schedule and includes any other territory comprised within the territory of India but not specified in that Schedule.]

**367. Interpretation :**

(1) Unless the context otherwise requires, the General Clauses Act, 1897, shall, subject to any adaptations and modifications that may be made therein under article 372, apply for the interpretation of this Constitution as it applies for the interpretation of an Act of the Legislature of the Dominion of India.

(2) Any reference in this Constitution to Acts or laws of, or made by, Parliament, or to Acts or laws of, or made by, the Legislature of a State [2]***, shall be construed as including a reference to an Ordinance made by the President or, to an Ordinance made by a Governor [3]***, as the case may be.

(3) For the purposes of this Constitution "foreign State" means any State other than India:

Provided that, subject to the provisions of any law made by Parliament, the President may by order declare any State not to be a foreign State for such purposes as may be specified in the order.

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch., for cl. (30) (w.e.f. 1-11-1956).

2. The words and letters "specified in Part A or Part B of the First Schedule" omitted by *ibid.*

3. The words "or Rajpramukh" omitted by *ibid.*

ஆகியவற்றை உள்ளடக்கும்; மேலும், சரக்குகள் எவற்றையும் அவ்வாறு உரிமைமாற்றம், ஒப்படைவு அல்லது வழங்குதல் செய்வது எதுவும், அந்த உரிமைமாற்றத்தை, ஒப்படைவினை அல்லது வழங்குதலைச் செய்தவரால் செய்யப்படும் அச்சரக்குகளின் ஒரு விற்பனை எனவும், அந்த உரிமைமாற்றத்தை, ஒப்படைவை அல்லது வழங்குதலைப் பெறுபவரால் செய்யப்படும் அச்சரக்குகளின் கொள்வினை எனவும் கொள்ளப்படும்;]

[1][(30) "ஒன்றியத்து ஆட்சிநிலவரை" என்பது, முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஒன்றியத்து ஆட்சிநிலவரை என்று பொருள்படும்; மேலும், அது இந்திய ஆட்சிநிலவரையினுள் அடங்கியுள்ள, ஆனால் அந்த இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டிராத பிற ஆட்சிநிலவரை எதனையும் உள்ளடக்கும்.]

**367. பொருள்கோள் :**

(1) தறுவாயின் தேவை வேறானாலன்றி, பொது வகையங்கள் விளக்கச் சட்டம், **1897**, இந்தியத் தன்னாட்சியச் சட்டமன்றத்துச் சட்டம் எதனையும் பொருள்காண்பதற்குப் பொருந்துவது போன்றே, அதில், 372 ஆம் உறுப்பின்படி செய்யப்படும் தழுவமைவுகளுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டு, இந்த அரசமைப்பினைப் பொருள் காண்பதற்கும் பொருந்துவதாகும்.

(2) நாடாளுமன்றத்தின் அல்லது அதனால் செய்யப்பட்ட இயற்றுச்சட்டங்கள் அல்லது சட்டங்கள் அல்லது[2]*** ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் அல்லது அதனால் செய்யப்பட்ட இயற்றுச்சட்டங்கள் அல்லது சட்டங்கள் என இந்த அரசமைப்பில் சுட்டப்பட்டிருப்பது எதுவும், குடியரசுத்தலைவரால் பிறப்பிக்கப்பட்ட அவசரச்சட்டம் அல்லது, நேர்வுக்கேற்ப, ஆளுநரால் [3]*** பிறப்பிக்கப்பட்ட அவசரச்சட்டம் எனச் சுட்டுவதையும் உள்ளடக்குவதாகப் பொருள்கொள்ளுதல் வேண்டும்.

(3) இந்த அரசமைப்பினைப் பொறுத்தவரை, "அயல் நாட்டு அரசு" என்பது, இந்தியா அல்லாத பிற அரசு எதுவும் என்று பொருள்படும்:

**வரம்புரையாக** : நாடாளுமன்றம் இயற்றிய சட்டம் எதனின் வகையங்களுக்கும் உட்பட்டு, குடியரசுத்தலைவர், ஆணையின்வழி, அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் நோக்கங்களுக்காக, அரசு எதுவும் அயல்நாட்டு அரசு ஆவதில்லை என விளம்பலாம்.

---

1. (30) ஆம் கூறுக்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) அல்லது பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள் மற்றும் எழுத்துக்கள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

3. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

# PART XX

## AMENDMENT OF THE CONSTITUTION

**368.** [1]**[Power of Parliament to amend the Constitution and procedure therefor] :**

[2][(1) Notwithstanding anything in this Constitution, Parliament may in exercise of its constituent power amend by way of addition, variation or repeal any provision of this Constitution in accordance with the procedure laid down in this article.]

[3][(2)] An amendment of this Constitution may be initiated only by the introduction of a Bill for the purpose in either House of Parliament, and when the Bill is passed in each House by a majority of the total membership of that House and by a majority of not less than two-thirds of the members of that House present and voting, [4][it shall be presented to the President who shall give his assent to the Bill and thereupon] the Constitution shall stand amended in accordance with the terms of the Bill:

Provided that if such amendment seeks to make any change in—

(a) article 54, article 55, article 73, [5][article 162, article 241 or article 279A] or

(b) Chapter IV of Part V, Chapter V of Part VI, or Chapter I of Part XI, or

(c) any of the Lists in the Seventh Schedule, or

(d) the representation of States in Parliament, or

(e) the provisions of this article,

the amendment shall also require to be ratified by the Legislatures of not less than one-half of the States [6]*** by resolutions to that effect passed by those Legislatures before the Bill making provision for such amendment is presented to the President for assent.

---

1. Subs. by the Constitution (Twenty-fourth Amendment) Act, 1971, s. 3, for "Procedure for amendment of the Constitution." (w.e.f. 5-11-1971).
2. Ins. by *ibid.*
3. Art. 368 renumbered as cl. (2) thereof by *ibid.*
4. Subs. by *ibid.*, for "it shall be presented to the President for his assent and upon such assent being given to the Bill,".
5. Subs. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 15, for the words and figures "article 162 or article 241" (w.e.f. 16-9-2016).
6. The words and letters "specified in Part A and B of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

## பகுதி XX

### அரசமைப்பின் திருத்தம்

**368.** [1][அரசமைப்பினைத் திருத்துவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரமும் அதற்கான நெறிமுறையும்] :

[2][(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், இந்த உறுப்பில் விதிக்கப்பட்டுள்ள நெறிமுறைக்கு இணங்க, நாடாளுமன்றம், தனது அரசமைப்பியற்று அதிகாரத்தைச் செலுத்தி, இந்த அரசமைப்பின் வகையம் எதிலும் சேர்த்தல், மாறுதல் செய்தல் அல்லது எதனையும் நீக்கறவு செய்தல் வாயிலாகத் திருத்தம் செய்யலாம்.]

[3][(2)] இந்த அரசமைப்பின் திருத்தம் எதுவும், அதற்கென ஒரு சட்ட முன்வடிவை நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றில் அறிமுகப்படுத்துவதன் வாயிலாக மட்டுமே தொடங்கப்பெறும்; அச்சட்ட முன்வடிவு, ஒவ்வோர் அவையிலும் அதன் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் பெரும்பான்மையும், மேலும், அந்த அவை உறுப்பினர்களில் வந்திருந்து வாக்களிப்பவர்களின் எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பங்கிற்குக் குறையாத பெரும்பான்மையும் கொண்ட உறுப்பினர்களால் நிறைவேற்றப்பட்டதன்மேல், [4][அது குடியரசுத்தலைவரிடம் முன்னிடப்படுதல் வேண்டும்; அவர் அச்சட்டமுன்வடிவிற்கு ஏற்பிசைவு அளிப்பார்; அதன்மேல்] அச்சட்ட முன்வடிவில் கண்ட வரைவுரைகளுக்கு இணங்க அரசமைப்பு திருத்தம் பெற்றது ஆகும்:

**வரம்புரையாக** : அத்தகைய திருத்தம்—

(அ) 54 ஆம் உறுப்பு, 55 ஆம் உறுப்பு, 73 ஆம் உறுப்பு, [5][162 ஆம் உறுப்பு, 241 ஆம் உறுப்பு, அல்லது 279 (அ) உறுப்பு ], அல்லது

(ஆ) V ஆம் பகுதியின் IV ஆம் அத்தியாயம், VI ஆம் பகுதியின் V ஆம் அத்தியாயம், அல்லது XI ஆம் பகுதியின் I ஆம் அத்தியாயம், அல்லது

(இ) ஏழாம் இணைப்புப்பட்டியலில் உள்ள பட்டியல்களில் ஒன்று, அல்லது

(ஈ) நாடாளுமன்றத்தில் மாநிலங்களுக்குள்ள சார்பாற்றம், அல்லது

(உ) இந்த உறுப்பின் வகையங்கள்

ஆகியவற்றில் மாற்றம் எதனையும் செய்ய முற்படுமாயின், அத்திருத்தத்திற்கு வகைசெய்யும் சட்டமுன்வடிவு, குடியரசுத்தலைவரின் ஏற்பிசைவுக்காக முன்னிடப்படுவதற்கு முன்பு, அத்திருத்தமானது, [6]***மாநிலங்களில் ஒரு பாதிக்குக் குறையாதவற்றின் சட்டமன்றங்களால் அதுகுறித்து நிறைவேற்றப்படும் தீர்மானங்கள் வாயிலாக ஏற்புறுதி செய்யப்படுவதும் வேண்டுறுவதாகும்.

---

1. "அரசமைப்புத் திருத்தத்திற்கான நெறிமுறை" என்பதற்கு, அரசமைப்புச் (இருபத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1971 இன் 3 ஆம் பிரிவினால் (5–11–1971 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.
3. 368 ஆம் உறுப்பு, அதன் (2) ஆம் கூறாக *மேற்படிச் சட்டத்தினால்* மறுஎண்ணிடப்பட்டது.
4. "அது குடியரசுத் தலைவரிடம் அவரது ஏற்பிசைவிற்காக முன்னிடப்படுதல் வேண்டும் மற்றும் அத்தகைய ஏற்பிசைவானது சட்டமுன்வடிவிற்கு அளிக்கப்படுவதன் பேரில்" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.
5. "162 ஆம் உறுப்பு அல்லது 241 ஆம் உறுப்பு" என்ற சொற்கள் மற்றும் எண்களுக்கு, அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 15 ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.
6. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) மற்றும் பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள் மற்றும் எழுத்துக்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

[1][(3) Nothing in article 13 shall apply to any amendment made under this article.]

[2][(4) No amendment of this Constitution (including the provisions of Part III) made or purporting to have been made under this article whether before or after the commencement of section 55 of the Constitution (Forty-second Amendment) Act, 1976 shall be called in question in any court on any ground.

(5) For the removal of doubts, it is hereby declared that there shall be no limitation whatever on the constituent power of Parliament to amend by way of addition, variation or repeal the provisions of this Constitution under this article.]

## PART XXI

## [3][TEMPORARY, TRANSITIONAL AND SPECIAL PROVISIONS]

**369. Temporary power to Parliament to make laws with respect to certain matters in the State List as if they were matters in the Concurrent List :**

Notwithstanding anything in this Constitution, Parliament shall, during a period of five years from the commencement of this Constitution, have power to make laws with respect to the following matters as if they were enumerated in the Concurrent List, namely:—

(a) trade and commerce within a State in, and the production, supply and distribution of, cotton and woollen textiles, raw cotton (including ginned cotton and unginned cotton or kapas), cotton seed, paper (including newsprint), food-stuffs (including edible oilseeds and oil), cattle fodder (including oil-cakes and other concentrates), coal (including coke and derivatives of coal), iron, steel and mica;

(b) offences against laws with respect to any of the matters mentioned in clause (a), jurisdiction and powers of all courts except the Supreme Court with respect to any of those matters, and fees in respect of any of those matters but not including fees taken in any court;

---

1. Ins. by the Constitution (Twenty-fourth Amendment) Act, 1971, s. 3 (w.e.f. 5-11-1971).

2. Cls. (4) and (5) ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 55 (w.e.f. 3-1-1977). This section has been declared invalid by the Supreme Court in *Minerva Mills Ltd. and Others Vs. Union of India and Others* [AIR 1980 SC 1789.]

3. Subs. by the Constitution (Thirteenth Amendment) Act, 1962, s. 2, "TEMPORARY AND TRANSITIONAL PROVISIONS" (w.e.f. 1-12-1963).

[1][(3). 13 ஆம் உறுப்பிலுள்ள எதுவும் இந்த உறுப்பின்படி செய்யப்படும் திருத்தம் எதற்கும் பொருந்துவதில்லை.]

[2][(4) அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 55 ஆம் பிரிவின் தொடக்கநிலைக்கு முன்போ பின்போ இந்த உறுப்பின்படி செய்யப்பட்ட அல்லது செய்யப்பட்டிருப்பதாகக் கருதப்படுகிற (III ஆம் பகுதியின் வகையங்கள் உள்ளடங்கலாக) இந்த அரசமைப்பின் திருத்தம் எதுவும் எக்காரணத்தைக் கொண்டும் நீதிமன்றம் எதிலும் எதிர்த்து வாதிடப்படுதல் ஆகாது.

(5) இந்த உறுப்பின்படி சேர்த்தல், மாறுதல் செய்தல் அல்லது நீக்கறவு செய்தல் வாயிலாக இந்த அரசமைப்பின் வகையங்களில் திருத்தம் செய்வதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அரசமைப்பியற்று அதிகாரத்தின் மீது எந்தவிதமான வரையிறுத்தமும் இருத்தல் ஆகாது என ஈங்கிதனால் ஐயப்பாடுகளை அகற்றும் வகையில் விளம்பப்படுகிறது.]

## பகுதி XXI

### [3][தற்காலிகமான, மாறும் இடைக்காலத்திற்கான மற்றும் தனியுறு வகையங்கள்]

**369. மாநிலப் பட்டியலிலுள்ள குறித்தசில பொருட்பாடுகளைப் பொறுத்து அவை ஒருங்கியல் பட்டியலிலுள்ள பொருட்பாடுகளாக இருந்தாற்போன்றே சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள தற்காலிக அதிகாரம் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், நாடாளுமன்றம் இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து ஐந்து ஆண்டுக் காலஅளவின் போது, பின்வரும் பொருட்பாடுகளைப் பொறுத்து, அவை ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளாக இருந்தாற்போன்றே, சட்டங்கள் இயற்றுவதற்கு அதிகாரம் உடையது ஆகும், அவையாவன:—

(அ) பருத்தி மற்றும் கம்பளி நெசவங்கள் (கொட்டை நீக்கப்பட்ட பருத்தி மற்றும் கொட்டை நீக்கப்படாத பருத்தி அல்லது கழிவுப் பருத்தி உள்ளடங்கலான) கச்சாப் பருத்தி, பருத்திக் கொட்டை (செய்தியிதழ், அச்சுத்தாள் உள்ளடங்கலான) தாள், (உண்தகு எண்ணெய் வித்துக்கள் மற்றும் எண்ணெய் உள்ளடங்கலான) உணவுப் பொருட்கள், (பிண்ணாக்குகளும் பிற செறிமங்களும் உள்ளடங்கலான),கால்நடைத் தீவனம் (கல்கரி மற்றும் நிலக்கரியின் வழிப்பொருட்கள் உள்ளடங்கலான) நிலக்கரி, இரும்பு, உருக்கு, அப்பிரகம் ஆகியவற்றில், ஒரு மாநிலத்திற்குள் நடைபெறும் வணிகமும் வாணிபமும்; மேலும், அவற்றின் உற்பத்தி, வழங்கீடு, பகிர்ந்தளிப்பு ஆகியவை;

(ஆ) (அ) கூறில் குறிப்பிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த சட்டங்களுக்கு எதிரான குற்றச்செயல்கள், அப்பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்து உச்ச நீதிமன்றம் தவிர்த்து, பிற நீதிமன்றங்கள் அனைத்தின் அதிகாரவரம்பும் அதிகாரங்களும், மற்றும் அப்பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்து, நீதிமன்றம் எதிலும் பெறப்படும் கட்டணங்கள் நீங்கலான பிற கட்டணங்கள்;

1. அரசமைப்புச் (இருபத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1971 இன் 3 ஆம் பிரிவினால் (5–11–1971 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. (4) மற்றும் (5) ஆம் கூறுகள், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 55 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), புகுத்தப்பட்டன. இந்தப் பிரிவு, உச்ச நீதிமன்றத்தால், *மினர்வாமில்ஸ் லிமிடெட் மற்றும் பிறர் எதிர் இந்திய ஒன்றியம் மற்றும் பிறர்* என்ற வழக்கில் செல்லாநிலையதென விளம்பப்பட்டுள்ளது [ஏஐஆர் 1980 உநீ.1789.]

3. ''தற்காலிகமான மற்றும் மாறும் இடைக்காலத்திற்கான வகையங்கள்'' என்பதற்கு, அரசமைப்புச் (பதின்மூன்றாம் திருத்தம்) சட்டம், 1962 இன் 2 ஆம் பிரிவினால் (1–12–1963 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

but any law made by Parliament, which Parliament would not but for the provisions of this article have been competent to make, shall, to the extent of the incompetency, cease to have effect on the expiration of the said period, except as respects things done or omitted to be done before the expiration thereof.

****[1 370. Temporary provisions with respect to the State of Jammu and Kashmir:**

(1) Notwithstanding anything in this Constitution,—

(a) the provisions of article 238 shall not apply in relation to the State of Jammu and Kashmir;

(b) the power of Parliament to make laws for the said State shall be limited to—

(i) those matters in the Union List and the Concurrent List which, in consultation with the Government of the State, are declared by the President to correspond to matters specified in the Instrument of Accession governing the accession of the State to the Dominion of India as the matters with respect to which the Dominion Legislature may make laws for that State; and

(ii) such other matters in the said Lists as, with the concurrence of the Government of the State, the President may by order specify.

**Explanation.**— For the purposes of this article, the Government of the State means the person for the time being recognised by the President as the Maharaja of Jammu and Kashmir acting on the advice of the Council of Ministers for the time being in office under the Maharaja's Proclamation dated the fifth day of March, 1948;

(c) the provisions of article 1 and of this article shall apply in relation to that State;

(d) such of the other provisions of this Constitution shall apply in relation to that State subject to such exceptions and modifications as the President may by order specify:

Provided that no such order which relates to the matters specified in the Instrument of Accession of the State referred to in paragraph (i) of sub-clause (b) shall be issued except in consultation with the Government of the State:

Provided further that no such order which relates to matters other than those referred to in the last preceding proviso shall be issued except with the concurrence of that Government.

ஆனால், இந்த உறுப்பின் வகையங்கள் இல்லாதிருந்தால் எவ்வகைச் சட்டத்தை இயற்றுவதற்கு நாடாளுமன்றம் தகுதிறம் கொண்டிருக்காதோ அவ்வகைச் சட்டம் எதனையும் நாடாளுமன்றம் இயற்றியிருக்குமாயின், அந்தச் சட்டம், மேற்சொன்ன காலஅளவு கழிவுற்றதும், நாடாளுமன்றத்தின் தகுதிறமின்மையின் அளவுக்குச் செல்திறம் அற்றுப்போகும்; எனினும், அக்காலஅளவு கழிவுறுவதற்கு முன்பு செய்யப்பட்ட அல்லது செய்யாது விடப்பட்ட எதுவும் பாதிக்கப்படுவதில்லை.

**[[1]370. **ஜம்மு–காஷ்மீர் மாநிலம் பொறுத்த தற்காலிக வகையங்கள் :**

(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்,—

(அ) 238 ஆம் உறுப்பின் வகையங்கள் ஜம்மு—காஷ்மீர் மாநிலம் தொடர்பாகப் பொருந்துவதில்லை;

(ஆ) மேற்சொன்ன மாநிலத்திற்குச் சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம் பின்வரும் வரம்பிற்குள் அடங்கியதாக இருக்கும்—

(i) இந்தியத் தன்னாட்சியத்துடன் அந்த மாநிலத்தின் இணைப்பை நெறிப்படுத்தும் இணைப்பு முறையாவணத்தில் தன்னாட்சியச் சட்டமன்றம் அந்த மாநிலத்தைப் பொறுத்துச் சட்டங்கள் இயற்றலாம் எனக் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகளுக்கு நேரிணையானவை என்று ஒன்றியத்துப் பட்டியலிலும் ஒருங்கியல் பட்டியலிலும் உள்ள பொருட்பாடுகளில் எவற்றை அந்த மாநில அரசுடன் கலந்தாய்வு செய்த பின்பு குடியரசுத்தலைவர் விளம்புகின்றாரோ அந்தப் பொருட்பாடுகள்; மற்றும்

(ii) அந்த மாநில அரசின் ஒருங்கிசைவுடன், குடியரசுத்தலைவர் ஆணையின்வழி குறித்துரைக்கும் மேற்சொன்ன பட்டியல்களிலுள்ள பிற பொருட்பாடுகள்.

**விளக்கம். –** இந்த உறுப்பினைப் பொறுத்தவரை, அந்த மாநிலத்தின் அரசு என்பது, 1948 மார்ச் ஐந்தாம் தேதியிட்ட ஜம்மு–காஷ்மீர் மகாராஜாவின் சாற்றாணையின்படி அப்போதைக்குப் பதவியிலுள்ள அமைச்சரவையின் தேர்வுரையின் மீது செயல்படுகின்ற அதன் மகாராஜாவாகக் குடியரசுத்தலைவரால் அப்போதைக்கு ஏற்பளிக்கப்பட்டுள்ள ஒருவர் என்று பொருள்படும்.

(இ) 1 ஆம் உறுப்பின் வகையங்களும் இந்த உறுப்பின் வகையங்களும் அந்த மாநிலம் தொடர்பாகப் பொருந்துவன ஆகும்;

(ஈ) குடியரசுத்தலைவர் ஆணையின்வழி குறித்துரைக்கும் இந்த அரசமைப்பின் பிற வகையங்கள், அவர், அந்த ஆணையின்வழி குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டு அந்த மாநிலம் தொடர்பாகப் பொருந்துவன ஆகும்:

**வரம்புரையாக :** அந்த மாநில அரசுடன் கலந்தாய்வு செய்த பின்பு அன்றி, (ஆ) உட்கூறின் (i) ஆம் பத்தியில் சுட்டப்பட்டுள்ள அந்த மாநிலம் இணைவதற்கான முறையாவணத்தில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகள் தொடர்பான அத்தகைய ஆணை எதுவும் பிறப்பிக்கப்படுதல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக :** முந்திய வரம்புரையில் சுட்டப்பட்டவை அல்லாத பிற பொருட்பாடுகள் தொடர்பான ஆணை எதுவும், அந்த அரசின் ஒருங்கிசைவுடன் அல்லாமல் பிறப்பிக்கப்படுதல் ஆகாது.

---

** In exercise of the powers conferred by clause (3) of article 370 read with clause (1) of article 370 of the Constitution of India, the President, on the recommendation of Parliament, is pleased to declare that, as from the 6th August, 2019, all clauses of saidarticle 370 shall cease to be operative except the following which shall read as under, namely:–

**"370. All provisions of this Constitution, as amended from time to time, without any modifications or exceptions, shall apply to the State of Jammu and Kashmir notwithstanding anything contrary contained in article 152 or article 308 or any other article of this Constitution or any other provision of the Constitution of Jammu and Kashmir or any law, document, judgement, ordinance, order, by-law, rule, regulation, notification, custom or usage having the force of law in the territory of India, or any other instrument, treaty or agreement as envisaged under article 363 or otherwise.".**

(Ministry of Law and Justice Order No. C.O. 273 dated the 5th August, 2019).

1. In exercise of the powers conferred by this article the President, on the recommendation of the Constituent Assembly of the State of Jammu and Kashmir, declared that, as from the 17th day of November, 1952, the said art. 370 shall be operative with the modification that for the Explanation in cl. (1) thereof, the following Explanation is substituted, namely:–

"Explanation.– For the purposes of this article, the Government of the State means the person for the time being recognized by the President on the recommendation of the Legislative Assembly of the State as the *Sadar-I Riyasat of Jammu and Kashmir, acting on the advice of the Council of Ministers of the State for the time being in office.".

(Ministry of Law Order No. C.O. 44 dated the 15th November, 1952). *Now "Governor".

** இந்திய அரசமைப்பின் 370 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறுடன் சேர்த்துப் வாசிக்கப்படும் 370 ஆம் உறுப்பின் (3) ஆம் கூறினால் அளிக்கப்பட்ட அதிகாரங்களைச் செலுத்துகையில், குடியரசுத்தலைவர், நாடாளுமன்றத்தின் பரிந்துரைகளின் பேரில், 2019, ஆகஸ்டு 6 அன்றிலிருந்து மேற்சொன்ன 370 ஆம் உறுப்பின் பின்வரும் கூறுகள் தவிர அனைத்துக் கூறுகளும் செயற்படுவது அற்றுப்போதல் வேண்டும் என்று விளம்ப விழைகிறார். அது கீழ்க்கண்டவாறு வாசித்தல் வேண்டும், அதாவது:—

**"370. இந்த அரசமைப்பின் 152 ஆம் உறுப்பு அல்லது 308 ஆம் உறுப்பு அல்லது பிற உறுப்பு ஒன்றில் அல்லது ஜம்மு—காஷ்மீர் அரசமைப்பின் பிற வகையம் ஒன்றில் அல்லது எந்தச் சட்டம், ஆவணம், தீர்ப்புரை, அவசரச்சட்டம், ஆணை, துணைவிதி, விதி, ஒழுங்குறுத்தும்விதி, அறிவிக்கை, அல்லது இந்திய ஆட்சிநிலவரையில் சட்ட செல்லாற்றல் கொண்ட வழக்கம் அல்லது வழக்காறு அல்லது பிற முறையாவணம் 363 ஆம் உறுப்பின் கீழ் அல்லது பிறவாறாக எதிர்நோக்கப்படும் உடன்படிக்கை அல்லது உடன்பாட்டில் பிறவாறு எது எவ்வாறிருப்பினும் அவ்வப்போது திருத்தம் செய்யப்படுமாறு எந்த மாற்றமைவுகளும் அல்லது விதிவிலக்குகளுமின்றி இந்த அரசமைப்பின் அனைத்து வகையங்களும் பொருந்தும்.".**

(2019, ஆகஸ்டு 5 தேதியிடப்பட்ட சட்டம் மற்றும் நீதி அமைச்சக ஆணை எண். சி.ஒ. 273)

1. இந்த உறுப்பினால் அளிக்கப்பட்ட அதிகாரங்களைச் செலுத்துகையில் குடியரசுத்தலைவர், ஜம்மு—காஷ்மீர் மாநில அரசமைப்புப் பேரவையின் பரிந்துரைகளின் பேரில், 1952, நவம்பர் 17 ஆம் நாளிலிருந்து, மேற்சொன்ன 370 ஆம் உறுப்பு, அதன் (1) ஆம் கூறில் உள்ள விளக்கத்திற்கு, பின்வரும் விளக்கம் மாற்றாக அமைக்கப்படுகிறது என்ற மாற்றமைவுடன் செயற்பாடு பெறுதல் வேண்டும். அதாவது:—

"**விளக்கம்.** — இந்த உறுப்பினைப் பொறுத்தவரை, அந்த மாநிலத்தின் அரசு என்பது அப்போதைக்குப் பதவியிலுள்ள மாநில அமைச்சரவையின் தேர்வுரையினால் செயல்படும் அந்த மாநிலத்தின் சட்டமன்றத்தின் பரிந்துரையினால் ஜம்மு—காஷ்மீரின் *சாதர்—ஐ—ரியா சாட் ஆக அப்போதைக்கு ஏற்பளிக்கப்பட்டவர்."

(1952, நவம்பர் 15 ஆம் தேதிய சட்ட அமைச்சரவையின் ஆணை எண். சி.ஒ.எ.ண்44) *தற்போது "ஆளுநர்"

(2) If the concurrence of the Government of the State referred to in paragraph (ii) of sub-clause (b) of clause (1) or in the second proviso to sub-clause (d) of that clause be given before the Constituent Assembly for the purpose of framing the Constitution of the State is convened, it shall be placed before such Assembly for such decision as it may take thereon.

(3) Notwithstanding anything in the foregoing provisions of this article, the President may, by public notification, declare that this article shall cease to be operative or shall be operative only with such exceptions and modifications and from such date as he may specify:

Provided that the recommendation of the Constituent Assembly of the State referred to in clause (2) shall be necessary before the President issues such a notification.]

[1][**371. Special provision with respect to the States of [2]*** Maharashtra and Gujarat :**

[3](1)***

(2) Notwithstanding anything in this Constitution, the President may by order made with respect to [4][the State of Maharashtra or Gujarat], provide for any special responsibility of the Governor for—

(a) the establishment of separate development boards for Vidarbha, Marathwada, [5][and the rest of Maharashtra or, as the case may be], Saurashtra, Kutch and the rest of Gujarat with the provision that a report on the working of each of these boards will be placed each year before the State Legislative Assembly;

(b) the equitable allocation of funds for developmental expenditure over the said areas, subject to the requirements of the State as a whole; and

(c) an equitable arrangement providing adequate facilities for technical education and vocational training, and adequate opportunities for employment in services under the control of the State Government, in respect of all the said areas, subject to the requirements of the State as a whole.]

---

1.Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 22 (w.e.f. 1-11-1956).

2.The words "Andhra Pradesh", omitted by Constitution (Thirty-second Amendment) Act, 1973, s. 2 (w.e.f. 1-7-1974).

3.Cl. (1) omitted by *ibid.*

4.Subs. by the Bombay Reorganisation Act, 1960 (11 of 1960), s. 85, for "the State of Bombay" (w.e.f. 1-5-1960).

5.Subs. by *ibid*, for "the rest of Maharashtra" (w.e.f. 1-5-1960).

(2). (1) ஆம் கூறின் (ஆ) உட்கூறின் (ii) ஆம் பத்தியில், அல்லது அந்தக் கூறின் (ஈ) உட்கூறின் இரண்டாம் வரம்புரையில் சுட்டப்பட்டுள்ள அந்த மாநில அரசின் ஒருங்கிசைவானது, அந்த மாநிலத்தின் அரசமைப்பை உருவாக்கும் நோக்கத்திற்காக அரசமைப்புப் பேரவை கூட்டப்படுவதற்கு முன்பே கொடுக்கப்பட்டிருப்பின், அத்தகைய பேரவை அதன் மீது எடுக்கும் முடிபுக்கென அப்பேரவையில் அது வைக்கப்படும்.

(3) இந்த உறுப்பின் மேலேகண்ட வகையங்களில் எது எவ்வாறிருப்பினும், குடியரசுத்தலைவர், பொது அறிவிக்கை வாயிலாக, தாம் குறித்துரைக்கும் தேதியிலிருந்து இந்த உறுப்பு செயற்படுவது அற்றுப்போகும் என்றோ அவ்வாறு குறித்துரைக்கும் விதிவிலக்குகளுடனும் மாற்றமைவுகளுடனும் மட்டுமே செயற்படும் என்றோ விளம்பலாம்:

**வரம்புரையாக** : குடியரசுத்தலைவர் அத்தகைய ஓர் அறிவிக்கையைப் பிறப்பிப்பதற்கு முன்பு, (2) ஆம் கூறில் சுட்டப்பட்டுள்ள அந்த மாநிலத்தின் அரசமைப்புப் பேரவையின் பரிந்துரை அவசியமாகும்.]

**[1][371. [2]*** மகாராஷ்டிரம் மற்றும் குஜராத் மாநிலங்களைப் பொறுத்த தனியுறு வகையங்கள் :**

[3](1)***

(2) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிப்பினும், குடியரசுத்தலைவர், [4][மகாராஷ்டிரம் அல்லது குஜராத் மாநிலம்] பொறுத்துத் தாம் பிறப்பிக்கும் ஆணையின்வழி–

(அ) விதர்பா, மராத்வாடா, [5][மகாராஷ்டிரத்தின் எஞ்சிய பகுதி ஆகியவற்றிற்காக அல்லது, நேர்வுக்கேற்ப,] சௌராஷ்டிரம், கட்சு, குஜராத்தின் எஞ்சிய பகுதி ஆகியவற்றிற்காக, தனித்தனியாக வளர்ச்சி வாரியங்களை, அவ்வாரியங்கள் ஒவ்வொன்றின் செயல்முறை பற்றிய அறிக்கை ஒன்று ஆண்டுதோறும் மாநிலச் சட்டமன்றப் பேரவையின் முன்பு வைக்கப்படும் என்னும் வகையத்துடன், நிறுவுவதற்காகவும்,

(ஆ) அந்த மாநிலம் முழுவதற்குமான தேவைகளுக்கு உட்பட்டு, மேற்சொன்ன பரப்பிடங்களின் வளர்ச்சிக்குரிய செலவினத்திற்கான நிதிகளை நேரிய முறையில் பகிர்ந்து ஒதுக்குவதற்காகவும்,

(இ) அந்த மாநிலம் முழுவதற்குமான தேவைகளுக்கு உட்பட்டு, மேற்சொன்ன அனைத்துப் பரப்பிடங்களையும் பொறுத்து, தொழில்நுட்பக் கல்வி, உறுதொழில் பயிற்சி ஆகியவற்றிற்குப் போதிய வசதிகளையும், மாநில அரசின் கட்டாள்கையின் கீழுள்ள பணியங்களில் வேலையமர்த்தத்திற்குப் போதிய வாய்ப்பு நலன்களையும் அளிக்கும் ஒரு நேரிய ஏற்பாடு செய்வதற்காகவும்

ஆளுநருக்குத் தனிப்பொறுப்பு எதுவும் அளித்து வகைசெய்யலாம்.]

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 22 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

2. ''ஆந்திரப்பிரதேசம்'' என்ற சொல், அரசமைப்புச் (முப்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1973 இன் 2 ஆம் பிரிவினால் (1–7–1974 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

3. (1) ஆம் கூறு, *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டது.

4. ''பம்பாய் மாநிலம்'' என்பதற்கு, பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 85 ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

5. ''மகாராஷ்டிரத்தின் எஞ்சிய பகுதி'' என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

[1][**371A. Special provision with respect to the State of Nagaland :**

(1) Notwithstanding anything in this Constitution,—

(a) no Act of Parliament in respect of—

(i) religious or social practices of the Nagas,

(ii) Naga customary law and procedure,

(iii) administration of civil and criminal justice involving decisions according to Naga customary law,

(iv) ownership and transfer of land and its resources,

shall apply to the State of Nagaland unless the Legislative Assembly of Nagaland by a resolution so decides;

(b) the Governor of Nagaland shall have special responsibility with respect to law and order in the State of Nagaland for so long as in his opinion internal disturbances occurring in the Naga Hills- Tuensang Area immediately before the formation of that State continue therein or in any part thereof and in the discharge of his functions in relation thereto the Governor shall, after consulting the Council of Ministers, exercise his individual judgment as to the action to be taken:

Provided that if any question arises whether any matter is or is not a matter as respects which the Governor is under this sub-clause required to act in the exercise of his individual judgment, the decision of the Governor in his discretion shall be final, and the validity of anything done by the Governor shall not be called in question on the ground that he ought or ought not to have acted in the exercise of his individual judgment:

Provided further that if the President on receipt of a report from the Governor or otherwise is satisfied that it is no longer necessary for the Governor to have special responsibility with respect to law and order in the State of Nagaland, he may by order direct that the Governor shall cease to have such responsibility with effect from such date as may be specified in the order;

---

1. Ins. by the Constitution (Thirteenth Amendment) Act, 1962, s. 2 (w.e.f. 1-12-1963).

[1][371 (அ). நாகாலாந்து மாநிலம் பொறுத்த தனியுறு வகையம் :

(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்,—

(அ) (i) நாகர்களின் சமய அல்லது சமுதாய ஒழுகலாறுகள்,

(ii) நாகர் மரபுவழக்குச் சட்டம் மற்றும் நெறிமுறை,

(iii) நாகர் மரபுவழக்குச் சட்டத்தின்படியான முடிபுகள் உள்ளடங்கிய உரிமையியல் மற்றும் குற்றவியல் நீதி நிருவாகம்,

(iv) நிலத்தின் சொத்துரிமை, உரிமைமாற்றம் மற்றும் அதன் வளஆதாரங்கள்

ஆகியவை பொறுத்த நாடாளுமன்றச் சட்டம் எதுவும், நாகாலாந்து மாநிலச் சட்டமன்றப் பேரவை ஒரு தீர்மானத்தின் வாயிலாக நாகாலாந்து மாநிலத்திற்குப் பொருந்துதல் வேண்டும் என முடிபு செய்திருந்தாலன்றி, அவ்வாறு பொருந்துதல் ஆகாது;

(ஆ) நாகாலாந்து ஆளுநர், அந்த மாநிலம் உருவாக்கப்பட்டதற்கு உடன்முன்பு, நாகர் குன்றுகள்–துயென்சாங் பரப்பிடத்தில் நடைபெற்ற உள்நாட்டுக் குழப்பங்கள், அதில் அல்லது அதன் பகுதி எதிலும் தொடர்ந்து நிகழ்வதாகக் கருதப்படுகிற காலம் வரையில், நாகாலாந்து மாநிலத்தில் சட்டம், ஒழுங்கு பொறுத்துத் தனிப் பொறுப்பு உடையவர் ஆவார்; மேலும், அது தொடர்பாகத் தம் பதவிப்பணிகளை ஆற்றுகையில், ஆளுநர், தாம் எடுக்க வேண்டிய நடவடிக்கை குறித்து அமைச்சரவையைக் கலந்தாய்வு செய்த பின்பு, தாம் முடிபு செய்கிறபடியே செயற்படுவார்:

**வரம்புரையாக** : பொருட்பாடு ஒன்று, இந்த உட்கூறின்படி ஆளுநர் தாமே முடிபு செய்கிறபடியே செயற்படுமாறு வேண்டுறுத்தப்பட்டதா இல்லையா என்பதைப் பொறுத்து வினா எதுவும் எழுமாயின், ஆளுநர், தம் உளத்தேர்வின்படி செய்யும் முடிபே அறுதியானது ஆகும்; மேலும், ஆளுநர், தாமே முடிபு செய்கிறபடி செயற்பட்டிருக்க வேண்டும் அல்லது கூடாது என்பதைக் காரணமாகக் காட்டி, அவரால் செய்யப்பட்ட எதனின் செல்லுந்தன்மையையும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக** : குடியரசுத்தலைவர், ஆளுநரிடமிருந்து ஓர் அறிக்கையைப் பெற்றதன்மேல் அல்லது பிறவாறு, நாகாலாந்து மாநிலத்தில் சட்டம், ஒழுங்கு பொறுத்து ஆளுநர் தனிப்பொறுப்பு உடையவராக இருப்பது இனிமேற்கொண்டு தேவையில்லை என்று தெளிவுறக் காண்பாராயின், அவர், ஆணையின்வழி, அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் தேதியிலிருந்து செல்திறம் பெறுமாறு, ஆளுநர் அத்தகைய பொறுப்பு உடையவராயிருப்பது அற்றுப்போகும் என்று பணிக்கலாம்;

---

1. அரசமைப்புச் (பதின்மூன்றாம் திருத்தம்) சட்டம், 1962 இன் 2 ஆம் பிரிவினால் (1–12–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(c) in making his recommendation with respect to any demand for a grant, the Governor of Nagaland shall ensure that any money provided by the Government of India out of the Consolidated Fund of India for any specific service or purpose is included in the demand for a grant relating to that service or purpose and not in any other demand;

(d) as from such date as the Governor of Nagaland may by public notification in this behalf specify, there shall be established a regional council for the Tuensang district consisting of thirty-five members and the Governor shall in his discretion make rules providing for—

(i) the composition of the regional council and the manner in which the members of the regional council shall be chosen:

Provided that the Deputy Commissioner of the Tuensang district shall be the Chairman *ex officio* of the regional council and the Vice-Chairman of the regional council shall be elected by the members thereof from amongst themselves;

(ii) the qualifications for being chosen as, and for being, members of the regional council;

(iii) the term of office of, and the salaries and allowances, if any, to be paid to members of, the regional council;

(iv) the procedure and conduct of business of the regional council;

(v) the appointment of officers and staff of the regional council and their conditions of services; and

(vi) any other matter in respect of which it is necessary to make rules for the constitution and proper functioning of the regional council.

(2) Notwithstanding anything in this Constitution, for a period of ten years from the date of the formation of the State of Nagaland or for such further period as the Governor may, on the recommendation of the regional council, by public notification specify in this behalf,—

(a) the administration of the Tuensang district shall be carried on by the Governor;

(b) where any money is provided by the Government of India to the Government of Nagaland to meet the requirements of the State of Nagaland as a whole, the Governor shall in his discretion arrange for an equitable allocation of that money between the Tuensang district and the rest of the State;

(இ) நாகாலாந்து ஆளுநர், ஒரு மானியத்திற்கான கோரிக்கை எதனையும் பொறுத்துத் தமது பரிந்துரைகளைச் செய்கையில், குறிப்பிட்ட பணியம் அல்லது நோக்கம் எதற்கும் இந்தியத் திரள்நிதியத்திலிருந்து இந்திய அரசினால் அளிக்கப்படும் பணத்தொகை எதுவும், பிற கோரிக்கை எதிலும் சேர்க்கப்படாமல், அந்தப் பணியம் அல்லது நோக்கம் தொடர்பான ஒரு மானியத்திற்கான கோரிக்கையிலேயே சேர்க்கப்படுமாறு செய்வார்;

(ஈ) நாகாலாந்து ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாக, இதன்பொருட்டு குறித்துரைக்கும் தேதியிலிருந்து, துயென்சாங் மாவட்டத்திற்கென முப்பத்தைந்து உறுப்பினர்களைக் கொண்ட வட்டார மன்றம் ஒன்று அமைக்கப்படும்; மேலும், ஆளுநர் தமது உளத்தேர்வின்படி பின்வருவனவற்றுக்கு விதிகள் வகுப்பார்—

(i) வட்டார மன்றத்தின் கட்டமைப்பு, அந்த வட்டார மன்றத்தின் உறுப்பினர்களைத் தெரிந்தெடுக்கும் முறை:

**வரம்புரையாக** : துயென்சாங் மாவட்டத்தின் துணை ஆணையர், அந்த வட்டார மன்றத்தின் *பதவிவழித்* தலைமையாளராக இருப்பார்; மேலும், அந்த வட்டார மன்றத்தின் உறுப்பினர்கள், தங்களிடமிருந்து அதன் துணைத்தலைமையாளரைத் தேர்ந்தெடுப்பார்கள்;

(ii) வட்டார மன்றத்தின் உறுப்பினர்களாகத் தெரிந்தெடுக்கப்படுவதற்கும் உறுப்பினர்களாக இருப்பதற்குமான தகுதிப்பாடுகள்;

(iii) வட்டார மன்றத்தின் பதவிக்காலம், அதன் உறுப்பினர்களுக்கு வழங்கப்படும் வரையூதியங்களும் படித்தொகைகளும், எவையேனுமிருப்பின், அவை;

(iv) வட்டார மன்றத்தின் அலுவல் நெறிமுறை; அதன் அலுவல் நடத்துமுறை;

(v) வட்டார மன்றத்தின் அலுவலர்களையும் பணியாளர் தொகுதியினையும் அமர்த்துதல்; மேலும் அவர்களுடைய பணிவரைக்கட்டுகள்; மற்றும்

(vi) வட்டார மன்றத்தை அமைப்பதற்கும் அது முறையாகச் செயலாற்றுவதற்கும் விதிகள் வகுப்பது பொறுத்துத் தேவைப்படுகிற பிற பொருட்பாடு எதுவும்.

**(2)** இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், நாகாலாந்து மாநிலம் உருவான தேதியிலிருந்து பத்து ஆண்டுக் காலஅளவுக்கு அல்லது ஆளுநர், வட்டார மன்றத்தின் பரிந்துரையின்மீது, இதன்பொருட்டு பொது அறிவிக்கை வாயிலாகக் குறித்துரைக்கும் கூடுதலான கால அளவிற்கு,—

(அ) துயென்சாங் மாவட்டத்தின் நிருவாகம், ஆளுநரால் நடத்தப் பெறுதல் வேண்டும்;

(ஆ) நாகாலாந்து மாநிலம் முழுவதற்குமான தேவைகளை நிறைவுறுத்துவதற்கு இந்திய அரசினால் நாகாலாந்து அரசிற்குப் பணத்தொகை எதுவும் அளிக்கப்படுகிறவிடத்து, ஆளுநர், தமது உளத்தேர்வின்படி, துயென்சாங் மாவட்டத்திற்கும் அந்த மாநிலத்தின் எஞ்சிய பகுதிகளுக்கும் இடையே அந்தப் பணத்தொகையை நேரிய முறையில் பகிர்ந்து ஒதுக்குவதற்கு ஏற்பாடு செய்வார்;

(c) no Act of the Legislature of Nagaland shall apply to Tuensang district unless the Governor, on the recommendation of the regional council, by public notification so directs and the Governor in giving such direction with respect to any such Act may direct that the Act shall in its application to the Tuensang district or any part thereof have effect subject to such exceptions or modifications as the Governor may specify on the recommendation of the regional council:

Provided that any direction given under this sub-clause may be given so as to have retrospective effect;

(d) the Governor may make regulations for the peace, progress and good government of the Tuensang district and any regulations so made may repeal or amend with retrospective effect, if necessary, any Act of Parliament or any other law which is for the time being applicable to that district;

(e) (i) one of the members representing the Tuensang district in the Legislative Assembly of Nagaland shall be appointed Minister for Tuensang affairs by the Governor on the advice of the Chief Minister and the Chief Minister in tendering his advice shall act on the recommendation of the majority of the members as aforesaid;

(ii) the Minister for Tuensang affairs shall deal with, and have direct access to the Governor on, all matters relating to the Tuensang district but he shall keep the Chief Minister informed about the same;

(f) notwithstanding anything in the foregoing provisions of this clause, the final decision on all matters relating to the Tuensang district shall be made by the Governor in his discretion;

(g) in articles 54 and 55 and clause (4) of article 80, references to the elected members of the Legislative Assembly of a State or to each such member shall include references to the members or member of the Legislative Assembly of Nagaland elected by the regional council established under this article;

(h) in article 170—

(i) clause (1) shall, in relation to the Legislative Assembly of Nagaland, have effect as if for the word "sixty", the word "forty-six" had been substituted;

(இ) ஆளுநர், வட்டார மன்றத்தின் பரிந்துரையின் மீது, பொது அறிவிக்கை வாயிலாக, நாகாலாந்து சட்டமன்றத்தின் சட்டம் எதுவும் துயென்சாங் மாவட்டத்திற்குப் பொருந்தும் எனப் பணித்தாலன்றி, அச்சட்டம் அவ்வாறு அந்த மாவட்டத்திற்கும் பொருந்துவதில்லை; மேலும், அத்தகைய சட்டம் எதனையும் பொறுத்து ஆளுநர் அத்தகைய பணிப்புரையை இடுங்கால், அச்சட்டம் துயென்சாங் மாவட்டத்திற்கு அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்துவதில், வட்டார மன்றத்தின் பரிந்துரையின் மீது, ஆளுநர் தாம் குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு செல்திறம் பெறும் என்று பணிக்கலாம்:

**வரம்புரையாக :** இந்த உட்கூறின்படி இடப்படும் பணிப்புரை எதுவும், முன்மேவு செல்திறம் பெறுமாறு இடப்படலாம்;

(ஈ) ஆளுநர், துயென்சாங் மாவட்டத்தின் அமைதி, முன்னேற்றம், தன்னாட்சி ஆகியவற்றிற்காக ஒழுங்குறுத்தும் விதிகளை வகுக்கலாம்; மேலும், அவ்வாறு வகுக்கப்படும் ஒழுங்குறுத்தும் விதிகள், நாடாளுமன்றச் சட்டம் எதனையும் அல்லது அந்த மாவட்டத்திற்கு அப்போதைக்குப் பொருந்துகிற பிற சட்டம் எதனையும், தேவைப்படுமாயின் முன்மேவு செல்திறம் பெறுமாறு நீக்கறவு செய்யலாம் அல்லது திருத்தம் செய்யலாம்;

(உ) (i) நாகாலாந்து சட்டமன்றப் பேரவையில் துயென்சாங் மாவட்டத்தைச் சார்பாற்றம் செய்கின்ற உறுப்பினர்களில் ஒருவர் ஆளுநரால், முதலமைச்சரின் தேர்வுரையின் பேரில், துயென்சாங் அலுவற்பாடுகளுக்கான அமைச்சராக அமர்த்தப்பெறுவார்; மேலும், முதலமைச்சர் தமது தேர்வுரையை வழங்குங்கால், மேற்சொன்ன உறுப்பினர்களில் பெரும்பான்மையினரின் பரிந்துரையின்மீது செயல்படுவார்;

(ii) துயென்சாங் அலுவற்பாடுகளுக்கான அமைச்சர், துயென்சாங் மாவட்டம் தொடர்பான பொருட்பாடுகள் அனைத்தின் மீதும் நடவடிக்கை எடுப்பார்; மேலும், அவற்றைப் பொறுத்து ஆளுநருடன் நேரடித் தொடர்பு கொண்டு இயங்குவார்; ஆனால், அது குறித்து அவர் முதலமைச்சருக்குத் தெரிவித்து வருதல் வேண்டும்;

(ஊ) இந்தக் கூறின் மேலேகண்ட வகையங்களில் எது எவ்வாறிருப்பினும், துயென்சாங் மாவட்டம் தொடர்பான பொருட்பாடுகள் அனைத்தையும் பற்றிய அறுதியான முடிவினை ஆளுநர் தமது உளத்தேர்வின்படி எடுப்பார்;

(எ) 54, 55 ஆகிய உறுப்புகளிலும், 80 ஆம் உறுப்பின் (4) ஆம் கூறிலும், ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களை அல்லது அத்தகைய உறுப்பினர் ஒவ்வொருவரையும் பற்றிய சுட்டுகைகள், இந்த உறுப்பின்படி நிறுவப்பெற்ற வட்டார மன்றத்தால் நாகாலாந்து சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களையும் அல்லது உறுப்பினரையும் சுட்டுவதாகும்;

(ஏ) 170 ஆம் உறுப்பில்—

(i) (1) ஆம் கூறு, நாகாலாந்து சட்டமன்றப் பேரவை தொடர்பாக, "அறுபது"என்னும் சொல்லுக்கு மாற்றாக "நாற்பத்தாறு" என்னும் சொல் அமைக்கப்பட்டிருந்தாற்போன்று செல்திறம் பெறும்;

(ii) in the said clause, the reference to direct election from territorial constituencies in the State shall include election by the members of the regional council established under this article;

(iii) in clauses (2) and (3), references to territorial constituencies shall mean references to territorial constituencies in the Kohima and Mokokchung districts.

(3) If any difficulty arises in giving effect to any of the foregoing provisions of this article, the President may by order do anything (including any adaptation or modification of any other article) which appears to him to be necessary for the purpose of removing that difficulty:

Provided that no such order shall be made after the expiration of three years from the date of the formation of the State of Nagaland.

**Explanation.**— In this article, the Kohima, Mokokchung and Tuensang districts shall have the same meanings as in the State of Nagaland Act, 1962.]

**[1][371B. Special provision with respect to the State of Assam :**

Notwithstanding anything in this Constitution, the President may, by order made with respect to the State of Assam, provide for the constitution and functions of a committee of the Legislative Assembly of the State consisting of members of that Assembly elected from the tribal areas specified in [2][Part I] of the table appended to paragraph 20 of the Sixth Schedule and such number of other members of that Assembly as may be specified in the order and for the modifications to be made in the rules of procedure of that Assembly for the constitution and proper functioning of such committee.]

**[3][371C. Special provision with respect to the State of Manipur :**

(1) Notwithstanding anything in this Constitution, the President may, by order made with respect to the State of Manipur, provide for the constitution and functions of a committee of the Legislative Assembly of the State consisting of members of that Assembly elected from the Hill Areas of that State, for the modifications to be made in the rules of business of the Government and in the rules of procedure of the Legislative Assembly of the State and for any special responsibility of the Governor in order to secure the proper functioning of such committee.]

---

1. Ins. by the Constitution (Twenty-second Amendment) Act, 1969, s. 4 (w.e.f. 25-9-1969).
2. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 7, for "Part A" (w.e.f. 21-1-1972).
3. Ins. by the Constitution (Twenty-seventh Amendment) Act, 1971, s. 5 (w.e.f. 15-2-1972).

(ii) மேற்சொன்ன கூறில், அந்த மாநிலத்திலுள்ள நிலவரைத் தேர்தல் தொகுதிகளிலிருந்தான நேரடித் தேர்தல் பற்றிய சுட்டுகை, இந்தக் கூறின்படி நிறுவப்பெற்ற வட்டார மன்றத்தின் உறுப்பினர்களால் நடத்தப்படும் தேர்தலையும் சுட்டுவதாகும்;

(iii). (2), (3) ஆகிய கூறுகளில் நிலவரைத் தேர்தல்தொகுதிகள் பற்றிய சுட்டுகைகள், கோஹிமா, மோகோக்சுங் ஆகிய மாவட்டங்களிலுள்ள நிலவரைத் தேர்தல் தொகுதிகளையும் சுட்டுவதாகப் பொருள்படும்.

(3) இந்த உறுப்பின் மேலேகண்ட வகையங்களில் எதனையும் செல்திறப்படுத்துவதில் இடர்ப்பாடு எதுவும் எழுமாயின், குடியரசுத்தலைவர், ஆணையின்வழி, அந்த இடர்ப்பட்டினை அகற்றுவதற்குத் தேவையெனத் தமக்குத் தோன்றுகிற (பிற உறுப்பு எதனின் தழுவமைவு அல்லது மாற்றமைவு உள்ளடங்கலாக) எதனையும் செய்யலாம்:

**வரம்புரையாக :** நாகாலாந்து மாநிலம் உருவாக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்றாண்டுகள் கழிவுற்ற பின்பு, அத்தகைய ஆணை எதுவும் பிறப்பிக்கப்படுதல் ஆகாது.

**விளக்கம். –** இந்த உறுப்பில், கோஹிமா, மோகோக்சுங், துயென்சாங் ஆகிய மாவட்டங்கள், நாகாலாந்து மாநிலச் சட்டம், 1962 இல் உள்ள அதே பொருளினை உடையன ஆகும்.]

**[1][371 (ஆ). அசாம் மாநிலம் பொறுத்த தனியுறு வகையம் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், குடியரசுத்தலைவர், அசாம் மாநிலம் பொறுத்துத் தாம் பிறப்பிக்கும் ஆணையின்வழி, ஆறாம் இணைப்புப்பட்டியலின் 20 ஆம் பத்தியில் இணைக்கப்பட்டுள்ள அட்டவணையில் [2][I ஆம் பகுதியில்] குறித்துரைக்கப்பட்டுள்ள பழங்குடி வரையிடங்களிலிருந்து அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பெறும் உறுப்பினர்களையும், அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் எண்ணிக்கையுள்ள அப்பேரவையின் பிற உறுப்பினர்களையும் கொண்ட அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையின் குழு ஒன்றினை அமைப்பதற்கும் அக்குழுவின் செயற்பணிகளுக்கும், அத்தகைய குழுவினை அமைப்பதற்காகவும் அது முறையாகச் செயற்பணியாற்றுவதற்காகவும் அந்தப் பேரவையின் நெறிமுறை விதிகளில் செய்யப்படவேண்டிய மாற்றமைவுகளுக்கும் வகை செய்யலாம்.]

**[3][371 (இ). மணிப்பூர் மாநிலம் பொறுத்த தனியுறு வகையம் :**

(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், குடியரசுத்தலைவர் மணிப்பூர் மாநிலம் பொறுத்துத் தாம் பிறப்பிக்கும் ஆணையின்வழி, அந்த மாநிலத்தின் குன்றுப் பகுதிகளிலிருந்து அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பெறும் உறுப்பினர்களைக் கொண்ட அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையின் குழு ஒன்றினை அமைப்பதற்கும் அக்குழுவின் செயற்பணிகளுக்கும், அத்தகைய குழு முறையாகச் செயற்பணியாற்றுமாறு செய்வதற்கென அந்த மாநில அரசின் அலுவல்முறை விதிகளிலும் சட்டமன்றப் பேரவையின் நெறிமுறை விதிகளிலும் செய்யப்படவேண்டிய மாற்றமைவுகளுக்கும், ஆளுநருக்கான தனிப்பொறுப்பு எதற்கும் வகைசெய்யலாம்.]

---

1. அரசமைப்புச் (இருபத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1969 இன் 4 ஆம் பிரிவினால் (25–9–1969 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. "பகுதி (அ)" என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 7 ஆம் பிரிவினால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. அரசமைப்புச் (இருபத்து ஏழாம் திருத்தம்) சட்டம், 1971 இன் 5 ஆம் பிரிவினால் (15–2–1972 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(2) The Governor shall annually, or whenever so required by the President, make a report to the President regarding the administration of the Hill Areas in the State of Manipur and the executive power of the Union shall extend to the giving of directions to the State as to the administration of the said areas.

**Explanation.**— In this article, the expression "Hill Areas" means such areas as the President may, by order, declare to be Hill areas.]

**[1][371D. Special provisions with respect to [2][the State of Andhra Pradesh or the State of Telangana] :**

[3][(1) The President may by order made with respect to the State of Andhra Pradesh or the State of Telangana, provide, having regard to the requirement of each State, for equitable opportunities and facilities for the people belonging to different parts of such State, in the matter of public employment and in the matter of education, and different provisions may be made for various parts of the States.]

(2) An order made under clause (1) may, in particular,—

(a) require the State Government to organise any class or classes of posts in a civil service of, or any class or classes of civil posts under, the State into different local cadres for different parts of the State and allot in accordance with such principles and procedure as may be specified in the order the persons holding such posts to the local cadres so organised;

(b) specify any part or parts of the State which shall be regarded as the local area—

(i) for direct recruitment to posts in any local cadre (whether organised in pursuance of an order under this article or constituted otherwise) under the State Government;

(ii) for direct recruitment to posts in any cadre under any local authority within the State; and

---

1. Ins. by the Constitution (Thirty-second Amendment) Act, 1973, s. 3 (w.e.f. 1-7-1974).

2. Subs. by the Andhra Pradesh Reorganisation Act, 2014, s. 97, for "the State of Andhra Pradesh" (w.e.f. 2-6-2014).

3. Subs. by *ibid*.

(2) ஆளுநர், ஆண்டுதோறும் அல்லது குடியரசுத்தலைவர் வேண்டுறுத்துந்தோறும், மணிப்பூர் மாநிலத்திலுள்ள குன்றுப் பகுதிகளின் நிருவாகம் பொறுத்து குடியரசு தலைவருக்கு ஓர் அறிக்கையை அளிப்பார்; மேலும், ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் மேற்சொன்ன பகுதிகளின் நிருவாகம் குறித்து அந்த மாநிலத்திற்குப் பணிப்புரைகள் இடுவதும் அடங்கும்.

**விளக்கம்.** – இந்த உறுப்பில், "குன்றுப் பகுதிகள்" என்னும் சொற்றொடர், குடியரசுத்தலைவரால், ஆணையின்வழி, குன்றுப் பகுதிகள் என விளம்பப்படும் பகுதிகள் என்று பொருள்படும்.]

### [1][371 (ஐ). [2][ஆந்திரப் பிரதேச மாநிலம் அல்லது தெலுங்கானா மாநிலம்] பொறுத்த தனியுறு வகையங்கள் :

[3][(1) குடியரசுத்தலைவர், ஆந்திரப் பிரதேச மாநிலம் அல்லது தெலுங்கானா மாநிலம் பொறுத்துத் தாம் பிறப்பிக்கும் ஆணையின்வழி, ஒவ்வொரு மாநிலத்திற்குமான தேவைகளைக் கருத்திற்கொண்டு அரசு வேலையமர்த்தம் பற்றிய பொருட்பாடுகளிலும் கல்வி பற்றிய பொருட்பாடுகளிலும், அத்தகைய மாநிலத்தின் வெவ்வேறு பகுதிகளைச் சார்ந்த மக்களின் நேர்தகவான வாய்ப்புநலன்களுக்கும் வசதிகளுக்கும் வகை செய்யலாம்; மேலும், அந்த மாநிலத்தின் பல்வேறு பகுதிகளுக்காக வெவ்வேறு முறைகளில் வகை செய்யப்படலாம்.]

(2). (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்படும் ஓர் ஆணை, குறிப்பாக,—

(அ) அந்த மாநிலத்தில் ஒரு குடியியல் பணியத்திலுள்ள பணியடைகளின் வகையை அல்லது வகைகளை அல்லது அந்த மாநிலத்தின் கீழுள்ள பணியடைகளின் வகையை அல்லது வகைகளை, அந்த மாநிலத்தின் பல்வேறு பகுதிகளுக்கான வெவ்வேறு உள்ளமை பணிநிலைப் பிரிவுகளாக அமைக்கும்படியும், அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் நெறிகளுக்கும் நெறிமுறைகளுக்கும் இணங்க அத்தகைய பணியடைகளை வகித்துவருபவர்களை, அவ்வாறு அமைக்கப்பட்ட உள்ளமை பணிநிலைப் பிரிவுகளுக்குப் பகிர்ந்தொதுக்கும்படியும் அந்த மாநில அரசினை வேண்டுறுத்தலாம்;

(ஆ) (i) அந்த மாநில அரசின் கீழுள்ள (இந்த உறுப்பின்படியான ஓர் ஆணையை ஒட்டி அமைக்கப்பட்ட அல்லது பிறவாறு அமைக்கப்பட்ட) உள்ளமை பணிநிலைப் பிரிவு எதிலுமுள்ள பணியடைகளுக்கு நேரடியாக ஆளெடுப்பதற்காகவும்,

(ii) அந்த மாநிலத்திலுள்ள உள்ளாட்சி அதிகாரஅமைப்பு எதனின் கீழுமுள்ள பணி நிலைப் பிரிவு எதற்குமான பணியடைகளுக்கு நேரடியாக ஆளெடுப்பதற்காகவும்,

---

1. அரசமைப்புச் (முப்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1973 இன் 3 ஆம் பிரிவினால் (1–7–1974 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. "ஆந்திரப்பிரதேச மாநிலம்" என்பதற்கு, ஆந்திரப்பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2014 இன் 97 ஆம் பிரிவினால், (2–6–2014 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.

(iii) for the purposes of admission to any University within the State or to any other educational institution which is subject to the control of the State Government;

(c) specify the extent to which, the manner in which and the conditions subject to which, preference or reservation shall be given or made—

(i) in the matter of direct recruitment to posts in any such cadre referred to in sub-clause (b) as may be specified in this behalf in the order;

(ii) in the matter of admission to any such University or other educational institution referred to in sub-clause (b) as may be specified in this behalf in the order,

to or in favour of candidates who have resided or studied for any period specified in the order in the local area in respect of such cadre, University or other educational institution, as the case may be.

(3) The President may, by order, provide for the constitution of an Administrative Tribunal for [1][the State of Andhra Pradesh and for the State of Telangana] to exercise such jurisdiction, powers and authority [including any jurisdiction, power and authority which immediately before the commencement of the Constitution (Thirty-second Amendment) Act, 1973, was exercisable by any court (other than the Supreme Court) or by any tribunal or other authority] as may be specified in the order with respect to the following matters, namely:—

(a) appointment, allotment or promotion to such class or classes of posts in any civil service of the State, or to such class or classes of civil posts under the State, or to such class or classes of posts under the control of any local authority within the State, as may be specified in the order;

---

1.Subs. by the Andhra Pradesh Reorganisation Act, 2014, s. 97, for "the State of Andhra Pradesh" (w.e.f. 2-6-2014).

(iii) அந்த மாநிலத்திலுள்ள பல்கலைக்கழகம் எதிலும் அல்லது அந்த மாநில அரசின் கட்டாள்கையிலுள்ள பிற கல்வி நிறுவனம் எதிலும் மாணவர்களைச் சேர்ப்பதற்கான நோக்கங்களுக்காகவும்,

உள்ளாட்சிப் பரப்பிடமாகக் கருதப்படவேண்டுமென அந்த மாநிலத்தின் பகுதி எதனையும் அல்லது பகுதிகள் எவற்றையும் குறித்துரைக்கலாம்;

(இ) (i) அந்த ஆணையில் இதற்கெனக் குறித்துரைக்கப்படுகிறவாறு (ஆ) உட்கூறில் சுட்டப்பட்டுள்ள அத்தகைய பணிநிலைப் பிரிவிலுள்ள பணியடைகளுக்கு நேரடியாக ஆளெடுப்பது பற்றிய பொருட்பாட்டில்,

(ii) அந்த ஆணையில் இதற்கெனக் குறித்துரைக்கப்படுகிறவாறு (ஆ) உட்கூறில் சுட்டப்பட்டுள்ள அத்தகைய பல்கலைக்கழகத்தில் அல்லது பிற கல்வி நிறுவனத்தில் மாணவர்களைச் சேர்ப்பது பற்றிய பொருட்பாட்டில்,

நேர்வுக்கேற்ப, அத்தகைய பணிநிலைப் பிரிவினை, பல்கலைக்கழகத்தை அல்லது பிற கல்வி நிறுவனத்தைப் பொறுத்து, அந்த உள்ளாட்சிப் பரப்பிடத்தில், அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் காலஅளவு எதன்போதும் தங்கியிருந்துள்ள அல்லது படித்துள்ள மாணவர்களுக்கு அல்லது அவர்களுக்குச் சாதகமாக எந்த அளவுக்கு, எந்த முறையில் எந்த வரைக்கட்டுகளுக்கு உட்பட்டு முன்னுரிமை அளிக்கப்படலாம் அல்லது ஒதுக்கீடு செய்யப்படலாம் என்பதைக் குறித்துரைக்கலாம்.

**(3)** குடியரசுத்தலைவர், ஆணையின்வழி, [1][ஆந்திரப் பிரதேச மாநிலம் மற்றும் தெலுங்கானா மாநிலத்திற்காக], அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் [அரசமைப்புச் (முப்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், **1973** இன் தொடக்கநிலைக்கு உடன்முன்பு (உச்ச நீதிமன்றம் அல்லாத பிற) நீதிமன்றம் எதனாலும் அல்லது தீர்ப்பாயம் அல்லது பிற அதிகாரஅமைப்பு எதனாலும் செலுத்தத்தக்கதாக இருந்த அதிகாரவரம்பு, அதிகாரம், அதிகாரஅடைவு எதுவும் உள்ளடங்கலாக] அத்தகைய அதிகாரவரம்பு, அதிகாரம், அதிகாரஅடைவு ஆகியவற்றைப் பின்வரும் பொருட்பாடுகளைப் பொறுத்துச் செலுத்துவதற்கென ஒரு நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தை அமைப்பதற்காக வகைசெய்யலாம்—

(அ) அந்த ஆணையில் குறித்துரைக்கப்படுகிறவாறு அந்த மாநிலத்தின் குடியியல் பணியம் எதிலுமுள்ள பணியடைகளின் வகையை அல்லது வகைகளைப் பொறுத்து அல்லது அந்த மாநிலத்தின்கீழுள்ள குடியியல் பணியடைகளின் வகையை அல்லது வகைகளைப் பொறுத்து அல்லது அந்த மாநிலத்திலுள்ள உள்ளாட்சி அதிகாரஅமைப்பு ஒன்றின் கட்டாள்கையிலுள்ள பணியடைகளின் வகையை அல்லது வகைகளைப் பொறுத்து அமர்த்துதல், பகிர்ந்தொதுக்குதல் அல்லது பதவியுயர்வு அளித்தல்;

---

1. "ஆந்திரப் பிரதேச மாநிலம்" என்பதற்கு, ஆந்திரப்பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2014 இன் 97 ஆம் பிரிவினால் (2–6–2014 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(b) seniority of persons appointed, allotted or promoted to such class or classes of posts in any civil service of the State, or to such class or classes of civil posts under the State, or to such class or classes of posts under the control of any local authority within the State, as may be specified in the order;

(c) such other conditions of service of persons appointed, allotted or promoted to such class or classes of posts in any civil service of the State or to such class or classes of civil posts under the State or to such class or classes of posts under the control of any local authority within the State, as may be specified in the order.

(4) An order made under clause (3) may—

(a) authorise the Administrative Tribunal to receive representations for the redress of grievances relating to any matter within its jurisdiction as the President may specify in the order and to make such orders thereon as the Administrative Tribunal deems fit;

(b) contain such provisions with respect to the powers and authorities and procedure of the Administrative Tribunal (including provisions with respect to the powers of the Administrative Tribunal to punish for contempt of itself) as the President may deem necessary;

(c) provide for the transfer to the Administrative Tribunal of such classes of proceedings, being proceedings relating to matters within its jurisdiction and pending before any court (other than the Supreme Court) or tribunal or other authority immediately before the commencement of such order, as may be specified in the order;

(d) contain such supplemental, incidental and consequential provisions (including provisions as to fees and as to limitation, evidence or for the application of any law for the time being in force subject to any exceptions or modifications) as the President may deem necessary.

*(5) The Order of the Administrative Tribunal finally disposing of any case shall become effective upon its confirmation by the State Government or on the expiry of three months from the date on which the order is made, whichever is earlier:

---

* In *P. Sambamurthy and Others Vs. State of Andhra Pradesh and Others*, (AIR 1987 SC 663), the Supreme Court declared cl. (5) of art. 371D along with the proviso to be unconstitutional and *void*.

(ஆ) அந்த ஆணையில் குறித்துரைக்கப்படுகிறவாறு அந்த மாநிலத்தின் குடியியல் பணியம் எதிலுமுள்ள பணியடைகளின் வகைக்கு அல்லது வகைகளுக்கு அல்லது அந்த மாநிலத்தின்கீழுள்ள குடியியல் பணியடைகளின் வகைக்கு அல்லது வகைகளுக்கு அல்லது அந்த மாநிலத்திலுள்ள உள்ளாட்சி அதிகாரஅமைப்பு ஒன்றின் கட்டாள்கையிலுள்ள பணியடைகளின் வகைக்கு அல்லது வகைகளுக்கு அமர்த்தப்பெற்றவர்களின் பகிர்ந்தொதுக்கப்பெற்றவர்களின் அல்லது பதவி உயர்வு அளிக்கப்பெற்றவர்களின் பணிமுதுநிலை;

(இ) அந்த ஆணையில் குறித்துரைக்கப்படுகிறவாறு அந்த மாநிலத்தின் குடியியல் பணியம் எதிலுமுள்ள பணியடைகளின் வகைக்கு அல்லது வகைகளுக்கு அல்லது அந்த மாநிலத்தின்கீழுள்ள குடியியல் பணியடைகளின் வகைக்கு அல்லது வகைகளுக்கு அல்லது அந்த மாநிலத்திலுள்ள உள்ளாட்சி அதிகாரஅமைப்பு ஒன்றின் கட்டாள்கையிலுள்ள பணியடைகளின் வகைக்கு அல்லது வகைகளுக்கு அமர்த்தப் பெற்றவர்களின், பகிர்ந்தொதுக்கப் பெற்றவர்களின் அல்லது பதவி உயர்வு அளிக்கப் பெற்றவர்களின் பிற பணிவரைக்கட்டுகள்.

(4). (3) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்படும் ஓர் ஆணை—

(அ) அந்த நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தின் அதிகாரவரம்பினுள் அடங்கிய பொருட்பாடுகளில், அந்த ஆணையில் குடியரசுத் தலைவரால் குறித்துரைக்கப்படும் பொருட்பாடு எதன் தொடர்பாகவும் உள்ள குறைகளைத் தீர்ப்பதற்கான உரையீடுகளைப் பெறுவதற்கும், அவற்றின் மீது அத்தீர்ப்பாயம் தான் பொருத்தமெனக் கருதும் ஆணைகளைப் பிறப்பிப்பதற்கும் அதிகாரமளிக்கலாம்;

(ஆ) நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தின் அதிகாரங்கள், அதிகாரஅடைவுகள், நெறிமுறை ஆகியவை பொறுத்துக் குடியரசுத்தலைவர் தேவையெனக் கருதும் (தன்னை அவமதித்ததற்காகத் தண்டனை விதிப்பதற்கு அந்த நிருவாகப்பணித் தீர்ப்பாயத்திற்கு உள்ள அதிகாரங்கள் பொறுத்த வகையங்கள் உள்ளடங்கலாக) வகையங்களைக் கொண்டிருக்கலாம்;

(இ) அந்த நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தின் அதிகாரவரம்பினுள் அடங்கிய பொருட்பாடுகள் தொடர்பானவையாகவும், அந்த ஆணையின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு (உச்ச நீதிமன்றம் அல்லாத பிற) நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் அல்லது பிற அதிகாரஅமைப்பு எதன் முன்பும், முடிவுறா நிலையிலுமுள்ள நடவடிக்கைகளில் அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் நடவடிக்கைகளின் வகைகளை அத்தீர்ப்பாயத்திற்கு மாற்றுவதற்கு வகைசெய்யலாம்;

(ஈ) குடியரசுத்தலைவர் தேவையெனக் கருதும் (கட்டணங்கள், காலவரம்பு, சான்று ஆகியவை பற்றியோ அல்லது விதிவிலக்குகள் அல்லது மாற்றமைவுகள் எவற்றுக்கும் உட்பட்டு, அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டம் எதனையும் பொருந்தச் செய்வதற்கோ உள்ள வகையங்கள் உள்ளடங்கலாக) துணையுறு, சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டிருக்கலாம்.

*(5) நிருவாகப்பணித் தீர்ப்பாயம் வழக்கு எதனையும் இறுதியாகத் தீர்வு செய்து பிறப்பிக்கும் ஆணையானது, மாநில அரசு அதனை உறுதிசெய்வதன் மீது அல்லது அந்த ஆணை பிறப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து மூன்று மாதம் கழிவுறுவதன் மீது, இதில் எது முந்தியதோ அது முதற்கொண்டு, செல்திறம் பெறும்:

---

* உச்சநீதிமன்றம், *பி. சாம்பமூர்த்தி மற்றும் பிறர் எதிர் ஆந்திரப்பிரதேச மாநிலம் மற்றும் பிறர்* என்ற வழக்கில் 371(ஈ) உறுப்பின் (5) ஆம் கூறு, அதன் வரம்புரையுடன் சேர்த்து, அரசமைப்பிற்கு முரணானது மற்றும் *இல்லாநிலையதென* விளம்பியுள்ளது, (ஏஐஆர் 1987 உ.நீ.663).

Provided that the State Government may, by special order made in writing and for reasons to be specified therein, modify or annul any order of the Administrative Tribunal before it becomes effective and in such a case, the order of the Administrative Tribunal shall have effect only in such modified form or be of no effect, as the case may be.

(6) Every special order made by the State Government under the proviso to clause (5) shall be laid, as soon as may be after it is made, before both Houses of the State Legislature.

(7) The High Court for the State shall not have any powers of superintendence over the Administrative Tribunal and no court (other than the Supreme Court) or tribunal shall exercise any jurisdiction, power or authority in respect of any matter subject to the jurisdiction, power or authority of, or in relation to, the Administrative Tribunal.

(8) If the President is satisfied that the continued existence of the Administrative Tribunal is not necessary, the President may by order abolish the Administrative Tribunal and make such provisions in such order as he may deem fit for the transfer and disposal of cases pending before the Tribunal immediately before such abolition.

(9) Notwithstanding any judgment, decree or order of any court, tribunal or other authority,—

(a) no appointment, posting, promotion or transfer of any person—

(i) made before the 1st day of November, 1956, to any post under the Government of, or any local authority within, the State of Hyderabad as it existed before that date; or

(ii) made before the commencement of the Constitution (Thirty-second Amendment) Act, 1973, to any post under the Government of, or any local or other authority within, the State of Andhra Pradesh; and

(b) no action taken or thing done by or before any person referred to in sub-clause (a),

shall be deemed to be illegal or void or ever to have become illegal or void merely on the ground that the appointment, posting, promotion or transfer of such person was not made in accordance with any law, then in force, providing for any requirement as to residence within the State of Hyderabad or, as the case may be, within any part of the State of Andhra Pradesh, in respect of such appointment, posting, promotion or transfer.

**வரம்புரையாக** : மாநில அரசு பிறப்பிக்கும் எழுத்துவடிவிலான தனியுறு ஆணையின்வழி, அதில் குறித்துரைக்கப்படும் காரணங்களுக்காக, நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தின் ஆணை எதனையும், அது செல்திறம் பெறுவதற்கு முன்னரே மாற்றமைவோ அழித்தறவோ செய்யலாம்; அத்தகைய ஒரு நேர்வில், நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தின் ஆணையானது, அத்தகைய மாற்றமைவு செய்யப்பட்ட வடிவத்தில் மட்டுமே செல்திறம் பெறும் அல்லது செல்திறம் இல்லாது போகும்.

(6). (5) ஆம் கூறுக்கான வரம்புரையின்படி மாநில அரசினால் பிறப்பிக்கப்படும் தனியுறு ஆணை ஒவ்வொன்றும், அது பிறப்பிக்கப்பட்ட பின்பு, கூடுமான விரைவில், அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையின் ஈரவைகளின் முன்பும் வைக்கப்படுதல் வேண்டும்.

(7) அந்த மாநிலத்திற்கான உயர் நீதிமன்றம், அந்த நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தைக் கண்காணிப்பதற்கான அதிகாரங்கள் உடையது ஆகாது; மேலும், (உச்ச நீதிமன்றம் அல்லாத பிற) நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எதுவும், அந்த நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தின் அல்லது அதன் தொடர்பான அதிகாரவரம்புக்கு, அதிகாரத்திற்கு அல்லது அதிகாரஅடைவுக்கு உட்பட்ட பொருட்பாடு எதனையும் பொறுத்து அதிகாரவரம்பு, அதிகாரம் அல்லது அதிகாரஅடைவு எதனையும் செலுத்துதல் ஆகாது.

(8) குடியரசுத்தலைவர், அந்த நிருவாகப்பணித் தீர்ப்பாயம் தொடர்ந்து இருந்துவரத் தேவையில்லை எனத் தெளிவுறக்காண்பாராயின், ஆணையின்வழி, அந்நிருவாகப்பணித் தீர்ப்பாயத்தை கலைத்துவிடலாம்; மேலும், அவ்வாறு கலைப்பதை உடன்முன்பு அந்தத் தீர்ப்பாயத்தின் முன்பு முடிவுறாநிலையிலுள்ள வழக்குகளை மாற்றுவதற்கும் தீர்வு செய்வதற்கும் அத்தகைய ஆணையில் தாம் தக்கதெனக் கருதும் வகையங்களைச் செய்யலாம்.

(9) நீதிமன்றம், தீர்ப்பாயம் அல்லது பிற அதிகாரஅமைப்பு ஒன்றின் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது ஆணை எதுவும் இருந்தபோதிலும்,—

(அ) (i) 1956 நவம்பர் 1 ஆம் நாளுக்கு முன்பு, அந்த நாளுக்கு முன்னர் இருந்த ஐதராபாத் குறுநில அரசின் அல்லது அதிலிருந்த உள்ளாட்சி அதிகாரஅமைப்பு ஒன்றின் கீழிருந்த பணியடை எதற்கும்,

(ii) அரசமைப்புச் (முப்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1973 இன் தொடக்கநிலைக்கு முன்பு ஆந்திரப் பிரதேச மாநில அரசின் அல்லது அதிலிருந்த உள்ளாட்சி அல்லது பிற அதிகாரஅமைப்பு ஒன்றின் கீழிருந்த பணியடை எதற்கும்

செய்யப்பட்ட எவரொருவரின் அமர்த்தம், பணியிடம் குறித்தல், பதவி உயர்வு அல்லது பணியிட மாற்றம் எதுவும்,

(ஆ). (அ) உட்கூறில் சுட்டப்பட்டுள்ள எவராலும் அல்லது அவர் முன்பு எடுக்கப்பட்ட நடவடிக்கை அல்லது செய்யப்பட்ட செயல் எதுவும்

அத்தகைய அமர்த்தம், பணியிடம் குறித்தல், பதவி உயர்வு அல்லது மாற்றம் பொறுத்து ஐதராபாத் குறுநிலத்தில் அல்லது, நேர்வுக்கேற்ப, ஆந்திரப் பிரதேச மாநிலத்தின் பகுதி எதிலும் உறைவிடம் குறித்த வேண்டுறுத்தம் எதற்கும் வகைசெய்து அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டம் எதற்கும் இணங்கியவாறு அத்தகையவரின் அமர்த்தம், பணியிடம் குறித்தல், பதவியுயர்வு அல்லது மாற்றம் செய்யப்படவில்லை என்னும் காரணத்தின் பேரில் மட்டுமே சட்ட முரணானது அல்லது இல்லாநிலையது அல்லது எப்போதேனும் சட்ட முரணாகி இருந்தது அல்லது இல்லாநிலையதாகி இருந்தது என்று கொள்ளப்படுதல் ஆகாது.

(10) The provisions of this article and of any order made by the President thereunder shall have effect notwithstanding anything in any other provision of this Constitution or in any other law for the time being in force.

**371E. Establishment of Central University in Andhra Pradesh :**

Parliament may by law provide for the establishment of a University in the State of Andhra Pradesh.]

[1][**371F. Special provisions with respect to the State of Sikkim :**

Notwithstanding anything in this Constitution,—

(a) the Legislative Assembly of the State of Sikkim shall consist of not less than thirty members;

(b) as from the date of commencement of the Constitution (Thirty-sixth Amendment) Act, 1975 (hereafter in this article referred to as the appointed day)—

(i) the Assembly for Sikkim formed as a result of the elections held in Sikkim in April, 1974 with thirty-two members elected in the said elections (hereinafter referred to as the sitting members) shall be deemed to be the Legislative Assembly of the State of Sikkim duly constituted under this Constitution;

(ii) the sitting members shall be deemed to be the members of the Legislative Assembly of the State of Sikkim duly elected under this Constitution; and

(iii) the said Legislative Assembly of the State of Sikkim shall exercise the powers and perform the functions of the Legislative Assembly of a State under this Constitution;

(c) in the case of the Assembly deemed to be the Legislative Assembly of the State of Sikkim under clause (b), the references to the period of [2][five years], in clause (1) of article 172 shall be construed as references to a period of [3][four years] and the said period of [3][four years] shall be deemed to commence from the appointed day;

---

1. Ins. by the Constitution (Thirty-sixth Amendment) Act, 1975, s. 3 (w.e.f. 26-4-1975).

2. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 43, for "six years" (w.e.f. 6-9-1979). The words "six years" were subs. for the original words "five years" by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 56 (w.e.f. 3-1-1977).

3. Subs. by the Constitution (Forty-fourth Amendment) Act, 1978, s. 43, for "five years" (w.e.f. 6-9-1979). The words "five years" were subs. for the original words "four years" by the Constitution (Forty-second Amendment) Act, 1976 by ibid.

(10) இந்த அரசமைப்பின் பிற வகையம் எதிலும் அல்லது அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள பிற சட்டம் எதிலும் எது எவ்வாறிருப்பினும், இந்த உறுப்பின் வகையங்களும் இந்த உறுப்பின்படி குடியரசுத்தலைவரால் பிறப்பிக்கப்பட்ட ஆணை ஒன்றின் வகையங்களும் செல்திறம் உடையன ஆகும்.

**371 (உ). ஆந்திரப் பிரதேசத்தில் மையப் பல்கலைக்கழகத்தை நிறுவுதல் :**

ஆந்திரப் பிரதேச மாநிலத்தில் ஒரு பல்கலைக்கழகத்தை நிறுவுவதற்காக நாடாளுமன்றம் சட்டத்தின்வழி வகை செய்யலாம்.]

[1][**371 (ஊ). சிக்கிம் மாநிலம் பொறுத்த தனியுறு வகையங்கள் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும் —

(அ) சிக்கிம் மாநிலச் சட்டமன்றப் பேரவையானது முப்பதுக்கும் குறையாத உறுப்பினர்களைக் கொண்டிருக்கும்;

(ஆ) அரசமைப்புச் (முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1975 இன் தொடக்கத் தேதியிலிருந்து (குறித்திட்ட நாள் என இதன் பின்பு இந்த உறுப்பில் சுட்டப்படுவது) —

(i) 1974 ஏப்ரலில் சிக்கிமில் நடைபெற்ற தேர்தலின் விளைவாக அத்தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பெற்ற (பதவியிலிருக்கும் உறுப்பினர்கள் என இதன் பின்பு சுட்டப்பெறும்) முப்பத்திரண்டு உறுப்பினர்களுடன் உருவாக்கப்பட்ட சிக்கிமிற்கான சட்டமன்றப் பேரவையானது, இந்த அரசமைப்பின்படி உரியவாறு அமைக்கப்பட்ட சிக்கிம் மாநிலச் சட்டமன்றப் பேரவையாகக் கொள்ளப்படும்;

(ii) பதவியிலிருக்கும் உறுப்பினர்கள், இந்த அரசமைப்பின்படி உரியவாறு தேர்ந்தெடுக்கப்பெற்ற சிக்கிம் மாநிலச் சட்டமன்றப் பேரவையின் உறுப்பினர்களாகக் கொள்ளப்பெறுவர்;

(iii) மேற்சொன்ன சிக்கிம் மாநிலச் சட்டமன்றப் பேரவையானது, இந்த அரசமைப்பின்படி ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அதிகாரங்களைச் செலுத்திவருவதோடு, பதவிப்பணிகளையும் புரிந்துவரும்;

(இ). (ஆ) கூறின்படி சிக்கிம் மாநிலச் சட்டமன்றப் பேரவை எனக் கொள்ளப்படும் பேரவையைப் பொறுத்தவரை, 172 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறிலுள்ள [2][ஐந்து ஆண்டுக்] காலஅளவைக் குறிக்கும் சுட்டுகைகள், [3][நான்கு ஆண்டுக்] காலஅளவைக் குறிக்கும் சுட்டுகைகளாகப் பொருள் கொள்ளப்படும்; மேலும், குறித்திட்ட நாளிலிருந்து மேற்சொன்ன [3][நான்கு ஆண்டுக்] காலஅளவு தொடங்குவதாகக் கொள்ளப்படும்;

---

1. அரசமைப்புச் (முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 3 ஆம் பிரிவினால் (26–4–1975 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. "ஆறு ஆண்டு" என்ற சொற்கள் "ஐந்து ஆண்டு" என்று முதன்முதலில் இருந்த சொற்களுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 56 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன. "ஆறு ஆண்டு" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 43 ஆம் பிரிவினால் (6–9–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. "ஐந்து ஆண்டு" என்ற சொற்கள், "நான்கு ஆண்டு" என்று முதன்முதலில் இருந்த சொற்களுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 ஆல் மாற்றாக அமைக்கப்பட்டன. "ஐந்து ஆண்டு" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1978 இன் 43 ஆம் பிரிவினால் (6–9–1979 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(d) until other provisions are made by Parliament by law, there shall be allotted to the State of Sikkim one seat in the House of the People and the State of Sikkim shall form one parliamentary constituency to be called the parliamentary constituency for Sikkim;

(e) the representative of the State of Sikkim in the House of the People in existence on the appointed day shall be elected by the members of the Legislative Assembly of the State of Sikkim;

(f) Parliament may, for the purpose of protecting the rights and interests of the different sections of the population of Sikkim make provision for the number of seats in the Legislative Assembly of the State of Sikkim which may be filled by candidates belonging to such sections and for the delimitation of the assembly constituencies from which candidates belonging to such sections alone may stand for election to the Legislative Assembly of the State of Sikkim;

(g) the Governor of Sikkim shall have special responsibility for peace and for an equitable arrangement for ensuring the social and economic advancement of different sections of the population of Sikkim and in the discharge of his special responsibility under this clause, the Governor of Sikkim shall, subject to such directions as the President may, from time to time, deem fit to issue, act in his discretion;

(h) all property and assets (whether within or outside the territories comprised in the State of Sikkim) which immediately before the appointed day were vested in the Government of Sikkim or in any other authority or in any person for the purposes of the Government of Sikkim shall, as from the appointed day, vest in the Government of the State of Sikkim;

(i) the High Court functioning as such immediately before the appointed day in the territories comprised in the State of Sikkim shall, on and from the appointed day, be deemed to be the High Court for the State of Sikkim;

(j) all courts of civil, criminal and revenue jurisdiction, all authorities and all officers, judicial, executive and ministerial, throughout the territory of the State of Sikkim shall continue on and from the appointed day to exercise their respective functions subject to the provisions of this Constitution;

(k) all laws in force immediately before the appointed day in the territories comprised in the State of Sikkim or any part thereof shall continue to be in force therein until amended or repealed by a competent Legislature or other competent authority;

(ஈ) நாடாளுமன்றம் சட்டத்தினால் பிற ஏற்பாடுகள் செய்யும் வரையில் மக்களவையில் சிக்கிம் மாநிலத்திற்கு ஒரு பதவியிடம் ஒதுக்கப்படும்; மேலும், சிக்கிம் மாநிலம், சிக்கிமிற்கான நாடாளுமன்றத் தேர்தல் தொகுதி என வழங்கும் ஒரு நாடாளுமன்றத் தேர்தல் தொகுதியாக அமையும்;

(உ) குறித்திட்ட நாளன்று நிலவுறும் மக்களவைக்கான சிக்கிம் மாநிலத்தின் சார்பாற்றுநர், சிக்கிம் மாநிலச் சட்டமன்றப் பேரவையின் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பெறுவார்;

(ஊ) நாடாளுமன்றம், சிக்கிம் மக்களின் வெவ்வேறு பிரிவினரின் உரிமைகளையும் நலன்களையும் பாதுகாக்கும் பொருட்டு, அத்தகைய பிரிவினரைச் சார்ந்த வேட்பாளர்களால் நிரப்பப்படும் சிக்கிம் மாநிலச் சட்டமன்றப் பேரவையிலுள்ள பதவியிடங்களின் எண்ணிக்கையை நிருணயிப்பதற்கும், சிக்கிம் மாநிலச் சட்டமன்றப் பேரவைத் தேர்தலில் அத்தகைய பிரிவினரைச் சார்ந்த வேட்பாளர்கள் மட்டுமே நிற்கக் கூடிய, பேரவைத் தேர்தல் தொகுதிகளை வரையறை செய்வதற்கும் வகைசெய்யலாம்;

(எ) சிக்கிமின் ஆளுநர், அமைதிகாப்பதற்கும், சிக்கிம் மக்களின் வெவ்வேறு பிரிவினரின் சமுதாய மற்றும் பொருளியல் முன்னேற்றத்தை உறுதிசெய்வதற்காக ஒரு நேரிய ஏற்பாடு செய்வதற்கும் தனிப்பொறுப்பு உடையவர் ஆவார்; மேலும் சிக்கிமின் ஆளுநர் இந்தக் கூறின்படி தம் தனிப்பொறுப்பை நிறைவேற்றுகையில், குடியரசுத்தலைவர், அப்போதைக்கு இடுவதற்குப் பொருத்தமெனக் கருதும் பணிப்புரைகளுக்கு உட்பட்டு, தம் உளத்தேர்வின்படிச் செயல்படுவார்;

(ஏ) குறித்திட்ட நாளுக்கு உடன்முன்பு சிக்கிம் அரசிடம் அல்லது சிக்கிம் அரசிற்காக பிற அதிகாரஅமைப்பு எதனிடமும் அல்லது எவரொருவரிடமும் உற்றமைந்திருந்த (சிக்கிம் மாநிலத்தில் அடங்கியுள்ள ஆட்சிநிலவரைகளுக்குள்ளாயினும் அல்லது வெளியிலாயினும் இருந்த) சொத்து மற்றும் சொத்திருப்புகள் அனைத்தும் குறித்திட்ட நாளிலிருந்து சிக்கிம் மாநில அரசிடம் உற்றமைந்திருக்கும்;

(ஐ) சிக்கிம் மாநிலத்தில் அடங்கியுள்ள ஆட்சிநிலவரைகளில் குறித்திட்ட நாளுக்கு உடன்முன்பு செயற்பணியாற்றிவந்த உயர் நீதிமன்றம், குறித்திட்ட நாளன்றும் அது முதற்கொண்டும் சிக்கிம் மாநிலத்திற்கான உயர் நீதிமன்றமாகக் கொள்ளப்படும்;

(ஒ) சிக்கிம் மாநிலத்தின் ஆட்சிநிலவரை எங்கணும் உள்ள உரிமையியல், குற்றவியல் மற்றும் வருவாய்த் துறை அதிகாரவரம்புடைய நீதிமன்றங்கள் அனைத்தும், அதிகாரஅமைப்புகள் அனைத்தும், நீதித்துறை, ஆட்சித்துறை மற்றும் அலுவலகப் பணித்துறை அலுவலர்கள் அனைவரும், குறித்திட்ட நாளன்றும் அது முதற்கொண்டும், இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அவரவர் தம் பதவிப்பணிகளைத் தொடர்ந்து புரிந்து வருதல் வேண்டும்;

(ஓ) சிக்கிம் மாநிலத்தில் அடங்கியுள்ள ஆட்சிநிலவரைகளில் அல்லது அவற்றின் பகுதி எதிலும் குறித்திட்ட நாளுக்கு உடன்முன்பு செல்லாற்றலிலிருந்த சட்டங்கள் அனைத்தும், தகுதிறம் கொண்ட சட்டமன்றத்தால் அல்லது தகுதிறம்கொண்ட பிற அதிகாரஅமைப்பால் திருத்தமோ நீக்கறவோ செய்யப்படும் வரையில், தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வரும்;

(l) for the purpose of facilitating the application of any such law as is referred to in clause (k) in relation to the administration of the State of Sikkim and for the purpose of bringing the provisions of any such law into accord with the provisions of this Constitution, the President may, within two years from the appointed day, by order, make such adaptations and modifications of the law, whether by way of repeal or amendment, as may be necessary or expedient, and thereupon, every such law shall have effect subject to the adaptations and modifications so made, and any such adaptation or modification shall not be questioned in any court of law;

(m) neither the Supreme Court nor any other court shall have jurisdiction in respect of any dispute or other matter arising out of any treaty, agreement, engagement or other similar instrument relating to Sikkim which was entered into or executed before the appointed day and to which the Government of India or any of its predecessor Governments was a party, but nothing in this clause shall be construed to derogate from the provisions of article 143;

(n) the President may, by public notification, extend with such restrictions or modifications as he thinks fit to the State of Sikkim any enactment which is in force in a State in India at the date of the notification;

(o) if any difficulty arises in giving effect to any of the foregoing provisions of this article, the President may, by order, do anything (including any adaptation or modification of any other article) which appears to him to be necessary for the purpose of removing that difficulty:

Provided that no such order shall be made after the expiry of two years from the appointed day;

(p) all things done and all actions taken in or in relation to the State of Sikkim or the territories comprised therein during the period commencing on the appointed day and ending immediately before the date on which the Constitution (Thirty-sixth Amendment) Act, 1975, receives the assent of the President shall, in so far as they are in conformity with the provisions of this Constitution as amended by the Constitution (Thirty-sixth Amendment) Act, 1975, be deemed for all purposes to have been validly done or taken under this Constitution as so amended.]

(ஔ) சிக்கிம் மாநிலத்தின் நிருவாகம் தொடர்பாக (ஓ) கூறில் சுட்டப்பட்ட சட்டம் எதுவும் பொருந்துவதற்கு வழிவகுப்பதற்காகவும் அத்தகைய சட்டம் ஒன்றின் வகையங்களை இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு இணங்கியிருக்குமாறு செய்வதற்காகவும் குடியரசுத்தலைவர், குறித்திட்ட நாளிலிருந்து ஈராண்டுகளுக்குள் ஆணையின்வழி, நீக்கறவு அல்லது திருத்தம் என்னும் முறையில், தேவையென அல்லது உகந்ததெனக் கருதும் தழுவமைவுகளை அல்லது மாற்றமைவுகளைச் செய்யலாம்; மற்றும், அதன்மேல், அத்தகைய சட்டம் ஒவ்வொன்றும், அவ்வாறு செய்யப்பட்ட தழுவமைவுகளுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டு, செல்திறம் உடையது ஆகும்; மேலும், அத்தகைய தழுவமைவு அல்லது மாற்றமைவு எதனையும் நீதிமன்றம் எதிலும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது;

(க) இந்திய அரசு அல்லது அதற்கு முன்பிருந்த அரசுகளில் எதுவும் ஒரு தரப்பினராக இருந்து, குறித்திட்ட நாளுக்கு முன்பு செய்துகொள்ளப்பட்ட அல்லது எழுதிக்கொடுக்கப்பட்ட சிக்கிம் தொடர்பான உடன்படிக்கை, உடன்பாடு, ஒப்புறுதி அல்லது அவைபோன்ற பிற முறையாவணம் எதனின்றும் எழும் பூசல் அல்லது பிற பொருட்பாடு எதனையும் பொறுத்து உச்ச நீதிமன்றமோ பிற நீதிமன்றம் எதுவுமோ அதிகாரம் உடையது ஆகாது; ஆனால், இந்தக் கூறிலுள்ள எதுவும், 143 ஆம் உறுப்பின் வகையங்களைத் திறக்குறைவு செய்வதாகப் பொருள்கொள்ளப்படுதல் ஆகாது;

(ங) குடியரசுத்தலைவர், பொது அறிவிக்கை வாயிலாக, அந்த அறிவிக்கைத் தேதியில் இந்தியாவிலுள்ள மாநிலம் ஒன்றில் செல்லாற்றலிலுள்ள இயற்றுச்சட்டம் எதனையும், தாம் தக்கதெனக் கருதும் வரையறைகளுடன் அல்லது மாற்றமைவுகளுடன் சிக்கிம் மாநிலத்திற்கு அளாவச் செய்யலாம்;

(ச) இந்த உறுப்பின் மேலேகண்ட வகையங்களில் எதனையும் செல்திறப்படுத்துவதில் இடர்ப்பாடு எதுவும் எழுமாயின், குடியரசுத்தலைவர், ஆணையின்வழி, அந்த இடர்ப்பாட்டினை அகற்றுவதற்குத் தேவையெனத் தமக்குத் தோன்றுகிற (பிற உறுப்பு எதனின் தழுவமைவு அல்லது மாற்றமைவு உள்ளடங்கலாக) எதனையும் செய்யலாம்:

**வரம்புரையாக :** அத்தகைய ஆணை எதுவும், குறித்திட்ட நாளிலிருந்து ஈராண்டுகள் கழிவுற்ற பின்பு பிறப்பிக்கப்படுதல் ஆகாது;

(ஞ) குறித்திட்ட நாளிலிருந்து, அரசமைப்புச் (முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1975, குடியரசுத்தலைவரின் ஏற்பிசைவினைப் பெறுகிற தேதிக்கு உடன்முன்பு முடிவடைகிற இடைக் காலஅளவின்போது, சிக்கிம் மாநிலத்தில் அல்லது அதில் அடங்கியுள்ள ஆட்சிநிலவரைகளில் அல்லது அது தொடர்பாகச் செய்யப்பட்ட செயல்கள் அனைத்தும் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் அனைத்தும், அரசமைப்புச் முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1975 ஆல் திருத்தம் செய்யப்பட்ட இந்த அரசமைப்பின் வகையங்களுடன் அவை இணங்கியிருக்குமளவுக்கு அவ்வாறு திருத்தம் செய்யப்பட்ட அந்த அரசமைப்பின்படி செல்லுந்தன்மையுடன் செய்யப்பட்டிருப்பதாக அல்லது எடுக்கப்பட்டிருப்பதாக அனைத்து நோக்கங்களுக்காகவும் கொள்ளப்படுதல் வேண்டும். ]

[1][371G. **Special provision with respect to the State of Mizoram :**

Notwithstanding anything in this Constitution,—

(a) no Act of Parliament in respect of—

(i) religious or social practices of the Mizos,

(ii) Mizo customary law and procedure,

(iii) administration of civil and criminal justice involving decisions according to Mizo customary law,

(iv) ownership and transfer of land,

shall apply to the State of Mizoram unless the Legislative Assembly of the State of Mizoram by a resolution so decides:

Provided that nothing in this clause shall apply to any Central Act in force in the Union territory of Mizoram immediately before the commencement of the Constitution (Fifty-third Amendment) Act, 1986;

(b) the Legislative Assembly of the State of Mizoram shall consist of not less than forty members.]

[2][371H. **Special provision with respect to the State of Arunachal Pradesh :**

Notwithstanding anything in this Constitution,—

(a) the Governor of Arunachal Pradesh shall have special responsibility with respect to law and order in the State of Arunachal Pradesh and in the discharge of his functions in relation thereto, the Governor shall, after consulting the Council of Ministers, exercise his individual judgment as to the action to be taken:

Provided that if any question arises whether any matter is or is not a matter as respects which the Governor is under this clause required to act in the exercise of his individual judgment, the decision of the Governor in his discretion shall be final, and the validity of anything done by the Governor shall not be called in question on the ground that he ought or ought not to have acted in the exercise of his individual judgment:

Provided further that if the President on receipt of a report from the Governor or otherwise is satisfied that it is no longer necessary for the Governor to have special responsibility with respect to law and order in the State of Arunachal Pradesh, he may by order direct that the Governor shall cease to have such responsibility with effect from such date as may be specified in the order;

---

1. Ins. by the Constitution (Fifty-third Amendment) Act, 1986, s. 2 (w.e.f. 20-2-1987).
2. Ins. by the Constitution (Fifty-fifth Amendment) Act, 1986, s. 2 (w.e.f. 20-2-1987).

[1][371 (எ). **மிசோரம் மாநிலம் பொறுத்த தனியுறு வகையம் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்,—

(அ) (i) மிசோக்களின் சமய அல்லது சமுதாய ஒழுகலாறுகள்,

(ii) மிசோ மரபுவழக்குச் சட்டம் மற்றும் நெறிமுறை,

(iii) மிசோ மரபுவழக்குச் சட்டத்தின்படியான முடிபுகள் உள்ளடங்கிய உரிமையியல் மற்றும் குற்றவியல் நீதி நிருவாகம்,

(iv) நிலத்தின் சொத்துரிமை மற்றும் நிலத்தின் உரிமை மாற்றம்

ஆகியவை பொறுத்த நாடாளுமன்றச் சட்டம் எதுவும், மிசோரம் மாநிலத்திற்குப் பொருந்துதல் வேண்டும் என்று மிசோரம் மாநிலச் சட்டமன்றப் பேரவை ஒரு தீர்மானத்தின் வாயிலாக முடிவு செய்திருந்தாலன்றி, அவ்வாறு பொருந்துதல் ஆகாது:

**வரம்புரையாக :** இந்தக் கூறிலுள்ள எதுவும் அரசமைப்புச் (ஐம்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1986 இன் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, ஒன்றியத்து ஆட்சிநிலவரையாகிய மிசோரத்தில் செல்லாற்றலிலிருந்த மைய அரசுச் சட்டம் எதற்கும் பொருந்துதல் ஆகாது;

(ஆ) மிசோரம் மாநிலச் சட்டமன்றப் பேரவையானது நாற்பதுக்குக் குறையாத உறுப்பினர்களைக் கொண்டிருக்கும்.]

[2][371 (ஏ). **அருணாச்சலப் பிரதேச மாநிலம் பொறுத்த தனியுறு வகையம் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்,—

(அ) அருணாச்சலப் பிரதேச ஆளுநர், அருணாச்சலப் பிரதேச மாநிலத்தில் சட்டம் ஒழுங்கு பொறுத்துத் தனிப்பொறுப்பு உடையவர் ஆவார்; மேலும், அது தொடர்பாகத் தம் பதவிப்பணிகளை ஆற்றுகையில், ஆளுநர், தாம் எடுக்கவேண்டிய நடவடிக்கை குறித்து, அமைச்சரவையைக் கலந்தாய்வு செய்தபின்பு தாமே முடிவுசெய்வார்:

**வரம்புரையாக :** பொருட்பாடு ஒன்று, இந்தக் கூறின்படி ஆளுநர் தாமே முடிவுசெய்கிறபடி செயற்பட வேண்டுறுத்தப்பட்ட ஒரு பொருட்பாடா இல்லையா என்பதைப் பொறுத்து வினா எதுவும் எழுமாயின், ஆளுநர் தம் உளத்தேர்வின்படி செய்யும் முடிபே அறுதியானது ஆகும்; ஆளுநர் தாம் முடிவுசெய்கிறபடி செயற்பட்டிருக்கவேண்டும் அல்லது கூடாது என்பதைக் காரணமாகக் காட்டி, அவரால் செய்யப்பட்ட எதனின் செல்லுந்தன்மையையும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக :** குடியரசுத்தலைவர், ஆளுநரிடமிருந்து ஓர் அறிக்கையைப் பெற்றதன்மேல் அல்லது பிறவாறு அருணாச்சலப் பிரதேச மாநிலத்தின் சட்டம், ஒழுங்கு பொறுத்து ஆளுநர் தனிப்பொறுப்பு உடையவராக இருப்பது இனிமேற்கொண்டு தேவையில்லை என்று தெளிவுறக்காண்பாராயின், அவர், ஆணையின்வழி, அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் தேதியிலிருந்து செல்திறம் பெறுமாறு ஆளுநர் அத்தகைய பொறுப்பு உடையவராக இருப்பது அற்றுப் போகும் என்று பணிக்கலாம்.

---

1. அரசமைப்புச் (ஐம்பத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1986 இன் 2 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (ஐம்பத்து ஐந்தாம் திருத்தம்) சட்டம், 1986 இன் 2 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(b) the Legislative Assembly of the State of Arunachal Pradesh shall consist of not less than thirty members.]

[1][371-I. Special provision with respect to the State of Goa :

Notwithstanding anything in this Constitution, the Legislative Assembly of the State of Goa shall consist of not less than thirty members.]

[2][371J. Special provisions with respect to the State of Karnataka :

(1) The President may, by order made with respect to the State of Karnataka, provide for any special responsibility of the Governor for—

(a) establishment of a separate development board for Hyderabad-Karnataka region with the provision that a report on the working of the board will be placed each year before the State Legislative Assembly;

(b) equitable allocation of funds for developmental expenditure over the said region, subject to the requirements of the State as a whole; and

(c) equitable opportunities and facilities for the people belonging to the said region, in matters of public employment, education and vocational training, subject to the requirements of the State as a whole.

(2) An order made under sub- clause (c) of clause (1) may provide for—

(a) reservation of a proportion of seats educational and vocational training institutions in the Hyderabad-Karnataka region for students who belong to that region by birth or by domicile; and

(b) identification of posts or classes of posts under the State Government and in any body or organisation under the control of the State Government in the Hyderabad-Karnataka region and reservation of a proportion of such posts for persons who belong to that region by birth or by domicile and for appointment thereto by direct recruitment or by promotion or in any other manner as may be specified in the order.]

1. Ins. by the Constitution (Fifty-sixth Amendment) Act, 1987, s. 2 (w.e.f. 30-5-1987).

2. Ins. by the Constitution (Ninety-eighth Amendment) Act, 2012, s. 2 (w.e.f. 1-10-2013).

(ஆ) அருணாச்சலப் பிரதேச மாநிலச் சட்டமன்றப் பேரவையானது முப்பதுக்குக் குறையாத உறுப்பினர்களைக் கொண்டிருக்கும்.]

[1][371 (ஐ). **கோவா மாநிலம் பொறுத்த தனியுறு வகையம் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், கோவா மாநிலச் சட்டமன்றப் பேரவையானது முப்பதுக்குக் குறையாத உறுப்பினர்களைக் கொண்டிருக்கும்.]

[2][371 (ஒ). **கர்நாடக மாநிலம் பொறுத்த தனியுறு வகையங்கள் :**

(1) குடியரசுத்தலைவர், கர்நாடக மாநிலம் பொறுத்து, செய்யப்பட்ட ஆணையின் வழி—

(அ) ஐதராபாத் — கர்நாடக மண்டலத்திற்காக தனித்ததொரு வளர்ச்சி வாரியத்தை நிறுவி அந்த வாரியத்தின் செயல்முறை பற்றிய அறிக்கையொன்று ஒவ்வோர் ஆண்டும் மாநிலச் சட்டமன்றப் பேரவை முன்பு வைக்கப்படும் என்ற வகையத்துடன் அதனை நிறுவுவதற்காகவும்;

(ஆ) மாநிலம் முழுவதின் தேவைகளுக்கு உட்பட்டு, மேற்சொன்ன மண்டலத்திற்கு வளர்ச்சி சார்ந்த செலவினத்திற்காக நேரிய முறையில் நிதியங்களைப் பகிர்ந்து ஒதுக்குவதற்காக; மற்றும்

(இ) மாநிலம் முழுவதின் தேவைகளுக்கு உட்பட்டு, மேற்சொன்ன மண்டலத்தைச் சார்ந்த மக்களுக்காகப் பொது வேலைவாய்ப்பு, கல்வி மற்றும் வாழ்க்கைத் தொழில் பயிற்சி ஆகிய பொருட்பாடுகளில், நேரிய வாய்ப்புகளுக்காகவும் வசதிகளுக்காகவும்,

ஆளுநருக்குள்ள தனிப்பொறுப்பு எதற்காகவும் வகைசெய்யலாம்.

(2). (1) ஆம் கூறின் (இ) உட்கூறின் படி பிறப்பிக்கப்படும் ஆணையொன்று—

(அ) ஐதராபாத்—கர்நாடக மண்டலத்தில் உள்ள கல்விசார் மற்றும் வாழ்க்கைத்தொழில்சார் பயிற்சி நிறுவனங்களிலுள்ள இடங்களில் ஒரு வீதத்தை பிறப்பால் அல்லது நிலைவாழ்விடத்தால் அந்த மண்டலத்தை சார்ந்த மாணவர்களுக்காக ஒதுக்கீடு செய்வதற்காகவும்; மற்றும்

(ஆ) ஐதராபாத் — கர்நாடக மண்டலத்தில் மாநில அரசின் கீழும் மற்றும் மாநில அரசின் கட்டாள்கையின் கீழுள்ள குழுமம் அல்லது அமைவனம் எதிலுமுள்ள பணியடைகளை அல்லது பணியடைகளின் வகைகளைக் கண்டறிந்து அத்தகைய பணியடைகளின் ஒரு வீதத்தைப் பிறப்பால் அல்லது நிலைவாழ்விடத்தால் அந்த மண்டலத்தைச் சார்ந்த நபர்களுக்காக ஒதுக்கீடு செய்வதற்காகவும் மற்றும் ஆணையில் குறித்துரைக்கப்படலாகிறவாறு அதற்கு நேரடி ஆளெடுப்பு மூலமாகவோ அல்லது பதவிஉயர்வு மூலமாகவோ அல்லது பிற முறை எதிலுமோ பணியமர்த்தம் செய்வதற்காகவும்

வகைசெய்யலாம்.]

1. அரசமைப்புச் (ஐம்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1987 இன் 2 ஆம் பிரிவினால் (30–5–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. அரசமைப்புச் (தொண்ணூற்று எட்டாம் திருத்தம்) சட்டம், 2012 இன் 2 ஆம் பிரிவினால் (1–10–2013 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**372. Continuance in force of existing laws and their adaptation :**

(1) Notwithstanding the repeal by this Constitution of the enactments referred to in article 395 but subject to the other provisions of this Constitution, all the law in force in the territory of India immediately before the commencement of this Constitution shall continue in force therein until altered or repealed or amended by a competent Legislature or other competent authority.

(2) For the purpose of bringing the provisions of any law in force in the territory of India into accord with the provisions of this Constitution, the President may by order make such adaptations and modifications of such law, whether by way of repeal or amendment, as may be necessary or expedient, and provide that the law shall, as from such date as may be specified in the order, have effect subject to the adaptations and modifications so made, and any such adaptation or modification shall not be questioned in any court of law.

(3) Nothing in clause (2) shall be deemed—

(a) to empower the President to make any adaptation or modification of any law after the expiration of [1][three years] from the commencement of this Constitution; or

(b) to prevent any competent Legislature or other competent authority from repealing or amending any law adapted or modified by the President under the said clause.

**Explanation I.** — The expression "law in force" in this article shall include a law passed or made by a Legislature or other competent authority in the territory of India before the commencement of this Constitution and not previously repealed, notwithstanding that it or parts of it may not be then in operation either at all or in particular areas.

**Explanation II.** —Any law passed or made by a Legislature or other competent authority in the territory of India which immediately before the commencement of this Constitution had extra-territorial effect as well as effect in the territory of India shall, subject to any such adaptations and modifications as aforesaid, continue to have such extra-territorial effect.

---

1.Subs. by the Constitution (First Amendment) Act, 1951, s. 12, for "two years" (w.e.f. 18-6-1951).

**372. நிலவுறும் சட்டங்கள் தொடர்ந்து செல்லாற்றலில் இருத்தல் மற்றும் அவற்றின் தழுவமைவு :**

(1). 395 ஆம் உறுப்பில் சுட்டப்பட்டுள்ள சட்டங்கள் இந்த அரசமைப்பினால் நீக்கறவு செய்யப்பட்டிருப்பினும், இந்த அரசமைப்பின் பிற வகையங்களுக்கு உட்பட்டு, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு இந்திய ஆட்சிநிலவரையில் செல்லாற்றலிலிருந்த சட்டங்கள் அனைத்தும், தகுதிறமுள்ள ஒரு சட்டமன்றத்தினால் அல்லது தகுதிறமுள்ள பிற அதிகாரஅமைப்பினால் மாற்றமோ நீக்கறவோ திருத்தமோ செய்யப்படும் வரையில் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்.

(2) இந்திய ஆட்சிநிலவரையில் செல்லாற்றலிலுள்ள சட்டம் ஒன்றின் வகையங்களை, இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு இணங்கியிருக்குமாறு செய்வதற்காக, குடியரசுத்தலைவர், ஆணையின்வழி, நீக்கறவு அல்லது திருத்தம் என்னும் முறையில் தேவையென அல்லது உகந்ததெனக் கருதும் தழுவமைவுகளையும் மாற்றமைவுகளையும் அச்சட்டத்தில் செய்யலாம்; மேலும், அந்தச் சட்டம் அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் தேதியிலிருந்து, அவ்வாறு செய்யப்பட்ட தழுவமைவுகளுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டுச் செல்திறம் உடையதாகும் என்று வகைசெய்யலாம்; அத்தகைய தழுவமைவு அல்லது மாற்றமைவு எதனையும் குறித்து நீதிமன்றம் எதிலும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

(3). (2) ஆம் கூறிலுள்ள எதுவும் —

(அ) இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து [1][மூன்று ஆண்டுகள்] கழிவுற்ற பின்பு, சட்டம் எதிலும் தழுவமைவு அல்லது மாற்றமைவு எதனையும் செய்வதற்குக் குடியரசுத்தலைவருக்கு அதிகாரமளிப்பதாகவோ,

(ஆ) மேற்சொன்ன கூறின்படி குடியரசுத்தலைவரால் தழுவமைவு அல்லது மாற்றமைவு செய்யப்பட்ட சட்டம் எதனையும் தகுதிறமுள்ள சட்டமன்றம் அல்லது தகுதிறமுள்ள பிற அதிகாரஅமைப்பு எதுவும் நீக்கறவு அல்லது திருத்தம் செய்வதைத் தடையூறு செய்வதாகவோ

கொள்ளப்படுதல் ஆகாது.

**விளக்கம் I.** – இந்த உறுப்பில் "செல்லாற்றலிலுள்ள சட்டம்" என்னும் சொற்றொடர், இந்திய ஆட்சிநிலவரையிலுள்ள ஒரு சட்டமன்றத்தினால் அல்லது தகுதிறமுள்ள பிறவகை அதிகாரஅமைப்பினால் இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு நிறைவேற்றப்பட்டு அல்லது இயற்றப்பட்டு முன்னரே நீக்கறவு செய்யப்படாத ஒரு சட்டத்தை, அத்தகைய சட்டம் எதுவும் அல்லது அதன் பகுதிகள் எவையும் அப்போது முற்றிலுமோ குறிப்பிட்ட பரப்பிடங்களிலோ செயற்பாட்டில் இல்லாதிருப்பினும், உள்ளடக்கும்.

**விளக்கம் II.** – இந்திய ஆட்சிநிலவரையில் ஒரு சட்டமன்றத்தினால் அல்லது தகுதிறமுள்ள பிற அதிகாரஅமைப்பினால் நிறைவேற்றப்பட்டு அல்லது இயற்றப்பட்டு இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு அந்த ஆட்சிநிலவரையைக் கடந்து செல்திறமும், அத்துடன் இந்திய ஆட்சிநிலவரையில் செல்திறமும் உடைய சட்டம் எதுவும், மேற்சொன்ன அத்தகைய தழுவமைவுகள், மாற்றமைவுகள் எவற்றிற்கும் உட்பட்டு, ஆட்சிநிலவரையைக் கடந்த செல்திறனைத் தொடர்ந்து உடையது ஆகும்.

---

1. "இரண்டு ஆண்டு" என்பதற்கு, அரசமைப்புச் (முதலாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 12 ஆம் பிரிவினால் (18–6–1951 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

**Explanation III.** — Nothing in this article shall be construed as continuing any temporary law in force beyond the date fixed for its expiration or the date on which it would have expired if this Constitution had not come into force.

**Explanation IV.**— An Ordinance promulgated by the Governor of a Province under section 88 of the Government of India Act, 1935, and in force immediately before the commencement of this Constitution shall, unless withdrawn by the Governor of the corresponding State earlier, cease to operate at the expiration of six weeks from the first meeting after such commencement of the Legislative Assembly of that State functioning under clause (1) of article 382, and nothing in this article shall be construed as continuing any such Ordinance in force beyond the said period.

**[1][372A. Power of the President to adapt laws :**

(1) For the purposes of bringing the provisions of any law in force in India or in any part thereof, immediately before the commencement of the Constitution (Seventh Amendment) Act, 1956, into accord with the provisions of this Constitution as amended by that Act, the President may by order made before the first day of November, 1957, make such adaptations and modifications of the law, whether by way of repeal or amendment, as may be necessary or expedient, and provide that the law shall, as from such date as may be specified in the order, have effect subject to the adaptations and modifications so made, and any such adaptation or modification shall not be questioned in any court of law.

(2) Nothing in clause (1) shall be deemed to prevent a competent Legislature or other competent authority from repealing or amending any law adapted or modified by the President under the said clause.]

**373. Power of President to make order in respect of persons under preventive detention in certain cases :**

Until provision is made by Parliament under clause (7) of article 22, or until the expiration of one year from the commencement of this Constitution, whichever is earlier, the said article shall have effect as if for any reference to Parliament in clauses (4) and (7) thereof there were substituted a reference to the President and for any reference to any law made by Parliament in those clauses there were substituted a reference to an order made by the President.

---

1.Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 23 (w.e.f. 1-11-1956).

**விளக்கம் III.** – இந்த உறுப்பிலுள்ள எதுவும் செல்லாற்றலிலுள்ள தற்காலிகச் சட்டம் எதனையும், அது கழிவுறுவதற்கென நிருணயிக்கப்பட்ட தேதிக்கு பின்பு அல்லது இந்த அரசமைப்பு செல்லாற்றலுக்கு வராதிருக்குமாயின், அது கழிவுற்றிருக்கவேண்டிய தேதிக்குப் பின்பு தொடர்ந்திருக்கச் செய்வதாகப் பொருள்கொள்ளப்படுதல் ஆகாது.

**விளக்கம் IV.** – இந்திய அரசுச் சட்டம், 1935 இன் 88 ஆம் பிரிவின்படி ஒரு மாகாண ஆளுநரால் சாற்றம் செய்யப்பட்டு, இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு செல்லாற்றலிலிருந்த ஓர் அவசரச்சட்டம், அந்த மாகாணத்திற்கு நேரிணையான மாநிலத்தின் ஆளுநரால் முன்னதாகத் திரும்பப் பெற்றுக்கொள்ளப்பட்டிருந்தாலன்றி, அத்தகைய தொடக்கநிலைக்குப் பின்பு 382 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின்படி செயலுறுகிற அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையின் முதல் கூட்டத்திலிருந்து ஆறு வாரங்கள் கழிவுற்றதும் செயற்படுவது அற்றுப்போகும்; மேலும், இந்த உறுப்பிலுள்ள எதுவும் செல்லாற்றலிலுள்ள அத்தகைய அவசரச்சட்டம் எதனையும் மேற்சொன்ன காலஅளவிற்குப் பின்பும் தொடர்ந்திருக்கச் செய்வதாகப் பொருள் கொள்ளப்படுதல் ஆகாது.

**[1][372 (அ). சட்டங்களைத் தழுவமைவு செய்வதற்குக் குடியரசுத்தலைவருக்குள்ள அதிகாரம்:**

(1) அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் தொடக்கநிலைக்கு உடன்முன்பு இந்தியாவில் அல்லது அதன் பகுதி எதிலும் செல்லாற்றலிலிருந்த சட்டம் ஒன்றின் வகையங்களை அந்தச் சட்டத்தினால் திருத்தம் செய்யப்பட்ட இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு இணங்கி இருக்குமாறு செய்வதற்காகக் குடியரசுத்தலைவர், 1957 நவம்பர் முதல் நாளுக்கு முன்பு பிறப்பிக்கப்பட்ட ஆணையின்வழி நீக்கறவு அல்லது திருத்தம் என்னும்முறையில் தேவையென அல்லது உகந்ததெனக் கருதும் தழுவமைவுகளையும் மாற்றமைவுகளையும் அச்சட்டத்தில் செய்யலாம்; மேலும், அந்தச் சட்டம் அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் தேதியிலிருந்து, அவ்வாறு செய்யப்பட்ட தழுவமைவுகளுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டு, செல்திறம் உடையதாக இருக்க வகைசெய்யலாம்; அத்தகைய தழுவமைவு அல்லது மாற்றமைவு எதனையும் குறித்து நீதிமன்றம் எதிலும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

(2). (1) ஆம் கூறிலுள்ள எதுவும், மேற்சொன்ன கூறின்படி குடியரசுத்தலைவரால் தழுவமைவு அல்லது மாற்றமைவு செய்யப்பட்ட சட்டம் எதனையும் தகுதிறமுள்ள சட்டமன்றமோ பிற அதிகாரஅமைப்போ நீக்கறவு அல்லது திருத்தம் செய்வதைத் தடுப்பதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.]

**373. தடுப்புக் காவலில் உள்ளவர்களைப் பொறுத்து, குறித்தசில நேர்வுகளில் ஆணை பிறப்பிப்பதற்குக் குடியரசுத்தலைவருக்குள்ள அதிகாரம் :**

22 ஆம் உறுப்பின் (7) ஆம் கூறின்படி நாடாளுமன்றத்தால் வகைசெய்யப்படுதல், இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலிருந்து ஓராண்டு கழிவுறுதல், இவற்றில் எது முந்தியதோ அதுவரையில், மேற்சொன்ன உறுப்பின் (4), (7) ஆகிய கூறுகளில் நாடாளுமன்றம் என்ற சுட்டுகைக்கு மாற்றாக குடியரசுத்தலைவர் என்ற சுட்டுகை அமைந்திருந்தாற்போன்றும், அந்தக் கூறுகளில் நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் என்ற சுட்டுகைக்கு மாற்றாகக் குடியரசுத்தலைவரால் பிறப்பிக்கப்பட்ட ஆணை என்ற சுட்டுகை அமைந்திருந்தாற்போன்றும் அந்த உறுப்பு செல்திறம் உடையது ஆகும்.

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 23 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

**374. Provisions as to Judges of the Federal Court and proceedings pending in the Federal Court or before His Majesty in Council :**

(1) The Judges of the Federal Court holding office immediately before the commencement of this Constitution shall, unless they have elected otherwise, become on such commencement the Judges of the Supreme Court and shall thereupon be entitled to such salaries and allowances and to such rights in respect of leave of absence and pension as are provided for under article 125 in respect of the Judges of the Supreme Court.

(2) All suits, appeals and proceedings, civil or criminal, pending in the Federal Court at the commencement of this Constitution shall stand removed to the Supreme Court, and the Supreme Court shall have jurisdiction to hear and determine the same, and the judgments and orders of the Federal Court delivered or made before the commencement of this Constitution shall have the same force and effect as if they had been delivered or made by the Supreme Court.

(3) Nothing in this Constitution shall operate to invalidate the exercise of jurisdiction by His Majesty in Council to dispose of appeals and petitions from, or in respect of, any judgment, decree or order of any court within the territory of India in so far as the exercise of such jurisdiction is authorised by law, and any order of His Majesty in Council made on any such appeal or petition after the commencement of this Constitution shall for all purposes have effect as if it were an order or decree made by the Supreme Court in the exercise of the jurisdiction conferred on such Court by this Constitution.

(4) On and from the commencement of this Constitution the jurisdiction of the authority functioning as the Privy Council in a State specified in Part B of the First Schedule to entertain and dispose of appeals and petitions from or in respect of any judgment, decree or order of any court within that State shall cease, and all appeals and other proceedings pending before the said authority at such commencement shall be transferred to, and disposed of by, the Supreme Court.

(5) Further provision may be made by Parliament by law to give effect to the provisions of this article.

**374. கூட்டாட்சிய நீதிமன்ற நீதிபதிகள் மற்றும் கூட்டாட்சிய நீதிமன்றத்தில் அல்லது மன்றத்தமர் மாட்சிமை தங்கிய மன்னர் முன்பு முடிவுறாநிலையிலுள்ள நடவடிக்கைகள் பற்றிய வகையங்கள் :**

(1) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு பதவிவகித்த கூட்டாட்சிய நீதிமன்ற நீதிபதிகள், பிறவாறு அவர்கள் தேர்ந்து ஏற்றிருந்தாலன்றி, அத்தகைய தொடக்கநிலையில் உச்ச நீதிமன்ற நீதிபதிகளாக ஆவர்; அதன்மேல் உச்ச நீதிமன்ற நீதிபதிகளைப் பொறுத்து 125 ஆம் உறுப்பின்படி வகைசெய்யப்பட்டுள்ள வரையூதியங்களுக்கும் படித்தொகைகளுக்கும் வாராமை விடுப்பு மற்றும் ஓய்வூதியம் பொறுத்த உரிமைகளுக்கும் அவர்கள் உரிமைகொண்டவர்கள் ஆவர்.

(2) இந்த அரசமைப்பின் தொடக்க நிலையில் கூட்டாட்சிய நீதிமன்றத்தில் முடிவுறாநிலையிலுள்ள உரிமையியல் அல்லது குற்றவியல் சார்ந்த வழக்குகள், மேல்முறையீடுகள், நடவடிக்கைகள் அனைத்தும் உச்ச நீதிமன்றத்திற்கு மாற்றப்படும்; உச்ச நீதிமன்றம், கேட்பு நல்கி அவற்றை முடிவு செய்யும் அதிகாரவரம்பு உடையது ஆகும்; மேலும், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு கூட்டாட்சிய நீதிமன்றத்தால் வழங்கப்பட்ட தீர்ப்புரைகள் அல்லது பிறப்பிக்கப்பட்ட ஆணைகள், அவை உச்ச நீதிமன்றத்தால் வழங்கப்பட்டிருந்தாற்போன்று அல்லது பிறப்பிக்கப்பட்டிருந்தாற்போன்று அதே செல்லாற்றலும் செல்திறமும் உடையன ஆகும்.

(3) இந்த அரசமைப்பிலுள்ள எதுவும், இந்திய ஆட்சிநிலவரைக்குள் உள்ள நீதிமன்றம் ஒன்றின் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது ஆணை எதிலுமிருந்தும் அல்லது எதனைப் பொறுத்தும் எழுகின்ற மேல்முறையீடுகளையும் மனுக்களையும் தீர்வுசெய்வதற்காக மன்றத்தமர் மாட்சிமை தங்கிய மன்னர் எந்த அளவு அதிகாரம் பெற்றிருக்கிறாரோ அந்த அளவுக்கு அதிகாரம் செலுத்தப்படுவதைச் செல்லுந்தன்மையற்றதாக்கும் வகையில் செயற்படுதல் ஆகாது; மேலும், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்குப் பின்பு அத்தகைய மேல்முறையீடு அல்லது மனு எதன்மீதும் பிறப்பிக்கப்பட்ட மன்றத்தமர் மாட்சிமை தங்கிய மன்னர் பிறப்பித்த ஆணை எதுவும், இந்த அரசமைப்பினால் உச்ச நீதிமன்றத்திற்கு வழங்கப்பட்ட அதிகாரத்தைச் செலுத்துகையில், அத்தகைய நீதிமன்றத்தால் பிறப்பிக்கப்பட்ட ஓர் ஆணையாக அல்லது தீர்ப்பாணையாக இருப்பது போன்று, அனைத்து நோக்கங்களுக்காகவும் செல்திறம் உடையது ஆகும்.

(4) இந்த அரசமைப்பின் தொடக்கநிலையிலும் அது முதற்கொண்டும், முதலாம் இணைப்புப்பட்டியலின் (ஆ) பகுதியில் குறித்துரைக்கப்பட்ட ஒரு மாநிலத்திலுள்ள நீதிமன்றம் ஒன்றின் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது ஆணை எதிலிருந்தும் அல்லது அதனைப் பொறுத்து எழுகின்ற மேல்முறையீடுகளையும் மனுக்களையும் ஏற்றுக் கொள்வதற்கும் தீர்வுசெய்வதற்கும் அந்த மாநிலத்தின் அரசப்பேராயமாகச் செயற்பணியாற்றும் அதிகாரஅமைப்பிற்குள்ள அதிகாரம் அற்றுப்போகும்; மேலும், அத்தகைய தொடக்கநிலையில் மேற்சொன்ன அதிகாரஅமைப்பின் முன்பு முடிவுறாநிலையிலுள்ள மேல்முறையீடுகள், பிற நடவடிக்கைகள் அனைத்தும் உச்ச நீதிமன்றத்திற்கு மாற்றப்பட்டு அதனால் தீர்வு செய்யப்படும்.

(5) இந்த உறுப்பின் வகையங்களைச் செல்திறப்படுத்துவதற்காக, நாடாளுமன்றம் சட்டத்தினால் மேற்கொண்டும் வகைசெய்யலாம்.

**375. Courts, authorities and officers to continue to function subject to the provisions of the Constitution :**

All courts of civil, criminal and revenue jurisdiction, all authorities and all officers, judicial, executive and ministerial, throughout the territory of India, shall continue to exercise their respective functions subject to the provisions of this Constitution.

**376. Provisions as to Judges of High Courts :**

(1) Notwithstanding anything in clause (2) of article 217, the Judges of a High Court in any Province holding office immediately before the commencement of this Constitution shall, unless they have elected otherwise, become on such commencement the Judges of the High Court in the corresponding State, and shall thereupon be entitled to such salaries and allowances and to such rights in respect of leave of absence and pension as are provided for under article 221 in respect of the Judges of such High Court. [1][Any such Judge shall, notwithstanding that he is not a citizen of India, be eligible for appointment as Chief Justice of such High Court, or as Chief Justice or other Judge of any other High Court.]

(2) The Judges of a High Court in any Indian State corresponding to any State specified in Part B of the First Schedule holding office immediately before the commencement of this Constitution shall, unless they have elected otherwise, become on such commencement the Judges of the High Court in the State so specified and shall, notwithstanding anything in clauses (1) and (2) of article 217 but subject to the proviso to clause (1) of that article, continue to hold office until the expiration of such period as the President may by order determine.

(3) In this article, the expression "Judge" does not include an acting Judge or an additional Judge.

**377. Provisions as to Comptroller and Auditor-General of India :**

The Auditor-General of India holding office immediately before the commencement of this Constitution shall, unless he has elected otherwise, become on such commencement the Comptroller and Auditor-General of India and shall thereupon be entitled to such salaries and to such rights in respect of leave of absence and pension as are provided for under clause (3) of article 148 in respect of the Comptroller and Auditor-General of India and be entitled to continue to hold office until the expiration of his term of office as determined under the provisions which were applicable to him immediately before such commencement.

---

1.Added by the Constitution (First Amendment) Act, 1951, s. 13 (w.e.f. 18-6-1951).

**375. நீதிமன்றங்களும் அதிகாரஅமைப்புகளும் அலுவலர்களும் இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டுத் தொடர்ந்து செயற்பணியாற்றுதல் :**

இந்திய ஆட்சிநிலவரையில் எங்கணுமுள்ள உரிமையியல், குற்றவியல் மற்றும் வருவாய்த் துறை அதிகாரவரம்புடைய நீதிமன்றங்கள் அனைத்தும், அதிகாரஅமைப்புகள் அனைத்தும், நீதித்துறை, ஆட்சித்துறை, அலுவலகப்பணித் துறை ஆகியவற்றின் அலுவலர்கள் அனைவரும், இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அவரவர் தம் பதவிப்பணிகளைத் தொடர்ந்து புரிந்துவருதல் வேண்டும்.

**376. உயர் நீதிமன்றங்களின் நீதிபதிகள் பற்றிய வகையங்கள் :**

(1). 217 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறில் எது எவ்வாறிருப்பினும், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, மாகாணம் எதிலும் பதவி வகித்த உயர் நீதிமன்ற நீதிபதிகள், பிறவாறு அவர்கள் தேர்ந்து ஏற்றிருந்தாலன்றி, அத்தகைய தொடக்கநிலையில் அந்த மாகாணத்திற்கு நேரிணையான மாநிலத்தின் உயர் நீதிமன்ற நீதிபதிகளாக ஆவர்; அதன்மேல் அத்தகைய உயர் நீதிமன்ற நீதிபதிகளைப் பொறுத்து 221 ஆம் உறுப்பின்படி வகைசெய்யப்பட்டுள்ள வரையூதியங்களுக்கும் படித்தொகைகளுக்கும், வாராமை விடுப்பு, ஓய்வூதியம் பொறுத்த உரிமைகளுக்கும் அவர்கள் உரிமைகொண்டவர்கள் ஆவர், [1][அத்தகைய நீதிபதி எவரும் இந்தியக் குடிமகனாக இல்லாதிருப்பினும், அத்தகைய உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாக அல்லது பிற உயர் நீதிமன்றம் ஒன்றின் தலைமை நீதிபதியாக அல்லது பிற நீதிபதியாக அமர்த்தப்படுவதற்குத் தகுமையுடையவர் ஆவார்.]

(2) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, முதலாம் இணைப்புப்பட்டியலின் (ஆ) பகுதியில் குறித்துரைக்கப்பட்ட மாநிலம் எதற்கும் நேரிணையான இந்தியக் குறுநிலம் எதிலும் பதவி வகித்த உயர் நீதிமன்ற நீதிபதிகள், பிறவாறு அவர்கள் தேர்ந்து ஏற்றிருந்தாலன்றி, அத்தகைய தொடக்கநிலையின்போது அவ்வாறு குறித்துரைக்கப்பட்ட மாநிலத்திலுள்ள உயர் நீதிமன்ற நீதிபதிகளாக ஆவர்; மேலும், 217 ஆம் உறுப்பின் (1), (2) ஆகிய கூறுகளில் எது எவ்வாறிருப்பினும், அந்த உறுப்பின் (1) ஆம் கூறின் வரம்புரைக்கு உட்பட்டு, குடியரசுத் தலைவர் ஆணையின்வழித் தீர்மானிக்கலாகும் காலஅளவு கழிவுறும் வரையில் அவர்கள் தொடர்ந்து பதவி வகித்து வருவர்.

(3) இந்த உறுப்பில் "நீதிபதி" என்ற சொல், ஒரு செயலமர் நீதிபதியை அல்லது ஒரு கூடுதல் நீதிபதியை உள்ளடக்காது.

**377. இந்தியக் கணக்காய்வர்– தலைமைத் தணிக்கையர் பற்றிய வகையங்கள் :**

இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு பதவி வகித்த இந்தியத் தலைமைத் தணிக்கையர், பிறவாறு அவர் தேர்ந்து ஏற்றிருந்தாலன்றி, அத்தகைய தொடக்கநிலையில் இந்தியக் கணக்காய்வர் – தலைமைத் தணிக்கையராக ஆவார்; அதன்மேல் இந்தியக் கணக்காய்வர்– தலைமைத் தணிக்கையர் பொறுத்து 148 ஆம் உறுப்பின் (3) ஆம் கூறின்படி வகைசெய்யப்பட்ட வரையூதியங்களுக்கும், வாராமை விடுப்பு, ஓய்வூதியம் பொறுத்த உரிமைகளுக்கும் உரிமைகொண்டவர் ஆவார்; மேலும், அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு அவருக்குப் பொருந்துவனவாயிருந்த வகையங்களின்படி தீர்மானிக்கப்பட்ட அவருடைய பதவிக்காலம் கழிவுறும் வரையில் அவர் தொடர்ந்து பதவி வகித்துவர உரிமை கொண்டவர் ஆவார்.

---

1. அரசமைப்புச் (ஒன்றாம் திருத்தம்) சட்டம், 1951 இன் 13 ஆம் பிரிவினால் (18–6–1951 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.

**378. Provisions as to Public Service Commissions :**

(1) The members of the Public Service Commission for the Dominion of India holding office immediately before the commencement of this Constitution shall, unless they have elected otherwise, become on such commencement the members of the Public Service Commission for the Union and shall, notwithstanding anything in clauses (1) and (2) of article 316 but subject to the proviso to clause (2) of that article, continue to hold office until the expiration of their term of office as determined under the rules which were applicable immediately before such commencement to such members.

(2) The Members of a Public Service Commission of a Province or of a Public Service Commission serving the needs of a group of Provinces holding office immediately before the commencement of this Constitution shall, unless they have elected otherwise, become on such commencement the members of the Public Service Commission for the corresponding State or the members of the Joint State Public Service Commission serving the needs of the corresponding States, as the case may be, and shall, notwithstanding anything in clauses (1) and (2) of article 316 but subject to the proviso to clause (2) of that article, continue to hold office until the expiration of their term of office as determined under the rules which were applicable immediately before such commencement to such members.

[1][**378A. Special provision as to duration of Andhra Pradesh Legislative Assembly :**

Notwithstanding anything contained in article 172, the Legislative Assembly of the State of Andhra Pradesh as constituted under the provisions of sections 28 and 29 of the States Reorganisation Act, 1956, shall, unless sooner dissolved, continue for a period of five years from the date referred to in the said section 29 and no longer and the expiration of the said period shall operate as a dissolution of that Legislative Assembly.]

**379.—391.** *Omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11- 1956).*

**392. Power of the President to remove difficulties :**

(1) The President may, for the purpose of removing any difficulties, particularly in relation to the transition from the provisions of the Government of India Act, 1935, to the provisions of this Constitution, by order direct that this Constitution shall, during such period as may be specified in the order, have effect subject to such adaptations, whether by way of modification, addition or omission, as he may deem to be necessary or expedient:

---

1. Ins. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 24 (w.e.f. 1-11-1956).

**378. அரசுப் பணியாளர் தேர்வாணையங்கள் பற்றிய வகையங்கள் :**

(1) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு இந்தியத் தன்னாட்சியத்திற்கான அரசுப் பணியாளர் தேர்வாணையத்தில் பதவி வகித்த உறுப்பினர்கள், பிறவாறு அவர்கள் தேர்ந்து ஏற்றிருந்தாலன்றி, அத்தகைய தொடக்கநிலையில் ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணயத்தின் உறுப்பினர்களாக ஆவர்; மேலும், 316 ஆம் உறுப்பின் (1), (2) ஆகிய கூறுகளில் எது எவ்வாறிருப்பினும் அந்த உறுப்பின் (2) ஆம் கூறின் வரம்புரைக்கு உட்பட்டு, அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு அத்தகைய உறுப்பினர்களுக்குப் பொருந்துவனவாயிருந்த விதிகளின்படி தீர்மானிக்கப்பட்ட அவர்களுடைய பதவிக்காலம் கழிவுறும் வரையில் அவர்கள் தொடர்ந்து பதவி வகித்து வருவர்.

(2) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, ஒரு மாகாணத்தின் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தில் பதவி வகித்த உறுப்பினர்கள் அல்லது மாகாணங்களின் தொகுதி ஒன்றின் தேவைகளை நிறைவேற்றுவதற்காகப் பணிபுரிகிற அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர்கள், பிறவாறு அவர்கள் தேர்ந்து ஏற்றிருந்தாலன்றி, அந்த மாகாணத்திற்கு நேரிணையான மாநிலத்திற்கான அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர்களாக அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாகாணங்களுக்கு நேரிணையான மாநிலங்களின் தேவைகளை நிறைவேற்றுவதற்காகப் பணிபுரிகிற கூட்டு மாநில அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர்களாக ஆவர்; மேலும், 316 ஆம் உறுப்பின் (1), (2) ஆகிய கூறுகளில் எது எவ்வாறிருப்பினும் அந்த உறுப்பின் (2) ஆம் கூறின் வரம்புரைக்கு உட்பட்டு அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு அந்த உறுப்பினர்களுக்குப் பொருந்துவனவாயிருந்த விதிகளின்படி தீர்மானிக்கப்பட்ட அவர்களுடைய பதவிக்காலம் கழிவுறும் வரையில் அவர்கள் தொடர்ந்து பதவி வகித்து வருவர்.

**[1][378 (அ). ஆந்திரப் பிரதேசச் சட்டமன்ற பேரவையின் காலஅளவு பற்றிய தனியுறு வகையம் :**

172 ஆம் உறுப்பில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 28, 29 ஆகிய பிரிவுகளின் வகையங்களின்படி அமைக்கப்பட்ட ஆந்திரப் பிரதேச மாநிலச் சட்டமன்றப் பேரவை, முன்னதாகவே கலைக்கப்பட்டாலன்றி, மேற்சொன்ன 29 ஆம் பிரிவில் சுட்டப்பட்ட தேதியிலிருந்து ஐந்தாண்டுக் காலஅளவிற்குத் தொடர்ந்து இருந்துவரும்; ஆனால், அதற்கு மேலும் இருத்தலாகாது; மேலும், மேற்சொன்ன காலஅளவு கழிவுறுங்கால் அந்தச் சட்டமன்றப் பேரவை கலைக்கப்பட்டதாக ஆகிவிடும்.]

**379–391.** *அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1-11-1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.*

**392. இடர்ப்பாடுகளை அகற்றுவதற்குக் குடியரசுத்தலைவருக்குள்ள அதிகாரம் :**

(1) இடர்ப்பாடுகள் எவற்றையும், குறிப்பாக, இந்திய அரசுச் சட்டம், 1935 இன் வகையங்களிலிருந்து இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு மாறும் இடைக்காலம் தொடர்பானவற்றை அகற்றுவதற்காக, குடியரசுத்தலைவர், ஆணையின்வழி, அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் காலஅளவின்போது மாற்றமைவு, சேர்க்கை அல்லது விடுகை என்னும் முறையில் தாம் தேவையென அல்லது உகந்ததெனக் கருதும் தழுவமைவுகளுக்கு உட்பட்டு இந்த அரசமைப்புச் செல்திறம் உடையது ஆகும் என்று பணிக்கலாம்:

---

1. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 24 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

Provided that no such order shall be made after the first meeting of Parliament duly constituted under Chapter II of Part V.

(2) Every order made under clause (1) shall be laid before Parliament.

(3) The powers conferred on the President by this article, by article 324, by clause (3) of article 367 and by article 391 shall, before the commencement of this Constitution, be exercisable by the Governor-General of the Dominion of India.

# PART XXII

## SHORT TITLE, COMMENCEMENT, [1][AUTHORITATIVE TEXT IN HINDI] AND REPEALS

**393. Short title :**

This Constitution may be called the Constitution of India.

**394. Commencement :**

This article and articles 5, 6, 7, 8, 9, 60, 324, 366, 367, 379, 380, 388, 391, 392 and 393 shall come into force at once, and the remaining provisions of this Constitution shall come into force on the twenty-sixth day of January, 1950, which day is referred to in this Constitution as the commencement of this Constitution.

**[2][394A. Authoritative text in the Hindi language :**

(1) The President shall cause to be published under his authority,—

(a) the translation of this Constitution in the Hindi language, signed by the members of the Constituent Assembly, with such modifications as may be necessary to bring it in conformity with the language, style and terminology adopted in the authoritative texts of Central Acts in the Hindi language, and incorporating therein all the amendments of this Constitution made before such publication; and

(b) the translation in the Hindi language of every amendment of this Constitution made in the English language.

---

1. Ins. by the Constitution (Fifty-eighth Amendment) Act, 1987, s. 2 (w.e.f. 9-12-1987).
2. Ins. by s. 3, *ibid*.

வரம்புரையாக : அத்தகைய ஆணை எதுவும் V ஆம் பகுதியின் II அத்தியாயத்தின்படி உரியவாறு அமைக்கப்பட்ட நாடாளுமன்றத்தின் முதல் கூட்டத்திற்குப் பின்பு பிறப்பிக்கப்படுதல் ஆகாது.

(2). (1) ஆம் கூறின்படி பிறப்பிக்கப்பட்ட ஆணை ஒவ்வொன்றும் நாடாளுமன்றத்தின்முன் வைக்கப்படுதல் வேண்டும்.

(3) இந்த உறுப்பினாலும், 324 ஆம் உறுப்பினாலும், 367 ஆம் உறுப்பின் (3) ஆம் கூறினாலும், 391 ஆம் உறுப்பினாலும் குடியரசுத்தலைவருக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்கள், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு இந்திய தன்னாட்சியத்தின் தலைமை ஆளுநரால் செலுத்தத்தகுவன ஆகும்.

## பகுதி XXII

## குறுந்தலைப்பு, தொடக்கம், [1][அதிகாரஉறுதிபெற்ற இந்திமொழி வாசகம்] மற்றும் நீக்கறவுகள்

**393. குறுந்தலைப்பு :**

இந்த அரசமைப்பு, இந்திய அரசமைப்பு என்று வழங்கப்பெறும்.

**394. தொடக்கம் :**

இந்த உறுப்பும், 5, 6, 7, 8, 9, 60, 324, 366, 367, 379, 380, 388, 391, 392, 393 ஆகிய உறுப்புகளும் உடனடியாகச் செல்லாற்றல் பெறும்; இந்த அரசமைப்பின் தொடக்கம் என இந்த அரசமைப்பில் சுட்டப்படும் நாளான 1950, ஜனவரி இருபத்து ஆறாம் நாளன்று இந்த அரசமைப்பின் எஞ்சிய வகையங்கள் செல்லாற்றல் பெறும்.

**[2][394 (அ). அதிகாரஉறுதிபெற்ற இந்திமொழி வாசகம் :**

(1) குடியரசுத்தலைவர்,—

(அ) அரசமைப்புப் பேரவை உறுப்பினர்கள் கையொப்பமிட்டுள்ள, இந்த அரசமைப்பின் இந்தி மொழிபெயர்ப்பினை, இந்திமொழியிலுள்ள மைய அரசுச் சட்டங்களின் அதிகாரஉறுதிபெற்ற வாசகங்களில் ஏற்றுக்கொள்ளப்பட்ட மொழி, நடையமைவு, சொற்றொடர் அமைவு ஆகியவற்றுக்கு ஏற்றவாறு செய்வதற்குத் தேவையாகும் மாற்றமைவுகளையும், அதனை வெளியிடுவதற்கு முன்பு செய்யப்படும் இந்த அரசமைப்பின் அனைத்துத் திருத்தங்களையும் அதில் ஒருங்கிணைத்து அந்த மொழிபெயர்ப்பினையும்,

(ஆ) ஆங்கிலமொழியில் இந்த அரசமைப்பிற்குச் செய்யப்பட்ட திருத்தம் ஒவ்வொன்றின் இந்தி மொழிபெயர்ப்பினையும்,

தம்முடைய அதிகாரத்தின்படி வெளியிடுமாறு செய்வார்.

---

1. அரசமைப்புச் (ஐம்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 1987 இன் 2 ஆம் பிரிவினால் (9–12–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. *மேற்படிச் சட்டத்தின்* 3 ஆம் பிரிவினால் புகுத்தப்பட்டது.

(2) The translation of this Constitution and of every amendment thereof published under clause (1) shall be construed to have the same meaning as the original thereof and if any difficulty arises in so construing any part of such translation, the President shall cause the same to be revised suitably.

(3) The translation of this Constitution and of every amendment thereof published under this article shall be deemed to be, for all purposes, the authoritative text thereof in the Hindi language.]

**395. Repeals :**

The Indian Independence Act, 1947, and the Government of India Act, 1935, together with all enactments amending or supplementing the latter Act, but not including the Abolition of Privy Council Jurisdiction Act, 1949, are hereby repealed.

(2). (1) ஆம் கூறின்படி வெளியிடப்படும் இந்த அரசமைப்பின் மற்றும் அதன் திருத்தம் ஒவ்வொன்றின் மொழிபெயர்ப்பும், அதன் முதன்முதலில் இருந்த அதே பொருளை உடையதாகப் பொருள்கொள்ளப்படும்; மேலும் அத்தகைய மொழிபெயர்ப்பின் பகுதி எதனையும் அவ்வாறு பொருள்கொள்ளுவதில் இடர்ப்பாடு எதுவும் எழுமாயின், குடியரசுத்தலைவர், அதனை ஏற்ற வகையில் திருத்தியமைக்குமாறு செய்வார்.

(3) இந்த உறுப்பின்படி வெளியிடப்படும் இந்த அரசமைப்பின் மற்றும் அதன் திருத்தம் ஒவ்வொன்றின் மொழிபெயர்ப்பும், அனைத்து நோக்கங்களுக்காகவும், அதிகாரஉறுதிபெற்ற அதன் இந்தி மொழி வாசகமாக கொள்ளப்படும்.]

**395. நீக்கறவுகள் :**

இந்திய விடுதலைச் சட்டம், 1947 மற்றும் இந்திய அரசுச் சட்டம், 1935 இவற்றுள் பிந்திய சட்டத்தைத் திருத்தும் அல்லது துணைவுறு சட்டங்கள் அனைத்துடனும் சேர்த்து, ஆனால் அரசுப் பேராயத்தின் அதிகாரவரம்பு ஒழிப்புச் சட்டம், 1949 நீங்கலாக, ஈங்கிதனால் நீக்கறவு செய்யப்படுகின்றன.

# [1][FIRST SCHEDULE

## [Articles 1 and 4]

## I. THE STATES

| Name | Territories |
| --- | --- |
| 1. Andhra Pradesh | [2][The territories specified in sub-section (1) of section 3 of the Andhra State Act, 1953, sub-section (1) of section 3 of the States Reorganisation Act, 1956, the First Schedule to the Andhra Pradesh and Madras (Alteration of Boundaries) Act, 1959, and the Schedule to the Andhra Pradesh and Mysore (Transfer of Territory) Act, 1968, but excluding the territories specified in the Second Schedule to the Andhra Pradesh and Madras (Alteration of Boundaries) Act, 1959] [3][and the territories specified in section 3 of the Andhra Pradesh Reorganisation Act, 2014]. |
| 2. Assam | The territories which immediately before the commencement of this Constitution were comprised in the Province of Assam, the Khasi States and the Assam Tribal Areas, but excluding the territories specified in the Schedule to the Assam (Alteration of Boundaries) Act, 1951 [4][and the territories specified in sub-section(1) of section 3 of the State of Nagaland Act, 1962] [5][and the territories specified in sections 5, 6 and 7 of the North-Eastern Areas (Reorganisation) Act, 1971] [6][and the territories referred to in Part I of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015, notwithstanding anything contained in clause (a) of section 3 of the Constitution (Ninth Amendment) Act, 1960, so far as it relates to the territories referred to in Part I of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015.] |

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 2, for the First Sch.(w.e.f. 1-11-1956).
2. Subs. by the Andhra Pradesh and Mysore (Transfer of Territory) Act, 1968 (36 of 1968), s. 4, for the former entry (w.e.f. 1-10-1968).
3. Ins. by the Andhra Pradesh Reorganisation Act, 2014 (6 of 2014), s. 10 (w.e.f. 2-6-2014).
4. Added by the State of Nagaland Act, 1962 (27 of 1962), s. 4 (w.e.f. 1-12-1963).
5. Added by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 9 (w.e.f. 21-1-1972).
6. Added by the Constitution (One Hundredth Amendment) Act, 2015, s. 3 (w.e.f. 31-7-2015).

## [1][முதலாம் இணைப்புப்பட்டியல்

## [1, 4 ஆகிய உறுப்புகள்]

### I. மாநிலங்கள்

| பெயர் | ஆட்சிநிலவரைகள் |
|---|---|
| 1. ஆந்திரப் பிரதேசம் | [2][ஆந்திர மாநிலச் சட்டம், 1953 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவிலும், மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவிலும், ஆந்திரப் பிரதேசம் மற்றும் சென்னை (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1959 இன் முதலாம் இணைப்புப்பட்டியலிலும், ஆந்திரப் பிரதேசம் மற்றும் மைசூர் (ஆட்சிநிலவரை மாற்றுச்) சட்டம், 1968 இன் இணைப்புப்பட்டியலிலும் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்; ஆனால், ஆந்திரப் பிரதேசம் மற்றும் சென்னை எல்லைகள் மாற்றுகை சட்டம், 1959 இன் இரண்டாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் [3][மற்றும் ஆந்திரப் பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2014 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்] நீங்கலாக.] |
| 2. அசாம் | இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு அசாம் மாகாணம், காஸி குறுநிலங்கள் மற்றும் அசாம் பழங்குடியினர் வரையிடங்களில் அடங்கியிருந்த ஆட்சிநிலவரைகள்; ஆனால், அசாம் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1951 இன் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் [4][மற்றும் நாகாலாந்து மாநிலச் சட்டம், 1962 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்] [5][மற்றும் வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 இன் 5, 6, 7 ஆகிய பிரிவுகளில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்] நீங்கலாக, [6][மற்றும் அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் இரண்டாம் இணைப்புப்பட்டியலின் I ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளுக்கு அது தொடர்புடையதாகிற அளவிற்கு, அரசமைப்புச் (ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1960 இன் 3 ஆம் பிரிவின் (அ) கூறில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் இரண்டாம் இணைப்புப்பட்டியலின் I ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |

---

1. முதலாம் இணைப்புப்பட்டியலுக்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 2 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. முந்தைய பதிவிற்கு, ஆந்திரப் பிரதேசம் மற்றும் மைசூர் (ஆட்சிநிலவரை மாற்றுச்) சட்டம், 1968 (36/1968) இன் 4 ஆம் பிரிவினால் (1–10–1968 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. ஆந்திரப்பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2014 (6/2014) இன் 10 ஆம் பிரிவினால் (2–6–2014 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. நாகாலாந்து மாநிலச் சட்டம், 1962 (27/1962) இன் 4 ஆம் பிரிவினால் (1–12–1963 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.
5. வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 9 ஆம் பிரிவினால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.
6. அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் 3 ஆம் பிரிவினால் (31–7–2015 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.

| Name | Territories |
| --- | --- |
| 3. Bihar | [1][The territories which immediately before the commencement of this Constitution were either comprised in the Province of Bihar or were being administered as if they formed part of that Province and the territories specified in clause (a) of sub-section (1) of section 3 of the Bihar and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1968, but excluding the territories specified in sub-section (1) of section 3 of the Bihar and West Bengal (Transfer of Territories) Act, 1956, and the territories specified in clause (b) of sub-section (1) of section 3 of the first mentioned Act [2][and the territories specified in section 3 of the Bihar Reorganisation Act, 2000.]] |
| [3][4. Gujarat | The territories referred to in sub-section (1) of section 3 of the Bombay Reorganisation Act, 1960.] |
| 5. Kerala | The territories specified in sub-section (1) of section 5 of the States Reorganisation Act, 1956. |
| 6. Madhya Pradesh | The territories specified in sub-section (1) of section 9 of the States Reorganisation Act, 1956 [4][and the First Schedule to the Rajasthan and Madhya Pradesh (Transfer of Territories) Act, 1959], [5][but excluding the territories specified in section 3 of the Madhya Pradesh Reorganisation Act, 2000.] |
| [6][7. Tamil Nadu] | The territories which immediately before the commencement of this Constitution were either comprised in the Province of Madras or were being administered as if they formed part of that Province and the territories specified in section 4 of the States Reorganisation Act, 1956, [7][and the Second Schedule to the Andhra Pradesh and Madras (Alteration of Boundaries) Act, 1959], but excluding the territories specified in sub-section (1) of section 3 and sub-section (1) of section 4 of the Andhra State Act, 1953 [8][and the territories specified in clause (b) of sub-section(1) of section 5, section 6 and clause (d) of sub-section (1) of section 7 of the States Reorganisation Act, 1956 and the territories specified in the First Schedule to the Andhra Pradesh and Madras (Alteration of Boundaries) Act, 1959.] |

1. Subs. by the Bihar and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1968 (24 of 1968), s. 4, for former entry (w.e.f. 10-6-1970).
2. Ins. by the Bihar Reorganisation Act, 2000 (30 of 2000), s. 5 (w.e.f. 15-11-2000).
3. Subs. by the Bombay Reorganisation Act, 1960 (11 of 1960), s. 4 (w.e.f. 1-5-1960).
4. Ins. by the Rajasthan and Madhya Pradesh (Transfer of Territories) Act, 1959 (47 of 1959), s. 4 (w.e.f. 1-10-1959).
5. Ins. by the Madhya Pradesh Reorganisation Act, 2000 (28 of 2000), s. 5 (w.e.f. 1-11-2000).
6. Subs. by the Madras State (Alteration of Name) Act, 1968 (53 of 1968), s. 5, for "7. Madras" (w.e.f. 14-1-1969).
7. Ins. by the Andhra Pradesh and Madras (Alteration of Boundaries) Act, 1959 (56 of 1959), s. 6 (w.e.f. 1-4-1960).
8. Subs. by *ibid.*, for certain words.

| பெயர் | ஆட்சிநிலவரைகள் |
|---|---|
| 3. பீகார் | [1][இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு பீகார் மாகாணத்தில் அடங்கியிருந்த அல்லது அந்த மாகாணத்தின் ஒரு பகுதியாக அவை அமைந்திருந்தாற் போன்று நிருவாகம் செய்யப்பட்டு வந்த ஆட்சிநிலவரைகள் மற்றும் பீகார் மற்றும் உத்தரப்பிரதேசம் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1968 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் (அ) கூறில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்; ஆனால், பீகார் மற்றும் மேற்கு வங்காளம் (ஆட்சிநிலவரைகள் மாற்றுச்) சட்டம், 1956 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும் முதலில் சொல்லப்பட்ட சட்டத்தின் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் (ஆ) கூறில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும் [2][பீகார் மறுஅமைப்புச் சட்டம், 2000 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும்] நீங்கலாக.] |
| [3][4. குஜராத் | பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் சுட்டபட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| 5. கேரளம் | மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 5 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள். |
| 6. மத்தியப் பிரதேசம் | மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 9 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவிலும் [4][ராஜஸ்தான் மற்றும் மத்தியப் பிரதேசம் (ஆட்சிநிலவரைகள் மாற்றுச்) சட்டம், 1959 இன் முதலாம் இணைப்புப்பட்டியலிலும்] குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்; [5][ஆனால், மத்தியப் பிரேதசம் மறுஅமைப்புச் சட்டம், 2000 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்ட ஆட்சிநிலவரைகள் நீங்கலாக. |
| [6][7. தமிழ்நாடு] | இந்திய அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, சென்னை மாகாணத்தில் அடங்கியிருந்த அல்லது அந்த மாகாணத்தின் ஒரு பகுதியாக அமைந்திருந்தாற்போன்று நிருவாகம் செய்யப்பட்டு வந்த ஆட்சிநிலவரைகள் மற்றும் மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 4 ஆம் பிரிவிலும் [7][ஆந்திரப் பிரதேசம் மற்றும் சென்னை (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1959 இன் இரண்டாம் இணைப்புப்பட்டியலிலும்] குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்; ஆனால், ஆந்திர மாநிலச் சட்டம், 1953 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவிலும் 4 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவிலும் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும் [8][மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 5 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் (ஆ) கூறிலும் 6 ஆம் பிரிவிலும் 7 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் (ஈ) கூறிலும் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும் ஆந்திரப் பிரதேசம் மற்றும் சென்னை (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1959 இன் முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும்] நீங்கலாக. |

---

1. முந்தைய பதிவிற்கு பீகார் மற்றும் உத்தரப்பிரதேசம் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1968 (24/1968) இன் 4 ஆம் பிரிவினால் (10–6–1970 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. பீகார் மறுஅமைப்புச் சட்டம், 2000 (30/2000) இன் 5 ஆம் பிரிவினால் (15–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 4 ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
4. ராஜஸ்தான் மற்றும் மத்தியப் பிரதேசம் (ஆட்சிநிலவரை மாற்றுச்) சட்டம், 1959 (47/1959) இன் 4ஆம் பிரிவினால் (1–10–1959 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
5. மத்தியப் பிரதேசம் மறுஅமைப்புச் சட்டம், 2000 (28/2000) இன் 5 ஆம் பிரிவினால் (1–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
6. ''7. மெட்ராஸ்'' என்பதற்கு, மெட்ராஸ் மாநில (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 1968 (53/1968) இன் 5ஆம் பிரிவினால் (14–1–1969 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
7. ஆந்திரப் பிரதேசம் மற்றும் மெட்ராஸ் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1959 (56/1959) இன் 6ஆம் பிரிவினால் (1–4–1960 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
8. குறித்தசில சொற்களுக்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டன.

| | |
|---|---|
| [1][8. Maharashtra | The territories specified in sub-section (1) of section 8 of the States Reorganisation Act, 1956, but excluding the territories referred to in sub-section (1) of section 3 of the Bombay Reorganisation Act, 1960.] |
| [2][[3][9.] Karnataka] | The territories specified in sub-section (1) of section 7 of the States Reorganisation Act, 1956 [4][but excluding the territory specified in the Schedule to the Andhra Pradesh and Mysore (Transfer of Territory) Act, 1968.] |
| [3][10.] [5][Odisha] | The territories which immediately before the commencement of this Constitution were either comprised in the Province of Orissa or were being administered as if they formed part of that Province. |
| [3][11.] Punjab | The territories specified in section 11 of the States Reorganisation Act, 1956 [6][and the territories referred to in Part II of the First Schedule to the Acquired Territories (Merger) Act, 1960] [7][but excluding the territories referred to in Part II of the First Schedule to the Constitution (Ninth Amendment) Act, 1960] [8][and the territories specified in sub- section (1) of section 3, section 4 and sub-section (1) of section 5 of the Punjab Reorganisation Act, 1966.] |

1. Ins. by the Bombay Reorganisation Act, 1960 (11 of 1960), s. 4 (w.e.f. 1-5-1960).
2. Subs. by the Mysore State (Alteration of Name) Act, 1973 (31 of 1973), s. 5, for "9. Mysore" (w.e.f. 1-11-1973).
3. Entries 8 to 14 renumbered as entries 9 to 15 by the Bombay Reorganisation Act, 1960 (11 of 1960), s. 4 (w.e.f. 1-5-1960).
4. Ins. by the Andhra Pradesh and Mysore (Transfer of Territory) Act, 1968 (36 of 1968), s. 4, (w.e.f. 1-10-1968).
5. Subs. by the Orissa (Alteration of Name) Act, 2011, s. 6, for "Orissa" (w.e.f. 1-11-2011).
6. Ins. by Acquired Territories (Merger) Act, 1960 (64 of 1960), s. 4 (w.e.f. 17-1-1961).
7. Added by the Constitution (Ninth Amendment) Act, 1960, s. 3 (w.e.f. 17-1-1961).
8. Ins. by the Punjab Reorganisation Act, 1966 (31 of 1966), s. 7 (w.e.f. 1-11-1966).

| | |
|---|---|
| [1][8. மகாராஷ்டிரம் | மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 8 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்; ஆனால், பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் நீங்கலாக.] |
| [2][[3][9.] கர்நாடகம்] | மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 7 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்; [4][ஆனால், ஆந்திரப் பிரதேசம் மற்றும் மைசூர் (ஆட்சிநிலவரை மாற்றுச்) சட்டம், 1968 இன் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் நீங்கலாக.] |
| [3][10]. [5][ஒடிசா] | இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு ஒரிசா மாகாணத்தில் அடங்கியிருந்த அல்லது அந்த மாகாணத்தின் ஒரு பகுதியாக அமைந்திருந்தாற்போன்று நிருவாகம் செய்யப்பட்டு வந்த ஆட்சிநிலவரைகள். |
| [3][11.] பஞ்சாப் | மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 11 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் [6][மற்றும் கையகப்படுத்தப்பட்ட ஆட்சிநிலவரைகள் (ஒன்றிணைப்புச்) சட்டம், 1960 இன் முதலாம் இணைப்புப்பட்டியலின் II ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்;] [7][ஆனால், அரசமைப்புச் (ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1960 இன் முதலாம் இணைப்புப்பட்டியலின் II ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் நீங்கலாக,] [8][மற்றும் பஞ்சாப் மறுஅமைப்புச் சட்டம், 1966 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவிலும் 4 ஆம் பிரிவிலும், 5 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிலும் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |

---

1. பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 4 ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. ''9. மைசூர்'' என்பதற்கு, மைசூர் மாநிலம் (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 1973 (31/1973) இன் 5 ஆம் பிரிவினால் (1–11–1973 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. 8 முதல் 14 பதிவுகள், 9 முதல் 15 பதிவுகளாகப் பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 4 ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டது.
4. ஆந்திரப் பிரதேசம் மற்றும் மைசூர் (ஆட்சிநிலவரை மாற்றுச்) சட்டம், 1968 (36/1968) இன் 4 ஆம் பிரிவினால் (1–10–1968 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
5. ''ஒரிசா'' என்பதற்கு, ஒரிசா (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2011 இன் 6 ஆம் பிரிவினால் (1–11–2011 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
6. கையகப்படுத்தப்பட்ட ஆட்சிநிலவரைகள் (ஒன்றிணைப்புச்) சட்டம், 1960 (64/1960) இன் 4 ஆம் பிரிவினால் (17–1–1961 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
7. அரசமைப்புச் (ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1960 இன் 3 ஆம் பிரிவினால் (17–1–1961 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.
8. பஞ்சாப் மறுஅமைப்புச் சட்டம், 1966 (31/1966) இன் 7 ஆம் பிரிவினால் (1–11–1966 முதல்செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

| | |
|---|---|
| [1][12.] Rajasthan | The territories specified in section 10 of the States Reorganisation Act, 1956 [2][but excluding the territories specified in the First Schedule to the Rajasthan and Madhya Pradesh (Transfer of Territories) Act, 1959.] |
| [1][13.] Uttar Pradesh | [3][The territories which immediately before the commencement of this Constitution were either comprised in the Province known as the United Provinces or were being administered as if they formed part of that Province, the territories specified in clause (b) of sub-section (1) of section 3 of the Bihar and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1968, and the territories specified in clause (b) of sub-section (1) of section 4 of the Haryana and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1979, but excluding the territories specified in clause (a) of sub-section (1) of section 3 of the Bihar and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1968, [4][and the territories specified in section 3 of the Uttar Pradesh Reorganisation Act, 2000] and the territories specified in clause (a) of sub-section (1) of section 4 of the Haryana and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1979.] |
| [1][14.] West Bengal | The territories which immediately before the commencement of this Constitution were either comprised in the Province of West Bengal or were being administered as if they formed part of that Province and the territory of Chandernagore as defined in clause (c) of section 2 of the Chandernagore (Merger) Act, 1954 and also the territories specified in sub-section (1) of section 3 of the Bihar and West Bengal (Transfer of Territories) Act, 1956 [5][and also the territories referred to in Part III of the First Schedule but excluding the territories referred to in Part III of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015, notwithstanding anything contained in clause (c) of section 3 of the Constitution (Ninth Amendment) Act, 1960, so far as it relates to the territories referred to in Part III of the First Schedule and the territories referred to in Part III of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015.] |

1. Entries 8 to 14 renumbered as entries 9 to 15 by the Bombay Reorganisation Act, 1960 (11 of 1960), s. 4, (w.e.f. 1-5-1960).
2. Ins. by the Rajasthan and Madhya Pradesh (Transfer of Territories) Act, 1959 (47 of 1959), s. 4 (w.e.f. 1-10-1959).
3. Subs. by the Haryana and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1979 (31 of 1979) s. 5, for the entry against "13. Uttar Pradesh" (w.e.f. 15-9-1983).
4. Ins. by the Uttar Pradesh Reorganisation Act, 2000 (29 of 2000), s. 5 (w.e.f. 9-11-2000).
5. Added by the Constitution (One Hundredth Amendment) Act, 2015, s. 3 (w.e.f. 31-7-2015).

[1][12.] ராஜஸ்தான் — மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 10 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்; [2][ஆனால், ராஜஸ்தான் மற்றும் மத்தியப்பிரதேசம் (ஆட்சிநிலவரைகள் மாற்றுச்) சட்டம், 1959 இன் முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் நீங்கலாக.]

[1][13.] உத்தரப்பிரதேசம் — [3][இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, ஐக்கிய மாகாணங்கள் என வழங்கப்பட்ட மாகாணத்தில் அடங்கியிருந்த அல்லது அந்த மாகாணத்தின் ஒரு பகுதியாக அமைந்திருந்தாற்போன்று நிருவாகம் செய்யப்பட்டு வந்த ஆட்சிநிலவரைகள் மற்றும் பீகார் மற்றும் உத்தரப்பிரதேசம் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1968 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் (ஆ) கூறில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும் [4][மற்றும் உத்தரப்பிரதேசம் மறுஅமைப்புச் சட்டம், 2000 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும்] மற்றும் அரியானா மற்றும் உத்தரப்பிரதேசம் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1979 இன் 4 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் (ஆ) கூறில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும் நீங்கலாக.]

[1][14.] மேற்கு வங்காளம் — இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு , மேற்கு வங்காள மாகாணத்தில் அடங்கியிருந்த அல்லது அந்த மாகாணத்தின் ஒரு பகுதியாக அமைந்திருந்தாற்போன்று நிருவாகம் செய்யப்பட்டு வந்த ஆட்சிநிலவரைகள் மற்றும் சந்திரநாகூர் (ஒன்றிணைப்புச்) சட்டம், 1954 இன் 2 ஆம் பிரிவின் (இ) கூறில் வரையறை செய்யப்பட்ட சந்திரநாகூர் ஆட்சிநிலவரை, அத்துடன் பீகார் மற்றும் மேற்குவங்காளம் (ஆட்சிநிலவரை மாற்றுச்) சட்டம், 1956 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும் [5][மற்றும் அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் முதலாம் இணைப்புப்பட்டியலின் III பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளுக்கும் இரண்டாம் இணைப்புப்பட்டியலின் III ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளுக்கும் அது தொடர்புடையதாகிற அளவிற்கு அரசமைப்புச் (ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1960 இன் 3 ஆம் பிரிவின் (இ) கூறில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் முதலாம் இணைப்புப்பட்டியலின் III ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும் கூட; ஆனால் இரண்டாம் இணைப்புப்பட்டியலின் III ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் நீங்கலாக.]

---

1. 8 முதல் 14 வரையிலான பதிவுகள், 9 முதல் 15 வரையிலான பதிவுகளாக பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 4 ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டன.
2. ராஜஸ்தான் மற்றும் மத்தியப்பிரதேசம் (ஆட்சிநிலவரை மாற்றுச்) சட்டம், 1959 (47/1959) இன் 4 ஆம் பிரிவினால் (1–10–1959 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. "13. உத்தரப்பிரதேசம்" என்ற பதிவிற்கு எதிராக, அரியானா மற்றும் உத்தரப்பிரதேசம் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1979 (31/1979) இன் 5 ஆம் பிரிவினால் (15–9–1983 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
4. உத்தரப்பிரதேச மறுஅமைப்பு சட்டம், 2009 (29/2000) இன் 5 ஆம் பிரிவினால் (9–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
5. அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் 3 ஆம் பிரிவினால் (31–7–2015 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.

| Name | Territories |
|---|---|
| [2][1][* * *.] | * * *] |
| [4][[3][15.] Nagaland | The territories specified in sub-section (1) of section 3 of the State of Nagaland Act, 1962.] |
| [4][[5][16.] Haryana | [6][The territories specified in sub-section (1) of section 3 of the Punjab Reorganisation Act, 1966 and the territories specified in clause (a) of sub-section (1) of section 4 of the Haryana and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1979, but excluding the territories specified in clause (b) of sub-section (1) of section 4 of that Act.]] |
| [4][[7][17.] Himachal Pradesh | The territories which immediately before the commencement of this Constitution were being administered as if they were Chief Commissioners' Provinces under the names of Himachal Pradesh and Bilaspur and the territories specified in sub-section (1) of section 5 of the Punjab Reorganisation Act, 1966.] |
| [4][[8][18.] Manipur | The territory which immediately before the commencement of this Constitution was being administered as if it were a Chief Commissioner's Province under the name of Manipur.] |
| [4][19.] Tripura | The territory which immediately before the commencement of this Constitution was being administered as if it were a Chief Commissioner's Province under the name of Tripura [9][and the territories referred to in Part II of the First Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015, notwithstanding anything contained in clause (d) of section 3 of the Constitution (Ninth Amendment) Act, 1960, so far as it relates to the territories referred to in Part II of the First Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015.] |

---

1. Entries 8 to 14 renumbered as entries 9 to 15 by the Bombay Reorganisation Act, 1960 (11 of 1960), s. 4, (w.e.f. 1-5-1960).
2. Entry 15 relating to Jammu and Kashmir deleted by the Jammu and Kashmir Reorganisation Act, 2019 (34 of 2019), s. 6 (w.e.f. 31-10-2019).
3. Ins. by the State of Nagaland Act, 1962 (27 of 1962), s. 4 (w.e.f. 1-12-1963).
4. Entries 16 to 29 renumbered as entries 15 to 28 by the Jammu and Kashmir Reorganisation Act, 2019 (34 of 2019), s. 6 (w.e.f. 31-10-2019).
5. Ins. by the Punjab Reorganisation Act, 1966 (31 of 1966), s. 7 (w.e.f. 1-11-1966) and the entry therein subsequently amended by Haryana and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1979 (31 of 1979), s. 5 (w.e.f. 15-9-1983).
6. Subs. by the Haryana and Uttar Pradesh (Alteration of Boundaries) Act, 1979 (31 of 1979), s. 5, for the entry against "17. Haryana" (w.e.f. 15-9-1983).
7. Ins. by the State of Himachal Pradesh Act, 1970 (53 of 1970), s. 4 (w.e.f. 25-1-1971).
8. Ins. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 9 (w.e.f. 21-1-1972).
9. Added by the Constitution (One Hundredth Amendment) Act, 2015, s. 3 (w.e.f. 31-7-2015).

| பெயர் | ஆட்சிநிலவரைகள் |
|---|---|
| [2][[1][* * *.] | * * *] |
| [4][[3][15.] நாகாலாந்து | நாகாலாந்து மாநிலச் சட்டம், 1962 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| [4][[5][16.] அரியானா | [6][பஞ்சாப் மறுஅமைப்புச் சட்டம், 1966 இன் 3 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் மற்றும் அரியானா மற்றும் உத்தரப்பிரதேசம் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1979 இன் 4 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் (அ) கூறில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்; ஆனால், அந்த சட்டத்தின் 4 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவின் (v) கூறில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் நீங்கலாக.]] |
| [4][[7][17.] இமாச்சலப் பிரதேசம் | இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, இமாச்சலப் பிரதேசம் மற்றும் பிலாஸ்பூர் என்னும் பெயர்களில் தலைமை ஆணையர்களின் மாகாணங்கள் போன்று நிருவாகம் செய்யப்பட்டு வந்த ஆட்சிநிலவரைகள் மற்றும் பஞ்சாப் மறுஅமைப்புச் சட்டம், 1966 இன் 5 ஆம் பிரிவின் (1) ஆம் உட்பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| [4][[8][18.] மணிப்பூர் | இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, மணிப்பூர் என்னும் பெயரில் ஒரு தலைமை ஆணையர் மாகாணமாக இருந்தாற்போன்று நிருவாகம் செய்யப்பட்டு வந்த ஆட்சிநிலவரை.] |
| [4][19.] திரிபுரா | இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, திரிபுரா என்னும் பெயரில் ஒரு தலைமை ஆணையர் மாகாணமாக இருந்தாற்போன்று நிருவாகம் செய்யப்பட்டு வந்த ஆட்சிநிலவரை [9][மற்றும் அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் முதலாம் இணைப்புப்பட்டியலின் II ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளுக்கு அது தொடர்புடையதாகிற அளவிற்கு, அரசமைப்புச் (ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1960 இன் 3 ஆம் பிரிவின் (ஈ) கூறில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் முதலாம் இணைப்புப்பட்டியலின் II ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |

---

1. 8 முதல் 14 வரையிலான பதிவுகள், 9 முதல் 15 வரையிலான பதிவுகளாக, பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 4ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டன.
2. ஜம்மு–காஷ்மீர் தொடர்புடைய 15 ஆம் பிரிவு, ஜம்மு–காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 (34/2019) இன் 6 ஆம் பிரிவினால் (31–10–2019 முதல் செல்திறம் பெறுமாறு) நீக்கப்பட்டது.
3. நாகலாந்து மாநிலச் சட்டம், 1962 (27/1962) இன் 4 ஆம் பிரிவினால் (1–12–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. 16 முதல் 29 வரையிலான பதிவுகள், 15 முதல் 28 வரையிலான பதிவுகளாக, ஜம்மு–காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 (34/2019) இன் 6 ஆம் பிரிவினால் (31–10–2019 முதல் செல்திறம் பெறுமாறு ) மறுஎண்ணிடப்பட்டது.
5. பஞ்சாப் மறுஅமைப்புச் சட்டம், 1966 (31/1966) இன் 7 ஆம் பிரிவினால் (1–11–1966 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது மற்றும் அதில் உள்ள பதிவு அரியானா மற்றும் உத்தரப்பிரதேசம் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1979 (31/1979) இன் 5 ஆம் பிரிவினால் (15–9–1983 முதல் செல்திறம் பெறுமாறு) அதன்பின் திருத்தப்பட்டது.
6. "17. அரியானா" என்ற பதிவிற்கு எதிராக, அரியானா மற்றும் உத்தரப்பிரதேசம் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1979 (31/1979) இன் 5 ஆம் பிரிவினால் 15–9–1983 முதல் செல்திறம் பெறுமாறு, மாற்றாக அமைக்கப்பட்டது.
7. இமாச்சலப் பிரதேசச் சட்டம், 1970 (53/1970) இன் 4 ஆம் பிரிவினால் (25–1–1971 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
8. வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 9 ஆம் பிரிவினால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
9. அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் 3 ஆம் பிரிவினால் (31–7–2015 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.

| Name | Territories |
|---|---|
| [1][20.] Meghalaya | The territories specified in section 5 of the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 [2][and the territories referred to in Part I of the First Schedule but excluding the territories referred to in Part II of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015.] |
| [1][[3][21.] Sikkim | The territories which immediately before the commencement of the Constitution (Thirty-sixth Amendment) Act, 1975, were comprised in Sikkim.] |
| [1][[4][22.] Mizoram | The territories specified in section 6 of the North-Eastern Areas (Reorganisation) Act, 1971.] |
| [1][[5][23.] Arunachal Pradesh | The territories specified in section 7 of the North-Eastern Areas (Reorganisation) Act, 1971.] |
| [1][[6][24.] Goa | The territories specified in section 3 of the Goa, Daman and Diu Reorganisation Act, 1987.] |
| [1][[7][25.] Chhattisgarh | The territories specified in section 3 of the Madhya Pradesh Reorganisation Act, 2000.] |
| [1][[8][26.] [9][Uttarakhand] | The territories specified in section 3 of the Uttar Pradesh Reorganisation Act, 2000.] |
| [1][[10][27.] Jharkhand | The territories specified in section 3 of the Bihar Reorganisation Act, 2000.] |
| [1][[11][28.] Telangana | The territories specified in section 3 of the Andhra Pradesh Reorganisation Act, 2014.] |

---

1. Entries 16 to 29 renumbered as entries 15 to 28 by the Jammu and Kashmir Reorganisation Act, 2019 (34 of 2019), s. 6 (w.e.f.31-10-2019).
2. Added by the Constitution (One Hundredth Amendment) Act, 2015, s. 3 (w.e.f. 31-7-2015).
3. Ins. by the Constitution (Thirty-sixth Amendment) Act, 1975, s. 2 (w.e.f. 26-4-1975).
4. Ins. by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 4 (w.e.f. 20-2-1987).
5. Ins. by the State of Arunachal Pradesh Act, 1986 (69 of 1986), s. 4 (w.e.f. 20-2-1987).
6. Ins. by the Goa, Daman and Diu Reorganisation Act, 1987 (18 of 1987), s. 5 (w.e.f. 30-5-1987).
7. Ins. by the Madhya Pradesh Reorganisation Act, 2000 (28 of 2000), s. 5 (w.e.f. 1-11-2000).
8. Ins. by the Uttar Pradesh Reorganisation Act, 2000 (29 of 2000), s. 5 (w.e.f. 9-11-2000).
9. Subs. by the Uttaranchal (Alteration of Name) Act, 2006 (52 of 2006), s. 4, for the word "Uttaranchal" (w.e.f. 1-1-2007).
10. Ins. by the Bihar Reorganisation Act, 2000 (30 of 2000), s. 5 (w.e.f. 15-11-2000).
11. Ins. by the Andhra Pradesh Reorganisation Act, 2014 (6 of 2014), s. 10 (w.e.f. 2-6-2014).

| பெயர் | ஆட்சிநிலவரைகள் |
|---|---|
| [1][20.] மேகாலயா | வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்புச்) சட்டம், 1971 இன் 5 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் [2][மற்றும் அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் முதலாம் இணைப்புப்பட்டியலின் I ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்; ஆனால், இரண்டாம் இணைப்புப்பட்டியலின் II ஆம் பகுதியில் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் நீங்கலாக.] |
| [1][[3][21.] சிக்கிம் | அரசமைப்புச் (முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1975 இன் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, சிக்கிமில் அடங்கியிருந்த ஆட்சிநிலவரைகள்.] |
| [1][[4][22.] மிசோரம் | வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்புச்) சட்டம், 1971 இன் 6 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| [1][[5][23.] அருணாச்சலப் பிரதேசம் | வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்புச்) சட்டம், 1971 இன் 7 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| [1][[6][24.] கோவா | கோவா, தமண் மற்றும் டையூ மறுஅமைப்புச் சட்டம், 1987 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| [1][[7][25.] சட்டீஸ்கர் | மத்தியப் பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2000 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| [1][[8][26.] [9][உத்தரகாண்ட்] | உத்தரப்பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2000 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| [1][[10][27.] ஜார்கண்ட் | பீகார் மறுஅமைப்புச் சட்டம், 2000 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| [1][[11][28.] தெலுங்கானா | ஆந்திரப் பிரதேசம் மறுஅமைப்புச் சட்டம், 2014 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்ட ஆட்சிநிலவரைகள்.] |

---

1. 16 முதல் 29 வரையிலான பதிவுகள், 15 முதல் 28 வரையிலான பதிவுகளாக, ஜம்மு–காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 (34/2019) இன் 6 ஆம் பிரிவினால் (31–10–2019 முதல் செல்திறம் பெறுமாறு ) மறுஎண்ணிடப்பட்டன.
2. அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் 3 ஆம் பிரிவினால் (31–7–2015 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.
3. அரசமைப்புச் (முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 2 ஆம் பிரிவினால் (26–4–1975 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 4 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
5. அருணாச்சலப் பிரதேச மாநிலச் சட்டம், 1986 (69/1986) இன் 4 ஆம் பிரிவினால் (20–02–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
6. கோவா, தமண், டையூ மறுஅமைப்புச்சட்டம், 1987 (18/1987) இன் 5 ஆம் பிரிவினால் (30–5–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
7. மத்தியப்பிரதேச மறுஅமைப்புச்சட்டம், 2000 (28/2000) இன் 5 ஆம் பிரிவினால் (1–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
8. உத்தரப்பிரதேச மறுஅமைப்புச்சட்டம், 2000 (29/2000) இன் 5 ஆம் பிரிவினால் (9–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
9. "உத்தராஞ்சல்'' என்ற சொல்லுக்கு, உத்தராஞ்சல் (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (52/2006) இன் 4 ஆம் பிரிவினால் (1–1–2007 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
10. பீகார் மறுஅமைப்புச் சட்டம், 2000 (30/2000) இன் 5 ஆம் பிரிவினால் (15–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
11. ஆந்திரப் பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2014 (6/2014) இன் 10 ஆம் பிரிவினால் (2–6–2014 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

## II. THE UNION TERRITORIES

| Name | Extent |
|---|---|
| 1. Delhi | The territory which immediately before the commencement of this Constitution was comprised in the Chief Commissioner's Province of Delhi. |
| [1][* | * * *] |
| [2][* | * * *] |
| [3][2.] The Andaman and Nicobar | The territory which immediately before the commencement of this Constitution was comprised in the Chief Commissioner's Province of the Andaman and Nicobar Islands. |
| [3][3.] [4][Lakshadweep] | The territory specified in section 6 of the States Reorganisation Act, 1956. |
| [5] [[3][4.] Dadra and Nagar Haveli and Daman and Diu | The territory which immediately before the eleventh day of August, 1961 was comprised in Free Dadra and Nagar Haveli and the territories specified in section 4 of the Goa, Daman and Diu Reorganistion Act, 1987.] |
| [6][[3][*.] | * * *] |
| [7][[3][6.] [8][Puducherry] | The territories which immediately before the sixteenth day of August, 1962, were comprised in the French Establishments in India known as Pondicherry, Karikal, Mahe and Yanam.] |
| [9][[3][7.] Chandigarh | The territories specified in section 4 of the Punjab Reorganisation Act, 1966.] |

1. Entry 2 relating to "Himachal Pradesh" omitted and entries 3 to 10 re-numbered as entries 2 to 9 respectively by the State of Himachal Pradesh Act, 1970 (53 of 1970), s. 4 (w.e.f. 25-1-1971).
2. Entries relating to Manipur and Tripura (i.e. entries 2 and 3) omitted by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 9 (w.e.f. 21-1-1972).
3. Entries 4 to 9 renumbered as entries 2 to 7 respectively by ibid.
4. Subs. by the Laccadive, Minicoy and Amindivi Islands (Alteration of Name) Act, 1973 (34 of 1973), s. 5, for "The Laccadive, Minicoy and Amindivi Islands" (w.e.f. 1-11-1973).
5. Subs. by the Dadra and Nagar Haveli and Daman and Diu (Merger of Union Territories) Act, 2019 (44 of 2019), s.5 for entries 4 and 5 (w.e.f. 19-12-2019). Entry 4 relating to Dadra and Nagar Haveli was ins. by the Constitution (Tenth Amendment ) Act, 1961, s. 2 (w.e.f. 11-8-1961).
6. Subs. by the Goa, Daman and Diu (Reorganisation) Act, 1987 (18 of 1987), s. 5, for entry 5 (w.e.f. 30-5-1987) and later for entries 4 and 5, entry 4 was subs. by the Dadra and Nagar Haveli and Daman and Diu (Merger of Union Territories) Act, 2019 (44 of 2019), s.5 (w.e.f. 19-12-2019)..
7. Ins. by the Constitution (Fourteenth Amendment) Act, 1962, s. 3 (w.e.f. 16-8-1962).
8. Subs. by the Pondicherry (Alteration of Name) Act, 2006 (44 of 2006), s. 5, for the word "Pondicherry" (w.e.f. 1-10-2006).
9. Ins. by the Punjab Reorganisation Act, 1966 (31 of 1966), s. 7 (w.e.f. 1-11-1966).

## II. ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள்

| பெயர் | பரப்பிடம் |
|---|---|
| 1. தில்லி | இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, தில்லித் தலைமை ஆணையர் மாகாணத்தில் அடங்கியிருந்த ஆட்சிநிலவரை. |
| [1][* | * * *] |
| [2][* | * * *] |
| [3][2.] அந்தமான்– நிக்கோபார்த் தீவுகள் | இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, அந்தமான்– நிக்கோபார்த் தீவுகள் தலைமை ஆணையர் மாகாணத்தில் அடங்கியிருந்த ஆட்சிநிலவரை. |
| [3][3.] [4][இலட்சத் தீவுகள்] | மாநிலங்கள் மறுஅமைப்புச் சட்டம், 1956 இன் 6 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள். |
| [5][[3][4.] தாத்ரா – நாகர் ஹவேலி மற்றும் தமண் மற்றும் டையூ | 1961 ஆகஸ்டு பதினோராம் நாளுக்கு உடன்முன்பு, சுதந்திர தாத்ரா–நாகர் ஹவேலியில் அடங்கியிருந்த ஆட்சிநிலவரை மற்றும் கோவா, தமண் மற்றும் டையூ மறுஅமைப்புச் சட்டம், 1987 இன் 4 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |
| [6][[3][*.] | * * *] |
| [7][[3][6.] [8][புதுச்சேரி] | 1962 ஆகஸ்டு பதினாறாம் நாளுக்கு உடன்முன்பு, பாண்டிச்சேரி, காரைக்கால், மாஹி மற்றும் ஏனாம் என வழங்கப்பட்ட இந்தியாவிலுள்ள பிரெஞ்சுக் குடியேற்ற அமைப்புகளில் அடங்கியிருந்த ஆட்சிநிலவரைகள்.] |
| [9][[3][7.] சண்டிகர் | பஞ்சாப் மறுஅமைப்புச் சட்டம், 1966 இன் 4 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்.] |

---

1. இமாச்சலப் பிரதேசம் மாநிலச் சட்டம், 1970 (53/1970) இன் 4 ஆம் பிரிவினால் "இமாச்சலப் பிரதேசம்" தொடர்பான 2 ஆம் பதிவு விட்டுவிடப்பட்டது மற்றும் 3 முதல் 10 பதிவுகள், முறையே 2 முதல் 9 பதிவுகளாக (25–1–1971 முதல் செல்திறம் பெறுமாறு) மறு எண்ணிடப்பட்டன.
2. வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 9 ஆம் பிரிவினால் மணிப்பூர் மற்றும் திரிபுரா தொடர்பான பதிவுகள் (அதாவது 2 மற்றும் 3 ஆம் பதிவுகள்) (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.
3. 4 முதல் 9 வரையிலான பதிவுகள், மேற்படிச் சட்டத்தினால் முறையே 2 முதல் 7 பதிவுகளாக மறுஎண்ணிடப்பட்டன.
4. "இலக்கத்தீவு, மினிக்காய் மற்றும் அமின்திவி தீவுகள்" என்பதற்கு, இலக்கத்தீவு, மினிக்காய் மற்றும் அமின்திவி தீவுகள் (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 1973 (34/1973) இன் 5 ஆம் பிரிவினால் (1–11–1973 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
5. 4 மற்றும் 5 ஆம் பதிவுகளுக்கு, தாத்ரா–நாகர் ஹவேலி மற்றும் தமண் மற்றும் டையூ (ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள் ஒன்றிணைப்புச்) சட்டம், 2019 (44/2019) இன் 5 ஆம் பிரிவினால் (19–12–2019 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. தாத்ரா மற்றும் நாகர்ஹவேலி தொடர்பான 4 ஆம் பதிவு, அரசமைப்புச் (பத்தாம் திருத்தம்) சட்டம், 1961 இன் 2 ஆம் பிரிவினால் (11–08–1961 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
6. 5 ஆம் பதிவிற்கு, கோவா, தமண் மற்றும் டையூ (மறுஅமைப்பு) சட்டம், 1987 (18/1987) இன் 5 ஆம் பிரிவினால் (30–05–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. பின்பு 4 மற்றும் 5 ஆம் பதிவுகளுக்கு 4 ஆம் பதிவு, தாத்ரா மற்றும் நாகர்ஹவேலி மற்றும் தமண் மற்றும் டையூ (ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள் ஒன்றிணைப்புச்) சட்டம், 2019 (44/2019) ஆல் (19–12–2019 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
7. அரசமைப்புச் (பதினான்காம் திருத்தம்) சட்டம், 1962 இன் 3 ஆம் பிரிவினால் (16–8–1962 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
8. "பாண்டிச்சேரி" என்ற சொல்லுக்கு, பாண்டிச்சேரி (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (44/2006) இன் 5 ஆம் பிரிவினால் (1–10–2006 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
9. பஞ்சாப் மறுஅமைப்புச் சட்டம், 1966 (31/1966) இன் 7 ஆம் பிரிவினால் (1–11–1966 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

| | | |
|---|---|---|
| [1][* | | * * *] |
| [2][8. | Jammu and Kashmir | The territories specified in section 4 of the Jammu and Kashmir Reorganization Act, 2019. |
| 9. | Ladakh | The territories specified in section 3 of the Jammu and Kashmir Reorganization Act, 2019.] |

1. Entry 8 relating to Mizoram omitted by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 4 and entry 9 relating to Arunachal Pradesh renumbered as entry 8 (w.e.f. 20-2-1987) and entry 8 relating to Arunachal Pradesh omitted by the State of Arunachal Pradesh Act, 1986 (69 of 1986), s. 4 (w.e.f. 20-2-1987).

2. Ins. by the Jammu and Kashmir Reorganisation Act, 2019 (34 of 2019), s. 6 (w.e.f. 31-10-2019).

[1][* * * *]

| | | |
|---|---|---|
| [2][8. | ஜம்மு–காஷ்மீர் | ஜம்மு–காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 இன் 4 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்ட ஆட்சிநிலவரைகள். |
| 9. | லடாக் | ஜம்மு–காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 இன் 3 ஆம் பிரிவில் குறித்துரைக்கப்பட்ட ஆட்சிநிலவரைகள்.] |

1. மிசோரம் தொடர்புடைய 8 ஆம் பதிவு, மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) 4 ஆம் பிரிவினால் விட்டுவிடப்பட்டது. அருணாச்சலப் பிரதேசம் தொடர்புடைய 9 ஆம் பதிவு, 8ஆம் பதிவாக (20–02–1987 முதல் செல்திறம் பெறுமாறு) மறு எண்ணிடப்பட்டு மற்றும் அருணாச்சலப் பிரதேசம் தொடர்புடைய 8 ஆம் பதிவு அருணாச்சலப் பிரதேச மாநிலச் சட்டம், 1986 (69/1986) இன் 4 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

2. ஜம்மு–காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 (34/2019) இன் 6 ஆம் பிரிவினால் (31–10–2019 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

## SECOND SCHEDULE

[Articles 59(3), 65(3), 75(6), 97, 125, 148(3), 158(3), 164 (5), 186 and 221]

## PART A

## PROVISIONS AS TO THE PRESIDENT AND THE GOVERNORS OF STATES [1]***

1. There shall be paid to the President and to the Governors of the States [1]*** the following emoluments per mensem, that is to say:—

| | | |
|---|---|---|
| The President | ...... | 10,000 rupees*. |
| The Governor of a State | ...... | 5,500 rupees**. |

2. There shall also be paid to the President and to the Governors of the States[2]*** such allowances as were payable respectively to the Governor-General of the Dominion of India and to the Governors of the corresponding Provinces immediately before the commencement of this Constitution.

3. The President and the Governors of [3][the States] throughout their respective terms of office shall be entitled to the same privileges to which the Governor-General and the Governors of the corresponding Provinces were respectively entitled immediately before the commencement of this Constitution.

4. While the Vice-President or any other person is discharging the functions of, or is acting as, President, or any person is discharging the functions of the Governor, he shall be entitled to the same emoluments, allowances and privileges as the President or the Governor whose functions he discharges or for whom he acts, as the case may be.

[4]* * *

---

1. The words and letter "specified in Part A of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

* Now five lakh rupees, *vide* the Finance Act, 2018 (13 of 2018), s. 137 (w.e.f. 1-1-2016).

** Now three lakh fifty thousand rupees by s. 161, *ibid*.

2. The words "so specified" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

3. Subs. by *ibid*, for "such states".

4. Part B omitted by *ibid*.

## இரண்டாம் இணைப்புப்பட்டியல்

[59 (3), 65 (3), 75 (6), 97, 125, 148 (3), 158 (3), 164(5), 186, 221 ஆகிய உறுப்புகள்]

### பகுதி (அ)

### குடியரசுத்தலைவர் மற்றும்[1]*** மாநிலங்களின் ஆளுநர்கள் குறித்த வகையங்கள்

1. குடியரசுத்தலைவருக்கும்[1]*** மாநிலங்களின் ஆளுநர்களுக்கும் மாதம் ஒன்றுக்குப் பின்வரும் பதவியூதியங்கள் வழங்கப்படுதல் வேண்டும்:—

குடியரசுத்தலைவர் …… 10,000 ரூபாய்*.

ஒரு மாநிலத்தின் ஆளுநர் …… 5,500 ரூபாய்**.

2. இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, முறையே இந்தியத் தன்னாட்சியத்தின் தலைமை ஆளுநருக்கும் நேரிணையான மாகாணங்களின் ஆளுநர்களுக்கும் வழங்கப்பட்டதான படித்தொகைகள், குடியரசுத்தலைவருக்கும்[2]*** மாநிலங்களின் ஆளுநர்களுக்கும் வழங்கப்படுதல் வேண்டும்.

3. குடியரசுத்தலைவரும் [3][மாநிலங்களின்] ஆளுநர்களும் தம் பதவிக்காலங்கள் முழுவதிலும் இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, முறையே தலைமை ஆளுநரும் நேரிணையான மாகாணங்களின் ஆளுநர்களும் கொண்டிருந்த மதிப்புரிமைகளுக்கு உரிமைகொண்டவர்கள் ஆவர்.

4. குடியரசுத் துணைத்தலைவர் அல்லது பிறர் எவரும் குடியரசுத்தலைவரின் பதவிப்பணிகளை ஆற்றிவரும்போதோ குடியரசுத்தலைவராகச் செயல்படும்போதோ அல்லது எவர் ஒருவரும் ஆளுநரின் பதவிப்பணிகளை ஆற்றிவரும்போதோ அவர், குடியரசுத்தலைவராக அல்லது ஆளுநராகப் பதவிப்பணிகளை ஆற்றிவரும்போது அல்லது செயல்படும்போது, அந்தந்தப் பதவிக்குரிய ஊதியங்களையும் படித்தொகைகளையும் மதிப்புரிமைகளையும் பெறுவதற்கு உரிமைகொண்டவர் ஆவார்.

[4]* * *

---

1. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) இல் குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள் மற்றும் எழுத்து அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

* நிதிச் சட்டம், 2018 (13/2018) இன் 137 ஆம் பிரிவின்படி, (1–1–2016 முதல் செல்திறம் பெறுமாறு) ஐந்து இலட்ச ரூபாயாக மாற்றப்பட்டது.

** *மேற்படிச் சட்டத்தின்* 161 ஆம் பிரிவினால் தற்போது மூன்று இலட்சத்து ஐம்பதாயிரம் ரூபாய்.

2. "அவ்வாறு குறித்துரைக்கப்பட்ட" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

3. "அத்தகைய மாநிலங்கள்" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.

4. பகுதி (ஆ) *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டது.

## PART C

### PROVISIONS AS TO THE SPEAKER AND THE DEPUTY SPEAKER OF THE HOUSE OF THE PEOPLE AND THE CHAIRMAN AND THE DEPUTY CHAIRMAN OF THE COUNCIL OF STATES AND THE SPEAKER AND THE DEPUTY SPEAKER OF THE LEGISLATIVE ASSEMBLY [1]*** AND THE CHAIRMAN AND THE DEPUTY CHAIRMAN OF THE LEGISLATIVE COUNCIL OF [2][A STATE]

7. There shall be paid to the Speaker of the House of the People and the Chairman of the Council of States such salaries and allowances as were payable to the Speaker of the Constituent Assembly of the Dominion of India immediately before the commencement of this Constitution, and there shall be paid to the Deputy Speaker of the House of the People and to the Deputy Chairman of the Council of States such salaries and allowances as were payable to the Deputy Speaker of the Constituent Assembly of the Dominion of India immediately before such commencement.

8. There shall be paid to the Speaker and the Deputy Speaker of the Legislative Assembly [3]*** and to the Chairman and the Deputy Chairman of the Legislative Council of [4][a State] such salaries and allowances as were payable respectively to the Speaker and the Deputy Speaker of the Legislative Assembly and the President and the Deputy President of the Legislative Council of the corresponding Province immediately before the commencement of this Constitution and, where the corresponding Province had no Legislative Council immediately before such commencement, there shall be paid to the Chairman and the Deputy Chairman of the Legislative Council of the State such salaries and allowances as the Governor of the State may determine.

---

1. The words and letter "OF A STATE IN PART A OF THE FIRST SCHEDULE" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, Sec 29 and Sch (w.e.f 1-11-1956).
2. Subs. by *ibid.*, for "ANY SUCH STATE".
3. The words and letter "of a State specified in Part A of the First Schedule" omitted by *ibid.*
4. Subs. by *ibid.*, for "such State".

## பகுதி (இ)

## மக்களவைத் தலைவர், துணைத் தலைவர், மாநிலங்களவைத் தலைவர், துணைத் தலைவர், [1]*** [2][ஒரு மாநிலச்] சட்டமன்றப் பேரவைத்தலைவர், துணைத் தலைவர், சட்டமன்ற மேலவைத் தலைவர், துணைத் தலைவர் ஆகியோர் குறித்த வகையங்கள்

7. மக்களவைத் தலைவருக்கும் மாநிலங்களவைத் தலைவருக்கும், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, இந்தியத் தன்னாட்சியத்தின் அரசமைப்புப் பேரவைத்தலைவருக்கு வழங்கப்பட்டதான பதவியூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்படுதல் வேண்டும்; மேலும், மக்களவைத் துணைத் தலைவருக்கும் மாநிலங்களவைத் துணைத் தலைவருக்கும், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, இந்தியத் தன்னாட்சியத்தின் அரசமைப்புப் பேரவைத் துணைத்தலைவருக்கு வழங்கப்பட்டதான பதவியூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்படுதல் வேண்டும்.

8. [3]***[ஒரு [4][மாநிலச்] சட்டமன்றப் பேரவைத் தலைவருக்கும் துணைத் தலைவருக்கும், சட்டமன்ற மேலவைத் தலைவருக்கும் துணைத்தலைவருக்கும் இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, முறையே நேரிணையான மாகாணத்தின் சட்டமன்றப் பேரவைத் தலைவருக்கும் துணைத் தலைவருக்கும், சட்டமன்ற மேலவைத் தலைவருக்கும் துணைத் தலைவருக்கும் வழங்கப்பட்டதான வரையூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்படுதல் வேண்டும்; மேலும், அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு, நேரிணையான மாகாணம், சட்டமன்ற மேலவை எதனையும் கொண்டிறாதவிடத்து, அந்த மாநிலச்சட்டமன்ற மேலவைத் தலைவருக்கும் துணைத் தலைவருக்கும் அந்த மாநில ஆளுநர் தீர்மானிக்கும் வரையூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்படுதல் வேண்டும்.

---

1. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) இல் உள்ள மாநிலத்தின்" என்ற சொற்கள் மற்றும் எழுத்து அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.
2. "அத்தகைய மாநிலம் எதனின்" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) இல் குறித்துரைக்கப்பட்டுள்ள மாநிலங்களின்" என்ற சொற்கள் மற்றும் எழுத்து *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.
4. "அத்தகைய மாநிலம்" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.

## PART D

### PROVISIONS AS TO THE JUDGES OF THE SUPREME COURT AND OF THE HIGH COURTS [1]***

9. [2][(1) There shall be paid to the Judges of the Supreme Court, in respect of time spent on actual service, salary at the following rates per mensem, that is to say:—

| | | |
|---|---|---|
| The Chief Justice | ...... | [3][10,000 rupees.]* |
| Any other Judge | ...... | [4][9,000 rupees.] ** |

Provided that if a Judge of the Supreme Court at the time of his appointment is in receipt of a pension (other than a disability or wound pension) in respect of any previous service under the Government of India or any of its predecessor Governments or under the Government of a State or any of its predecessor Governments, his salary in respect of service in the Supreme Court [5][shall be reduced—

(a) by the amount of that pension, and

(b) if he has, before such appointment, received in lieu of a portion of the pension due to him in respect of such previous service the commuted value thereof, by the amount of that portion of the pension, and

(c) if he has, before such appointment, received a retirement gratuity in respect of such previous service, by the pension equivalent of that gratuity].

(2) Every Judge of the Supreme Court shall be entitled without payment of rent to the use of an official residence.

---

1. The words and letter "IN STATES IN PART A OF THE FIRST SCHEDULE" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).
2. Subs. by *ibid*., s. 25, for sub-paragraph (1).
3. Subs. by the Constitution (Fifty-Fourth Amendment) Act, 1986, s .4, for "5,000 Rupees" to "10,000 Rupees" (w.e.f. 1-4-1986).

* Now two lakh eighty thousand rupees, *vide* the High Court and Supreme Court Judges (Salaries and Conditions of Service) Amendment Act, 2018 (10 of 2018), s. 6 (w.e.f. 1-1-2016).

4. Subs. by the Constitution (Fifty-Fourth Amendment) Act, 1986, s. 4, for "4,000 Rupees" to "9,000 Rupees" (w.e.f. 1-4-1986).

** Now two lakh fifty thousand rupees, *vide* the High Court and Supreme Court Judges (Salaries and Conditions of Service) Amendment Act, 2018 (10 of 2018), s. 6 (w.e.f. 1-1-2016).

5. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 25, for "shall be reduced by the amount of that pension" (w.e.f. 1-11-1956).

## பகுதி (ஈ)

## உச்ச நீதிமன்றத்தின் மற்றும்

## [1]***உயர் நீதிமன்றங்களின் நீதிபதிகள் குறித்த வகையங்கள்

9. [2][ (1) உச்ச நீதிமன்ற நீதிபதிகளுக்கு, உள்ளபடியே பணியில் இருந்த காலத்தைப் பொறுத்து மாதம் ஒன்றுக்குப் பின்வரும் வீதங்களில் வரையூதியம் வழங்கப்படுதல் வேண்டும்:—

| | | |
|---|---|---|
| தலைமை நீதிபதி | ...... | [3][10,000 ரூபாய்]* |
| பிறிதோர் நீதிபதி | ...... | [4][9,000 ரூபாய்]** |

**வரம்புரையாக** : உச்ச நீதிமன்ற நீதிபதி ஒருவர், அவருடைய அமர்த்துகைக் காலத்தில் இந்திய அரசின் கீழோ அதற்கு முன்பிருந்த அரசுகளில் எதன்கீழுமோ ஒரு மாநில அரசின் கீழோ அதற்கு முன்பிருந்த அரசுகளில் எதன்கீழுமோ ஆற்றிய முந்தைய பணி எதனையும் பொறுத்து (ஏலாமைக்கான அல்லது உடற்காயத்திற்கான ஓய்வூதியம் அல்லாத பிற) ஓய்வூதியம் பெற்று வருவாராயின், உச்ச நீதிமன்றப் பணியைப் பொறுத்து அவரது வரையூதியம்—

[5][(அ) அந்த ஓய்வூதியத் தொகையின் அளவுக்கும்,

(ஆ) அத்தகைய முந்தைய பணியைப் பொறுத்து அவருக்கு உரிய ஓய்வூதியத்தின் ஒரு பகுதிக்கு மாற்றாக, அதன் மாற்று மதிப்பை அத்தகைய அமர்த்துகைக்கு முன்பு அவர் பெற்றிருப்பாராயின், ஓய்வூதியத்தின் அந்தப் பகுதித் தொகையின் அளவுக்கும்,

(இ) அத்தகைய அமர்த்துகைக்கு முன்பு அத்தகைய முந்தைய பணியைப் பொறுத்து அவர் ஓய்வுப் பணிக்கொடை பெற்றிருப்பாராயின், அந்தப் பணிக்கொடையின் ஓய்வூதியத்திற்குச் சமன்மையான அளவுக்கும்

குறைக்கப்படுதல் வேண்டும்.]

(2) உச்ச நீதிமன்ற நீதிபதி ஒவ்வொருவரும், தம் பதவிக்குரிய உறைவிடத்தில் வாடகை ஏதுமின்றி உறைவதற்கு உரிமை கொண்டவர் ஆவார்.

---

1. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (ஆ) இல் உள்ள மாநிலங்களின்" என்ற சொற்கள் மற்றும் எழுத்து அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம்,1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.
2. உள்பத்தி (1) என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தின்* 25 ஆம் பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "5000 ரூபாய்" என்பதற்கு, அரசமைப்புச் (ஐம்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1986 இன் 4 ஆம் பிரிவினால் (1–4–1986 முதல் செல்திறம் பெறுமாறு), 10,000 ரூபாய் என மாற்றாக அமைக்கப்பட்டது.

* உயர் நீதிமன்ற மற்றும் உச்ச நீதிமன்ற நீதிபதிகள் (வரையூதியங்கள் மற்றும் பணிவரைக்கட்டுகள்) திருத்தச் சட்டம், 2018 (10/2018) இன் 6 ஆம் பிரிவின்படி, இரண்டு இலட்சத்து எண்பதாயிரம் ரூபாயாக, (1–1–2016 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றப்பட்டது.

4. "4,000 ரூபாய்" என்பதற்கு, அரசமைப்புச் (ஐம்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1986 இன் 4 ஆம் பிரிவினால் (1–4–1986 முதல் செல்திறம் பெறுமாறு), 9,000 ரூபாய் என மாற்றாக அமைக்கப்பட்டது.

** உயர் நீதிமன்ற மற்றும் உச்ச நீதிமன்ற நீதிபதிகள் (வரையூதியங்கள் மற்றும் பணிவரைக்கட்டுகள்) திருத்தச் சட்டம், 2018 (10/2018) இன் 6 ஆம் பிரிவின்படி, இரண்டு இலட்சத்து ஐம்பதாயிரம் ரூபாயாக, (1–1–2016 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றப்பட்டது.

5. "அந்த ஓய்வூதியத் தொகையின் அளவுக்குக் குறைக்கப்படுதல் வேண்டும்" என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 25 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(3) Nothing in sub-paragraph (2) of this paragraph shall apply to a Judge who, immediately before the commencement of this Constitution,—

(a) was holding office as the Chief Justice of the Federal Court and has become on such commencement the Chief Justice of the Supreme Court under clause (1) of article 374, or

(b) was holding office as any other Judge of the Federal Court and has on such commencement become a Judge (other than the Chief Justice) of the Supreme Court under the said clause,

during the period he holds office as such Chief Justice or other Judge, and every Judge who so becomes the Chief Justice or other Judge of the Supreme Court shall, in respect of time spent on actual service as such Chief Justice or other Judge, as the case may be, be entitled to receive in addition to the salary specified in sub-paragraph (1) of this paragraph as special pay an amount equivalent to the difference between the salary so specified and the salary which he was drawing immediately before such commencement.

(4) Every Judge of the Supreme Court shall receive such reasonable allowances to reimburse him for expenses incurred in travelling on duty within the territory of India and shall be afforded such reasonable facilities in connection with travelling as the President may from time to time prescribe.

(5) The rights in respect of leave of absence (including leave allowances) and pension of the Judges of the Supreme Court shall be governed by the provisions which, immediately before the commencement of this Constitution, were applicable to the Judges of the Federal Court.

10. [1][(1) There shall be paid to the Judges of High Courts, in respect of time spent on actual service, salary at the following rates per mensem, that is to say,—

| | | |
|---|---|---|
| The Chief Justice | ...... | [2][9,000 rupees.]* |
| Any other Judge | ...... | [3][8,000 rupees.]** |

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 25, for sub-paragraph (1).
2. Subs. by the Constitution (Fifty-fourth Amendment) Act, 1986, s. 2, for "4,000 rupees" (w.e.f. 1-4-1986).
* Now two lakh fifty thousand rupees, *vide* the High Court and Supreme Court Judges (Salaries and Conditions of Service) Amendment Act, 2018 (10 of 2018), s. 2 (w.e.f. 1-1-2016).
3. Subs. by the Constitution (Fifty-fourth Amendment) Act, 1986, s. 2, for "3,500 rupees" (w.e.f. 1-4-1986).
** Now two lakh twenty-five thousand rupees, *vide* the High Court and Supreme Court Judges (Salaries and Conditions of Service) Amendment Act, 2018 (10 of 2018), s. 2 (w.e.f. 1-1-2016).

(3) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு,—

(அ) கூட்டாட்சிய நீதிமன்றத் தலைமை நீதிபதியாகப் பதவி வகித்திருந்து அத்தகைய தொடக்கநிலையில் 374 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின்படி உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதியாக ஆகியிருக்கிற, அல்லது

(ஆ) கூட்டாட்சிய நீதிமன்றத்தின் பிறிதோர் நீதிபதியாகப் பதவி வகித்திருந்து, அத்தகைய தொடக்கநிலையில் மேற்சொன்ன கூறின்படி உச்ச நீதிமன்றத்தின் (தலைமை நீதிபதி அல்லாத பிற) நீதிபதி ஒருவராக ஆகியிருக்கிற

ஒரு நீதிபதிக்கு, அத்தகைய தலைமை நீதிபதியாகவோ பிற நீதிபதியாகவோ அவர் பதவி வகித்திருக்கிற காலஅளவின்போது இந்தப் பத்தியின் (2) ஆம் உள்பத்தியில் உள்ள எதுவும் பொருந்துதல் ஆகாது; மேலும், அவ்வாறு உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதியாகவோ பிற நீதிபதியாகவோ ஆகிற ஒவ்வொரு நீதிபதியும், நேர்வுக்கேற்ப, அத்தகைய தலைமை நீதிபதியாகவோ பிற நீதிபதியாகவோ உள்ளபடியே பணியில் இருந்த காலத்தைப் பொறுத்து, இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியத்துடன், அவ்வாறு குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியத்திற்கும் அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு அவர் பெற்றுவந்த வரையூதியத்திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டின் அளவிற்குச் சமன்மையான ஒரு தொகையைச் சிறப்பு வரையூதியமாகப் பெறுவதற்கு உரிமைகொண்டவர் ஆவார்.

(4) உச்ச நீதிமன்ற நீதிபதி ஒவ்வொருவரும் இந்திய ஆட்சிநிலவரைக்குள் பணிசார்ந்த பயணத்தின்போது செய்ய நேரிட்ட செலவுகளை ஈடு செய்வதற்காக, குடியரசுத்தலைவர் அவ்வப்போது வகுத்துரைக்கும் தகுமான படித்தொகைகளைப் பெறுவார்; மேலும், பயணஞ்செய்தல் தொடர்பாக, குடியரசுத்தலைவர் அவ்வப்போது வகுத்துரைக்கும் தகுமான வசதிகளும் அவருக்குச் செய்து கொடுக்கப்படுதல் வேண்டும்.

(5) உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் (விடுப்புப் படித்தொகைகள் உள்ளடங்கலாக) வாராமை விடுப்பு, ஓய்வூதியம் ஆகியவற்றைப் பொறுத்த உரிமைகள், இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, கூட்டாட்சிய நீதிமன்ற நீதிபதிகளுக்குப் பொருந்துவனவாக இருந்த வகையங்களுக்கு இணங்க இருந்து வரும்.

10. [1][(1) உயர்நீதிமன்றங்களின் நீதிபதிகளுக்கு, உள்ளபடியே பணியில் இருந்த காலத்தைப் பொறுத்து, மாதம் ஒன்றுக்குப் பின்வரும் வீதங்களில் வரையூதியம் வழங்கப்படுதல் வேண்டும்,—

| | | |
|---|---|---|
| தலைமை நீதிபதி | ...... | [2][9,000 ரூபாய்.]* |
| பிறிதோர் நீதிபதி | ...... | [3][8,000 ரூபாய்.]** |

1. உள்பத்தி (1) என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 25 ஆம் பிரிவினால் மாற்றாக அமைக்கப்பட்டது.

2. "4,000 ரூபாய்" என்பதற்கு, அரசமைப்புச் (ஐம்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1986 இன் 2 ஆம் பிரிவினால் (1–4–1986 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

* உயர் நீதிமன்ற மற்றும் உச்ச நீதிமன்ற நீதிபதிகள் (வரையூதியங்கள் மற்றும் பணிவரைக்கட்டுகள்) திருத்தச் சட்டம், 2018 (10/2018) இன் 2 ஆம் பிரிவின்படி, இரண்டு இலட்சத்து ஐம்பதாயிரம் ரூபாயாக, (1–1–2016 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றப்பட்டது.

3. "3,500 ரூபாய்" என்பதற்கு அரசமைப்புச் (ஐம்பத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1986 இன் 2 ஆம் பிரிவினால் (1–4–1986 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

** உயர் நீதிமன்ற மற்றும் உச்ச நீதிமன்ற நீதிபதிகள் (வரையூதியங்கள் மற்றும் பணிவரைக்கட்டுகள்) திருத்தச் சட்டம், 2018 (10/2018) 2 ஆம் பிரிவின்படி (1–1–2016 முதல் செல்திறம் பெறுமாறு), இரண்டு இலட்சத்து ஐம்பதாயிரம் ரூபாயாக, மாற்றப்பட்டது.

Provided that if a Judge of a High Court at the time of his appointment is in receipt of a pension (other than a disability or wound pension) in respect of any previous service under the Government of India or any of its predecessor Governments or under the Government of a State or any of its predecessor Governments, his salary in respect of service in the High Court shall be reduced—

(a) by the amount of that pension, and

(b) if he has, before such appointment, received in lieu of a portion of the pension due to him in respect of such previous service the commuted value thereof, by the amount of that portion of the pension, and

(c) if he has, before such appointment, received a retirement gratuity in respect of such previous service, by the pension equivalent of that gratuity.]

(2) Every person who immediately before the commencement of this Constitution—

(a) was holding office as the Chief Justice of a High Court in any Province and has on such commencement become the Chief Justice of the High Court in the corresponding State under clause (1) of article 376, or

(b) was holding office as any other Judge of a High Court in any Province and has on such commencement become a Judge (other than the Chief Justice) of the High Court in the corresponding State under the said clause,

shall, if he was immediately before such commencement drawing a salary at a rate higher than that specified in sub-paragraph (1) of this paragraph, be entitled to receive in respect of time spent on actual service as such Chief Justice or other Judge, as the case may be, in addition to the salary specified in the said sub- paragraph as special pay an amount equivalent to the difference between the salary so specified and the salary which he was drawing immediately before such commencement.

**வரம்புரையாக** : உயர் நீதிமன்ற நீதிபதி ஒருவர் அவருடைய அமர்த்துகைக் காலத்தில் இந்திய அரசின் கீழோ அதற்கு முன்பிருந்த அரசுகளில் எதன் கீழுமோ ஒரு மாநில அரசின் கீழோ அதற்கு முன்பிருந்த அரசுகளில் எதன்கீழோ ஆற்றிய முந்தைய பணி எதனையும் பொறுத்து (ஏலாமைக்கான அல்லது உடற்காயத்திற்கான ஓய்வூதியம் அல்லாத பிற) ஓய்வூதியம் பெற்று வருவாராயின், உயர் நீதிமன்றப் பணியைப் பொறுத்து அவருடைய வரையூதியம்

(அ) அந்த ஓய்வூதியத் தொகையின் அளவுக்கும்,

(ஆ) அத்தகைய முந்தைய பணியைப் பொறுத்து, அவருக்கு உரிய ஓய்வூதியத்தின் ஒரு பகுதிக்கு மாற்றாக, அதன் மாற்று மதிப்பை அத்தகைய அமர்த்துகைக்கு முன்பு அவர் பெற்றிருப்பாராயின், ஓய்வூதியத்தின் அந்த பகுதித் தொகையின் அளவுக்கும்,

(இ) அத்தகைய அமர்த்துகைக்கு முன்பு அத்தகைய முந்தைய பணியைப் பொறுத்து அவர் ஓய்வுப் பணிக்கொடை பெற்றிருப்பாராயின் அந்தப் பணிக்கொடையின் ஓய்வூதியத்திற்குச் சமன்மையான அளவுக்கும்

குறைக்கப்படுதல் வேண்டும்.]

(2) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு—

(அ) மாகாணம் எதிலும் ஓர் உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியாகப் பதவி வகித்திருந்து, அத்தகைய தொடக்கநிலையில் 376 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின்படி நேரிணையான மாநிலத்தில் உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியாக ஆகியிருக்கிற, அல்லது

(ஆ) மாகாணம் எதிலும் ஓர் உயர் நீதிமன்றத்தின் பிறிதோர் நீதிபதியாகப் பதவி வகித்திருந்து அத்தகைய தொடக்கநிலையில் மேற்சொன்ன கூறின்படி நேரிணையான மாநிலத்தில் (தலைமை நீதிபதியல்லாத பிற) நீதிபதி ஒருவராக ஆகியிருக்கிற

ஒவ்வொருவரும், அவர் அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு, இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ளதற்கும் மிகுதியான ஒரு வீதத்தில் வரையூதியம் பெற்று வந்திருப்பாராயின், அத்தகைய தலைமை நீதிபதியாகவோ பிறிதோர் நீதிபதியாகவோ உள்ளபடியே பணியில் இருந்த காலத்தைப் பொறுத்து மேற்சொன்ன உள்பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியத்துடன் அவ்வாறு குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியத்திற்கும் அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு அவர் பெற்றுவந்த வரையூதியத்திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டின் அளவிற்குச் சமன்மையான ஒரு தொகையைச் சிறப்பு ஊதியமாகப் பெறுவதற்கு உரிமை கொண்டவர் ஆவார்.

[1][(3) Any person who, immediately before the commencement of the Constitution (Seventh Amendment) Act, 1956, was holding office as the Chief Justice of the High Court of a State specified in Part B of the First Schedule and has on such commencement become the Chief Justice of the High Court of a State specified in the said Schedule as amended by the said Act, shall, if he was immediately before such commencement drawing any amount as allowance in addition to his salary, be entitled to receive in respect of time spent on actual service as such Chief Justice, the same amount as allowance in addition to the salary specified in sub-paragraph (1) of this paragraph.]

11. In this Part, unless the context otherwise requires,—

(a) the expression "Chief Justice" includes an acting Chief Justice, and a "Judge" includes an ad hoc Judge;

(b) "actual service" includes—

(i) time spent by a Judge on duty as a Judge or in the performance of such other functions as he may at the request of the President undertake to discharge;

(ii) vacations, excluding any time during which the Judge is absent on leave; and

(iii) joining time on transfer from a High Court to the Supreme Court or from one High Court to another.

1.Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 25, for sub-paragraphs (3) and (4) (w.e.f. 1-11-1956).

[1][(3) அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் தொடக்கநிலைக்கு உடன்முன்பு முதலாம் இணைப்புப்பட்டியலின் (ஆ) பகுதியில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஒரு மாநில உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியாகப் பதவி வகித்திருந்து, அத்தகைய தொடக்கநிலையில், அந்தச் சட்டத்தினால் திருத்தம் செய்யப்பட்ட மேற்சொன்ன இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள ஒரு மாநில உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியாக ஆகியிருக்கிற எவரும், அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு அவருடைய வரையூதியத்துடன், படித்தொகையாக ஏதேனும் தொகையைப் பெற்றுவந்திருப்பாராயின், அத்தகைய தலைமை நீதிபதியாக உள்ளபடியே பணியில் இருந்த காலத்தைப் பொறுத்து, இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியத்துடன், அதே தொகையைப் படித்தொகையாகப் பெறுவதற்கு உரிமை கொண்டவர் ஆவார். ]

**11.** இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி,–

(அ) "தலைமை நீதிபதி" என்னும் சொற்றொடர், செயலமர் தலைமை நீதிபதி ஒருவரை உள்ளடக்கும்; மற்றும் ஒரு "நீதிபதி" என்பது, குறித்தபணி நீதிபதியையும் உள்ளடக்கும்;

(ஆ) உள்ளபடியான பணி" என்பது–

(i) நீதிபதி ஒருவர், ஒரு நீதிபதிப் பணியை ஆற்றுகிற காலத்தையும் அல்லது குடியரசுத்தலைவரின் வேண்டுகோளின்படி அவர் ஆற்றுவதற்குப் பொறுப்பேற்கும் பிற பதவிப்பணிகளைப் புரிகிற காலத்தையும்;

(ii) அந்த நீதிபதியின் வாராமை விடுப்புக்காலம் எதுவும் நீங்கலாக உள்ள பருவ விடுமுறைக் காலங்களையும்;

(iii) ஓர் உயர் நீதிமன்றத்திலிருந்து உச்ச நீதிமன்றத்திற்கோ ஓர் உயர் நீதிமன்றத்திலிருந்து மற்றொன்றிற்கோ மாற்றுதல் செய்வதால் ஏற்படும் பணிசேர் இடைக்காலத்தையும்

உள்ளடக்கும்.

---

1. உள்பத்திகள் (3) மற்றும் (4) இக்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 25 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

## PART E

## PROVISIONS AS TO THE COMPTROLLER AND AUDITOR-GENERAL OF INDIA

12. (1) There shall be paid to the Comptroller and Auditor-General of India a salary at the rate of * four thousand rupees per mensem.

(2) The person who was holding office immediately before the commencement of this Constitution as Auditor-General of India and has become on such commencement the Comptroller and Auditor-General of India under article 377 shall in addition to the salary specified in sub-paragraph (1) of this paragraph be entitled to receive as special pay an amount equivalent to the difference between the salary so specified and the salary which he was drawing as Auditor-General of India immediately before such commencement.

(3) The rights in respect of leave of absence and pension and the other conditions of service of the Comptroller and Auditor-General of India shall be governed or shall continue to be governed, as the case may be, by the provisions which were applicable to the Auditor-General of India immediately before the commencement of this Constitution and all references in those provisions to the Governor-General shall be construed as references to the President.

---

* The Comptroller and Auditor-General of India shall be paid a salary equal to the salary of the Judges of the Supreme Court *vide* s. 3 of the Comptroller and Auditor-General's (Duties, Powers and Conditions of Service) Act, 1971 (56 of 1971). The salary of Judges of the Supreme Court has been raised to two lakh fifty thousand rupees per mensem by the High Court and Supreme Court Judges (Salaries and Conditions of Service) Amendment Act, 2018 (10 of 2018), s. 6 (w.e.f.1-1-2016).

## பகுதி (உ)

## இந்தியக் கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையர் குறித்த வகையங்கள்

12. (1) இந்தியக் கணக்காய்வர் – தலைமைத் தணிக்கையருக்கு மாதம் ஒன்றுக்கு ஒன்பதாயிரம் ரூபாய்* என்னும் வீதத்தில் வரையூதியம் வழங்கப்படுதல் வேண்டும்.

(2) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு, இந்தியத் தலைமைத் தணிக்கையராகப் பதவி வகித்திருந்து, அத்தகைய தொடக்கநிலையில் 377 ஆம் உறுப்பின்படி இந்தியக் கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையராக ஆகியிருக்கிற ஒருவர், இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியத்துடன், அவ்வாறு குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியத்திற்கும், அத்தகைய தொடக்கநிலைக்கு உடன்முன்பு இந்தியத் தலைமைத் தணிக்கையராக அவர் பெற்றுவந்த வரையூதியத்திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டின் அளவிற்குச் சமன்மையான ஒரு தொகையைச் சிறப்பு ஊதியமாகப் பெறுவதற்கு உரிமை கொண்டவர் ஆவார்.

(3) இந்தியக் கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையருக்கு வாராமை விடுப்பு, ஓய்வூதியம் ஆகியவை பொறுத்த உரிமைகளும் பிற பணி வரைக்கட்டுகளும் இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு உடன்முன்பு இந்தியத் தலைமைத் தணிக்கையருக்குப் பொருந்துவனவாக இருந்த வகையங்களுக்கிணங்க இருத்தலோ இருந்துவருதலோ வேண்டும்; மேலும், அந்த வகையங்களில், தலைமை ஆளுநர் பற்றிய சுட்டுகைகள் அனைத்தும் குடியரசுத்தலைவர் பற்றிய சுட்டுகைகளாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும்.

---

* கணக்காய்வர் மற்றும் தலைமைத் தணிக்கையரின் (கடமைகள், அதிகாரங்கள் மற்றும் பணிவரைக்கட்டுகள்) சட்டம், 1971 (56/1971) இன் 3 ஆம் பிரிவின்படி இந்தியக் கணக்காய்வர் – தலைமைத் தணிக்கையருக்கு உச்ச நீதிமன்ற நீதிபதிகளுக்கு சமன்மையான வரையூதியம் வழங்கப்படுதல் வேண்டும். உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் வரையூதியம் மாதம் ஒன்றுக்கு இரண்டு இலட்சத்து ஐம்பதாயிரம் ரூபாயாக, உயர் நீதிமன்ற மற்றும் உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் (வரையூதியங்கள் மற்றும் பணிவரைக்கட்டுகள்) திருத்தச் சட்டம், 2018 (10/2018) இன் 6 ஆம் பிரிவினால் (1–1–2016 முதல் செல்திறம் பெறுமாறு) உயர்த்தப்பட்டது.

## B

Form of oath or affirmation to be made by a member of Parliament:—

"I, A.B., having been elected (or nominated) a member of the Council of States (or the House of the People) do swear in the name of God / solemnly affirm that I will bear true faith and allegiance to the Constitution of India as by law established, that I will uphold the sovereignty and integrity of India and that I will faithfully discharge the duty upon which I am about to enter."]

## IV

Form of oath or affirmation to be made by the Judges of the Supreme Court and the Comptroller and Auditor-General of India:—

"I, A.B., having been appointed Chief Justice (or a Judge) of the Supreme Court of India (or Comptroller and Auditor-General of India) do swear in the name of God / solemnly affirm that I will bear true faith and allegiance to the Constitution of India as by law established, [1][that I will uphold the sovereignty and integrity of India,] that I will duly and faithfully and to the best of my ability, knowledge and judgment perform the duties of my office without fear or favour, affection or ill-will and that I will uphold the Constitution and the laws."

## V

Form of oath of office for a Minister for a State:—

"I, A.B., do swear in the name of God / solemnly affirm that I will bear true faith and allegiance to the Constitution of India as by law established, [1][that I will uphold the sovereignty and integrity of India,] that I will faithfully and conscientiously discharge my duties as a Minister for the State of.......... and that I will do right to all manner of people in accordance with the Constitution and the law without fear or favour, affection or ill-will."

## VI

Form of oath of secrecy for a Minister for a State:—

"I, A.B., do swear in the name of God / solemnly affirm that I will not directly or indirectly communicate or reveal to any person or persons any matter which shall be brought under my consideration or shall become known to me as a Minister for the State of ..........except as may be required for the due discharge of my duties as such Minister."

---

1. Ins. by the Constitution (Sixteenth Amendment) Act, 1963, s. 5 (w.e.f. 5-10-1963).

## மூன்றாம் இணைப்புப்பட்டியல்

### [75 (4), 99, 124 (6), 148 (2), 164 (3), 188, 219 ஆகிய உறுப்புகள்]*

### ஆணைமொழிகளின் அல்லது உறுதிமொழிகளின் சொன்முறைகள்

I

ஒன்றியத்து அமைச்சருக்கான பதவி ஆணைமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான், சட்டமுறையில் அமைவுற்ற [1][இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும்] இந்தியாவின் இறையாண்மையும் ஒருமைப்பாடும் நிலைபெறுமாறு செய்வேன் என்றும் ஒன்றியத்து அமைச்சர் என்னும் முறையில் என்னுடைய கடமைகளை அகத் தூய்மையுடனும் மனச்சான்றின்படியும் ஆற்றுவேன் என்றும், அரசமைப்பு முறைக்கும் சட்ட நெறிக்கும் இணங்க அச்சம், கண்ணோட்டம் இன்றியும், விருப்பு வெறுப்பு இன்றியும், பல்திற மக்களுக்கும் தகுவன புரிவேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்".
உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."

II

ஒன்றியத்து அமைச்சருக்கான மறைகாப்பு ஆணைமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான், ஒன்றியத்து அமைச்சர் என்னும் முறையில் என் ஓர்வுக்காக வைக்கப்படும் அல்லது எனக்குத் தெரியவரும் பொருட்பாடு எதனையும், அத்தகு அமைச்சர் என்னும் முறையில் என் கடமைகளை முறைப்படி ஆற்றுவதற்கு வேண்டியவாறன்றி, பிறவாறு நேர்முகமாகவோ மறைமுகமாகவோ எந்த நபருக்கும் அல்லது நபர்களுக்கும் தெரிவிக்கவோ வெளிப்படுத்தவோ மாட்டேன் என்று கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்".
உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."

[2][III

(அ)

நாடாளுமன்றத் தேர்தல் வேட்பாளரால் செய்யப்படவேண்டிய ஆணை மொழியின் அல்லது உறுதிமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான், மாநிலங்களவையில் (அல்லது மக்களவையில்) ஒரு பதவியிடத்தை நிரப்புவதற்கான வேட்பாளராக நியமிக்கப்பெற்றுள்ள நிலையில் சட்டமுறையில் அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும் இந்தியாவின் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் நிலைபெறச் செய்வேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்."
உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."

---

* 84 (அ) மற்றும் 173 (அ) உறுப்புகளை மேலும் பார்க்க.

1. அரசமைப்புச் (பதினாறாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 5 ஆம் பிரிவினால் (5-10-1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. *மேற்படிச் சட்டத்தினால்* சொன்முறை III இக்கு மாற்றாக அமைக்கப்பட்டது.

# THIRD SCHEDULE

## [Articles 75(4), 99, 124(6), 148(2), 164(3), 188 and 219]*

## Forms of Oaths or Affirmations

### I

Form of oath of office for a Minister for the Union:—

"I, A. B., do swear in the name of God / solemnly affirm that I will bear true faith and allegiance to the Constitution of India as by law established, [1][that I will uphold the sovereignty and integrity of India,] that I will faithfully and conscientiously discharge my duties as a Minister for the Union and that I will do right to all manner of people in accordance with the Constitution and the law, without fear or favour, affection or ill-will."

### II

Form of oath of secrecy for a Minister for the Union:—

"I, A.B., do swear in the name of God / solemnly affirm that I will not directly or indirectly communicate or reveal to any person or persons any matter which shall be brought under my consideration or shall become known to me as a Minister for the Union except as may be required for the due discharge of my duties as such Minister."

### [2][III

### A

Form of oath or affirmation to be made by a candidate for election to Parliament:—

"I, A.B., having been nominated as a candidate to fill a seat in the Council of States (or the House of the People) do swear in the name of God / solemnly affirm that I will bear true faith and allegiance to the Constitution of India as by law established and that I will uphold the sovereignty and integrity of India."

---

* See also arts. 84 (a) and 173 (a).

1. Ins. by the Constitution (Sixteenth Amendment) Act, 1963, s. 5 (w.e.f. 5-10-1963).

2. Subs. by *ibid.*, for Form III

(ஆ)

நாடாளுமன்ற உறுப்பினரால் செய்யப்படவேண்டிய ஆணைமொழியின் அல்லது உறுதிமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான், மாநிலங்களவையின் (அல்லது மக்களவையின்) ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ள (அல்லது நியமிக்கப்பெற்றுள்ள) நிலையில், சட்ட முறையில் அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும் இந்தியாவின் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் நிலைபெறச் செய்வேன் என்றும், ஏற்கவுள்ள கடமையினை அகத்தூய்மையுடன் ஆற்றுவேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்."

உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."]

## IV

உச்ச நீதிமன்ற நீதிபதிகளாலும், இந்தியக் கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையராலும் செய்யப்பட வேண்டிய ஆணைமொழியின் அல்லது உறுதிமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான், இந்திய உச்ச நீதிமன்றத் தலைமை நீதிபதியாக (அல்லது நீதிபதியாக) (அல்லது இந்தியக் கணக்காய்வர்– தலைமைத் தணிக்கையராக) அமர்த்தப்பெற்றுள்ள நிலையில், சட்டமுறையில் அமைவுற்ற [1][இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன்] என்றும் இந்தியாவின் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் நிலைபெறச் செய்வேன் என்றும், அச்சம், கண்ணோட்டம் இன்றியும், விருப்பு வெறுப்பு இன்றியும், முறையாகவும் அகத்தூய்மையுடனும் என் முழுவினைத்திறனும் அறிவுத்திறனும் தேர்வுத்திறனும் கொண்டு என் பதவிக்குரிய கடமைகளை ஆற்றிவருவேன் என்றும் நான் அரசமைப்பு முறையையும் சட்டநெறிகளையும் நிலைபெறச் செய்வேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்."

உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."

## V

மாநில அமைச்சருக்கான பதவி ஆணைமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான், சட்டமுறையில் அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும், இந்தியாவின் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் நிலைபெறச் செய்வேன் என்றும்.......... மாநில அமைச்சர் என்னும் முறையில் என்னுடைய கடமைகளை அகத்தூய்மையுடனும் மனச்சான்றின்படியும் ஆற்றிவருவேன் என்றும் அரசமைப்புமுறைக்கும் சட்டநெறிக்கும் இணங்க அச்சம், கண்ணோட்டம் இன்றியும் விருப்பு வெறுப்பு இன்றியும், பல்திற மக்களுக்கும் தகுவன புரிவேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்."

உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."

## VI

மாநில அமைச்சருக்கான மறைகாப்பு ஆணைமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான் . . . . . . . . . . . . . மாநில அமைச்சர் என்னும் முறையில் என் ஓர்வுக்காக வைக்கப்படும் அல்லது எனக்குத் தெரியவரும் பொருட்பாடு எதனையும், அத்தகு அமைச்சர் என்னும் முறையில் என் கடமைகளை முறைப்படி ஆற்றுவதற்கு வேண்டியவாறன்றி, பிறவாறு நேர்முகமாகவோ மறைமுகமாகவோ எந்த நபருக்கும் அல்லது நபர்களுக்கும் தெரிவிக்கவோ வெளிப்படுத்தவோ மாட்டேன் என்று கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்."

உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."

---

1. அரசமைப்புச் (பதினாறாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 5 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

## [1][VII

## A

Form of oath or affirmation to be made by a candidate for election to the Legislature of a State:—

"I, A.B., having been nominated as a candidate to fill a seat in the Legislative Assembly (or Legislative Council), do swear in the name of God / solemnly affirm that I will bear true faith and allegiance to the Constitution of India as by law established and that I will uphold the sovereignty and integrity of India."

## B

Form of oath or affirmation to be made by a member of the Legislature of a State:—

"I, A.B., having been elected (or nominated) a member of the Legislative Assembly (or Legislative Council), do swear in the name of God / solemnly affirm that I will bear true faith and allegiance to the Constitution of India as by law established, that I will uphold the sovereignty and integrity of India and that I will faithfully discharge the duty upon which I am about to enter."]

## VIII

Form of oath or affirmation to be made by the Judges of a High Court:—

"I, A.B., having been appointed Chief Justice (or a Judge) of the High Court at (or of) .............. do swear in the name of God / solemnly affirm that I will bear true faith and allegiance to the Constitution of India as by law established, [2][that I will uphold the sovereignty and integrity of India,] that I will duly and faithfully and to the best of my ability, knowledge and judgment perform the duties of my office without fear or favour, affection or ill-will and that I will uphold the Constitution and the laws."

---

1. Subs. by the Constitution (Sixteenth Amendment) Act, 1963 for form VII.

2. Ins. by the Constitution (Sixteenth Amendment) Act, 1963, s. 5 (w.e.f. 5-10-1963).

[1][VII

(அ)

மாநிலச் சட்டமன்றத் தேர்தல் வேட்பாளரால் செய்யப்பட வேண்டிய ஆணை மொழியின் அல்லது உறுதிமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான், சட்டமன்றப் பேரவையில் (அல்லது சட்டமன்ற மேலவையில்) ஒரு பதவியிடத்தை நிரப்புவதற்கான வேட்பாளராக நியமிக்கப்பெற்றுள்ள நிலையில் சட்டமுறையில் அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும் இந்தியாவின் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் நிலைபெறச் செய்வேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்."

உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."

(ஆ)

மாநிலச் சட்டமன்ற உறுப்பினரால் செய்யப்படவேண்டிய ஆணைமொழியின் அல்லது உறுதிமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான், சட்டமன்றப் பேரவையில் (அல்லது சட்டமன்ற மேலவையில்) ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ள (அல்லது நியமிக்கப்பெற்றுள்ள) நிலையில், சட்டமுறையில் அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும் இந்தியாவின் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் நிலைபெறச் செய்வேன் என்றும் ஏற்கவுள்ள கடமையினை அகத்தூய்மையுடன் ஆற்றுவேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்."

உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."]

## VIII

உயர் நீதிமன்ற நீதிபதிகளால் செய்யப்படவேண்டிய ஆணைமொழியின் அல்லது உறுதிமொழியின் சொன்முறை:—

"அ.ஆ., ஆகிய நான், .............. இல் உள்ள , அல்லது. . . . . . . இன் உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியாக (அல்லது நீதிபதியாக) அமர்த்தப்பெற்றுள்ள நிலையில், சட்டமுறையில் அமைவுற்ற [2][இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும்] இந்தியாவின் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் நிலைபெறச் செய்வேன் என்றும் அச்சம் கண்ணோட்டம் இன்றியும், விருப்பு வெறுப்பு இன்றியும், முறையாகவும் அகத் தூய்மையுடனும், என் முழுவினைத்திறனும் அறிவுத்திறனும் தேர்வுத்திறனும் கொண்டு என் பதவிக்குரிய கடமைகளை ஆற்றிவருவேன் என்றும் நான் அரசமைப்பு முறையையும் சட்டநெறிகளையும் நிலைபெறச் செய்வேன் என்றும் கடவுளை முன்னிறுத்தி ஆணைமொழிகிறேன்."

உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்."

---

1. சொன்முறை VII இக்கு அரசமைப்புச் (பதினாறாம் திருத்தம்) சட்டம், 1963 ஆல் மாற்றாக அமைக்கப்பட்டது.
2. அரசமைப்புச் (பதினாறாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 5 ஆம் பிரிவினால் (5–10–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

## [1][FOURTH SCHEDULE

### [Articles 4(1) and 80(2)]

### Allocation of seats in the Council of States

To each State or Union territory specified in the first column of the following table, there shall be allotted the number of seats specified in the second column thereof opposite to that State or that Union territory, as the case may be:

**TABLE**

| | | |
|---|---|---|
| 1. | Andhra Pradesh .......................................... | [2][11] |
| [3][2. | Telangana .................................................. | 7] |
| [4][3.] | Assam ........................................................ | 7 |
| [4][4.] | Bihar ........................................................... | [5][16] |
| [6][[4][5.] | Jharkhand .................................................. | 6] |
| [7][[8][[4][6.] | Goa ............................................................ | 1] |
| [9][[8][[4][7.] | Gujarat ....................................................... | 11] |
| [10][[8][[4][8.] | Haryana ..................................................... | 5] |

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 3, for the Fourth Schedule (w.e.f. 1-11-1956).
2. Subs. by the Andhra Pradesh Reorganisation Act, 2014 (6 of 2014), s. 12, for "18" (w.e.f. 2-6-2014).
3. Ins. by *ibid.*
4. Entries 2 to 30 renumbered as entries 3 to 31 respectively by *ibid.*
5. Subs. by the Bihar Reorganisation Act, 2000 (30 of 2000), s. 7, for "22" (w.e.f. 15-11-2000).
6. Ins. by *ibid.*
7. Ins. by the Goa, Daman and Diu Reorganisation Act, 1987 (18 of 1987), s. 6 (w.e.f. 30-5-1987).
8. Entries 4 to 29 renumbered as entries 5 to 30 by the Bihar Reorganisation Act, 2000 (30 of 2000), s. 7 (w.e.f. 15-11-2000).
9. Subs. by the Bombay Reorganisation Act, 1960 (11 of 1960), s. 6, for entry "4" (w.e.f. 1-5-1960).
10. Ins. by the Punjab Reorganisation Act, 1966 (31 of 1966), s. 9 (w.e.f. 1-11-1966).

## [1][நான்காம் இணைப்புப்பட்டியல்

### [4(1), 80(2) ஆகிய உறுப்புகள்]

### மாநிலங்களவையில் பதவியிடங்களைப் பகிர்ந்து ஒதுக்குதல்

பின்வரும் அட்டவணையின் முதலாம் பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள மாநிலம் அல்லது ஒன்றியத்து ஆட்சிநிலவரை ஒவ்வொன்றிற்கும், இரண்டாம் பத்தியில், அந்த மாநிலத்திற்கு அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த ஒன்றியத்து ஆட்சிநிலவரைக்கு நேராகக் குறித்துரைக்கப்பட்டுள்ள எண்ணிக்கையுடைய பதவியிடங்கள் பகிர்ந்து ஒதுக்கப்படும்:

### அட்டவணை

| | | |
|---|---|---|
| 1. | ஆந்திரப்பிரதேசம் .................... | [2][11] |
| [3][2. | தெலுங்கானா .................... | 7] |
| [4][3.] | அசாம் .................... | 7 |
| [4][4.] | பீகார் .................... | [5][16] |
| [6][[4][5.] | ஜார்கண்ட் .................... | 6] |
| [7][[8][[4][6.] | கோவா .................... | 1] |
| [9][[8][[4][7.] | குஜராத் .................... | 11] |
| [10][[8][[4][8.] | அரியானா .................... | 5] |

1. நான்காம் இணைப்புப்பட்டியலுக்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 3 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
2. "18" என்பதற்கு, ஆந்திரப் பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2014 (6/2014) இன் 12 ஆம் பிரிவினால் (2–6–2014 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது
3. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.
4. 2 முதல் 30 வரையிலான பதிவுகள் முறையே 3 முதல் 31 வரையிலான பதிவுகளாக *மேற்படிச் சட்டத்தினால்* மறுஎண்ணிடப்பட்டன.
5. "22" என்பதற்கு, பீகார் மறுஅமைப்புச் சட்டம், 2000 (30/2000) இன் 7 ஆம் பிரிவினால் (15–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
6. *மேற்படிச்சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.
7. கோவா, தமண் மற்றும் டையூ மறுஅமைப்புச் சட்டம், 1987 (18/1987) இன் 6 ஆம் பிரிவினால் (30–5–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
8. 4 முதல் 29 வரையிலான பதிவுகள், 5 முதல் 30 வரையிலான பதிவுகளாக பீகார் மறுஅமைப்புச் சட்டம், 2000 (30/2000) இன் 7 ஆம் பிரிவினால் (15–11–2000) முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டன.
9. பதிவு "4" என்பதற்கு, பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 6 ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
10. பஞ்சாப் மறுஅமைப்புச் சட்டம், 1966 (31/1966) இன் 9 ஆம் பிரிவினால் (1–11–1966 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

| | | |
|---|---|---|
| [1][[2][9.] | Kerala ........................................................ | 9 |
| [1][[2] [10.] | Madhya Pradesh ........................................ | [3][11] |
| [4][[1][[2] [11.] | Chhattisgarh ............................................... | 5 |
| [5][[1][[2] [12.] | Tamil Nadu .................................................. | [6][18] |
| [7][[1][[2] [13.] | Maharashtra ................................................ | 19 |
| [8][[1][[2] [14.] | Karnataka .................................................. | 12 |
| [1][[2] [15.] | [9][Odisha] .................................................. | 10 |
| [1][[2] [16.] | Punjab ........................................................ | [10][7] |
| [1][[2] [17.] | Rajasthan .................................................. | 10 |
| [1][[2] [18.] | Uttar Pradesh ............................................. | [11][31] |
| [12][[1][[2] [19.] | [13][Uttarakhand ............................................ | 3] |
| [1][[2] [20.] | West Bengal ................................................ | 16 |
| [14] [[1][[2] [**.] | * * * ........................................................ | *] |
| [16][[15][[1][[2] [21.]] | Nagaland .................................................... | 1] |

1. Entries 4 to 29 renumbered as entries 5 to 30 by the Bihar Reorganisation Act, 2000 (30 of 2000), s. 7 (w.e.f. 15-11-2000).
2. Entries 2 to 30 renumbered as entries 3 to 31 respectively by the Andhra Pradesh Reorganisation Act, 2014 (6 of 2014), s. 12 (w.e.f. 2-6-2014).
3. Subs. by the Madhya Pradesh Reorganisation Act, 2000 (28 of 2000), s. 7, for "16" (w.e.f. 1-11-2000).
4. Ins. by *ibid.*
5. Subs. by the Madras State (Alteration of Name) Act, 1968 (53 of 1968), s. 5, for "8. Madras" (re-numbered as *11) (w.e.f. 14-1-1969).
6. Subs. by the Andhra Pradesh and Madras (Alteration of Boundaries) Act, 1959 (56 of 1959), s. 8, for "17" (w.e.f. 1-4-1960).
7. Ins. by the Bombay Reorgansiation Act, 1960 (11 of 1960), s. 6 (w.e.f. 1-5-1960).
8. Subs. by the Mysore State (Alteration of Name) Act, 1973 (31 of 1973), s. 5, for "10. Mysore" (re-numbered as "13") (w.e.f. 1-11-1973).
9. Subs. by the Orissa (Alteration of Name) Act, 2011, s. 7, for "Orissa" (w.e.f. 1-11-2011).
10. Subs. by the Punjab Reorganisation Act, 1966 (31 of 1966), s. 9, for "11"(w.e.f. 1-11-1966).
11. Subs. by the Uttar Pradesh Reorganisation Act, 2000 (29 of 2000), s. 7, for "34" (w.e.f. 9-11-2000).
12. Ins. by *ibid.*
13. Subs. by the Uttaranchal (Alteration of Name) Act, 2006 (52 of 2006), s. 41, for "Uttaranchal" (w.e.f. 1-1-2007).
14. **Entry 21 relating to Jammu and Kashmir deleted by the Jammu and Kashmir Reorganisation Act, 2019 (34 of 2019), s. 8 (w.e.f. 31-10-2019).
15. Ins. by the State of Nagaland Act, 1962 (27 of 1962), s. 6 (w.e.f. 1-12-1963).
16. Entries 22 to 31 re-numbered as entries 21 to 30, respectively by the Jammu and Kashmir Reorganisation Act, 2019 (34 of 2019), s. 8 (w.e.f. 31-10-2019).

| | | |
|---|---|---|
| [1][[2][9.] | கேரளம்........................................................................ | 9 |
| [1][[2] [10.] | மத்தியப்பிரதேசம்.............................................................. | [3][11] |
| [4][[1][[2] [11.] | சட்டீஸ்கர்...................................................................... | 5 |
| [5][[1][[2] [12.] | தமிழ்நாடு....................................................................... | [6][18] |
| [7][[1][[2] [13.] | மகாராஷ்டிரம் .................................................................. | 19 |
| [8][[1][[2] [14.] | கர்நாடகம்...................................................................... | 12 |
| [1][[2] [15.] | [9][ஒடிசா] ..................................................................... | 10 |
| [1][[2] [16.] | பஞ்சாப்......................................................................... | [10][7] |
| [1][[2] [17.] | ராஜஸ்தான்...................................................................... | 10 |
| [1][[2] [18.] | உத்தரப்பிரதேசம்............................................................... | [11][31] |
| [12][[1][[2] [19.] | [13][உத்தரகாண்ட்............................................................ | 3] |
| [1][[2] [20.] | மேற்கு வங்காளம்.............................................................. | 16 |
| [14] [[1][[2] [**.] | * * * ....................................................................... | *] |
| [16][[15][[1][[2] [21.]] | நாகாலாந்து..................................................................... | 1] |

1. 4 முதல் 29 பதிவுகள், 5 முதல் 30 பதிவுகளாக பீகார் மறுஅமைப்புச் சட்டம், 2000 (30/2000) இன் 7 ஆம் பிரிவினால் (15–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டன.
2. 2 முதல் 30 பதிவுகள் முறையே 3 முதல் 31 பதிவுகளாக ஆந்திரப் பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2014 (6/2014) இன் 12 ஆம் பிரிவினால் (2–6–2014 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டன.
3. "16" என்பதற்கு, மத்தியப் பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2000 (28/2000) இன் 7 ஆம் பிரிவினால் (1–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.
4. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.
5. "8. மெட்ராஸ்" (11 ஆக மறுஎண்ணிடப்பட்டது) என்பதற்கு, மெட்ராஸ் மாநிலம் (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 1968 (53/1968) இன் 5 ஆம் பிரிவினால் (14–1–1969 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
6. "17" என்பதற்கு, ஆந்திர பிரதேசம் மற்றும் மெட்ராஸ் (எல்லைகள் மாற்றுகை) சட்டம், 1959 (56/1959) இன் 8 ஆம் பிரிவினால் (1–4–1960 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
7. பம்பாய் மறுஅமைப்புச் சட்டம், 1960 (11/1960) இன் 6 ஆம் பிரிவினால் (1–5–1960 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
8. "10. மைசூர்" ("13" ஆக மறுஎண்ணிடப்பட்டது) என்பதற்கு, மைசூர் மாநிலம் (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 1973 (31/1973) இன் 5 ஆம் பிரிவினால் (1–11–1973 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
9. "ஒரிசா" என்பதற்கு, ஒரிசா (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2011 இன் 7 ஆம் பிரிவினால் (1–11–2011 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
10. "11" என்பதற்கு பஞ்சாப் மறுஅமைப்புச் சட்டம், 1966 (31/1966) இன் 9 ஆம் பிரிவினால் (1–11–1966 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
11. "34" என்பதற்கு, உத்தரப் பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2000 (29/2000) இன் 7 ஆம் பிரிவினால் (9–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
12. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.
13. "உத்தராஞ்சல்" என்பதற்கு, உத்தராஞ்சல் (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (52/2006) இன் 41 ஆம் பிரிவினால் (1–1–2007 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
14. **ஜம்மு – காஷ்மீர் தொடர்புடைய 21 ஆம் பதிவு, ஜம்மு – காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 (34/2019) இன் 8 ஆம் பிரிவினால் (31–10–2019 முதல் செல்திறம் பெறுமாறு) நீக்கப்பட்டது.
15. நாகாலாந்து மாநிலச் சட்டம், 1962 (27/1962) இன் 6 ஆம் பிரிவினால் (1–12–1963 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
16. 22 முதல் 31 பதிவுகள் முறையே 21 முதல் 30 பதிவுகளாக ஜம்மு – காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 (34/2019) இன் 8 ஆம் பிரிவினால் (31–10–2019 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டது.

| | | |
|---|---|---|
| [1][[2][[3] [[4][22.]] | Himachal Pradesh........................................ | 3] |
| [3][[2] [[4][23.]] | Manipur ...................................................... | 1] |
| [3][[2] [[4][24.]] | Tripura ....................................................... | 1 |
| [3][[2] [[4][25.]] | Meghalaya ................................................. | 1 |
| [5][[3][[2] [[4][26.]]] | Sikkim ........................................................ | 1] |
| [6][[3][[2] [[4][27.]] | Mizoram ..................................................... | 1] |
| [7][[1][[3] [[4][28.]] | Arunachal Pradesh ..................................... | 1] |
| [3][[2] [[4][29.]] | Delhi ........................................................... | 3 |
| [3][[2] [[4][30.]] | [8][Puducherry] ............................................ | 1 |
| [9][31. | Jammu and Kashmir ............................... | 4] |
| | Total | [10][233] |

1. Ins. by the State of Himachal Pradesh Act, 1970 (53 of 1970), s. 5 (w.e.f. 25-1-1971).
2. Entries 4 to 29 renumbered as entries 5 to 30 by the Bihar Reorganisation Act, 2000 (30 of 2000), s. 7 (w.e.f. 15-11-2000).
3. Entries 2 to 30 renumbered as entries 3 to 31 respectively by the Andhra Pradesh Reorganisation Act, 2014 (6 of 2014), s. 12 (w.e.f. 2-6-2014).
4. Entries 22 to 31 renumbered as entries 21 to 30 respectively the Jammu and Kashmir Reorganisation Act, 2019 (34 of 2019), s. 8 (w.e.f. 31-10-2019).
5. Ins. by the Constitution (Thirty-sixth Amendment) Act, 1975, s. 4 (w.e.f. 26-4-1975).
6. Ins. by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 5 (w.e.f. 20-2-1987).
7. Ins. by the State of Arunachal Pradesh Act, 1986 (69 of 1986), s. 5 (w.e.f. 20-2-1987).
8. Subs. by the Pondicherry (Alteration of Name) Act, 2006 (44 of 2006), s. 4, for "Pondicherry" (w.e.f. 1-10-2006).
9. Ins. by the Jammu and Kashmir Reorganisation Act, 2019 (34 of 2019), s. 8 (w.e.f. 31-10-2019).
10. Subs. by the Goa, Daman and Diu Reorganisation Act, 1987 (18 of 1987), s. 6, for "232" (w.e.f. 30-5-1987).

| | | |
|---|---|---|
| [1][[2][[3] [[4][22.]] | இமாச்சலப்பிரதேசம்........................................................ | 3] |
| [3][[2] [[4][23.]] | மணிப்பூர்.................................................................. | 1] |
| [3][[2] [[4][24.]] | திரிபுரா.................................................................. | 1 |
| [3][[2] [[4][25.]] | மேகாலயா.................................................................. | 1 |
| [5][[3][[2] [[4][26.]]] | சிக்கிம் .................................................................. | 1] |
| [6][[3][[2] [[4][27.]] | மிசோரம்.................................................................. | 1] |
| [7][[1][[3] [[4][28.]] | அருணாச்சலப் பிரதேசம்........................................................ | 1] |
| [3][[2] [[4][29.]] | தில்லி.................................................................. | 3 |
| [3][[2] [[4][30.]] | [8][புதுச்சேரி].................................................................. | 1 |
| [9][31. | ஜம்மு – காஷ்மீர்.................................................................. | 4] |
| | மொத்தம் | [10][233] |

1. இமாச்சலப் பிரதேசச் சட்டம், 1970 (53/1970) இன் 5 ஆம் பிரிவினால் (25–1–1971 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டது.
2. 4 முதல் 29 வரையிலான பதிவுகள், 5 முதல் 30 வரையிலான பதிவுகளாக பீகார் மறுஅமைப்புச் சட்டம், 2000 (30/2000) இன் 7 ஆம் பிரிவினால் (15–11–2000 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டன.
3. 2 முதல் 30 வரையிலான பதிவுகள், முறையே 3 முதல் 31 வரையிலான பதிவுகளாக ஆந்திரப் பிரதேச மறுஅமைப்புச் சட்டம், 2014 (6/2014) இன் 12 ஆம் பிரிவினால் (2–6–2014 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டன.
4. 22 முதல் 31 வரையிலான பதிவுகள், 21 முதல் 30 வரையிலான பதிவுகளாக ஜம்மு – காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 (34/2019) இன் 8 ஆம் பிரிவினால் (31–10–2019 முதல் செல்திறம் பெறுமாறு) மறுஎண்ணிடப்பட்டன.
5. அரசமைப்புச் (முப்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1975 இன் 4 ஆம் பிரிவினால் (26–4–1975 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
6. மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 5 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
7. அருணாச்சலப் பிரதேசச் சட்டம், 1986 (69/1986) இன் 5 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
8. "பாண்டிச்சேரி" என்பதற்கு, பாண்டிச்சேரி (பெயர் மாற்றம் செய்தல்) சட்டம், 2006 (44/2006) இன் 4 ஆம் பிரிவினால் (1–10–2006 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
9. ஜம்மு – காஷ்மீர் மறுஅமைப்புச் சட்டம், 2019 (34/2019) இன் 8 ஆம் பிரிவினால் (31–10–2019 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
10. "232" என்பதற்கு, கோவா, தமண் மற்றும் டையூ மறுஅமைப்புச் சட்டம், 1987 (18/1987) இன் 6 ஆம் பிரிவினால் (30–05–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

# FIFTH SCHEDULE

## [Article 244(1)]

## Provisions as to the Administration and Control of Scheduled Areas and Scheduled Tribes

## PART A

## GENERAL

### 1. Interpretation :

In this Schedule, unless the context otherwise requires, the expression "State" [1]*** does not include the [2][States of Assam, [3][, [4][Meghalaya, Tripura and Mizoram.]]]

### 2. Executive power of a State in Scheduled Areas :

Subject to the provisions of this Schedule, the executive power of a State extends to the Scheduled Areas therein.

### 3. Report by the Governor [5]*** to the President regarding the administration of Scheduled Areas :

The Governor [5]*** of each State having Scheduled Areas therein shall annually, or whenever so required by the President, make a report to the President regarding the administration of the Scheduled Areas in that State and the executive power of the Union shall extend to the giving of directions to the State as to the administration of the said areas.

## PART B

## ADMINISTRATION AND CONTROL OF SCHEDULED AREAS AND SCHEDULED TRIBES

### 4. Tribes Advisory Council :

(1) There shall be established in each State having Scheduled Areas therein and, if the President so directs, also in any State having Scheduled Tribes but not Scheduled Areas therein, a Tribes Advisory Council consisting of not more than twenty members of whom, as nearly as may be, three-fourths shall be the representatives of the Scheduled Tribes in the Legislative Assembly of the State:

---

1. The words and letters "means a State specified in Part A or Part B of the First Schedule but" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71, for "State of Assam" (w.e.f. 21-1-1972).

3. Subs. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 3 for "and Meghalaya" (w.e.f. 1-4-1985).

4. Subs. by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 39, for "Meghalaya and Tripura" (w.e.f. 20-2-1987).

5. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

## ஐந்தாம் இணைப்புப்பட்டியல்

### [244(1) ஆம் உறுப்பு]

### பட்டியல் வரையிடங்களுக்கும் பட்டியலில்கண்ட பழங்குடியினருக்குமான நிருவாகம் மற்றும் கட்டாள்கை குறித்த வகையங்கள்

### பகுதி(அ)

### பொதுவியல்

**1. பொருள்கோள் :**

இந்த இணைப்புப்பட்டியலில், தறுவாயின் தேவை வேறானாலன்றி, "மாநிலம்" [1]*** என்னும் சொல், [2][அசாம், [3][, [4][மேகாலயா, திரிபுரா, மிசோரம்]]] ஆகிய மாநிலங்களை உள்ளடக்குவதில்லை.

**2. பட்டியல் வரையிடங்களில் மாநில ஆட்சி அதிகாரம் :**

இந்த இணைப்புப்பட்டியலின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒரு மாநிலத்தின் ஆட்சி அதிகாரம், அதிலுள்ள பட்டியல் வரையிடங்களை அளாவிநிற்கும்.

**3. பட்டியல் வரையிடங்களின் நிருவாகம் பற்றி குடியரசுத்தலைவருக்கு ஆளுநரின் [5]*** அறிக்கை:**

பட்டியல் வரையிடங்களைக் கொண்ட மாநிலம் ஒவ்வொன்றின் ஆளுநரும் [5]*** ஆண்டுதோறும் அல்லது குடியரசுத்தலைவரால் வேண்டுறுத்தப்படுகிற போதெல்லாம், அந்த மாநிலத்திலுள்ள பட்டியல் வரையிடங்களின் நிருவாகம் பற்றிக் குடியரசுத்தலைவருக்கு அறிக்கை அளித்தல் வேண்டும்; மேலும், மேற்சொன்ன வரையிடங்களின் நிருவாகம் குறித்து அந்த மாநிலத்திற்குப் பணிப்புரைகள் இடுவதும் ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

### பகுதி(ஆ)

### பட்டியல் வரையிடங்களுக்கும் பட்டியலில்கண்ட பழங்குடியினருக்குமான நிருவாகம் மற்றும் கட்டாள்கை

**4. பழங்குடியினர் ஆய்வுரை மன்றம் :**

(1) பட்டியல் வரையிடங்களைக் கொண்ட மாநிலம் ஒவ்வொன்றிலும், குடியரசுத்தலைவர் பணிப்பாராயின், பட்டியலில்கண்ட பழங்குடியினரைக் கொண்ட, ஆனால், பட்டியல் வரையிடங்களைக் கொண்டிராத மாநிலம் எதிலும், இருபதுக்கு மேற்படாத உறுப்பினர்களைக் கொண்டிருக்கும் பழங்குடியினர் ஆய்வுரை மன்றம் ஒன்று நிறுவப்படுதல் வேண்டும்; அவர்களில் கூடுமான வரையில், நான்கில் மூன்று பகுதியினர் அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையில் பட்டியலில்கண்ட பழங்குடியினரின் சார்பாற்றுநர்களாக இருத்தல் வேண்டும்:

---

1. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) அல்லது பகுதி (ஆ) இல் குறித்துரைக்கப்பட்ட ஒரு மாநிலம் என்று பொருள்படும் ஆனால்" என்ற சொற்கள் மற்றும் எழுத்துகள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.
2. "அசாம் மாநிலம்" என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 ஆம் பிரிவினால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. "மற்றும் மேகாலயா" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 3 ஆம் பிரிவினால் (1–4–1985 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
4. "மேகாலயா மற்றும் திரிபுரா" என்பதற்கு, மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 39 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
5. "அல்லது இராஜப்பிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

Provided that if the number of representatives of the Scheduled Tribes in the Legislative Assembly of the State is less than the number of seats in the Tribes Advisory Council to be filled by such representatives, the remaining seats shall be filled by other members of those tribes.

(2) It shall be the duty of the Tribes Advisory Council to advise on such matters pertaining to the welfare and advancement of the Scheduled Tribes in the State as may be referred to them by the Governor [1]***.

(3) The Governor [2]*** may make rules prescribing or regulating, as the case may be,—

(a) the number of members of the Council, the mode of their appointment and the appointment of the Chairman of the Council and of the officers and servants thereof;

(b) the conduct of its meetings and its procedure in general; and

(c) all other incidental matters.

**5. Law applicable to Scheduled Areas :**

(1) Notwithstanding anything in this Constitution, the Governor[2]*** may by public notification direct that any particular Act of Parliament or of the Legislature of the State shall not apply to a Scheduled Area or any part thereof in the State or shall apply to a Scheduled Area or any part thereof in the State subject to such exceptions and modifications as he may specify in the notification and any direction given under this sub-paragraph may be given so as to have retrospective effect.

(2) The Governor[2]*** may make regulations for the peace and good government of any area in a State which is for the time being a Scheduled Area.

In particular and without prejudice to the generality of the foregoing power, such regulations may—

(a) prohibit or restrict the transfer of land by or among members of the Scheduled Tribes in such area;

(b) regulate the allotment of land to members of the Scheduled Tribes in such area;

(c) regulate the carrying on of business as money-lender by persons who lend money to members of the Scheduled Tribes in such area.

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. The words "or Rajpramukh, as the case may be" omitted by *ibid*.

**வரம்புரையாக :** மாநிலச் சட்டமன்றப் பேரவையில் பட்டியலில்கண்ட பழங்குடியினரின் சார்பாற்றுநர்களின் எண்ணிக்கையானது, பழங்குடியினர் ஆய்வுரை மன்றத்தில் அத்தகைய சார்பாற்றுநர்களால் நிரப்பப்படவேண்டிய பதவியிடங்களின் எண்ணிக்கையை விடக் குறைவாக இருப்பின், எஞ்சியுள்ள பதவியிடங்கள், அந்தப் பழங்குடியினரின் பிற உறுப்பினர்களால் நிரப்பப்படுதல் வேண்டும்.

(2) மாநிலத்திலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினரது நலப்பாட்டையும் முன்னேற்றத்தையும் பொறுத்து ஆளுநரால் [1]*** குறித்தனுப்பப்படும் பொருட்பாடுகளின் மீது ஆய்வுரை கூறுவது பழங்குடியினர் ஆய்வுரை மன்றத்தின் கடமை ஆகும்.

(3) ஆளுநர் [2]*** பின்வருவனவற்றை வகுத்துரைப்பதற்கும் அல்லது, நேர்வுக்கேற்ப, ஒழுங்குறுத்தும் விதிகளைச் செய்யலாம்:–

(அ) மன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கை, அவர்களை அமர்த்தும் முறை; மேலும், மன்றத்தின் தலைவர், அதன் அலுவலர்கள், பணியாளர்கள் ஆகியோரை அமர்த்துதல்;

(ஆ) அதன் கூட்டங்களை நடத்துதல் மற்றும் அதன் பொதுவியலான நெறிமுறை; மற்றும்

(இ) பிற சார்வுறு பொருட்பாடுகள் அனைத்தும்.

**5. பட்டியல் வரையிடங்களுக்குப் பொருந்தும் சட்டம் :**

(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், ஆளுநர்[2]*** பொது அறிவிக்கை வாயிலாக, நாடாளுமன்றத்தின் அல்லது மாநிலச் சட்டமன்றத்தின் குறிப்பிட்ட சட்டம் எதுவும், மாநிலத்தில் ஒரு பட்டியல் வரையிடம் அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்துதல் ஆகாது என்றோ, அவர் அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டு, அந்த மாநிலத்தில் ஒரு பட்டியல் வரையிடம் அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்துதல் ஆகும் என்றோ பணிக்கலாம்; மேலும், இந்த உள்பத்தியின்படி இடப்படும் பணிப்புரை எதுவும் முன்மேவு செல்திறம் பெறுமாறு இடப்படலாம்.

(2) ஆளுநர்[2]*** ஒரு மாநிலத்தில் அப்போதைக்கு ஒரு பட்டியல் வரையிடமாக இருக்கிற வரையிடம் எதனின் அமைதிக்காகவும் நல்லாட்சிக்காகவும் ஒழுங்குறுத்தும்விதிகளை வகுக்கலாம்.

குறிப்பாகவும் மேலேகண்ட அதிகாரத்தின் பொதுப்பாங்கிற்குக் குந்தகமின்றியும், அத்தகைய ஒழுங்குறுத்தும்விதிகள்—

(அ) அத்தகைய வரையிடத்தில் பட்டியலில்கண்ட பழங்குடியினரின் உறுப்பினர்களால் அல்லது அவர்களிடையே நிலம் உரிமைமாற்றம் செய்யப்படுவதைத் தடைசெய்யலாம் அல்லது வரையறைப்படுத்தலாம்;

(ஆ) அத்தகைய வரையிடத்தில் பட்டியலில்கண்ட பழங்குடியினரின் உறுப்பினர்களுக்கு நிலத்தைப் பகிர்ந்தொதுக்குவதை ஒழுங்குறுத்தலாம்;

(இ) அத்தகைய வரையிடத்தில் பட்டியலில்கண்ட பழங்குடியினருக்குக் கடன் கொடுப்பவர்களாகத் தொழில் புரிபவர்களின் வட்டித் தொழிலை ஒழுங்குறுத்தலாம்.

---

1. ''அல்லது, நேர்வுக்கேற்ப, இராஜபிரமுகர்'' என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. ''அல்லது இராஜப்பிரமுகர்'' என்ற சொற்கள். *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

(3) In making any such regulation as is referred to in sub-paragraph (2) of this paragraph, the Governor[1]*** may repeal or amend any Act of Parliament or of the Legislature of the State or any existing law which is for the time being applicable to the area in question.

(4) All regulations made under this paragraph shall be submitted forthwith to the President and, until assented to by him, shall have no effect.

(5) No regulation shall be made under this paragraph unless the Governor [2]*** making the regulation has, in the case where there is a Tribes Advisory Council for the State, consulted such Council.

## PART C

## SCHEDULED AREAS

**6. Scheduled Areas :**

(1) In this Constitution, the expression "Scheduled Areas" means such areas as the President may by order declare to be Scheduled Areas.

(2) The President may at any time by order—

(a) direct that the whole or any specified part of a Scheduled Area shall cease to be a Scheduled Area or a part of such an area;

[3][(aa) increase the area of any Scheduled Area in a State after consultation with the Governor of that State;]

(b) alter, but only by way of rectification of boundaries, any Scheduled Area;

(c) on any alteration of the boundaries of a State or on the admission into the Union or the establishment of a new State, declare any territory not previously included in any State to be, or to form part of, a Scheduled Area;

---

1. The words "or Rajpramukh" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. The words "or the Rajpramukh" omitted by *ibid*.

3. Ins. by the Fifth Schedule to the Constitution (Amendment) Act, 1976 (101 of 1976), s. 2 (w.e.f. 7-9-1976).

(3) இந்தப் பத்தியின் (2) ஆம் உள்பத்தியில் குறிப்பிடப்படும் ஒழுங்குறுத்தும்விதி எதனையும் வகுக்குங்கால், தொடர்புடைய வரையிடத்திற்கு அப்போதைக்குப் பொருந்தும் நாடாளுமன்றச் சட்டம் அல்லது மாநிலச் சட்டம் எதனையும் அல்லது நிலவுறும் சட்டம் எதனையும் ஆளுநர் [1]*** நீக்கறவு செய்யலாம் அல்லது திருத்தம் செய்யலாம்.

(4) இந்தப் பத்தியின்படி வகுக்கப்படும் ஒழுங்குறுத்தும்விதிகள் அனைத்தும், குடியரசுத்தலைவருக்கு உடனடியாக அனுப்பிவைக்கப்படுதல் வேண்டும்; மேலும், அவரால் ஏற்பிசைவளிக்கப்படும் வரையில், அவை செல்திறம் பெறுவதில்லை.

(5) ஆளுநர் [2]*** ஒழுங்குறுத்தும்விதிகளை வகுக்குங்கால், மாநிலத்திற்காகப் பழங்குடியினர் ஆய்வுரை மன்றம் ஒன்று இருக்கும் நேர்வில், அத்தகைய மன்றத்தைக் கலந்தாய்வு செய்திருந்தாலன்றி, இந்தப் பத்தியின்படி ஒழுங்குறுத்தும்விதி எதுவும் வகுக்கப்படுதல் ஆகாது.

## பகுதி(இ)

## பட்டியல் வரையிடங்கள்

**6. பட்டியல் வரையிடங்கள் :**

(1) இந்த அரசமைப்பில் "பட்டியல் வரையிடங்கள்" என்னும் சொற்றொடர், பட்டியல் வரையிடங்கள் எனக் குடியரசுத்தலைவர் ஆணையின்வழி விளம்பும் வரையிடங்கள் எனப் பொருள்படும்.

(2) குடியரசுத்தலைவர், ஆணையின்வழி, எந்தச் சமயத்திலும்—

(அ) ஒரு பட்டியல் வரையிடமாக உள்ளது முழுவதுமோ குறித்துரைக்கப்படும் அதன் பகுதி எதுவுமோ, அத்தகைய பட்டியல் வரையிடமாக அல்லது அதன் பகுதியாக இருப்பது அற்றுப்போதல் வேண்டும் என்று பணிக்கலாம்;

[3][(அஅ) ஒரு மாநிலத்தில் உள்ள பட்டியல் வரையிடம் எதனின் பரப்பிடத்தையும், அந்த மாநிலத்தின் ஆளுநரைக் கலந்தாய்வு செய்த பின்பு விரிவுப்படுத்தலாம்;]

(ஆ) பட்டியல் வரையிடம் எதனையும், எல்லைகளைத் திருத்தமைவு செய்வதன் வாயிலாக மட்டுமே மாறுதல் செய்யலாம்;

(இ) ஒரு மாநிலத்தினுடைய எல்லைகளில் மாறுதல் எதுவும் செய்யும் போது அல்லது ஒரு புதிய மாநிலத்தை ஒன்றியத்திற்குள் சேர்த்துக் கொள்ளும்போது அல்லது நிறுவும்போது, மாநிலம் எதிலும் முன்னதாகவே உள்ளடங்கியிராத ஆட்சிநிலவரை எதனையும், ஒரு பட்டியல் வரையிடமாகவோ ஒரு பட்டியல் வரையிடத்தின் பகுதியாகவோ விளம்பலாம்;

---

1. "அல்லது இராஜப்பிரமுகர்" என்ற சொற்கள், அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

2. "அல்லது இராஜபிரமுகர்" என்ற சொற்கள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

3. அரசமைப்புச் (திருத்தம்) சட்டம், 1976 (101/1976) இன் 2 ஆம் பிரிவின் ஐந்தாம் இணைப்புப்பட்டியலால் (7–9–1976 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

[1][(d) rescind, in relation to any State or States, any order or orders made under this paragraph, and in consultation with the Governor of the State concerned, make fresh orders redefining the areas which are to be Scheduled Areas;]

and any such order may contain such incidental and consequential provisions as appear to the President to be necessary and proper, but save as aforesaid, the order made under sub-paragraph (1) of this paragraph shall not be varied by any subsequent order.

## PART D

## AMENDMENT OF THE SCHEDULE

**7. Amendment of the Schedule :**

(1) Parliament may from time to time by law amend by way of addition, variation or repeal any of the provisions of this Schedule and, when the Schedule is so amended, any reference to this Schedule in this Constitution shall be construed as a reference to such Schedule as so amended.

(2) No such law as is mentioned in sub-paragraph (1) of this paragraph shall be deemed to be an amendment of this Constitution for the purposes of article 368.

---

1. Ins. by the Fifth Schedule to the Constitution (Amendment) Act, 1976 (101 of 1976), s. 2 (w.e.f. 7-9-1976).

[1][(ஈ) மாநிலம் எதனின் அல்லது மாநிலங்கள் எவற்றின் தொடர்பாகவும், இந்தப் பத்தியின்படி பிறப்பிக்கப்பட்ட ஆணை எதனையும் அல்லது ஆணைகள் எவற்றையும் அழித்தறிவு செய்யலாம்; மேலும், தொடர்புடைய மாநில ஆளுநரைக் கலந்தாய்வு செய்து, பட்டியல் வரையிடங்களாக இருக்க வேண்டிய வரையிடங்களை மறுவரையறைசெய்யும் புதிய ஆணைகளைப் பிறப்பிக்கலாம்;]

அத்தகைய ஆணை எதுவும், தேவையானவையாகவும் முறையானவையாகவும் குடியரசுத்தலைவருக்குத் தோன்றும் சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டிருக்கலாம்; ஆனால், மேற்கூறப்பட்டவாறல்லாமல், இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி பிறப்பிக்கப்பட்ட ஆணை, பிந்திய ஆணை எதனாலும் மாறுதல் செய்யப்படுதல் ஆகாது.

## பகுதி – (ஈ)

## இணைப்புப்பட்டியலின் திருத்தம்

### 7. இணைப்புப்பட்டியலின் திருத்தம் :

(1) நாடாளுமன்றம் அவ்வப்போது சட்டங்களினால் எதனையும் சேர்த்தல், மாறுதல் செய்தல் அல்லது நீக்கறவுசெய்தல் என்னும் வகையில் இந்த இணைப்புப்பட்டியலின் வகையங்களில் எதனையும் திருத்தம் செய்யலாம்; மேலும், இந்த இணைப்புப்பட்டியல் அவ்வாறு திருத்தம் செய்யப்படும்போது, இந்த அரசமைப்பில் இந்த இணைப்புப்பட்டியல் பற்றிய சுட்டுகை எதுவும், அவ்வாறு திருத்தம் செய்யப்பட்ட இணைப்புப்பட்டியல் பற்றிய சுட்டுகையாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும்.

(2) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் குறிப்பிடப்பட்ட சட்டம் எதுவும், 368 ஆம் உறுப்பைப் பொறுத்து இந்த அரசமைப்பின் ஒரு திருத்தம் எனக் கொள்ளப்படுதல் ஆகாது.

---

1. அரசமைப்புச் (திருத்தம்) சட்டம், 1976 (101/1976) இன் 2 ஆம் பிரிவின் ஐந்தாம் இணைப்புப்பட்டியலால் (7–9–1976 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

# SIXTH SCHEDULE

## [Articles 244(2) and 275(1)]

## Provisions as to the Administration of Tribal Areas in [1][the States of Assam, Meghalaya, Tripura and Mizoram]

### [2]1. Autonomous districts and autonomous regions :

(1) Subject to the provisions of this paragraph, the tribal areas in each item of [3][[4][Parts I, II and IIA] and in Part III] of the table appended to paragraph 20 of this Schedule shall be an autonomous district.

(2) If there are different Scheduled Tribes in an autonomous district, the Governor may, by public notification, divide the area or areas inhabited by them into autonomous regions.

(3) The Governor may, by public notification,—

(a) include any area in [3][any of the Parts] of the said table,

(b) exclude any area from [3][any of the Parts] of the said table,

(c) create a new autonomous district,

(d) increase the area of any autonomous district,

(e) diminish the area of any autonomous district,

(f) unite two or more autonomous districts or parts thereof so as to form one autonomous district,

[5][(ff) alter the name of any autonomous district],

(g) define the boundaries of any autonomous district:

Provided that no order shall be made by the Governor under clauses (c), (d), (e) and (f) of this sub-paragraph except after consideration of the report of a Commission appointed under sub-paragraph (1) of paragraph 14 of this Schedule:

---

1. Subs. by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 39, for certain words (w.e.f. 20-2-1987).
2. Paragraph 1 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, so as to insert the following proviso after sub-paragraph (2), namely:—

   "Provided that nothing in this sub-paragraph shall apply to the Bodoland Territorial Areas District".
3. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch., for "Part A" (w.e.f. 21-1-1972).
4. Subs. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 4, for "Parts I and II" (w.e.f. 1-4-1985).
5. Ins. by the Assam Reorganisation (Meghalaya) Act 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch. (w.e.f. 2-4-1970).

## ஆறாம் இணைப்புப்பட்டியல்

## [244 (2), 275 (1) ஆகிய உறுப்புகள்]

## [1][அசாம், மேகாலயா, திரிபுரா, மிசோரம் ஆகிய மாநிலங்களில்] உள்ள பழங்குடியினர் வரையிடங்களின் நிருவாகம் குறித்த வகையங்கள்

**[2]1. தன்னாட்சி மாவட்டங்கள் மற்றும் தன்னாட்சி வட்டாரங்கள் :**

(1) இந்தப் பத்தியின் வகையங்களுக்கு உட்பட்டு, இந்த இணைப்புப்பட்டியலின் 20 ஆம் பத்திக்குப் பிற்சேர்க்கையாயுள்ள அட்டவணையின் [3][[4][I, II, II (அ) பகுதிகள்] மற்றும் III ஆம் பகுதியில்] கண்டுள்ளவை ஒவ்வொன்றிலுமுள்ள பழங்குடியினர் வரையிடங்கள், ஒரு தன்னாட்சி மாவட்டமாக இருக்கும்.

(2) ஒரு தன்னாட்சி மாவட்டத்தில் வெவ்வேறு பட்டியல் பழங்குடியினர் இருப்பார்களாயின், ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாக, அவர்கள் வாழ்விடமாகக் கொண்டுள்ள வரையிடத்தை அல்லது வரையிடங்களைத் தன்னாட்சி வட்டாரங்களாகப் பிரிக்கலாம் .

(3) ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாக, —

(அ) மேற்சொன்ன அட்டவணையின் [3][பகுதிகளில் எதிலும்] வரையிடம் எதனையும் சேர்க்கலாம்,

(ஆ) மேற்சொன்ன அட்டவணையின் [3][பகுதிகளில் எதிலும்] இருந்தும் வரையிடம் எதனையும் நீக்கலாம்,

(இ) ஒரு புதிய தன்னாட்சி மாவட்டத்தை உருவாக்கலாம்,

(ஈ) தன்னாட்சி மாவட்டம் எதனின் வரையிடத்தையும் விரிவுபடுத்தலாம்,

(உ) தன்னாட்சி மாவட்டம் எதனின் பரப்பிடத்தையும் குறைக்கலாம்,

(ஊ) இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட தன்னாட்சி மாவட்டங்களை அல்லது அவற்றின் பகுதிகளை ஒரே தன்னாட்சி மாவட்டமாக அமையுமாறு இணைக்கலாம்,

[5][(ஊ ஊ) தன்னாட்சி மாவட்டம் எதனின் பெயரையும் மாற்றலாம்],

(எ) தன்னாட்சி மாவட்டம் எதனின் எல்லைகளையும் வரையறுக்கலாம்:

**வரம்புரையாக :** இந்த இணைப்புப்பட்டியலின் 14 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி அமர்த்தப்பட்ட ஆணையம் ஒன்றின் அறிக்கையை ஓர்வு செய்த பின்பல்லாமல், இந்த உள்பத்தியின் (இ), (ஈ), (உ), (ஊ) ஆகிய கூறுகளின்படி, ஆளுநர் ஆணை எதனையும் பிறப்பித்தல் ஆகாது:

---

1. குறித்தசில சொற்களுக்கு, மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 39 ஆம் பிரிவினால் (20-2-1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

2. 1 ஆம் பத்தி அசாம் மாநிலத்திற்கு பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், (2) ஆம் உள்பத்திக்குப் பின்பு பின்வரும் வரம்புரையைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:-

   "**வரம்புரையாக** : இந்த உள்பத்தியில் அடங்கியுள்ள எதுவும், போடோலாந்து ஆட்சிநிலவரை வரையிடப்பகுதிகள் மாவட்டத்திற்குப் பொருந்தாது."

3. "பகுதி (அ)" என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21-1-1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

4. "பகுதிகள் I மற்றும் II" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 4 ஆம் பிரிவினால் (1-4-1985 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

5. அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2-4-1970 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

[1][Provided further that any order made by the Governor under this sub-paragraph may contain such incidental and consequential provisions (including any amendment of paragraph 20 and of any item in any of the Parts of the said Table) as appear to the Governor to be necessary for giving effect to the provisions of the order.]

### [2-3-4]2. Constitution of District Councils and Regional Councils :

[5][(1) There shall be a District Council for each autonomous district consisting of not more than thirty members, of whom not more than four persons shall be nominated by the Governor and the rest shall be elected on the basis of adult suffrage.]

(2) There shall be a separate Regional Council for each area constituted an autonomous region under sub-paragraph (2) of paragraph 1 of this Schedule.

(3) Each District Council and each Regional Council shall be a body corporate by the name respectively of "the District Council of (name of district)" and "the Regional Council of (name of region)", shall have perpetual succession and a common seal and shall by the said name sue and be sued.

(4) Subject to the provisions of this Schedule, the administration of an autonomous district shall, in so far as it is not vested under this Schedule in any Regional Council within such district, be vested in the District Council for such district and the administration of an autonomous region shall be vested in the Regional Council for such region.

---

1. Ins. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch. (w.e.f. 21-1-1972).
2. Paragraph 2 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, so as to insert the following proviso after sub-paragraph (1), namely: —

   "Provided that the Bodoland Territorial Council shall consist of not more than forty-six members of whom forty shall be elected on the basis of adult suffrage, of whom thirty shall be reserved for the Scheduled Tribes, five for non-tribal communities, five open for all communities and the remaining six shall be nominated by the Governor having same rights and privileges as other members, including voting rights, from amongst the un-represented communities of the Bodoland Territorial Areas District, of which at least two shall be women :"
3. Paragraph 2 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1995 (42 of 1995), s. 2, so as to insert the following proviso after sub-paragraph (3), namely : —

   "Provided that the District Council constituted for the North Cachar Hills District shall be called as the North Cachar Hills Autonomous Council and the District Council constituted for the Karbi Anglong District shall be called as the Karbi Anglong Autonomous Council."
4. Paragraph 2 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, so as to insert the following proviso after sub-paragraph (3), namely:—

   "Provided further that the District Council constituted for the Bodoland Territorial Areas District shall be called the Bodoland Territorial Council."
5. Subs. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch., for sub-paragraph (1) (w.e.f. 2-4-1970).

[1][மேலும் வரம்புரையாக : இந்த உள்பத்தியின்படி ஆளுநர் பிறப்பித்த ஆணை எதுவும், அந்த ஆணையின் வகையங்களைச் செல்திறப்படுத்துவதற்குத் தேவையென ஆளுநருக்குத் தோன்றுகிற (20 ஆம் பத்தியின், மற்றும் மேற்சொன்ன அட்டவணையின் பகுதிகளில் எதிலும் உள்ள இனம் எதனின் திருத்தம் உள்ளடங்கலாக) சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டிருக்கலாம்.]

[2-3-4]**2. மாவட்ட மன்றங்களையும் வட்டார மன்றங்களையும் அமைத்தல் :**

[5][(1) தன்னாட்சி மாவட்டம் ஒவ்வொன்றுக்கும் முப்பதுக்கு மேற்படாத உறுப்பினர்களைக் கொண்ட ஒரு மாவட்ட மன்றம் இருக்கும்; அந்த உறுப்பினர்களில் நால்வருக்கு மேற்படாதவர்கள் ஆளுநரால் நியமிக்கப்பெறுவர்; எஞ்சிய உறுப்பினர்கள், வயது வந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பெறுவர்.]

(2) இந்த இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பத்தியின் (2) ஆம் உள்பத்தியின்படி ஒரு தன்னாட்சி வட்டாரமாக அமைக்கப்பட்ட வரையிடம் ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே ஒரு வட்டார மன்றம் இருக்கும்.

(3) மாவட்ட மன்றம் ஒவ்வொன்றும், வட்டார மன்றம் ஒவ்வொன்றும் முறையே, ''(மாவட்டத்தின் பெயர்) மாவட்ட மன்றம்'', ''(வட்டாரத்தின் பெயர்) வட்டார மன்றம்'' என்னும் பெயரில் ஒரு கூட்டுருமமாக இருக்கும்; அது தொடர்ந்த நிலைப்பாட்டையும் ஒரு தனியுறு இலட்சினையையும் கொண்டிருக்கும்; மேற்சொன்ன பெயரால் அது வழக்கிடுதலும் வழக்கிடப்படுதலும் வேண்டும்.

(4) இந்த இணைப்புப்பட்டியலின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒரு தன்னாட்சி மாவட்டத்தின் நிருவாகம், அத்தகைய மாவட்டத்திற்குள் உள்ள வட்டாரமன்றம் எதனிடமும் இந்த இணைப்புப்பட்டியலின்படி உற்றமையாதிருக்கிற அளவுக்கு, அத்தகைய மாவட்டத்திற்கான மாவட்ட மன்றத்திடம் உற்றமைந்திருக்கும்; மேலும், ஒரு தன்னாட்சி வட்டாரத்தின் நிருவாகம், அத்தகைய வட்டாரத்திற்கான வட்டார மன்றத்திடம் உற்றமைந்திருக்கும்.

---

1. வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. 2 ஆம் பத்தி அசாம் மாநிலத்திற்கு பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், (1) ஆம் பத்திக்குப் பின்பு பின்வரும் வரம்புரையைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:–

"**வரம்புரையாக** : போடோலாந்து ஆட்சிநிலவரை வரையிட மன்றமானது நாற்பத்து ஆறுக்கு மேற்படாத உறுப்பினர்களைக் கொண்டிருக்கும். அவர்களில் நாற்பது உறுப்பினர்கள் வயது வந்தோருக்கு வாக்குரிமை என்ற அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பெறுவர், அவர்களில் முப்பது, பட்டியலில்கண்ட பழங்குடியினருக்காகவும், ஐந்து, பழங்குடியினத்தவர் அல்லாதவருக்காகவும் ஒதுக்கீடு செய்யப்படும், ஐந்து அனைத்து இனத்தினருக்கும் உரியதாகும்; மற்றும் எஞ்சியுள்ள ஆறு உறுப்பினர்கள் போடோலாந்து ஆட்சிநிலவரை வரையிடப்பகுதிகள் மாவட்டத்தில் சார்பாற்றம் செய்யப்படாத இனத்தவர்களுக்கிடையேயிருந்து வாக்களிக்கும் உரிமைகள் உள்ளடங்கலாக, பிற உறுப்பினர்களைப் போன்றே அதே உரிமைகளையும் சிறப்புரிமைகளையும் கொண்டவர்களாக ஆளுநரால் நியமிக்கப்படுவர், அவர்களில் குறைந்தது இருவர், பெண்களாக இருத்தல் வேண்டும்:''

3. 2 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1995 (42/1995) இன் 2 ஆம் பிரிவினால், (3) ஆம் உள்பத்திக்குப் பின்பு பின்வரும் வரம்புரையைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:–

"**வரம்புரையாக** : வடக்குக் கச்சார் குன்றுகள் மாவட்டத்திற்காக அமைக்கப்பட்ட மாவட்ட மன்றம், வடக்குக் கச்சார் குன்றுகள் தன்னாட்சி மன்றம் என்று அழைக்கப்பெறும்; மற்றும் கர்பி ஆங்கலாங்கு மாவட்டத்திற்காக அமைக்கப்பட்ட மாவட்ட மன்றம், கர்பி ஆங்கலாங்கு தன்னாட்சி மன்றம் என்று அழைக்கப்பெறும்.''

4. 2 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், (3) ஆம் உள்பத்திக்குப் பின்பு பின்வரும் வரம்புரையைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:–

"**மேலும் வரம்புரையாக** : போடோலாந்து ஆட்சிநிலவரை வரையிடப்பகுதிகள் மாவட்டத்திற்காக அமைக்கப்பட்ட மாவட்ட மன்றம், போடோலாந்து ஆட்சிநிலவரை மன்றம் என்று அழைக்கப்பெறும்.''

5. (1) ஆம் உள்பத்திக்கு, அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

(5) In an autonomous district with Regional Councils, the District Council shall have only such powers with respect to the areas under the authority of the Regional Council as may be delegated to it by the Regional Council in addition to the powers conferred on it by this Schedule with respect to such areas.

(6) The Governor shall make rules for the first constitution of District Councils and Regional Councils in consultation with the existing tribal Councils or other representative tribal organisations within the autonomous districts or regions concerned, and such rules shall provide for—

(a) the composition of the District Councils and Regional Councils and the allocation of seats therein;

(b) the delimitation of territorial constituencies for the purpose of elections to those Councils;

(c) the qualifications for voting at such elections and the preparation of electoral rolls therefor;

(d) the qualifications for being elected at such elections as members of such Councils;

(e) the term of office of members of [1][Regional Councils];

(f) any other matter relating to or connected with elections or nominations to such Councils;

(g) the procedure and the conduct of business [2][(including the power to act notwithstanding any vacancy)] in the District and Regional Councils;

(h) the appointment of officers and staff of the District and Regional Councils.

[1][(6A) The elected members of the District Council shall hold office for a term of five years from the date appointed for the first meeting of the Council after the general elections to the Council, unless the District Council is sooner dissolved under paragraph 16 and a nominated member shall hold office at the pleasure of the Governor:

Provided that the said period of five years may, while a Proclamation of Emergency is in operation or if circumstances exist which, in the opinion of the Governor, render the holding of elections impracticable, be extended by the Governor for a period not exceeding one year at a time and in any case where a Proclamation of Emergency is in operation not extending beyond a period of six months after the Proclamation has ceased to operate:

Provided further that a member elected to fill a casual vacancy shall hold office only for the remainder of the term of office of the member whom he replaces.]

1. Subs. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch., for "such councils" (w.e.f. 2-4-1970).

2. Ins. by *ibid.*

(5) வட்டார மன்றங்களைக் கொண்ட ஒரு தன்னாட்சி மாவட்டத்தில், மாவட்ட மன்றத்திற்கு, அந்த வட்டார மன்றத்தின் அதிகாரத்தின் கீழுள்ள வரையிடங்களைப் பொறுத்தவரை, இந்த இணைப்புப்பட்டியலின் வழி வழங்கப்படும் அதிகாரங்களோடுங்கூட, அத்தகைய வரையிடங்களுக்காக அந்த வட்டார மன்றத்தினால் அதனிடம் ஒப்படைவு செய்யப்படும் அதிகாரங்களை மட்டுமே அந்த மாவட்ட மன்றம் உடையது ஆகும்.

(6) ஆளுநர், தன்னாட்சி மாவட்டங்களிலோ வட்டாரங்களிலோ நிலவுறும் பழங்குடியினர் மன்றங்களை அல்லது சார்பாற்றம் வாய்ந்த பிற பழங்குடியினர் அமைவனங்களைக் கலந்தாய்வு செய்து, மாவட்ட மன்றங்களையும் வட்டார மன்றங்களையும் முதல் முறையாக அமைப்பதற்கு விதிகளை செய்வார்; அத்தகைய விதிகளில் பின்வருவனவற்றிற்கு வகைசெய்யப்படும்—

(அ) மாவட்ட மன்றங்கள், வட்டார மன்றங்கள் ஆகியவற்றின் கட்டமைப்பு மற்றும் அவற்றில் பதவியிடங்களைப் பகிர்ந்து ஒதுக்குதல்;

(ஆ) அந்த மன்றங்களுக்கான தேர்தல்களுக்காக நிலவரைத் தேர்தல் தொகுதிகளை வரையறுத்தல்;

(இ) அத்தகைய தேர்தல்களில் வாக்களிப்பதற்கான தகுதிப்பாடுகள்; அந்தத் தேர்தல்களுக்கான வாக்காளர் பட்டியல்களைத் தயாரித்தல்;

(ஈ) அத்தகைய தேர்தல்களில் அந்த மன்றங்களின் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பெறுவதற்கான தகுதிப்பாடுகள்;

(உ) [1][வட்டார மன்றங்களின்] உறுப்பினர்களின் பதவிக் காலம்;

(ஊ) அத்தகைய மன்றங்களுக்கான தேர்தல்கள் அல்லது நியமனங்கள் தொடர்பான அல்லது அவை குறித்த பிற பொருட்பாடுகள்;

(எ) மாவட்ட மற்றும் வட்டார மன்றங்களின் [2][(காலியிடம் எதுவும் இருப்பினும் செயல்படுவதற்கான அதிகாரம் உள்ளடங்கலாக)] நெறிமுறையும் அலுவல் நடத்துமுறையும்;

(ஏ) மாவட்ட மற்றும் வட்டார மன்றங்களின் அலுவலர்களையும் பணியாளர் தொகுதியினரையும் அமர்த்துதல்.

[1][(6 (அ)). மாவட்ட மன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பெறும் உறுப்பினர்கள், அந்த மன்றத்திற்கான பொதுத் தேர்தல்களுக்குப் பின்பு அந்த மன்றத்தின் முதல் கூட்டத்திற்கெனக் குறித்திட்ட தேதியிலிருந்து ஐந்தாண்டுக் காலத்திற்கு, அந்த மாவட்ட மன்றம் 16 ஆம் பத்தியின்படி அதற்கு முன்னரே கலைக்கப்பட்டாலன்றி, பதவி வகிப்பார்கள்; மேலும், நியமனம் செய்யப்பெற்ற ஓர் உறுப்பினர், ஆளுநர் விழையுமளவும் பதவி வகிப்பார்:

**வரம்புரையாக** : நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டில் இருக்குங்கால் அல்லது ஆளுநரின் கருத்தின்படி தேர்தல்கள் நடத்துவதை நடைமுறையில் இயலாததாக்கும் சூழ்நிலைகள் நிலவுமாயின், ஒரு தடவையில் ஓராண்டுக்கு மேற்படாத காலஅளவுக்கும் ஒரு நெருக்கடிநிலைச் சாற்றாணை செயற்பாட்டிலிருக்குமிடத்து எந்நேர்விலும், அச்சாற்றாணை செயற்படுவது அற்றுப்போன பின்பு ஆறுமாதக் காலஅளவுக்கு மேற்படாத ஒரு காலஅளவுக்கும், மேற்சொன்ன ஐந்தாண்டுக் காலஅளவு ஆளுநரால் நீட்டிக்கப்படலாம்:

**மேலும் வரம்புரையாக** : இடையெழும் காலியிடத்தை நிரப்புவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பெறும் ஓர் உறுப்பினர், எந்த உறுப்பினரின் இடத்திற்கு அவர் தேர்ந்தெடுக்கப்பெறுகிறாரோ அந்த உறுப்பினரின் பதவிக் காலத்தில் எஞ்சியுள்ள காலத்திற்கு மட்டுமே பதவி வகிப்பார்.]

---

1. "அத்தகைய மன்றங்களின்" என்பதற்கு, அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.

(7) The District or the Regional Council may after its first constitution make rules [1][with the approval of the Governor] with regard to the matters specified in sub-paragraph (6) of this paragraph and may also make [2][rules with like approval] regulating—

(a) the formation of subordinate local Councils or Boards and their procedure and the conduct of their business; and

(b) generally all matters relating to the transaction of business pertaining to the administration of the district or region, as the case may be:

Provided that until rules are made by the District or the Regional Council under this sub-paragraph the rules made by the Governor under sub-paragraph (6) of this paragraph shall have effect in respect of elections to, the officers and staff of, and the procedure and the conduct of business in, each such Council.

[3]* * *

## [4-5-6]3. Powers of the District Councils and Regional Councils to make laws :

(1) The Regional Council for an autonomous region in respect of all areas within such region and the District Council for an autonomous district in respect of all areas within the district except those which are under the authority of Regional Councils, if any, within the district shall have power to make laws with respect to—

---

1. Ins. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch., for "such councils" (w.e.f. 2-4-1970).

2. Ins. by *ibid.*

3. Second proviso omitted by *ibid.*

4. Paragraph 3 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, so as to substitute sub-paragraph (3) as under (w.e.f. 7-9-2003),—

"(3) Save as otherwise provided in sub-paragraph (2) of paragraph 3A or sub-paragraph (2) of paragraph 3B, all laws made under this paragraph or sub-paragraph (1) of paragraph 3A or sub-paragraph (1) of paragraph 3B shall be submitted forthwith to the Governor and, until assented to by him, shall have no effect."

5. After paragraph 3, the following paragraph has been inserted in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1995 (42 of 1995), s. 2, namely: —

**"3A. Additional powers of the North Cachar Hills Autonomous Council and the Karbi Anglong Autonomous Council to make laws :**

(1) Without prejudice to the provisions of paragraph 3, the North Cachar Hills Autonomous Council and the Karbi Anglong Autonomous Council within their respective districts, shall have power to make laws with respect to—

(a) industries, subject to the provisions of entries 7 and 52 of List I of the Seventh Schedule;

(b) communications, that is to say, roads, bridges, ferries and other means of communication not specified in List I of the Seventh Schedule; municipal tramways, ropeways, inland waterways and traffic thereon subject to the provisions of List I and List III of the Seventh Schedule with regard to such waterways; vehicles other than mechanically propelled vehicles;

(c) preservation, protection and improvement of stock and prevention of animal diseases; veterinary training and practice; cattle pounds;

(d) primary and secondary education;

(e) agriculture, including agricultural education and research, protection against pests and prevention of plant diseases;

(7) மாவட்ட அல்லது வட்டார மன்றம், அது முதன்முறையாக அமைக்கப்பட்ட பின்பு, [1][ஆளுநரின் ஒப்பேற்புடன்], இந்தப் பத்தியின் (6) ஆம் உள்பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகள் குறித்து விதிகளை வகுக்கலாம்; மேலும், [2][அத்தகைய ஒப்பேற்புடன்,] பின்வருவனவற்றை ஒழுங்குறுத்துவதற்கான [2][விதிகளை] வகுக்கலாம்:–

(அ) கீழமை உள்வரை மன்றங்களையோ வாரியங்களையோ உருவாக்குதல்; அவற்றின் நெறிமுறையும் அவற்றின் அலுவல் நடத்துமுறையும்; மற்றும்

(ஆ) பொதுவாக, மாவட்டத்தின் அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டாரத்தின் நிருவாகம் சார்ந்த அலுவல்களை நடத்துவது பற்றிய பொருட்பாடுகள் அனைத்தும் :

**வரம்புரையாக** : இந்த உள்பத்தியின்படி மாவட்ட அல்லது வட்டார மன்றத்தினால் விதிகள் வகுக்கப்படும் வரையில், அத்தகைய மன்றம் ஒவ்வொன்றுக்குமான தேர்தல்கள், அதன் அலுவலர்கள், பணியாளர்தொகுதி, நெறிமுறை, அலுவல் நடத்துமுறை ஆகியவற்றைப் பொறுத்து இந்தப் பத்தியின் (6) ஆம் உள்பத்தியின்படி ஆளுநரால் வகுக்கப்பட்ட விதிகள் செல்திறம் உடையன ஆகும்.

[3]* * *

**[4-5-6]3. சட்டங்களியற்றுவதற்கு மாவட்ட மன்றங்களுக்கும் வட்டார மன்றங்களுக்கும் உள்ள அதிகாரங்கள் :**

(1) ஒரு தன்னாட்சி வட்டாரத்திற்கான வட்டார மன்றம், அத்தகைய வட்டாரத்திற்குள் உள்ள அனைத்து வரையிடங்களைப் பொறுத்தும், ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம், அந்த மாவட்டத்திற்குள் வட்டார மன்றங்கள், எவையேனுமிருப்பின், அவற்றின் அதிகாரத்தின் கீழுள்ள வரையிடங்கள் நீங்கலாக, அந்த மாவட்டத்திற்குள் உள்ள அனைத்து வரையிடங்களைப் பொறுத்தும், பின்வருவன குறித்துச் சட்டங்களியற்ற அதிகாரம் உடையன ஆகும்—

---

1. அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.

3. இரண்டாம் வரம்புரை, *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டது.

4. 3 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், 3 ஆம் உள்பத்திக்கு மாற்றாக அமைக்குமாறு (7–9–2003 முதல் செல்திறம் பெறுமாறு), திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது:–

"(3). 3 (அ) பத்தியின் (2) ஆம் உள்பத்தியில் அல்லது 3 (ஆ) பத்தியின் (2) ஆம் உள்பத்தியில் பிறவாறு வகைசெய்யப்பட்டிருப்பது நீங்கலாக, இந்தப் பத்தியின் அல்லது 3 (அ) பத்தியின் (1) ஆம் உள்பத்தியின் அல்லது 3 (ஆ) பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி வகுக்கப்பட்ட சட்டங்கள் அனைத்தும் ஆளுநருக்கு உடனடியாகப் பணிந்தனுப்பப்படுதல் வேண்டும். மேலும், அவரால் இசைவளிக்கப்படும் வரை செல்திறம் உடையன ஆகாது."

5. 3 ஆம் பத்திக்கு பின்பு, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1995 (42/1995) இன் 2 ஆம் பிரிவினால், பின்வரும் பத்தியைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது. அதாவது:–

**"3 (அ). சட்டங்களியற்றுவதற்கு வடக்குக் கச்சார் குன்றுகள் தன்னாட்சி மன்றங்களின் மற்றும் கர்பி ஆங்கலாங்கு தன்னாட்சி மன்றங்களின் கூடுதல் அதிகாரங்கள்** :

(1). 3 ஆம் பிரிவின் வகையங்களுக்குக் குந்தகமின்றி, வடக்குக் கச்சார் குன்றுகள் தன்னாட்சி மன்றம், மற்றும் கர்பி ஆங்கலாங்கு தன்னாட்சி மன்றம், முறையே தத்தம் மாவட்டங்களில் –

(அ) ஏழாம் இணைப்புப்பட்டியலின் பத்தி 1 இன் 7, 52 ஆகிய பதிவுகளின் வகையங்களுக்கு உட்பட்டு, தொழில்கள்;

(ஆ) போக்குவரவு இணைவங்கள், அதாவது, சாலைகள், பாலங்கள், தோணித்துறைகள் மற்றும் I ஆம் பட்டியலில் குறித்துரைக்கப்படாத பிற போக்குவரவு இணைவங்கள்; நகராட்சிக் காந்தவண்டிப் பாதைகள் கம்பி வடப்பாதைகள்; நீர்வழிகள் குறித்து I ஆம் பட்டியலிலும் III ஆம் பட்டியலிலும் உள்ள வகையங்களுக்கு உட்பட்டு, உள்நாட்டு நீர்வழிகளும் அவற்றின் வழியான போக்குவரத்தும்; எந்திரத்தால் உந்தப்படும் ஊர்திகள் அல்லாத பிற ஊர்திகள்.

(இ) கால்நடைகளைப் பேணுதல், பாதுகாத்தல், பெருக்குதல், விலங்கு நோய்த்தடுப்பு, விலங்கின மருத்துவப் பயிற்சியும் தொழிலும்; கால்நடைத் தொழுவங்கள்;

(ஈ) தொடக்க நிலை மற்றும் இடைநிலைக் கல்வி;

(உ) வேளாண்மை, வேளாண் கல்வி, ஆராய்ச்சி, பயிர்கொல்லிகளுக்கு எதிரான பாதுகாப்பு, பயிர் நோய்த் தடுப்பு உள்ளடங்கலாக.

(f) fisheries;

(g) water, that is to say, water supplies, irrigation and canals, drainage and embankments, water storage and water power subject to the provisions of entry 56 of List I of the Seventh Schedule;

(h) social security and social insurance, employment and unemployment;

(i) flood control schemes for protection of villages, paddy fields, markets, towns, etc. (not of technical nature);

(j) theatre and dramatic performances, cinemas subject to the provisions of entry 60 of List I of the Seventh Schedule; sports, entertainments and amusements;

(k) public health and sanitation, hospitals and dispensaries;

(l) minor irrigation;

(m) trade and commerce in, and the production supply and distribution of, food stuffs, cattle fodder, raw cotton and raw jute;

(n) libraries, museums and other similar institutions controlled or financed by the State; ancient and historical monuments and records other than those declared by or under any law made by Parliament to be of national importance; and

(o) alienation of land.

(2) All laws made by the North Cachar Hills Autonomous Council and the Karbi Anglong Autonomous Council under paragraph 3 or under this paragraph shall, in so far as they relate to matters specified in List III of the Seventh Schedule, be submitted forthwith to the Governor who shall reserve the same for the consideration of the President.

(3) When a law is reserved for the consideration of the President, the President shall declare either that he assents to the said law or that he withholds assent therefrom:

Provided that the President may direct the Governor to return the law to the North Cachar Hills Autonomous Council or the Karbi Anglong Autonomous Council, as the case may be, together with a message requesting that the said Council will reconsider the law or any specified provisions thereof and, in particular, will consider the desirability of introducing any such amendments as he may recommend in his message and, when the law is so returned, the said Council shall consider the law accordingly within a period of six months from the date of receipt of such message and, if the law is again passed by the said Council with or without amendment it shall be presented again to the President for his consideration."

6. After paragraph 3A, the following paragraph has been inserted in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, namely:-

**"3B. Additional powers of the Bodoland Territorial Council to make laws** :

(1) Without prejudice to the provisions of paragraph 3, the Bodoland Territorial Council within its areas shall have power to make laws with respect to:—

(i) agriculture, including agricultural education and research, protection against pests and prevention of plant diseases; (ii) animal husbandry and veterinary, that is to say, preservation, protection and improvement of stock and prevention of animal diseases, veterinary training and practice, cattle pounds; (iii) co-operation; (iv) cultural affairs; (v) education, that is to say, primary education, higher secondary including vocational training, adult education, college education (general); (vi) fisheries; (vii) flood control for protection of village, paddy fields, markets and towns (not of technical nature); (viii) Food and civil supply; (ix) forests (other than reserved forests); (x) handloom and textile; (xi) health and family welfare, (xii) intoxicating liquors, opium and derivatives, subject to the provisions of entry 84 of List I of the Seventh Schedule; (xiii) irrigation; (xiv) labour and employment; (xv) land and revenue; (xvi) library services (financed and controlled by the State Government); (xvii) lotteries (subject to the provisions of entry 40 of List I of the Seventh Schedule), theatres, dramatic performances and cinemas (subject to the provisions of entry 60 of List I of the Seventh Schedule); (xviii) markets and fairs; (xix) municipal corporation, improvement trust, district boards and other local authorities; (xx) museum and archaeology institutions controlled or financed by the State, ancient and historical monuments and records other than those declared by or under any law made by Parliament to be of national importance; (xxi) panchayat and rural development; (xxii) planning and development; (xxiii) printing and stationery; (xxiv) public health engineering; (xxv) public works department; (xxvi) publicity and public relations; (xxvii) registration of births and deaths; (xxviii) relief and rehabilitation; (xxix) sericulture; (xxx) small, cottage and rural industry subject to the provisions of entries 7 and 52 of List I of the Seventh Schedule; (xxxi) social Welfare; (xxxii) soil conservation; (xxxiii) sports and youth welfare; (xxxiv) statistics; (xxxv) tourism; (xxxvi) transport (roads, bridges, ferries and other means of communications not specified in List I of the Seventh Schedule, municipal tramways, ropeways, inland waterways and traffic thereon subject to the provision of List I and List III of the Seventh Schedule with regard to such waterways, vehicles other than mechanically propelled vehicles);

(ஊ) மீனளங்கள்;

(எ) நீர், அதாவது, ஏழாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பட்டியலிலுள்ள 56 ஆம் பதிவிலுள்ள வகையங்களுக்கு உட்பட்டு, நீர்வழங்குதல், நீர்ப்பாசனம், கால்வாய்கள், வடிகாலும், கரையணைகளும், நீர்த்தேக்கங்கள், புனல்மின்ஆற்றல் ஆகியவை;

(ஏ) சமூகப் பாதுகாப்பு மற்றும் சமூகக் காப்பீடு; வேலைவாய்ப்பு மற்றும் வேலையின்மை;

(ஐ) ஊர்கள், நெல் வயல்கள், அங்காடிகள், நகரங்கள் முதலானவற்றைப் பாதுகாப்பதற்கான (தொழில் நுட்பத்தன்மையல்லாத) வெள்ளக்கட்டுப்பாட்டு திட்டங்கள்;

(ஒ) காட்சியரங்கு மற்றும் நாடக நிகழ்ச்சிகள், ஏழாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பட்டியலின் 60 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டு, திரையரங்குகள், விளையாட்டுகள், கேளிக்கைகள், பொழுதுபோக்குகள்;

(ஓ) பொதுநலம் மற்றும் துப்புரவு, மருத்துவமனைகள், மருத்துவ இல்லங்கள்;

(ஔ) குறுநீர்ப்பாசனம்;

(க) உணவுப்பொருட்கள், கால்நடைத்தீவனம், பண்படுத்தப்படாத பஞ்சு, பண்படுத்தப்படாத சணல் போன்றவற்றை உற்பத்தி செய்தல், வழங்குதல் மற்றும் பங்கீடு செய்தல்; மேலும் இவற்றில் வணிகம் மற்றும் வாணிபம்;

(ங) மாநிலத்தின் கட்டாள்கையிலுள்ள அல்லது மாநிலத்தின் நிதி உதவி பெறுகிற நூலகங்கள், அருங்காட்சியகங்கள் மற்றும் இவைபன்ன பிற நிறுவனங்கள்; தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை என நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ விளம்பப்படுபவை நீங்கலாக, தொன்மையுடையவை, வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த பிற நினைவுச் சின்னங்கள்; மற்றும்

(ச) நிலத்தை மாற்றாக்கம் செய்தல்

ஆகியவை பொறுத்துச் சட்டங்கள் இயற்றுவதற்கு அதிகாரம் கொண்டிருக்கும்.

(2) வடக்குக் கச்சார் தன்னாட்சி மன்றத்தாலும் கர்பி ஆங்கலாங்கு தன்னாட்சி மன்றத்தாலும் 3 ஆம் பத்தியின்படி அல்லது இந்தப் பத்தியின்படி வகுக்கப்பட்ட விதிகள் அனைத்தும் ஏழாம் இணைப்புப்பட்டியலின் III ஆம் பட்டியலில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளுக்கு அவை எந்த அளவுக்குத் தொடர்புடையதாக இருக்குமோ அந்த அளவுக்கு, ஆளுநரிடம் உடனடியாகப் பணிந்தனுப்பப்படுதல் வேண்டும், அவர் அதைக் குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக அனுப்பி வைத்தல் வேண்டும்.

(3) அந்தச் சட்டம் குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கி வைக்கப்படும் போது, மேற்சொன்ன சட்டத்திற்குத் தான் இசைவளிப்பதாக அல்லது இசைவளிப்பதை நிறுத்தி வைப்பதாகக் குடியரசுத்தலைவர் விளம்புதல் வேண்டும்:

**வரம்புரையாக** : குடியரசுத்தலைவர், வடக்கு கச்சார் குன்றுகள் தன்னாட்சி மன்றம் அல்லது, நேர்வுக்கேற்ப, கர்பி–ஆங்கலாங்கு தன்னாட்சி மன்றத்திற்கு அந்தச் சட்டத்தைத் திருப்பியனுப்புமாறு, மேற்சொன்ன மன்றம் அந்தச் சட்டத்தை அல்லது அதன் குறித்துரைக்கப்பட்ட வகையங்களுள் எவற்றையும் ஓர்வு செய்தல் வேண்டும் என்ற செய்தியுரை சேர்த்து ஆளுநரைப் பணிக்கலாம் மற்றும் குறிப்பாக அந்தச் செய்தியுரையில் அவர் பரிந்துரை செய்யலாகும் திருத்தங்கள் எவற்றையும் கொணரும் விருப்பத்தினை ஓர்வு செய்யுமாறும் அந்தச் சட்டம் திருப்பியனுப்பப்படும்போது மேற்சொன்ன மன்றம், அந்தத் செய்தியுரையை அவர் பெற்ற தேதியிலிருந்து ஆறுமாதக் காலஅளவிற்குள் அதற்கேற்ப அந்தச் சட்டத்தை ஓர்வு செய்தல் வேண்டும் மற்றும் திருத்தத்துடனோ, திருத்தமின்றியோ அந்த மேற்சொன்ன மன்றத்தால் அந்தச் சட்டம் மீண்டும் பிறப்பிக்கப்பட்டால், அது மீண்டும் ஓர்வுக்காக குடியரசுத்தலைவருக்குப் பணிந்தனுப்பப்படுதல் வேண்டும்."

6. 3 (அ) பத்திக்கு பின்பு, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், பின்வரும் பத்தியைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:–

**"3 (ஆ). சட்டங்களியற்றுவதற்கு போடோலாந்து ஆட்சிநிலவரை மன்றத்திற்குள்ள கூடுதல் அதிகாரங்கள்** :

(1). 3 ஆம் பத்தியின் வகையங்களுக்குக் குந்தகமின்றி, போடோலாந்து ஆட்சிநிலவரை மன்றம், அதன் வரையிடங்களுக்குள், பின்வருவன குறித்து சட்டங்களியற்ற அதிகாரம் உடையது ஆகும்:—

(i) வேளாண்மை, வேளாண் கல்வி மற்றும் ஆராய்ச்சி, பயிர்கொல்லிகளுக்கு எதிரான பாதுகாப்பு, பயிர் நோய்த் தடுப்பு உள்ளடங்கலாக; (ii) கால்நடைப் பேணுகை மற்றும் கால்நடை மருத்துவம், அதாவது, கால்நடைகளைப் பேணுதல், பாதுகாத்தல், பெருக்குதல் மற்றும் விலங்கு நோய்த்தடுப்பு, விலங்கின மருத்துவப் பயிற்சியும் தொழிலும், கால்நடைத் தொழுவங்கள்; (iii) கூட்டுறவு; (iv) பண்பாடு பற்றிய பொருட்பாடுகள்; (v) கல்வி, அதாவது தொடக்கக்கல்வி, உறுதொழில் பயிற்சி உள்ளடங்கலாக மேல்நிலை கல்வி, முதியோர் கல்வி, கல்லூரிக்கல்வி (பொது); (vi) மீனளங்கள்; (vii) ஊர், நெல் வயல்கள், அங்காடிகள், நகரங்கள் முதலானவற்றைப் பாதுகாப்பதற்காக (தொழில் நுட்பத்தன்மையதல்லாத) வெள்ளத்தைக் கட்டுப்படுத்துதல்; (viii) உணவு மற்றும் குடிமை நுகர்பொருள்கள் வழங்கல்; (ix) காடுகள் (காப்புக் காடுகள் அல்லாதவை); (x) கைத்தறி மற்றும் நெசவங்கள்; (xi) நலவாழ்வு மற்றும் குடும்ப நல்வாழ்வு; (xii) வெறியூட்டும் மதுக்குடிவகைகள், அபின் மற்றும் ஏழாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பட்டியலின் 84 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டு வழிப் பொருள்கள்; (xiii) பாசனம்; (xiv) தொழிலாளர் மற்றும் வேலைவாய்ப்பு; (xv) நிலம் மற்றும் வருவாய்; (xvi) நூலகப் பணிகள் (மாநில அரசினால் நிதியுதவியளிக்கப்பட்டு கட்டாள்கை செய்யப்படுபவை); (xvii) பரிசுச் சீட்டுகள் (ஏழாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பட்டியலின் 40 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டவை); காட்சி அரங்குகளும், நாடக நிகழ்ச்சிகளும், மற்றும் திரையரங்குகள் (ஏழாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பட்டியலின் 60 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டவை;) (xviii) அங்காடிகளும், சந்தைகளும்; (xix) மாநகராட்சி, மேம்பாட்டுப் பொறுப்பமைவுகள், மாவட்டக் கழகங்கள் மற்றும் பிற உள்ளாட்சி அதிகார அமைப்புகள்; (xx) அருங்காட்சியகம் மற்றும் மாநிலத்தினால் கட்டாள்கை செய்யப்படும் அல்லது நிதியுதவியளிக்கப்படும், தொல்பொருளாய்வு அமைவனங்கள், தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவையென நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ விளம்பப்படுபவை அல்லாத பிற தொன்மையும் வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்த நினைவுச் சின்னங்களும் பதிவணங்களும்; (xxi) ஊராட்சி மற்றும் ஊரக வளர்ச்சி; (xxii) திட்டமிடுதல் மற்றும் வளர்ச்சி; (xxiii) அச்சகம் மற்றும் எழுதுபொருள்; (xxiv) மக்கள் நல்வாழ்வு கட்டமைப்பு; (xxv) பொதுப்பணித்துறை; (xxvi) விளம்பரம் மற்றும் மக்கள் தொடர்பு; (xxvii) பிறப்புகள் மற்றும் இறப்புகள் பதிவு செய்தல்; (xxviii) தீருதவி மற்றும் மறுவாழ்வளிப்பு; (xxix) பட்டுப்புழு வளர்ப்பு; (xxx) ஏழாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பட்டியலின் 7, 52 ஆகிய பதிவுகளின் வகையங்களுக்கு உட்பட்ட சிறு, குடிசை மற்றும் ஊரகத் தொழில்; (xxxi) சமூக நலன்; (xxxii) மண் வளப்பாதுகாப்பு; (xxxiii) விளையாட்டுகள் மற்றும் இளைஞர் நலன்; (xxxiv) புள்ளிவிவரங்கள்; (xxxv) சுற்றுலா; (xxxvi) ஏழாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பட்டியலில் குறித்துரைக்கப்பட்டிராத சாலைகள், பாலங்கள், தோணித்துறைகள் மற்றும் பிற போக்குவரவு இணைவங்கள், நகராட்சிக் காந்தவண்டிப் பாதைகள், கம்பிவடப்பாதைகள், உள்நாட்டு நீர்வழிகள் மற்றும் அத்தகைய நீர்வழிகள், எந்திரத்தால் உந்தப்படும் ஊர்திகள் அல்லாத பிற ஊர்திகள் குறித்து ஏழாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பட்டியல் மற்றும் III ஆம் பட்டியலின் வகையத்திற்கு உட்பட்டு அதன்மீதான போக்குவரத்து);

(xxxvii) tribal research institute controlled and financed by the State Government; (xxxviii) urban development—town and country planning; (xxxix) weights and measures subject to the provisions of entry 50 of List I of the Seventh Schedule; and (xl) Welfare of plain tribes and backward classes:

Provided that nothing in such laws shall—

(a) extinguish or modify the existing rights and privileges of any citizen in respect of his land at the date of commencement of this Act; and

(b) disallow any citizen from acquiring land either by way of inheritance, allotment, settlement or by any other way of transfer if such citizen is otherwise eligible for such acquisition of land within the Bodoland Territorial Areas District.

(2) All laws made under paragraph 3 or under this paragraph shall in so far as they relate to matters specified in List III of the Seventh Schedule, be submitted forthwith to the Governor who shall reserve the same for the consideration of the President.

(3) When a law is reserved for the consideration of the President, the President shall declare either that he assents to the said law or that he withholds assent therefrom:

Provided that the President may direct the Governor to return the law to the Bodoland Territorial Council, together with the message requesting that the said Council will reconsider the law or any specified provisions thereof and, in particular, will consider the desirability of introducing any such amendments as he may recommend in his message and, when the law is so returned, the said Council shall consider the law accordingly within a period of six months from the date of receipt of such message and, if the law is again passed by the said Council with or without amendments it shall be presented again to the President for his consideration.".

(xxxvii) மாநில அரசினால் கட்டாள்கை செய்யப்படுவதும் நிதியுதவியளிக்கப்படுவதுமான பழங்குடியினர் ஆராய்ச்சி நிறுவனம்; (xxxviii) நகர வளர்ச்சி, நகர்ப்புற மற்றும் ஊரக திட்டமிடுதல்: (xxxix) ஏழாம் இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பட்டியலின் 50 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்ட எடைகள் மற்றும் அளவுகள்; மற்றும்; (xl) சமவெளிப் பழங்குடியினர் மற்றும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் நலவாழ்வு :

**வரம்புரையாக** : அத்தகைய சட்டங்களிலுள்ள எதுவும்—

(அ) இந்தச் சட்டத்தின் தொடக்கத் தேதியில் குடிமகன் ஒருவரின், அவரது நிலம் பொறுத்து, நிலவுறும் உரிமைகளையும், மதிப்புரிமைகளையும் ஒழித்துவிடுதலோ மாற்றிவிடுதலோ ஆகாது; மற்றும்

(ஆ) மரபு வழியுரிமை, ஒதுக்கீடு, அறுதிசெய்தல் வாயிலாகவோ அல்லது வேறு ஏதேனும் உரிமை மாற்றம் வாயிலாகவோ குடிமகன் ஒருவரை, அந்தக் குடிமகன், போடோலாந்து ஆட்சி நிலவரை வரையிடங்கள் மாவட்டத்திற்குள், அத்தகைய நிலக்கையகப்படுத்துதலுக்குப் பிறவாறாக தகுமையுடையவராயின், நிலத்தைக் கையகப்படுத்துவதற்கு குடிமகன் எவருக்கும் அனுமதியளிக்க மறுக்காது.

(2). 3 ஆம் பத்தியின்படியோ, இந்த பத்தியின்படியோ இயற்றப்படும் அனைத்து சட்டங்களும், அவை ஏழாம் இணைப்புப்பட்டியலின் III ஆம் பட்டியலில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளுக்குத் தொடர்புடையதாக இருக்கிறவிடத்து, உடனடியாக, ஆளுநருக்கு அனுப்பி வைக்கப்படுதல் வேண்டும்; அவர் அதனை குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கி வைப்பார்.

(3) சட்டம் ஒன்று, குடியரசுத்தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பதன் பேரில் குடியரசுத்தலைவர், தாம் மேற்சொன்ன சட்டத்துக்கு ஏற்பிசைவு அளிப்பதாகவோ அதற்கு ஏற்பிசைவு அளிப்பதை நிறுத்திவைப்பதாகவோ விளம்புவார்:

**வரம்புரையாக** : அச்சட்டத்தையோ அதனின் குறித்துரைக்கப்பட்ட வகையங்களில் எவற்றையுமோ, போடோலாந்து ஆட்சிநிலவரை மன்றம் மறுஓர்வு செய்யுமாறும், குறிப்பாக தாம் பரிந்துரைக்கும் திருத்தங்கள் எவற்றையும் அறிமுகப்படுத்துவது விரும்பத்தகுந்ததா என்பதைக் குறித்து ஓர்வு செய்யுமாறும் கேட்டுக்கொள்கின்ற செய்தியுரையுடன், அச்சட்டத்தை, அந்த மன்றத்துக்குத் திருப்பியனுப்பிவைக்குமாறு குடியரசுத்தலைவர் ஆளுநரைப் பணிக்கலாம்; அவ்வாறு ஒரு சட்டம் திருப்பியனுப்பப்பட்டிருக்கும்போது, மேற்சொன்ன மன்றம், அதன்படியே, அந்தச் செய்தியுரை கிடைக்கப் பெற்ற தேதியிலிருந்து ஆறுமாதக் காலஅளவுக்குள் ஓர்வு செய்தல் வேண்டும்; மேலும், மேற்சொன்ன மன்றத்தில் அச்சட்டம், திருத்தத்துடனோ திருத்தமின்றியோ மீண்டும் நிறைவேற்றப்படுமாயின் மீண்டும் குடியரசுத்தலைவரிடம் அவரது ஏற்பிசைவுக்காக முன்னிடப்படுதல் வேண்டும்.".

(a) the allotment, occupation or use, or the setting apart, of land, other than any land which is a reserved forest for the purposes of agriculture or grazing or for residential or other non-agricultural purposes or for any other purpose likely to promote the interests of the inhabitants of any village or town:

Provided that nothing in such laws shall prevent the compulsory acquisition of any land, whether occupied or unoccupied, for public purposes [1][by the Government of the State concerned] in accordance with the law for the time being in force authorising such acquisition;

(b) the management of any forest not being a reserved forest;

(c) the use of any canal or water-course for the purpose of agriculture;

(d) the regulation of the practice of *jhum* or other forms of shifting cultivation;

(e) the establishment of village or town committees or councils and their powers;

(f) any other matter relating to village or town administration, including village or town police and public health and sanitation;

(g) the appointment or succession of Chiefs or Headmen;

(h) the inheritance of property;

[2][(i) marriage and divorce;]

(j) social customs.

(2) In this paragraph, a "reserved forest" means any area which is a reserved forest under the Assam Forest Regulation, 1891, or under any other law for the time being in force in the area in question.

(3) All laws made under this paragraph shall be submitted forthwith to the Governor and, until assented to by him, shall have no effect.

---

1. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch., for certain words (w.e.f. 21-1-1972).

2. Subs. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch., for cl. (1) (w.e.f. 2-4-1970).

(அ) வேளாண்மை அல்லது மேய்ச்சல் அல்லது குடியிருப்பு நோக்கங்களுக்காகவோ வேளாண்மையல்லாத பிற நோக்கங்களுக்காகவோ, ஊர் அல்லது நகரம் எதிலும் வாழ்வோரின் நலன்களை மேம்படுத்தக்கூடிய பிற நோக்கம் எதற்காகவோ, காப்புக்காட்டு நிலமில்லாத பிற நிலம் எதனையும் பகிர்ந்து ஒதுக்குதல், கையடைவு கொள்ளுதல் அல்லது பயன்படுத்துதல் அல்லது ஒதுக்கிவைத்தல்:

**வரம்புரையாக :** அத்தகைய சட்டங்களிலுள்ள எதுவும், கையடைவிலுள்ளதாகவோ கையடைவிலில்லாததாகவோ உள்ள நிலம் எதனையும், பொது நோக்கங்களுக்கெனக் கட்டாயமாகக் கையகப்படுத்துவதற்கு அதிகாரமளிக்கும் அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டத்திற்கு இணங்கத் [1][தொடர்புடைய மாநில அரசால்,] அவ்வாறு கையகப்படுத்துவதற்குத் தடையூறு ஆவதில்லை ;

(ஆ) காப்புக் காடாக இல்லாத காடு எதனின் மேலாண்மை;

(இ) வேளாண்மைக்காகக் கால்வாய் அல்லது நீரோடை எதனின் பயன்பாடு;

(ஈ) *ஜூம்* அல்லது பிற வகை மாற்றுமுறை பயிரிடும் பழக்கத்தை முறைப்படுத்துதல்;

(உ) ஊர் அல்லது நகரக் குழுக்களையோ மன்றங்களையோ நிறுவுதல்; அவற்றின் அதிகாரங்கள்;

(ஊ) ஊர் அல்லது நகரக் காவல்துறை, மக்கள் நல்வாழ்வு, துப்புரவு ஆகியவை உள்ளடங்கலாக, ஊர் அல்லது நகர நிருவாகம் தொடர்பான பிற பொருட்பாடுகள்;

(எ) குடித்தலைவர்களை அல்லது நாட்டாண்மைக்காரர்களை அமர்த்துதல், அவர்கள் வாரிசுரிமை;

(ஏ) சொத்திற்கான மரபுரிமை;

[2][(ஐ) திருமணம் மற்றும் மணமுறிவு;]

(ஒ) சமுதாய வழக்கங்கள்.

(2) இந்தப் பத்தியில், ஒரு "காப்புக் காடு" என்பது, அசாம் காடு ஒழுங்குறுத்தும்விதி, 1891 இன் படியோ அல்லது தொடர்புள்ள வரையிடத்தில் அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள பிற சட்டம் எதனின்படியோ ஒரு காப்புக் காடாக இருக்கிற வரையிடம் என பொருள்படும்.

(3) இந்தப் பத்தியின்படி வகுக்கப்பட்ட சட்டங்கள் அனைத்தும் ஆளுநருக்கு உடனடியாகப் பணிந்தனுப்பப்படுதல் வேண்டும்; மேலும், அவரால் இசைவளிக்கப்படும்வரை செல்திறம் உடையன ஆகாது.

---

1. குறித்தசில சொற்களுக்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

2. (1) ஆம் கூறுக்கு, அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

[1]4. **Administration of justice in autonomous districts and autonomous regions :**

(1) The Regional Council for an autonomous region in respect of areas within such region and the District Council for an autonomous district in respect of areas within the district other than those which are under the authority of the Regional Councils, if any, within the district may constitute village councils or courts for the trial of suits and cases between the parties all of whom belong to Scheduled Tribes within such areas, other than suits and cases to which the provisions of sub-paragraph (1) of paragraph 5 of this Schedule apply, to the exclusion of any court in the State, and may appoint suitable persons to be members of such village councils or presiding officers of such courts, and may also appoint such officers as may be necessary for the administration of the laws made under paragraph 3 of this Schedule.

(2) Notwithstanding anything in this Constitution, the Regional Council for an autonomous region or any court constituted in that behalf by the Regional Council or, if in respect of any area within an autonomous district there is no Regional Council, the District Council for such district, or any court constituted in that behalf by the District Council, shall exercise the powers of a court of appeal in respect of all suits and cases triable by a village council or court constituted under sub-paragraph (1) of this paragraph within such region or area, as the case may be, other than those to which the provisions of sub- paragraph (1) of paragraph 5 of this Schedule apply, and no other court except the High Court and the Supreme Court shall have jurisdiction over such suits or cases.

(3) The High Court [2]*** shall have and exercise such jurisdiction over the suits and cases to which the provisions of sub-paragraph (2) of this paragraph apply as the Governor may from time to time by order specify.

(4) A Regional Council or District Council, as the case may be, may with the previous approval of the Governor make rules regulating—

(a) the constitution of village councils and courts and the powers to be exercised by them under this paragraph;

(b) the procedure to be followed by village councils or courts in the trial of suits and cases under sub- paragraph (1) of this paragraph;

(c) the procedure to be followed by the Regional or District Council or any court constituted by such Council in appeals and other proceedings under sub-paragraph (2) of this paragraph;

---

1. Paragraph 4 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, so as to insert the following sub-paragraph after sub-paragraph (5), namely (w.e.f. 7-9-2003):—

   "(6) Nothing in this paragraph shall apply to the Bodoland Territorial Council constituted under the proviso to sub-paragraph (3) of paragraph 2 of this Schedule."

2. The words "of Assam" omitted by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch. (w.e.f. 21-1-1972).

### [1]4. தன்னாட்சி மாவட்டங்களிலும் தன்னாட்சி வட்டாரங்களிலும் நீதி நிருவாகம் :

(1) ஒரு தன்னாட்சி வட்டாரத்திற்கான வட்டார மன்றம், அத்தகைய வட்டாரத்திற்குள் உள்ள வரையிடங்களைப் பொறுத்தும், ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம், அந்த மாவட்டத்திற்குள் வட்டார மன்றங்கள், எவையேனுமிருப்பின், அவற்றின் அதிகாரத்தின் கீழுள்ள வரையிடங்கள் நீங்கலாக அந்த மாவட்டத்திற்குள் உள்ள பிற வரையிடங்களைப் பொறுத்தும், அத்தகைய வரையிடங்களிலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினர் மட்டுமே தரப்பினர்களாகவுள்ள, இந்த இணைப்புப்பட்டியலின் 5 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின் வகையங்கள் பொருந்தும் உரிமைவழக்குகளும் பிற வழக்குகளும் அல்லாத பிற உரிமைவழக்குகளையும், வழக்குகளையும் விசாரணை செய்வதற்காக, அந்த மாநிலத்திலுள்ள பிற நீதிமன்றங்களை விலக்கும் வகையில் ஊர் மன்றங்களை அல்லது ஊர் நீதிமன்றங்களை அமைக்கலாம்; மற்றும், தக்கவர்களை அத்தகைய ஊர் மன்றங்களின் உறுப்பினர்களாகவோ அத்தகைய நீதிமன்றங்களுக்கு தலைமை வகிக்கும் அலுவலர்களாகவோ அமர்த்தலாம்; மேலும், இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தியின்படி இயற்றப்பட்ட சட்டங்களை நிருவகிப்பதற்குத் தேவைப்படும் அலுவலர்களையும் அமர்த்தலாம்.

(2) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், ஒரு தன்னாட்சி வட்டாரத்திற்கான வட்டார மன்றமோ வட்டார மன்றத்தால் அதற்கென அமைக்கப்பட்ட நீதிமன்றமோ, ஒரு தன்னாட்சி மாவட்டத்திலுள்ள வரையிடம் எதற்கும் ஒரு வட்டார மன்றம் இல்லாதிருப்பின், அத்தகைய மாவட்டத்திற்கான மாவட்ட மன்றமோ, மாவட்ட மன்றத்தால் அதற்கென அமைக்கப்பட்ட நீதிமன்றமோ, இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி அத்தகைய வட்டாரத்திற்குள், அல்லது நேர்வுக்கேற்ப, வரையிடத்திற்குள் அமைக்கப்பட்ட ஊர் மன்றம் அல்லது ஊர் நீதிமன்றம் ஒன்றினால் விசாரணை செய்யத் தகுவதான, ஆனால், இந்த இணைப்புப்பட்டியலின் 5 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின் வகையங்கள் பொருந்துவனவாக அல்லாத உரிமைவழக்குகள், வழக்குகள் அனைத்தையும் பொறுத்து, ஒரு மேல்முறையீட்டு நீதிமன்றத்தின் அதிகாரங்களைச் செலுத்தி வரும்; மேலும், அத்தகைய உரிமைவழக்குகள் அல்லது வழக்குகள் பொறுத்து, உயர் நீதிமன்றமும் உச்ச நீதிமன்றமும் தவிர, பிற நீதிமன்றம் எதுவும் அதிகாரம் உடையது ஆகாது.

(3) [2]*** உயர் நீதிமன்றம் இந்தப் பத்தியின் (2) ஆம் உள்பத்தியின் வகையங்கள் பொருந்துகிற உரிமைவழக்குகளின் மீதும் பிற வழக்குகளின் மீதும், ஆளுநர், அவ்வப்போது ஆணையின் வழிக் குறித்துரைக்கும் அத்தகைய அதிகாரவரம்பினைக் கொண்டதாகி, அதனைச் செலுத்திவரும்.

(4) ஒரு வட்டார மன்றம் அல்லது, நேர்வுக்கேற்ப, மாவட்ட மன்றம், ஆளுநரின் முன் ஒப்பேற்புடன், பின்வருவனவற்றை ஒழுங்குறுத்துவதற்கான விதிகளைச் செய்யலாம்:—

(அ) ஊர் மன்றங்களையும் ஊர் நீதிமன்றங்களையும் அமைத்தல்; இந்தப் பத்தியின்படி அவற்றால் செலுத்தப்படவேண்டிய அதிகாரங்கள்;

(ஆ) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி, உரிமைவழக்குகளையும் பிற வழக்குகளையும் விசாரணை செய்கையில் ஊர் மன்றங்களாலும் ஊர் நீதிமன்றங்களாலும் பின்பற்றப்பட வேண்டிய நெறிமுறை;

(இ) இந்தப் பத்தியின் (2) ஆம் உள்பத்தியின்படி மேல்முறையீடுகளிலும் பிற நடவடிக்கைகளிலும், வட்டார மன்றத்தால் அல்லது மாவட்ட மன்றத்தால் அல்லது அத்தகைய மன்றத்தால் அமைக்கப்படும் நீதிமன்றம் எதனாலும் பின்பற்றப்பட வேண்டிய நெறிமுறை;

---

1. 4 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், (5) ஆம் உள்பத்திக்குப் பின்பு பின்வரும் உள்பத்தியைப் புகுத்துமாறு (7–9–2003 முதல் செல்திறம் பெறுமாறு) திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:–

"(6) இந்தப் பத்தியிலுள்ள எதுவும், இந்த இணைப்புப்பட்டியலின் 2 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தியின் வரம்புரையின்படி அமைக்கப்பட்ட போடோலாந்து ஆட்சிநிலவரை மன்றத்திற்குப் பொருந்தாது."

2. "அசாமின்" என்ற சொல், வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

(d) the enforcement of decisions and orders of such councils and courts;

(e) all other ancillary matters for the carrying out of the provisions of sub-paragraphs (1) and (2) of this paragraph.

[1][(5) On and from such date as the President may, [2][after consulting the Government of the State concerned], by notification appoint in this behalf, this paragraph shall have effect in relation to such autonomous district or region as may be specified in the notification, as if—

(i) in sub-paragraph (1), for the words "between the parties all of whom belong to Scheduled Tribes within such areas, other than suits and cases to which the provisions of sub-paragraph (1) of paragraph 5 of this Schedule apply,", the words "not being suits and cases of the nature referred to in sub-paragraph (1) of paragraph (5) of this Schedule, which the Governor may specify in this behalf," had been substituted;

(ii) sub-paragraphs (2) and (3) had been omitted;

(iii) in sub-paragraph (4)—

(a) for the words "A Regional Council or District Council, as the case may be, may with the previous approval of the Governor make rules regulating", the words "the Governor may make rules regulating" had been substituted; and

(b) for clause (a), the following clause had been substituted, namely:—

"(a) the constitution of village councils and courts, the powers to be exercised by them under this paragraph and the courts to which appeals from the decisions of village councils and courts shall lie;";

(c) for clause (c), the following clause had been substituted, namely:—

"(c) the transfer of appeals and other proceedings pending before the Regional or District Council or any court constituted by such Council immediately before the date appointed by the President under sub-paragraph (5);"; and

(d) in clause (e), for the words, brackets and figures "sub-paragraphs (1) and (2)", the word, brackets and figure "sub-paragraph (1)" had been substituted.]

---

1. Ins. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch. (w.e.f. 2-4-1970).

2. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch., for certain words (w.e.f. 21-1-1972).

(ஈ) அத்தகைய மன்றங்கள், நீதிமன்றங்கள் ஆகியவற்றின் முடிபுகளையும் ஆணைகளையும் செயல்படுத்துதல்;

(உ) இந்தப் பத்தியின் (1), (2) ஆகிய உள்பத்திகளின் வகையங்களை நிறைவேற்றுவதற்காக உள்ள பிற சார்வுறு பொருட்பாடுகள் அனைத்தும்.

[1][(5) குடியரசுத்தலைவர், [2][தொடர்புடைய மாநில அரசினைக் கலந்தாய்வு செய்தபின்பு,] அறிவிக்கையின் வாயிலாக இதற்கெனக் குறித்திடும் தேதியன்றும் அது முதற்கொண்டும், இந்தப் பத்தி, அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்படும் தன்னாட்சி மாவட்டம் அல்லது வட்டாரம் தொடர்பாக—

(i). (1) ஆம் உள்பத்தியில் "அத்தகைய வரையிடங்களிலுள்ள பட்டியலில்கண்ட பழங்குடியினர் மட்டுமே தரப்பினர்களாகவுள்ள, இந்த இணைப்புப்பட்டியலின் 5 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின் வகையங்கள் பொருந்தும் உரிமைவழக்குகளும் பிற வழக்குகளும் அல்லாத" என்னும் சொற்களுக்கு மாற்றாக, "ஆளுநர் இதற்கெனக் குறித்துரைக்கும் இந்த இணைப்புப்பட்டியலின் 5 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் சுட்டப்பட்டுள்ளவை போல்வதான தன்மையுடைய உரிமைவழக்குகளும் பிற வழக்குகளும் அல்லாத" என்னும் சொற்கள் அமைக்கப்பட்டிருந்தாற் போன்றும்;

(ii). (2), (3) ஆகிய உள்பத்திகள் விட்டுவிடப்பட்டிருந்தாற் போன்றும்;

(iii). (4) ஆம் உள்பத்தியில்—

(அ) "ஒரு வட்டார மன்றம் அல்லது, நேர்வுக்கேற்ப, மாவட்ட மன்றம் ஆளுநரின் முன் ஒப்பேற்புடன் பின்வருவனவற்றை ஒழுங்குறுத்துவதற்கான விதிகளைச் செய்யலாம்" என்னும் சொற்களுக்கு மாற்றாக, "ஆளுநர் பின்வருவனவற்றை ஒழுங்குறுத்துவதற்கான விதிகளைச் செய்யலாம்" என்னும் சொற்கள் அமைக்கப்பட்டிருந்தாற் போன்றும்;

(ஆ). (அ) கூறுக்கு மாற்றாகப் பின்வரும் கூறு, அதாவது:—

"(அ) ஊர் மன்றங்களையும் ஊர் நீதிமன்றங்களையும் அமைத்தல் இந்தப் பத்தியின்படி அவற்றால் செலுத்தப்பட வேண்டிய அதிகாரங்கள்; மேலும், ஊர் மன்றங்கள், ஊர் நீதிமன்றங்கள் ஆகியவற்றின் முடிபுகளிலிருந்து செய்து கொள்ளப்படும் மேல்முறையீடுகளுக்கான நீதிமன்றங்கள்"

என்னும் கூறு அமைக்கப்பட்டிருந்தாற் போன்றும்;";

(இ). (இ) கூறுக்கு மாற்றாகப் பின்வரும் கூறு, அதாவது:—

"(இ). (5) ஆம் உள்பத்தியின்படி குடியரசுத்தலைவரால் குறித்திட்ட தேதிக்கு உடன்முன்பு வட்டார அல்லது மாவட்ட மன்றத்தின் முன்பு, அல்லது அத்தகைய மன்றத்தினால் அமைக்கப்பட்ட பிற நீதிமன்றம் எதன் முன்பும் முடிவுறாநிலையிலுள்ள மேல்முறையீடுகளையும் பிற நடவடிக்கைகளையும் மாற்றல் செய்தல்"

என்னும் கூறு அமைக்கப்பட்டிருந்தாற் போன்றும்;"; மற்றும்

(ஈ). (உ) கூறில், "(1), (2) ஆகிய உள்பத்திகளின்" என்னும் சொற்களுக்கும் அடைப்புக்குறிகளுக்கும் எண்களுக்கும் மாற்றாக, "(1) ஆம் உள்பத்தியின்" என்னும் சொல்லும் அடைப்புக்குறிகளும் எண்ணும் அமைக்கப்பட்டிருந்தாற்போன்றும்

செல்திறம் பெறும்.]

1. அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. குறித்தசில சொற்களுக்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

**5. Conferment of powers under the Code of Civil Procedure, 1908, and the Code of Criminal Procedure, 1898[1], on the Regional and District Councils and on certain courts and officers for the trial of certain suits, cases and offences :**

(1) The Governor may, for the trial of suits or cases arising out of any law in force in any autonomous district or region being a law specified in that behalf by the Governor, or for the trial of offences punishable with death, transportation for life, or imprisonment for a term of not less than five years under the Indian Penal Code or under any other law for the time being applicable to such district or region, confer on the District Council or the Regional Council having authority over such district or region or on courts constituted by such District Council or on any officer appointed in that behalf by the Governor, such powers under the Code of Civil Procedure, 1908, or, as the case may be, the Code of Criminal Procedure, 1898[1], as he deems appropriate, and thereupon the said Council, court or officer shall try the suits, cases or offences in exercise of the powers so conferred.

(2) The Governor may withdraw or modify any of the powers conferred on a District Council, Regional Council, court or officer under sub-paragraph (1) of this paragraph.

(3) Save as expressly provided in this paragraph, the Code of Civil Procedure, 1908, and the Code of Criminal Procedure, 1898[1], shall not apply to the trial of any suits, cases or offences in an autonomous district or in any autonomous region to which the provisions of this paragraph apply.

[2][(4) On and from the date appointed by the President under sub-paragraph (5) of paragraph 4 in relation to any autonomous district or autonomous region, nothing contained in this paragraph shall, in its application to that district or region, be deemed to authorise the Governor to confer on the District Council or Regional Council or on courts constituted by the District Council any of the powers referred to in sub- paragraph (1) of this paragraph.]

---

1. See the Code of Criminal Procedure, 1973 (2 of 1974).
2. Ins. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch. (w.e.f. 2-4-1970).

**5. உரிமையியல் விசாரணைமுறைச் சட்டத்தொகுப்பு, 1908, குற்றவியல் விசாரணைமுறைச் சட்டத்தொகுப்பு, 1898[1] ஆகியவற்றின்படி குறித்த சில உரிமைவழக்குகளையும் பிற வழக்குகளையும் குற்றச்செயல்களையும் விசாரிப்பதற்காக வட்டார மற்றும் மாவட்ட மன்றங்களுக்கும் குறித்தசில நீதிமன்றங்களுக்கும் அலுவலர்களுக்கும் அதிகாரங்கள் வழங்குதல் :**

(1) ஒரு தன்னாட்சி மாவட்டம் அல்லது வட்டாரம் எதிலும் செல்லாற்றலிலுள்ளதும், ஆளுநரால் இதற்கெனக் குறித்துரைக்கப்பட்டுள்ளதுமான சட்டம் எதிலிருந்தும் எழுகின்ற உரிமைவழக்குகளை அல்லது பிற வழக்குகளை விசாரிப்பதற்காக அல்லது இந்தியத் தண்டனைச் சட்டத்தொகுப்பின்படி அல்லது அத்தகைய மாவட்டத்திற்கு அல்லது வட்டாரத்திற்கு அப்போதைக்குப் பொருந்தும் பிறிதொரு சட்டத்தின்படி மரண தண்டனை, ஆயுள் தண்டனை அல்லது ஐந்தாண்டுக் காலத்திற்குக் குறையாத சிறைத் தண்டனை விதித்துத் தண்டிக்கப்படுவதாகும் குற்றச்செயல்களைப் பற்றி விசாரிப்பதற்காக அல்லது அத்தகைய மாவட்டத்தின் அல்லது வட்டாரத்தின் மீது அதிகாரம் உடைய மாவட்ட மன்றத்திற்கோ வட்டார மன்றத்திற்கோ அத்தகைய மாவட்ட மன்றத்தால் அமைக்கப்பட்ட நீதிமன்றங்களுக்கோ ஆளுநரால் அமர்த்தப்பெற்ற அலுவலருக்கோ, ஆளுநர், உரிமையியல் விசாரணைமுறைச் சட்டத்தொகுப்பு, 1908 இன் அல்லது நேர்வுக்கேற்ப, குற்றவியல் விசாரணைமுறைச் சட்டத்தொகுப்பு, 1898[1] இன்படி உள்ள அதிகாரங்களில் தாம் பொருத்தமாகுமெனக் கொள்ளுகிறவற்றை வழங்கலாம்; அதன் மேல், அந்த மன்றம், நீதிமன்றம் அல்லது அலுவலர், அவ்வாறு வழங்கப்பட்ட அதிகாரங்களைச் செலுத்தி அந்த உரிமைவழக்குகளை, பிற வழக்குகளை, அல்லது குற்றச்செயல்களை விசாரணை செய்தல் வேண்டும்.

(2) மாவட்ட மன்றத்திற்கோ வட்டார மன்றத்திற்கோ நீதிமன்றத்திற்கோ அலுவலருக்கோ இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி வழங்கப்பட்ட அதிகாரங்களில் எதனையும், ஆளுநர் விலக்கிக்கொள்ளலாம் அல்லது மாற்றமைவு செய்யலாம்.

(3) இந்தப் பத்தியில் தெளிவுற வகைசெய்யப்பட்டவாறல்லாமல், இந்தப் பத்தியின் வகையங்கள் பொருந்துகிற தன்னாட்சி மாவட்டம் ஒன்றில் அல்லது தன்னாட்சி வட்டாரம் எதிலுமுள்ள உரிமைவழக்குகள், பிற வழக்குகள் அல்லது குற்றச்செயல்கள் எவற்றையும் விசாரணை செய்வதற்கு, உரிமையியல் விசாரணைமுறைச் சட்டத்தொகுப்பு, 1908 இம், குற்றவியல் விசாரணைமுறைச் சட்டத்தொகுப்பு 1898[1] இம் பொருந்துவதில்லை.

[2][(4) தன்னாட்சி மாவட்டம் அல்லது தன்னாட்சி வட்டாரம் எதன் தொடர்பாகவும், 4 ஆம் பத்தியின் (5) ஆம் உள்பத்தியின்படி குடியரசுத்தலைவர் குறித்திட்ட தேதியன்றும் அது முதற்கொண்டும், இந்தப் பத்தியில் அடங்கியுள்ள எதுவும், அந்த மாவட்டத்திற்கோ வட்டாரத்திற்கோ பொருந்துகையில், மாவட்ட மன்றத்திற்கோ வட்டார மன்றத்திற்கோ மாவட்ட மன்றத்தினால் அமைக்கப்பட்ட நீதிமன்றங்களுக்கோ இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் சுட்டப்பட்டுள்ள அதிகாரங்களில் எதனையும் வழங்க ஆளுநருக்கு அதிகாரமளிப்பதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.]

---

1. குற்றவியல் விசாரணைமுறைச் சட்டத் தொகுப்பு, 1973, (2/1974)ஐ காண்க.
2. அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969), இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

[1][6. **Powers of the District Council to establish primary schools, etc :**

(1) The District Council for an autonomous district may establish, construct, or manage primary schools, dispensaries, markets, [2][cattle pounds], ferries, fisheries, roads, road transport and waterways in the district and may, with the previous approval of the Governor, make regulations for the regulation and control thereof and, in particular, may prescribe the language and the manner in which primary education shall be imparted in the primary schools in the district.

(2) The Governor may, with the consent of any District Council, entrust either conditionally or unconditionally to that Council or to its officers functions in relation to agriculture, animal husbandry, community projects, co-operative societies, social welfare, village planning or any other matter to which the executive power of the State [3]*** extends.]

**7. District and Regional Funds :**

(1) There shall be constituted for each autonomous district, a District Fund and for each autonomous region, a Regional Fund to which shall be credited all moneys received respectively by the District Council for that district and the Regional Council for that region in the course of the administration of such district or region, as the case may be, in accordance with the provisions of this Constitution.

[4][(2) The Governor may make rules for the management of the District Fund, or, as the case may be, the Regional Fund and for the procedure to be followed in respect of payment of money into the said Fund, the withdrawal of moneys therefrom, the custody of moneys therein and any other matter connected with or ancillary to the matters aforesaid.

(3) The accounts of the District Council or, as the case may be, the Regional Council shall be kept in such form as the Comptroller and Auditor-General of India may, with the approval of the President, prescribe.

(4) The Comptroller and Auditor-General shall cause the accounts of the District and Regional Councils to be audited in such manner as he may think fit, and the reports of the Comptroller and Auditor- General relating to such accounts shall be submitted to the Governor who shall cause them to be laid before the Council.]

---

1. Subs. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch., for paragraph 6 (w.e.f.2-4-1970).
2. Subs. by the Repealing and Amending Act, 1974 (56 of 1974), s. 4, for "cattle ponds" (w.e.f. 20-12-1974).
3. The words "of Assam or Meghalaya, as the case may be" omitted by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch. (w.e.f. 21-1-1972).
4. Subs. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch., for sub-paragraph (2) (w.e.f. 2-4-1970).

[1][6. தொடக்கப் பள்ளிகள் முதலியவற்றை அமைக்க மாவட்ட மன்றத்திற்குள்ள அதிகாரங்கள் :

(1) ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம், அந்த மாவட்டத்தில் தொடக்கப் பள்ளிகள், மருந்தகங்கள், அங்காடிகள், [2][கால்நடைத் தொழுவங்கள்], தோணித்துறைகள், மீனளங்கள், சாலைகள், சாலைப் போக்குவரத்து, நீர்வழிகள் ஆகியவற்றை அமைக்கலாம், கட்டலாம் அல்லது மேலாண்மை செய்யலாம்; மேலும், ஆளுநரின் முன் ஒப்பேற்புடன், அவற்றை ஒழுங்குறுத்துவதற்காகவும் கட்டாள்கை செய்வதற்காகவும் ஒழுங்குறுத்தும்விதிகளைச் செய்யலாம்; குறிப்பாக அந்த மாவட்டத்திலுள்ள தொடக்கப் பள்ளிகளில் தொடக்கக் கல்வி கற்பிக்கப்படவேண்டிய மொழியையும் முறையையும் வகுத்துரைக்கலாம்.

(2) ஆளுநர் மாவட்ட மன்றம் ஒன்றின் இசைவுடன், வேளாண்மை, கால்நடைப் பேணுகை, சமூக நலத் திட்டங்கள், கூட்டுறவுச் சங்கங்கள், சமுதாய நலப்பாடு, ஊரமைப்புத் திட்டம் அல்லது [3]***மாநிலத்தின் ஆட்சித்துறை அதிகாரம் அளாவுகின்ற பிற பொருட்பாடுகள் தொடர்பான செயற்பணிகளை, அந்த மன்றத்திடம் அல்லது அதன் அலுவலர்களிடம், வரைக்கட்டுடனோ வரைக்கட்டின்றியோ ஒப்படைக்கலாம்.]

7. மாவட்ட மற்றும் வட்டார நிதியங்கள் :

(1) தன்னாட்சி மாவட்டம் ஒவ்வொன்றிற்கும் ஒரு மாவட்ட நிதியமும், தன்னாட்சி வட்டாரம் ஒவ்வொன்றிற்கும் ஒரு வட்டார நிதியமும் ஏற்படுத்தப்படும்; இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு இணங்க, அத்தகைய மாவட்டத்தின் அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டாரத்தின் நிருவாகத்தின்போது, முறையே அந்த மாவட்டத்திற்கான மாவட்ட மன்றத்தினாலும் அந்த வட்டாரத்திற்கான வட்டார மன்றத்தினாலும் பெறப்படும் பணம் அனைத்தும், அந்தந்த நிதியத்தில் வரவு வைக்கப்படும்.

[4][(2) ஆளுநர், மாவட்ட நிதியத்தை அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டார நிதியத்தை மேலாண்மை செய்வதற்காகவும் மேற்சொன்ன நிதியத்தில் பணம் செலுத்துவதையும், அதிலிருந்து பணம் எடுப்பதையும் அதிலுள்ள பணத்தைக் கையடைவில் கொள்ளுவதையும், மேற்கூறப்பட்ட பொருட்பாடுகளுக்குத் தொடர்புடைய அல்லது துணைமையான பிற பொருட்பாடுகளையும் பொறுத்துப் பின்பற்றப்படவேண்டிய நெறிமுறை குறித்து, ஆளுநர் விதிகளை வகுக்கலாம்.

(3) மாவட்ட மன்றத்தின் அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டார மன்றத்தின் கணக்குகள், குடியரசுத்தலைவரின் ஒப்பேற்புடன் இந்தியக் கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையர் வகுத்துரைக்கும் படிவத்தில் வைத்து வரப்படுதல் வேண்டும்.

(4) கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையர், மாவட்ட மற்றும் வட்டார மன்றங்களின் கணக்குகளைத் தாம் பொருத்தமெனக் கருதுகிற முறையில் தணிக்கை செய்விப்பார்; மேலும், அத்தகைய கணக்குகள் தொடர்பாக, கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையரின் அறிக்கைகள் ஆளுநருக்கு அனுப்பப்படுதல் வேண்டும்; அவர் அவற்றை மன்றத்தின் முன்பு வைக்குமாறு செய்வார்.]

---

1. 6 ஆம் பத்திக்கு, அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969), இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. "கால்நடை குட்டைகள்" என்பதற்கு, நீக்கறவு மற்றும் திருத்தச் சட்டம், 1974 (56/1974), இன் 4 ஆம் பிரிவினால் (20–12–1974 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. "அசாம் அல்லது, நேர்வுக்கேற்ப, மேகாலயா" என்ற சொற்கள், வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் பிரிவு 71 (i) மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

4. (2) ஆம் உள்பத்திக்கு, அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

**8. Powers to assess and collect land revenue and to impose taxes :**

(1) The Regional Council for an autonomous region in respect of all lands within such region and the District Council for an autonomous district in respect of all lands within the district except those which are in the areas under the authority of Regional Councils, if any, within the district, shall have the power to assess and collect revenue in respect of such lands in accordance with the principles for the time being followed [1][by the Government of the State in assessing lands for the purpose of land revenue in the State generally.]

(2) The Regional Council for an autonomous region in respect of areas within such region and the District Council for an autonomous district in respect of all areas in the district except those which are under the authority of Regional Councils, if any, within the district, shall have power to levy and collect taxes on lands and buildings, and tolls on persons resident within such areas.

(3) The District Council for an autonomous district shall have the power to levy and collect all or any of the following taxes within such district, that is to say —

(a) taxes on professions, trades, callings and employments;

(b) taxes on animals, vehicles and boats;

(c) taxes on the entry of goods into a market for sale therein, and tolls on passengers and goods carried in ferries; [2]***

(d) taxes for the maintenance of schools, dispensaries or roads; [3][and]

[4][(e) taxes on entertainment and amusements.]

(4) A Regional Council or District Council, as the case may be, may make regulations to provide for the levy and collection of any of the taxes specified in sub-paragraphs (2) and (3) of this paragraph [5][and every such regulation shall be submitted forthwith to the Governor and, until assented to by him, shall have no effect.]

---

1. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch., for certain words (w.e.f. 21- 1-1972).
2. Omitted by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 16(i) (w.e.f. 16-9-2016).
3. Ins. by s. 16(ii), *ibid.*
4. Ins. by s. 16(iii), *ibid.*
5. Ins. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch. (w.e.f. 2-4-1970).

**8.** நில வருவாயை மதிப்பீடு செய்வதற்கும் ஈட்டுவதற்கும் வரிகளை விதிப்பதற்குமான அதிகாரங்கள் :

(1) ஒரு தன்னாட்சி வட்டாரத்திற்கான வட்டார மன்றம் அத்தகைய வட்டாரத்திற்குள் உள்ள நிலங்கள் அனைத்தையும் பொறுத்து ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம், அந்த மாவட்டத்திற்குள் வட்டார மன்றங்கள், எவையேனுமிருப்பின், அவற்றின் அதிகாரத்தின் கீழுள்ள வரையிடங்களில் உள்ளவை நீங்கலாக, அந்த மாவட்டத்திற்குள் உள்ள நிலங்கள் அனைத்தையும் பொறுத்து அந்த மாநிலத்தில் பொதுவாக நில வருவாய் நோக்கத்திற்காக நிலங்களை மதிப்பீடு செய்வதில் [1][மாநில அரசினால்] அப்போதைக்குப் பின்பற்றப்பட்டுவரும் நெறிகளுக்கு இணங்கியவாறு, [1][அத்தகைய நிலங்களைப் பொறுத்து வருவாயை மதிப்பீடு செய்வதற்கும்] ஈட்டுவதற்கும் அதிகாரங்கள் உடையன ஆகும்.

(2) ஒரு தன்னாட்சி வட்டாரத்திற்கான வட்டார மன்றம், அத்தகைய வட்டாரத்திற்குள் உள்ள வரையிடங்களைப் பொறுத்தும் ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம், அத்தகைய மாவட்டத்திற்குள் வட்டார மன்றங்கள், எவையேனுமிருப்பின், அவற்றின் அதிகாரத்தின் கீழுள்ள வரையிடங்கள் நீங்கலாக, அந்த மாவட்டத்திற்குள் உள்ள அனைத்து வரையிடங்களைப் பொறுத்தும் நிலங்கள், கட்டிடங்கள் ஆகியவற்றின் மீதான வரிகளையும் அத்தகைய வரையிடங்களுக்குள் குடியிருப்பவர்களின் மீதான சுங்க வரிகளையும் விதிக்கவும் ஈட்டவும் அதிகாரம் உடையது ஆகும்.

(3) ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம், அந்த மாவட்டத்திற்குள்ளே பின்வரும் வரிகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும், விதிக்கவும் ஈட்டவும் அதிகாரம் உடையது ஆகும்; அவையாவன—

(அ) விழைதொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள், வேலையமர்த்தங்கள் ஆகியவற்றின் மீதான வரிகள்;

(ஆ) விலங்குகள், ஊர்திகள், படகுகள் ஆகியவற்றின் மீதான வரிகள்;

(இ) ஓர் அங்காடிக்குள் சரக்குகள் விற்பனைக்காகக் கொண்டு செல்வதன் மீதான வரிகள்; தோணிகளில் ஏற்றிச் செல்லப்படும் பயணிகள், சரக்குகள் மீதான சுங்கவரிகள்; [2]***

(ஈ) பள்ளிகளை, மருந்தகங்களை அல்லது சாலைகளைப் பராமரித்து வருவதற்கான வரிகள்; [3][மற்றும்]

[4][(உ) பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் மற்றும் களிப்பூட்டும் நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் மீதான வரிகள்.]

(4) வட்டார மன்றம் அல்லது, நேர்வுக்கேற்ப, மாவட்ட மன்றம், இந்தப் பத்தியின் (2), (3) ஆகிய உள்பத்திகளில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரிகள் எவற்றையும் விதித்து ஈட்டுவதற்கு வகைசெய்வதற்கான ஒழுங்குறுத்தும்விதிகளை வகுக்கலாம்; [5][மேலும், அத்தகைய ஒழுங்குறுத்தும்விதி ஒவ்வொன்றும் உடனடியாக ஆளுநருக்கு அனுப்பிவைக்கப்படுதல் வேண்டும்; மேலும், அவரால் ஏற்பிசைவளிக்கப்படும் வரையில் அவை செல்திறம் பெறுவதில்லை.]

---

1. குறித்தசில சொற்களுக்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால், (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

2. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016, இன் 16 (i) பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டது.

3. *மேற்படிச் சட்டத்தின்* 16 (ii) பிரிவினால் புகுத்தப்பட்டது.

4. *மேற்படிச் சட்டத்தின்* 16 (iii) பிரிவினால் புகுத்தப்பட்டது.

5. அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

### [1]9. Licences or leases for the purpose of prospecting for, or extraction of, minerals :

(1) Such share of the royalties accruing each year from licences or leases for the purpose of prospecting for, or the extraction of, minerals granted by [2][the Government of the State] in respect of any area within an autonomous district as may be agreed upon between [2][the Government of the State] and the District Council of such district shall be made over to that District Council.

(2) If any dispute arises as to the share of such royalties to be made over to a District Council, it shall be referred to the Governor for determination and the amount determined by the Governor in his discretion shall be deemed to be the amount payable under sub-paragraph (1) of this paragraph to the District Council and the decision of the Governor shall be final.

[1][(3) The Governor may, by order, direct that the share of royalties to be made over to a District Council under this paragraph shall be made over to that Council within a period of one year from the date of any agreement under sub-paragraph (1) or, as the case may be, of any determination under sub-paragraph (2).]

### [3-4]10. Power of District Council to make regulations for the control of money-lending and trading by non-tribals :

(1) The District Council of an autonomous district may make regulations for the regulation and control of money-lending or trading within the district by persons other than Scheduled Tribes resident in the district.

---

1. Paragraph 9 has been amended in its application to the State of Tripura and Mizoram by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1988 (67 of 1988), s. 2 (w.e.f. 16-12-1988), so as to insert the following sub-paragraph after sub-paragraph (2), namely:-

   "(3) The Governor may, by order, direct that the share of royalties to be made over to a District Council under this paragraph shall be made over to that Council within a period of one year from the date of any agreement under sub-paragraph (1) or, as the case may be, of any determination under sub-paragraph (2)."

2. Subs. by North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch., for "the Government of Assam" (w.e.f. 21-1-1972).

3. Paragraph 10 has been amended in its application to the States of Tripura and Mizoram by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1988 (67 of 1988), s. 2, as under—

   (a) in the heading, the words "by non-tribals" shall be omitted;

   (b) in sub-paragraph (1), the words "other than Scheduled Tribes" shall be omitted;

   (c) in sub-paragraph (2), for clause (d), the following clause shall be substituted, namely:—

   "(d) prescribe that no person resident in the district shall carry on any trade, whether wholesale or retail, except under a licence issued in that behalf by the District Council."

4. Paragraph 10 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, so as to insert the following sub-paragraph after sub-paragraph (3), namely: —

   "(4) Nothing in this paragraph shall apply to the Bodoland Territorial Council constituted under the proviso to sub-paragraph (3) of paragraph 2 of this Schedule.".

**[1]9. கனிமங்களைக் கண்டறிவதற்கான அல்லது அவற்றைப் பிரித்தெடுப்பதற்கான உரிமங்கள் அல்லது குத்தகைகள் :**

(1) ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்குள் உள்ள வரையிடம் எதிலும், கனிமங்களைக் கண்டறிவதற்காக அல்லது பிரித்தெடுப்பதற்காக, [2][மாநில அரசினால்] வழங்கப்படும் உரிமங்களிலிருந்து அல்லது குத்தகைகளிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் வந்தடைகின்ற உரிமத் தொகைகளில், [2][மாநில அரசும்] அத்தகைய மாவட்டத்தின் மாவட்ட மன்றமும் இடையே ஒப்பியவாறான பங்கு, அந்த மாவட்ட மன்றத்திற்கு மாற்றி வழங்கப்படுதல் வேண்டும்.

(2) ஒரு மாவட்ட மன்றத்திற்கு மாற்றி வழங்கப்பட வேண்டிய அத்தகைய உரிமத்தொகைப் பங்கு பற்றி பூசல் எதுவும் எழுமாயின், அது பற்றித் தீர்மானம் செய்வதற்காக அது ஆளுநருக்குக் குறித்தனுப்பப்படுதல் வேண்டும்; மேலும், ஆளுநரால் அவரது உளத்தேர்வின்படி தீர்மானிக்கப்படும் தொகை, இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி மாவட்ட மன்றத்திற்கு வழங்கப்பட வேண்டிய தொகையாகக் கொள்ளப்படுதல் வேண்டும்; இதில் ஆளுநரின் முடிபே அறுதியானது ஆகும்.

[1][(3) இந்தப் பத்தியின்படி மாவட்ட மன்றத்திற்கு வழங்கப்பட வேண்டிய உரிமத்தொகைப் பங்கு, (1) ஆம் உள்பத்தியின்படி செய்து கொள்ளப்படும் உடன்பாடு எதனின் அல்லது, நேர்வுக்கேற்ப, (2) ஆம் உள்பத்தியின்படி செய்யப்படும் தீர்மானம் எதனின் தேதியிலிருந்து ஓராண்டுக் காலஅளவுக்குள், அந்த மன்றத்திற்கு வழங்கப்படுதல் வேண்டும் என்று ஆளுநர் ஆணையின் வழி பணிக்கலாம். ]

**[3-4]10. பழங்குடியினர் அல்லாதவர் வட்டித் தொழில் செய்வதையும், வணிகம் செய்வதையும் கட்டாள்கை செய்வதற்கான ஒழுங்குறுத்தும்விதிகளை வகுக்க மாவட்ட மன்றத்திற்குள்ள அதிகாரம் :**

(1) ஒரு தன்னாட்சி மாவட்டத்தின் மாவட்ட மன்றம், அந்த மாவட்டத்தில் குடியிருக்கிற பட்டியலில்கண்ட பழங்குடியினர் அல்லாத பிறர், அந்த மாவட்டத்திற்குள் வட்டித் தொழில் அல்லது வணிகம் செய்வதை ஒழுங்குறுத்துவதற்கும் கட்டாள்கை செய்வதற்குமான ஒழுங்குறுத்தும்விதிகளை வகுக்கலாம்.

---

1. 9 ஆம் பத்தி, திரிபுரா மற்றும் மிசோரம் ஆகிய மாநிலங்களுக்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1988 (67/1988) இன் 2 ஆம் பிரிவினால், (2) ஆம் உள்பத்திக்குப் பின்பு, பின்வரும் உள்பத்தியைப் புகுத்துமாறு (16–12–1988 முதல் செல்திறம் பெறுமாறு), திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:–

"(3) இந்தப் பத்தியின்படி, மாவட்ட மன்றத்திற்கு வழங்கப்பட வேண்டிய உரிமத்தொகைப்பங்கு, (1) ஆம் உள்பத்தியின்படி செய்து கொள்ளப்படும் உடன்பாடு எதனின் அல்லது, நேர்வுக்கேற்ப, (2) ஆம் உள்பத்தியின்படி செய்யப்படும் தீர்மானம் எதனின் தேதியிலிருந்து ஓராண்டுக் காலஅளவுக்குள், அந்த மன்றத்திற்கு வழங்கப்படுதல் வேண்டும் என்று ஆளுநர் ஆணையின்வழிப் பணிக்கலாம்."

2. "அசாம் அரசு" என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. 10 ஆம் பத்தி, திரிபுரா மற்றும் மிசோரம் ஆகிய மாநிலங்களுக்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1988 (67/1988) இன் 2 ஆம் பிரிவினால், பின்வருமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது—

(அ) தலைப்பில் "பழங்குடியினர் அல்லாதவர்" என்ற சொற்கள் விட்டுவிடப்படுதல் வேண்டும்;

(ஆ). (1) ஆம் உள்பத்தியில் "பட்டியலில்கண்ட பழங்குடியினர் அல்லாத பிறர்" என்ற சொற்கள் விட்டுவிடப்படுதல் வேண்டும்;

(இ). (2) ஆம் உள்பத்தியில், (ஈ) கூறுக்கு மாற்றாகப் பின்வரும் கூறு அமைக்கப்படுதல் வேண்டும், அவையாவன:–

"(ஈ) அந்த மாவட்டத்தில் குடியிருக்கிற எவரும், அந்த மாவட்ட மன்றத்தினால் இதற்கென வழங்கப்படும் உரிமத்தின்படி அல்லாமல் மொத்தமாகவோ சில்லறையாகவோ வணிகம் எதனையும் செய்தலாகாது என வகுத்துரைக்கலாம்."

4. 10 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், (3) ஆம் உள்பத்திக்குப் பின்பு பின்வரும் உள்பத்தியைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:–

"(4) இந்தப் பத்தியிலுள்ள எதுவும், இந்த இணைப்புப்பட்டியலில் 2 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தியின் வரம்புரையின்படி அமைக்கப்பட்ட போடோலாந்து வரையிட மன்றத்திற்குப் பொருந்தாது.".

(2) In particular and without prejudice to the generality of the foregoing power, such regulations may—

(a) prescribe that no one except the holder of a licence issued in that behalf shall carry on the business of money-lending;

(b) prescribe the maximum rate of interest which may be charged or be recovered by a money- lender;

(c) provide for the maintenance of accounts by money-lenders and for the inspection of such accounts by officers appointed in that behalf by the District Council;

(d) prescribe that no person who is not a member of the Scheduled Tribes resident in the district shall carry on wholesale or retail business in any commodity except under a licence issued in that behalf by the District Council :

Provided that no regulations may be made under this paragraph unless they are passed by a majority of not less than three-fourths of the total membership of the District Council:

Provided further that it shall not be competent under any such regulations to refuse the grant of a licence to a money-lender or a trader who has been carrying on business within the district since before the time of the making of such regulations.

(3) All regulations made under this paragraph shall be submitted forthwith to the Governor and, until assented to by him, shall have no effect.

[1][(4) Nothing in this paragraph shall apply to the Bodoland Territorial Council constituted under the proviso to sub-paragraph (3) of paragraph (2) of this Schedule.]

**11. Publication of laws, rules and regulations made under the Schedule :**

All laws, rules and regulations made under this Schedule by a District Council or a Regional Council shall be published forthwith in the Official Gazette of the State and shall on such publication have the force of law.

---

1. Paragraph 10 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2 , so as to insert the following sub-paragraph after sub-paragraph (3), namely: —

"(4) Nothing in this paragraph shall apply to the Bodoland Territorial Council constituted under the proviso to sub-paragraph (3) of paragraph 2 of this Schedule.".

(2) குறிப்பாகவும் மேலேகண்ட அதிகாரத்தின் பொதுப்பாங்கிற்குக் குந்தகம் இன்றியும், அத்தகைய ஒழுங்குறுத்தும்விதிகள்—

(அ) வட்டித் தொழிலை, அதற்கென வழங்கப்பட்ட உரிமம் ஒன்றைக் கொண்டிருப்பவரைத் தவிர, பிறர் எவரும் நடத்தலாகாது என வகுத்துரைக்கலாம்;

(ஆ) வட்டித் தொழில் நடத்துபவர் ஒருவரால் விதிக்கப்படும் அல்லது பெறப்படும் மேல்வரை வட்டி வீதத்தினை வகுத்துரைக்கலாம்;

(இ) வட்டித் தொழில் நடத்துவோரால் கணக்குகள் வைத்து வரப்படுவதற்கும் மாவட்ட மன்றம் இதற்கென அமர்த்தும் அலுவலர்களால் அத்தகைய கணக்குகள் ஆய்வு செய்யப்படுவதற்கும் ஏற்பாடு செய்யலாம்;

(ஈ) அந்த மாவட்டத்தில் குடியிருக்கிற பட்டியலில்கண்ட பழங்குடியினர் ஒருவராக இல்லாத எவரும், அந்த மாவட்ட மன்றத்தினால் இதற்கென வழங்கப்படும் உரிமத்தின்படி அல்லாமல், எந்தப் பண்டத்தையும் மொத்தமாகவோ சில்லறையாகவோ ஆகுதொழில் செய்தலாகாது என வகுத்துரைக்கலாம்:

**வரம்புரையாக** : இந்தப் பத்தியின்படி ஒழுங்குறுத்தும்விதிகள் எவையும், மாவட்ட மன்றத்தின் மொத்த உறுப்பினர்களில் நான்கில் மூன்று பகுதியினருக்குக் குறையாத பெரும்பான்மையினரால் நிறைவேற்றப்பட்டாலன்றி, வகுக்கப்படுதல் ஆகாது:

**மேலும் வரம்புரையாக** : அத்தகைய ஒழுங்குறுத்தும்விதிகள் வகுக்கப்படுவதற்கு முன்பிருந்தே அந்த மாவட்டத்திற்குள் தொழில் நடத்தி வருகிற வட்டித்தொழில் நடத்துவோருக்கோ வணிகருக்கோ அத்தகைய ஒழுங்குறுத்தும்விதிகளின்படி உரிமம் வழங்க மறுத்தல் ஆகாது.

(3) இந்தப் பத்தியின்படி வகுக்கப்படும் ஒழுங்குறுத்தும்விதிகள் அனைத்தும் உடனடியாக ஆளுநருக்கு அனுப்பிவைக்கப்படுதல் வேண்டும்; மேலும், அவரால் ஏற்பிசைவளிக்கப்படும் வரையில், அவை செல்திறம் உடையது ஆகாது.

[1][(4) இந்தப் பத்தியிலுள்ள எதுவும், இந்த இணைப்புப்பட்டியலின் 2 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தியின் வரம்புரையின்படி அமைக்கப்பட்ட போடோலாந்து ஆட்சிநிலவரை மன்றத்திற்குப் பொருந்தாது.]

**11. இந்த இணைப்புப்பட்டியலின்படி இயற்றப்படும் சட்டங்கள், விதிகள், ஒழுங்குறுத்தும்விதிகள் ஆகியவற்றை வெளியிடுதல் :**

ஒரு மாவட்ட மன்றத்தாலோ ஒரு வட்டார மன்றத்தாலோ இந்த இணைப்புப்பட்டியலின்படி இயற்றப்படும் சட்டங்கள், விதிகள், ஒழுங்குறுத்தும்விதிகள் அனைத்தும், உடனடியாக மாநிலத்தின் அதிகாரமுறை அரசிதழில் வெளியிடப்படுதல் வேண்டும்; மேலும், அவ்வாறு வெளியிடப்படுவதன் மேல் அவை சட்டத்தின் செல்லாற்றல் உடையன ஆகும்.

---

1. 10 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், (3) ஆம் உள்பத்திக்குப் பின்பு பின்வரும் உள்பத்தியைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:—

"(4) இந்தப் பத்தியிலுள்ள எதுவும், இந்த இணைப்புப்பட்டியலில் 2 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தியின் வரம்புரையின்படி அமைக்கப்பட்ட போடோலாந்து வரையிட மன்றத்திற்குப் பொருந்தாது.".

[1-2]12. [3][Application of Acts of Parliament and of the Legislature of the State of Assam to autonomous districts and autonomous regions in the State of Assam] :

(1) Notwithstanding anything in this Constitution, —

(a) no Act of the [4][Legislature of the State of Assam] in respect of any of the matters specified in paragraph 3 of this Schedule as matters with respect to which a District Council or a Regional Council may make laws, and no Act of the Legislature of the State of Assam prohibiting or restricting the consumption of any non-distilled alcoholic liquor shall apply to any autonomous district or autonomous region [5][in that State] unless in either case the District Council for such district or having jurisdiction over such region by public notification so directs, and the District Council in giving such direction with respect to any Act may direct that the Act shall in its application to such district or region or any part thereof have effect subject to such exceptions or modifications as it thinks fit.

(b) the Governor may, by public notification, direct that any Act of Parliament or of the [4][Legislature of the State of Assam] to which the provisions of clause (a) of this sub-paragraph do not apply shall not apply to an autonomous district or an autonomous region [5][in that State], or shall apply to such district or region or any part thereof subject to such exceptions or modifications as he may specify in the notification.

(2) Any direction given under sub-paragraph (1) of this paragraph may be given so as to have retrospective effect.

---

1. Paragraph 12 has been amended to its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act. 1995 (42 of 1995), s. 2, (w.e.f. 12-9-1995) as under,-

'in paragraph 12, in sub-paragraph (1), for the words and figure "matters specified in paragraph 3 of this Schedule", the words, figures and letter "matters specified in paragraph 3 or paragraph 3A of this Schedule" shall be substituted.'.

2. Paragraph 12 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, as under,—

'in paragraph 12, in sub-paragraph (1), in clause (a), for the words, figures and letter "matters specified in paragraph 3 or paragraph 3A of this Schedule", the words, figures and letter "matters specified in paragraph 3 or paragraph 3A or paragraph 3B of this Schedule" shall be substituted.'.

3. Subs. by North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch., for the heading (w.e.f. 21-1-1972).

4. Subs. by *ibid.*, for "Legislature of the State".

5. Ins. by *ibid.*

[1-2]12. [3][அசாம் மாநிலத்திலுள்ள தன்னாட்சி மாவட்டங்கள், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றிற்கு நாடாளுமன்றச் சட்டங்களும் அசாம் மாநிலச் சட்டமன்றச் சட்டங்களும் பொருந்துதல்] :

(1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், —

(அ) எந்தப் பொருட்பாடுகளைப் பொறுத்து ஒரு மாவட்ட மன்றம் அல்லது வட்டார மன்றம் சட்டங்களை இயற்றுவதற்குரியவை என இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த, [4][அசாம் மாநிலச் சட்டமன்றச்] சட்டம் எதுவும், காய்ச்சிவடிக்கப்படாத வெறியம் கலந்த மதுக்குடிவகை எதனையும் உட்கொள்ளுவதைத் தடைசெய்கிற அல்லது கட்டுப்படுத்துகிற அசாம் மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், அத்தகைய மாவட்டத்திற்கான அல்லது அத்தகைய வட்டாரத்தின் மீது அதிகாரவரம்பு கொண்டுள்ள மாவட்ட மன்றம், பொது அறிவிக்கை வாயிலாக, இரு நேர்வுகளில் எதிலும், அவ்வாறு பணித்தாலன்றி, [5][அந்த மாநிலத்திற்குள்] உள்ள தன்னாட்சி மாவட்டம் அல்லது தன்னாட்சி வட்டாரம் எதற்கும் பொருந்துதல் ஆகாது; மேலும், அந்த மாவட்ட மன்றம் அத்தகைய சட்டம் எதனையும் பொறுத்து அவ்வாறு பணிக்கும்போது, அந்தச் சட்டத்தினை அத்தகைய மாவட்டத்திற்கோ வட்டாரத்திற்கோ அவற்றின் பகுதி எதற்குமோ பொருந்தச் செய்கையில் அந்த மாவட்ட மன்றம் தக்கதெனக் கருதுகிற விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அது செல்திறம் பெறும் எனப் பணிக்கலாம்.

(ஆ) ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாக, இந்த உள்பத்தியின் (அ) கூறின் வகையங்கள் பொருந்தாத நாடாளுமன்றச் சட்டம் எதுவும் அல்லது [4][அசாம் மாநிலச் சட்டமன்றச்] சட்டம் எதுவும், [5][அந்த மாநிலத்தில்] உள்ள தன்னாட்சி மாவட்டத்திற்கு அல்லது தன்னாட்சி வட்டாரத்திற்குப் பொருந்துதல் ஆகாது என்றோ அல்லது அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அத்தகைய மாவட்டம் அல்லது வட்டாரம் அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்தும் என்றோ பணிக்கலாம்.

(2) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படியான பணிப்புரை எதுவும், முன்மேவு செல்திறம் பெறுமாறு இடப்படலாம்.

---

1. 12 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1995 (42/1995) இன் 2 ஆம் பிரிவினால், (12–9–1995 முதல் செல்திறம் பெறுமாறு) பின்வருமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது,–

'12 ஆம் பத்தியின், (1) ஆம் உள்பத்தியில், "இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகள்" என்ற சொற்கள், மற்றும் என்னுக்கு "இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தி அல்லது 3 (அ) பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகள்" என்ற சொற்கள், எண்கள் மற்றும் எழுத்து மாற்றாக அமைக்கப்படுதல் வேண்டும்.'.

2. 12 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், பின்வருமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது,—

'12 ஆம் பத்தியின், (1) ஆம் உள்பத்தியில், (அ) கூறில் "இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தி அல்லது 3 (அ) பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகள்" என்ற சொற்கள், எண்கள் மற்றும் எழுத்துக்கு "இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தி அல்லது 3 (அ) பத்தி அல்லது 3 (ஆ) பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகள்" என்ற சொற்கள், எண்கள் மற்றும் எழுத்து மாற்றாக அமைக்கப்படுதல் வேண்டும்.'.

3. தலைப்பிற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–01–1972 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

4. "மாநிலச் சட்டமன்றப் பேரவை" என்பதற்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.

5. *மேற்படிச் சட்டத்தினால்* புகுத்தப்பட்டது.

[1][12A. **Application of Acts of Parliament and of the Legislature of the State of Meghalaya to autonomous districts and autonomous regions in the State of Meghalaya :**

Notwithstanding anything in this Constitution,—

(a) if any provision of a law made by a District or Regional Council in the State of Meghalaya with respect to any matter specified in sub-paragraph (1) of paragraph 3 of this Schedule or if any provision of any regulation made by a District Council or a Regional Council in that State under paragraph 8 or paragraph 10 of this Schedule, is repugnant to any provision of a law made by the Legislature of the State of Meghalaya with respect to that matter, then, the law or regulation made by the District Council or, as the case may be, the Regional Council whether made before or after the law made by the Legislature of the State of Meghalaya, shall, to the extent of repugnancy, be void and the law made by the Legislature of the State of Meghalaya shall prevail;

(b) the President may, with respect to any Act of Parliament, by notification, direct that it shall not apply to an autonomous district or an autonomous region in the State of Meghalaya, or shall apply to such district or region or any part thereof subject to such exceptions or modifications as he may specify in the notification and any such direction may be given so as to have retrospective effect.]

[2][12AA. **Application of Acts of Parliament and of the Legislature of the State of Tripura to the autonomous districts and autonomous regions in the State of Tripura :**

Notwithstanding anything in this Constitution,—

(a) no Act of the Legislature of the State of Tripura in respect of any of the matters specified in paragraph 3 of this Schedule as matters with respect to which a District Council or a Regional Council may make laws, and no Act of the Legislature of the State of Tripura prohibiting or restricting the consumption of any non-distilled alcoholic liquor shall apply to any autonomous district or autonomous region in that State unless, in either case, theDistrict Council for such district or having jurisdiction over such region by public notification so directs, and the District Council in giving such direction with respect to any Act may direct that the Act shall, in its application to that district or such region or any part thereof have effect subject to such exceptions or modifications as it thinksfit;

---

1. Subs. by North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch., (w.e.f. 21-1-1972) for "paragraph 12A, by paragraph 12A and 12B".
2. Subs. by Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1988, s. 2, for paragraphs 12AA and 12B (w.e.f. 16-12-1988). Paragraph 12AA was ins. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 4 (w.e.f. 1-4-1985).

**[1][12 (அ). மேகாலயா மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டங்கள், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றிற்கு நாடாளுமன்றச் சட்டங்களும் மேகாலயா மாநிலச் சட்டமன்றச் சட்டங்களும் பொருந்துதல் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்,—

(அ) இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடு எதனையும் பொறுத்து, மேகாலயா மாநிலத்தில் உள்ள ஒரு மாவட்ட அல்லது வட்டார மன்றத்தினால் இயற்றப்படும் ஒரு சட்டத்தின் வகையம் எதுவும், அல்லது இந்த இணைப்புப்பட்டியலின் 8 ஆம் பத்தியின் அல்லது 10 ஆம் பத்தியின்படி அந்த மாநிலத்தில் உள்ள ஒரு மாவட்ட மன்றத்தினாலோ ஒரு வட்டார மன்றத்தினாலோ இயற்றப்படும் ஒழுங்குறுத்தும்விதி ஒன்றின் வகையம் எதுவும், அந்தப் பொருட்பாடு பொறுத்து மேகாலயா மாநிலச் சட்டமன்றத்தினால் இயற்றப்படும் ஒரு சட்டத்தின் வகையம் எதற்கும் முரணாக இருக்குமிடத்து, அந்த மாவட்ட மன்றத்தினால் அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டார மன்றத்தினால் இயற்றப்படும் சட்டம் அல்லது ஒழுங்குறுத்தும்விதி, மேகாலயா மாநிலச் சட்டமன்றத்தினால் இயற்றப்படும் சட்டத்திற்கு முன்போ பின்போ இயற்றப்பட்டிருப்பினும், முரண்பாடு உள்ள அளவுக்கு, இல்லாநிலையது ஆகும்; மேலும், மேகாலயா மாநிலச் சட்டமன்றத்தினால் இயற்றப்படும் சட்டமே மேலோங்கி நிற்கும்;

(ஆ) குடியரசுத்தலைவர், நாடாளுமன்றச் சட்டம் எதனையும் பொறுத்து அறிவிக்கை வாயிலாக, மேகாலயா மாநிலத்தில் உள்ள ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கு அல்லது தன்னாட்சி வட்டாரத்திற்கு அது பொருந்தாது என்றோ அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அத்தகைய மாவட்டத்திற்கு அல்லது வட்டாரத்திற்கு அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்தும் என்றோ பணிக்கலாம்; மேலும், அத்தகைய பணிப்புரை எதுவும் முன்மேவு செல்திறம் பெறுமாறு இடப்படலாம்.]

**[2][12 (அ)(அ). திரிபுரா மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டம், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றிற்கு நாடாளுமன்றச் சட்டங்களும் திரிபுரா மாநிலச் சட்டமன்றச் சட்டங்களும் பொருந்துதல் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்,—

(அ) ஒரு மாவட்ட மன்றம் அல்லது வட்டார மன்றம் சட்டங்களை இயற்றுவதற்குரியவை என இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்து, திரிபுரா மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், காய்ச்சிவடிக்கப்படாத வெறியம் கலந்த மதுக்குடிவகை எதனையும் உட்கொள்வதைத் தடை செய்கிற அல்லது கட்டுப்படுத்துகிற திரிபுரா மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், அத்தகைய மாவட்டத்திற்கான அல்லது அத்தகைய வட்டாரத்தின்மீது அதிகாரவரம்பு கொண்டுள்ள மாவட்ட மன்றம் பொது அறிவிக்கையின் வாயிலாக, இரு நேர்வுகளில் எதிலும், அவ்வாறு பணித்தாலன்றி, அந்த மாநிலத்திற்குள் உள்ள தன்னாட்சி மாவட்டம் அல்லது தன்னாட்சி வட்டாரம் எதற்கும் பொருந்துதல் ஆகாது; மேலும், அந்த மாவட்ட மன்றம் அத்தகைய சட்டம் எதனையும் பொறுத்து அவ்வாறு பணிக்கும்போது, அந்தச் சட்டத்தினை அத்தகைய மாவட்டத்திற்கோ வட்டாரத்திற்கோ அவற்றின் பகுதி எதற்குமோ பொருந்தச்செய்கையில், அந்த மாவட்ட மன்றம் தக்கதெனக் கருதுகிற விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அது செல்திறம் பெறும் எனப் பணிக்கலாம்;

---

1. 12 (அ) பத்திக்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் 12 (அ) பத்தி மற்றும் 12 (ஆ) பத்தி (21–01–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. 12 (அ) (அ) மற்றும் 12 (ஆ) பத்திகளுக்கு, அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1988 இன் 2 ஆம் பிரிவினால் (16–12–1988 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது. 12 (அ) (அ) பத்தி, அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 4 ஆம் பிரிவினால் (1–4–1985 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(b) the Governor may, by public notification, direct that any Act of the Legislature of the State of Tripura to which the provisions of clause (a) of this sub-paragraph do not apply, shall not apply to the autonomous district or an autonomous region in that State, or shall apply to that district or such region, or any part thereof, subject to such exceptions or modifications, as he may specify in the notification;

(c) the President may, with respect to any Act of Parliament, by notification, direct that it shall not apply to the autonomous district or an autonomous region in the State of Tripura, or shall apply to such district or region or any part thereof, subject to such exceptions or modifications as he may specify in the notification and any such direction may be given so as to have retrospective effect.

**12B. Application of Acts of Parliament and of the Legislature of the State of Mizoram to autonomous districts and autonomous regions in the State of Mizoram :**

Notwithstanding anything in this Constitution,—

(a) no Act of the Legislature of the State of Mizoram in respect of any of the matters specified in paragraph 3 of this Schedule as matters with respect to which a District Council or a Regional Council may make laws, and no Act of the Legislature of the State of Mizoram prohibiting or restricting the consumption of any non-distilled alcoholic liquor shall apply to any autonomous district or autonomous region in that State unless, in either case, the District Council for such district or having jurisdiction over such region, by public notification, so directs, and the District Council, in giving such direction with respect to any Act, may direct that the Act shall, in its application to such district or region or any part thereof, have effect subject to such exceptions or modifications as it thinks fit;

(b) the Governor may, by public notification, direct that any Act of the Legislature of the State of Mizoram to which the provisions of clause (a) of this sub-paragraph do not apply, shall not apply to an autonomous district or an autonomous region in that State, or shall apply to such district or region, or any part thereof, subject to such exceptions or modifications, as he may specify in the notification;

(ஆ) ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாக, இந்த உள்பத்தியின் (அ) கூறின், வகையங்கள் பொருந்தாத திரிபுரா மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், அந்த மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டத்திற்கு அல்லது தன்னாட்சி வட்டாரத்திற்குப் பொருந்தாது என்றோ அல்லது அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அத்தகைய மாவட்டம் அல்லது வட்டாரம் அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்தும் என்றோ பணிக்கலாம்;

(இ) குடியரசுத்தலைவர், நாடாளுமன்றச் சட்டம் எதனையும் பொறுத்து, அறிவிக்கை வாயிலாக, திரிபுரா மாநிலத்தில் உள்ள ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கு அல்லது தன்னாட்சி வட்டாரத்திற்கு அது பொருந்தாது என்றோ அல்லது அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அத்தகைய மாவட்டத்திற்கு அல்லது வட்டாரத்திற்கு அல்லது அதன்பகுதி எதற்கும் பொருந்தும் என்றோ பணிக்கலாம்; மேலும், அத்தகைய பணிப்புரை எதுவும் முன்மேவு செல்திறம் பெறுமாறு இடப்படலாம்.

**12 (ஆ). மிசோரம் மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டங்கள், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றிற்கு நாடாளுமன்றச் சட்டங்களும் மிசோரம் மாநிலச் சட்டமன்றச் சட்டங்களும் பொருந்துதல் :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்,—

(அ) இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தியில் ஒரு மாவட்ட மன்றம் அல்லது வட்டார மன்றம் சட்டங்களை இயற்றுவதற்குரியவை எனக் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த மிசோரம் மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், காய்ச்சிவடிக்கப்படாத வெறியம் கலந்த மதுக்குடிவகை எதனையும் உட்கொள்வதைத் தடைசெய்கிற அல்லது கட்டுப்படுத்துகிற மிசோரம் மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், அத்தகைய மாவட்டத்திற்கான அல்லது அத்தகைய வட்டாரத்தின்மீது அதிகாரவரம்பு கொண்டுள்ள மாவட்ட மன்றம், பொது அறிவிக்கையின் வாயிலாக, இருநேர்வுகளில் எதிலும், அவ்வாறு பணித்தாலன்றி, அந்த மாநிலத்திற்குள் உள்ள தன்னாட்சி மாவட்டம் அல்லது தன்னாட்சி வட்டாரம் எதற்கும் பொருந்துதல் ஆகாது. மேலும், அந்த மாவட்ட மன்றம், அத்தகைய சட்டம் எதனையும் பொறுத்து அவ்வாறு பணிக்கும்போது, அந்தச் சட்டத்தினை அத்தகைய மாவட்டத்திற்கோ வட்டாரத்திற்கோ அவற்றின் பகுதி எதற்குமோ பொருந்தச்செய்கையில், அந்த மாவட்ட மன்றம் தக்கதெனக் கருதுகிற விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அது செல்திறம் பெறும் எனப் பணிக்கலாம்;

(ஆ) ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாக, இந்த உள்பத்தியின் (அ) கூறின் வகையங்கள் பொருந்தாத மிசோரம் மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், அந்த மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டத்திற்கு அல்லது தன்னாட்சி வட்டாரத்திற்குப் பொருந்தாது என்றோ அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அத்தகைய மாவட்டம் அல்லது வட்டாரம் அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்தும் என்றோ பணிக்கலாம்;

(c) the President may, with respect to any Act of Parliament, by notification, direct that it shall not apply to an autonomous district or an autonomous region in the State of Mizoram, or shall apply to such district or region or any part thereof, subject to such exceptions or modifications as he may specify in the notification and any such direction may be given so as to have retrospective effect.]

**13. Estimated receipts and expenditure pertaining to autonomous districts to be shown separately in the annual financial statement :**

The estimated receipts and expenditure pertaining to an autonomous district which are to be credited to, or is to be made from, the Consolidated Fund of the State [1]*** shall be first placed before the District Council for discussion and then after such discussion be shown separately in the annual financial statement of the State to be laid before the Legislature of the State under article 202.

**[2]14. Appointment of Commission to inquire into and report on the administration of autonomous districts and autonomous regions :**

(1) The Governor may at any time appoint a Commission to examine and report on any matter specified by him relating to the administration of the autonomous districts and autonomous regions in the State, including matters specified in clauses (c), (d), (e) and (f) of sub-paragraph (3) of paragraph 1 of this Schedule, or may appoint a Commission to inquire into and report from time to time on the administration of autonomous districts and autonomous regions in the State generally and in particular on—

(a) the provision of educational and medical facilities and communications in such districts and regions;

(b) the need for any new or special legislation in respect of such districts and regions; and

(c) the administration of the laws, rules and regulations made by the District and Regional Councils;

and define the procedure to be followed by such Commission.

---

1. The words "of Assam" omitted by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch., (w.e.f. 21-1-1972).

2. Paragraph 14 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1995 (42 of 1995) , s. 2, as under,-

'in paragraph 14, in sub-paragraph (2), the words "with the recommendations of the Governor with respect thereto" shall be omitted.'.

(இ) குடியரசுத்தலைவர், நாடாளுமன்றச் சட்டம் எதனையும் பொறுத்து, அறிவிக்கை வாயிலாக, மிசோரம் மாநிலத்தில் உள்ள ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கு அல்லது தன்னாட்சி வட்டாரத்திற்கு அது பொருந்தாது என்றோ அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அத்தகைய மாவட்டத்திற்கு அல்லது வட்டாரத்திற்கு அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்தும் என்றோ பணிக்கலாம்; மேலும், அத்தகைய பணிப்புரை எதுவும் முன்மேவு செல்திறம் பெறுமாறு இடப்படலாம்.]

**13. தன்னாட்சி மாவட்டங்களைச் சார்ந்த மதிப்பீட்டு வரவு செலவினம் ஆண்டு நிதிநிலை அறிக்கையில் தனித்தனியாகக் காட்டப்படுதல் வேண்டும் :**

ஒரு தன்னாட்சி மாவட்டத்தைச் சார்ந்ததாகவும் [1]*** மாநிலத்தின் திரள்நிதியத்தில் செலுத்தப்பட அல்லது திரள்நிதியத்திலிருந்து செய்யப்பட வேண்டியதாகவும் உள்ள மதிப்பீட்டு வரவு செலவினம், முதலில் மாவட்ட மன்றத்தின் முன்பு கலந்தாய்வுக்கு வைக்கப்பட்டு, அத்தகைய கலந்தாய்வுக்குப் பின்பு, 202 ஆம் உறுப்பின்படி மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்கப்பட வேண்டிய மாநில ஆண்டு நிதிநிலை அறிக்கையில் தனித்தனியாகக் காட்டப்படுதல் வேண்டும்.

**[2]14. தன்னாட்சி மாவட்டங்கள், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றின் நிருவாகம் பற்றி விசாரணை செய்யவும், அறிக்கை அளிக்கவும் ஆணையத்தை அமர்த்துதல் :**

(1) ஆளுநர், எச்சமயத்திலும், மாநிலத்திலுள்ள தன்னாட்சி மாவட்டங்கள், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றின் நிருவாகம் தொடர்பாக இந்த இணைப்புப்பட்டியலில் 1 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தியின் (இ), (ஈ), (உ), (ஊ) ஆகிய கூறுகளில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகள் உள்ளடங்கலாக அவரால் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடு எதனையும் விசாரணை செய்து அறிக்கை அளிப்பதற்கென ஓர் ஆணையத்தை அமர்த்தலாம்; அல்லது பொதுவியலாக அந்த மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டங்கள், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றின் நிருவாகம் பற்றியும், குறிப்பாக—

(அ) அத்தகைய மாவட்டங்களிலும் வட்டாரங்களிலும் கல்வி மற்றும் மருத்துவ வசதிகளுக்கும் தொடர்பு இணைப்புகளுக்கும் செய்யப்படும் ஏற்பாடு,

(ஆ) அத்தகைய மாவட்டங்களை அல்லது வட்டாரங்களைப் பொறுத்து, புதிய அல்லது தனியுறு சட்டம் எதற்குமான தேவைப்பாடு,

(இ) மாவட்ட மற்றும் வட்டார மன்றங்களால் இயற்றப்பட்ட சட்டங்கள், விதிகள், ஒழுங்குறுத்தும்விதிகள் ஆகியவற்றின் நிருவாகம்

இவற்றைப் பற்றி விசாரணை செய்யவும் அவ்வப்போது அறிக்கை அளிக்கவும் ஓர் ஆணையத்தை அமர்த்தலாம்; மேலும், அத்தகைய ஆணையத்தால் பின்பற்றப்பட வேண்டிய நெறிமுறையை வரையறை செய்யலாம்.

---

1. "அசாம்" என்ற சொல், வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

2. 14 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1995 (42/1995) இன் 2 ஆம் பிரிவினால் பின்வருமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது.—

'14 ஆம் பத்தியின், (2) ஆம் உள்பத்தியில், "அதன் மீது ஆளுநரின் பரிந்துரைகளுடன்" என்ற சொற்கள் விட்டுவிடப்படுதல் வேண்டும்.'.

(2) The report of every such Commission with the recommendations of the Governor with respect thereto shall be laid before the Legislature of the State by the Minister concerned together with an explanatory memorandum regarding the action proposed to be taken thereon by [1][the Government of the State.]

(3) In allocating the business of the Government of the State among his Ministers the Governor may place one of his Ministers specially in charge of the welfare of the autonomous districts and autonomous regions in the State.

**[2]15. Annulment or suspension of acts and resolutions of District and Regional Councils:**

(1) If at any time the Governor is satisfied that an act or resolution of a District or a Regional Council is likely to endanger the safety of India [3][or is likely to be prejudicial to public order], he may annul or suspend such act or resolution and take such steps as he may consider necessary (including the suspension of the Council and the assumption to himself of all or any of the powers vested in or exercisable by the Council) to prevent the commission or continuance of such act, or the giving of effect to such resolution.

(2) Any order made by the Governor under sub-paragraph (1) of this paragraph together with the reasons therefor shall be laid before the Legislature of the State as soon as possible and the order shall, unless revoked by the Legislature of the State, continue in force for a period of twelve months from the date on which it was so made:

Provided that if and so often as a resolution approving the continuance in force of such order is passed by the Legislature of the State, the order shall unless cancelled by the Governor continue in force for a further period of twelve months from the date on which under this paragraph it would otherwise have ceased to operate.

---

1. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch. for "the Government of Assam" (w.e.f. 21-1-1972).
2. Paragraph 15 has been amended in its application to the States of Tripura and Mizoram by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1988 (67 of 1988), s. 2, (w.e.f. 16-12-1988) as under,-
   '(a) in the opening paragraph, for the words "by the Legislature of the State", the words "by him" shall be substituted;
   (b) the proviso shall be omitted.'.
3. Ins. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch. (w.e.f. 2-4-1970).

(2) அத்தகைய ஒவ்வோர் ஆணையத்தின் அறிக்கையும், அதன்மீது ஆளுநரின் பரிந்துரைகளுடன் [1][மாநில அரசு] மேற்கொள்ளவிருக்கும் நடவடிக்கை பற்றிய ஒரு விளக்கக் குறிப்புரையுடன், உரிய அமைச்சரால் மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்கப்படுதல் வேண்டும்.

(3) ஆளுநர், தம் அமைச்சர்களுக்கிடையே மாநில அரசின் அலுவல்களைப் பகிர்ந்தொதுக்குகையில், தம்முடைய அமைச்சர்களில் ஒருவரை, அந்த மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டங்கள், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றின் நலப்பாட்டிற்கு, தனியுறு பொறுப்பு வகிப்பவராக அமர்த்தலாம்.

**[2]15. மாவட்ட மற்றும் வட்டார மன்றங்களின் செயல்களையும் தீர்மானங்களையும் அழித்தறவு செய்தல் அல்லது தற்காலிகமாக நிறுத்தி வைத்தல் :**

(1) ஆளுநர், எச்சமயத்திலேனும், ஒரு மாவட்ட அல்லது ஒரு வட்டார மன்றத்தின் ஒரு செயலோ தீர்மானமோ இந்தியாவின் பாதுகாப்பிற்கு ஆபத்து விளைவிக்கக்கூடும் என்றோ [3][பொது ஒழுங்கமைதிக்குக் குந்தகம் விளைவிக்கக் கூடியது என்றோ] தெளிவுறக்காண்பாராயின், அத்தகைய செயலை அல்லது தீர்மானத்தை அவர் அழித்தறவு செய்யலாம் அல்லது தற்காலிகமாக நிறுத்தி வைக்கலாம்; மேலும், அத்தகைய செயல் செய்யப்படுவதையோ தொடர்ந்து செய்யப்படுவதையோ அத்தகைய தீர்மானத்தைச் செல்திறப்படுத்துவதையோ தடையுறுத்துவதற்கு (மன்றம் தற்காலிகமாக நிறுத்திவைப்பதும், அந்த மன்றத்திடம் உற்றமைந்திருக்கும் அல்லது அதனால் செலுத்தப்படுவதாகும் அதிகாரங்கள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் தாமே மேற்கொள்ளுவதும் உள்ளடங்கலாக) தாம் தேவையெனக் கருதுகிற நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்.

(2) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி ஆளுநரால் இடப்பட்ட ஆணை எதுவும், அதற்கான காரணங்களுடன், இயன்ற அளவு விரைவில், மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்கப்படுதல் வேண்டும்; மேலும், அந்த ஆணை, மாநிலச் சட்டமன்றத்தால் நீக்கறவு செய்யப்பட்டாலன்றி, அந்த ஆணை அவ்வாறு இடப்பட்ட தேதியிலிருந்து பன்னிரெண்டு மாதக் கால அளவுக்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வரும்:

**வரம்புரையாக :** அத்தகைய ஆணை தொடர்ந்து செல்லாற்றலில் இருப்பதற்கு ஒப்பேற்பளிக்கும் ஒரு தீர்மானம், மாநிலச் சட்டமன்றத்தினால் நிறைவேற்றப்பட்டாலும் நிறைவேற்றப்படுந்தோறும், அந்த ஆணை ஆளுநரால் அறவு செய்யப்பட்டாலன்றி, இந்தப் பத்தியின்படி அது பிறவாறு செயற்படுவது அற்றுபோயிருந்திருக்கும் தேதியிலிருந்து மேலும் பன்னிரெண்டு மாதக் கால அளவுக்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்து வரும்.

---

1. "அசாம் அரசு" என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன்71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. 15 ஆம் பத்தி, திரிபுரா மற்றும் மிசோரம் மாநிலங்களுக்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1988 (67/1988) இன் 2 ஆம் பிரிவினால் (16–12–1988 முதல் செல்திறம் பெறுமாறு), பின்வருமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது,–

   '(அ) தொடக்கப் பத்தியில் "மாநிலச் சட்டமன்றத்தால்" என்ற சொற்களுக்கு "அவரால்" என்ற சொல் மாற்றாக அமைக்கப்படுதல் வேண்டும்;

   (ஆ) வரம்புரை விட்டுவிடப்படுதல் வேண்டும்.'.

3. அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

### [1]16. Dissolution of a District or a Regional Council :

[2][(1)] The Governor may on the recommendation of a Commission appointed under paragraph 14 of this Schedule by public notification order the dissolution of a District or a Regional Council, and—

(a) direct that a fresh general election shall be held immediately for the reconstitution of the Council, or

(b) subject to the previous approval of the Legislature of the State assume the administration of the area under the authority of such Council himself or place the administration of such area under the Commission appointed under the said paragraph or any other body considered suitable by him for a period not exceeding twelve months:

Provided that when an order under clause (a) of this paragraph has been made, the Governor may take the action referred to in clause (b) of this paragraph with regard to the administration of the area in question pending the reconstitution of the Council on fresh general election:

Provided further that no action shall be taken under clause (b) of this paragraph without giving the District or the Regional Council, as the case may be, an opportunity of placing its views before the Legislature of the State.

[3][(2) If at any time the Governor is satisfied that a situation has arisen in which the administration of an autonomous district or region cannot be carried on in accordance with the provisions of this Schedule, he may, by public notification, assume to himself all or any of the functions or powers vested in or exercisable by the District Council or, as the case may be, the Regional Council and declare that such functions or powers shall be exercisable by such person or authority as he may specify in this behalf, for a period not exceeding six months:

Provided that the Governor may by a further order or orders extend the operation of the initial order by a period not exceeding six months on each occasion.

---

1. Paragraph 16 has been amended in its application to the States of Tripura and Mizoram by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1988 (67 of 1988) s. 2, (w.e.f. 16-12-1988) as under,--

   '(a) in sub-paragraph (1), the words "subject to the previous approval of the Legislature of the State" occurring in clause (b), and the second proviso shall be omitted;

   (b) for sub-paragraph (3), the following sub-paragraph shall be substituted, namely:—

   "(3) Every order made under sub-paragraph (1) or sub-paragraph (2) of this paragraph, along with the reasons therefor shall be laid before the Legislature of the State.".

2. Paragraph 16 re-numbered as sub-paragraph (1) thereof by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch. (w.e.f. 2-4-1970).

3. Ins. by the Assam Reorganisation (Meghalaya) Act, 1969 (55 of 1969), s. 74 and Fourth Sch. (w.e.f. 2-4-1970).

**[1]16. ஒரு மாவட்ட அல்லது வட்டார மன்றத்தைக் கலைத்தல் :**

[2][(1)] இந்த இணைப்புப்பட்டியலின் 14 ஆம் பத்தியின்படி அமர்த்தப்பட்ட ஓர் ஆணையத்தின் பரிந்துரையின்மீது, ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாக, ஒரு மாவட்ட அல்லது வட்டார மன்றத்தைக் கலைப்பதற்கு ஆணையிடலாம், மேலும் —

(அ) மன்றத்தின் மறுஅமைப்புக்காகப் புதியதொரு பொதுத் தேர்தல் உடனடியாக நடத்தப்படுதல் வேண்டும் என்று பணிக்கலாம், அல்லது

(ஆ) மாநிலச் சட்டமன்றத்தின் முன் ஒப்பேற்புக்கு உட்பட்டு, அந்த மன்றத்தின் அதிகாரத்தின்கீழுள்ள வரையிடத்தின் நிருவாகத்தைத் தாமே மேற்கொள்ளலாம் அல்லது பன்னிரெண்டு மாதங்களுக்கு மேற்படாத ஒரு காலஅளவுக்கு, அத்தகைய வரையிடத்தின் நிருவாகத்தை, மேற்சொன்ன பத்தியின்கீழ் அமர்த்தப்பட்டுள்ள ஆணையத்தின்கீழோ தம்மால் தக்கதெனக் கருதப்படும் பிற குழுமம் எதன்கீழுமோ விட்டுவைக்கலாம்:

**வரம்புரையாக :** இந்தப் பத்தியின் (அ) கூறின்படி ஓர் ஆணை பிறப்பிக்கப்பட்டிருக்கும்போது, ஆளுநர், புதியதொரு பொதுத் தேர்தல் வாயிலாக அந்த மன்றத்தை மறுஅமைப்பு செய்யும் வரையில், தொடர்புள்ள வரையிடத்தின் நிருவாகம் பொறுத்து, இந்தப் பத்தியின் (ஆ) கூறில் சுட்டப்பட்ட நடவடிக்கையை மேற்கொள்ளலாம்.

**மேலும் வரம்புரையாக :** மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு தம் கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு, மாவட்ட மன்றத்திற்கு அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டார மன்றத்திற்கு ஒரு வாய்ப்பளிக்காமல், இந்தப் பத்தியின் (ஆ) கூறின்படி நடவடிக்கை எதுவும் மேற்கொள்ளப்படுதல் ஆகாது.

[3][(2) ஒரு தன்னாட்சி மாவட்டத்தின் அல்லது வட்டாரத்தின் நிருவாகத்தை இந்த இணைப்புப்பட்டியலின் வகையங்களுக்கு இணங்க நடத்த இயலாத ஒரு நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்று ஆளுநர், எச்சமயத்திலேனும், தெளிவுறக்காண்பாராயின், அவர், பொது அறிவிக்கை வாயிலாக, அந்த மாவட்ட மன்றத்திடம் அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டார மன்றத்திடம் உற்றமைந்துள்ள செயற்பணிகள் அல்லது அதனால் செலுத்தப்படத்தக்க அதிகாரங்கள் அனைத்தையுமோ அவற்றில் எதனையுமோ ஆறு மாதத்திற்கு மேற்படாத ஒரு காலஅளவுக்குத் தாமே மேற்கொள்ளவோ இதற்கென அவர் குறித்துரைக்கும் நபரால் அல்லது அதிகாரஅமைப்பால் அத்தகைய செயற்பணிகள் அல்லது அதிகாரங்கள் செலுத்தத்தக்கவை என விளம்பவோ செய்யலாம்:

**வரம்புரையாக :** ஆளுநர், தாம் பிறப்பித்த முதல் ஆணையின் செயற்பாட்டை மேலும் ஓர் ஆணையின் அல்லது ஆணைகளின் வழி, ஒவ்வொரு நிகழ்விலும் ஆறு மாதங்களுக்கு மேற்படாத ஒரு காலஅளவுக்கு நீட்டிக்கலாம்.

---

1. 16 ஆம் பத்தி, திரிபுரா மற்றும் மிசோரம் மாநிலங்களுக்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1988 (67/1988) இன் 2 ஆம் பிரிவினால் (16–12–1988 முதல் செல்திறம் பெறுமாறு), பின்வருமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது,–

   '(அ). (1) ஆம் உள்பத்தியின் (ஆ) கூறில் இடம்பெறுகிற "மாநிலச் சட்டமன்றத்தின் முன் ஒப்பேற்புக்கு உட்பட்டு" என்ற சொற்களும், இரண்டாம் வரம்புரையும் விட்டுவிடப்படுதல் வேண்டும்;

   (ஆ). (3) ஆம் உள்பத்திக்கு மாற்றாக, பின்வரும் உள்பத்தி அமைக்கப்படும், அதாவது:–

   "(3) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி அல்லது (2) ஆம் உள்பத்தியின்படி பிறப்பிக்கப்பட்ட ஆணை ஒவ்வொன்றும், அதற்கான காரணங்களுடன் மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்கப்படுதல் வேண்டும்.".

2. 16 ஆம் பத்தி, அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால், அதன் (1) ஆம் உள்பத்தியாக (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு), மறுஎண்ணிடப்பட்டது.

3. அசாம் மறுஅமைப்புச் (மேகாலயா) சட்டம், 1969 (55/1969) இன் 74 ஆம் பிரிவு மற்றும் நான்காம் இணைப்புப்பட்டியலால் (2–4–1970 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

(3) Every order made under sub-paragraph (2) of this paragraph with the reasons therefor shall be laid before the Legislature of the State and shall cease to operate at the expiration of thirty days from the date on which the State Legislature first sits after the issue of the order, unless, before the expiry of that period it has been approved by that State Legislature.]

**[1]17. Exclusion of areas from autonomous districts in forming constituencies in such districts :**

For the purposes of elections to [2][the Legislative Assembly of Assam or Meghalaya] [3][or Tripura] [4][or Mizoram], the Governor may by order declare that any area within an autonomous district [5][in the State of Assam or Meghalaya [3][or Tripura] [4][or Mizoram], as the case may be], shall not form part of any constituency to fill a seat or seats in the Assembly reserved for any such district but shall form part of a constituency to fill a seat or seats in the Assembly not so reserved to be specified in the order.

[6][**18.** * * *]

**[7]19. Transitional provisions :**

(1) As soon as possible after the commencement of this Constitution the Governor shall take steps for the constitution of a District Council for each autonomous district in the State under this Schedule and, until a District Council is so constituted for an autonomous district, the administration of such district shall be vested in the Governor and the following provisions shall apply to the administration of the areas within such district instead of the foregoing provisions of this Schedule, namely:—

---

1. Paragraph 17 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, so as to insert the following proviso, namely:—

   "Provided that nothing in this paragraph shall apply to the Bodoland Territorial Areas District.".

2. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch. for "the Legislative Assembly of Assam" (w.e.f. 21-1-1972).

3. Ins. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 4 (w.e.f. 1-4-1985).

4. Ins. by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 39 (w.e.f. 20-2-1987).

5. Ins. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch. (w.e.f. 21-1-1972).

6. Paragraph 18 omitted by *ibid.*

7. Paragraph 19 has been amended in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2, so as to insert the following sub-paragraph after sub-paragraph (3), namely :—

   '(4) As soon as possible after the commencement of this Act, and Interim Executive Council for Bodoland Territorial Areas District in Assam shall be formed by the Governor from amongst leaders of the Bodo movement, including the signatories to the Memorandum of Settlement, and shall provide adequate representation to the non-tribal communities in that area:

   Provided that Interim Council shall be for a period of six months during which endeavour to hold the election to the Council shall be made.

   Explanation. — For the purposes of this sub-paragraph, the expression "Memorandum of Settlement" means the Memorandum signed on the 10th day of February, 2003 between Government of India, Government of Assam and Bodo Liberation Tigers.'.

(3) இந்தப் பத்தியின் (2) ஆம் உள்பத்தியின்படி பிறப்பிக்கப்பட்ட ஆணை ஒவ்வொன்றும், அதற்கான காரணங்களுடன், மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்கப்படுதல் வேண்டும்; மேலும், அந்த ஆணை இடப்பட்ட பின்பு மாநிலச் சட்டமன்றம் முதலில் அமருகிற தேதியிலிருந்து முப்பது நாட்கள் கழிவுறுவதன்மேல், அந்தக் காலஅளவு கழிவுறுவதற்கு முன்பே அதற்கு மாநிலச் சட்டமன்றத்தால் ஒப்பேற்பளிக்கப்பட்டிருந்தாலன்றி, அந்த ஆணையின் செயற்பாடு அற்றுப்போய்விடும்.]

**[1]17. தன்னாட்சி மாவட்டங்களில் தேர்தல் தொகுதிகளை உருவாக்குகையில் அந்த மாவட்டங்களிலிருந்து வரையிடங்களை நீக்கிவிடுதல் :**

[2][அசாம் அல்லது மேகாலயா] [3][அல்லது திரிபுரா] [4][அல்லது மிசோரம்] [2][சட்டமன்றப் பேரவைக்குத்] தேர்தல் நடத்துவது பொறுத்து, ஆளுநர், ஆணையின்வழி, [5][நேர்வுக்கேற்ப, அசாம் அல்லது மேகாலயா [3][அல்லது திரிபுரா] [4][அல்லது மிசோரம்] மாநிலத்தில் உள்ள] ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்குள் அமைந்த வரையிடம் எதுவும், அத்தகைய மாவட்டம் ஒன்றுக்குப் பேரவையில் ஒதுக்கப்பட்ட ஒரு பதவியிடத்தை அல்லது பதவியிடங்களை நிரப்புவதற்கான தேர்தல் தொகுதி எதன் பகுதியாகவும் அமைதல் ஆகாது என்றும், ஆனால் அந்த மாவட்டத்திற்கென அவ்வாறு ஒதுக்கப்படாதது என அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் பேரவைப் பதவியிடத்தை அல்லது பதவியிடங்களை நிரப்புவதற்கான ஒரு தேர்தல் தொகுதியின் பகுதியாக அமைதல் வேண்டும் என்றும் விளம்பலாம்.

[6][**18.** * * *]

**[7]19. மாறும் இடைக்காலத்திற்கான வகையங்கள் :**

(1) இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்குப் பின்பு, ஆளுநர், கூடிய விரைவில், மாநிலத்தில் உள்ள ஒவ்வொரு தன்னாட்சி மாவட்டத்திற்கும் ஒரு மாவட்ட மன்றத்தை இந்த இணைப்புப்பட்டியலின்படி அமைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் வேண்டும்; மேலும், ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கு, மாவட்ட மன்றம் அமைக்கப்படுகிற வரையில், அத்தகைய மாவட்டத்தின் நிருவாகம் ஆளுநரிடம் உற்றமையும்; இந்த இணைப்புப்பட்டியலின் மேலேகண்ட வகையங்களுக்கு மாற்றாகப் பின்வரும் வகையங்கள் அத்தகைய மாவட்டத்தில் உள்ள வரையிடங்களின் நிருவாகத்திற்குப் பொருந்தும்:—

---

1. 17 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால் பின்வரும் வரம்புரையைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:–
   "**வரம்புரையாக** : இந்தப் பத்தியிலுள்ள எதுவும், போடோலாந்து ஆட்சிநிலவரை வரையிடப்பகுதிகள் மாவட்டத்திற்குப் பொருந்தாது.".
2. "அசாம் சட்டமன்றப் பேரவை" என்பதற்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
3. அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 4 ஆம் பிரிவினால் (1–4–1985 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
4. மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 39 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
5. வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
6. 18 ஆம் பத்தி, மேற்படிச் சட்டத்தினால் விட்டுவிடப்பட்டது.
7. 19 ஆம் பத்தி, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால், (3) ஆம் உள்பத்திக்குப் பின்பு பின்வரும் உள்பத்தியைப் புகுத்துமாறு திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது, அதாவது:–
   '(4) இந்தச் சட்டத்தின் தொடக்கநிலைக்குப் பிறகு கூடியவிரைவில், அசாமில் உள்ள போடோலாந்து ஆட்சிநிலவரையிடப் பகுதிகள் மாவட்டத்திற்கான இடைக்கால நிருவாக மன்றம், உடன்பாட்டுவிதிக் குறிப்பில் கையொப்பமிட்டவர்கள் உள்ளடங்கலாக, போடா இயக்கத் தலைவர்களிடையேயிருந்து ஆளுநரால் அமைக்கப்படுதல் வேண்டும்; மற்றும் அந்த வரையிடத்திலுள்ள பழங்குடியினத்தவர்கள் அல்லாதவர்களுக்கு போதிய சார்பாற்றத்திற்கு வகை செய்தல் வேண்டும்:

   **வரம்புரையாக** : இடைக்கால மன்றமானது, ஆறு மாதக் காலஅளவிற்கானதாக இருக்கும், அக்காலஅளவின்போது மன்றத்திற்கு தேர்தல் நடத்த முனைந்து முயலுதல் வேண்டும்.

   **விளக்கம்** : இந்த உள்பத்தியின் நோக்கங்களுக்காக "உடன்பாட்டு விதிக்குறிப்பு" என்பது, இந்திய அரசு, அசாம் அரசு மற்றும் போடோ விடுதலைப்புலிகள் ஆகியவர்களுக்கிடையே 2003, பிப்ரவரி 10 ஆம் நாளன்று கையொப்பமிடப்பட்ட விதிக்குறிப்பு என்று பொருள்படும்.'.

(a) no Act of Parliament or of the Legislature of the State shall apply to any such area unless the Governor by public notification so directs; and the Governor in giving such a direction with respect to any Act may direct that the Act shall, in its application to the area or to any specified part thereof, have effect subject to such exceptions or modifications as he thinks fit;

(b) the Governor may make regulations for the peace and good government of any such area and any regulations so made may repeal or amend any Act of Parliament or of the Legislature of the State or any existing law which is for the time being applicable to such area.

(2) Any direction given by the Governor under clause (a) of sub-paragraph (1) of this paragraph may be given so as to have retrospective effect.

(3) All regulations made under clause (b) of sub-paragraph (1) of this paragraph shall be submitted forthwith to the President and, until assented to by him, shall have no effect.

[1][**20. Tribal areas :**

(1) The areas specified in Parts I, II, [2][IIA] and III of the table below shall respectively be the tribal areas within the State of Assam, the State of Meghalaya, [2][the State of Tripura] and the [3][State] of Mizoram.

(2) [4][Any reference in Part I, Part II or Part III of the table below] to any district shall be construed as a reference to the territories comprised within the autonomous district of that name existing immediately before the day appointed under clause (b) of section 2 of the North-Eastern Areas (Reorganisation) Act, 1971:

Provided that for the purposes of clauses (e) and (f) of sub-paragraph (1) of paragraph 3, paragraph 4, paragraph 5, paragraph 6, sub-paragraph (2), clauses (a), (b) and (d) of sub-paragraph (3) and sub-paragraph (4) of paragraph 8 and clause (d) of sub-paragraph (2) of paragraph 10 of this Schedule, no part of the area comprised within the municipality of Shillong shall be deemed to be within the Khasi Hills District.

---

1. Subs. by the North-Eastern Areas (Reorganisation) Act, 1971 (81 of 1971), s. 71(i) and Eighth Sch., for paragraphs 20 and 20A (w.e.f. 21-1-1972) and paragraph 20A further substituted by the Government of Union Territory (Amendment) Act, 1971 (83 of 1971) s. 13 (w.e.f. 29-4-1972).

2. Ins. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 4 (w.e.f. 1-4-1985).

3. Subs. by the State of Mizoram Act, 1986 (34 of 1986), s. 39, for "Union Territory" (w.e.f. 20-2-1987).

4. Subs. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 4, for "any reference in the table below" (w.e.f. 1-4-1985).

(அ) ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாகப் பணித்தாலன்றி, நாடாளுமன்றச் சட்டம் அல்லது மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், அத்தகைய வரையிடம் எதற்கும் பொருந்துதல் ஆகாது; ஆளுநர், சட்டம் எதனையும் பொறுத்து அவ்வாறு பணிப்புரை இடும்போது, அத்தகைய வரையிடத்திற்கு அல்லது குறித்த பகுதி எதற்கும் அந்தச் சட்டத்தைப் பொருந்தச் செய்கையில், அவர் தாம் கருதுகிற விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அது செல்திறம் பெறும் எனப் பணிக்கலாம்;

(ஆ) அத்தகைய வரையிடம் எதன் அமைதிக்காகவும் நல்லாட்சிக்காகவும் ஆளுநர் ஒழுங்குறுத்தும்விதிகளைச் செய்யலாம்; மேலும், அவ்வாறு வகுக்கப்பட்ட ஒழுங்குறுத்தும்விதிகள் எவையும், அத்தகைய வரையிடத்திற்கு அப்போதைக்குப் பொருந்துவதான நாடாளுமன்றச் சட்டம் அல்லது மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதனையும் அல்லது நிலவுறும் சட்டம் எதனையும் நீக்கறவு செய்யலாம் அல்லது திருத்தம் செய்யலாம்.

(2) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின் (அ) கூறின்படி ஆளுநரால் இடப்படுகிற பணிப்புரை எதுவும், முன்மேவு செல்திறம் பெறுமாறு இடப்படலாம்.

(3) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின் (ஆ) கூறின்படி வகுக்கப்பட்ட ஒழுங்குறுத்தும் விதிகள் அனைத்தும் உடனடியாக குடியரசுத்தலைவருக்கு அனுப்பிவைக்கப்படுதல் வேண்டும்; மேலும், அவரால் ஏற்பிசைவளிக்கப்படும் வரையில், அவை செல்திறம் உடையது ஆகாது.

[1][20. பழங்குடியினர் வரையிடங்கள் :

(1) கீழ்க்கண்ட அட்டவணையிலுள்ள I, II, [2][II (அ)], III ஆகிய பகுதிகளில் குறித்துரைக்கப் பட்டுள்ள வரையிடங்கள், முறையே அசாம் மாநிலம், மேகாலயா மாநிலம், [2][திரிபுரா மாநிலம்], மிசோரம் [3][மாநிலம்] ஆகியவற்றில் உள்ள பழங்குடியினர் வரையிடங்களாக இருக்கும்.

(2) [4][கீழ்க்கண்ட அட்டவணையின் I ஆம் பகுதியில், II ஆம் பகுதியில் அல்லது III ஆம் பகுதியில்], மாவட்டம் பற்றிய [4][சுட்டுகை எதுவும்], வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 இன் 2 ஆம் பிரிவின் (ஆ) கூறின்படி குறித்திட்ட நாளுக்கு உடன்முன்பு நிலவிவந்த அதே பெயரை உடைய தன்னாட்சி மாவட்டத்திற்குள் உள்ளடங்கியிருக்கும் ஆட்சிநிலவரைகள் பற்றிய சுட்டுகை எனப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும் :

**வரம்புரையாக :** இந்த இணைப்புப்பட்டியலின் 3 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின் (உ), (ஊ) ஆகிய கூறுகள், 4 ஆம் பத்தி, 5 ஆம் பத்தி, 6 ஆம் பத்தி, 8 ஆம் பத்தியின் (2) ஆம் உள்பத்தி, (3) ஆம் உள்பத்தியின் (அ), (ஆ), (ஈ) ஆகிய கூறுகள், (4) ஆம் உள்பத்தி, 10 ஆம் பத்தியின் (2) ஆம் உள்பத்தியின் (ஈ) கூறு ஆகியவை பொறுத்து, ஷில்லாங் நகராட்சியில் உள்ளடங்கியிருக்கும் வரையிடத்தின் பகுதி எனவும் காஸிக் குன்றுகள் மாவட்டத்திற்குள் உள்ளதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

---

1. 20 மற்றும் 20 (அ) பத்திகளுக்கு, வடகிழக்கு வரையிடங்கள் (மறுஅமைப்பு) சட்டம், 1971 (81/1971) இன் 71 (i) பிரிவு மற்றும் எட்டாம் இணைப்புப்பட்டியலால் (21–1–1972 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டன. மற்றும் 20 (அ) பத்தி, ஒன்றியத்து ஆட்சிநிலவரை அரசுச் (திருத்தம்) சட்டம், 1971 (83/1971) இன் 13 ஆம் பிரிவினால் (29–4–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மீண்டும் மாற்றாக அமைக்கப்பட்டது.
2. அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 4 ஆம் பிரிவினால் (1–4–1985 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. "ஒன்றியத்து ஆட்சிநிலவரை" என்பதற்கு, மிசோரம் மாநிலச் சட்டம், 1986 (34/1986) இன் 39 ஆம் பிரிவினால் (20–2–1987 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.
4. "கீழ்க்கண்ட அட்டவணையில் உள்ள சுட்டுகை எதுவும்" என்பதற்கு, அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 4 ஆம் பிரிவினால் (1–4–1985 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

[1][(3) The reference in Part IIA in the table below to the "Tripura Tribal Areas District" shall be construed as a reference to the territory comprising the tribal areas specified in the First Schedule to the Tripura Tribal Areas Autonomous District Council Act, 1979.]

## TABLE

## PART I

1. The North Cachar Hills District.

2. The Karbi Anglong District.

[2][3. The Bodoland Territorial Area District.]

## PART II

1. Khasi Hills District.

2. Jaintia Hills District.

3. The Garo Hills District.

## [3][PART IIA

Tripura Tribal Areas District]

## Part III

[4]* * *

1. The Chakma District.

[5][2. The Mara District.

3. The Lai District.]

---

1. Ins. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 4 (w.e.f. 1-4-1985).

2. Ins. by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 2003 (44 of 2003), s. 2 (w.e.f. 7-9-2003).

3. Ins. by the Constitution (Forty-ninth Amendment) Act, 1984, s. 4 (w.e.f. 1-4-1985).

4. The words "The Mizo District" omitted by the Government of Union Territories (Amendment) Act, 1971 (83 of 1971), s. 13 (w.e.f. 29-4-1972).

5. Subs. by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1988 (67 of 1988), s. 2, for serial numbers 2 and 3 and the entries relating thereto (w.e.f. 16-12-1988).

[1][(3) கீழ்க்கண்ட அட்டவணையில் II (அ) பகுதியில் ''திரிபுரா பழங்குடியினர் வரையிடங்கள் மாவட்டம்'' என்னும் சுட்டுகை, திரிபுரா பழங்குடியினர் வரையிடங்கள் தன்னாட்சி மாவட்ட மன்றச் சட்டம், 1979 இன் முதலாம் இணைப்புப்பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள பழங்குடியினர் வரையிடங்களை உள்ளடக்கிய ஆட்சிநிலவரையைச் சுட்டுவதாகப் பொருள் கொள்ளப்படுதல் வேண்டும்.]

## அட்டவணை

### பகுதி I

1. வடக்கு கச்சார் குன்றுகள் மாவட்டம்.

2. கர்பி ஆங்கலாங்கு மாவட்டம்.

[2][3. போடோலாந்து ஆட்சிநிலவரையிடப் பகுதிகள் மாவட்டம்.]

### பகுதி II

1. காஸிக் குன்றுகள் மாவட்டம்.

2. ஜயந்தியா குன்றுகள் மாவட்டம்.

3. காரோ குன்றுகள் மாவட்டம்.

### [3][பகுதி II (அ)

திரிபுரா பழங்குடியினர் வரையிடங்கள் மாவட்டம்.]

### பகுதி III

[4]* * *

1. சக்மா மாவட்டம்.

[5][2. மாரா மாவட்டம்.

3. லயீ மாவட்டம்.]

---

1. அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 4 ஆம் பிரிவினால் (1–4–1985 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

2. அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 2003 (44/2003) இன் 2 ஆம் பிரிவினால் (7–9–2003 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

3. அரசமைப்புச் (நாற்பத்து ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1984 இன் 4 ஆம் பிரிவினால் (1–4–1985 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

4. ''பிசோ மாவட்டம்'' என்ற சொற்கள், ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள் அரசுச் (திருத்தம்) சட்டம், 1971 (83/1971) இன் 13 ஆம் பிரிவினால் (29–4–1972 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

5. வரிசை எண்கள் 2 மற்றும் 3 மற்றும் அதனுடன் தொடர்புடைய பதிவுகளுக்கு, அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1988 (67/1988) இன் 2 ஆம் பிரிவினால் (16–12–1988 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.

**[1][20A. Dissolution of the Mizo District Council :**

(1) Notwithstanding anything in this Schedule, the District Council of the Mizo District existing immediately before the prescribed date (hereinafter referred to as the Mizo District Council) shall stand dissolved and cease to exist.

(2) The Administrator of the Union territory of Mizoram may, by one or more orders, provide for all or any of the following matters, namely:—

(a) the transfer, in whole or in part, of the assets, rights and liabilities of the Mizo District Council (including the rights and liabilities under any contract made by it) to the Union or to any other authority;

(b) the substitution of the Union or any other authority for the Mizo District Council, or the addition of the Union or any other authority, as a party to any legal proceedings to which the Mizo District Council is a party;

(c) the transfer or re-employment of any employees of the Mizo District Council to or by the Union or any other authority, the terms and conditions of service applicable to such employees after such transfer or re-employment;

(d) the continuance of any laws, made by the Mizo District Council and in force immediately before its dissolution, subject to such adaptations and modifications, whether by way of repeal or amendment, as the Administrator may make in this behalf, until such laws are altered, repealed or amended by a competent Legislature or other competent authority;

(e) such incidental, consequential and supplementary matters as the Administrator considers necessary.

**Explanation.**— In this paragraph and in paragraph 20B of this Schedule, the expression "prescribed date" means the date on which the Legislative Assembly of the Union territory of Mizoram is duly constituted under and in accordance with the provisions of the Government of Union Territories Act, 1963.

---

1. Subs. by the Government of Union Territories (Amendment) Act, 1971 (83 of 1971), s. 13, for paragraph 20A by paragraphs 20A, 20B and 20C (w.e.f. 29-4-1972).

[1][20 (அ). மிசோ மாவட்ட மன்றத்தைக் கலைத்தல் :

(1) இந்த இணைப்புப்பட்டியலில் எது எவ்வாறிருப்பினும், குறித்திடப்பட்ட தேதிக்கு உடன்முன்பு நிலவிவந்த (இதில் இதன்பின்பு மிசோ மாவட்ட மன்றம் எனச் சுட்டப்படும்) மிசோ மாவட்டத்தினுடைய மாவட்ட மன்றம் கலைக்கப்பட்டு இல்லாததாகிவிடும்.

(2) மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் ஆளுகையர் பின்வரும் பொருட்பாடுகள் அனைத்திற்குமோ அவற்றில் எதற்குமோ ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஆணைகளின்வழி வகைசெய்யலாம், அதாவது:–

(அ) மிசோ மாவட்ட மன்றத்தின் (அதனால் செய்யப்பட்ட ஒப்பந்தம் எதன்படியுமான உரிமைகளும் கடப்பாடுகளும் உள்ளடங்கலாக), சொத்திருப்புகளையும் உரிமைகளையும் கடப்பாடுகளையும் முழுவதுமாகவோ பகுதியாகவோ ஒன்றியத்திற்கு அல்லது பிற அதிகாரஅமைப்பு எதற்கும் மாற்றல் செய்தல்;

(ஆ) மிசோ மாவட்ட மன்றம் ஒரு தரப்பினராக உள்ள சட்ட நடவடிக்கை எதிலும் மிசோ மாவட்ட மன்றத்திற்கு மாற்றாக ஒன்றியம் அல்லது பிற அதிகாரஅமைப்பு எதனையும் ஒரு தரப்பினராக அமைத்தல் அல்லது சேர்த்தல்;

(இ) மிசோ மாவட்ட மன்றத்தில் பணிபுரிபவர்கள் எவரும், ஒன்றியத்திற்கு அல்லது பிற அதிகாரஅமைப்பு எதற்கும் மாற்றல் செய்யப்படுதல் அல்லது அதனால் மீண்டும் வேலைக்கமர்த்தப்படுதல்; அவ்வாறு மாற்றல் செய்ததன் அல்லது மீண்டும் வேலைக்கமர்த்தப்பட்டதன் பின்பு அத்தகைய பணிபுரிபவர்களுக்குப் பொருந்துவதாகும் பணிவரையுரைகள் மற்றும் பணிவரைக்கட்டுகள்;

(ஈ) மிசோ மாவட்ட மன்றத்தினால் இயற்றப்பட்டு, அது கலைக்கப்பட்டதற்கு உடன்முன்பு வரை செல்லாற்றலில் இருந்த சட்டங்கள், அத்தகைய சட்டங்கள் தகுதிறம் வாய்ந்த சட்டமன்றத்தினால் அல்லது தகுதிறம் வாய்ந்த பிற அதிகாரஅமைப்பினால் மாற்றமோ நீக்கறவோ திருத்தமோ செய்யப்படும் வரையில், நீக்கறவு அல்லது திருத்தம் செய்தல் வாயிலாக இதற்கென ஆளுகையர் செய்யும் தழுவமைவுகளுக்கு மற்றும் மாற்றமைவுகளுக்கு உட்பட்டுத் தொடர்ந்து இருந்து வருதல்;

(உ) ஆளுகையர் தேவையெனக் கருதுகிற சார்வுறு, விளைவுறு மற்றும் துணைவுறு பொருட்பாடுகள்.

**விளக்கம்** : இந்த இணைப்புப்பட்டியலின் இந்தப் பத்தியிலும், 20 (ஆ) பத்தியிலும் உள்ள "குறித்திடப்பட்ட தேதி" என்னும் சொற்றொடர், ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள் அரசுச் சட்டம், 1963 இன் வகையங்களின்படியும், அவற்றிற்கு இணங்கியவாறும் மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் சட்டமன்றப் பேரவை முறையாக அமைக்கப்பட்ட தேதி எனப் பொருள்படும்.

---

1. 20 (அ) பத்திக்கு, ஒன்றியத்து ஆட்சிநிலவரைகள் அரசுச் (திருத்தம்) சட்டம், 1971 (83/1971) இன் 13 ஆம் பிரிவினால், 20 (அ), 20 (ஆ) மற்றும் 20 (இ) பத்திகள் (29–4–1972 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

### [1-2]20B. Autonomous regions in the Union territory of Mizoram to be autonomous districts and transitory provisions consequent thereto :

(1) Notwithstanding anything in this Schedule,—

(a) every autonomous region existing immediately before the prescribed date in the Union territory of Mizoram shall, on and from that date, be an autonomous district in that Union territory (hereafter referred to as the corresponding new district) and the Administrator thereof may, by one or more orders, direct that such consequential amendments as are necessary to give effect to the provisions of this clause shall be made in paragraph 20 of this Schedule (including Part III of the table appended to that paragraph) and thereupon the said paragraph and the said Part III shall be deemed to have been amended accordingly;

(b) every Regional Council of an autonomous region in the Union territory of Mizoram existing immediately before the prescribed date (hereafter referred to as the existing Regional Council) shall, on and from that date and until a District Council is duly constituted for the corresponding new district, be deemed to be the District Council of that district (hereafter referred to as the corresponding new District Council).

---

1. After paragraph 20B, the following paragraph has been inserted in its application to the State of Assam by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1995 (42 of 1995), s. 2, namely:—

**"20BA. Exercise of discretionary powers by the Governor in the discharge of his functions :**

The Governor in the discharge of his functions under sub-paragraphs (2) and (3) of paragraph 1, sub-paragraphs (1), (6), sub-paragraph (6A) excluding the first proviso and sub-paragraph (7) of paragraph 2, sub-paragraph (3) of paragraph 3, sub-paragraph (4) of paragraph 4, paragraph 5, sub-paragraph (1) of paragraph 6, sub-paragraph (2) of paragraph 7, sub-paragraph (4) of paragraph 8, sub-paragraph (3) of paragraph 9, sub-paragraph (3) of paragraph 10, sub-paragraph (1) of paragraph 14, sub-paragraph (1) of paragraph 15 and sub-paragraphs (1) and (2) of paragraph 16 of this Schedule, shall, after consulting the Council of Ministers and the North Cachar Hills Autonomous Council or the Karbi Anglong Autonomous Council, as the case may be, take such action as he considers necessary in his discretion.".

2. After paragraph 20B, the following paragraph has been inserted in its application to the States of Tripura and Mizoram, by the Sixth Schedule to the Constitution (Amendment) Act, 1988 (67 of 1988), s. 2, namely: —

**"20BB. Exercise of discretionary powers by the Governor in the discharge of his functions :**

The Governor, in the discharge of his functions under sub-paragraphs (2) and (3) of paragraph 1, sub-paragraphs (1) and (7) of paragraph 2, sub-paragraph (3) of paragraph 3, sub-paragraph (4) of paragraph 4, paragraph 5, sub-paragraph (1) of paragraph 6, sub-paragraph (2) of paragraph 7, sub-paragraph (3) of paragraph 9, sub-paragraph (1) of paragraph 14, sub-paragraph (1) of paragraph 15 and sub-paragraphs and (2) of paragraph 16 of this Schedule, shall, after consulting the Council of Ministers, and if he thinks it necessary, the District Council or the Regional Council concerned, take such action as he considers necessary in his discretion.".

**[1-2]20 (ஆ). மிசோரம் ஒன்றியத்து ஆட்சி நிலவரையில் இருந்த தன்னாட்சி வட்டாரங்கள் தன்னாட்சி மாவட்டங்களாக இருத்தலும், அதற்கு விளைவுறுதலான மாறும் இடைக்கால வகையங்களும் :**

(1) இந்த இணைப்புப்பட்டியலில் எது எவ்வாறிருப்பினும்,–

(அ) குறித்திடப்பட்ட தேதிக்கு உடன்முன்பு மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரையில் நிலவிவந்த ஒவ்வொரு தன்னாட்சி வட்டாரமும், அந்தத் தேதியன்றும் அதுமுதற்கொண்டும் அந்த ஒன்றியத்து ஆட்சிநிலவரையில் (இதன்பின்பு நேரிணையான புதிய மாவட்டம் எனச் சுட்டப்படும்) ஒரு தன்னாட்சி மாவட்டமாக இருக்கும்; மேலும், அதன் ஆளுகையர், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஆணைகளின்வழி, இந்தக் கூறின் வகையங்களைச் செல்திறப்படுத்தத் தேவையான விளைவுறு திருத்தங்கள் இந்த இணைப்புப்பட்டியலின் (அந்தப் பத்திக்குப் பிற்சேர்க்கையாகவுள்ள அட்டவணையின் III ஆம் பகுதி உள்ளடங்கலாக) 20 ஆம் பத்தியில் செய்யப்பட வேண்டும் எனப் பணிக்கலாம்; அதன்பின், மேற்சொன்ன பத்தியும் மேற்சொன்ன III ஆம் பகுதியும் அதற்கிணங்கத் திருத்தப்பட்டிருப்பதாகக் கொள்ளப்படுதல் வேண்டும்;

(ஆ) குறித்திடப்பட்ட தேதிக்கு உடன்முன்பு மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரையில் நிலவிவந்த ஒரு தன்னாட்சி வட்டாரத்தின் (இதன்பின்பு நிலவுறும் வட்டார மன்றம் எனச் சுட்டப்படும்) வட்டார மன்றம் ஒவ்வொன்றும், அந்தத் தேதியன்றும் அதுமுதற்கொண்டும், நேரிணையான புதிய மாவட்டத்திற்கு ஒரு மாவட்ட மன்றம் முறையாக அமைக்கப்படுகிற வரையில், அந்த மாவட்டத்தின் (இதன்பின்பு நேரியணையான புதிய மாவட்ட மன்றம் எனச் சுட்டப்படும்) மாவட்ட மன்றம் எனக் கொள்ளப்படுதல் வேண்டும்;

---

1. 20 (ஆ) பத்திக்குப் பின்பு, அசாம் மாநிலத்திற்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1995 **(42/1995)** இன் **2** ஆம் பிரிவினால், பின்வரும் பத்தி புகுத்தப்பட்டிருக்கிறது, அதாவது:–

**"20 (ஆ)(அ). ஆளுநர் தனது பதவிப்பணிகளை ஆற்றுகையில் தன் உளத்தேர்வின்படியான அதிகாரங்களைச் செலுத்துதல் :** ஆளுநர், இந்த இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பத்தியின் (2), (3) ஆகிய உள்பத்திகள், 2 ஆம் பத்தியின் (1), (6) ஆகிய உள்பத்திகள், முதலாம் வரம்புரை நீங்கலாக (6 (அ)) உள்பத்தி மற்றும் (7) ஆம் உள்பத்தி, 3 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தி, 4 ஆம் பத்தியின் (4) ஆம் உள்பத்தி, 5 ஆம் பத்தி, 6 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தி, 7 ஆம் பத்தியின் (2) ஆம் உள்பத்தி, 8 ஆம் பத்தியின் (4) ஆம் உள்பத்தி, 9 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தி, 10 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தி, 14 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தி, 15 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தி, 16 ஆம் பத்தியின் (1), (2) ஆகிய உள்பத்தியின்படித் தனது பதவிப்பணிகளை ஆற்றுகையில், அமைச்சரவையும் வடக்கு கச்சார் குன்றுகள் தன்னாட்சி மன்றத்தையும் அல்லது, நேர்வுக்கேற்ப, கர்பி ஆங்கலாங்கு தன்னாட்சி மன்றத்தைக் கலந்தாய்வு செய்தபிறகு, தன் உளத்தேர்வுக்கேற்ப தான் தேவையெனக் கருதுகிற நடவடிக்கையை எடுத்தல் வேண்டும்.".

2. 20 (ஆ) பத்திக்குப் பின்பு, திரிபுரா மற்றும் மிசோரம் மாநிலங்களுக்குப் பொருந்துகையில், அரசமைப்பு ஆறாம் இணைப்புப்பட்டியல் (திருத்தம்) சட்டம், 1988 (67/1988) இன் 2 ஆம் பிரிவினால், பின்வரும் பத்தி புகுத்தப்பட்டிருக்கிறது. அதாவது :–

**"20 (ஆ)(ஆ). ஆளுநர் தமது பதவிப்பணிகளை ஆற்றுகையில் தமது உளத்தேர்வுப்படியான அதிகாரங்களைச் செலுத்துதல் : –**

ஆளுநர், இந்த இணைப்புப்பட்டியலின் 1 ஆம் பத்தியின் (2), (3) ஆகிய உள்பத்திகள், 2 ஆம் பத்தியின் (1) மற்றும் (7) உள்பத்திகள், 3 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தி, 4 ஆம் பத்தியின் (4) ஆம் உள்பத்தி, 5 ஆம் பத்தி, 6 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தி, 7 ஆம் பத்தியின் (2) ஆம் உள்பத்தி, 9 ஆம் பத்தியின் (3) ஆம் உள்பத்தி, 14 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தி, 15 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தி, 16 ஆம் பத்தியின் (1), (2) ஆகிய உள்பத்தியின்படித் தனது பதவிப்பணிகளை ஆற்றுகையில், அமைச்சரவையும் தாம் தேவையெனக் கருதினால் தொடர்புடைய மாவட்ட மன்றங்கள் அல்லது வட்டார மன்றங்களைக் கலந்தாய்வு செய்தபின்பு, தன் உளத்தேர்வுக்கேற்ப தான் தேவையெனக் கருதுகிற நடவடிக்கையை எடுத்தல் வேண்டும்.".

(2) Every member whether elected or nominated of an existing Regional Council shall be deemed to have been elected or, as the case may be, nominated to the corresponding new District Council and shall hold office until a District Council is duly constituted for the corresponding new district under this Schedule.

(3) Until rules are made under sub-paragraph (7) of paragraph 2 and sub-paragraph (4) of paragraph 4 of this Schedule by the corresponding new District Council, the rules made under the said provisions by the existing Regional Council and in force immediately before the prescribed date shall have effect in relation to the corresponding new District Council subject to such adaptations and modifications as may be made therein by the Administrator of the Union territory of Mizoram.

(4) The Administrator of the Union territory of Mizoram may, by one or more orders, provide for all or any of the following matters, namely:—

(a) the transfer in whole or in part of the assets, rights and liabilities of the existing Regional Council (including the rights and liabilities under any contract made by it) to the corresponding new District Council;

(b) the substitution of the corresponding new District Council for the existing Regional Council as a party to the legal proceedings to which the existing Regional Council is a party;

(c) the transfer or re-employment of any employees of the existing Regional Council to or by the corresponding new District Council, the terms and conditions of service applicable to such employees after such transfer or re-employment;

(d) the continuance of any laws made by the existing Regional Council and in force immediately before the prescribed date, subject to such adaptations and modifications, whether by way of repeal or amendment, as the Administrator may make in this behalf until such laws are altered, repealed or amended by a competent Legislature or other competent authority;

(e) such incidental, consequential and supplementary matters as the Administrator considers necessary.

(2) நிலவுறும் வட்டார மன்றத்தின் உறுப்பினர் ஒவ்வொருவரும், அவர் தேர்ந்தெடுக்கப்பெற்றிருப்பினும் அல்லது நியமனஞ்செய்யப்பெற்றிருப்பினும், நேரிணையான புதிய மாவட்ட மன்றத்திற்கு அவர் தேர்ந்தெடுக்கப்பெற்றிருக்கிறார் அல்லது நியமனஞ்செய்யப்பெற்றிருக்கிறார் எனக் கொள்ளப்படுவார்; மேலும், நேரிணையான புதிய மாவட்டத்திற்கு ஒரு மாவட்ட மன்றம் இந்த இணைப்புப்பட்டியலின்படி முறையாக அமைக்கப்படுகிற வரையில், அவர் பதவி வகிப்பார்.

(3) நேரிணையான புதிய மாவட்ட மன்றத்தினால் இந்த இணைப்புப்பட்டியலின் 2 ஆம் பத்தியின் (7) ஆம் உள்பத்தியின்படியும், 4 ஆம் பத்தியின் (4) ஆம் உள்பத்தியின்படியும் விதிகள் வகுக்கப்படுகிற வரையில், நிலவுறும் வட்டார மன்றத்தினால் மேற்சொன்ன வகையங்களின்படி வகுக்கப்பட்டு, குறித்திடப்பட்ட தேதிக்கு உடன்முன்பு செல்லாற்றலில் இருந்த விதிகள், மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் ஆளுகையரால் அவற்றில் செய்யப்படுகிற தழுவமைவுகளுக்கு மற்றும் மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, நேரிணையான புதிய மாவட்ட மன்றம் தொடர்பாகச் செல்திறம் உடையன ஆகும்.

(4) மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் ஆளுகையர், பின்வரும் பொருட்பாடுகள் அனைத்திற்குமோ அவற்றில் எதற்குமோ ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஆணைகளின் வழி வகைசெய்யலாம், அதாவது:—

(அ) நிலவுறும் வட்டார மன்றத்தின் (அதனால் செய்யப்பட்ட ஒப்பந்தம் எதன்படியுமான உரிமைகளும் கடப்பாடுகளும் உள்ளடங்கலாக) சொத்திருப்புகளையும் உரிமைகளையும் கடப்பாடுகளையும் முழுவதுமாகவோ பகுதியாகவோ, நேரிணையான புதிய மாவட்ட மன்றத்திற்கு மாற்றல் செய்தல்;

(ஆ) நிலவுறும் வட்டார மன்றம் ஒரு தரப்பினராக உள்ள சட்ட நடவடிக்கையில், நிலவுறும் வட்டார மன்றத்திற்கு மாற்றாக நேரிணையான புதிய மாவட்ட மன்றத்தை ஒரு தரப்பினராக அமைத்தல்;

(இ) நிலவுறும் வட்டார மன்றத்தில் பணிபுரிபவர்கள் எவரும், நேரிணையான புதிய மாவட்ட மன்றத்திற்கு மாற்றல் செய்யப்படுதல் அல்லது அதனால் மீண்டும் வேலைக்கமர்த்தப்படுதல்; அவ்வாறு மாற்றல் செய்ததன் அல்லது மீண்டும் வேலைக்கமர்த்தப்பட்டதன் பின்பு அத்தகைய பணிபுரிபவர்களுக்குப் பொருந்துவதாகும் பணிவரையுரைகள் மற்றும் பணிவரைக்கட்டுகள்;

(ஈ) நிலவுறும் வட்டார மன்றத்தினால் இயற்றப்பட்டுக் குறித்திடப்பட்ட தேதிக்கு உடன்முன்பு செல்லாற்றலில் இருந்த சட்டங்கள்; அத்தகைய சட்டங்கள் தகுதிறம் வாய்ந்த சட்டமன்றத்தினால் அல்லது தகுதிறம் வாய்ந்த பிற அதிகாரஅமைப்பினால் மாற்றமோ நீக்கறவோ திருத்தமோ செய்யப்படும் வரையில், நீக்கறவு அல்லது திருத்தம் செய்தல் வாயிலாக இதற்கென ஆளுகையர் செய்யும் தழுவமைவுகளுக்கு மற்றும் மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, தொடர்ந்து இருந்து வருதல்;

(உ) ஆளுகையர் தேவையெனக் கருதுகிற சார்வுறு, விளைவுறு மற்றும் துணைவுறு பொருட்பாடுகள்.

**20C. Interpretation :**

Subject to any provision made in this behalf, the provisions of this Schedule shall, in their application to the Union territory of Mizoram, have effect—

(1) as if references to the Governor and Government of the State were references to the Administrator of the Union territory appointed under article 239, references to State (except in the expression "Government of the State") were references to the Union territory of Mizoram and references to the State Legislature were references to the Legislative Assembly of the Union territory of Mizoram;

(2) as if—

(a) in sub-paragraph (5) of paragraph 4, the provision for consultation with the Government of the State concerned had been omitted;

(b) in sub-paragraph (2) of paragraph 6, for the words "to which the executive power of the State extends", the words "with respect to which the Legislative Assembly of the Union territory of Mizoram has power to make laws" had been substituted;

(c) in paragraph 13, the words and figures "under article 202" had been omitted.]

**21. Amendment of the Schedule :**

(1) Parliament may from time to time by law amend by way of addition, variation or repeal any of the provisions of this Schedule and, when the Schedule is so amended, any reference to this Schedule in this Constitution shall be construed as a reference to such Schedule as so amended.

(2) No such law as is mentioned in sub-paragraph (1) of this paragraph shall be deemed to be an amendment of this Constitution for the purposes of article 368.

**20 (இ). பொருள்கோள் :**

இதற்கெனச் செய்யப்பட்ட வகையம் எதற்கும் உட்பட்டு, இந்த இணைப்புப்பட்டியலின் வகையங்கள் மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரைக்குப் பொருந்துகையில்—

(1) ஆளுநரையும் மாநில அரசையும் பற்றிய சுட்டுகைகள், 239 ஆம் உறுப்பின்படி அமர்த்தப்பெற்ற ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் ஆளுகையரைப் பற்றிய சுட்டுகைகளாக இருந்தாற்போன்றும் ("மாநில அரசு" என்னும் சொற்றொடரில் தவிர), மாநிலம் பற்றிய சுட்டுகைகள், மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரை பற்றிய சுட்டுகைகளாக இருந்தாற்போன்றும், மாநிலச் சட்டமன்றம் பற்றிய சுட்டுகைகள் மிசோரம் ஒன்றியத்து ஆட்சிநிலவரையின் சட்டமன்றப்பேரவை பற்றிய சுட்டுகைகளாக இருந்தாற்போன்றும்;

(2). (அ). (4) ஆம் பத்தியின் (5) ஆம் உள்பத்தியில் தொடர்புடைய மாநில அரசுடன் கலந்தாய்வு செய்வதற்கான வகையம் விட்டுவிடப்பட்டிருந்தாற்போன்றும்;

(ஆ). (6) ஆம் பத்தியின் (2) ஆம் உள்பத்தியில் "மாநிலத்தின் ஆட்சி அதிகாரம் அளாவுகின்ற" என்னும் சொற்களுக்கு மாற்றாக, "மிசோரம் ஒன்றியத்து ஆட்சி நிலவரையின் சட்டமன்றப்பேரவை சட்டங்களை இயற்ற அதிகாரம் உடைய" என்னும் சொற்கள் அமைக்கப்பட்டிருந்தாற்போன்றும்;

(இ) 13 ஆம் பத்தியில் "202 ஆம் உறுப்பின்படி" என்னும் எண்களும் சொற்களும் விட்டுவிடப்பட்டிருந்தாற்போன்றும்

செல்திறம் உடையன ஆகும்.]

**21. இணைப்புப்பட்டியலின் திருத்தம் :**

(1) இந்த இணைப்புப்பட்டியலின் வகையங்களில் எதனையும் சேர்த்தல், மாறுதல்செய்தல் அல்லது நீக்கறவு செய்தல் வாயிலாக, நாடாளுமன்றம் சட்டத்தினால் அவ்வப்போது திருத்தம் செய்யலாம்; மேலும், இந்த இணைப்புப்பட்டியல் அவ்வாறு திருத்தம் செய்யப்படுகிறபோது இந்த அரசமைப்பில் இந்த இணைப்புப்பட்டியல் பற்றிய சுட்டுகை எதுவும், அவ்வாறு திருத்தம் செய்யப்பட்ட இணைப்புப்பட்டியல் பற்றிய சுட்டுகையாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும்.

(2) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் குறிப்பிடப்பட்ட சட்டம் எதுவும், 368 ஆம் உறுப்பினைப் பொறுத்தவரை, இந்த அரசமைப்பின் ஒரு திருத்தம் எனக் கொள்ளப்படுதல் ஆகாது.

# SEVENTH SCHEDULE

(Article 246)

## List I—Union List

1. Defence of India and every part thereof including preparation for defence and all such acts as may be conducive in times of war to its prosecution and after its termination to effective demobilisation.

2. Naval, military and air forces; any other armed forces of the Union.

[1][2A. Deployment of any armed force of the Union or any other force subject to the control of the Union or any contingent or unit thereof in any State in aid of the civil power; powers, jurisdiction, privileges and liabilities of the members of such forces while on such deployment.]

3. Delimitation of cantonment areas, local self-government in such areas, the constitution and powers within such areas of cantonment authorities and the regulation of house accommodation (including the control of rents) in such areas.

4. Naval, military and air force works.

5. Arms, firearms, ammunition and explosives.

6. Atomic energy and mineral resources necessary for its production.

7. Industries declared by Parliament by law to be necessary for the purpose of defence or for the prosecution of war.

8. Central Bureau of Intelligence and Investigation.

9. Preventive detention for reasons connected with Defence, Foreign Affairs, or the security of India; persons subjected to such detention.

10. Foreign affairs; all matters which bring the Union into relation with any foreign country.

11. Diplomatic, consular and trade representation.

12. United Nations Organisation.

13. Participation in international conferences, associations and other bodies and implementing of decisions made thereat.

14. Entering into treaties and agreements with foreign countries and implementing of treaties, agreements and conventions with foreign countries.

15. War and peace.

16. Foreign jurisdiction.

---

1. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 57 (w.e.f. 3-1-1977).

## ஏழாம் இணைப்புப்பட்டியல்

(246 ஆம் உறுப்பு)

### பட்டியல் I—ஒன்றியத்துப் பட்டியல்

1. புறக்காப்பிற்கான முன்னேற்பாடும், போர்க்காலங்களில் போரை நடத்துவதற்கும் போர் முடிவுற்ற பின்பு திறமான படைக்கலைப்பிற்கும் உகந்ததாக இருக்கும் செயல்கள் அனைத்தும் உள்ளடங்கலாக இந்தியாவிற்கும் அதன் ஒவ்வொரு பகுதிக்குமான புறக்காப்பு.

2. கடல், தரை மற்றும் வான் படைகள்; ஒன்றியத்தின் பிற ஆயுதப்படைகள்.

[1][2அ. மாநிலம் எதிலும் குடியியல் அதிகாரத்திற்கு உதவும் வகையில், ஒன்றியத்து ஆயுதப்படை எதனையுமோ ஒன்றியத்தின் கட்டாள்கைக்கு உட்பட்ட பிற படை எதனையுமோ அதன் படைப்பிரிவு அல்லது உறுப்பு எதனையுமோ செலுத்துதல்; அவ்வாறு செலுத்தப்பட்டிருக்குங்கால், அத்தகைய படைகளின் உறுப்பினர்களுக்குள்ள அதிகாரங்கள், அதிகாரவரம்பு, சிறப்புரிமைகள் மற்றும் பொறுப்படைவுகள்.]

3. பாளைய வரையிடங்களை வரையறுத்தல், அத்தகைய வரையிடங்களில் உள்வரைத் தன்னாட்சியையும், அத்தகைய வரையிடங்களுக்குள்ளே பாளைய அதிகாரஅமைப்புகளையும் அமைத்தல், அவற்றின் அதிகாரங்கள்; மற்றும் அத்தகைய வரையிடங்களில் (வாடகைக் கட்டுப்பாடு உள்ளடங்கலாக) வீட்டுவசதியினை ஒழுங்குறுத்துதல்.

4. கடல், தரை மற்றும் வான் படைகள் தொடர்பான பணிமங்கள்.

5. ஆயுதங்கள், சுடுகருவிகள், படைத்தளவாடங்கள் மற்றும் வெடிபொருள்கள்.

6. அணுஆற்றல் மற்றும் அதனை உண்டாக்குவதற்குத் தேவையான கனிமவள ஆதாரங்கள்.

7. நாட்டின் புறக்காப்பிற்கு அல்லது போர் நடத்துவதற்குத் தேவையானவை என நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும் விசைத்தொழில்கள்.

8. வேவுச்செய்தி மற்றும் புலனாய்வுக்கான மையத் துறையகம்.

9. நாட்டின் புறக்காப்பு, அயல்நாட்டு அலுவற்பாடுகள் அல்லது இந்தியாவின் பாதுகாப்பு தொடர்பான காரணங்களுக்காகத் தடுப்புக்காவலில்வைத்தல்; அத்தகைய காவலில் வைக்கப்பட்டவர்கள்.

10. அயல்நாட்டு அலுவற்பாடுகள்; அயல்நாடு எதனுடனும் ஒன்றியத்தைத் தொடர்புறுத்தும் பொருட்பாடுகள் அனைத்தும்.

11. அரசுத் தூதக, குடிநலத் தூதக மற்றும் வணிகச் சார்பாற்றம்.

12. ஐக்கிய நாடுகள் அமைவனம்.

13. பன்னாட்டிடை மாநாடுகள், கழகங்கள், பிற குழுமங்கள் ஆகியவற்றில் பங்குகொள்ளுதல்; மேலும், அவற்றில் எடுக்கப்படும் முடிபுகளைச் செயல்முறைப்படுத்துதல்.

14. அயல்நாடுகளுடன் உடன்படிக்கைகளையும் உடன்பாடுகளையும் செய்துகொள்ளுதல்; மேலும், அயல்நாடுகளுடனான உடன்படிக்கைகள், உடன்பாடுகள், இணங்காறுகள் ஆகியவற்றைச் செயல்முறைப்படுத்துதல்.

15. போரும் போர்நிறுத்தமும்.

16. அயல்நாட்டு அதிகாரவரம்பு.

---

1. அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 57 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.

17. Citizenship, naturalisation and aliens.

18. Extradition.

19. Admission into, and emigration and expulsion from, India; passports and visas.

20. Pilgrimages to places outside India.

21. Piracies and crimes committed on the high seas or in the air; offences against the law of nations committed on land or the high seas or in the air.

22. Railways.

23. Highways declared by or under law made by Parliament to be national highways.

24. Shipping and navigation on inland waterways, declared by Parliament by law to be national waterways, as regards mechanically propelled vessels; the rule of the road on such waterways.

25. Maritime shipping and navigation, including shipping and navigation on tidal waters; provision of education and training for the mercantile marine and regulation of such education and training provided by States and other agencies.

26. Lighthouses, including lightships, beacons and other provision for the safety of shipping and aircraft.

27. Ports declared by or under law made by Parliament or existing law to be major ports, including their delimitation, and the constitution and powers of port authorities therein.

28. Port quarantine, including hospitals connected therewith; seamen's and marine hospitals.

29. Airways; aircraft and air navigation; provision of aerodromes; regulation and organisation of air traffic and of aerodromes; provision for aeronautical education and training and regulation of such education and training provided by States and other agencies.

30. Carriage of passengers and goods by railway, sea or air, or by national waterways in mechanically propelled vessels.

31. Posts and telegraphs; telephones, wireless, broadcasting and other like forms of communication.

32. Property of the Union and the revenue therefrom, but as regards property situated in a State [1]*** subject to legislation by the State, save in so far as Parliament by law otherwise provides.

[2]* * *

1. The words and letter "specified in Part A of the First Schedule" omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

2. Entry 33 omitted by s. 26, *ibid*.

17. குடிமை, குடிமையாக்கம் மற்றும் அயலவர்கள்.

18. அயல்நாட்டிடம் ஒப்படைப்பு.

19. இந்தியாவிற்குள் வர அனுமதித்தல் இந்தியாவிலிருந்து குடிபெயர்தல் மற்றும் வெளியேற்றுதல்; கடவுச்சீட்டுகள் மற்றும் அயலக நுழைவிசைவு.

20. இந்தியாவிற்கு வெளியேயுள்ள இடங்களுக்கு மேற்கொள்ளும் புனிதப் பயணங்கள்.

21. ஆழ்கடலிலோ வானிலோ இழைக்கப்படும் கொள்ளைகளும் குற்றங்களும்; நாட்டிடைச் சட்டத்திற்கு எதிராக நிலத்திலோ ஆழ்கடலிலோ வானிலோ இழைக்கப்படும் குற்றச்செயல்கள்.

22. இருப்பூர்தியங்கள்.

23. நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ தேசிய நெடுஞ்சாலைகள் என விளம்பப்படும் நெடுஞ்சாலைகள்.

24. எந்திரத்தால் உந்தப்படும் கலங்கள் தொடர்பாக நாடாளுமன்றம் சட்டத்தினால் தேசிய நீர்வழிகள் என விளம்பும் உள்நாட்டு நீர்வழிகளில் கப்பல் போக்குவரத்தும் கப்பல் செலுத்தமும்; அத்தகைய நீர்வழித் தட விதிகள்.

25. ஏற்றவற்றக் கடல்நீர்மீதான கப்பல் போக்குவரத்தும் கப்பல் செலுத்தமும் உள்ளடங்கலாக, கடல்வழிக் கப்பல் போக்குவரத்தும் கப்பல் செலுத்தமும்; வாணிகக் கப்பல் மாலுமிகளுக்கான கல்விக்கும் பயிற்சிக்கும் ஏற்பாடு செய்தல்; மற்றும் மாநிலங்களும் பிற முகமைகளும் அளிக்கும் அத்தகைய கல்வியையும் பயிற்சியையும் ஒழுங்குறுத்துதல்.

26. விளக்குக்கப்பல்கள் உள்ளடங்கலாக கலங்கரைவிளக்கங்கள், வழிகாட்டும் அவிரொளிகள்; மற்றும் கப்பல் போக்குவரத்து, வானூர்திகள் ஆகியவற்றின் பாதுகாப்பிற்கான பிறவகை ஏற்பாடுகள்.

27. நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ அல்லது நிலவறும் சட்டத்தாலோ பெருந்துறைமுகங்கள் என விளம்பப்பட்ட துறைமுகங்கள், அவற்றின் எல்லைகளை வரையறுத்தல் உள்ளடங்கலாக; அவற்றில் துறைமுக அதிகாரஅமைப்புகளை அமைத்தலும் அவற்றின் அதிகாரங்களும்.

28. துறைமுகத்தில் தொற்றுநோய்த்தடை ஒதுக்கம் அதன் தொடர்பான மருத்துவமனைகள் உள்ளடங்கலாக; கடலோடிகள் மற்றும் கடல்துறை மருத்துவமனைகள்.

29. வானூர்தியங்கள், வான்கலம் மற்றும் வான்வழிச் செலுத்தம்; வானூர்தி நிலையங்கள் அமைத்தல்; வான்வழிப் போக்குவரத்தையும், வானூர்தி நிலையங்களையும் ஒழுங்குறுத்துதலும் சீரமைத்தலும்; வானூர்திவியல் கல்விக்கும் பயிற்சிக்கும் ஏற்பாடுசெய்தல் மற்றும் மாநிலங்களும் பிற முகமைகளும் அளிக்கும் அத்தகைய கல்வியையும் பயிற்சியையும் ஒழுங்குறுத்துதல்.

30. பயணிகளையும் சரக்குகளையும் இருப்பூர்தியம், கடல், வான் வழியாகவோ அல்லது எந்திரத்தால் உந்தப்படும் கலங்களில் தேசிய நீர்வழிகளின் வழியாகவோ ஏற்றிச்செல்லுதல்.

31. அஞ்சல் மற்றும் தந்தி; தொலைபேசிகள், கம்பியில்லாத் தந்தி, ஒலிபரப்பு மற்றும் இவைபோன்ற பிற செய்தித் தொடர்பு இணைவங்கள்.

32. ஒன்றியத்தின் சொத்தும் அதிலிருந்து கிடைக்கும் வருவாயும் ஆனால்[1]*** ஒரு மாநிலத்தில் அமைந்துள்ள சொத்தினைப் பொறுத்தவரை, நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகைசெய்திருந்தாலன்றி, அந்த மாநிலச் சட்டங்களுக்கு உட்பட்டது ஆகும்.

[2]* * *

---

1. "முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி (அ) இல் குறித்துரைக்கப்பட்ட", என்ற சொற்கள் மற்றும் எழுத்துக்கள் அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) விட்டுவிடப்பட்டன.

2. 33 ஆம் பதிவு, *மேற்படிச் சட்டத்தின்* 26 ஆம் பிரிவினால் விட்டுவிடப்பட்டது.

34. Courts of wards for the estates of Rulers of Indian States.

35. Public debt of the Union.

36. Currency, coinage and legal tender; foreign exchange.

37. Foreign loans.

38. Reserve Bank of India.

39. Post Office Savings Bank.

40. Lotteries organised by the Government of India or the Government of a State.

41. Trade and commerce with foreign countries; import and export across customs frontiers; definition of customs frontiers.

42. Inter-State trade and commerce.

43. Incorporation, regulation and winding up of trading corporations, including banking, insurance and financial corporations, but not including co-operative societies.

44. Incorporation, regulation and winding up of corporations, whether trading or not, with objects not confined to one State, but not including universities.

45. Banking.

46. Bills of exchange, cheques, promissory notes and other like instruments.

47. Insurance.

48. Stock exchanges and futures markets.

49. Patents, inventions and designs; copyright; trade-marks and merchandise marks.

50. Establishment of standards of weight and measure.

51. Establishment of standards of quality for goods to be exported out of India or transported from one State to another.

52. Industries, the control of which by the Union is declared by Parliament by law to be expedient in the public interest.

53. Regulation and development of oilfields and mineral oil resources; petroleum and petroleum products; other liquids and substances declared by Parliament by law to be dangerously inflammable.

54. Regulation of mines and mineral development to the extent to which such regulation and development under the control of the Union is declared by Parliament by law to be expedient in the public interest.

34. இந்தியக் குறுநில அரசர்களின் உரிமைநிலச் சொத்திற்கான காப்பாயங்கள்.

35. பொதுமக்களிடம் ஒன்றியத்தின் உறுகடன்.

36. பணச் செலாவணி, நாணயமடித்தல், சட்டமுறையான செலாவணி; அயல்நாட்டுச் செலாவணி மாற்றுவீதம்.

37. அயல்நாட்டுப் பெறுகடன்கள்.

38. இந்தியச் சேம வங்கி.

39. அஞ்சலகச் சேமிப்பு வங்கி.

40. இந்திய அரசாலோ ஒரு மாநில அரசாலோ நடத்தப்படும் பரிசுச்சீட்டுகள்.

41. அயல்நாடுகளுடன் வணிகமும் வாணிபமும்; சுங்க எல்லைகள் கடந்த இறக்குமதியும் ஏற்றுமதியும்; சுங்க எல்லைகளை வரையறுத்தல்.

42. மாநிலங்களிடையிலான வணிகமும் வாணிபமும்.

43. கூட்டுறவுச் சங்கங்கள் நீங்கலாக, வங்கித்தொழில், காப்பீட்டு மற்றும் நிதியியல் கூட்டுருமங்கள் உள்ளடங்கலாக, வணிகக் கூட்டுருமங்களைக் கூட்டுருமமாகப் பதிவுசெய்தல், ஒழுங்குறுத்துதல் மற்றும் முடிவுறுத்துதல்.

44. பல்கலைக்கழகங்கள் நீங்கலாக, ஒரு மாநிலத்திற்கு என்று மட்டுமே இல்லாத குறிக்கோள்களைக்கொண்ட கூட்டுருமங்கள் அவை வணிகம் செய்வனவாயினும் அல்லனவாயினும்; அவற்றைக் கூட்டுருமமாகப் பதிவுசெய்தல், ஒழுங்குறுத்துதல் மற்றும் முடிவுறுத்துதல்.

45. வங்கித்தொழில்.

46. மாற்றுச்சீட்டுகள், காசோலைகள், கடனுறுதிச் சீட்டுகள் மற்றும் இவையன்ன பிற முறையாவணங்கள்.

47. காப்பீடு.

48. பங்குமாற்றகங்கள் மற்றும் எதிர்கோள் வாணிபம்.

49. புதுப்புனைவு உரிமைகள், புதுக்கண்டுபிடிப்புகள் மற்றும் வடிவமைப்புகள்; பதிப்புரிமை; வணிகக் குறிகள் மற்றும் வணிகப்பண்டகக் குறிகள்.

50. எடை, அளவு இவற்றின் தரநிலைகளை நிருமித்தல்.

51. இந்தியாவிற்கு வெளியே ஏற்றுமதி செய்யப்படவிருக்கும் அல்லது ஒரு மாநிலத்திலிருந்து மற்றொன்றிற்குக் கொண்டு செல்லப்படவிருக்கும் சரக்குகளுக்கான நயத் தரநிலைகளை நிருமித்தல்.

52. விசைத்தொழில்கள், ஒன்றியத்தின் கட்டாள்கையிலிருப்பது பொதுநலனுக்கு உகந்ததென நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புபவை.

53. எண்ணெய் வயல்களையும் கனிம எண்ணெய் வள ஆதாரங்களையும் ஒழுங்குறுத்துதல் மற்றும் மேம்படுத்துதல்; கல்நாரெண்ணெய், கல்நாரெண்ணெய்யின் ஆகுபொருள்களும்; தீப்பற்றும் அபாயம் கொண்டவை என நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும் பிற நீர்மங்களும் பொருள்களும்.

54. சுரங்கங்களை ஒழுங்குறுத்துவதும் கனிமத்தை மேம்படுத்துவதும் ஒன்றியத்தின் கட்டாள்கையில் இருப்பது பொதுநலனுக்கு உகந்ததென நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புகின்ற அளவுக்கு, அவற்றை ஒழுங்குறுத்துதலும் மேம்படுத்துதலும்.

55. Regulation of labour and safety in mines and oil fields.

56. Regulation and development of inter-State rivers and river valleys to the extent to which such regulation and development under the control of the Union is declared by Parliament by law to be expedient in the public interest.

57. Fishing and fisheries beyond territorial waters.

58. Manufacture, supply and distribution of salt by Union agencies; regulation and control of manufacture, supply and distribution of salt by other agencies.

59. Cultivation, manufacture, and sale for export, of opium.

60. Sanctioning of cinematograph films for exhibition.

61. Industrial disputes concerning Union employees.

62. The institutions known at the commencement of this Constitution as the National Library, the Indian Museum, the Imperial War Museum, the Victoria Memorial and the Indian War Memorial, and any other like institution financed by the Government of India wholly or in part and declared by Parliament by law to be an institution of national importance.

63. The institutions known at the commencement of this Constitution as the Benares Hindu University, the Aligarh Muslim University and the [1][Delhi University; the University established in pursuance of article 371E;] any other institution declared by Parliament by law to be an institution of national importance.

64. Institutions for scientific or technical education financed by the Government of India wholly or in part and declared by Parliament by law to be institutions of national importance.

65. Union agencies and institutions for—

(a) professional, vocational or technical training, including the training of police officers; or

(b) the promotion of special studies or research; or

(c) scientific or technical assistance in the investigation or detection of crime.

66. Co-ordination and determination of standards in institutions for higher education or research and scientific and technical institutions.

67. Ancient and historical monuments and records, and archaeological sites and remains, [2][declared by or under law made by Parliament] to be of national importance.

---

1. Subs. by the Constitution (Thirty-second Amendment) Act, 1973, s. 4, for "Delhi University and" (w.e.f. 1-7-1974).
2. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 27, for "declared by Parliament by law" (w.e.f. 1-11-1956).

**55.** சுரங்கங்களிலும் எண்ணெய் வயல்களிலும் தொழிலாளர் நிலையையும் பாதுகாப்பையும் ஒழுங்குறுத்துதல்.

**56.** மாநிலங்களிடையேயான ஆறுகளையும் ஆற்றுப் பள்ளத்தாக்குகளையும் ஒழுங்குறுத்துவதும் மேம்படுத்துவதும் ஒன்றியத்தின் கட்டாள்கையில் இருப்பது பொதுநலனுக்கு உகந்ததென நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புகின்ற அளவுக்கு, அவற்றை ஒழுங்குறுத்துதலும் மேம்படுத்துதலும்.

**57.** ஆட்சிநிலவரை சார்ந்த கடலுக்கு அப்பால் மீன்பிடித்தலும் மீனளங்களும்.

**58.** ஒன்றியத்து முகமைகளால் உப்பு விளைவிக்கப்படுதல், வழங்கப்படுதல் மற்றும் பகிர்ந்தளிக்கப்படுதல்; பிற முகமைகளால் உப்பு விளைவிக்கப்படுதல், வழங்கப்படுதல், பகிர்ந்தளிக்கப்படுதல் ஆகியவற்றை ஒழுங்குறுத்துதலும் கட்டாள்கை செய்தலும்.

**59.** அபினைப் பயிர்செய்தல், உற்பத்திசெய்தல் மற்றும் ஏற்றுமதிக்காக விற்பனை செய்தல்.

**60.** திரைப்படங்களைத் திரையிட்டுக் காட்டுவதற்கு ஒப்பிசைவு அளித்தல்.

**61.** ஒன்றியத்தின்கீழ் பணிபுரிவோர் தொடர்பான தொழில்துறைப் பூசல்கள்.

**62.** இந்த அரசமைப்பின் தொடக்கநிலையின்போது, தேசிய நூலகம், இந்திய அருங்காட்சியகம், பேரரசுப் போர் அருங்காட்சியகம், விக்டோரியா நினைவகம், இந்தியப்போர் நினைவகம் என வழங்கப்பட்ட நிறுவனங்கள்; மற்றும் இவைபோன்று, இந்திய அரசினால் முழுவதுமாகவோ பகுதியாகவோ நிதி உதவியளிக்கப்பட்டு, தேசிய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நிறுவனம் என நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும் பிற நிறுவனம் எதுவும்.

**63.** இந்த அரசமைப்பின் தொடக்கநிலையின்போது, காசி இந்துப் பல்கலைக்கழகம், அலிகார் முஸ்லீம் பல்கலைக்கழகம், [1][தில்லிப் பல்கலைக்கழகம்] என வழங்கப்பட்ட நிறுவனங்கள்; [1][371 (உ) உறுப்பின்படி நிறுவப்பட்ட பல்கலைக்கழகம்;] தேசிய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நிறுவனம் என நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும் பிற நிறுவனம் எதுவும்.

**64.** இந்திய அரசினால் முழுவதுமாகவோ பகுதியாகவோ நிதி உதவியளிக்கப்பட்டு, தேசிய முக்கியத்துவம் வாய்ந்த நிறுவனங்கள் என நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும் அறிவியல் அல்லது தொழில்நுட்பக் கல்வி நிறுவனங்கள்.

**65.** (அ) காவல்துறை அலுவலர்களுக்கான பயிற்சி உள்ளடங்கலாக, விழைதொழிலில், உறுதொழிலில், அல்லது தொழில்நுட்பத்தில் பயிற்சி; அல்லது

(ஆ) சிறப்புக் கல்விப்பயில்வுகளின் அல்லது ஆராய்ச்சியின் வளர்ப்பாடு.

(இ) குற்றத்தைப் புலனாய்வு செய்வதில் அல்லது துப்பறிவதில் அறிவியல் அல்லது தொழில்நுட்ப உதவி

இவற்றிற்கான ஒன்றியத்து முகமைகளும் நிறுவனங்களும்.

**66.** உயர் கல்விக்கான அல்லது ஆராய்ச்சிக்கான நிறுவனங்களிலும் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப நிறுவனங்களிலும் தரநிலைகளை ஒருங்கிணைத்தலும் நிருணயித்தலும்.

**67.** தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவையென [2][நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ விளம்பப்படும்] தொன்மையும் வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்த நினைவுச் சின்னங்களும் பதிவணங்களும் மற்றும் தொல்பொருள் ஆய்விடங்கள் தொல்பொருள் சிதைவுகளும்.

---

1. "தில்லி பல்கலைக்கழகம் மற்றும்" என்பதற்கு, அரசமைப்புச் (முப்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1973 இன் 4 ஆம் பிரிவினால் (1-7-1974 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. "நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும்" என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 27 ஆம் பிரிவினால் (1-11-1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

68. The Survey of India, the Geological, Botanical, Zoological and Anthropological Surveys of India; Meteorological organisations.

69. Census.

70. Union Public Service; All-India Services; Union Public Service Commission.

71. Union pensions, that is to say, pensions payable by the Government of India or out of the Consolidated Fund of India.

72. Elections to Parliament, to the Legislatures of States and to the offices of President and Vice- President; the Election Commission.

73. Salaries and allowances of members of Parliament, the Chairman and Deputy Chairman of the Council of States and the Speaker and Deputy Speaker of the House of the People.

74. Powers, privileges and immunities of each House of Parliament and of the members and the Committees of each House; enforcement of attendance of persons for giving evidence or producing documents before committees of Parliament or commissions appointed by Parliament.

75. Emoluments, allowances, privileges, and rights in respect of leave of absence, of the President and Governors; salaries and allowances of the Ministers for the Union; the salaries, allowances, and rights in respect of leave of absence and other conditions of service of the Comptroller and Auditor-General.

76. Audit of the accounts of the Union and of the States.

77. Constitution, organisation, jurisdiction and powers of the Supreme Court (including contempt of such Court), and the fees taken therein; persons entitled to practise before the Supreme Court.

78. Constitution and organisation [1][(including vacations)] of the High Courts except provisions as to officers and servants of High Courts; persons entitled to practise before the High Courts.

[2][79. Extension of the jurisdiction of a High Court to, and exclusion of the jurisdiction of a High Court from, any Union territory.]

---

1. Ins. by the Constitution (Fifteenth Amendment) Act, 1963, s. 12 (with retrospective effect).

2. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 29 and Sch. (w.e.f. 1-11-1956).

68. இந்திய நிலஅளவைத் துறை மற்றும் புவியமைப்பியல், தாவரவியல், விலங்கியல், மானிடவியல் ஆகியவற்றிற்கான இந்திய அளவைத் துறைகள்; வானிலை ஆராய்ச்சி அமைவனங்கள்.

69. மக்கள் கணக்கெடுப்பு.

70. ஒன்றியத்து அரசுப் பணியங்கள்; அனைத்திந்தியப் பணியங்கள்; ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணையம்.

71. ஒன்றியத்து ஓய்வூதியங்கள், அதாவது, இந்திய அரசாலோ இந்தியத் திரள்நிதியத்திலிருந்தோ வழங்கப்படும் ஓய்வூதியங்கள்.

72. நாடாளுமன்றத்திற்கும் மாநிலங்களின் சட்டமன்றங்களுக்கும், குடியரசுத்தலைவர், குடியரசுத் துணைத்தலைவர் பதவிகளுக்குமான தேர்தல்கள்; தேர்தல் ஆணையம்.

73. நாடாளுமன்ற உறுப்பினர்கள், மாநிலங்களவைத் தலைவர் மற்றும் துணைத் தலைவர், மக்களவைத் தலைவர் மற்றும் துணைத் தலைவர் ஆகியோரின் வரையூதியங்களும் படித்தொகைகளும்.

74. நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றிற்கும், ஒவ்வோர் அவையின் உறுப்பினர்களுக்கும், குழுக்களுக்கும் உள்ள அதிகாரங்களும் மதிப்புரிமைகளும் காப்புரிமைகளும்; நாடாளுமன்றக் குழுக்களின் முன்பு அல்லது நாடாளுமன்றத்தால் அமர்த்தப்பெற்ற ஆணையங்களின் முன்பு சான்றளிப்பதற்காகவோ ஆவணங்களை முன்னிலைப்படுத்துவதற்காகவோ நபர்களை வருமாறு செய்வித்தல்.

75. குடியரசுத்தலைவர், ஆளுநர்கள் ஆகியோரின் பதவியூதியங்கள், படித்தொகைகள், மதிப்புரிமைகள் மற்றும் வாராமை விடுப்புப் பொறுத்த உரிமைகள்; ஒன்றியத்து அமைச்சர்களின் வரையூதியங்கள் மற்றும் படித்தொகைகள்; கணக்காய்வர்–தலைமைத் தணிக்கையரின் வரையூதியங்கள், படித்தொகைகள், வாராமை விடுப்புப் பொறுத்த உரிமைகள் மற்றும் பிற பணி வரைக்கட்டுகள்.

76. ஒன்றியம், மாநிலங்கள் ஆகியவற்றின் கணக்குகளின் தணிக்கை.

77. உச்ச நீதிமன்றத்தின் அமைப்பு, செயலமைப்பு, அதிகாரவரம்பு மற்றும் (அந்நீதிமன்ற அவமதிப்பு உள்ளடங்கலான) அதிகாரங்கள், அங்கு பெறப்படும் கட்டணங்கள்; உச்ச நீதிமன்றத்தின் முன்பு வழக்குரைஞராகத் தொழிலாற்றுவதற்கு உரிமைகொண்டவர்கள்.

78. உயர் நீதிமன்றங்களின் அலுவலர்கள் மற்றும் பணியாளர்கள் குறித்த ஏற்பாடுகள் நீங்கலாக [1][(பருவவிடுமுறைகள் உள்ளடங்கலாக)] உயர் நீதிமன்றங்களின் அமைப்பும் செயலமைப்பும்; உயர் நீதிமன்றங்களின் முன்பு வழக்குரைஞராகத் தொழிலாற்றுவதற்கு உரிமைகொண்டவர்கள்.

[2][79. ஒன்றியத்து ஆட்சிநிலவரை எதற்கும் ஓர் உயர் நீதிமன்றத்தின் அதிகாரவரம்பை அளாவச் செய்வதும் அந்நிலவரையிலிருந்து ஓர் உயர் நீதிமன்றத்தின் அதிகாரவரம்பை விலக்குவதும்.]

---

1. அரசமைப்புச் (பதினைந்தாம் திருத்தம்) சட்டம், 1963 இன் 12 ஆம் பிரிவினால் (முன்மேவு செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 29 ஆம் பிரிவு மற்றும் இணைப்புப்பட்டியலால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

80. Extension of the powers and jurisdiction of members of a police force belonging to any State to any area outside that State, but not so as to enable the police of one State to exercise powers and jurisdiction in any area outside that State without the consent of the Government of the State in which such area is situated; extension of the powers and jurisdiction of members of a police force belonging to any State to railway areas outside that State.

81. Inter-State migration; inter-State quarantine.

82. Taxes on income other than agricultural income.

83. Duties of customs including export duties.

[1][84. Duties of excise on the following goods manufactured or produced in India, namely:—

(a) petroleum crude;

(b) high speed diesel;

(c) motor spirit (commonly known as petrol);

(d) natural gas;

(e) aviation turbine fuel; and

(f) tobacco and tobacco products.]

85. Corporation tax.

86. Taxes on the capital value of the assets, exclusive of agricultural land, of individuals and companies; taxes on the capital of companies.

87. Estate duty in respect of property other than agricultural land.

88. Duties in respect of succession to property other than agricultural land.

89. Terminal taxes on goods or passengers, carried by railway, sea or air; taxes on railway fares and freights.

90. Taxes other than stamp duties on transactions in stock exchanges and futures markets.

91. Rates of stamp duty in respect of bills of exchange, cheques, promissory notes, bills of lading, letters of credit, and policies of insurance, transfer of shares, debentures, proxies and receipts.

[2]* * *

1. Subs. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 17(a)(i) (w.e.f. 16-9-2016).

2. Entry 92 omitted by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 17(a) (ii) (w.e.f. 16-9-2016).

**80.** மாநிலம் எதனையும் சேர்ந்த காவற்படை உறுப்பினர்களின் அதிகாரங்களையும் அதிகாரவரம்பையும், அந்த மாநிலத்திற்கு வெளியேயுள்ள வரையிடம் எதற்கும் அளாவச்செய்தல்; ஆனால், அவ்வாறு அளாவச்செய்வது, ஒரு மாநிலத்தின் காவல் துறையினர், அந்த மாநிலத்திற்கு வெளியேயுள்ள வரைவிடத்தில் தம் அதிகாரத்தையும் அதிகாரவரம்பையும் அந்த வரையிடம் அமைந்துள்ள மாநில அரசின் இசைவின்றிச் செலுத்துவதற்கு இயல்விப்பதாகாது; மற்றும், மாநிலம் எதனையும் சேர்ந்த காவற்படை உறுப்பினர்களின் அதிகாரங்களையும் அதிகாரவரம்பையும், அந்த மாநிலத்திற்கு வெளியேயுள்ள இருப்பூர்திய வரையிடங்களுக்கு அளாவச் செய்தல்.

**81.** மாநிலம் விட்டு மாநிலம் குடிபெயர்தல்; மாநிலங்களிடையே தொற்றுநோய்த்தடை ஒதுக்கம்.

**82.** வேளாண் வருமானம் அல்லாத பிற வருமானத்தின் மீதான வரிகள்.

**83.** ஏற்றுமதித் தீர்வைகள் உள்ளடங்கலான சுங்கத் தீர்வைகள்.

[1][**84.** இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்ட அல்லது உண்டாக்கப்பட்ட பின்வரும் சரக்குகளின் மீதான ஆயத்தீர்வைகள், அவையாவன:–

(அ) சுத்திகரிக்கப்படாத கல்நார்எண்ணெய்;

(ஆ) அதிவேக டீசல்

(இ) (கல்எண்ணெய் என பொதுவாக வழங்கப்படும்) இயக்க சாராவி ;

(ஈ) இயற்கை எரிவாயு;

(உ) வான்வழிப்பயண விசையாழி எரிபொருள்; மற்றும்

(ஊ) புகையிலை மற்றும் புகையிலை பொருட்கள்.]

**85.** கூட்டுரும வரி.

**86.** வேளாண் நிலம் நீங்கலாக, தனிப்பட்டவர்களின் மற்றும் நிறுமங்களின் சொத்திருப்புகளின் மூலதன மதிப்பு மீதான வரிகள்; நிறுமங்களின் மூலதனம் மீதான வரிகள்;

**87.** வேளாண் நிலம் அல்லாத பிற சொத்தினைப் பொறுத்த இறங்குசொத்துத் தீர்வை.

**88.** வேளாண் நிலம் அல்லாத பிற சொத்திற்கு வாரிசுரிமை பொறுத்த தீர்வைகள்.

**89.** இருப்பூர்தியம், கடல் அல்லது வான் வழியாக ஏற்றிச் செல்லப்படும் சரக்குகள் அல்லது பயணிகள் மீதான சேர்முனைவரிகள்; இருப்பூர்தியப் பயணக்கட்டணங்கள், சரக்குக் கட்டணங்கள் ஆகியவற்றின் மீதான வரிகள்.

**90.** பங்குமாற்றங்களிலும் எதிர்கோள் வாணிபங்களிலும் நடைபெறும் செயல்மானங்கள் மீது விதிக்கப்படும் முத்திரைத் தீர்வைகள் அல்லாத பிற வரிகள்.

**91.** மாற்றுச்சீட்டுகள், காசோலைகள், கடனுறுதிச் சீட்டுகள், கப்பல் சரக்குப் பட்டியல்கள், நாணய உறுதிக் கடிதங்கள், காப்பீட்டு ஆவணங்கள், பங்குகள் உரிமைமாற்றம், கடனீட்டு ஆவணங்கள், மாற்றாள் அமர்த்து ஆவணங்கள், வரவுச்சீட்டுகள் ஆகியவை பொருத்த முத்திரைத் தீர்வை வீதங்கள்.

[2]* * *

---

1. அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 17(அ) (i) ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு) மாற்றாக அமைக்கப்பட்டது.

2. 92 ஆம் பதிவு, அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 17 (அ) (ii) ஆம் பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

[1][92A. Taxes on the sale or purchase of goods other than newspapers, where such sale or purchase takes place in the course of inter-State trade or commerce.]

[2][92B. Taxes on the consignments of goods (whether the consignment is to the person making it or to any other person), where such consignment takes place in the course of inter-State trade or commerce.]

[3]* * *

93. Offences against laws with respect to any of the matters in this List.

94. Inquires, surveys and statistics for the purpose of any of the matters in this List.

95. Jurisdiction and powers of all courts, except the Supreme Court, with respect to any of the matters in this List; admiralty jurisdiction.

96. Fees in respect of any of the matters in this List, but not including fees taken in any court.

97. Any other matter not enumerated in List II or List III including any tax not mentioned in either of those Lists.

## List II—State List

1. Public order (but not including [4][the use of any naval, military or air force or any other armed force of the Union or of any other force subject to the control of the Union or of any contingent or unit thereof] in aid of the civil power).

[5][2. Police (including railway and village police) subject to the provisions of entry 2A of List I.]

3. [6]*** Officers and servants of the High Court; procedure in rent and revenue courts; fees taken in all courts except the Supreme Court.

4. Prisons, reformatories, Borstal institutions and other institutions of a like nature, and persons detained therein; arrangements with other States for the use of prisons and other institutions.

---

1. Ins. by the Constitution (Sixth Amendment) Act, 1956, s. 2 (w.e.f. 11-9-1956).
2. Ins. by the Constitution (Forty-sixth Amendment) Act, 1982, s. 5 (w.e.f. 2-2-1983).
3. Entry 92C was inserted by the Constitution (Eighty-eighth Amendment) Act, 2003, s. 4. and omitted by the Constitution (One Hundred and First Amendment) Act 2016, s.17(a)(ii) (w.e.f.16-9-2016).
4. Subs. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 57, for certain words (w.e.f. 3-1-1977).
5. Subs. by *ibid.*, for Entry 2.
6. Certain words omitted by *ibid.*

[1][92 (அ). செய்திதாள்கள் அல்லாத பிற சரக்குகளின் விற்பனையோ கொள்வினையோ மாநிலங்களுக்கிடையேயுள்ள வணிகத்தின் அல்லது வாணிபத்தின் போது நிகழுமிடத்து, அந்த விற்பனையின் அல்லது கொள்வினையின் மீதான வரிகள். ]

[2][92 (ஆ). சரக்குகளின் அனுப்புகை (அனுப்புகை செய்பவருக்காயினும் பிற எவருக்காயினும்) மாநிலங்களிடையேயுள்ள வணிகத்தின் அல்லது வாணிபத்தின் போது நிகழுமிடத்து, அத்தகைய சரக்குகளை அனுப்புகையின் மீதான வரிகள். ]

[3]* * *

**93.** இந்தப் பட்டியலிலுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த சட்டங்களுக்கு எதிரான குற்றச்செயல்கள்.

**94.** இந்தப் பட்டியலிலுள்ள பொருட்பாடுகளின் நோக்கத்திற்கான விசாரணைகள், அளவை ஆய்வுகள் மற்றும் புள்ளிவிவரங்கள்.

**95.** இந்தப் பட்டியலில் உள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்து, உச்ச நீதிமன்றம் தவிர, அனைத்து நீதிமன்றங்களுக்குமான அதிகாரவரம்பும் அதிகாரங்களும்; கடலாண்மை அதிகாரவரம்பு.

**96.** இந்தப் பட்டியலிலுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த கட்டணங்கள், ஆனால் இவற்றில் நீதிமன்றம் எதிலும் பெறப்படும் கட்டணங்கள் நீங்கலாக.

**97.** II ஆம் பட்டியலில் அல்லது III ஆம் பட்டியலில் குறிப்பிடப்பட்டிராத வரி எதுவும் உள்ளடங்கலாக, அவ்விரு பட்டியல்களில் எதிலும் எண்ணிடப்பட்டிராத பிற பொருட்பாடு எதுவும்.

## பட்டியல் II—மாநிலத்துப் பட்டியல்

1. பொது ஒழுங்கமைதி (ஆனால், [4][கடல், தரை அல்லது வான் படை எதனையும் அல்லது ஒன்றியத்தின் பிற ஆயுதப்படை எதனையும் அல்லது ஒன்றியத்தின் கட்டாள்கைக்கு உட்பட்ட பிற படை எதனையும் அல்லது அதன் படைப்பிரிவு அல்லது உறுப்பு எதனையும்] குடியியல் அதிகாரத்திற்கு உதவும் வகையில் பயன்படுத்துவது இதில் உள்ளடங்காது).

[5][2. காவற்படை (இருப்பூர்தியக் காவற்படை மற்றும் ஊர்க் காவற்படை உள்ளடங்கலாக) 1 ஆம் பட்டியலின் 2(அ) பதிவின் வகையங்களுக்கு உட்பட்டதாகும்.]

3. உயர் நீதிமன்றத்தின் அலுவலர்களும் பணியாளர்களும்[6]***; குத்தகை மற்றும் வருவாய்த்துறை நீதிமன்றங்களில் நெறிமுறை; உச்ச நீதிமன்றம் நீங்கலாக, பிற நீதிமன்றங்கள் அனைத்திலும் பெறப்படும் கட்டணங்கள்.

4. சிறைகள், சீர்திருத்த நிலையங்கள், இளங்குற்றவாளிகள் சீர்திருத்த அமைப்புகள் மற்றும் இவை போல்வதான பிற அமைப்புகள்; அவற்றில் காவலில் வைக்கப்படுபவர்கள்; சிறைகள், பிற அமைப்புகள் இவற்றைப் பயன்படுத்துவதற்குப் பிற மாநிலங்களுடனான ஏற்பாடுகள்.

---

1. அரசமைப்புச் (ஆறாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 2 ஆம் பிரிவினால் (11–9–1956 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
2. அரசமைப்புச் (நாற்பத்து ஆறாம் திருத்தம்) சட்டம், 1982 இன் 5 ஆம் பிரிவினால் (2–2–1983 முதல் செல்திறம் பெறுமாறு) புகுத்தப்பட்டது.
3. 92 (இ) பதிவு. அரசமைப்புச் (எண்பத்து எட்டாம் திருத்தம்) சட்டம், 2003 இன் 4 ஆம் பிரிவினால் புகுத்தப்பட்டது மற்றும் அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 17 (அ) (ii) பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.
4. குறித்தசில சொற்களுக்கு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 57ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டன.
5. 2 ஆம் பதிவுக்கு, *மேற்படிச் சட்டத்தினால்* மாற்றாக அமைக்கப்பட்டது.
6. குறித்தசில சொற்கள், *மேற்படிச் சட்டத்தினால்* விட்டுவிடப்பட்டன.

5. Local government, that is to say, the constitution and powers of municipal corporations, improvement trusts, districts boards, mining settlement authorities and other local authorities for the purpose of local self - government or village administration.

6. Public health and sanitation; hospitals and dispensaries.

7. Pilgrimages, other than pilgrimages to places outside India.

8. Intoxicating liquors, that is to say, the production, manufacture, possession, transport, purchase and sale of intoxicating liquors.

9. Relief of the disabled and unemployable.

10. Burials and burial grounds; cremations and cremation grounds.

[1]11.* * *

12. Libraries, museums and other similar institutions controlled or financed by the State; ancient and historical monuments and records other than those [2][declared by or under law made by Parliament] to be of national importance.

13. Communications, that is to say, roads, bridges, ferries, and other means of communication not specified in List I; municipal tramways; ropeways; inland waterways and traffic thereon subject to the provisions of List I and List III with regard to such waterways; vehicles other than mechanically propelled vehicles.

14. Agriculture, including agricultural education and research, protection against pests and prevention of plant diseases.

15. Preservation, protection and improvement of stock and prevention of animal diseases; veterinary training and practice.

16. Pounds and the prevention of cattle trespass.

17. Water, that is to say, water supplies, irrigation and canals, drainage and embankments, water storage and water power subject to the provisions of entry 56 of List I.

18. Land, that is to say, rights in or over land, land tenures including the relation of landlord and tenant, and the collection of rents; transfer and alienation of agricultural land; land improvement and agricultural loans; colonization.

[3][19. * * *

20. * * *]

---

1. Entry 11 omitted by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 57 (w.e.f. 3-1-1977).

2. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 27, for "declared by parliament by law" (w.e.f. 1-11-1956).

3. Entries 19, 20 and 29 omitted by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 57 (w.e.f. 3-1-1977).

5. உள்ளாட்சி, அதாவது, மாநகராட்சிகள், மேம்பாட்டுப் பொறுப்பமைவுகள், மாவட்டக்கழகங்கள், சுரங்கக் குடியிருப்பு அதிகாரஅமைப்புகள் மற்றும், உள்வரைத் தன்னாட்சியின் அல்லது ஊரின் நோக்கமைந்த பிற உள்ளாட்சி அதிகாரஅமைப்புகள் ஆகியவற்றின் அமைப்பும் அதிகாரங்களும்.

6. மக்கள் நல்வாழ்வும் துப்புரவும்; மருத்துவமனைகளும் மருந்தகங்களும்.

7. புனிதப்பயணங்கள், இந்தியாவுக்கு வெளியேயுள்ள பிற இடங்களுக்கான புனிதப்பயணங்கள் நீங்கலாக.

8. வெறியூட்டும் மதுக்குடிவகைகள், அதாவது, வெறியூட்டும் மதுக்குடி வகைகளை உண்டாக்குதல், உற்பத்திசெய்தல், உடைமையில் வைத்திருத்தல், கொண்டுசெல்லுதல், கொள்வினை மற்றும் விற்பனை.

9. மாற்றுத்திறனாளிகளுக்கும் வேலையமர்த்தம்பெற இயலாதவர்களுக்கும் தீருதவி.

10. புதைத்தலும் இடுகாடுகளும்; எரியூட்டுதலும் சுடுகாடுகளும்.

[1]11. * * *

12. மாநிலத்தின் கட்டாள்கையிலுள்ள அல்லது மாநிலத்தின் நிதி உதவி பெறுகிற நூலகங்கள், அருங்காட்சியகங்கள் மற்றும் இவையன்ன பிற நிறுவனங்கள்; தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை என [2][நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ விளம்பப்படுபவை] நீங்கலான, தொன்மையும் வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்த பிற நினைவுச்சின்னங்கள்.

13. போக்குவரவு இணைவங்கள், அதாவது, சாலைகள், பாலங்கள், தோணித்துறைகள் மற்றும் I ஆம் பட்டியலில் குறித்துரைக்கப்படாத பிற போக்குவரவு இணைவங்கள்; நகராட்சிக் காந்தவண்டிப் பாதைகள் கம்பி வடப்பாதைகள்; நீர்வழிகள் குறித்து I ஆம் பட்டியலிலும் III ஆம் பட்டியலிலும் உள்ள வகையங்களுக்கு உட்பட்டு, உள்நாட்டு நீர்வழிகளும் அவற்றின் வழியான போக்குவரத்தும்; எந்திரத்தால் உந்தப்படும் ஊர்திகள் அல்லாத பிற ஊர்திகள்.

14. வேளாண்மை, வேளாண் கல்வி மற்றும் ஆராய்ச்சி, பயிர்க்கொல்லிகளுக்கு எதிரான பாதுகாப்பு, பயிர் நோய்த்தடுப்பு உள்ளடங்கலாக.

15. கால்நடைகளைப் பேணுதல், பாதுகாத்தல், பெருக்குதல் மற்றும் விலங்கு நோய்த்தடுப்பு; விலங்கின மருத்துவப் பயிற்சியும் தொழிலும்.

16. தொழுவங்களும் கால்நடை அத்துமீறல் தடுப்பும்.

17. நீர், அதாவது, I ஆம் பட்டியலின் 56 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டு, நீர் வழங்குதல், நீர்ப்பாசனம் மற்றும் கால்வாய்கள், வடிகாலும் கரையணைகளும், நீர்த்தேக்கங்களும் புனல் மின்ஆற்றலும்.

18. நிலம், அதாவது, நிலத்திலுள்ளதான அல்லது நிலத்தின் மீதான உரிமைகள், நிலக்கிழார் மற்றும் குத்தகையாளர் தொடர்பு உள்ளடங்கலாக நிலப்பிடிமான முறைகள், குத்தகைகளை ஈட்டுதல்; வேளாண் உரிமையை மாற்றுதலும் மாற்றாக்கம் செய்தலும்; நில மேம்பாடும் வேளாண் பெறுகடன்களும்; குடியமர்த்தம்.

[3][19. * * *

20. * * *]

---

1. 11 ஆம் பதிவு, அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 57 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

2. ''நாடாளுமன்றம் சட்டத்தால் விளம்பும்'' என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 27 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

3. 19, 20 மற்றும் 29 ஆம் பதிவுகள், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 57 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

21. Fisheries.

22. Courts of wards subject to the provisions of entry 34 of List I; encumbered and attached estates.

23. Regulation of mines and mineral development subject to the provisions of List I with respect to regulation and development under the control of the Union

24. Industries subject to the provisions of [1][entries 7 and 52] of List I.

25. Gas and gas-works.

26. Trade and commerce within the State subject to the provisions of entry 33 of List III.

27. Production, supply and distribution of goods subject to the provisions of entry 33 of List III.

28. Markets and fairs.

[2]29.* * *

30. Money-lending and money-lenders; relief of agricultural indebtedness.

31. Inns and inn-keepers.

32. Incorporation, regulation and winding up of corporations, other than those specified in List I, and universities; unincorporated trading, literary, scientific, religious and other societies and associations; co- operative societies.

33. Theatres and dramatic performances; cinemas subject to the provisions of entry 60 of List I; sports, entertainments and amusements.

34. Betting and gambling.

35. Works, lands and buildings vested in or in the possession of the State.

[3]36.***

37. Elections to the Legislature of the State subject to the provisions of any law made by Parliament.

38. Salaries and allowances of members of the Legislature of the State, of the Speaker and Deputy Speaker of the Legislative Assembly and, if there is a Legislative Council, of the Chairman and Deputy Chairman thereof.

---

1. Subs. by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 28, for "entry 52" (w.e.f. 1-11-1956).

2. Entries 19, 20 and 29 omitted by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 57 (w.e.f. 3-1-1977).

3. Entry 36 omitted by the Constitution (Seventh Amendment) Act, 1956, s. 26 (w.e.f. 1-11-1956).

21. மீனளங்கள்.

22. I ஆம் பட்டியலின் 34 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டு, காப்பாயங்கள்; வில்லங்கத்திற்குட்படுத்தப்பட்ட மற்றும் பற்றுகை செய்யப்பட்ட சொத்துக்கள்.

23. ஒன்றியத்தின் கட்டாள்கையின்கீழ் ஒழுங்குறுத்துவதையும் மேம்படுத்துவதையும் பொறுத்து I ஆம் பட்டியலிலுள்ள வகையங்களுக்கு உட்பட்டு, சுரங்கங்களையும் கனிமவள மேம்பாட்டையும் ஒழுங்குறுத்துத்தல்.

24. விசைத்தொழில்கள் I ஆம் பட்டியலின் [1][7, 52 ஆகிய பதிவுகளின்] வகையங்களுக்கு உட்பட்டு.

25. எரிவாயு மற்றும் எரிவாயு உற்பத்திச்சாலை.

26. III ஆம் பட்டியலின் 33 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டு, மாநில எல்லைக்குள்ளான வணிகமும் வாணிபமும்.

27. III ஆம் பட்டியலின் 33 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டு, சரக்குகளை உற்பத்தி செய்தலும் வழங்குதலும் பகிர்ந்தளித்தலும்.

28. அங்காடிகளும் சந்தைகளும்.

[2]29. * * *

30. வட்டித்தொழிலும் வட்டித்தொழில் நடத்துவோரும்; வேளாண் கடன் சுமைத் தீருதவி.

31. வழிப்போக்கர் தங்குமனைகளும் வழிப்போக்கர் தங்குமனை நடத்துவோரும்.

32. I ஆம் பட்டியலில் குறித்துரைக்கப்பட்டவை அல்லாத கூட்டுருமங்களைக் கூட்டுருமங்களாகப் பதிவுசெய்தல், ஒழுங்குறுத்துதல் மற்றும் முடிவுறுத்துதல்; மேலும், பல்கலைக்கழகங்கள்; கூட்டுருமமாகப் பதிவு செய்யப்படாத வணிக, இலக்கிய, அறிவியல், சமய மற்றும் பிற சங்கங்களும் கழகங்களும்; கூட்டுறவுச் சங்கங்கள்.

33. காட்சி அரங்குகளும் நாடக நிகழ்ச்சிகளும்; I ஆம் பட்டியலின் 60 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டு, திரையரங்குகள்; விளையாட்டுகளும் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளும் களிப்பூட்டும் நிகழ்ச்சிகளும்.

34. பந்தயங்கட்டுதலும் சூதாடுதலும்.

35. மாநிலத்திடம் உற்றமைந்துள்ள அல்லது அதன் உடைமையிலுள்ள கட்டுமான வேலைகள், நிலங்கள் மற்றும் கட்டடங்கள்.

[3]36. ***

37. நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தின் வகையங்களுக்கு உட்பட்டு, மாநிலச் சட்டமன்றத்திற்கான தேர்தல்கள்.

38. மாநிலச் சட்டமன்றத்தின் உறுப்பினர்கள், சட்டமன்றப் பேரவைத் தலைவர், துணைத்தலைவர் மற்றும் சட்டமன்ற மேலவை இருக்குமாயின், அதன் தலைவர், துணைத்தலைவர், ஆகியோரின் வரையூதியங்களும் படித்தொகைகளும்.

---

1. "52 ஆம் பதிவு" என்பதற்கு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன், 28 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), மாற்றாக அமைக்கப்பட்டது.

2. 19, 20, 29 ஆகிய பதிவுகள், அரசமைப்புச் (நாற்பத்து இரண்டாம் திருத்தம்) சட்டம், 1976 இன் 57 ஆம் பிரிவினால் (3–1–1977 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டன.

3. 36 ஆம் பதிவு, அரசமைப்புச் (ஏழாம் திருத்தம்) சட்டம், 1956 இன் 26 ஆம் பிரிவினால் (1–11–1956 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

39. Powers, privileges and immunities of the Legislative Assembly and of the members and the committees thereof, and, if there is a Legislative Council, of that Council and of the members and the committees thereof; enforcement of attendance of persons for giving evidence or producing documents before committees of the Legislature of the State.

40. Salaries and allowances of Ministers for the State.

41. State public services; State Public Service Commission.

42. State pensions, that is to say, pensions payable by the State or out of the Consolidated Fund of the State.

43. Public debt of the State.

44. Treasure trove.

45. Land revenue, including the assessment and collection of revenue, the maintenance of land records, survey for revenue purposes and records of rights, and alienation of revenues.

46. Taxes on agricultural income.

47. Duties in respect of succession to agricultural land.

48. Estate duty in respect of agricultural land.

49. Taxes on lands and buildings.

50. Taxes on mineral rights subject to any limitations imposed by Parliament by law relating to mineral development.

51. Duties of excise on the following goods manufactured or produced in the State and countervailing duties at the same or lower rates on similar goods manufactured or produced elsewhere in India:—

(a) alcoholic liquors for human consumption;

(b) opium, Indian hemp and other narcotic drugs and narcotics,

but not including medicinal and toilet preparations containing alcohol or any substance included in sub- paragraph (b) of this entry.

[1]* * *

53. Taxes on the consumption or sale of electricity.

---

1. Entry 52 omitted by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 17(b)(i) (w.e.f. 16-9-2016).

39. சட்டமன்றப் பேரவைக்கும் அதன் உறுப்பினர்களுக்கும் குழுக்களுக்கும், சட்டமன்ற மேலவை இருக்குமாயின், அந்த மேலவைக்கும் அதன் உறுப்பினர்களுக்கும் குழுக்களுக்கும் உள்ள அதிகாரங்களும் மதிப்புரிமைகளும் காப்புரிமைகளும்; மாநிலச் சட்டமன்றக் குழுக்களின் முன்பு சான்றளிப்பதற்காகவோ ஆவணங்களை முன்னிலைப்படுத்துவதற்காகவோ நபர்களை வருமாறு செய்வித்தல்.

40. மாநில அமைச்சர்களின் வரையூதியங்களும் படித்தொகைகளும்.

41. மாநில அரசுப்பணியங்கள்; மாநில அரசுப்பணியாளர் தேர்வாணையம்.

42. மாநில ஓய்வூதியங்கள், அதாவது, மாநிலத்தினாலோ மாநிலத்தின் திரள்நிதியத்திலிருந்தோ வழங்கப்படும் ஓய்வூதியங்கள்.

43. பொதுமக்களிடம் மாநிலத்தின் உறுகடன்.

44. புதையற்பொருள்.

45. வருவாயைக் கணித்தலும் ஈட்டுதலும் உள்ளடங்கலாக, நிலவருவாய்; நிலப் பதிவணங்களைப் பேணிவருதல்; வருவாய் நோக்கங்களுக்கான நில அளவை; உரிமைகளின் பதிவணங்கள்; மற்றும் வருவாயை மாற்றாக்கம் செய்தல்.

46. வேளாண் வருமான வரிகள்.

47. வேளாண் நிலத்திற்கு வாரிசுரிமை பொறுத்த தீர்வைகள்.

48. வேளாண் நிலம் பொறுத்த இறங்குசொத்துத் தீர்வை.

49. நிலங்கள் மற்றும் கட்டடங்கள் மீதான வரிகள்.

50. கனிமவள மேம்பாடு தொடர்பாக நாடாளுமன்றம் சட்டத்தினால் விதிக்கும் வரம்புகள் எவற்றிற்கும் உட்பட்டு, கனிம உரிமைகள் மீதான வரிகள்.

51. மாநிலத்தில் உற்பத்திசெய்யப்பட்ட அல்லது உண்டாக்கப்பட்ட பின்வரும் சரக்குகள் மீதான ஆயத் தீர்வைகளும், இந்தியாவின் பிற இடங்களில் உற்பத்திசெய்யப்பட்ட அல்லது உண்டாக்கப்பட்ட இவை போன்ற சரக்குகளின் அதே வீதத்தில் அல்லது அதைவிடக் குறைந்த வீதத்தில் விதிக்கப்படும் சுங்கத்தீர்வைகளும் ஆயத்தீர்வைகளும்:–

(அ) மனிதர் உட்கொள்வதற்கான வெறியம் கலந்த மதுக்குடி வகைகள்;

(ஆ) அபின், இந்தியக் கஞ்சா மற்றும் பிற மயக்க மருந்துப் பொருள்களும் மயக்கப் பொருள்களும்;

ஆனால், வெறியம் அல்லது இந்தப் பதிவின் (ஆ) உள்பத்தியில் சேர்க்கப்பட்டுள்ள பொருள் எதுவும் அடங்கிய மருந்துக்கும் ஒப்பனைக்குமான தயாரிப்புகள் இதில் உள்ளடங்குவதில்லை.

[1]* * *

53. மின்சார நுகர்மானம் அல்லது விற்பனை மீதான வரிகள்.

---

1. 52 ஆம் பதிவு, அரசமைப்புச் (நூற்று ஒன்றாம் திருத்தம்) சட்டம், 2016 இன் 17(ஆ) (i) பிரிவினால் (16–9–2016 முதல் செல்திறம் பெறுமாறு), விட்டுவிடப்பட்டது.

[1][54. Taxes on the sale of petroleum crude, high speed diesel, motor spirit (commonly known as petrol), natural gas, aviation turbine fuel and alcoholic liquor for human consumption, but not including sale in the course of inter-State trade or commerce or sale in the course of international trade or commerce of such goods.]

[2]55.* * *

56. Taxes on goods and passengers carried by road or on inland waterways.

57. Taxes on vehicles, whether mechanically propelled or not, suitable for use on roads, including tramcars subject to the provisions of entry 35 of List III.

58. Taxes on animals and boats.

59. Tolls.

60. Taxes on professions, trades, callings and employments.

61. Capitation taxes.

[3][62. Taxes on entertainments and amusements to the extent levied and collected by a Panchayat or a Municipality or a Regional Council or a District Council.]

63. Rates of stamp duty in respect of documents other than those specified in the provisions of List I with regard to rates of stamp duty.

64. Offences against laws with respect to any of the matters in this List.

65. Jurisdiction and powers of all courts, except the Supreme Court, with respect to any of the matters in this List.

66. Fees in respect of any of the matters in this List, but not including fees taken in any court.

---

1. Subs. by the Constitution (Sixth Amendment) Act, 1956, s. 2, for entry 54 (w.e.f. 11-9-1956) and further substituted by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 17(b)(ii) (w.e.f. 16-9-2016).

2. Ins. by the Constitution (Forty-second Amendment) Act, 1976, s. 57 (w.e.f. 3-1-1977) and omitted by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 17(b)(iii) (w.e.f. 16-9-2016).

3. Subs. by the Constitution (One Hundred and First Amendment) Act, 2016, s. 17(b)(iv) (w.e.f. 16-9-2016).

(அ) அந்தப் பிறிதோர் அரசியல் கட்சியின் அல்லது, நேர்வுக்கேற்ப, அவ்வாறு இணைந்ததால் உருவான புதிய அரசியல் கட்சி ஒன்றின் உறுப்பினர்களாக ஆகியிருப்பதாகவோ;

(ஆ) அக்கட்சி இணைப்பை ஏற்றுக்கொள்ளாது தனித்ததொரு குழுவமாகச் செயலுறுவதை விரும்பியேற்றுள்ளதாகவோ

கோருகின்றவிடத்து, 2 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி தகுதிக்கேடுற்றவர் ஆகார்; மேலும், 2 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியினைப் பொறுத்தவரை அத்தகைய பிறிதோர் அரசியல் கட்சி அல்லது, நேர்வுக்கேற்ப, புதிய அரசியல் கட்சி அல்லது குழுவம், அவர் சார்ந்துள்ள அரசியல் கட்சியாகவும், இந்த உள்பத்தியினைப் பொறுத்தவரை அவருடைய முதல்சார்பு அரசியல் கட்சியாகவும் அவ்வாறு கட்சிகளின் இணைப்பு ஏற்பட்ட காலத்திலிருந்து கொள்ளப்படும்.

**(2)** இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியினைப் பொறுத்தவரை, அவை உறுப்பினர் ஒருவருடைய முதல்சார்பு அரசியல் கட்சியின் இணைப்பை, அந்தச் சட்டமன்றக் கட்சி உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினருக்குக் குறையாதவர்கள் ஏற்றுக்கொண்டிருந்தால் மட்டுமே அக்கட்சி இணைப்பு ஏற்பட்டிருப்பதாகக் கொள்ளப்படும்.

**5. விலக்கு :**

இந்த இணைப்புப்பட்டியலில் அடங்கியுள்ள எது எவ்வாறிருப்பினும், மக்களவைத் தலைவராகவோ துணைத் தலைவராகவோ அல்லது மாநிலங்களவைத் துணைத் தலைவராகவோ அல்லது ஒரு மாநிலச் சட்டமன்ற மேலவைத் தலைவராகவோ துணைத் தலைவராகவோ அல்லது ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவைத் தலைவராகவோ துணைத் தலைவராகவோ பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற ஒருவர்—

(அ) அத்தகைய பதவிக்குத் தாம் தேர்ந்தெடுக்கப்பெற்றதன் காரணமாக, அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பெற்றதற்கு உடன்முன்பு தாம் சார்ந்திருந்த அரசியல் கட்சியின் உறுப்பினர் பதவியைத் தம்விருப்பாக விட்டிருந்து அதன்பின்பு அப்பதவியைத் தாம் தொடர்ந்து வகித்துவரும் காலத்தில் அதே அரசியல் கட்சியில் மீண்டும் சேராதிருந்தாலும் அல்லது பிறிதோர் அரசியல் கட்சியின் உறுப்பினராக ஆகாதிருந்தாலும், அல்லது

(ஆ) அப்பதவிக்குத் தாம் தேர்ந்தெடுக்கப்பெற்றதன் காரணமாக, அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பெற்றதற்கு உடன்முன்பு தாம் சார்ந்திருந்த அரசியல் கட்சியின் உறுப்பினராக இருப்பதை விட்டதன்பின், அவ்வாறு தாம் பதவி வகிப்பது அற்றுப்போன நிலையில் அதே அரசியல் கட்சியில் மீண்டும் சேர்ந்தாலும்

இந்த இணைப்புப்பட்டியலின்படி தகுதிக்கேடுற்றவர் ஆவதில்லை.

**6. கட்சிமாறுதல் காரணமாக விளையும் தகுதிக்கேடுகள் குறித்த வினாக்களின் மீது முடிவு செய்தல் :**

**(1)** அவை உறுப்பினர் ஒருவர், இந்த இணைப்புப்பட்டியலின்படி தகுதிக்கேடுற்றவராகிவிட்டாரா என்பது பற்றிய வினா எதுவும் எழுமாயின், அவ்வினா, மேலவைத் தலைவரின் அல்லது, நேர்வுக்கேற்ப, பேரவைத் தலைவரின் முடிபிற்காக சுட்டியனுப்பப்படவேண்டும்; அவரது முடிபே அறுதியானது ஆகும்:

Provided that where the question which has arisen is as to whether the Chairman or the Speaker of a House has become subject to such disqualification, the question shall be referred for the decision of such member of the House as the House may elect in this behalf and his decision shall be final.

(2) All proceedings under sub-paragraph (1) of this paragraph in relation to any question as to disqualification of a member of a House under this Schedule shall be deemed to be proceedings in Parliament within the meaning of article 122 or, as the case may be, proceedings in the Legislature of a State within the meaning of article 212.

***7. Bar of jurisdiction of courts :**

Notwithstanding anything in this Constitution, no court shall have any jurisdiction in respect of any matter connected with the disqualification of a member of a House under this Schedule.

**8. Rules :**

(1) Subject to the provisions of sub-paragraph (2) of this paragraph, the Chairman or the Speaker of a House may make rules for giving effect to the provisions of this Schedule, and in particular, and without prejudice to the generality of the foregoing, such rules may provide for—

(a) the maintenance of registers or other records as to the political parties, if any, to which different members of the House belong;

(b) the report which the leader of a legislature party in relation to a member of a House shall furnish with regard to any condonation of the nature referred to in clause (b) of sub-paragraph (1) of paragraph 2 in respect of such member, the time within which and the authority to whom such report shall be furnished;

(c) the reports which a political party shall furnish with regard to admission to such political party of any members of the House and the officer of the House to whom such reports shall be furnished; and

(d) the procedure for deciding any question referred to in sub-paragraph (1) of paragraph 6 including the procedure for any inquiry which may be made for the purpose of deciding such question.

---

*Paragraph 7 declared invalid for want of ratification in accordance with the proviso to cl. (2) of article 368 as per majority opinion in Kihoto Hollohon Vs. Zachilhu and others AIR 1993 SC 412.

**வரம்புரையாக** : மேலவைத்தலைவர் அல்லது பேரவைத்தலைவர் அத்தகைய தகுதிக்கேடுற்றவராகிவிட்டாரா என்ற வினா எழுமிடத்து, இதன் பொருட்டு அந்த அவையின் உறுப்பினர் ஒருவரை அவை தேர்ந்தெடுத்து அவரின் முடிபிற்காக அந்த வினா சுட்டியனுப்பப்படுதல் வேண்டும்; அவரது முடிபே அறுதியானது ஆகும்.

(2) இந்த இணைப்புப்பட்டியலின்படி அவை உறுப்பினர் ஒருவரின் தகுதிக்கேடு குறித்த வினா எதன் தொடர்பாகவும், இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படியான நடவடிக்கைகள் அனைத்தும், 122 ஆம் உறுப்பின் பொருளின்படி நாடாளுமன்ற நடவடிக்கைகளாக அல்லது, நேர்வுக்கேற்ப, 212 ஆம் உறுப்பின் பொருளின்படி ஒரு மாநிலச் சட்டமன்ற நடவடிக்கைகளாகக் கொள்ளப்படும்.

***7. நீதிமன்றங்களின் அதிகாரவரம்பிற்குத் தடை :**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும், இந்த இணைப்புப்பட்டியலின்படி அவையின் உறுப்பினர் ஒருவரது தகுதிக்கேடு தொடர்பான பொருட்பாடு எதனையும் பொறுத்து, நீதிமன்றம் எதுவும் அதிகாரவரம்பு உடையது ஆகாது.

**8. விதிகள் :**

(1) இந்தப் பத்தியின் (2) ஆம் உள்பத்தியின் வகையங்களுக்கு உட்பட்டு, மேலவைத் தலைவர் அல்லது பேரவைத் தலைவர், இந்த இணைப்புப்பட்டியலின் வகையங்களைச் செல்திறப்படுத்துவதற்காக விதிகளை வகுக்கலாம்; மேலும், மேலேகண்டவற்றின் பொதுப்பாங்கிற்குக் குந்தகமின்றி, அத்தகைய விதிகள் குறிப்பாகப் பின்வருவனவற்றிற்கு வகை செய்யலாம்—

(அ) அவையின் வெவ்வேறு உறுப்பினர்கள் சார்ந்துள்ள அரசியல் கட்சிகள் இருப்பின் அவை குறித்த பதிவேடுகளை அல்லது பிற பதிவணங்களைப் பேணி வருதல்;

(ஆ) அவையின் உறுப்பினர் ஒருவர் தொடர்பாக, சட்டமன்றக் கட்சித் தலைவர், அந்த உறுப்பினரைப் பொறுத்து 2 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின் (ஆ) கூறில் சுட்டப்பட்டுள்ள தன்மையதான மன்னிப்பு பற்றி அளிக்கவேண்டியதான அறிக்கை; மற்றும், அந்த அறிக்கை எந்தக் காலத்திற்குள், எந்த அதிகாரஅமைப்பிற்கு அளிக்கப்படவேண்டும் என்பது;

(இ) அவையின் உறுப்பினர்கள் எவரையும் அரசியல் கட்சி ஒன்றில் சேர்த்துக்கொள்வது பற்றி அந்த அரசியல் கட்சி அளிக்கவேண்டியதான அறிக்கைகள்; மேலும், அத்தகைய அறிக்கைகளை அவைப் பதவியாளர் எவருக்கு அளிக்கப்பட வேண்டும் என்பது; மற்றும்

(ஈ) 6 ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியில் சுட்டப்பட்டுள்ள வினா எதனையும் முடிபு செய்வதற்காக நடத்தப்படும் விசாரணைக்கான நெறிமுறை உள்ளடங்கலாக, அத்தகைய வினாவை முடிபு செய்வதற்கான நெறிமுறை.

---

* கிஹோடோ ஹலோஹான் எதிர் சாசில்ஹி மற்றும் பிறர் என்ற வழக்கில் பெரும்பான்மைக் கருத்துப்படி 368 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறின் வரம்புரையின்படி மாநிலங்களின் பின்னேற்பு இன்மையால் 7 ஆம் பத்தி செல்லுந்தமையற்றதென விளம்பப்பட்டுள்ளது ஏ.ஐ.ஆர். 1993 உ.நீ 412.

(2) The rules made by the Chairman or the Speaker of a House under sub-paragraph (1) of this paragraph shall be laid as soon as may be after they are made before the House for a total period of thirty days which may be comprised in one session or in two or more successive sessions and shall take effect upon the expiry of the said period of thirty days unless they are sooner approved with or without modifications or disapproved by the House and where they are so approved, they shall take effect on such approval in the form in which they were laid or in such modified form, as the case may be, and where they are so disapproved, they shall be of no effect.

(3) The Chairman or the Speaker of a House may, without prejudice to the provisions of article 105 or, as the case may be, article 194, and to any other power which he may have under this Constitution direct that any wilful contravention by any person of the rules made under this paragraph may be dealt with in the same manner as a breach of privilege of the House.]

(2) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி மேலவைத்தலைவரால் அல்லது பேரவைத் தலைவரால் விதிகள் வகுக்கப்பட்ட பின்பு, கூடியவிரைவில், ஒரு கூட்டத்தொடரிலோ அல்லது இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட அடுத்தடுத்தக் கூட்டத்தொடர்களிலோ மொத்தம் முப்பது நாட்களுக்கு அவையின்முன் வைக்கப்படுதல் வேண்டும்; மற்றும் அந்த விதிகள் அந்த அவையால் மாற்றமைவுகளுடனோ மாற்றமைவுகளின்றியோ, முன்பே ஒப்பேற்பளிக்கப்படவோ அல்லது ஒப்பேற்பு மறுக்கப்படவோ இல்லையெனில், மேற்சொன்ன முப்பது நாட்கள் காலஅளவு கழிவுற்றதும், அவ்விதிகள் செல்திறம் பெறும்; மேலும், அவற்றிற்கு அவ்வாறு ஒப்பேற்பளிக்கப்படுகிறவிடத்து, அந்த அவையின் முன்பு வைக்கப்பட்ட வடிவத்தில் அல்லது, நேர்வுக்கேற்ப, மாற்றமைவு செய்யப்பட்ட வடிவத்தில் செல்திறம் பெறும்; அந்த விதிகளுக்கு ஒப்பேற்பு மறுக்கப்படுகிறவிடத்து, அவை செல்திறம் இல்லாது போகும்.

(3). 105 ஆம் உறுப்பின் அல்லது, நேர்வுக்கேற்ப, 194 ஆம் உறுப்பின் வகையங்களுக்கும், இந்த அரசமைப்பின்படி தாம் கொண்டிருக்கும் பிற அதிகாரம் எதற்கும் குந்தகமின்றி, மேலவைத் தலைவர் அல்லது பேரவைத் தலைவர், இந்தப் பத்தியின்படி வகுக்கப்பட்டுள்ள விதிகளை ஒரு நபர் வேண்டுமென்றே மீறுகிறார் எனில், அவர், அவையின் மதிப்புரிமையினை மீறுபவர் மீது எடுக்கப்படும் அதே நடவடிக்கைக்கு உள்ளாவார் என்று பணிக்கலாம்.]

# [1][ELEVENTH SCHEDULE

(Article 243G)

1. Agriculture, including agricultural extension.
2. Land improvement, implementation of land reforms, land consolidation and soil conservation.
3. Minor irrigation, water management and watershed development.
4. Animal husbandry, dairying and poultry.
5. Fisheries.
6. Social forestry and farm forestry.
7. Minor forest produce.
8. Small scale industries, including food processing industries.
9. Khadi, village and cottage industries.
10. Rural housing.
11. Drinking water.
12. Fuel and fodder.
13. Roads, culverts, bridges, ferries, waterways and other means of communication.
14. Rural electrification, including distribution of electricity.
15. Non-conventional energy sources.
16. Poverty alleviation programme.
17. Education, including primary and secondary schools.
18. Technical training and vocational education.
19. Adult and non-formal education.
20. Libraries.
21. Cultural activities.

---

1. Added by the Constitution (Seventy-third Amendment) Act, 1992, s. 4 (w.e.f. 24-4-1993).

## [1][பதினொன்றாம் இணைப்புப்பட்டியல்

(243 (எ) உறுப்பு)

1. வேளாண்மை, வேளாண்மை விரிவாக்கம் உள்ளடங்கலாக.
2. நில மேம்பாடு, நிலச்சீர்த்திருத்தங்களைச் செயற்படுத்துதல், நில ஒருங்கிணைப்பு மற்றும் மண்வளப்பாதுகாப்பு.
3. குறுநீர்ப்பாசனம், நீர் மேலாண்மை மற்றும் ஆற்றுப்பள்ளத்தாக்கின் மேம்பாடு.
4. கால்நடைப் பராமரிப்பு, பால்பண்ணை, கோழி வளர்ப்பு.
5. மீன்வளங்கள்.
6. சமூகக் காடுகள் மற்றும் பண்ணைக் காடுகள்.
7. சிறுகாடுகளின் விளைபொருள்.
8. உணவு பதப்படுத்தும் நிறுவனங்கள் உள்ளடங்கலான சிறுதொழில் நிறுவனங்கள்.
9. காதி, ஊர் மற்றும் குடிசைத்தொழில்கள்.
10. ஊரக வீட்டுவசதி.
11. குடிநீர்.
12. எரிபொருள் மற்றும் கால்நடைத் தீவனம்.
13. சாலைகள், தரைப்பாலங்கள், பாலங்கள், தோணித்துறைகள், நீர்வழிகள் மற்றும் போக்குவரவுக்கான பிற இணைவங்கள்.
14. மின்பகிர்மானம் உள்ளடங்கலான, ஊரக மின் வசதி.
15. மரபுசாரா எரிசக்தி வளங்கள்.
16. வறுமை ஒழிப்புத் திட்டம்.
17. தொடக்க மற்றும் இடைநிலைப் பள்ளிகள் உள்ளடங்கலாக, கல்வி.
18. தொழில்நுட்பப் பயிற்சி மற்றும் வாழ்க்கைத் தொழிற்கல்வி.
19. வயதுவந்தோருக்கான மற்றும் முறைசாரா கல்வி.
20. நூலகங்கள்.
21. பண்பாடுசார் நடவடிக்கைகள்.

---

1. அரசமைப்புச் (எழுபத்து மூன்றாம் திருத்தம்) சட்டம், 1992 இன். 4 ஆம் பிரிவினால் (24–4–1993 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.

22. Markets and fairs.
23. Health and sanitation, including hospitals, primary health centres and dispensaries.
24. Family welfare.
25. Women and child development.
26. Social welfare, including welfare of the handicapped and mentally retarded.
27. Welfare of the weaker sections, and in particular, of the Scheduled Castes and the Scheduled Tribes.
28. Public distribution system.
29. Maintenance of community assets.]

22. அங்காடிகளும் சந்தைகளும்.

23. மருத்துவமனைகள், தொடக்க சுகாதார மையங்கள் மற்றும் மருந்தகங்கள் உள்ளடங்கலான சுகாதாரம் மற்றும் துப்புரவு.

24. குடும்பநலன்.

25. பெண்கள் மற்றும் குழந்தைகள் மேம்பாடு.

26. மாற்றுத்திறனாளிகள் மற்றும் மனச்சீர்கேடுற்றவர்களின் நலவாழ்வு உள்ளடங்கலான சமூக நலவாழ்வு.

27. நலிவடைந்த பிரிவினர்களின் குறிப்பாக, பட்டியலில்கண்ட சாதியினர் மற்றும் பட்டியலில்கண்ட பழங்குடியினரின் நலவாழ்வு.

28. பொதுப் பங்கீட்டு முறை.

29. சமுதாயச் சொத்திருப்புகளைப் பேணி வருதல்.]

## [1][TWELFTH SCHEDULE

(Article 243W)

1. Urban planning including town planning.
2. Regulation of land-use and construction of buildings.
3. Planning for economic and social development.
4. Roads and bridges.
5. Water supply for domestic, industrial and commercial purposes.
6. Public health, sanitation conservancy and solid waste management.
7. Fire services.
8. Urban forestry, protection of the environment and promotion of ecological aspects.
9. Safeguarding the interests of weaker sections of society, including the handicapped and mentally retarded.
10. Slum improvement and upgradation.
11. Urban poverty alleviation.
12. Provision of urban amenities and facilities such as parks, gardens, playgrounds.
13. Promotion of cultural, educational and aesthetic aspects.
14. Burials and burial grounds; cremations, cremation grounds; and electric crematoriums.
15. Cattle pounds; prevention of cruelty to animals.
16. Vital statistics including registration of births and deaths.
17. Public amenities including street lighting, parking lots, bus stops and public conveniences.
18. Regulation of slaughter houses and tanneries.]

---

1.Added by the Constitution (Seventy-fourth Amendment) Act, 1992, s. 4 (w.e.f. 1-6-1993).

## [1][பன்னிரெண்டாம் இணைப்புப்பட்டியல்

(243 (ய) உறுப்பு)

1. நகர்ப்புறத் திட்டமிடுதல் உள்ளடங்கலான நகரத் திட்டமிடுதல்.

2. நிலப்பயன்பாட்டை ஒழுங்குறுத்துதல் மற்றும் கட்டடங்களைக் கட்டுதல்.

3. பொருளாதார மற்றும் சமூக மேம்பாட்டிற்குத் திட்டமிடுதல்.

4. சாலைகளும் பாலங்களும்.

5. வீடு, தொழிற்சாலை, வணிகம் ஆகியவற்றின் நோக்கங்களுக்காக நீர் வழங்குதல்.

6. மக்கள் நல்வாழ்வும் துப்புரவு பேணுதலும் மற்றும் திடக்கழிவு மேலாண்மை.

7. தீயணைப்பு சேவைகள்.

8. நகரக் காடுகள் சுற்றுச்சூழல் பாதுகாப்பு, உயிரின வாழ்க்கைச் சூழல்களை மேம்படுத்துதல்.

9. மாற்றுத்திறனாளி மற்றும் மனவளர்ச்சி குன்றியோர் உள்ளடங்கலாகச் சமுதாயத்தில் நலவிடைந்த பிரிவினர்களுக்கான நலன்களைப் பாதுகாத்தல்.

10. குடிசைப் பகுதி மேம்பாடு மற்றும் தரம் உயர்த்துதல்.

11. நகரக வறுமைத்துயர் தணிப்பு.

12. பூங்காக்கள், தோட்டங்கள், விளையாட்டு மைதானங்கள் போன்ற நகரக வசதிகள் மற்றும் வள வசதிகள்.

13. பண்பாடு, கல்வி, அழகியல் சார்ந்த துறைகளை மேம்படுத்துதல்.

14. புதைத்தலும், இடுகாடுகளும்; எரியூட்டுதல் சுடுகாடுகள் மற்றும் மின்சார சுடுகாடுகள்.

15. கால்நடைத் தொழுவங்கள்; விலங்குகள் கொடுமைப்படுத்தப்படுவதைத் தடுத்தல்.

16. பிறப்பு இறப்புப் புள்ளிவிவரங்கள்; பிறப்பு இறப்புகளைப் பதிவு செய்தல் உள்ளடங்கலாக.

17. தெரு விளக்கிடுதல், வண்டி நிறுத்துமிடங்கள், பேருந்து நிறுத்தங்கள், பொதுக் கழிப்பிடங்கள் உள்ளடங்கலான பொது வசதிகள்.

18. இறைச்சிக் கொட்டில்களையும் தோல் பதனிடும் இடங்களையும் ஒழுங்குறுத்துதல்.]

---

1. அரசமைப்புச் (எழுபத்து நான்காம் திருத்தம்) சட்டம், 1992 இன் 4 ஆம் பிரிவினால் (1–6–1993 முதல் செல்திறம் பெறுமாறு) சேர்க்கப்பட்டது.

# APPENDIX - I

## THE CONSTITUTION (APPLICATION TO JAMMU AND KASHMIR) ORDER, 2019

## C.O. 272

In exercise of the powers conferred by clause (1) of article 370 of the Constitution, the President, with the concurrence of the Government of the State of Jammu and Kashmir, is pleased to make the following Order:—

1. (1) This Order may be called the Constitution (Application to Jammu and Kashmir) Order, 2019.

(2) It shall come into force at once, and shall thereupon supersede the Constitution (Application to Jammu and Kashmir) Order, 1954 as amended from time to time.

2. All the provisions of the Constitution, as amended from time to time, shall apply in relation to the State of Jammu and Kashmir and the exceptions and modifications subject to which they shall so apply shall be as follows:–

To article 367, there shall be added the following clause, namely:–

"(4) For the purposes of this Constitution as it applies in relation to the State of Jammu and Kashmir–

(a) references to this Constitution or to the provisions thereof shall be construed as references to the Constitution or the provisions thereof as applied in relation the said State;

(b) references to the person for the time being recognized by the President on the recommendation of the Legislative Assembly of the State as the Sadar-i-Riyasat of Jammu and Kashmir, acting on the advice of the Council of Ministers of the State for the time being in office, shall be construed as references to the Governor of Jammu and Kashmir;

(c) references to the Government of the said State shall be construed as including references to the Governor of Jammu and Kashmir acting on the advice of his Council of Ministers; and

(d) in proviso to clause (3)of article 370 of this Constitution, the expression "Constituent Assembly of the State referred to in clause (2)" shall read Legislative Assembly of the State"."

## பிற்சேர்க்கை–I

## அரசமைப்பு (ஜம்மு– காஷ்மீருக்குப் பொருந்துகை) ஆணை, 2019

### சி.ஒ.272

அரசமைப்பின் 370 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறினால் அளிக்கப்பட்ட அதிகாரங்களைச் செலுத்துகையில், குடியரசுத்தலைவர், ஜம்மு–காஷ்மீர் மாநில அரசின் ஒருங்கிசைவுடன், பின்வரும் ஆணையை பிறப்பிக்க விழைகிறார்:–

1. (1) இந்த ஆணை, அரசமைப்பு (ஜம்மு–காஷ்மீருக்குப் பொருந்துகை) ஆணை, 2019 என்று வழங்கப்பெறும்.

(2) இது, உடனடியாகச் செல்லாற்றல் பெறும்; மற்றும் அதன்பேரில் அவ்வப்போது திருத்தம் செய்யப்பட்டவாறான அரசமைப்பு (ஜம்மு–காஷ்மீருக்குப் பொருந்துகை) ஆணை, 1954 ஐ நீக்கிப் பதிலாக அமையும்.

2. அவ்வப்போது திருத்தம் செய்யப்பட்டவாறான அரசமைப்பின் அனைத்து வகையங்களும், ஜம்மு–காஷ்மீர் மாநிலம் பொறுத்து பொருந்துதல் வேண்டும்; மற்றும் எந்த விதிவிலக்குகளுக்கு மற்றும் மாற்றமைவுகளுக்கு உட்பட்டு அவை அவ்வாறு பொருந்துதல் வேண்டும் என்பது பின்வருமாறு இருத்தல் வேண்டும்:–

367ஆம் உறுப்பிற்கு, பின்வரும் கூறு சேர்க்கப்பட்டு இருக்கும், அதாவது:–

"(4) இந்த அரசமைப்பின் நோக்கங்களுக்கு ஜம்மு–காஷ்மீர் மாநிலம் பொறுத்து அது பொருந்துகிறவாறு–

(அ) இந்த அரசமைப்பிற்கு அல்லது அதன் வகையங்களுக்கான சுட்டுகைகள் மேற்சொன்ன மாநிலம் தொடர்பாகப் பொருந்துகிறவாறு அரசமைப்பிற்கு அல்லது அதன் வகையங்களுக்கான சுட்டுகைகளாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும்;

(ஆ) அப்போதைக்குப் பதவியிலுள்ள மாநில அமைச்சரவையின் தேர்வுரையின் பேரில் செயல்படும் சாதர்–ஐ–ரியாசட் என மாநிலச் சட்டமன்றப் பேரவையின் பரிந்துரையின் பேரில் குடியரசுத்தலைவரால் அப்போதைக்கு ஏற்பளிக்கப்பட்ட நபருக்கான சுட்டுகைகள் ஜம்மு–காஷ்மீர் ஆளுநருக்கான சுட்டுகைகளாகப் பொருள்கொள்ளப்படுதல் வேண்டும்;

(இ) மேற்சொன்ன மாநில அரசுக்கான சுட்டுகைகள் தம் அமைச்சரவையின் தேர்வுரையின் பேரில் செயல்படும் ஜம்மு–காஷ்மீர் ஆளுநருக்கான சுட்டுகைகளை உள்ளடக்குவதாகக் கொள்ளப்பட வேண்டும்; மற்றும்

(ஈ) இந்த அரசமைப்பின் 370 ஆம் உறுப்பின் (3) ஆம் கூறுக்கான வரம்புரையில், "(2) ஆம் கூறில் சுட்டப்பட்ட மாநிலத்தின் அரசமைப்புப் பேரவை" என்ற சொற்றொடர், சட்டமன்றப் பேரவை என வாசிக்கப்படுதல் வேண்டும்"."

# APPENDIX - II

## THE CONSTITUTION (ONE HUNDREDTH AMENDMENT) ACT, 2015

[28th May, 2015.]

An Act further to amend the Constitution of India to give effect to the acquiring of territories by India and transfer of certain territories to Bangladesh in pursuance of the agreement and its protocol entered into between the Governments of India and Bangladesh.

Be it enacted by Parliament in the Sixty-sixth Year of the Republic of India as follows:—

**1. Short title :**

This Act may be called the Constitution (One Hundredth Amendment) Act, 2015.

**2. Definitions :**

In this Act,—

(a) "acquired territory" means so much of the territories comprised in the India-Bangladesh agreement and its protocol and referred to in the First Schedule as are demarcated for the purpose of being acquired by India from Bangladesh in pursuance of the agreement and its protocol referred to in clause (c);

(b) "appointed day" means such date as the Central Government may, by notification in the Official Gazette, appoint as the date for acquisition of territories from Bangladesh and transfer of the territories to Bangladesh in pursuance of the India-Bangladesh agreement and its protocol, after causing the territories to be so acquired and transferred as referred to in the First Schedule and Second Schedule and demarcated for the purpose;

## பிற்சேர்க்கை—II

## அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015

[2015, மே 28.]

இந்திய மற்றும் வங்காளதேச அரசுகளுக்கிடையே செய்துகொள்ளப்பட்ட உடன்பாட்டையும் அதன் வரையறுக்கப்பட்ட விதிமுறையையும் பின்பற்றி இந்தியாவால் ஆட்சிநிலவரைகளை அடையப்பெறுவதையும் குறித்தசில ஆட்சிநிலவரைகளை வங்காளதேசத்திற்கு மாற்றுவதையும் செல்திறப்படுத்துவதற்கு இந்திய அரசமைப்பினை மேலும் திருத்தம் செய்வதற்கானதொரு சட்டம்.

இந்தியக் குடியரசின் அறுபத்து ஆறாம் ஆண்டில் நாடாளுமன்றத்தால் பின்வருமாறு சட்டமியற்றப்படுவதாகுக: —

**1. குறுந்தலைப்பு :**

இந்தச் சட்டம், அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 என்று வழங்கப்பெறும்.

**2. பொருள்வரையறைகள் :**

இந்தச் சட்டத்தில்,—

(அ) "அடையப்பெற்ற ஆட்சிநிலவரை" என்பது, இந்திய—வங்காளதேச உடன்பாட்டிலும் அதன் வரையறுக்கப்பட்டவிதிமுறையிலும் அடங்கியவையும் (இ) கூறில் சுட்டப்பட்டுள்ள உடன்பாட்டையும் அதன் வரையறுக்கப்பட்டவிதிமுறையையும் பின்பற்றி வங்காளதேசத்திலிருந்து இந்தியாவால் அடையப்பெறும் நோக்கத்திற்காக எல்லை வரையறுக்கப்பட்டவையென, முதலாம் இணைப்புப்பட்டியலில் சுட்டப்பட்டுள்ளவையுமான அந்த அளவு ஆட்சிநிலவரைகள் என்று பொருள்படும்;

(ஆ) "குறித்திட்ட நாள்" என்பது, இந்திய—வங்காளதேச உடன்பாட்டையும் அதன் வரையறுக்கப்பட்ட விதிமுறையையும் பின்பற்றி, முதலாம் இணைப்புப்பட்டியலிலும் இரண்டாம் இணைப்புப்பட்டியலிலும் சுட்டப்பட்டுள்ளவாறு ஆட்சிநிலவரைகளை அவ்வாறாக அடையப்பெறுவதையும் மாற்றுவதையும் செய்வித்து அந்த நோக்கத்திற்காக எல்லைவரையறுக்கப்பட்ட பின்பு, வங்காளதேசத்திலிருந்து ஆட்சிநிலவரைகளை அடையப்பெறுவதற்கும் வங்காளதேசத்திற்கு ஆட்சிநிலவரைகளை மாற்றுவதற்குமான தேதி என மைய அரசு அதிகாரமுறை அரசிதழில் அறிவிக்கை வாயிலாகக் குறித்திடலாகும் அத்தகைய தேதி என்று பொருள்படும்;

(c) "India-Bangladesh agreement" means the agreement between the Government of the Republic of India and the Government of the People's Republic of Bangladesh concerning the Demarcation of the Land Boundary between India and Bangladesh and Related Matters dated the 16th day of May, 1974, Exchange of Letters dated the 26th day of December, 1974, the 30th day of December, 1974, the 7th day of October,1982, the 26th day of March, 1992 and protocol to the said agreement dated the 6th day of September, 2011, entered into between the Governments of India and Bangladesh, the relevant extracts of which are set out in the Third Schedule;

(d) "transferred territory", means so much of the territories comprised in the India-Bangladesh agreement and its protocol and referred to in the Second Schedule as are demarcated for the purpose of being transferred by India to Bangladesh in pursuance of the agreements and its protocol referred to in clause (c).

**3. Amendment of First Schedule to Constitution :**

As from the appointed day, in the First Schedule to the Constitution,—

(a) in the paragraph relating to the territories of the State of Assam, the words, brackets and figures "and the territories referred to in Part I of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015, notwithstanding anything contained in clause (a) of section 3 of the Constitution (Ninth Amendment) Act, 1960, so far as it relates to the territories referred to in Part I of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015", shall be added at the end;

(b) in the paragraph relating to the territories of the State of West Bengal, the words, brackets and figures "and also the territories referred to in Part III of the First Schedule but excluding the territories referred to in Part III of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015, notwithstanding anything contained in clause (c) of section 3 of the Constitution (Ninth Amendment) Act, 1960, so far as it relates to the territories referred to in Part III of the First Schedule and the territories referred to in Part III of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015", shall be added at the end;

(இ) “இந்திய–வங்காளதேச உடன்பாடு” என்பது, இந்தியாவுக்கும் வங்காளதேசத்துக்கும் இடையே நில எல்லைக்கோட்டை வரையறை செய்வது தொடர்பாக, இந்தியக் குடியரசின் அரசுக்கும் வங்காளதேச மக்கள் குடியரசின் அரசுக்கும் இடையேயான 1974, மே 16 ஆம் நாள் தேதியிட்ட உடன்பாடும் மற்றும் தொடர்புடைய பொருட்பாடுகளும், 1974, டிசம்பர் 26 ஆம் நாள், 1974, டிசம்பர் 30 ஆம் நாள், 1982, அக்டோபர் 7 ஆம் நாள், 1992, மார்ச் 26 ஆம் நாள் தேதியிடப்பட்ட ஒப்பாவணங்கள் பரிமாற்றம் மற்றும் இந்திய மற்றும் வங்காளதேச அரசுகளுக்கிடையே செய்து கொள்ளப்பட்ட, 2011, செப்டம்பர் 6 ஆம் நாள் தேதியிடப்பட்ட மேற்சொன்ன உடன்பாட்டிற்கான வரையறுக்கப்பட்ட விதிமுறையும் என்று பொருள்படும், அவற்றின் தொடர்புடைய சாரக்குறிப்புகள் மூன்றாம் இணைப்புப்பட்டியலில் விவரிக்கப்படுகின்றன;

(ஈ) “மாற்றப்பட்ட ஆட்சிநிலவரை” என்பது, இந்திய–வங்காளதேச உடன்பாட்டிலும் அதன் வரையறுக்கப்பட்ட விதிமுறையிலும் அடங்கியவையும் மற்றும் (இ) கூறில் சுட்டப்பட்டுள்ள உடன்பாடுகளையும் அதன் வரையறுக்கப்பட்ட விதிமுறைகளையும் பின்பற்றி இந்தியாவால் வங்காளதேசத்திற்கு மாற்றப்படும் நோக்கத்திற்காக இரண்டாம் இணைப்புப்பட்டியலில் சுட்டப்பட்டுள்ளவையுமான எல்லை வரையறுக்கப்பட்ட ஆட்சிநிலவரைகள் என்று பொருள்படும்;

**3. அரசமைப்பின் முதலாம் இணைப்புப்பட்டியலுக்கான திருத்தம் :**

குறித்திட்ட நாளிலிருந்து, அரசமைப்பிற்கான முதலாம் இணைப்புப்பட்டியலில்,—

(அ) அசாம் மாநில ஆட்சிநிலவரைகள் தொடர்புடைய பத்தியில், “மற்றும் அரசமைப்புச் (ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1960 இன் 3 ஆம் பிரிவின் (அ) கூறில் அடங்கிய எது எவ்வாறிருப்பினும், அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இற்கான இணைப்புப்பட்டியலின் பகுதி I இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளுக்கு அது தொடர்புடையதாகிற அளவிற்கு, அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம் 2015 இற்கான இரண்டாம் இணைப்புப்பட்டியலின் பகுதி I இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்” என்ற சொற்களும், அடைப்புக்குறிகளும், எண்களும் இறுதியில் சேர்க்கப்படுதல் வேண்டும்.

(ஆ) மேற்கு வங்காள மாநில ஆட்சிநிலவரைகள் தொடர்புடைய பத்தியில், “மற்றும் அரசமைப்புச் (ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1960 இன் 3 ஆம் பிரிவின் (இ) கூறில் அடங்கிய எது எவ்வாறிருப்பினும், மற்றும் அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி III இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளுக்கும் இரண்டாம் இணைப்புப்பட்டியலின் பகுதி III இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளுக்கும் அது தொடர்புடையதாகிற அளவிற்கு அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இன் முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி III இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளும் கூட, ஆனால், இரண்டாம் இணைப்புப்பட்டியலின் பகுதி III இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் நீங்கலாக” என்ற சொற்களும் அடைப்புக்குறிகளும், எண்களும் இறுதியில் சேர்க்கப்படுதல் வேண்டும்.

(c) in the paragraph relating to the territories of the State of Meghalaya, the words, brackets and figures "and the territories referred to in Part I of the First Schedule but excluding the territories referred to in Part II of the Second Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015", shall be added at the end;

(d) in the paragraph relating to the territories of the State of Tripura, the words, brackets and figures "and the territories referred to in Part II of the First Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015, notwithstanding anything contained in clause (d) of section 3 of the Constitution (Ninth Amendment) Act, 1960, so far as it relates to the territories referred to in Part II of the First Schedule to the Constitution (One Hundredth Amendment) Act, 2015", shall be added at the end.

## THE FIRST SCHEDULE

[See sections 2(a), 2(b) and 3]

### PART I

The acquired territory in relation to Article 2 of the agreement dated the 16th day of May, 1974 and Article 3 (I) (b) (ii) (iii) (iv) (v) of the protocol dated the 6th day of September, 2011.

### PART II

The acquired territory in relation to Article 2 of the agreement dated the 16th day of May, 1974 and Article 3 (I) (c) (i) of the protocol dated the 6th day of September, 2011.

### PART III

The acquired territory in relation to Articles 1(12) and 2 of the agreement dated the 16th day of May, 1974 and Articles 2 (II), 3 (I) (a) (iii) (iv) (v) (vi) of the protocol dated the 6th day of September, 2011.

## THE SECOND SCHEDULE

[See sections 2(b), 2(d) and 3]

### PART I

The transferred territory in relation to Article 2 of the agreement dated 16th day of May, 1974 and Article 3 (I) (d) (i) (ii) of the protocol dated 6th day of September, 2011.

(இ) மேகாலயா மாநில ஆட்சிநிலவரைகள் தொடர்புடைய பத்தியில், "மற்றும் அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இற்கான முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி I இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள், ஆனால் இரண்டாம் இணைப்புப்பட்டியலின் பகுதி II இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள் நீங்கலாக" என்ற சொற்களும் அடைப்புக்குறிகளும், எண்களும் இறுதியில் சேர்க்கப்படுதல் வேண்டும்.

(ஈ) திரிபுரா மாநில ஆட்சிநிலவரைகள் தொடர்புடைய பத்தியில், "மற்றும் அரசமைப்புச் (ஒன்பதாம் திருத்தம்) சட்டம், 1960 இன் 3 ஆம் பிரிவின் (ஈ) கூறில் அடங்கிய எது எவ்வாறிருப்பினும், அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம், 2015 இற்கான முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி II இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகளுக்கு அது தொடர்புடையதாகிற அளவிற்கு, அரசமைப்புச் (நூறாம் திருத்தம்) சட்டம் 2015 இற்கான முதலாம் இணைப்புப்பட்டியலின் பகுதி II இல் சுட்டப்பட்டுள்ள ஆட்சிநிலவரைகள்" என்ற சொற்களும், அடைப்புக்குறிகளும், எண்களும் இறுதியில் சேர்க்கப்படுதல் வேண்டும்.

## முதலாம் இணைப்புப்பட்டியல்

[2(அ), 2(ஆ) மற்றும் 3 ஆகிய பிரிவுகளைக் காண்க]

### பகுதி I

1974, மே 16 ஆம் நாள் தேதியிடப்பட்ட உடன்பாட்டின் 2 ஆம் உறுப்பிற்கும் 2011, செப்டம்பர் 6 ஆம் நாள் தேதியிடப்பட்ட வரையறுக்கப்பட்டவிதிமுறையின் 3 (I) (ஆ) (ii) (iii) (iv) (v) உறுப்பிற்கும் தொடர்புடையதான அடையப்பெற்ற ஆட்சிநிலவரை.

### பகுதி II

1974, மே 16 ஆம் நாள் தேதியிடப்பட்ட உடன்பாட்டின் 2 ஆம் உறுப்பிற்கும் 2011, செப்டம்பர் 6 ஆம் நாள் தேதியிடப்பட்ட வரையறுக்கப்பட்டவிதிமுறையின் 3 (I) (இ) (i) உறுப்பிற்கும் தொடர்புடையதான அடையப்பெற்ற ஆட்சிநிலவரை.

### பகுதி III

1974, மே 16 ஆம் நாள் தேதியிடப்பட்ட உடன்பாட்டின் 1 (12) மற்றும் 2 ஆகிய உறுப்புகளுக்கும் 2011, செப்டம்பர் 6 ஆம் நாள் தேதியிடப்பட்ட வரையறுக்கப்பட்டவிதிமுறையின் 2 (II), 3 (I) (அ) (iii) (iv) (v) (vi) ஆகிய உறுப்புகளுக்கும் தொடர்புடையதான அடையப்பெற்ற ஆட்சிநிலவரை.

## இரண்டாம் இணைப்புப்பட்டியல்

[2 (ஆ), 2 (ஈ) மற்றும் 3 ஆகிய பிரிவுகளைக் காண்க]

### பகுதி I

1974, மே 16 ஆம் நாள் தேதியிடப்பட்ட உடன்பாட்டின் 2 ஆம் உறுப்பிற்கும் 2011, செப்டம்பர் 6 ஆம் நாள் தேதியிடப்பட்ட வரையறுக்கப்பட்டவிதிமுறையின் 3 (I) (ஈ) (i) (ii) உறுப்பிற்கும் தொடர்புடையதான மாற்றப்பட்ட ஆட்சிநிலவரை.

## PART II

The transferred territory in relation to Article 2 of the agreement dated the 16th day of May, 1974 and Article 3 (I) (b) (i) of the protocol dated 6th day of September, 2011.

## PART III

The transferred territory in relation to Articles 1(12) and 2 of the agreement dated the 16th day of May, 1974 and Articles 2 (II), 3 (I) (a) (i) (ii) (vi) of the protocol dated the 6th day of September, 2011.

## THE THIRD SCHEDULE

[See section 2(c)]

I. EXTRACTS FROM THE AGREEMENT BETWEEN GOVERNMENT OF THE REPUBLIC OF INDIA AND THE GOVERNMENT OF THE PEOPLE'S REPUBLIC OF BANGLADESH CONCERNING THE DEMARCATION OF THE LAND BOUNDARY BETWEEN INDIA AND BANGLADESH AND RELATED MATTERS DATED THE 16TH DAY OF MAY, 1974

### Article 1 (12): ENCLAVES

The Indian enclaves in Bangladesh and the Bangladesh enclaves in India should be exchanged expeditiously, excepting the enclaves mentioned in paragraph 14 without claim to compensation for the additional area going to Bangladesh.

### Article 2:

The Governments of India and Bangladesh agree that territories in adverse possession in areas already demarcated in respect of which boundary strip maps are already prepared, shall be exchanged within six months of the signing of the boundary strip maps by the plenipotentiaries. They may sign the relevant maps as early as possible as and in any case not later than the 31st December, 1974. Early measures may be taken to print maps in respect of other areas where demarcation has already taken place. These should be printed by the 31st May, 1975 and signed by the plenipotentiaries thereafter in order that the exchange of adversely held possessions in these areas may take place by the 31st December, 1975. In sectors still to be demarcated, transfer of territorial jurisdiction may take place within six months of the signature by plenipotentiaries on the concerned boundary strip maps.

## பகுதி II

1974, மே 16 ஆம் நாள் தேதியிடப்பட்ட உடன்பாட்டின் 2 ஆம் உறுப்பிற்கும் 2011, செப்டம்பர் 6 ஆம் நாள் தேதியிடப்பட்ட வரையறுக்கப்பட்டவிதிமுறையின் 3 (I) (ஆ) (i) ஆகிய உறுப்பிற்கும் தொடர்புடையதான மாற்றப்பட்ட ஆட்சிநிலவரை.

## பகுதி III

1974, மே 16 ஆம் நாள் தேதியிடப்பட்ட உடன்பாட்டின் 1 (12) மற்றும் 2 ஆகிய உறுப்புகளுக்கும் 2011, செப்டம்பர் 6 ஆம் நாள் தேதியிடப்பட்ட வரையறுக்கப்பட்டவிதிமுறையின் 2 (II), 3 (I) (அ) (i) (ii) (vi) உறுப்பிற்கும் தொடர்புடையதான மாற்றப்பட்ட ஆட்சிநிலவரை.

## மூன்றாம் இணைப்புப்பட்டியல்

[2 (இ) பிரிவைக் காண்க]

I. இந்தியாவுக்கும் வங்காளதேசத்துக்கும் இடையே நில எல்லையை வரையறை செய்வது குறித்து இந்தியக் குடியரசின் அரசுக்கும் வங்காளதேச மக்கள் குடியரசின் அரசுக்கும் இடையேயான 1974, மே 16 ஆம் நாள் தேதியிடப்பட்ட உடன்பாடு மற்றும் தொடர்புடைய பொருட்பாடுகளிலிருந்து சாரக்குறிப்புகள்

**உறுப்பு 1 (12) : அயல்நிலப்பகுதிகள்**

வங்காளதேசத்திலுள்ள இந்திய நிலப்பகுதிகளும் இந்தியாவிலுள்ள வங்காளதேச நிலப்பகுதிகளும் 14 ஆம் பத்தியில் குறிப்பிடப்பட்டுள்ள நிலப்பகுதிகள் நீங்கலாக, வங்காளதேசத்திற்குப் போகும் கூடுதல் பரப்பிடத்திற்காக சரியீட்டிற்கான உரிமைக் கோரிக்கையின்றி, விரைவாகப் பரிமாற்றம் செய்து கொள்ளப்படுதல் வேண்டும்.

**உறுப்பு 2:**

எல்லைக்கோட்டுப் புவிப்படங்கள் ஏற்கெனவே தயாரிக்கப்பட்டு ஏற்கெனவே எல்லைவரையறுக்கப்பட்டுள்ள பரப்பிடங்களில் எதிர்நிலை உடைமையிலுள்ள ஆட்சிநிலவரைகள் முழுஅதிகாரம்பெற்றவர்களால் எல்லைக் கோட்டுப் புவிப்படங்களில் கையொப்பமிடுவதிலிருந்து ஆறு மாதங்களுக்குள் பரிமாற்றம் செய்து கொள்ளப்படுதல் வேண்டும் என்பதற்கு இந்திய மற்றும் வங்காளதேச அரசுகள் உடன்படுகின்றன. அவர்கள், தொடர்புடைய புவிப்படங்களில் இயலுமளவு விரைவில், எந்நேர்விலும், 1974, டிசம்பர் 31 ஆம் தேதிக்குப் பிற்படாமல் கையொப்பமிடலாம். ஏற்கெனவே எல்லைவரையறை நிகழ்ந்துள்ள பிற பரப்பிடங்கள் பொறுத்துப் புவிப்படங்களை அச்சிடுவதற்கு விரைவில் நடவடிக்கைகள் எடுக்கப்படலாம். இவை இந்தப் பரப்பிடங்களில் எதிர்நிலையில் வைத்திருக்கப்படும் உடைமைகளைப் பரிமாற்றம் செய்து கொள்வது 1975, டிசம்பர் 31 ஆம் தேதிக்குள்ளாக நிகழும் வண்ணம், 1975, மே 31 ஆம் தேதிக்குள்ளாக அச்சிடப்பட்டு அதன்பின்பு, முழுஅதிகாரம்பெற்றவர்களால் கையொப்பமிடப்படுதல் வேண்டும். இனியும் எல்லைவரையறை செய்யப்பட வேண்டிய உட்பகுதிகளில், ஆட்சிநிலவரை அதிகாரவரம்பு மாற்றமானது, முழுஅதிகாரம்பெற்றவர்களால் தொடர்புடைய எல்லைக்கோட்டுப் புவிப்படங்களுக்குக் கையொப்பமிடுவதிலிருந்து ஆறு மாதங்களுக்குள் நிகழலாம்.

II. EXTRACTS FROM THE PROTOCOL TO THE AGREEMENT BETWEEN THE GOVERNMENT OF THE REPUBLIC OF INDIA AND THE GOVERNMENT OF THE PEOPLE'S REPUBLIC OF BANGLADESH CONCERNING THE DEMARCATION OF THE LAND BOUNDARY BETWEEN INDIA AND BANGLADESH AND RELATED MATTERS, DATED THE 6TH DAY OF SEPTEMBER, 2011

**Article 2:**

(II) Article 1 Clause 12 of the 1974 Agreement shall be implemented as follows:—

*Enclaves*

111 Indian Enclaves in Bangladesh and 51 Bangladesh Enclaves in India as per the jointly verified cadastral enclave maps and signed at the level of DGLR&S, Bangladesh and DLR&S, West Bengal (India) in April, 1997, shall be exchanged without claim to compensation for the additional areas going to Bangladesh.

**Article 3:**

(I) Article 2 of the 1974 Agreement shall be implemented as follows:—

The Government of India and the Government of Bangladesh agree that the boundary shall be drawn as a fixed boundary for territories held in Adverse Possession as determined through joint survey and fully depicted in the respective adversely possessed land area Index Map (APL map) finalised by the Land Records and Survey Departments of both the countries between December, 2010 and August, 2011, which are fully described in clause (a) to (d) below.

The relevant strip maps shall be printed and signed by the Plenipotentiaries and transfer of territorial jurisdiction shall be completed simultaneously with the exchange of enclaves. The demarcation of the boundary, as depicted in the above-mentioned Index Maps, shall be as under:—

**(a) West Bengal Sector**

*(i) Bousmari – Madhugari (Kushtia-Nadia) area*

The boundary shall be drawn from the existing Boundary Pillar Nos. 154/5-S to 157/1-S to follow the centre of old course of river Mathabanga, as depicted in consolidation map of 1962, as surveyed jointly and agreed in June, 2011.

II. இந்தியாவுக்கும் வங்காளதேசத்துக்கும் இடையே நில எல்லையை வரையறைசெய்வது குறித்து இந்தியக் குடியரசின் அரசுக்கும் வங்காளதேச மக்கள் குடியரசின் அரசுக்கும் இடையேயான 2011, செப்டம்பர் 6 ஆம் நாள் தேதியிடப்பட்ட உடன்பாட்டிற்கான வரையறுக்கப்பட்ட விதிமுறை மற்றும் தொடர்புடைய பொருட்பாடுகளின் சாரக்குறிப்புகள்

**உறுப்பு 2:**

(II). 1974 ஆம் ஆண்டு உடன்பாட்டின் 1 ஆம் உறுப்பு 12 ஆம் கூறு பின்வருமாறு செயற்படுத்தப்படுதல் வேண்டும்:—

*அயல்நிலப்பகுதிகள்*

1997, ஏப்ரலில் டிஜிஎல்ஆர்&எஸ், வங்காளதேசம் மற்றும் டிஎல்ஆர்&எஸ், மேற்குவங்காளம் (இந்தியா) நிலையில் கூட்டாக உறுதிசெய்யப்பட்டு கையொப்பமிடப்பட்ட நிலஅளவீட்டு அயல்நிலப்பகுதிப் புவிப்படங்களின்படி வங்காளதேசத்திலுள்ள 111 இந்திய நிலப்பகுதிகளும் இந்தியாவிலுள்ள 51 வங்காளதேச நிலப் பகுதிகளும் வங்காளதேசத்திற்குப் போகும் கூடுதல் பரப்பிடங்களுக்காக சரியீட்டிற்கான உரிமைக் கோரிக்கையின்றிப் பரிமாற்றம் செய்துகொள்ளப்படுதல் வேண்டும்.

**உறுப்பு 3:**

(I) 1974 ஆம் ஆண்டு உடன்பாட்டின் 2 ஆம் உறுப்பு பின்வருமாறு செயற்படுத்தப்படுதல் வேண்டும்:–

கீழே (அ) முதல் (ஈ) வரையிலான கூறில் முழுவதுமாக விவரிக்கப்படுபவையான, இரு நாடுகளின் நில ஆவணங்கள் மற்றும் நிலஅளவைத் துறைகளால் டிசம்பர் 2010 க்கும் ஆகஸ்ட் 2011 க்கும் இடையே கூட்டு நிலஅளவை மூலமாகத் தீர்மானிக்கப்பட்டு, அவரவர் எதிர்நிலை உடைமையிலுள்ள நிலப்பரப்பிட அட்டவணைப் புவிப்படத்தில் (எ.பி.எல் புவிப்படம்) முழுவதுமாக வரைந்து காட்டப்பட்டுள்ளவாறான எதிர்நிலை உடைமையில் வைத்திருக்கப்படுகிற ஆட்சிநிலவரைகளுக்கான ஒரு நிருணயிக்கப்பட்ட எல்லைக்கோடு என எல்லைக்கோடு வரையப்படுதல் வேண்டும் என்று இந்திய அரசும் வங்காளதேச அரசும் உடன்படுகின்றன.

தொடர்புடைய எல்லைக்கோட்டுப் புவிப்படங்கள் அச்சிடப்பட்டு முழுஅதிகாரம்பெற்றவர்களால் கையொப்பமிடப்பட்டு ஆட்சிநிலவரைசார்ந்த அதிகாரவரம்பு மாற்றமானது அயல்நிலப்பகுதிகள் பரிமாற்றத்துடன் சேர்த்து, உடனிகழ்வாக முடிக்கப்படுதல் வேண்டும், மேலே குறிப்பிடப்பட்ட அட்டவணைப் புவிப்படங்களில் வரைந்து காட்டப்பட்டுள்ளவாறான, எல்லைக்கோட்டு வரையறை, கீழ்க்கண்டவாறு இருத்தல் வேண்டும்:–

### (அ) மேற்கு வங்காள எல்லைப்பகுதி

*(i) பௌஸ்மரி–மதுகரி (குஷ்டியா–நாடியா) பகுதி*

2011, ஜூனில் கூட்டாக நிலஅளவாய்வு செய்து ஒத்துக்கொண்டுள்ளவாறு, எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண்கள் 154/5-S இலிருந்து 157/1-S வரையில் 1962 ஆம் ஆண்டின் ஒருங்கமைப் புவிப்படத்தில் வரைந்து காட்டப்பட்டுள்ளவாறான, மாதபங்கா நதியின் முற்கால ஓட்டத்தின் மையத் தொடர்ச்சிவரை வரையப்படுதல் வேண்டும்.

*(ii) Andharkota (Kushtia-Nadia) area*

The boundary shall be drawn from existing Boundary Pillar No. 152/5-S to Boundary Pillar No. 153/1-S to follow the edge of existing River Mathabanga as jointly surveyed and agreed in June, 2011.

*(iii) Pakuria (Kushtia-Nadia) area*

The boundary shall be drawn from existing Boundary Pillar No. 151/1-S to Boundary Pillar No. 152/2-S to follow the edge of River Mathabanga as jointly surveyed and agreed in June, 2011.

*(iv) Char Mahishkundi (Kushtia-Nadia) area*

The boundary shall be drawn from existing Boundary Pillar No. 153/1-S to Boundary Pillar No. 153/9-S to follow the edge of River Mathabanga as jointly surveyed and agreed in June, 2011.

*(v) Haripal / Khutadah/Battoli/Sapameri/LNpur (Patari) (Naogaon-Malda) area*

The boundary shall be drawn as line joining from existing Boundary Pillar No. 242/S/13, to Boundary Pillar No. 243/7-S/5 and as jointly surveyed and agreed in June, 2011.

*(vi) Berubari (Panchagarh-Jalpaiguri area)*

The boundary in the area Berubari (Panchagarh-Jalpaiguri) adversely held by Bangladesh, and Berubari and Singhapara-Khudipara (Panchagarh-Jalpaiguri), adversely held by India shall be drawn as jointly demarcated during 1996-1998.

**(b) Meghalaya Sector**

*(i) Lobachera-Nuncherra*

The boundary from existing Boundary Pillar No. 1315/4-S to Boundary Pillar No. 1315/15-S in Lailong - Balichera, Boundary Pillar No. 1316/1-S to Boundary Pillar No. 1316/11-S in Lailong- Noonchera, Boundary Pillar No. 1317 to Boundary Pillar No. 1317/13-S in Lailong- Lahiling and Boundary Pillar No. 1318/1-S to Boundary Pillar No. 1318/2-S in Lailong- Lobhachera shall be drawn to follow the edge of tea gardens as jointly surveyed and agreed in December, 2010.

*(ii) அந்தர்கோட்டா (குஷ்டியா– நாடியா) பகுதி*

2011, ஜூனில் கூட்டாக நிலஅளவாய்வு செய்து ஒத்துக்கொண்டுள்ளவாறு எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 152/5–S இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண் 153/1–S வரையில் தற்போதுள்ள மாதபங்கா நதிக்கரைத் தொடர்ச்சிவரை வரையப்படுதல் வேண்டும்.

*(iii) பகுரியா (குஷ்டியா–நாடியா) பகுதி*

2011, ஜூனில் கூட்டாக நிலஅளவாய்வு செய்து ஒத்துக்கொண்டுள்ளவாறு எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 151/1-S இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண்152/2-Sவரையில் மாதபங்கா நதிக்கரைத் தொடர்ச்சிவரை வரையப்படுதல் வேண்டும்.

*(iv) சார்மகிஷ்குண்டி (குஷ்டியா–நாடியா) பகுதி*

2011, ஜூனில் கூட்டாக நிலஅளவாய்வு செய்து ஒத்துக்கொண்டுள்ளவாறு எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 153/1-S இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண் 153/9-S வரையில் மாதபங்கா நதிக்கரைத் தொடர்ச்சிவரை வரையப்படுதல் வேண்டும்.

*(v) ஹரிபல்/குடாதாஹ்/பட்டோலி/சபமெரி/எல்என்பூர் (பட்டாரி) (நௌகான்–மால்டா)பகுதி*

2011, ஜூனில் கூட்டாக நிலஅளவாய்வு செய்து ஒத்துக்கொண்டுள்ளவாறு எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 242/S/13 இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண் 243/7-S/5 வரையிலானவற்றை இணைக்கும் கோடாகவும் வரையப்படுதல் வேண்டும்.

*(vi) பெருபரி (பஞ்சகர்–ஜல்பாய்குரி பகுதி)*

வங்காளதேசத்தால் எதிர்நிலை உடைமையில் வைத்திருக்கப்படும் பெருபரி (பஞ்சகர்– ஜல்பாய்குரி), மற்றும் இந்தியாவால் எதிர்நிலை உடைமையில் வைத்திருக்கப்படும் பெருபரி மற்றும் சிங்கபரா–குடிபரா (பஞ்சகர்–ஜல்பாய்குரி) பகுதியிலுள்ள எல்லைக்கோடு, 1996–1998 இன் போது கூட்டாக வரையறை செய்யப்பட்டவாறு வரையப்படுதல் வேண்டும்.

**(ஆ) மேகாலயா எல்லைப் பகுதி**

*(i) லோபாசெரா– நுன்செர்ரா*

2010, டிசம்பரில் கூட்டாக நிலஅளவாய்வு செய்து ஒத்துக்கொண்டுள்ளவாறு தற்போதுள்ள லைலாங் பலிச்செராவில் எல்லைக்கோட்டுத் தூண் எண் 1315/4–S இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண் 1315/15-S வரையிலும், லைலாங்–நூண்செராவில் எல்லைக்கோட்டுத் தூண் எண் 1316/1-S இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண்1316/11-S வரையிலும், லைலாங்–லஹிலிங்கில் எல்லைக்கோட்டுத் தூண் எண் 1317 இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண் 1317/13-S வரையிலும் மற்றும் லைலாங்–லோபசெராவில் எல்லைக்கோட்டுத் தூண் எண் 1318/1-S இலிருந்து எல்லைக் கோட்டுத் தூண் எண் 1318/2-S வரையில் தேயிலைத் தோட்டக் கரைகளின் தொடர்வரையில் எல்லைக்கோடு வரையப்படுதல் வேண்டும்.

*(ii) Pyrdiwah / Padua Area*

The boundary shall be drawn from existing Boundary Pillar No. 1270/1-S as per jointly surveyed and mutually agreed line till Boundary Pillar No. 1271/1-T. The Parties agree that the Indian Nationals from Pyrdiwah village shall be allowed to draw water from Piyang River near point No. 6 of the agreed Map.

*(iii) Lyngkhat Area*

*(aa) Lyngkhat-I / Kulumcherra and Lyngkhat-II/ Kulumcherra*

The boundary shall be drawn from existing Boundary Pillar No. 1264/4-S to Boundary Pillar No. 1265 and BP No. 1265/6-S to 1265/9-S as per jointly surveyed and mutually agreed line.

*(ab) Lyngkhat-III / Sonarhat*

The boundary shall be drawn from existing Boundary Pillar No. 1266/13-S along the nallah southwards till it meets another nallah in the east-west direction, thereafter it shall run along the northern edge of the nallah in east till it meets the existing International Boundary north of Reference Pillar Nos.1267/4-R-B and 1267/3-R-I.

*(iv) Dawki / Tamabil area*

The boundary shall be drawn by a straight line joining existing Boundary Pillar Nos. 1275/1-S to Boundary Pillar Nos. 1275/7-S. The Parties agree to fencing on 'zero line' in this area.

*(v) Naljuri / Sreepur Area*

*(aa) Naljuri I*

The boundary shall be a line from the existing Boundary Pillar No. 1277/2-S in southern direction up to three plots as depicted in the strip Map No. 166 till it meets the nallah flowing from Boundary Pillar No. 1277/5-T, thereafter it will run along the western edge of the nallah in the southern direction up to 2 plots on the Bangladesh side, thereafter it shall run eastwards till it meets a line drawn in southern direction from Boundary Pillar No. 1277/4-S.

*(ii) பைர்திவா / படுவா பகுதி*

எல்லைக்கோடானது, கூட்டாக நிலஅளவாய்வு செய்து பரஸ்பரம் ஒத்துக்கொண்டுள்ள கோட்டின்படி தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 1270/1–S இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண் 1271/1–T வரையில் வரையப்படுதல் வேண்டும். பைர்திவா ஊரிலிருந்து ஒத்துக்கொண்டுள்ள புவிப்படத்தின் முனை எண் 6 அருகாமையிலுள்ள பியாங் நதியிலிருந்து இந்திய நாட்டினர் நீர் எடுத்துக்கொள்வதற்கு அனுமதிக்கப்படுதல் வேண்டும் என்பதற்கு தரப்பினர்கள் ஒத்துக்கொள்கின்றனர்.

*(iii) லிங்கத் பகுதி*

*(அஅ) லிங்கத்– I / குளும்ச்சொர்ரா மற்றும் லிங்கத்–II / குளும்ச்சொர்ரா*

எல்லைக்கோடானது, கூட்டாக நிலஅளவாய்வு செய்து பரஸ்பரம் ஒத்துக்கொண்டுள்ள கோட்டின்படி தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 1264/4–S இலிருந்து எல்லைக் கோட்டுத் தூண் எண் 1265 வரையிலும் மற்றும் பீபி எண் 1265/6–S இலிருந்து 1265/9–S வரையிலும் வரையப்படுதல் வேண்டும்.

*(அஆ) லிங்கத்–III / சோனர்ஹத்*

எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 1266/13–S இலிருந்து நாலாஹ் தென்பக்கம் ஊடாக அது கிழக்கு–மேற்கு திசையில் இன்னொரு நாலாஹை சந்திக்கும்வரையிலும், அதன்பின்பு அது கிழக்கில் நாலாஹின் வடக்கு முனை ஊடாகச் சென்று அது குறியீட்டுத் தூண் எண்கள் 1267/4-R-B மற்றும் 1267/3-R-I வடக்கே தற்போதுள்ள பன்னாட்டிடை எல்லைக்கோட்டைச் சந்திக்கும் வரையிலும் வரையப்படுதல் வேண்டும்.

*(iv) டௌகி–தமபில் பகுதி*

எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 1275/1–S முதல் எல்லைக்கோட்டுத் தூண் எண் 1275/7–S வரையிலும் இணைக்கும் ஒரு நேர்கோட்டினால் வரையப்படுதல் வேண்டும். இந்தப் பகுதியில் 'பூஜ்ய கோட்டில்' வேலியடைப்பதற்கு தரப்பினர்கள் ஒத்துக் கொள்கின்றனர்.

*(v) நல்ஜூரி / ஸ்ரீபூர் பகுதி*

*(அஅ) நல்ஜூரி I*

எல்லைக்கோடானது, எல்லைக்கோட்டுப் புவிப்பட எண் 166 இல் வரைந்து காட்டப்பட்டுள்ளவாறு தெற்குத் திசையில் தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 1277/2-S இலிருந்து மூன்று மனையிடங்கள் வரையில் அது எல்லைக்கோட்டுத் தூண் எண் 1277/5-T இலிருந்து பாய்ந்துவரும் நாலாஹை சந்திக்கிறவரையிலும், அதன் பின்பு அது வங்காளதேசத்தின் பக்கமாக 2 மனையிடங்கள் வரை தென் திசையில் நாலாஹின் மேற்குக்கரை ஊடாகச் செல்லும், அதன்பின்பு அது கிழக்கு நோக்கி எல்லைக்கோட்டுத் தூண் எண் 1277/4-S இலிருந்து தென் திசையில் வரையப்பட்ட ஒரு கோட்டினைச் சந்திக்கும் வரையில் செல்லும் ஒரு கோடாகும்.

*(ab) Naljuri III*

The boundary shall be drawn by a straight line from existing Boundary Pillar No. 1278/2-S to Boundary Pillar No. 1279/ 3-S.

*(vi) Muktapur / Dibir Hawor Area*

The Parties agree that the Indian Nationals shall be allowed to visit Kali Mandir and shall also be allowed to draw water and exercise fishing rights in the water body in the Muktapur / Dibir Hawor area from the bank of Muktapur side.

**(c) Tripura Sector**

(i) Chandannagar-Champarai Tea Garden area in Tripura/ Moulvi Bazar sector

The boundary shall be drawn along Sonaraichhera river from existing Boundary Pillar No. 1904 to Boundary Pillar No. 1905 as surveyed jointly and agreed in July, 2011.

**(d) Assam Sector**

*(i) Kalabari (Boroibari) area in Assam sector*

The boundary shall be drawn from existing Boundary Pillar No. 1066/24-T to Boundary Pillar No. 1067/16-T as surveyed jointly and agreed in August, 2011.

*(ii) Pallathal area in Assam sector*

The boundary shall be drawn from existing Boundary Pillar No. 1370/3-S to 1371/ 6-S to follow the outer edge of the tea garden and from Boundary Pillar No. 1372 to 1373/2-S along outer edge of the pan plantation.

*(அஆ) நல்ஜுரி III*

எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 1278/2-S இலிருந்து எல்லைக்கோட்டு தூண் எண் 1279/3-S வரையிலும் ஒரு நேர் கோட்டில் வரையப்படுதல் வேண்டும்.

*(vi) முக்தபூர்/ திபிர்ஹவோர் பகுதி*

இந்திய நாட்டினர் காளி கோயிலுக்கு வருகை தருவதற்கு அனுமதிக்கப்படுதல் வேண்டும் என்பதற்கும் முக்தபூர் பகுதி கரையோரத்திலிருந்து முக்தபூர்/திபிர் ஹவோரியிலுள்ள நீர்நிலையில் நீர் எடுத்துக்கொள்வதற்கும் மீன் பிடிக்கும் உரிமையைப் பயன்படுத்திக் கொள்வதற்கும் கூட அனுமதிக்கப்படுதல் வேண்டும் என்பதற்கும் தரப்பினர்கள் ஒத்துக்கொள்கின்றனர்.

**(இ) திரிபுரா எல்லைப்பகுதி**

*(i)* திரிபுரா/ மௌல்வி பஜார் எல்லைப்பகுதியிலுள்ள சந்தன்நகர்—சம்பரய் தேயிலைத் தோட்டப்பகுதி

**2011,** ஜுலையில் கூட்டாக நிலஅளவாய்வு செய்து ஒத்துக்கொண்டுள்ளவாறு எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 1904 இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண் 1905 வரையிலும் சோனாராய்செரா நதியை ஒட்டி வரையப்படுதல் வேண்டும்.

**(ஈ) அசாம் எல்லைப்பகுதி**

*(i) அசாம் எல்லைப்பகுதியிலுள்ள கலபரி (போரோய்பரி) பகுதி*

**2011,** ஆகஸ்டில் கூட்டாக நிலஅளவாய்வு செய்து ஒத்துக் கொண்டுள்ளவாறு எல்லைக் கோடானது, தற்போதுள்ள எல்லைக்கோட்டுத் தூண் எண் 1066/24-T இலிருந்து எல்லைக்கோட்டுத் தூண் எண் 1067/16-T வரையிலும் வரையப்படுதல் வேண்டும்.

*(ii) அசாம் எல்லைப்பகுதியிலுள்ள பல்லத்தல் பகுதி*

எல்லைக்கோடானது, தற்போதுள்ள எல்லைக் கோட்டுத் தூண் எண் 1370/3-S இலிருந்து 1371/6-S வரையிலும், தேயிலைத் தோட்டத்தின் வெளிமுனையைத் தொடர்ந்தும் வெற்றிலைத் தோட்டத்தின் வெளிமுனை ஒட்டி எல்லைக்கோட்டுத் தூண் எண் 1372 இலிருந்து 1373/2–S வரையிலும் வரையப்படுதல் வேண்டும்.

III. LIST OF EXCHANGE OF ENCLAVES BETWEEN INDIA AND BANGLADESH IN PURSUANT TO ARTICLE 1 (12) OF THE AGREEMENT DATED 16TH MAY, 1974 AND THE PROTOCOL TO THE AGREEMENT DATED 6TH SEPTEMBER, 2011

## A. EXCHANGEABLE INDIAN ENCLAVES IN BANGLADESH WITH AREA

| S.No | Name of Chhits No. | Chhit No. | Lying within Police station Bangladesh | Lying within Police station W. Bengal | Area in acres |
|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| | | A. *Enclaves with independent chhits* | | | |
| 1. | Garati | 75 | Pochagar | Haldibari | 58.23 |
| 2. | Garati | 76 | Pochagar | Haldibari | 0.79 |
| 3. | Garati | 77 | Pochagar | Haldibari | 18 |
| 4. | Garati | 78 | Pochagar | Haldibari | 958.66 |
| 5. | Garati | 79 | Pochagar | Haldibari | 1.74 |
| 6. | Garati | 80 | Pochagar | Haldibari | 73.75 |
| 7. | Bingimari Part-I | 73 | Pochagar | Haldibari | 6.07 |
| 8. | Nazirganja | 41 | Boda | Haldibari | 58.32 |
| 9. | Nazirganja | 42 | Boda | Haldibari | 434.29 |
| 10. | Nazirganja | 44 | Boda | Haldibari | 53.47 |
| 11. | Nazirganja | 45 | Boda | Haldibari | 1.07 |
| 12. | Nazirganja | 46 | Boda | Haldibari | 17.95 |
| 13. | Nazirganja | 47 | Boda | Haldibari | 3.89 |
| 14. | Nazirganja | 48 | Boda | Haldibari | 73.27 |
| 15. | Nazirganja | 49 | Boda | Haldibari | 49.05 |

